# மனு நீதி
## என்னும்
# மனு தர்ம சாஸ்திரம்

( மூலமும் உரையும் முழுவதும் )





அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா

# மனு நீதி என்னும் மனுதர்ம சாஸ்திரம்

(மூலமும் உரையும் முழுவதும்)



உரையாசிரியர் :

பிரம்ம பீடம்

இளைய பீடாதிபதி

அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா

பதிப்பாசிரியர் :

விகரு. இராமநாதன்




ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்

புதிய எண்.100, கௌனல்பாங்க் ரோடு,
தெற்கு உஸ்மான் ரோடு வழி,
கிழக்கு சிஐ.டி. நகர், சென்னை-600 035
தொலைபேசி 24313646, 24313647
இல்லம் 24729152 Cell 9444021661

கிளை முகவரி:

இந்து புக் பார்க்

25, கச்சேரி வீதி, (Opp.) தாலூக்கா ஆபீஸ், ஈரோடு - 1.

தொலைபேசி : 2267227 இல்லம் : 2265829

## நூல் பற்றிய குறிப்பு

- ➢ மனு நீதி என்னும்
  மனுதர்ம சாஸ்திரம்
- ➢ அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா
- ➢ ஆன்மிகம்
- ➢ தமிழ்
- ➢ முதல் பதிப்பு : டிசம்பர், 2011
  (592-22-12-11)
- ➢ இரண்டாம் பதிப்பு : ஜூலை, 2013
  (592-05-07-13)
- ➢ மூன்றாம் பதிப்பு : ஆகஸ்ட், 2015
  (592-05-08-2015
- ➢ நான்காம் பதிப்பு : மார்ச், 2017
  (592-21-03-2017)
- ➢ உரிமை பதிப்பகத்திற்கே
- ➢ ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்
  சென்னை - 600 035.
- ➢ டெம்மி 1 x 8
- ➢ 16 கி.கி. என்.எஸ். புக் பிரிண்டிங்
- ➢ அட்டைக் கட்டு
- ➢ 12 புள்ளி
- ➢ பக்கங்கள் : 720
- ➢ பிரதிகள் : 1000

**விலை ரூ. 450.00**

- ➢ டைப் செட்டிங் :
  மாதா பிரிண்டர்ஸ்
  சென்னை - 116.
  செல் : 95518 25668
- ➢ அச்சிட்டோர் :
  கணபதி எண்டர்பிரைசஸ், சென்னை - 5.

'நன்மைகள் விளைய
நன்மைகள் செய்வோம்
நமக்கென உளதைப்
பிறர்க்கும் கொடுப்போம்.'
- நல்வாக்கு

# ஆசிரியர் உரை

**உ**லகில் வாழ வேண்டிய முறையை ஒவ்வொரு ஜீவனுக்கும் எடுத்துரைத்து நற்கதிக்கு வழிகாட்டும் நூலே இந்த மனுதர்ம சாஸ்திரம்.

தற்காலத்தில் மனுதர்ம சாஸ்திரத்தைப் பற்றிய வாதங்களைக் கேட்கும் நிலை உள்ளது. பிரதானமாக ஜாதி விஷயத்தைப் பற்றியே அனைவரும் தர்க்கம் செய்கிறார்கள். மனு பகவான், பிராம்மணர்களை உயர்த்திக் கூறியுள்ளதாகவும், சூத்திரர்களை தீண்டாதவர்களாகக் கூறுவதாகவும் வீண்பழிச் சொற்களைப் பேசுகிறார்கள். இது மிகவும் தவறு. மனிதன் தானாகப் படைத்துக் கொண்ட ஜாதிகளில்தான் தீண்டாமை உள்ளது.

பிரம்மதேவர் உலகைப் படைத்து, அது கட்டுக்கோப்பாக நடக்க வேண்டி நான்கு பிரிவினராக மனிதர்களைப் படைத்தார். பிராம்மண, க்ஷத்ரிய, வைசிய, சூத்திரர் என்னும் இந்த நான்கு ஜாதிகளிலும் தீண்டத்தகாதவர் என்று எவரும் கிடையாது. சூத்திரர்கள் தீண்டத்தகாதவர்கள் என்று மனு எங்கே கூறி யிருக்கிறார்...?

பிராம்மணர்களையே உயர்த்திக் கூறுவதாகப் பழி சுமத்தப்படும் மனு பகவான் ஒரு பிராம்மணரல்லவே! அவர் சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி புரிகின்ற க்ஷத்ரியரே யல்லவா...!

மனு பகவான் எடுத்துரைத்த தர்மங்கள் வாழ்வியல் சட்டங்கள். இந்தச் சட்டங்கள் மனிதர்கள் ஆனந்தமாக இவ்வுலகில் வாழவும், ஆனந்தமான பரலோகத்தை அடையவு மானவை.

மேலும், பிராம்மண, க்ஷத்ரிய, வைசிய, சூத்திரர்கள் என்னும் நான்கு பிரிவினருமே பிரம்மதேவனிடமிருந்து தோன்றியவர்கள் தானே...!

இந்த விஷயத்தைப் பற்றி மட்டுமின்றி, இந்த நூலிலுள்ள பல விஷயங்களுக்கும் விளக்கம் கூறப்பட வேண்டியது

அவசியமான ஒன்று. ஆயின் அப்படி விளக்கப்பட்டிருந்தால், இப்போது உங்கள் கையிலுள்ள புத்தகத்தைப் போன்று மும்மடங்கு புத்தகத்தை எழுத வேண்டியிருக்கும். அத்தகு நூலை எமது சிஷ்யர்களில் யாரேனும் எழுதலாம். ஸ்ரீ ஆனந்த ஆஞ்ஜநேயர் திருவுளப்படி அது நடக்கட்டும்.

இப்போது நான் உங்களுக்குக் கூறும் முக்கியமான விஷயம் இதுவே...

இந்த நூலை ஒருமுறை படித்துவிட்டு, நான் படித்து விட்டேன், இதில் இப்படிச் சொல்லியிருக்கிறது, இது சரியில்லை, அது சரியில்லை என்று பேச வேண்டாம்.

முதல் விஷயம், ஒருமுறை படித்தவுடன் இந்த தர்ம சாஸ்திரத்தைப் புரிந்து கொண்டுவிட முடியாது. மீண்டும் படிக்கும்போது சிறிது புரியும். அதற்கடுத்த முறை படிக்கும் போது மேலும் சிறிது புரியும். பலமுறை படித்தும், ஆழ்ந்து படித்தும், ஆராய்ந்து படித்தும் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

அவ்வாறன்றி மேலோட்டமாகப் படித்து, இங்கொன்றும் அங்கொன்றுமாக ஸ்லோகத்தை எடுத்துக் கொண்டு, தன் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் விமர்சனம் செய்யும் அருகதை எந்த மனிதனுக்கும் கிடையாது; அத்தகு பாபத்தை எவரும் செய்யாதீர்கள்.

இந் நூலை மீண்டும் மீண்டும் படித்து, தர்மத்தைத் தெளிவாக அறிந்து கொண்டு நற்கதியடைவீர்களாக!

ஸ்ரீ ஆனந்தராம ஸ்ம்ருதி:

**- அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா**

ஸ்ரீ ஆனந்த ஆஞ்ஜநேயர் ஆலயம்,
பிரம்ம பீடம்.
கூடுவாஞ்சேரி, காயரம்பேடு வழி,
செங்கல்பட்டு வட்டம், காஞ்சிபுரம் மாவட்டம்.
அலைபேசி எண் : 88708 93147

## பதிப்புரை

**கா**து வழிச் செய்தியாக மட்டுமே இதுநாள்வரை நாம் கேள்விப் பட்டு அறிந்து வைத்திருக்கிற 'மனுதர்ம சாஸ்திரம்' இப்போது நமது கைகளில் நூலாகத் திகழ்கிறது!

ஆசிரியர் மூல ஸ்லோகங்களை யும் கொடுத்து விளக்கவுரையும், அதாவது மிகத் தெளிவான விளக்க வுரையும் நமக்கு அளித்துள்ளார்.

ஒரு சிலர் இந் நூல் பற்றி ஒரு மாதிரியான கருத்துகளை வெளி யிட்டுப் புறந்தள்ளியது போன்ற விஷயங்கள் இந் நூலில் சொல்லப் படவில்லை.

அந்தக் காலத்து நியாயங்கள், நியதிகள் சற்றே வலியுறுத்திச் சொல் லப்பட்டுள்ளது உண்மைதான். ஆனால், இன்றையச் சூழலில் அவற்றினின்றும் எவ்வளவோ மாறுபாடுகள் நிகழ்ந்து விட்டன; நிகழ்ந்து கொண்டும் இருக்கின்றன.

இன்றைக்கு நாம் அவ்வாறான எந்த நீதிக்கும் கட்டுப்படுவதில்லை என்ற முடிவுக்கு வந்து விட்ட பிறகு அதைப் பற்றிக் கவலைப்படவே தேவையில்லை.

அப்படியென்றால் இந் நூல் எதற்கு?

சரியான கேள்விதான்!

'ஆங்கிலேயரிடம் நாம் அடிமைப் பட்டுக் கிடந்தோம்' என்று சொல்லிக் கொள்வதில் பெருமை ஏதும் இல்லை யென்றாலும் நாம் ஏன் அந்த நிகழ்வுகளைப் பாடமாக்கி, நம் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறோம்? சரித்திரத்தில் நிகழ்ந்த அந்தக் கொடுமைகளை - விரும்பத்தகாத அந்த நிகழ்வுகளை நம் எதிர் காலச் சந்ததியினரும் அறிந்து வைத்திருக்க வேண்டும் என்ற நல்ல எண்ணம் தானே காரணம்.

அதுபோல், அந்தக் காலத்து நியாயங்களை, தர்மங்களை, மனித வர்க்கத் தடயங்களை அறிந்து, தெரிந்து கொள்ள உதவும் ஓர் ஆவணமாக இதை ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது?

ஏற்றுக் கொள்வோம்! ஓர் ஆவண மாக ஏற்றுக் கொள்வோம்.

**விகரு. இராமநாதன்**

**- பதிப்பாசிரியர்.**

# அத்தியாயம் - 1

मनुमेकाग्रमासीनमभिगम्य महर्षयः ।
प्रतिपूज्य यथान्यायमिदं वचनमब्रुवन् ॥

**மனுமேகாக்ர மாஸீநமபிகம்ய மஹர்ஷய: |**
**ப்ரதிபூஜ்ய யதாந்யாய மிதம் வசநமப்ருவந் ||** 1

ஏகாக்ர சித்தத்தோடு அமர்ந்திருந்த மனுவை அணுகிய மஹரிஷிகள் அவரை முறைப்படி வணங்கி இவ்வாறாகச் சொன்னார்கள்.

மகரிஷிகள் சிலருக்கு, தங்களுக்கு ஏற்பட்ட சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்ற உத்வேகம் ஏற்பட்டது. தர்மம், அர்த்தம், காமம், மோட்சங்களைப் பற்றிய ஞானம் முழுமையாக கைவரப் பெற்றவரான மனுபகவானை அணுகினால், தங்கள் சந்தேகங்கள் தீரும் என்ற தீர்மானத்தோடு அவர்கள் மனுவின் இருப்பிடம் வந்தார்கள். அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்தார்கள்.

ஒருசமயம் மனு நிச்சலனமாக, சாந்தமாக ஓரிடத்தில் அமர்ந் திருப்பதைப் பார்த்தார்கள். இதுவே தக்க தருணம் என்று அவரை அணுகினார்கள்.

கோபதாபங்கள் முதலான உணர்ச்சிகளில் ஆழாமலும், பரபரப்பான காரியங்களில் ஈடுபட்டிராமலும், ஏதோ ஒரு காரியத்தில் முனைப்பாக ஈடுபட்டிராமலும் இருக்கும்போதுதான் ஒருவர் தெளிவான ஞானத்தோடு, சிந்தையோடு இருப்பார். மஹான்களுக்கு கோப தாபங்கள் முதலானவை இரா. ஆனால் தீர்க்கமான சிந்தனையில் தீவிரமாக ஆழ்ந்திருக்க இடமுண்டு. அவ்வாறெல்லாம் இல்லாமல், சாந்தமான மனதோடு, வேறு வேலைகளில் ஈடுபடாமல் விச்ராந்தியாக இருக்கும்போது மஹான்களை அணுகி தங்கள் சந்தேகங்களைக் கேட்டால் நிச்சயமாக நல்ல முறையில் சந்தேகங்கள் தீரும். எதற்காக அணுகுகிறார்களோ அந்தக் காரியம் ஈடேறும்.

ஆகவேதான், மஹரிஷிகள் நேராகப் போனோம், கேட்டோம் என்றிராமல், மனுவானவர் நிச்சலனமாக அமர்ந்திருக்கும் தருணத் துக்காகக் காத்திருந்து, தக்க தருணம் வாய்த்ததும் அவரை அணுகி வணங்கி, தங்கள் சந்தேகங்களைக் கேட்கத் தொடங்கினார்கள்.

அன்று அவர்களுக்கு மனு விரிவான விளக்கங்களை அளித்தார். அவை இன்று வரை மக்களுக்கு தர்மாதர்மங்களையும், நியாய அநியாயங்களையும், செயல்முறைகளையும், ராஜநீதிகளை மட்டுமின்றி குடும்ப நீதிகளையும், சட்ட நுணுக்கங்களையும், வாழவேண்டிய முறைகளையும், இன்னும் இன்னும் பற்பல வற்றையும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

மனுவின் வாக்காக அன்று வெளிப்பட்ட ஒலி அலைகள் வானத்தோடு கலந்து விட்டாலும், அந்த ஒலியோடு வெளிப்பட்ட ஞான ஒளி இன்று வரை பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அழியாத அந்த ஒளி இப்போது உங்கள் கரத்திலுள்ள இந்த நூலின் மூலமாக உங்கள் அறிவையும் பிரகாசிக்கச் செய்யும். இப்படி என்றென்றும் எவர்க்கும் ஞான ஒளி கிட்ட வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் அன்று அந்த மஹரிஷிகள் மனுவை கேள்விகளால் துளைத்து, நல்ல பதில்களைப் பெற்று, நமக்கு அளித்தார்கள். இனி அடுத்தடுத்த ஸ்லோகங்களில் அவர்கள் தங்கள் கேள்விகளைக் கேட்கப் போகிறார்கள். அவற்றைப் பார்ப்போம்.

**भगवन् सर्ववर्णानां यथावदनुपूर्वशः ।**
**अन्तरप्रभवाणां च धर्मान् नो वक्तुमर्हसि ॥**

**பகவந் ஸர்வ வர்ணாநாம் யதாவதநுபூர்வஷ: |**
**அந்தரப்ரபவாணாம் ச தர்மாந் நோ வக்துமர்ஹஸி ||** 2

பகவானே, நான்கு வர்ணத்தவரும் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்களைப் பற்றியும் இவர்களுக்குள் கலப்பு சம்பந்தங்களால் ஏற்பட்ட வர்ணத்தாருடைய தர்மங்களைப் பற்றியும் எமக்கு எடுத்துரைப்பீராக.

நான்கு வர்ணத்தவரும் என்று வரும் இடத்தில நான்கு வகையானவர்களும் என்று பொருள் கொள்ள வேண்டும். வர்ணம் என்ற சொல்லுக்கு நிறம் என்ற பொருளை இவ்விடத்தில் எடுத்துக் கொள்ளக் கூடாது. வெண்ணிறத்தினின்றும் தோன்றியவையான நிற வேறுபாடுகள், பச்சை, மஞ்சள், சிவப்பு, நீலம் என்று ஏற்பட்டிருப்பதைப் போல, சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்களின் வேறுபாடுகளையே, வகைகளையே இந்த வர்ணங்கள் என்ற சொல் குறிக்கிறது.

இதைப் பற்றி சற்று விரிவாகப் பார்ப்போம். பிராம்மணர், க்ஷத்ரியர், வைசியர், சூத்திரர் என்ற வகைகளையே வர்ணங்கள் என்கிறோம். நான்கு வர்ணத்தார்கள் என்கிறோம்.

இந்தப் பிரிவினைகள் ஏன்? மனிதர்களில் மேலென்ன? கீழென்ன? என்ற கேள்விகள், கலியுகம் தொடங்கி ஐயாயிரம்

வருடங்கள் கடந்து விட்ட நிலையில் எங்கும் ஒலித்தவண்ணம் உள்ளன. இதற்குரிய பதிலை பார்ப்போம்.

மேலானவன் இவன், கீழானவன் இவன் என்று கூறுவதற்காக இந்த வர்ணங்கள் ஏற்படவில்லை. ஒட்டுமொத்த சமுதாயமும் கட்டுக்கோப்பாக நெறிமுறை பிறழாமல் நிம்மதியாக சந்தோஷமாக வாழ இந்த வர்ணங்கள் பிரிக்கப்பட்டன. இதைப் பற்றிச் சற்று விரிவாகப் பார்ப்போம்.

எல்லோரும் அவரவர்க்குத் தேவையான எல்லாவற்றையும் சுயமாகச் செய்து கொள்ள முடியுமா? யோசித்துப் பாருங்கள். உங்களுக்கு இருக்க ஒரு வீடு வேண்டும் என்றால், நீங்களே உங்களுக்கான வீட்டைக் கட்டிக் கொள்ள வேண்டும். வீடுகட்டத் தேவையான கட்டுமானப் பொருட்களையும் நீங்களே தயார் செய்து கொள்ள வேண்டும்.

சாப்பிட வேண்டும் என்றால், நீங்களே உழுது பயிர் செய்து அரிசி, பருப்பு, காய்கறிகள் எல்லாவற்றையும் பெற வேண்டும்.

நீங்கள் படுத்துக் கொள்ள கட்டில் வேண்டும் என்றால், நீங்களே மரத்தை வெட்டி, பலகையாக அறுத்து, எப்படியெப்படி செய்ய வேண்டுமோ அப்படியப்படி செய்து கட்டிலை உருவாக்க வேண்டும்.

ஆடை வேண்டுமென்றால், தானே பஞ்செடுத்து நூல் நூற்று நெய்து அணிய வேண்டும். இப்படி ஒவ்வொரு விஷயத்தையும் யோசித்துப் பாருங்கள். இவ்வளவையும் அவரவரே செய்து கொள்ள இயலுமா? அப்படியே செய்ய முனைந்தாலும் அந்தந்தப் பொருளை உருப்படியாகச் செய்ய முடியுமா?

ஒருவன் தன் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். என்றால் பல கலைகள், பல தொழில்களில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். எல்லோரும் எல்லாவற்றிலும் விற்பன்னர்களாக இருப்பது என்பது இயலாத காரியம்.

மரவேலையில் தேர்ந்தவன் கட்டில் செய்ய வேண்டும். உழவுத்தொழிலில் தேர்ந்தவன் பயிர் செய்ய வேண்டும். இப்படி எந்த வேலையும் தேர்ச்சி பெற்றவர்களால் நன்கு செய்யப்பட வேண்டும். ஆக உலகியல் வாழ்வுக்கு முதல் தேவை, விவசாயம் முதலாக பலப்பல தொழில்கள். இவையில்லை யென்றால் மனிதர்களால் வாழவே முடியாது. இவைகளைச் செய்ய படைக்கப்பட்டவர்களுக்குப் பெயர் சூத்திரர்கள்.

இவர்கள் உற்பத்தி செய்யும் பொருட்கள் தேவைப்படுபவர் களுக்குக் கிடைக்க வேண்டும். இது நடைபெற வேண்டுமென்றால், பலப்பல இடங்களில் பற்பலரால் உற்பத்தி செய்யப்பட்ட

பொருட்கள் ஓரிடத்தில் விற்கப்பட வேண்டும். விற்பதற்கு விற்பனையாளர்கள் தேவை. உற்பத்தியாளர்கள் வாழவேண்டும் என்றால் விற்பனையாளர்கள் இருந்தால்தான் முடியும். இதற்காகப் படைக்கப்பட்டவர்கள் பெயர் வைசியர்கள்.

உற்பத்தியாளர்களிடமும், விற்பனையாளர்களிடமும் உள்ள பொருட்கள் களவாடப்படாமல் இருக்க வேண்டுமென்றால், எதிரிகள் தொல்லையில்லாமல் இருக்க வேண்டுமென்றால் அவர்களுக்குத் தக்க பாதுகாவலர்கள் தேவை. இவர்கள் மட்டுமல்ல, நாட்டிலுள்ள பெண்கள் குழந்தைகள் முதல் சந்யாசிகள் வரை அனைவரும் பயமற்று நிம்மதியாக வாழ வேண்டுமென்றால் தக்க காவலர்கள் தேவை. இதற்காகப் படைக்கப்பட்டவர்களுக்குப் பெயர் க்ஷத்ரியர்கள்.

உலகில் நன்கு மழை பொழிந்து பஞ்சம் நேராமல் இருக்க வேண்டும். இயற்கைப் பேரிடர்களான ஆழிப் பேரலை, பூகம்பம் போன்றவற்றாலும் பெருத்த அழிவுகள் ஏற்படாமலிருக்க வேண்டும். இதற்கு தெய்வ அருள் வேண்டும். தெய்வானுக்ரஹத்தைப் பெற வேண்டுமெனில், மிகுந்த தூய்மையோடு நியமத்தோடு பூஜைகளையும், ஜபதபங்களையும், ஹோமங்களையும், யாகங் களையும் செய்ய வேண்டும். இதற்காகப் படைக்கப்பட்ட வர்களுக்குப் பெயர் பிராம்மணர்கள்.

ஆக, உலகியல் வாழ்வின் முதல் தேவைகளுக்காக சூத்திரர்களும், அடுத்த தேவைக்காக வைசியர்களும், இவர்களின் தேவைக்காக க்ஷத்ரியர்களும், இவர்களோடு உலக மாந்தர் அனைவரும் சுபிட்சமாக இருக்க வேண்டும் என்பதற்காக பிராம்மணர்களும் படைக்கபட்டனர்.

இந்த நான்கு வகையானவர்களே நான்கு வர்ணத்தார் என்று கூறப்படுகிறார்கள். இந்த அடிப்படையை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். இந்த நான்கு வர்ணத்தாருமே இறந்த பிறகு மேலான உலகங்களை அடைய முடியும். இதில் எந்தப் பாகுபாடும் கிடையாது. அவரவர் தங்களுக்குரிய தொழில்களைச் செய்தபடி அவரவர்க்கு விதிக்கப்பட்ட தர்மங்களைத் தெரிந்து கொண்டு, அவற்றைக் கடைப்பிடித்து வாழ்ந்தால், அப்படி வாழ்ந்தவன் பிராம்மணனாயினும் க்ஷத்ரியனாயினும் வைசியனாயினும் சூத்திரனாயினும் நல்லுலகத்தை அடைவான்.

எவ்வாறு அனைத்து தொழில்களையும் ஒருவர் செய்ய முடியாதோ, அவ்வாறே அனைத்து தர்மங்களையும் ஒருவர் கடைப்பிடிக்க முடியாது. எனவே அவரவர் தொழிலுக்குத் தக்கபடி

அவரவர்களுக்கு தர்மங்கள் விதிக்கப்பட்டன. இவற்றை நன்கு அறிந்து கொண்டவர்களால்தான் இவ்வுலகில் சந்தோஷமாக வாழ முடியும். பரலோக ஆனந்தத்தையும் பெற முடியும்.

எனவே, இகத்துக்கும் பரத்துக்கும் அவசியமான இந்த தர்மங்களைப் பற்றி எடுத்துரைக்க வேண்டும் என்று இந்த லோகத்தில் மகரிஷிகள் மனுவிடம் கேட்கிறார்கள். இந்த நான்கு வகையினரின் தர்மங்களைப் பற்றியும், இந்த நான்கு வகையினரும் கலப்புத் திருமணங்கள் செய்து கொண்டதால் ஏற்பட்ட பலப்பல வகையினரும் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்களைப்பற்றியும் எடுத்துரைக்க வேண்டுகிறார்கள்.

त्वमेको ह्यस्य सर्वस्य विधानस्य स्वयम्भुवः।
अचिन्त्यस्याऽप्रमेयस्य कार्यतत्त्वार्थवित् प्रभो॥

**த்வமேகோ ஹ்யஸ்ய சர்வஸ்ய விதானஸ்ய ஸ்வயம் புவ: |**
**அசிந்த்யஸ்யா அப்ரமேயஸ்ய கார்யதத்வார்த்தவித் ப்ரபோ || 3**

பிரபுவே, வேதங்களில் கூறப்பட்ட அனைத்தையும், பிரம்ம சொரூபத்தையும், தத்துவங்களையும் அறிந்தவர் தாங்கள் ஒருவரே. தாங்களே நாங்கள் கேட்ட விஷயத்தை தெளிவுபடுத்தக் கூடியவர்.

स तैः पृष्टस् तथा सम्यगमितौजा महात्मभिः।
प्रत्युवाचाऽऽर्च्य तान् सर्वान् महर्षीञ् छ्रूयतामिति॥

**ஸ தை: ப்ருஷ்டஸ் ததா ஸம்யகமிதௌஜா மஹாத்ம பி: |**
**ப்ரத்யுவாசா ஆர்ச்ய தாந் சர்வாந் மஹர்ஹீந்ஸ்ரூயதாமிதி || 4**

மஹான்களான மஹரிஷிகள் இவ்வாறு வினவ, அளப்பரிய ஞானம் கொண்டவரான மனுபகவான் அந்த மகரிஷிகளைத் தக்கபடி உபசரித்து, "அவ்வாறே ஆகட்டும், கூறுகிறேன், கேளுங்கள்" என்றருளினார்.

आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम्।
अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः॥

**ஆஸீதிதம் தமோபூதமப்ரஞ்ஞாதமலக்ஷணம் |**
**அப்ரதர்க்ய மவிஞ்ஞேயம் ப்ரசுப்தமிவ ஸர்வத: || 5**

இவ்வுலகம் இருட்டாகவும், பார்வைக்குப் புலப்படாததாகவும், ஊகிக்க முடியாததாகவும், உருவமற்றதாகவும், ஒலியற்றதாகவும் தூங்கிக் கொண்டிருப்பது போல் இருந்தது.

ततः स्वयम्भूर् भगवानव्यक्तो व्यञ्जयन्निदम्।
महाभूतादि वृत्तौजाः प्रादुरासीत् तमोनुदः॥

**ததஸ் ஸ்வயம்பூர் பகவாளவ்யக்தோ வ்யஞ்ஜயந் நிதம் |**
**மஹாபூதாதிவ்ருத்தௌஜா: ப்ராதுராஸீத் தமோநுத: || 6**

ஐஸ்வர்யங்களோடு கூடியவரும், யோகாப்யாசத்தால் அறியக் கூடியவரும், இடையூறு ஏதுமின்றி சிருஷ்டிக்கக் கூடியவருமான பரமாத்மா பஞ்சபூதங்களைப் பிரகாசிக்கச் செய்தபடி தாமாக வெளிப்பட்டார்.

योऽसावतीन्द्रियग्राह्यः सूक्ष्मोऽव्यक्तः सनातनः।
सर्वभूतमयोऽचिन्त्यः स एव स्वयमुद्बभौ॥

**யோ அஸாவதீந்த்ரியக்ராஹ்ய: ஸூக்ஷ்மோ அவ்யக்த: சநாதன: |**
**ஸர்வபூதமயோ அசிந்த்ய: ஸ ஏவ ஸ்வயமுத்பபௌ || 7**

வெளிப்புலன்களால் அறிய முடியாதவரும், பரிசுத்தமான மனத்தினால் அறியத் தக்கவரும், அருவமானவரும், நித்யமானவரும், சகல பூதங்களிலும் இருப்பவரும், இவர் இப்படிப்பட்டவர் என்று ஊகிக்க முடியாதவருமான பரமாத்மா தாமாகவே சிருஷ்டி புரிவதற்காக வெளிப்பட்டார்.

सोऽभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुर् विविधाः प्रजाः।
अप एव ससर्जादौ तासु बीजमवासृजत्॥

**ஸோ அபித்யாய ஷரீராத் ஸ்வாத் சிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: |**
**அப ஏவ ஸஸர்ஜாஆதௌ தாசு பீஜமவாஅஸ்ருஜத் || 8**

அப்படி வெளிப்பட்ட அவர், சிருஷ்டி செய்ய மனங் கொண்டவராக, முதலில் தண்ணீரை சிருஷ்டி செய்தார். அந்த நீரில் தம் சக்தியின் ரூபமான ஒரு விதையை வைத்தார்.

तदण्डमभवद् धैमं सहस्रांशुसमप्रभम्।
तस्मिन् जज्ञे स्वयं ब्रह्मा सर्वलोकपितामहः॥

**ததண்டமபவத்தைமம் சஹஸ்ராம்சுஸமப்ரம் |**
**தஸ்மிந் ஜஞ்ஜேஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோக பிதாமஹ: || 9**

அந்த விதை சூரிய ஒளிக்கு நிகரான ஒளியோடும், தங்கமென தகதகத்த நிறத்தோடும் ஒரு அண்டமாக அதாவது ஒரு முட்டை வடிவமாக ஆனது. அந்த அண்டத்தில் பரமாத்மாவானவர் தாமே பிரம்மாவாக ஜன்மமெடுத்தார்.

आपो नारा इति प्रोक्ता आपो वै नरसूनवः।
ता यदस्यायनं पूर्वं तेन नारायणः स्मृतः॥

**ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: |**
**தாயதஸ்யாஅய நம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: || 10**

தண்ணீருக்கு நாரம் என்றும் பெயருண்டு. ஒரு செயலில் ஈடுபட்டு, தண்ணீரில் இயங்கத் தொடங்கியதால் பரமாத்மாவான அவர் நாராயணன் என்ற நாமம் பெற்றார்.

यत् तत् कारणमव्यक्तं नित्यं सदसदात्मकम्।
तद्विसृष्टः स पुरुषो लोके ब्रह्मेति कीर्त्यते॥

**யத்தத்காரணமவ்யக்தம் நித்யம் ஸதஸதாத்மகம் |**
**தத்விஸ்ருஷ்ட: ஸ புருஷோ லோகே ப்ரஹ்மேதி கீர்த்யதே || 11**

சிருஷ்டிக்கப்பட்டவற்றுக் கெல்லாம் காரணமாய், வெளிப்புலன் களுக்கு எட்டாதபடியாக, தோற்றமும் அழிவும் அற்று, நித்தியமான, அநித்தியமான பொருட்களின் உருவமாய் எந்த பரமாத்மா உள்ளாரோ, அந்த பரமாத்மாவினால் சிருஷ்டிக்கப்பட்ட அந்த புருஷன் உலகத்தில் 'பிரம்மா' என்றழைக்கப்பட்டார்.

तस्मिन्नण्डे स भगवानुषित्वा परिवत्सरम्।
स्वयमेवाऽऽत्मनो ध्यानात् तदण्डमकरोद् द्विधा॥

**தஸ்மிந் அண்டே ஸ பகவான் உஷித்வா பரிவத்ஸரம் |**
**ஸ்வயமேவ ஆத்மநோ த்யாநாத் ததண்ட மகரோத் த்விதா || 12**

அந்த அண்டத்தில் பிரம்மா ஒரு வருடம் முழுமையும் தவமியற்றிய பிறகு, 'இந்த அண்டம் இரண்டாகப் பிளக்கட்டும்' என்று நினைத்த அளவில் அண்டம் இரண்டானது.

(பிரம்மா தவமியற்றிய ஒரு வருட காலம் என்பது நாம் இப்போது கூறும் வருடம் மாதம் நாள் கணக்கைச் சேர்ந்ததல்ல. நாம் கணக்கிடும் வருடம் என்பது மானிடர்களான நமக்கானது. தேவர்களுக்கு வேறு காலக்கணக்கு. இது பின்னால் வரும் ஸ்லோகங்களில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.)

ताभ्यां स शकलाभ्यां च दिवं भूमिं च निर्ममे।
मध्ये व्योम दिशश्चाऽष्टावपां स्थानं च शाश्वतम्॥

**தாப்யாம் ஸ ஷகலாப்யாம் ச திவம் பூமிம் ச நிர்மமே |**
**மத்யே வ்யோம திசஸ் சாஅஷ்டாவபாம் ஸ்தாநம் ச சாஸ்வதம் || 13**

பிரம்மா, பிளவுண்ட அண்டத்தின் மேல் பாதியில் ஆகாயத்தையும், கீழுள்ள பாதியில் பூமியையும், நடுவில் வெளியையும் (அண்ட வெளியையும்), எட்டு திசைகளையும், கடலையும் படைத்தார்.

**उद्बवर्हाऽऽत्मनश् चैव मनः सदसदात्मकम्।**
**मनसश् चाऽप्यहङ्कारमभिमन्तारमीश्वरम्॥**

**உத்பபர்ஹாஆத்மநஸ்சைவ மநஸ்ஸத்அஸதாத்மகம் |**
**மனஸஸ்சாபி அஹங்காரம் அபிமந்தாரமீஷ்வரம் || 14**

*பிரம்மா பரமாத்மாவிடமிருந்து சத், அசத் ரூபமான மனத்தைப் பெற்றார். அந்த மனத்திலிருந்து தன் செயலை நிறைவேற்றிக் கொள்ளத் தக்கதான அஹங்காரத்தைப் பெற்றார்.*

**महान्तमेव चाऽऽत्मानं सर्वाणि त्रिगुणानि च।**
**विषयाणां ग्रहीतृणि शनैः पञ्चेन्द्रियाणि च॥**

**மஹாந்தமேவ சாஆத்மானம் ஸர்வாணி த்ரிகுணாநி ச |**
**விஷயாணாம் க்ரஹீத்ருணி ஷனை : பஞ்சேந்த்ரியாணி ச || 15**

*'மஹத்' என்னும் தத்வத்தையும், ஆத்மாவுக்கு உதவியாக இருப்பதான சத்வ குணத்தையும், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களையும், விஷயங்களைக் கிரகிக்கும் சக்தி கொண்ட பஞ்சேந்திரியங்களையும் முறையாகப் படைத்தார்.*

**तेषां त्ववयवान् सूक्ष्मान् षण्णामप्यमितौजसाम्।**
**सन्निवेश्याऽऽत्ममात्रासु सर्वभूतानि निर्ममे॥**

**தேஷாம் த்வவயவாந் சூஷ்மாந் ஷண்ணாமபி அமிதௌஜஸாம் |**
**ஸந்நிவேஸ்யா ஆத்மமாத்ராசு ஸர்வபூதாநி நிர்மமே || 16**

*அகங்காரத்தையும், அதன் தன்மாத்திரைகளையும், சூட்சும அவயவங்களையும், ஆறு விகாரங்களையும் சேர்த்து சகல பூதங்களையும் படைத்தார்.*

*(நீங்கள் இப்போது படித்துக் கொண்டு வந்த ஸ்லோகங்களின் பொருளைப் புரிந்து கொள்வது கடினமானதுதான். ஆனால் இவற்றைப் பற்றி இப்போது விளக்கப்புகுவது உசிதமானதன்று. இந் நூலின் உட்புகுந்து அநேக விஷயங்களைப் புரிந்து கொண்ட பின்னால் இவற்றை விளங்கிக் கொள்வது மிகவும் எளிதாக இருக்கும். எனவே, மேற்கொண்டு ஸ்லோகங்களைப் பார்ப்போம்.)*

**यन् मूर्त्यवयवाः सूक्ष्मास् तस्येमान्याश्रयन्ति षट्।**
**तस्माच् छरीरमित्याहुस् तस्य मूर्तिं मनीषिणः॥**

**யந்மூர்த்யவயவா : சூக்ஷ்மாஸ்தஸ்யே மாந்யாஷ்ரயந்திஷட் |**
**தஸ்மாத்ஸரீர மித்யாஹுஸ் தஸ்ய மூர்த்திம் மநீஷிண: || 17**

*அஹங்கார தன்மாத்திரை வடிவங்களான சூட்சும அவயவங்கள் ஆறும், பூதேந்திரியங்களும் காரிய ரூபமாக பிரம்மாவிடம்*

சேருவதால் பிரம்மாவை அவற்றின் சேர்க்கை கொண்டவர் என்று பொருள்படும் விதமாக, 'சரீரம்' என்று பண்டிதர்கள் கூறுகிறார்கள்.

तदाविशन्ति भूतानि महान्ति सह कर्मभिः।
मनश् चाऽवयवैः सूक्ष्मैः सर्वभूतकृदव्ययम्॥

**த்தாவிஷந்தி பூதாநி மஹாந்தி சஹ கர்மபி: |**
**மநஸ்சாஅவயவை : சூக்ஷ்மை : ஸர்வ பூதக்ருத வ்யயம் ||** 18

பஞ்ச மகா பூதங்களும் தங்கள் காரியங்களுடன் கூடியும், மனம் வெளியில் புலப்படாத சூட்சுமமான அவயவங்களோடு கூடியும் சரீரத்தில் பிரவேசிக்கின்றன.

तेषामिदं तु सप्तानां पुरुषाणां महौजसाम्।
सूक्ष्माभ्यो मूर्तिमात्राभ्यः सम्भवत्यव्ययाद् व्ययम्॥

**தேஷாமிதம் து ஸப்தாநாம் புருஷாணாம் மஹௌஜஸாம் |**
**சூக்ஷ்மாப்யோ மூர்த்திமாத்ராப்ய: ஸம்பவ த்யவ்யயாத் வ்யயம் ||** 19

பஞ்ச பூதங்கள், 'மஹத்,' 'தத்துவம்,' அஹங்காரம் என்னும் இரண்டு, ஆக ஏழின் காரணமாக உலகம் தோன்றுகிறது.

आद्याऽऽद्यस्य गुणं त्वेषामवाप्नोति परःपरः।
योयो यावतिथश् चैषां सस तावद्गुणः स्मृतः॥

**ஆத்யாஆத்யஸ்ய குணம் த்வேஷாம் அவாப்நோதி பர: பர: |**
**யோயோ யாவதி தஸ்சைஷாம் ஸ ஸ தாவத் குண: ஸ்ம்ருத: ||** 20

ஆகாயம், வாயு, அக்னி, ஜலம், மண் என்னும் பஞ்ச பூதங்களில் முதலில் உள்ளதன் குணம் அடுத்ததன் குணத்தோடு சேர்ந்திருக்கும். இவற்றின் குணங்கள் இவற்றுக்கு அடுத்ததாக உள்ளதோடு சேர்ந்திருக்கும்.

(தற்காலத்தில் பூதங்கள் என்ற சொல்லைப் பிசாசுகளைக் குறிக்கப் பயன்படுத்துகிறார்கள். பூதம் என்ற சொல்லுக்கு பிசாசு என்ற பொருள் இருப்பது உண்மைதான். ஆனால் அது ஒன்று மட்டுமே பொருளல்ல. மனிதன் முதல் விலங்கு தாவரம்வரை உயிர் வாழும் அனைத்துப் பிராணிகளுக்கும் பூதங்கள் என்று பெயர் உண்டு. மேலும் பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாயம் இவையும் பூதங்கள் எனப்படும். ஐந்து பூத தத்துங்கள், ஐம் பெரும் பூதங்கள் என்று சொல்லும்போது இந்த ஐந்தையே குறிக்கும். இனி இந்த ஸ்லோகம் கூறுவதைப் பார்ப்போம்.

முதலில் ஆகாயம். இதற்கு ஓசை என்ற தன்மை இருக்கிறது. அடுத்தது வாயு. இதற்கு ஆகாயத்தின் தன்மையான ஓசையோடு

ஸ்பரிசம் என்ற தன்மையும் (தொடு உணர்ச்சி) உண்டு. காற்று மேலே பட்டால் தொடு உணர்ச்சியால் உணர முடியும்.

அடுத்து தேஜஸ். அதாவது நெருப்பு. நெருப்புக்கு ஒளி என்னும் தன்மையோடு ஆகாயத்துக்கும் வாயுவுக்கும் இருக்கும் தன்மைகளும் சேர்ந்து ஒளி, ஓசை, ஸ்பரிசம் என்னும் மூன்று தன்மைகள் இருக்கின்றன.

அடுத்தது ஜலம். அதாவது தண்ணீர். தண்ணீருக்கு சுவை என்னும் தன்மையோடு ஒளி, ஓசை, ஸ்பரிசம் என்னும் தன்மைகளுமாக மொத்தம் நான்கு தன்மைகள் உள்ளன.

இவ்வாறே பிருத்விக்கு அதாவது மண்ணுக்கு வாசனை என்ற தன்மையோடு ஒளி, ஓசை, ஸ்பரிசம், சுவை என்ற நான்கு தன்மைகளும் சேர்ந்து மொத்தம் ஐந்து தன்மைகள் உள்ளன.

பஞ்ச மகா பூதங்களின் தன்மைகள் இவை. இந்தத் தன்மைகளையே தன்மாத்திரைகள் என்பார்கள்.

இவ்வாறே அகங்காரத்துக்குத் தன்மைகள் அதாவது தன்மாத்திரைகள் ஆறு. காமம், குரோதம், லோபம், மதம், மாத்ஸரியம், மோகம் என்பவை.

மஹத் என்னும் பெரும் தத்துவத்தோடு பஞ்ச பூதங்களும் தங்கள் தன்மைகளோடும், அகங்காரம் தன் தன்மைகளோடும் சேர்ந்து இவ்வுலகம் உண்டாகிறது.

सर्वेषां तु स नामानि कर्माणि च पृथक्पृथक्।
वेदशब्देभ्य एवाऽऽदौ पृथक् संस्थाश् च निर्ममे ॥

**ஸர்வேஷாம் து ஸ நாமாநி கர்மாணி ச ப்ருதக் ப்ருதக் |**
**வேதஷப்தேப்ய ஏவா ஆதௌ ப்ருதக் ஸம்ஸ்தாஷ் ச நிர்மமே || 21**

பிரம்மா தன்னால் படைக்கப்பட்ட அனைத்துக்கும் வேதத்திலுள்ளபடி பெயர்களைச் சூட்டினார். அவைகளுக்கான வெவ்வேறு விதமான காரியங்களையும் வேதங்கள் கூறியபடியே ஏற்படுத்தினார்.

कर्मात्मनां च देवानां सोऽसृजत् प्राणिनां प्रभुः।
साध्यानां च गणं सूक्ष्मं यज्ञं चैव सनातनम् ॥

**கர்மாத்மநாம் ச தேவாநாம் ஸோ அஸ்ருஜத் ப்ராணிநாம் ப்ரபு: |**
**சாத்யாநாம் ச கணம் சூக்ஷ்மம் யக்ஞும் சைவ ஸநாதநம் || 22**

பிரம்மா, கர்மாத்மாக்களான தேவர்களையும், பிராணிகளையும், சாத்யர்களையும், யக்ஞங்களையும் படைத்தார்.

अग्निवायुरविभ्यस् तु त्रयं ब्रह्म सनातनम्।
दुदोह यज्ञसिद्ध्यर्थमृग्यजुःसामलक्षणम्॥

**அக்நி வாயு ரவிப்யஸ்து த்ரயம் ப்ரஹ்ம சநாதனம் |**
**துதோஹ யக்ஞஸித்யர்த்தம் ருக் யஜு: சாம லக்ஷணம் ||** 23

*யக்ஞங்கள் வேதங்களைக் கொண்டே நிறைவேற்றக் கூடியவை என்பதால், யக்ஞங்களுக்காக வேண்டி, ருக், யஜுர், சாமம் என்னும் வேதங்களை, அக்நி, வாயு, சூரியர்களிடமிருந்து கிரகித்தார்.*

कालं कालविभक्तीश् च नक्षत्राणि ग्रहांस् तथा।
सरितः सागराञ् छैलान् समानि विषमाणि च॥

**காலம் காலவிபக்தீஷ்ச நக்ஷத்ராணி க்ராஹாம்ஸ்ததா |**
**சரிதஸ்ஸாகரான் சைலான் சமாநி விஷமாணி ச ||** 24

*பிரம்மா, காலத்தையும், மாதங்கள், ருதுக்கள், வருடங்கள் முதலான கால அளவுகளையும், நட்சத்திரங்களையும், கிரகங்களையும், நதிகளையும், கடல்களையும், மலைகளையும் படைத்தார்.*

तपो वाचं रतिं चैव कामं च क्रोधमेव च।
सृष्टिं ससर्ज चैवेमां स्रष्टुमिच्छन्निमाः प्रजाः॥

**தபோ வாசம் ரதிம் சைவ காமம் ச க்ரோதமேவ ச |**
**ச்ருஷ்டிம் சசர்ஜ சைவேமாம் ஸ்ரஷ்டுமிச்ச நி மா: ப்ரஜா: ||** 25

*அவ்வாறே சமவெளியையும், மேடுபள்ளங்களையும், தவம், வாக்கு, சிரத்தை, காமம், கோபம் முதலானவற்றையும் படைத்தார்.*

कर्मणां च विवेकार्थं धर्माधर्मौ व्यवेचयत्।
द्वन्द्वैरयोजयच् चेमाः सुखदुःखादिभिः प्रजाः॥

**கர்மணாம் ச விவேகார்த்தம் தர்மாதர்மௌ வ்யவேசயத் |**
**த்வந்த்வைரயோஜச்சேமா: சுகதுக்காதிபி: ப்ரஜா ||** 26

*செய்யத்தக்கது இது, தகாதது இது என்னும் அறிவைப் பெறுவதற்காக தர்மங்களையும் அதர்மங்களையும் வேறுபடுத்தினார். மேலும் மக்களை சுகம், துக்கம் என்னும் இரட்டைகளோடும், விருப்பு, வெறுப்பு என்னும் இரட்டைகளோடும் இணைத்தார்.*

अण्व्यो मात्रा विनाशिन्यो दशार्धानां तु याः स्मृताः।
ताभिः सार्धमिदं सर्वं सम्भवत्यनुपूर्वशः॥

**அன்வ்யோ மாத்ரா விநாசிந்யோ தசார்த்தாநாம் து யா: ஸ்ம்ருதா: |**
**தாபிஸ்ஸார்த்தமிதம் சர்வம் சம்பவத்யநுபூர்வஷ: ||** 27

பஞ்ச பூதங்களின் சொரூபங்களோடு, இனி சொல்லப் போகின்ற அனைத்தையும் படைத்தார்.

**यं तु कर्मणि यस्मिन् स न्ययुङ्क्त प्रथमं प्रभुः।**
**स तदेव स्वयं भेजे सृज्यमानः पुनःपुनः॥**

**யம்து கர்மணி யஸ்மிந் ஸந்யயுங்த ப்ரதமம் ப்ரபு: |**
**ஸ ததேவ ஸ்வயம் பேஜே ஸ்ருஜ்யமாநः புந: புந: ||** 28

பிரம்மா, முதன் முதலில், ஆதியில் சிருஷ்டித்தபோது எந்தெந்த காரியங்களைச் செய்வதற்காக எந்தெந்த வர்ணங்களைப் படைத்தாரோ, அந்தந்த வர்ணங்கள் மீண்டும் படைக்கப்படும் போதும் பழையபடியே ஒழுகுகின்றன.

(இங்கே வர்ணம் என்பதே இப்போதைய நடைமுறையில் ஜாதி என்று கூறப்படுகிறது. ஆனால் இப்போதுள்ள ஜாதிகளை மனு கூறவேயில்லை. காரணம், பிரம்மா இவைகளை உருவாக்க வில்லை. மேலும் இந்த நூலைப் படிக்கப் படிக்க இந்த விஷயத்தை நன்கு புரிந்து கொள்ள முடியும்.)

**हिंस्राहिंस्रे मृदुक्रूरे धर्माऽधर्मावृताऽनृते।**
**यद् यस्य सोऽदधात् सर्गे तत् तस्य स्वयमाविशत्॥**

**ஹிம்ஸ்ரா ஹிம்ஸ்ரே ம்ருதுக்ரூரே தர்மாதர்மாவ்ரு தாஅந்ருதே |**
**யத்யஸ்ய ஸோ அததாத்ஸர்கே தத்தஸ்ய ஸ்வயமாவிஷத் ||** 29

சிருஷ்டியின்போது பிரம்மா ஹிம்சிக்கும் குணம், அஹிம்சை, மிருதுவான குணம், குரூர குணம், தர்மம், அதர்மம், பொய், உண்மை முதலானவைகளை எவை எவைகளுக்கு எவை என்று நியமித்தாரோ, அதேபோன்றே அவையவை மீண்டும் படைக்கப் படும்போதும் அதே குணங்களோடு ஒழுகுகின்றன.

**यथर्तुलिङ्गान्यृतवः स्वयमेवर्तुपर्यये।**
**स्वानि स्वान्यभिपद्यन्ते तथा कर्माणि देहिनः॥**

**யதர்த்துலிங்காந்ய் ருதவ : ஸ்வயமேவர்து பர்யயே |**
**ஸ்வாநி ஸ்வாந்யபிபத்யந்தே ததா கர்மாணி தேஹிந: ||** 30

எவ்வாறு ருதுக்கள் தாமே தத்தமது குணங்களை அடைகின்றனவோ, அவ்வாறே பிராணிகளும் தத்தமது குணங்களை அடைகின்றன.

(ஒரு வருடத்தை ஆறு ருதுக்களாகக் கூறுகிறோம். அந்தந்த காலத்தில் அந்தந்த தன்மைகள் ஏற்படுவதைப் பார்க்கிறோம். அதாவது கோடையில் வெயிலும், குளிர்காலத்தில் குளிரும், பனிக் காலத்தில் பனியும் என்று இயற்கையாகவே நாம் அந்தந்த

மாற்றங்களைப் பார்க்கிறோம். இதையே அந்தந்த ருதுக்களுக்குரிய குணங்கள் அல்லது தன்மைகள் என்று இங்கு கூறப்பட்டுள்ளது. அவ்வாறே பிராணிகளுக்கும் வெவ்வேறான தன்மைகள் படைக்கப்பட்டுள்ளன. புலிக்கு இருக்கும் தன்மை வேறு ; பூனைக்கு இருக்கும் தன்மை வேறு. அரக்கனுக்கு இருக்கும் தன்மை வேறு, மனிதனுக்கு இருக்கும் தன்மை வேறு. அந்தந்தப் பிராணிகளும் தத்தமக்குரிய குணங்களை அடைகின்றன என்பதன் பொருள் இதுவேயாகும்.

लोकाना तु विवृद्ध्यर्थं मुखबाहूरुपादतः ।
ब्राह्मण क्षत्रिय वैश्य शूद्र च निरवर्तयत् ॥

**லோகாநாம் து விவ்ருத்யர்த்தம் முகபாஹூருபாதத: |**
**ப்ராஹ்மணம் க்ஷத்ரியம் வைஷ்யம் சூத்ரம் ச நிரவர்தயத் ||** **31**

உலகைப் படைத்த பிரம்மா அது பல்கிப் பெருகும் பொருட்டு - உலகம் உய்யும் பொருட்டு நான்கு வகையினரை - நான்கு வருணத்தாரைப் படைத்தார்.

द्विधा कृत्वाऽऽत्मनो देहमर्धेन पुरुषोऽभवत् ।
अर्धेन नारी तस्यां स विराजमसृजत् प्रभुः ॥

**த்விதா க்ருத்வா ஆத்மநோ தேஹ மர்தேந புருஷோ அபவத் |**
**அர்தேந நாரீ தஸ்யாம் ஸ விராஜமஸ்ருஜத் ப்ரபு: ||** **32**

பரம்பொருளானவர், தம் தேகத்தை இரண்டாகப் பிரித்துக் கொண்டு ஒரு பாகம் ஆணாகவும், மற்றொரு பாகம் பெண்ணாகவும் மாறினார். அந்த ஆண், அந்தப் பெண்ணிடம் 'விராட்' புருஷனை சிருஷ்டித்தார்.

(அகில உலகங்களையும் தம் சரீரமாகக் கொண்ட விஸ்வரூபிக்கு விராட் புருஷன் என்று பெயர்.)

तपस् तप्त्वाऽसृजद् यं तु स स्वयं पुरुषो विराट् ।
तं मा वित्ताऽस्य सर्वस्य स्रष्टारं द्विजसत्तमाः ॥

**தபஸ்தப்த்வா ஸ்ருஜத்யம் து ஸ ஸ்வயம் புருஷோ விராட் |**
**தம் மாம் வித்தாஸ்ய ஸர்வஸ்ய ஸ்ரஷ்டாரம் த்விஜஸத்த மா: ||** **33**

अहं प्रजाः सिसृक्षुस् तु तपस् तप्त्वा सुदुश्चरम् ।
पतीन् प्रजानामसृज महर्षीनादितो दश ॥

**அஹம் ப்ரஜா: சிச்ருக்ஷுத்து தபஸ்தப்த்வா அதுஷ்கரம் |**
**பதீந் ப்ரஜாநாமஸ்ருஜம் மஹர்ஷீநாதிதோ தஷ ||** **34**

मरीचिमत्र्यङ्गिरसौ पुलस्त्यं पुलहं क्रतुम्।
प्रचेतसं वसिष्ठं च भृगुं नारदमेव च॥

**மரீசி மத்ர்யங்கிர ஸௌ புலஸ்த்யம் புலஹம் க்ரதும் |**
**ப்ரசே தசம் வசிஷ்டம் ச ப்ருகும் நாரதமேவ ச ||** 35

இப்போது மனுபகவான், பிரம்மதேவர் தம் கூற்றாக மனுவுக்கு எப்படி உரைத்தாரோ, அதை அவ்வாறே இப்போது எடுத்துரைக்கிறார்.

"நானே விராட் புருஷனின் தவத்தால் தோன்றிய பிரம்மா. உலக சிருஷ்டியை செய்வதற்காக விராட் புருஷனால் படைக்கப் பட்டவன்.

நான் பிரஜைகளை சிருஷ்டிப்பதற்கான அளப்பரிய சக்தியை அடைவதற்காக கடும் தவமியற்றினேன். முதலில் பத்து பிரஜாபதிகளை சிருஷ்டித்தேன். (பிரஜாபதி என்பவர்கள், உலகில் சிருஷ்டியை செய்வதற்காக பிரம்மாவால் படைக்கப்பட்டவர்கள்)

மரீசி, அத்ரி, அங்கிரஸ்,புலஸ்தியன், புலஹன், க்ரது, பிரசேதஸ், வசிஷ்டன், பிருகு, நாரதன் என்னும் பத்துப் பேர்களே முதலில் நான் படைத்த பிரஜாபதிகள்." - இவ்வாறு பிரம்மதேவர் கூறினார்.

एते मनूंस् तु सप्तान्यानसृजन् भूरितेजसः।
देवान् देवनिकायांश् च महर्षींश् चाऽमितौजसः॥

**ஏதே ம நூம்ஸ் து ஸப்தாஅந்யாநஸ்ருஜந் பூரிதேஜஸ: |**
**தேவாந் தேவநிகாயாம்ஸ்ச மஹர்ஷீம்சாமி தௌஜஸ: ||** 36

தேஜஸ் மிகுந்த அவர்கள், தங்களைப் போல் தேஜஸ் கொண்ட ஏழு மனுக்களையும், தேவர்களையும், தேவ உலகங்களையும், மிகுந்த தேஜஸ் கொண்ட மகரிஷிகளையும் சிருஷ்டித்தனர்.

यक्षरक्षःपिशाचांश् च गन्धर्वाप्सरसोऽसुरान्।
नागान् सर्पान् सुपर्णांश् च पितॄणां च पृथग् गणान्॥

**யக்ஷரக்ஷ : பிசாசாம்ஸ் ச கந்தர்வாப்சரஸோ அசுராந் |**
**நாகாந் ஸர்பாந் சுபர்ணாம்ஸ்ச பித்ருணாம்ச ப்ருதக்கணாந் ||** 37

யக்ஷர்கள், ராட்சதர்கள், பிசாசர்கள், கந்தர்வர்கள், அப்சரஸ்கள், அசுரர்கள், நாகர்கள், சர்ப்பங்கள், கருடன் முதலான பறவைகள் முதலாக பித்ருக்களுடைய பல்வேறு கணங்களையும் படைத்தனர்.

विद्युतोऽशनिमेघांश् च रोहितेन्द्रधनूंषि च।
उल्कानिर्घातकेतूंश् च ज्योतींष्युच्चावचानि च॥

**வித்யுதோ அஷநிமேகாம்ஸ்ச ரோஹிதேந்த்ர தனூம்ஷி ச |**
**உல்கா நிர்காத கேதூம்ஸ்ச ஜ்யோதீம்ஷ்யுச்சாவ சாநி ச ||** 38

*மின்னல்கள், இடிகள், மேகங்கள், ரோஹிதம் எனப்படும் நீண்ட நட்சத்திரம், வானவிற்கள், வால்நட்சத்திரங்கள், உற்பாதங்கள், எரி நட்சத்திரங்கள் முதலான பலவித நட்சத்திரங்களையும் படைத்தனர்.*

किन्नरान् वानरान् मत्स्यान् विविधांश् च विहङ्गमान्।
पशून् मृगान् मनुष्यांश् च व्यालांश् चोभयतोदतः॥

**கின்னராக் வானராந் மத்ஸ்யாந் விவிதாம்ஸ் ச விஹங்கமாந் |**
**பசூந் ம்ருகாந் மனுஷ்யாம்ஸ்ச வ்யாளாம்ஸ் சோபய தோதித: || 39**

*கின்னரர்கள், வானரர்கள், மீன்கள், விதவிதமான பறவைகள், பசுக்கள், மான்கள், மனிதர்கள், கொடிய மிருகங்கள் முதலானவற்றை படைத்தனர்.*

कृमिकीटपतङ्गांश् च यूकामक्षिकमत्कुणम्।
सर्वं च दंशमशकं स्थावरं च पृथग्विधम्॥

**க்ருமிகீட பதங்காம்ஸ்ச யூகா மக்ஷிகமத்குணம் |**
**ஸர்வம் ச தம்ஷமஷகம் ஸ்தாவரம் ச ப்ருதக்விதம் || 40**

*கிருமிகள், புழுபூச்சிகள், வண்டுகள், விட்டில்பூச்சிகள், பேன்கள், ஈக்கள், கொசுக்கள் முதலானவற்றையும் மரங்களையும், மலைகளையும்கூட படைத்தனர்.*

एवमेतैरिदं सर्वं मन्नियोगान् महात्मभिः।
यथाकर्म तपोयोगात् सृष्टं स्थावरजङ्गमम्॥

**ஏவமேதைரிதம் ஸர்வம் மந்நியோகாந் மஹாத்மபி: |**
**யதாகர்ம தபோயோகாத் ஸ்ருஷ்டம் ஸ்தாவரஜங்கமம் || 41**

*மஹரிஷிகள் தவம்புரிந்து என் ஆணைப்படி இங்கே தென்படுகின்ற தாவரங்கள், மிருகங்கள், மனிதர்கள் ரூபமான உலக முழுதையும் , அதனதன் வினைப்படி படைத்தனர்.*

येषां तु यादृशं कर्म भूतानामिह कीर्तितम्।
तत् तथा वोऽभिधास्यामि क्रमयोगं च जन्मनि॥

**ஏஷாம்து யாத்ருஷம் கர் பூதாநாமி ஹ கீர்த்திதம் |**
**தத்ததா வோ அபிதாஸ்யாமி க்ரமயோகம் ச ஜன்மநி || 42**

*இனி எந்தெந்த பூதங்களுக்கு அதாவது எந்தெந்த உயிரினங்களுக்கு எந்தெந்த கர்மாக்கள் சொல்லப்படுகின்றனவோ அந்தந்த பூதங்களுடைய கர்மாக்களையும் ஜன்மாவினுடைய கிரமயோகத்தையும் உங்களுக்கு உரைக்கிறேன்.*

पशवश् च मृगाश् चैव व्यालाश् चोभयतोदतः।
रक्षांसि च पिशाचाश् च मनुष्याश् च जरायुजाः॥

**பசவஸ்ச ம் ருகாஸ்சை வ்யாளாச்சோபயதோதத: |**
**ரட்சாம்ஸி ச பிசாசாஸ்ச மனுஷ்யாஸ்ச ஜராயுஜா: || 43**

*பசுக்கள், மான்கள், கொடிய மிருகங்கள், ராட்சதர்கள், பிசாசர்கள், மனிதர்கள் முதலானோர் கர்ப்பத்தினின்று பிறந்தவர்கள்.*

अण्डजाः पक्षिणः सर्पा नक्रा मत्स्याश् च कच्छपाः ।
यानि चैवम्प्रकाराणि स्थलजान्यौदकानि च ॥

**அண்டஜா: பட்சிணஸ்சர்ப் பாநக் ராமத்ஸ்யாஸ்ச கச்சபா: |**
**யாநி சைவம் ப்ரகாராணி ஸ்தலஜாத்யௌதகாநி ச ||** 44

*பறவைகள், சர்ப்பங்கள், மீன்கள், ஆமைகள் போன்றவை முட்டையினின்று தோன்றுவன. இவற்றில் சில நீரில் வாழ்வன; சில நிலத்தில் வாழ்வன.*

स्वेदजं दंशमशकं यूकामक्षिकमत्कुणम् ।
ऊष्मणश् चोपजायन्ते यच्चान्यत् किञ्चिदीदृशम् ॥

**ஸ்வேதஜம் தம்ஷமஷகம் யூகாமக்ஷிக மத்குணம் |**
**ஊஷ்மணஸ் சஉபஜாயந்தே யச்சாந்யத்கிஞ்சிதீ த்ருஷம் ||** 45

*காட்டு ஈக்கள், கொசுக்கள், பேன்கள், ஈக்கள், மூட்டைப் பூச்சிகள், மேலும் இவற்றைப் போன்று எவையெல்லாம் வெப்பத்தினால் (புழுக்கத் திலிருந்து) பிறக்கின்றனவோ, அவை யனைத்தும் ஸ்வேதஜங்கள் எனப்படும்.*

उद्भिज्जाः स्थावराः सर्वे बीजकाण्डप्ररोहिणः ।
ओषध्यः फलपाकान्ता बहुपुष्पफलोपगाः ॥

**உத்பிஞ்ஞாஸ்தாவராஸ்ஸர்வே பீஜகாண்ட ப்ரரோஹிண: |**
**ஓஷத்ய : பலபாகாந்தா பஹுபுஷ்ப பலோபகா: ||** 46

*மரங்களனைத்தும் விதைகளைப் பிளந்து கொண்டு, பூமியையும் பிளந்து கொண்டு பிறப்பன.*

*விதைகளினின்று பிறப்பவை போக, சில கிளைகளை பூமியில் ஊன்றுவதால், மரங்களாகின்றன. நெல்போன்ற தானியங்களும், இன்னும் சில தாவரங்களும், பயிர் வளர்ந்து பலன் தந்தவுடனே அழிகின்றன.*

अपुष्पाः फलवन्तो ये ते वनस्पतयः स्मृताः ।
पुष्पिणः फलिनश् चैव वृक्षास् तूभयतः स्मृताः ॥

**அபுஷ்பா: பலவந்தோ யே தே வனஸ்பதய: ஸ்ம்ருதா: |**
**புஷ்பிண: பலினஸ்சைவ வ்ருட்சாஸ்தூ பயத: ஸ்ம்ருதா: ||** 47

*மலர்கள் இல்லாமலே பழங்களைத் தரும் மரங்களுக்கு வனஸ் பதிகள் என்று பெயர். பூத்துப் பலன் தரும் மரங்களுக்கு விருட்சங்கள் என்று பெயர்.*

गुच्छगुल्मं तु विविधं तथैव तृणजातयः।
बीजकाण्डरुहाण्येव प्रताना वल्ल्य एव च॥

**குச்சகுல்மம் து விவிதம் ததைவ த்ருண ஜாதய: |**
**பீஜகாண்ட ருஹாண்யேவ ப்ரதாநா வல்ய ஏவச ||** 48

கொத்துக் கொத்தாகப் பூப்பவை 'குச்சம்' என்று சொல்லப்படும். புதராக மண்டி வளர்பவை 'குல்மம்' என்று சொல்லப்படும். சில புல்வகைகளும், படரும் தாவரங்களும், கொடிவகைகளும் விதைகளினின்றும் பிறந்தவை. மேலும் சில கிளைகளை பூமியில் ஊன்றுவதால் வளர்பவை.

तमसा बहुरूपेण वेष्टिताः कर्महेतुना।
अन्तःसञ्ज्ञा भवन्त्येते सुखदुःखसमन्विताः॥

**தமஸா பஹுரூபேண வேஷ்டிதா: கர்மஹேது நா |**
**அந்தஸ்ஸ ம்ஞா பவந்த்யேதே சுகதுக்க சமன்விதா: ||** 49

இந்தத் தாவரங்கள் அனைத்துமே, கர்மஹேதுவான தமோ குணத்துடன் கூடியதாக, உணர்வுகளுடன் கூடிய மனமும் பெற்றிருப்பதால் சுகதுக்கங்களை அனுபவிப்பவையாக உள்ளன.

एतदन्तास्तु गतयो ब्रह्माद्याः समुदाहृताः।
घोरेऽस्मिन् भूतसंसारे नित्यं सततयायिनि॥

**ஏததந்தாஸ்து கதயோ ப்ரஹ்மாத்யா: சமுதாஹ்ருதா: |**
**கோரே அஸ்மிந் பூதசம்சாரே நித்யம் சததயாயி நி ||** 50

பயங்கரமானதாகவும், எப்போதும் அழிவுக்கு ஆட்படுவதாகவும் உள்ள இந்த பூத சம்சாரத்தில் பிரம்மா முதல் தாவரங்கள் ஈறாக உள்ள சகல ஜீவசிருஷ்டிகளும் கூறப்பட்டன.

(ஜீவசிருஷ்டியில் மனிதர்களுக்கு இருப்பதைப் போன்றே விலங்கு களுக்கும் அறிவு உண்டு. அவைகளுக்கு மனமும் உணர்வுகளும் உண்டு. அவ்வாறே தாவரங்களுக்கும் உண்டு. அறிவு, மனம், உணர்வுகளைப் பெற்றிருப்பதால் தாவரங்களுக்கும் சுகமும் துக்கமும் உண்டு.

பிரம்மா முதல் தாவரங்கள் ஈறாக உள்ள சகல ஜீவ சிருஷ்டி களுக்கும் மனம் என்ற ஒன்று உணர்வுகளுடன் கூடியதாக இருப்பதால் சுகம் துக்கம் இரண்டும் உண்டு.

இந்த சுகம் துக்கம் இரண்டிலிருந்தும் விடுபட்டு நிலையான மோட்ச ஆனந்தத்தைப் பெறக்கூடியவர்கள் மனிதர்களே. அவர்களுக்கென்று விதிக்கப்பட்ட தர்மங்களைக் கடைப்பிடிப்பது ஒன்றே அதையடையும் வழி. அந்த தர்மங்களை மிகமிகத் தெளிவாக பின்னால் பார்க்கப் போகிறோம்.

இப்போது மனு கூறுவதை அடுத்த ஸ்லோகத்தில் பார்ப்போம்.

एवं सर्वं स सृष्ट्वेदं मां चाऽचिन्त्यपराक्रमः।
आत्मन्यन्तर्दधे भूयः कालं कालेन पीडयन्॥

**ஏவம் ஸர்வம் ஸ ஸ்ருஷ்ட்வேதம் மாம் சாஅசிந்த்ய பராக்ரம: |**
**ஆத்மந் யந்தர்ததே பூய: காலம் காலேந பீடயந் ||** 51

இவ்வாறு என்னையும் சர்வத்தையும் படைத்த, அளவற்ற பராக்ரமம் பொருந்திய பிரம்மா, காலத்தை காலத்தோடு சேர்த்து, அதாவது சிருஷ்டி காலத்தை பிரளயகாலத்தோடு சேர்த்து, தன்னுள் தான் கலப்பார்.

यदा स देवो जागर्ति तदेदं चेष्टते जगत्।
यदा स्वपिति शान्तात्मा तदा सर्वं निमीलति॥

**யதா ஸ தேவோ ஜாகர்த்திதம்ததம் ம்சஷ்டதே ஜகத் |**
**யதா ஸ்வபிதி சாந்தாத்மா ததா ஸர்வம் நிமீலதி ||** 52

எப்போது அவர் விழிப்புறுவரோ, அப்போது இந்த உலகம் இயங்கத் தொடங்கும். எப்போது அவர் சாந்தமாக உறங்கத் தொடங்குகிறாரோ, அப்போது அனைத்தும் ஒடுங்கும்.

तस्मिन् स्वपति सुस्थे तु कर्माऽऽत्मानः शरीरिणः।
स्वकर्मभ्यो निवर्तन्ते मनश् च ग्लानिमृच्छति॥

**தஸ்மிந் ஸ்வபதி சுஸ்தே து கர்மாத்மான: சரீரிண: |**
**ஸ்வகர்மப்யோ நிவர்த்தந்தே மனஸ்ச க்ளாநிம்ருச்சதி ||** 53

எப்போது அவர் உறங்கிக் கொண்டிருக்கிறாரோ, அப்போது கர்மாவின் உருவங்களான ஜீவன்களனைத்தும் காரியங்கள் ஏதுமற்று இருக்கும். அனைத்து இந்திரியங்களோடு மனமும் ஒய்வெடுத்துக் கொள்ளும்.

युगपत् तु प्रलीयन्ते यदा तस्मिन् महात्मनि।
तदायं सर्वभूतात्मा सुखं स्वपिति निर्वृतः॥

**யுகபத் து ப்ரலீயந்தே யதா தஸ்மிந் மஹாத்மநி |**
**ததாயம் ஸர்வபூதாத்மா சுகம் ஸ்வபித நிர்வ்ருத: ||** 54

எப்போது ஜீவன்களெல்லாம் ஒரே தருணத்தில் அந்த மஹாத்மாவிடம் கலக்கின்றனவோ, அப்போது அவர் அனைத்து இயக்கங்களையும் விட்டு சுகமாக உறங்குகிறார்.

तमोऽयं तु समाश्रित्य चिरं तिष्ठति सेन्द्रियः ।
न च स्वं कुरुते कर्म तदोत्क्रामति मूर्तितः ॥

**தமோஅயம் து ஸமாஸ்ரித்ய சிரம் திஷ்டதி சேந்த்ரிய: |**
**நச ஸ்வம் குருதே கா்ம ததோத்க்ராமதி மூத்தித: ||** 55

எப்போது இந்த ஜீவன் இந்திரியங்களுடன் ஞானமற்றுப் போய், மூச்சுவிடும் செயலைச் செய்யாமல் இருக்கிறதோ, அப்போது இந்த ஜீவன் உடலிலிருந்து விலகுகிறது.

यदाऽणुमात्रिको भूत्वा बीजं स्थास्नु चरिष्णु च ।
समाविशति संसृष्टस् तदा मूर्तिं विमुञ्चति ॥

**யதா அணுமாத்ரிகோ பூத்வா பீஜம்ஸ்தாஸ்நு சரிஷ்ணு ச |**
**சமாவிஷதி ஸம்ஸ்ருஷ்டஸ்ததா மூர்த்திம் விமுஞ்சதி ||** 56

எப்போது ஜீவன் இந்திரியங்களுடன் கூடியதாகிறதோ, அப்போது விதையை அடைந்து தாவரமாகவோ அல்லது மனித தேகத்தை அடைந்து மனிதனாகவோ பிறப்பெடுக்கிறது.

एवं स जाग्रत्-स्वप्नाभ्यामिदं सर्वं चराचरम् ।
सञ्जीवयति चाऽजस्रं प्रमापयति चाऽव्ययः ॥

**ஏவம் ஸ ஜாக்ரத் ஸ்வப்நாப்யாம் இதம் ஸர்வம் சராசரம் |**
**சஞ்ஜீவயதிசாஅஜஸ்ரம் ப்ரமாபயதி சாஅவ்யய: ||** 57

இவ்வாறாக பிரம்மா, விழிப்பு, உறக்கநிலைகளை மேற்கொண்டு, இந்த உலகத்தைப் படைக்கவும் செய்கிறார், அழிக்கவும் செய்கிறார்.

इदं शास्त्रं तु कृत्वाऽसौ मामेव स्वयमादितः ।
विधिवद् ग्राहयामास मरीच्यादींस् त्वहं मुनीन् ॥

**இதம் சாஸ்த்ரம் து க்ருத்வா அசௌ மாமேவ ஸ்வயமாதித: |**
**விதிவத்க்ராஹயாமாச மரீச்யா தீம்ஸ் த்வஹம் முநீந் ||** 58

இந்த தர்மசாஸ்திரத்தை முதலில் உருவாக்கியவர் பிரம்மா. அவரே எனக்கு இந்த சாஸ்திரத்தை விதிமுறைப்படி உபதேசித்தார். நான் இதை மரீசி முதலான முனிவர்களுக்கு உரைத்தேன்.

एतद् वोऽयं भृगुः शास्त्रं श्रावयिष्यत्यशेषतः ।
एतद् धि मत्तोऽधिजगे सर्वमेषोऽखिलं मुनिः ॥

**ஏதத்வோஅயம் ப்ருகு:சாஸ்த்ரம் ஸ்ராவயிஷ்யத்ய சேஷத: |**
**ஏதத்தி மத்தோஅதிஜகே ஸர்வமேஷோஅகிலம் முநி: ||** 59

இந்த ப்ருகுமுனி இந்த சாஸ்திரம் முழுவதையும் என்னிடம் பயின்றிருப்பதால், இவர் உங்களுக்கு இதை உரைக்கத் தக்கவர்.

ततस् तथा स तेनोक्तो महर्षिर् मनुना भृगुः।
तानब्रवीदृषीन् सर्वान् प्रीतात्मा श्रूयतामिति॥

**ததஸ்ததா ஸ தேநோக்தோ மஹர்ஷிர்மநுநா ப்ருகு: |**
**தாநப்ரவீத் ருஷீந் ஸர்வாந் ப்ரீதாத்மா ஷ்ரூயதாமிதி || 60**

*இவ்வாறு மனு கூறவும், எவ்வளவோ முனிவர்கள் இருக்கும்போது தன் குருவான மனு இந்த சாஸ்திரத்தை எடுத்தியம்ப, தன்னை நியமித்ததைக் கண்டு மிகுந்த சந்தோஷமுற்று, கேட்கக் காத்திருக்கும் அம்முனிவர்களைப் பார்த்து 'கேளுங்கள்' என்றார்.*

*(இதிலிருந்து தொடர்வது ப்ருகு முனிவர் வாயிலாக வெளிப் பட்டவை.)*

स्वायम्भुवस्यास्य मनोः षड् वंश्या मनवोऽपरे।
सृष्टवन्तः प्रजाः स्वाःस्वा महात्मानो महौजसः॥

**ஸ்ாயம்புவஸ்யாஸ் ய மநோ: ஷட்வம்ஷ்யாமந வோ அபரே |**
**ஸ்ருஷ்டவந்த: ப்ரஜா: ஸ்வா: ஸ்வா மஹாத்மாநோ மஹௌஜஸ: || 61**

*மஹாத்மாக்களும், தேஜஸ்மிக்கவ்ர்களுமான, ஸ்வாயம்புவ மனுவின் வம்சத்தவர்களான ஆறுபேர் சிருஷ்டித்தொழிலில் ஈடுபட்டு தத்தம் பிரஜைகளை உருவாக்கினார்கள்.*

स्वारोचिषश् चोत्तमश् च तामसो रैवतस् तथा।
चाक्षुषश् च महातेजा विवस्वत्सुत एव च॥

**ஸ்வாரோசிஷஸ்ச உத்தமஸ்ச்ய தாஸோ ரைவதஸ் ததா |**
**சாக்ஷுசஸ்ச மஹாதேஜா விவஸ்வத்சுத ஏவ ச || 62**

*ஸ்வரோசிஷன், உத்தமன், தாமசன், ரைவதன், சாட்சுசன், மஹாதேஜஸ் கொண்ட வைவஸ்வதன் இவர்களே அந்த ஆறு பேர்கள்.*

स्वायम्भुवाद्याः सप्तैते मनवो भूरितेजसः।
स्वेस्वेऽन्तरे सर्वमिदमुत्पाद्यापुश् चराचरम्॥

**ஸ்வாயம்புவாத்யா: ஸப்தைதே மநவோ பூரிதேஜஸ: |**
**ஸ்வே ஸ்வே அந்தரே ஸர்வமிதம் உத்பாத்யா அபுஸ் சராசரம் || 63**

*மிக்க சக்தி படைத்தவர்களான, ஸ்வாயம்புவ மனு முதலான இந்த ஏழுபேரும் தங்கள் தங்கள் அந்தரங்களில் (காலங்களில்) உயிர்களைப் படைத்து, காத்து ஆட்சி நடத்தினர்.*

निमेषा दश चाष्टौ च काष्ठा, त्रिंशत् तु ताः कला।
त्रिंशत् कला मुहूर्तः स्यादहोरात्रं तु तावतः॥

**நிமேஷா தஷா சாஷ்டௌ ச காஷ்டா த்ரிஷத்து தா: கலா |**
**த்ரிம்ஷத் கலா முகூர்த்த: ஸ்யாத் ஹோராத்ரம் து தாதவ: || 64**

இமை கொட்டும் நேரம் பதினெட்டு கொண்டது ஒரு காஷ்டை எனப்படும். முப்பது காஷ்டைகள் கொண்டது ஒரு கலை எனப்படும்.

முப்பது கலைகள் கொண்டது ஒரு முகூர்த்தம்.

முப்பது முகூர்த்தங்கள் கொண்டது ஒரு இரவும் பகலும் ஆகும்.

अहोरात्रे विभजते सूर्यो मानुषदैविके।
रात्रिः स्वप्नाय भूतानां चेष्टायै कर्मणामहः॥

**அஹோராத்ரே விபஜதே சூர்யோ மானுஷ தைவிகே |**
**ராத்ரிஸ்வப்நாய பூதாநாம் சேஷ்டாயை கர்மணாமஹ: || 65**

சூரியன் இரவு பகல்களை தேவர்களுக்கென்றும் மானிடர்களுக் கென்றும் ஏற்படுத்தினார். இரவு என்பது உறக்கத்துக்காகவும், பகல் காரியமாற்றுவதற்காகவும் ஏற்படுத்தப்பட்டன.

पित्र्ये रात्र्यहनी मासः, प्रविभागस् तु पक्षयोः।
कर्मचेष्टास्वहः कृष्णः शुक्लः स्वप्नाय शर्वरी॥

**பித்ர்யே ராத்ர்யஹ நீ மாஸ: ப்ரவிபாகஸ்து பட்சயோ: |**
**கர்மசேஷ்டாஸ்வஹ: க்ருஷ்ண: சுக்ல: வப்நாய சர்வரீ || 66**

மானிடர்களுடைய ஒரு மாதம் என்பது பித்ருக்களுடைய இரவும் பகலுமான ஒரு நாள் எனப்படும். அதில் தேய்பிறை கர்மானுஷ்டானங்களுக்கும், வளர்பிறை உறக்கத்துக்கும் ஏற்பட்டவை.

(அதாவது தேய்பிறை பித்ருக்களுடைய ஒரு பகல் பொழுது. வளர்பிறை பித்ருக்களுடைய ஒரு இரவுப் பொழுது.)

दैवे रात्र्यहनी वर्षं प्रविभागस् तयोः पुनः।
अहस् तत्रोदगयनं रात्रिः स्याद् दक्षिणायनम्॥

**தைவே ராத்ர்யஹநீ வர்ஷம் ப்ரவிபாகஸ்தயோ: புந: |**
**அஹஸ் தத்ரோதகயநம் ராத்ரி:ஸ்யாத் தட்சிணாயனம் || 67**

மனிதர்களுடைய ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு இரவும் பகலுமான ஒரு நாள். இதில் உத்தராயனம் என்னும் ஆறுமாதங்கள் தேவர்களின் ஒரு பகல் பொழுது. தட்சிணாயனம் என்னும் ஆறு மாதங்கள் தேவர்களின் ஒரு இரவுப் பொழுது.

ब्राह्मस्य तु क्षपाहस्य यत् प्रमाणं समासतः।
एकैकशो युगानां तु क्रमशस् तन् निबोधत॥

**ப்ராஹ்மஸ்யது க்ஷபாஹஸ்ய யத்ப்ரமாணம் சமாசத: |**
**ஏகைகஷோ யுகாநாம் து க்ரமஷஸ்தந்நிபோ தத || 68**

பிரம்ம தேவருடைய இரவு பகலுக்கான காலக் கணக்கையும், யுகங்களின் காலக் கணக்கையும் கூறுகிறேன், கேளுங்கள்.

चत्वार्याहुः सहस्राणि वर्षाणां तत् कृतं युगम्।
तस्य तावच्छती सन्ध्या सन्ध्यांशश् च तथाविधः ॥

**சத்வார்கயாஹு: ஸஹஸ்ராணி வர்ஷாணாம் தத் க்ருதம் யுகம் |**
**தஸ்ய தாவச்சதீ ஸந்தயா ஸந்த் யாம் ஷஷ்ச ததாவித: ||** 69

நாலாயிரம் தேவ வருடங்கள் கொண்டது கிருதயுகம்.

மேலும் காலையில் சந்த்யாகாலம் என்று நானூறு வருடங்களும், மாலையில் சந்த்யா காலம் என்று நானூறு வருடங்களும் சேரும். மொத்தத்தில் நாலாயிரத்து எண்ணூறு தேவ வருடங்கள் கொண்டது கிருதயுகம்.

इतरेषु ससन्ध्येषु ससन्ध्यांशेषु च त्रिषु।
एकापायेन वर्तन्ते सहस्राणि शतानि च ॥

**இதரேஷு சசந்த்யேஷு ஸஸந்த் யாம்ஷேசு சத்ரிசு |**
**ஏகாபாயேந வர்த்தந்தே சஹஸ்ராணி சதாநி ச ||** 70

மற்ற யுகங்களில் சந்தியைகளுக்கும் யுகத்துக்கும் நூறும் ஆயிரமுமாக குறைத்துக் கொண்டே வர வேண்டும். அப்படியென்றால், திரேதா யுகத்துக்கு மூவாயிரம் தேவ வருடங்கள். அதில் இரண்டு சந்தியைகளுக்குமாக முந்நூறு, முந்நூறு தேவ வருடங்கள். ஆக மூவாயிரத்து அறு நூறு தேவ வருடங்கள் கொண்டது திரேதா யுகம்.

இவ்வாறாகப் பார்க்கும் போது, துவாபர யுகம் இரண்டாயிரத்து நானூறு தேவ வருடங்கள் கொண்டது.

கலியுகம் ஆயிரத்து இருநூறு தேவ வருடங்கள் கொண்டது.

यदेतत् परिसङ्ख्यातमादावेव चतुर्युगम्।
एतद् द्वादशसाहस्रं देवानां युगमुच्यते ॥

**யதேதத்பரிசங்க் யாதமாதாவேவ சதுர்யுகம் |**
**ஏதத் துவாதச சாஹஸ்ரம் தேவாநாம் யுகமுச்யதே ||** 71

மானிட யுகங்கள் நான்கும் சேர்ந்தால் மொத்தம் பன்னிரண்டாயிரம் தேவ வருடங்கள். இது தேவர்களின் ஒரு யுகம்.

दैविकानां युगानां तु सहस्रं परिसङ्ख्यया।
ब्राह्ममेकमहर् ज्ञेयं तावतीं रात्रिमेव च ॥

**தைவிகாநாம் யுகா நாம்து சஹஸ்ரம் பரிசங்க்யயா |**
**ப்ராஹ்மமேக மஹர்ஞேயம் தாவதீம் ராத்ரிரேவ ச ||** 72

இப்படிப்பட்ட தேவ யுகங்கள் ஆயிரம் கொண்டது பிரம்மாவின் ஒரு பகல். அவ்வாறே ஆயிரம் தேவ யுகங்கள் கொண்டது ஒரு இரவு. எனவே இரண்டாயிரம் தேவ யுகங்கள் கொண்டது பிரம்மாவின் ஒரு நாள்.

तद् वै युगसहस्रान्तं ब्राह्मं पुण्यमहर् विदुः।
रात्रिं च तावतीमेव तेऽहोरात्रविदो जनाः॥

**தத்வை யுக ஸஹஸ்ராந்தம் ப்ராஹ்மம் புண்ய மஹர்விது: |**
**ராத்ரிஞ்ச தாவதீமேவ தே அஹோராத்ரவிதோ ஜநா: || 73**

இவ்வாறான தேவ யுகங்கள் ஆயிரம் கொண்ட பிரம்மாவின் பகல் பொழுதை 'புண்ணிய தினம்' என்பார்கள். அவ்வாறே அதே அளவுள்ள பிரம்மாவின் இரவுப் பொழுதை 'புண்ணிய இரவு' என்பார்கள். இவ்வாறான பிரம்மாவின் இரவு பகல் கணக்கை அறிந்தவர்களை 'அஹோராத்ரி யறிந்தவர்கள்' என்பார்கள்.

तस्य सोऽहर्निशस्यान्ते प्रसुप्तः प्रतिबुध्यते।
प्रतिबुद्धश् च सृजति मनः सदसदात्मकम्॥

**தஸ்ய ஸோ அஹர்நிஷஸ்யாந்தே ப்ரசுப்த: ப்ரதிபுத்ய தே |**
**ப்ரதிபுத்தஸ்ச ஸ்ருஜதி மன: ஸத் அஸத் ஆத்மகம் || 74**

பிரம்மா தன்னுடைய இரவு நேரத்தில் உறங்குவார். இரவு நேரம் முடியும் தறுவாயில் எழுந்திருப்பார். அப்படி எழுந்திருப்பவர் சத் அசத் ரூபமான சிருஷ்டியைச் செய்யத் தொடங்குவார்.

मनः सृष्टिं विकुरुते चोद्यमानं सिसृक्षया।
आकाशं जायते तस्मात् तस्य शब्दं गुणं विदुः॥

**மன: ஸ்ருஷ்டிம் விகுருதே சோத்யமாநம் சிஸ்ருக்ஷயா |**
**ஆகாஷம் ஜாயதே தஸ்மாத் தஸ்ய ஷப்தம் குணம் விது: || 75**

பிரம்மாவால் மனம் மஹத் சிருஷ்டியில் ஏவப்பட்டு மஹத் சிருஷ்யிலிருந்து ஆகாயம் தோன்றியது. ஆகாயத்துக்கு 'சப்தம்' குணமாய் அமைந்தது.

आकाशात् तु विकुर्वाणात् सर्वगन्धवहः शुचिः।
बलवान् जायते वायुः स वै स्पर्शगुणो मतः॥

**ஆகாஷாத்து விகுர்வாணாத் ஸர்வ கந்தவ ஹ சுசி: |**
**பலவாந் ஜாயதே வாயு: ஸவை ஸ்பர்ஷகுணோ மத: || 76**

ளஆகாயத்திலிருந்து இனிய வாசனைகளையும், துர்வாசனை களையும் கொண்டு செல்வதும், பவித்ரமானதும், மிகுந்த பலம் கொண்டதுமான வாயு தோன்றியது. வாயு 'ஸ்பரிசம்' என்னும் குணம் கொண்டதாகக் கூறுகிறார்கள்.

वायोरपि विकुर्वाणाद् विरोचिष्णु तमोनुदम्।
ज्योतिरुत्पद्यते भास्वत् तद् रूपगुणमुच्यते॥

**வாயோரபி விகுர்வாணாத்விரோசிஷ்ணு தமோநுதம் |**
**ஜ்யோதிருத்பத்யதே பாஸ்வத்தத்ரூப குணமுச்யதே ||** 77

வாயுவிலிருந்து மிக்க பிரகாசம் கொண்டதும், இருட்டைப் போக்கடிப்பதுமான ஜோதி (நெருப்பு) தோன்றியது. அந்த ஜோதி 'உருவம்' என்னும் குணம் கொண்டது என்று கூறுகிறார்கள்.

ज्योतिषश् च विकुर्वाणादापो रसगुणाः स्मृताः।
अद्भ्यो गन्धगुणा भूमिरित्येषा सृष्टिरादितः॥

**ஜ்யோதிஷஸ் ச விகுர்வாணாதாபோ ரஸகுணா: ஸ்ம்ருதா: |**
**அத்ப்யோ கந்தகுணா பூமிரித்யேஷா ஸ்ருஷ்டிராதித: ||** 78

நெருப்பிலிருந்து தண்ணீர் தோன்றியது. தண்ணீர் 'ரஸம்' என்னும் குணம் கொண்டது. தண்ணீரிலிருந்து பூமி தோன்றியது. பூமி 'வாசனை' என்னும் குணம் கொண்டது.

இப்படித் தோன்றியதே ஆதி சிருஷ்டி.

यत् प्राग् द्वादशसाहस्रमुदितं दैविकं युगम्।
तदेकसप्ततिगुणं मन्वन्तरमिहोच्यते॥

**யத் ப்ராக்த்வாதஷ சாஹஸ்ரமுதிதம் தைவிகம் யுகம் |**
**ததேகஸப்ததி குணம் மந்வந்தர மிஹோச்யதே ||** 79

பன்னிரண்டாயிரம் வருடங்கள் எண்ணிக்கையில் மனிதர்களின் நான்கு யுகங்கள் கொண்டது ஒரு 'தேவ யுகம்' என்று முன்னர் கூறப்பட்டது. அப்படிப்பட்ட தேவ யுகங்கள் எழுபத்தொன்று நிறைந்தால், அது ஒரு மன்வந்தரம் எனப்படும்.

मन्वन्तराण्यसङ्ख्यानि सर्गः संहार एव च।
क्रीडन्निवैतत् कुरुते परमेष्ठी पुनःपुनः॥

**மந்வந்தராண்ய சங்க்யாநி ஸர்க : ஸம்ஹார ஏவ ச |**
**க்ரீடந்நிவைதத் குருதே பரமேஷ் டீ புந : புந: ||** 80

சிருஷ்டியும், சம்ஹாரமும் எண்ணற்றவையாதலின், மன்வந்தரங்களும் எண்ணற்றவையே.

சிருஷ்டியை, பிரம்மா விளையாட்டாகவே மீண்டும் மீண்டும் செய்கிறார்.

चतुष्पात् सकलो धर्मः सत्यं चैव कृते युगे।
नाधर्मेणाऽऽगमः कश्चिन् मनुष्यान् प्रति वर्तते॥

**சதுஸ்பாத் ஸகலோ தர்ம : ஸ்த்யம் சைவ க்ருதே யுகே |**
**நாதர் மேணாகம : கஸ்சித் மநுஷ்யாந் ப்ரதி வர்ததே ||** 81

கிருதயுகத்தில் தர்மம் நான்கு பாதங்கள் கொண்டதாக இருக்கும். எங்கும் சத்யமே நிறைந்திருக்கும்.

(தர்ம தேவதையை ஒரு பசுவாக உருவகப்படுத்தினால், அதற்கு நான்கு பாதங்கள் இருக்குமல்லவா? இவ்வாறு இந்த ஸ்லோகத்தின் பொருளைப் பார்க்க வேண்டும். ஒரு பசு நான்கு கால்களுடன் இருக்கும்போது அது நலமாக இருப்பதாகக் கொள்ளலாம். ஒவ்வொரு காலாக ஒடிந்தால் நடக்க முடியாமல் நிலை தடுமாறி வீழ்ந்து விடுமல்லவா?

நான்கு யுகங்களில் முதல் யுகம் கிருதயுகம். இந்த யுகத்தில் மனிதர்கள் அனைவரும் தத்தமக்குரிய தர்மங்களை பூரணமாகக் கடைப்பிடிப்பவர்களாக இருப்பார்கள். தர்ம தேவதை திருப்தியோடு இருக்கும்.

அடுத்த யுகமான திரேதா யுகத்தில் மனிதர்களுக்கு கொஞ்சம் தர்மத்திலுள்ள பற்று குறையும். அந்த யுகத்தில் பசு ரூபமான தர்மதேவதை தன் ஒரு காலை இழந்து மூன்று கால்களுடன் சிரமப்படும். அதாவது தர்மம் உலகில் முழுமையாக இல்லாது அங்கங்கே குறைந்து காணப்படும்.

அடுத்தது துவாபர யுகம். இந்த யுகத்தில் தர்மம் மேலும் குறையும். மனிதர்களில் துர்குணங்கள் கொண்டவர்கள் மிகுதியாக இருப்பார்கள். தர்மத்தின் கால்களில் இன்னொன்று குறையும். இரண்டு கால்களோடு ஒரு பசு எவ்வளவு சிரமப்படும் என்று யோசித்துப் பாருங்கள். அவ்வளவு சிரமம் துவாபர யுகத்தில் தர்மத்துக்கு ஏற்படும்.

இப்போது நடப்பது நான்காவதான கலியுகம். இதில் தர்மம் மூன்று கால்களை இழந்து ஒற்றைக் காலுடன் திண்டாடும். அதாவது உலகில் அதர்மம் முக்கால் பங்கு ஓங்கி இருக்கும். அங்கங்கே தர்மம் திண்டாடிக் திணறிக் கொண்டிருக்கும்.

இப்போது கலியுகம் தொடங்கி ஐயாயிரத்து நூறு வருடங்கள் ஆகின்றன. இப்போதே தர்மத்தின் திண்டாட்டத்தை நன்கு உணர முடிகிறது. இன்னும் கலியுகத்தில் ஆண்டுகள் மிச்சமிருக்கின்றன.

இனி போகப் போக தர்மத்தின் உயிர் ஊசலாடிக் கொண் டிருப்பதைக் காண முடியும். ஆனால் இந்தக் கலியுகத்தில் தர்மத்தின் மீது பற்றுதல் கொண்டு, மற்றப் பற்றுக்களை விட்டவன் மிக எளிதில் மோட்ச சாம்ராஜ்ஜியத்தை அடைய முடியும்.)

इतरेष्वागमाद् धर्मः पादशस् त्ववरोपितः ।
चौरिकानृतमायाभिर् धर्मश् चापैति पादशः ॥

**இதரேஷ்வாகமாத்தர்ம : பாதஷஸ்வவரோ பித: |**
**சௌரிகாஅந்ருதமாயா பிர்தர்மஸ்சாபைதி பாதஷ: ||** 82

மற்ற யுகங்களில் தர்மம் ஒவ்வொரு பாதமாக குறைந்து கொண்டே வரும். திருட்டு, பொய், வஞ்சனை இவற்றால் தர்மம் குறைந்து கொண்டே போகும்.

अरोगाः सर्वसिद्धार्थाश् चतुर्वर्षशतायुषः ।
कृते त्रेतादिषु ह्येषामायुर् ह्रसति पादशः ॥

**அரோகா : ஸர்வஸித்தார்த்தாஷ் சதுர்வர்ஷஷதாயுஷ: |**
**க்ருதேத்ரேதாதிசுஹ்யேஷா மாயுர்ஹ்ரஸதி பாதஷ: ||** 83

கிருதயுகத்தில் மனிதர்கள் நோயற்றவர்களாகவும், எல்லாவித விருப்பங்களும் நிறைவேறியவர்களாயும், நானூறு வருடங்கள் ஆயுள் கொண்டவர்களாகவும் இருந்தனர். திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகங்களில் மனிதர்களின் ஆயுள் ஒவ்வொரு பாதமாக குறைவுபடும்.

(முதல் யுகம் கிருதயுகம். அதில் மனிதர்கள் நானூறு வயது வரை ஆயுள் கொண்டவர்கள். இரண்டாவது யுகமான திரேதா யுகத்தில் மனிதர்கள் முந்நூறு வயது வரை ஆயுள் கொண்டவர்கள். மூன்றாவது யுகமான துவாபர யுகத்தில் மனிதர்களின் ஆயுள் இருநூறு. கலியுகத்தில் நூறு.

முதல் யுகத்தில் ஆயுள் நானூறு ஆண்டுகள் என்றாலும். அப்போது வாழ்ந்த மனிதர்களுடைய தவத்தாலும் தர்மானுஷ்டானங்களாலும் அளவற்ற ஆயுள் பெற்றிருந்தார்கள். பல்லாயிரக் கணக்கான வருடங்கள் உயிர் வாழ்ந்தார்கள். இப்படியே இரண்டாவதான திரேதா யுகத்திலும் மனிதர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்தார்கள்.

மூன்றாவதான துவாபரயுகத்தில் தவமில்லாது போய்விட்டது. தர்மமும் பாதிக்கும் மேல் க்ஷீணித்து விட்டது. எனவே, குறிப்பிட்டபடி இரு நூறு வயது அல்லது அதற்கும் குறைவாகவே வாழ்ந்தார்கள். இது கலியுகம். இந்த யுகத்தில் மனிதனின் ஆயுள் நூறு. அதர்மத்தின் காரணமாக இந்த நூறு வயது வரை வாழ்வதுகூட குறைந்து விட்டது. தவமும் சீலமும் ஒருவரது ஆயுளை வளர்த்துக் கொண்டே போகும். அவை இல்லாதபோது குறிப்பிட்ட அளவு ஆயுளும் குறைந்து போகும்.

**वेदोक्तमायुर् मर्त्यानामाशिषश् चैव कर्मणाम्।
फलन्त्यनुयुगं लोके प्रभावश् च शरीरिणाम्॥**

**வேதோக்தமா யுர்மர்த்யா நாமாஷிசஸ் சைவ கர்மணாம் |
பலந்த் யநுயுகம் லோகே ப்ரபாவஸ்ச ஷரீரிணாம் || 84**

வேதங்களில் கூறப்பட்ட ஆயுளும், காம்ய கர்மாக்களுக்கு கிடைக்கக்கூடிய பலன்களும், சாபங்களும், வரங்களும், பிரபாவங் களும், மனிதர்களுக்கு அந்தந்த யுகத்துக்கு தக்கபடி பலன் கொடுக்கும்.

**अन्ये कृतयुगे धर्मास् त्रेतायां द्वापरेऽपरे।
अन्ये कलियुगे नृणां युगह्रासानुरूपतः॥**

**அந்யே க்ருதயுகே தர்மாஸ் த்ரேதாயாம் த்வாபரே அபரே |
அந்யே கலியுகே ந்ருணாம் யுகஹ்ராஸாநு ரூபத: || 85**

கிருத யுக தர்மங்கள் வேறு. திரேதா யுக தர்மங்கள் கிருத யுக தர்மங்களைவிடக் குறைவானவை. அவற்றைவிட குறைவானவை துவாபர யுக தர்மங்கள். கலி யுக தர்மங்களோ இவற்றிலிருந்தும் குறைந்து இருக்கும். இவ்வாறாக யுகங்களைப் பொறுத்து தர்மங்கள் வேறுபட்டவையாக இருக்கும்.

**तपः परं कृतयुगे त्रेतायां ज्ञानमुच्यते।
द्वापरे यज्ञमेवाहुर् दानमेकं कलौ युगे॥**

**தப: பரம் க்ருதயுகே த்ரேதாயாம் ஞானமுச்யதே |
த்வாபரே யக்ஞமேவாஹுர் தானமேகம் கலௌ யுகே || 86**

கிருதயுகத்தில் தவம் செய்வதே மேலான தர்மம். திரேதா யுகத்தில் தவம் குறைந்து, ஆத்ம ஞானம் மேலான தர்மமாக இருக்கும். துவாபர யுகத்தில் அதுவும் குறைந்து யக்ஞம் செய்தல் மேலான தர்மம் என்றாகும். கலி யுகத்தில் தானம் செய்தலே சிறந்த தர்மமாக கூறப்படும்.

**सर्वस्यास्य तु सर्गस्य गुप्त्यर्थं स महाद्युतिः।
मुखबाहूरुपज्जानां पृथक् कर्माण्यकल्पयत्॥**

**ஸர்வஸ்யாஸ்ய து ஸர்கஸ்ய குப்த்யர்தம் ஸ மஹாத்யுதி: |
முக பாஹூரு பஜ்ஜாநாம் ப்ருதக் கர்மாண்ய கல்பயத் || 87**

மிக்க தேஜஸ் பொருந்தியவரான பிரம்மா அனைத்து உயிர் களையும் காப்பதற்காக தன்னிலிருந்து நான்கு வருணத்தாரைத் தோற்றுவித்தார். அவரவர்க்குரிய தர்மங்களையும் ஏற்படுத்தினார்.

अध्यापनमध्ययनं यजनं याजनं तथा।
दानं प्रतिग्रहं चैव ब्राह्मणानामकल्पयत्॥

**அத்யாபநமசாத்யயநம் யஜநம் யாஜநம் ததா |**
**தானம் ப்ரதிக்ரஹம் சைவ ப்ராஹ்மணாநாமகல்பயத் ||** 88

வேதங்களை ஓதுவதும், கற்பித்தலும், யக்ஞங்கள் செய்தலும், செய்வித்தலும், தானம் கொடுத்தலும், வாங்குதலும் என்னும் ஆறையும் பிராம்மணனுக்குரிய தர்மங்களாக ஏற்படுத்தினார்.

प्रजानां रक्षणं दानमिज्याऽध्ययनमेव च।
विषयेष्वप्रसक्तिश् च क्षत्रियस्य समासतः॥

**ப்ரஜாநாம் ரக்ஷணம் தான மிஜ்யாத்யயன மேவ ச |**
**விஷயேஷ்வப்ரசக்திஸ் ச க்ஷத்ரியஸ்ய ஸமாஸத: ||** 89

மக்களைக் காத்தல், தானமளித்தல், யாகம் செய்தல், வேதமோதுதல், விஷயசுகங்களில் மூழ்காமலிருத்தல் முதலானவை களை க்ஷத்ரியர்களுடைய தர்மங்களாக ஏற்படுத்தினார்.

पशूनां रक्षणं दानमिज्याऽध्ययनमेव च।
वणिक्पथं कुसीदं च वैश्यस्य कृषिमेव च॥

**பசூணாம் ரக்ஷணம் தான மிஜ்யாத்யய நமேவ ச |**
**வணிக்பதம் குஸீதம் ச வைஷ்யஸ்ய க்ருஷிமேவ ச ||** 90

பசுக்களைக் காத்தல், யாகங்கள் செய்தல், வேதபாராயணம் செய்தல், வாணிபம் செய்தல், வட்டிக்குப் பணம் கொடுத்து ஜீவித்தல், விவசாயம் செய்தல் இவைகள் வைசியர்களின் தர்மங்கள்.

एकमेव तु शूद्रस्य प्रभुः कर्म समादिशत्।
एतेषामेव वर्णानां शुश्रूषामनसूयया॥

**ஏகமேவ து சூத்ரஸ்ய ப்ரபு : கர்ம ஸமாதிஷத் |**
**ஏதேஷாமேவ வர்ணாநாம் சுஸ்ரூஷா மநசூயயா ||** 91

பிரம்ம தேவர், சூத்ரர்களுக்கு விதித்த தர்மமோ ஒன்றே ஒன்றுதான். அது, அசூயையின்றி முதலில் கூறப்பட்ட மூன்று வர்ணத்தாருக்கும் பணிவிடை புரிதல்.

ऊर्ध्वं नाभेर् मेध्यतरः पुरुषः परिकीर्तितः।
तस्मान् मेध्यतमं त्वस्य मुखमुक्तं स्वयम्भुवा॥

**ஊர்த்வம் நாபேர்மேத்யதர: புருஷ: பரிகீர்த்தித: |**
**தஸ்மாந்மேத்ய தமம்த்வஸ்ய முகமுக்தம் ஸ்வம்புவா ||** 92

நாபிக்கு கீழுள்ள பாகங்களைவிட மேலுள்ள பாகங்கள் பரிசுத்தமானவை என்று கூறப்பட்டுள்ளது. அதிலும் முகம் மிகவும் பரிசுத்தமானது என்பது பிரம்மாவின் கூற்று.

उत्तमाङ्गोद्भवाज् ज्यैष्ठ्याद् ब्रह्मणश् चैव धारणात्।
सर्वस्यैवाऽस्य सर्गस्य धर्मतो ब्राह्मणः प्रभुः॥

**உத்தமாங்கோத்பவாஜ் ஜ்யையுட்யாத் பிரஹ்மணஸ்சைவ தாரணாத் |**
**ஸர்வஸ்யைவாஸ்ய சர்கஸ்ய தர்மதோ ப்ராஹ்மண: ப்ரபு: || 93**

*வேதங்களை உணர்ந்துள்ளதால் படைக்கப்பட்டவர்களுள் பிராம்மணன் மேலானவன்.*

तं हि स्वयम्भूः स्वादास्यात् तपस् तप्त्वाऽऽदितोऽसृजत्।
हव्यकव्याऽभिवाह्याय सर्वस्याऽस्य च गुप्तये॥

**தம் ஹி ஸ்வயம்பூ: ஸ்வாதாஸ் யாத்தபஸ் தப்த்வாதிதோ அஸ்ருஜத் |**
**ஹவ்ய கவ்யா அபி வாஹ்யாய ஸர்வஸ்யாஸ்ய ச குப்தயே || 94**

*ஹவ்ய கவ்யங்களை அளிப்பதற்காகவும் உலகம் காக்கப்படுவதற்காகவும், பிரம்மா பிராம்மணனைப் படைத்தார்.*

*(ஹோமம் செய்து மந்திரங்களால் தெய்வங்களை அழைத்து அவர்களுக்கு அளிக்கப்படும் உணவு ஹவிஸ் எனப்படும். இதையே ஹவ்யம் என்பர். இது ஹோமத்தில் இடப்படும். ஹோமத் தீயில் வார்க்கப்படும் நெய் பிரதானமான ஹவிஸ். பால், நெய் சேர்த்த சாதமும் ஹவிஸாகும். தேவர்களுக்கான உணவு ஹவ்யம். இதே போன்று பித்ருக்களுக்கு அளிக்கும் உணவும் கவ்யம் எனப்படும்.)*

यस्याऽऽस्येन सदाऽश्नन्ति हव्यानि त्रिदिवौकसः।
कव्यानि चैव पितरः किं भूतमधिकं ततः॥

**யஸ்யாஆஸ்யேந ஸதாஅஷ்நந்தி ஹவ்யாநி த்ரிதிவௌகஸ: |**
**கவ்யாநி சைவ பிதர: கிம் பூதமதிகம் தத: || 95**

*யாருடைய வாயினின்றும் வெளிப்படும் மந்திரங்களால் தேவர்கள் தங்களுக்கு அளிக்கப்படும் ஹவ்யத்தை உண்பார்களோ, பித்ருக்கள் தங்களுக்கு அளிக்கப்படும் கவ்யத்தை உண்பார்களோ, அதைவிட உயர்ந்தது யாதுளது?*

भूतानां प्राणिनः श्रेष्ठाः प्राणिनां बुद्धिजीविनः।
बुद्धिमत्सु नराः श्रेष्ठा नरेषु ब्राह्मणाः स्मृताः॥

**பூதாநாம் ப்ராணிந: ஷ்ரேஷ்டா: ப்ராணிநாம் புத்தி ஜீவிந: |**
**புத்திமத்சு நரா: ஷ்ரேஷ்டா: நரேஷு ப்ராஹ்மணா: ஸ்ம்ருதா: || 96**

*பஞ்ச பூதங்களால் உருவாக்ளகப்பட்டவற்றுள் பிராணிகள் உயர்ந்தவை. பிராணிகளில் புத்தியால் ஜீவனம் செய்பவை உயர்ந்தவை. புத்தியுடையவற்றில் மனிதர்கள் உயர்ந்தவர்கள்.*

ब्राह्मणेषु च विद्वांसो विद्वत्सु कृतबुद्धयः।
कृतबुद्धिषु कर्तारः कर्तृषु ब्रह्मवेदिनः॥

**ப்ராஹ்மணேஷு ச வித்வாம்ஸோ வித்வத்சு க்ருதபுத்தய: |**
**க்ருத புத்திஷு கர்தார : கர்த்ருஷு ப்ரஹ்மவேதிந: ||** 97

*பிராம்மணர்களிலேயும் வித்வான்கள் உயர்ந்தவர்கள். அவர்களிலும் தங்கள் அனுஷ்டானங்களில் புத்தியைச் செலுத்துபவர்கள் உயர்ந்தவர்கள். அவர்களிலும் அத்தகு கர்மானுஷ்டானங்களை நன்கு இயற்றுபவர்கள் உயர்ந்தவர்கள். அவர்களைவிட் பிரம்மஞானிகள் உயர்ந்தவர்கள்.*

उत्पत्तिरेव विप्रस्य मूर्तिर् धर्मस्य शाश्वती।
स हि धर्मार्थमुत्पन्नो ब्रह्मभूयाय कल्पते॥

**உத்பத்திரேவ விப்ரஸ்ய மூர்த்திர் தர்மஸ்ய சாஸ்வதீ |**
**ஸ ஹி தர்மார்த்தமுத்பந்நோ ப்ரஹ்மபூயாய கல்பதே ||** 98

*பிராம்மணனுடைய உற்பத்தியே தர்மத்துக்கு சாஸ்வதமான சரீரம். பிராம்மணன் தர்மத்தை கடைப்பிடிப்பதற்காகவே படைக்கப்பட்டவன். அத்தகு தர்மத்தை கடைப்பிடிப்பதனால் பிரம்மபதத்தை அடைவான்.*

ब्राह्मणो जायमानो हि पृथिव्यामधिजायते।
ईश्वरः सर्वभूतानां धर्मकोशस्य गुप्तये॥

**ப்ராஹ்மணோ ஜாயமானோ ஹி ப்ருதிவ்யா மதி ஜாயதே |**
**ஈஷ்வர: ஸர்வபூதாநாம் தர்மகோஷஸ்ய குப்தயே ||** 99

*எல்லா உயிர்களுக்கும் உரிய தர்மமனைத்தையும் காக்கும் தலைவன் பிராம்மணன்.*

सर्वं स्वं ब्राह्मणस्येदं यत्किञ्चिज् जगतीगतम्।
श्रैष्ठ्येनाऽभिजनेनेदं सर्वं वै ब्राह्मणोऽर्हति॥

**ஸர்வம் ஸ்வம் ப்ராஹ்மணஸ்யேதம் யத்கிஞ்சித் ஜகதீகதம் |**
**ஷ்ரைஷ்யே நா பிஜநேநேதம் ஸர்வம் வை ப்ராஹ்மணோ அர்ஹதி ||** 100

*பூமியிலுள்ள அனைத்தும் பிராம்மணனுடையது. எனவே பிராம்மணன் எல்லா செல்வங்களுக்கும் உடைமையாளன்.*

स्वमेव ब्राह्मणो भुङ्क्ते स्वं वस्ते स्वं ददाति च।
आनृशंस्याद् ब्राह्मणस्य भुञ्जते हीतरे जनाः॥

**ஸ்மேவ ப்ராஹ்ணோ புங்க்தேஸ்வம் வஸ்தே ஸ்வம் ததாதி ச |**
**ஆந்ருஷம்ஸ்யாத் ப்ராஹ்மணஸ்ய புஞ்ஜதே ஹீதரே ஜநா: ||** 101

பிராம்மணன் தன்னுடைய செல்வத்தையே தான் அனுபவிக்கிறான். தன்னுடைய ஆடைகளையேதான் உடுத்துகின்றான். தன்னுடைய செல்வத்தையே பிறர்க்கு அளிக்கின்றான்.

तस्य कर्मविवेकार्थं शेषाणामनुपूर्वशः।
स्वायम्भुवो मनुर धीमानिदं शास्त्रमकल्पयत॥

**தஸ்ய கர்ம விவேகார்த்தம் சேஷாணாமநு பூர்வஷ: |**
**ஸ்வாயம்புவோ மநுர்தீமா நிதம் சாஸ்த்ரமகல்பயத் ||** 102

ஞானியான ஸ்வாயம்புவ மநு, பிராம்மணனுடையனவும், மற்றவர்களுடையனவுமான தர்மங்களை தெரிவிப்பதற்காக இந்த தர்ம சாஸ்திரத்தை வழங்கினார்.

विदुषा ब्राह्मणेनेदमध्येतव्यं प्रयत्नतः।
शिष्येभ्यश् च प्रवक्तव्यं सम्यङ् नान्येन केनचित्॥

**விதுஷா ப்ராஹ்மணேநேதயேதவ்யம் ப்ரயத்நத: |**
**சிஷ்யேப்யஸ் ச ப்ரவக்தவ்யம் ஸம்யக்நாந்யேந கேனசித் ||** 103

இந்த மனு தர்ம சாஸ்திரத்தை படிப்பதனால் அடையும் பலன்களை அறிந்து பிராம்மணன் இந்த தர்ம சாஸ்திரத்தை நன்கு முயற்சியோடு படிக்க வேண்டும். சிஷ்யர்களுக்கு எடுத்துக் கூற வேண்டும்.

इदं शास्त्रमधीयानो ब्राह्मणः शंसितव्रतः।
मनोवाग्देहजैर् नित्यं कर्मदोषैर् न लिप्यते॥

**இதம் சாஸ்த்ரமதீயாநோ ப்ராஹ்மணஷ்ஷம்ஸிதவ்ரத: |**
**மநோவாக் தேஹஜைர் நித்ய கர்ம தோஷைர் நலிப்யதே ||** 104

இந்த சாஸ்திரத்தை மிக்க நியமத்தோடு படிக்கும் பிராம்மணனுக்கு மனத்தாலும் வாக்காலும் உடலாலும் ஏற்படும் எந்த பாபமும் அண்டாது. அதாவது இதைப் படித்து அறிந்த பிறகு பாபமே செய்ய மாட்டான்.

पुनाति पङ्क्तिं वंश्यांश् च सप्तसप्त परावरान्।
पृथिवीमपि चैवेमां कृत्स्नामेकोऽपि सोऽर्हति॥

**புநாதி பங்தித் வம்ஷ்யாம்ஷ் ச ஸப்தஸப்த பராவராந் |**
**ப்ருதிவீமபி சைவேமாம் க்ருத்ஸ்நாமே கோ அபி ஸோ அர்ஹதி ||** 105

இந்த சாஸ்திரத்தை படித்து ஓதுபவன் தன்னுடைய முன்னோர்களில் ஏழு தலைமுறையினரையும், தனக்குப் பின் ஏழு தலைமுறையினரையும் புனிதமாக்குகிறான். இந்தப் பூமண்டலம் முழுவதையும் தானம் பெறுவதற்கும் அருகதையுடைவனாகிறான்.

**इदं स्वस्त्ययनं श्रेष्ठमिदं बुद्धिविवर्धनम्।**
**इदं यशस्यमायुष्यमिदं निःश्रेयसं परम्॥**

**இதம் ஸவஸ்த்யயநம் ஷ்ரேஷ்டமிதம் புத்தி விவர்த்தநம் |**
**இதம் யஷஸ்யமாயுஷ்யமிதம் நி: ஷ்ரேயஸம் பரம் || 106**

*இந்த தர்ம சாஸ்திர அத்யயனம், மநோரதங்களை பூர்த்தி யாக்கும். இந்த தர்ம சாஸ்திரம் மிகவும் சிரேஷ்டமானது. ஞானத்தை பெருக்குவது, புகழைத் தருவது, தீர்காயுளைத் தருவது. மோட்ச மடைய மேலான சாதனமானது.*

**अस्मिन् धर्मोऽखिलेनोक्तो गुणदोषौ च कर्मणाम्।**
**चतुर्णामपि वर्णानामाचारश् चैव शाश्वतः॥**

**அஸ்மிந் தர்மோ அகிலேநோக் தோ குணதோஷௌ ச கர்மணாம் |**
**சதுர்ணாமபி வர்ணாநாமாசாரஷ்சைவ ஷாஷ்வத: || 107**

*இந்த தர்மசாஸ்திரத்தில் அனைத்து தர்மங்களும் கூறப் பட்டுள்ளன. செய்யத் தக்கவைகளும், தகாதவைகளுமான தர்ம விஷயங்களும், அதர்ம விஷயங்களும், அவற்றின் பலன்களும் கூறப்பட்டுள்ளன. மேலும் நான்கு வர்ணத்தார் நித்தியமாக கடைப்பிடிக்க வேண்டிய ஆசார விஷயங்களும் கூறப்பட்டுள்ளன.*

**आचारः परमो धर्मः श्रुत्युक्तः स्मार्त एव च।**
**तस्मादस्मिन् सदा युक्तो नित्यं स्यादात्मवान् द्विजः॥**

**ஆசார: பரமோ தர்ம: ஸ்ருத்யுக்த: ஸ்மார்த்தயேவ ச |**
**தஸ்மாதஸ்மிந் ஸதா யுக்தோ நித்யம் ஸ்யாதாத் மவாந்த த்விஜ: || 108**

*வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்ட ஆசாரங்களே மேலான தர்மங்கள். எனவே, மக்களின் நலம் கோரும் துவிஜன் ஆசார விஷயங்களில் எப்போதும் முயற்சியுடன் ஈடுபட்டவனாக இருக்க வேண்டும். (பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன் என்னும் மூவர்ணத்தாரும் துவிஜர்கள்.)*

**आचाराद् विच्युतो विप्रो न वेदफलमश्नुते।**
**आचारेण तु संयुक्तः सम्पूर्णफलभाग् भवेत्॥**

**ஆசாராத் விச்யுதோ விப்ரோந வேதபலமஷ்நுதே |**
**ஆசாரேண து ஸம்யுக்த : ஸம்பூர்ண பலபாக் பவேத் || 109**

*ஆசாரத்திலிருந்து விலகிய பிராம்மணனுக்கு, வேதாத்ய யனத்தால் பலன் கிட்டாது. ஆசாரமானவனே ஸம்பூர்ணமான பலனைப் பெறுவான். ஆசாரம் என்பது தூய்மை. தூய்மையான*

அனுஷ்டானங்களை, பூஜைகளை தினமும் செய்பவனே ஆசார சீலன்.

एवमाचारतो दृष्ट्वा धर्मस्य मुनयो गतिम्।
सर्वस्य तपसो मूलमाचारं जगृहुः परम्॥

**ஏவமாசாரதோ த்ருஷ்ட்வா தா்மஸ்ய முநயோ கதிம் |**
**ஸா்வஸ்ய தபஸோ மூலமாசாரம் ஜக்ருஹு: பரம் ||** 110

இவ்வாறாக ஆசாரத்தை ஆதாரமாகக் கொண்டு தா்மம் இருப்பதை உணா்ந்து, எல்லா தவங்களுக்கும் ஆசாரமே முதல் முக்கியமானது என்று முனிவா்கள் தெரிவித்தாா்கள்.

जगतश् च समुत्पत्तिं संस्कारविधिमेव च।
व्रतचर्योपचारं च स्नानस्य च परं विधिम्॥

**ஜகதஷ் ச ஸமுத்பத்திம் ஸம்ஸ்கார விதிமேவ ச |**
**வ்ரதசா்யோபசாரம் ச ஸ்நாநஸ்ய ச பரம் விதிம் ||** 111

உலக உற்பத்தியும், ஸம்கார முறைகளும், விரத முறைகளும், பிரம்மசாிய விரத முறைகளும் இந்த தா்ம சாஸ்திரத்தில் கூறப் பட்டுள்ளன.

दाराधिगमनं चैव विवाहानां च लक्षणम्।
महायज्ञविधानं च श्राद्धकल्पं च शाश्वतम्॥

**தாராதிகமநம் சைவ விவாஹாநாம் ச லக்ஷணம் |**
**மஹாயக்ஞவிதாநம் ச ஷ்ராத்த கல்பம் ச ஷாஷ்வதம் ||** 112

விவாஹ முறைகளையும், விவாஹத்துக்கான லக்ஷணங் களையும், யக்ஞங்களின் லக்ஷணங்களையும், சிராத்த விஷயங் களையும் இந்த தா்ம சாஸ்திரம் கூறுகிறது.

वृत्तीनां लक्षणं चैव स्नातकस्य व्रतानि च।
भक्ष्याऽभक्ष्यं च शौचं च द्रव्याणां शुद्धिमेव च॥

**வ்ருத்தீநாம் லக்ஷணம் சைவ ஸ்நாதகஸ்ய வ்ரதாநி ச |**
**பக்ஷ்யாஅபக்ஷ்யம் ச ஷௌசம் ச த்ரவ்யாணாம் ஷுத்திமேவச ||** 113

ஜீவனம் நடத்துவதற்கான தொழில்களின் லக்ஷணங்களையும், இல்லறத்தானின் நியமங்களையும், சாப்பிடத்தக்கவை எவை, தகாதவை எவை என்ற விஷயங்களைப் பற்றியும், மரணகாலங்களில் ஏற்படும் தீட்டுகளைப் பற்றிய விவரங்களையும் பொருட்களுக்கு தண்ணீா் முதலியவற்றால் கிடைக்கும் சுத்தி முறைகளைப் பற்றியும் இந்த தா்மசாஸ்திரம் விளக்குகிறது.

स्त्रीधर्मयोगं तापस्यं मोक्षं सन्न्यासमेव च।
राज्ञश् च धर्ममखिलं कार्याणां च विनिर्णयम्॥

**ஸ்த்ரீ தர்மயோகம் தாபஸ்யம் மோக்ஷம் ஸந்யாஸமேவ ச |**
**ராக்ஞஸ்ச தர்மமகிலம் கார்யாணாம் ச விநிர்ணயம் ||** 114

பெண்களுக்குரிய தர்மவிஷயங்களும், வானபிரஸ்தர்களுக்குரிய தர்ம விஷயங்களும், சந்யாஸ தர்ம விஷயங்களும், மன்னனுக்குரிய தர்ம விஷயங்களும், மோக்ஷக்ஷத்துக்குரிய விஷயங்களும் இந்த தர்ம சாஸ்திரத்தில் விளக்கப்பட்டுள்ளன.

साक्षिप्रश्नविधानं च धर्मं स्त्रीपुंसयोरपि।
विभागधर्मं द्यूतं च कण्टकानां च शोधनम्॥

**ஸாக்ஷிப்ரஷ்ந விதாநம் ச தர்மம் ஸ்த்ரீபும்ஸயோரபி |**
**விபாக தர்மம் த்யூதம் ச கண்டகா நாம் ச ஷோதநம் ||** 115

சாட்சிகளை விசாரிக்கும் முறைகள், பெண்களும் ஆண்களும் நடந்து கொள்ள வேண்டிய முறைகள், பாகப் பிரிவினை, சூதாட்டம், குற்றவாளிகளைத் தண்டித்தல் முதலான விஷயங்களும் இந்த தர்ம சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளன.

वैश्यशूद्रोपचारं च सङ्कीर्णानां च सम्भवम्।
आपद्धर्मं च वर्णानां प्रायश्चित्तविधिं तथा॥

**வைஷ்ய சூத்ரோபசாரம் ச ஸங்கீர்ணாநாம் ச ஸம்பவம் |**
**ஆபத்தர்மம் ச வர்ணாநாம் ப்ராயஷ்சித்த விதிம் ததா ||** 116

வைசியர்கள் சூத்திரர்கள் முதலானோரின் தர்ம அனுஷ்டான முறைகள், கலப்பு திருமணங்கள், ஆபத்துக்காலங்களில் கடைப் பிடிக்க வேண்டிய விதிமுறைகள், பிராயச்சித்த முறைகள் முதலான விஷயங்களும் இந்த தர்ம சாஸ்திரத்தில் கூறப் பட்டுள்ளன.

संसारगमनं चैव त्रिविधं कर्मसम्भवम्।
निःश्रेयसं कर्मणां च गुणदोषपरीक्षणम्॥

**ஸம்ஸாரகமநம்சைவ த்ரிவிதம் கர்மஸம்பவம் |**
**நிஷ்ரேயசம் கர்மணாம் ச குணதோஷ பரீக்ஷணம் ||** 117

தேகத்தை விடுதல், மூன்று வகையான கர்ம வினைகள் ஏற்படுதல், சாஸ்திரத்தில் செய்யச் சொன்ன, செய்யக் கூடாது என்று சொன்ன விஷயங்களின் பலாபலன்கள் முதலானவையும் இந்த தர்ம சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளன.

देशधर्मान् जातिधर्मान् कुलधर्मांश् च शाश्वतान्।
पाषण्डगणधर्मांश् च शास्त्रेऽस्मिन्नुक्तवान् मनुः॥

**தேஷதர்மாந் ஜாதிதர்மாந் குலதர்மாந்ஷ் ச ஷாஷ்வதாந் |**
**பாஷண்ட கண தர்மாம்ஷ் ச சாஸ்த்ரே அஸ்மிந் உக்தவாந் மநு || 118**

*தேச தர்மங்கள், ஜாதி தர்மங்கள், குல தர்மங்கள், வேதத்துக்கு விரோதமானவர்களின் தர்மாதர்மங்கள் முதலானவற்றையும் இந்த தர்ம சாஸ்திரத்தில் எடுத்துரைத்துள்ளார்.*

यथेदमुक्तवान् शास्त्रं पुरा पृष्टो मनुर् मया।
तथेदं यूयमप्यद्य मत्सकाशान् निबोधत॥

**யதேதமுக்தவாந் ஷாஸ்த்ரம் புரா ப்ருஷ்டோ மநுர்மயா |**
**ததேதம் யூயமப்யத்ய மத்ஸகாஷாந்நி போதத || 119**

*முனிவர்களே, நான் வினாவியபோது, மனுவானவர் எனக்கு இந்த தர்ம சாஸ்திரத்தை எவ்வாறு உபதேசித்தாரோ அவ்வாறே அதை உங்களுக்கு எடுத்துரைக்கிறேன், கேளுங்கள்:*

(முதல் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 2

विद्वद्भिः सेवितः सद्भिर् नित्यमद्वेषरागिभिः ।
हृदयेनाऽभ्यनुज्ञातो यो धर्मस् तन् निबोधत ॥

**வித்வத்பிஸ்ஸேவிதம் ஸத்பிர்நத்யம த்வேஷராகிபி: |**
**ஹ்ருதயேநாப்யநுக்ஞா தோ யோ தர்மஸ்தம் நிபோ தத ||** 1

வேதம் முழுவதையும் நன்கு அறிந்தவர்களாகவும், விருப்பு வெறுப்பு அற்றவர்களாகவும் சாதுக்களாகவும் உள்ள மஹான்கள் எப்போதும் அனுஷ்டிக்கின்ற தர்மம் எதுவோ அதை எடுத்தியம்புகிறேன், கேளுங்கள்:

कामात्मता न प्रशस्ता न चैवेहाऽस्त्यकामता।
काम्यो हि वेदाधिगमः कर्मयोगश् च वैदिकः ॥

**காமாத்மதா ந ப்ரஷஸ்தா நசை வே ஹாஸ்த்ய காமதா |**
**காம்யோ ஹி வேதாதிகம: கர்மயோகஷ்ச வைதிக: ||** 2

விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக காரியங்களைச் செய்தல் என்பது போற்றுதலுக்குரிய விஷயமன்று. எனினும் இவ்வுலகில் பலனை எதிர்நோக்காமல் காரியம் செய்வது என்பது அரிதான விஷயம். வேதங்களை நன்கு படித்தல், வேதங்களில் கூறப்பட்டுள்ள தர்மங்களில் ஆழ்ந்து ஈடுபாடு கொண்டிருத்தல் என்பதும் பலனைக் கொடுக்கக் கூடியதேயாகும்.

सङ्कल्पमूलः कामो वै यज्ञाः सङ्कल्पसम्भवाः ।
व्रतानि यमधर्माश् च सर्वे सङ्कल्पजाः स्मृताः ॥

**ஸங்கல்ப மூல: காமோ வை யக்ஞா: ஸங்கல்ப ஸம்பவா: |**
**வ்ரதாநி யமதர்மாஷ்ச ஸர்வே ஸங்கல்பஜா: ஸ்ம்ருதா: ||** 3

இவை இவை எனக்குத் தேவை என்று கோருவதற்கு 'சங்கல்பம்' என்று பெயர். சங்கல்பத்துக்கு மூலகாரணமாக இருப்பது ஆசை. ஆசையாலேயே சங்கல்பம் தோன்றுகிறது. யக்ஞங்கள் செய்வதில் விருப்பம் சங்கல்பத்தாலேயே ஏற்படுகிறது. விரதங்கள், நியமங்கள் போன்றவை அனைத்துமே சங்கல்பத்தாலேயே ஏற்படுகின்றன.

अकामस्य क्रिया काचिद् दृश्यते नेह कर्हिचित्।
यद्यद् धि कुरुते किञ्चित् तत्तत् कामस्य चेष्टितम्॥

**அகாமஸ்ய க்ரியா காசித் த்ருஷ்யதே நேஹ கர்ஹிசித் |**
**யத்யத்தி குருதே கிஞ்சித் தத்தத் காமஸ்ய சேஷ்டிதம் ||** 4

*ஆசையற்றவனுக்கு எந்தச் செயலும் இல்லை. மனிதர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் ஆசையின் காரணமாகவே செய்யப் படுகிறது.*

तेषु सम्यग् वर्तमानो गच्छत्यमरलोकताम्।
यथासङ्कल्पिताश् चेह सर्वान् कामान् समश्नुते॥

**தேஷு ஸம்யக்வர்த்தமாநோ கச்சதிஅமர லோகதாம் |**
**யதா ஸங்கல்பிதாம்ஷ்சேஹ ஸர்வாந்காமாந் ஸமஷ்நுதே ||** 5

*முறையாக நல்லபடி காரியங்களைச் செய்பவன் அமரனாகிறான். இவ்வுலகிலும் அவனுடைய அனைத்து விருப்பங்களும் நிறைவேறும்.*

वेदोऽखिलो धर्ममूलं स्मृतिशीले च तद्विदाम्।
आचारश् चैव साधूनामात्मनस् तुष्टिरेव च॥

**வேதோ அகிலோ தர்மமூலம் ஸ்ம்ருதிஷீலே ச தத்விதாம் |**
**ஆசாரஷ்சைவ ஸாதூநாமாத்மநஸ்துஸ்டிரேவ ச ||** 6

*வேதமே உலகில் தர்மத்துக்கு மூலம். வேதமறிந்தவர்களால் இயற்றப்பட்ட ஸ்ம்ருதிகளும், அவர்களது ஒழுக்கமுமே பிரமாணங்கள். சாதுக்கள் கடைப்பிடிக்கும் ஆசாரங்களும், அவர்களது ஆத்மானந்தமும் பிரமாணங்கள்.*

यः कश्चित् कस्यचिद् धर्मो मनुना परिकीर्तितः।
स सर्वोऽभिहितो वेदे सर्वज्ञानमयो हि सः॥

**ய: கஸ்சித்கஸ்யசித் தர்மோ மநுநா பரிகீர்த்தித: |**
**ஸ ஸர்வோ அபிஹிதோ வேதே ஸர்வஞானமயோ ஹிஸ: ||** 7

*எவருக்கு எந்தெந்த தர்மங்கள் மனுவினால் சொல்லப் பட்டுள்ளதோ, அவை அனைத்தும் வேதத்தில் சொல்லப் பட்டுள்ளவையே. சர்வஞான சொரூபன் மனு பகவான். அவர் கூறிய அனைத்தும் வேதம் கூறியதே.*

सर्वं तु समवेक्ष्येदं निखिलं ज्ञानचक्षुषा।
श्रुतिप्रामाण्यतो विद्वान् स्वधर्मे निविशेत वै॥

**ஸர்வம் து ஸமவேக்ஷ்யேதம் நிகிலம் ஞான சக்ஷுஷா |**
**ஷ்ருதிப்ராமாந்யதோ வித்வாந் ஸ்வதர்மே நிவிஷேத வை ||** 8

இந்த தர்ம சாஸ்திரம் முழுவதும் ஞானக்கண்ணால் கண்டது என்பதையும், வேதம் கூறியது என்பதையும் அறிந்து விவேக முள்ளவன் ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

श्रुतिस्मृत्युदितं धर्ममनुतिष्ठन् हि मानवः।
इह कीर्तिमवाप्नोति प्रेत्य चानुत्तमं सुखम्॥

**ஷ்ருதிஸ்ம்ருத்யுதிதம் தர்மமநுதிஷ்டந் ஹி மாநவ: |**
**இஹ கீர்த்திமவாப்நோதி ப்ரேத்ய சாநுத்தமம் சுகம் || 9**

மனிதன், வேதங்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும் கூறப் பட்டுள்ள தர்மத்தை அனுஷ்டித்தால், இவ்வுலகில் கீர்த்தியையும், மேலுலகத்தில் மோட்சத்தையும் அடைவான்.

श्रुतिस्तु वेदो विज्ञेयो धर्मशास्त्रं तु वै स्मृतिः।
ते सर्वार्थेष्वमीमांस्ये ताभ्यां धर्मो हि निर्बभौ॥

**ஷ்ருதிஸ்து வேதோ விஞ்ஞேயோ தர்ம சாஸ்த்ரம் து வை ஸ்ம்ருதி: |**
**தே ஸர்வார்த்தேஷ்வமீமாம்ஸ்யே தாப்யாம் தர்மோ ஹி நிர்பபௌ || 10**

வேதங்கள் 'ஸ்ருதிகள்' எனப்படும். தர்ம சாஸ்திரங்கள் 'ஸ்மிருதிகள்' எனப்படும். இவைகளைக் குறித்து எதிர்மறையான தர்க்கங்களைச் செய்தல் கூடாது. இவை இரண்டினாலுமே தர்மம் பிரகாசிக்கிறது.

योऽवमन्येत ते मूले हेतुशास्त्राश्रयाद् द्विजः।
स साधुभिर् बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः॥

**யோ அவமந்யேத தே மூலே ஹேது ஷாஸ்த்ராஷ்ரயாத் த்விஜ: |**
**ஸ ஸாதுபிர் பஹிஷ்கார்யோ நாஸ்திகோ வேதநிந்தக: || 11**

பிரமாணங்களான ஸ்ருதிகளையும், ஸ்ம்ருதிகளையும் எந்த பிராமணனோ, க்ஷத்ரியனோ, வைசியனோ அவமதித்து தூஷிக் கின்றானோ, அப்படிப்பட்ட நாஸ்திகனை நல்லவர்கள் பகிஷ்காரம் பண்ண வேண்டும்.

वेदः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः।
एतच् चतुर्विधं प्राहुः साक्षाद् धर्मस्य लक्षणम्॥

**வேத: ஸ்ம்ருதி: ஸதாசார: ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மந: |**
**ஏதத் சதுர்விதம் ப்ராஹு: சாட்சாத் தர்மஸ்ய லக்ஷணம் || 12**

வேதம், ஸ்ம்ருதி, நல்ல ஆசாரம், சுய ஆனந்தம் இந்த நான்கும் தர்மத்தின் சொரூபம் என்று கூறுவார்கள் பெரியோர்.

अर्थकामेष्वसक्तानां धर्मज्ञानं विधीयते।
धर्मं जिज्ञासमानानां प्रमाणं परमं श्रुतिः ॥

**அர்த்த காமேஷ்வஸக்தாநாம் கர்மஞானம் விதீயதே |**
**தர்மம் ஜிக்ஞாஸமாநாநாம் ப்ரமாணம் பரமம் ஷ்ருதி: || 13**

அர்த்தம் காமம் இவைகளில் விருப்பம் இல்லாதவனுக்கே தர்மஞானம் விதிக்கப்பட்டுள்ளது. தர்மத்தை அறிய விரும்புபவனுக்கு முக்கியமான பிரமாணம் வேதமே ஆகும்.

श्रुतिद्वैधं तु यत्र स्यात् तत्र धर्मावुभौ स्मृतौ।
उभावपि हि तौ धर्मौ सम्यगुक्तौ मनीषिभिः ॥

**ஷ்ருதித்வைதம் து யத்ர ஸ்யாத் தத்ர தர்மாவுபௌ ஸ்ம்ருதௌ |**
**உபாவபி ஹிதௌ தர்மௌ ஸம்யக்உக்தௌ மனீஷிபி: || 14**

எங்கே தர்மசாஸ்திரங்களுக்குள் ஒன்றுக்கொன்று வேறுபாடு காணப்படுகின்றதோ, அங்கே இரண்டு விதமாக தர்மங்கள் கூறப்பட்டிருக்கும். வித்வான்கள் இவ்விரண்டு தர்மங்களையும் கடைப்பிடிக்கலாம்.

उदितेऽनुदिते चैव समयाध्युषिते तथा।
सर्वथा वर्तते यज्ञ इतीयं वैदिकी श्रुतिः ॥

**உதிதேஅநுதிதே சைவ ஸமயாத்யுஷிதே ததா |**
**ஸர்வதா வர்த்ததே யக்ஞஇதீயம் வைதிகீ ஷ்ருதி: || 15**

சூரியோதயம் ஆன பிறகு ஹோமம் செய்ய வேண்டும். இது ஒரு வேத வாக்கியம். உதிப்பதற்கு முன்பே நட்சத்திரங்கள் தெரியும் அருணோதய காலத்தில் ஹோமம் செய்ய வேண்டும்.

இது ஒரு வேத வாக்கியம். ஒன்றுக்கொன்று முரணானவை இவை. இப்படி ஒன்றுக்கொன்று முரண்பாடு தென்படும்போது இரண்டு விதங்களில் எந்த விதமாகவும் செய்யலாம்.

निषेकादिश्मशानान्तो मन्त्रैर्यस्योदितो विधिः।
तस्य शास्त्रेऽधिकारोऽस्मिन् ज्ञेयो नाऽन्यस्य कस्यचित् ॥

**நிஷேகாதிஷ்மஷாநாந்தோ மந்த்ரைர்யஸ்யோதிதோ விதி: |**
**தஸ்ய ஷாஸ்த்ரே அதிகாரோ அஸ்மிஞ் ஞேயோ நாந்யஸ்ய கஸ்யசித் || 16**

கர்ப்பாதானம் முதலான அனுஷ்டானங்கள் எவனுக்கு விதிக்கப்பட்டுள்ளதோ அவனுக்கே இந்த மனுதர்மத்தைப் படிக்கும் அதிகாரம் உள்ளது. மற்றவர்களுக்கு இல்லை.

सरस्वतीदृषद्वत्योर् देवनद्योर् यदन्तरम्।
तं देवनिर्मितं देशं ब्रह्मावर्तं प्रचक्षते॥

**ஸரஸ்வதீத்ரு ஷத்வத்யோர் தேவ நத்யோர்ய தந்தரம் |**
**தம் தேவநிர்மிதம் தேஷம் ப்ரஹ்மாவர்த்தம் ப்ரசக்ஷதே || 17**

*ஸரஸ்வதீ நதிக்கும் திருஷத்வதீ என்னும் நதிக்கும் இடையிலுள்ள பிரதேசத்தை 'தேவநிர்மிதம்' என்றும் 'பிரம்மா வர்த்தம்' என்றும் கூறுவார்கள்.*

तस्मिन् देशे य आचारः पारम्पर्यक्रमागतः।
वर्णानां सान्तरालानां स सदाचार उच्यते॥

**தஸ்மிந்தேஷேய ஆசார: பாரம்பர்ய க்ரமாகத: |**
**வர்ணாநாம் ஸாந்தராளாநாம் ஸ ஸதாசார உச்யதே || 18**

*அந்த தேசத்தில் நால்வர்ணத்தாருக்கும், கலப்பு வர்ணத் தாருக்கும் பாரம்பரியமாக வரும் ஆசாரமே 'சதாசாரம்' எனப்படும்.*

कुरुक्षेत्रं च मत्स्याश्च पञ्चालाः शूरसेनकाः।
एष ब्रह्मर्षिदेशो वै ब्रह्मावर्तादनन्तरः॥

**குருக்ஷேத்ரம் ச மத்ஸ்யாஷ்ச பாஞ்சாலாஷ் ஷூரஸேநகா: |**
**ஏஷ ப்ரஹ்மர்ஷி தேஷோ வை ப்ரஹ்மா வர்தாதநந் தர: || 19**

*குருக்ஷேத்திரம், மத்ஸ்ய தேசம், பாஞ்சாலம், சூரசேநகம் என்னும் தேசங்களுக்கு 'பிரம்மரிஷி தேசம்' என்று பெயர். இது பிரம்மாவர்த்த தேசத்துக்கு அடுத்தது.*

एतद्देशप्रसूतस्य सकाशादग्रजन्मनः।
स्वं स्वं चरित्रं शिक्षेरन् पृथिव्यां सर्वमानवाः॥

**ஏதத் தேஷ ப்ரஸூதஸ்ய ஸகாஷா தக்ரஜந்மந: |**
**ஸ்வம் ஸ்வம் சரித்ரம் ஷிக்ஷேரந் ப்ருதிவ்யாம் ஸர்வ மாநவா: || 20**

*இந்தத் தேசத்தில் பிறந்த பிராம்மணர்கள் மூலமாக உலகமாந்தர் தத்தமக்குரிய ஆசாரங்கள் எவை எவை என்று அறிய வேண்டும்.*

हिमवद्-विन्ध्ययोर् मध्यं यत् प्राग् विनशनादपि।
प्रत्यगेव प्रयागाच्च मध्यदेशः प्रकीर्तितः॥

**ஹிமவத் விந்த்ய யோர்மத்யம் யத்வ்ராக்விநஸநாதபி |**
**ப்ரத்யகேவ ப்ரயாகாச்ச மத்ய தேஷ: ப்ரகீர்த்தித: || 21**

*இமயமலைக்கும் விந்திய மலைக்கும் இடையில், சரஸ்வதி மறைந்த தேசத்துக்கும், பிரயாகைக்கும் இடைப்பட்ட தேசத்துக்கு 'மத்திய தேசம்' என்று பெயர்.*

आ समुद्रात् तु वै पूर्वादा समुद्राच्च पश्चिमात्।
तयोरेवान्तरं गिर्योरार्यावर्तं विदुर् बुधाः ॥

**ஆ ஸமுத்ராத்து வை பூர்வாதா ஸமுத்ராத்து பஷ்சிமாத் |**
**தயோரேவாந்தரம் கிர்யோரார்யாவர்தம் விதுர்புதா: ||** 22

*கிழக்குக் கடலுக்கும், மேற்குக் கடலுக்கும் இடையிலுள்ள பிரதேசத்துக்கு 'ஆர்யா வர்த்தம்' என்று பெயர்.*

कृष्णसारस्तु चरति मृगो यत्र स्वभावतः।
स ज्ञेयो यज्ञियो देशो म्लेच्छदेशस् त्वतः परः ॥

**க்ருஷ்ண ஸாரஸ்து சரதி ம்ருகோ யத்ரஸ்வபாவத: |**
**ஸ ஞேயோ யக்ஞயோ தேஷோ ம்லேச்ச தேசஸ்த்வத: பர: ||** 23

*கறுப்புக் கோடுகள் கொண்ட மான் பிறந்து தன்னிச்சையாக சஞ்சரிக்கின்ற பிரதேசமே யக்ஞங்கள் செய்வதற்கு உகந்த இடமாகும். மற்றைய இடங்கள் மிலேச்ச தேசம் எனப்படும். மிலேச்ச தேசம் யக்ஞம் செய்வதற்கு அருகதையற்ற இடமாகும்.*

एतान् द्विजातयो देशान् संश्रयेरन् प्रयत्नतः।
शूद्रस्तु यस्मिन् कस्मिन् वा निवसेद् वृत्तिकर्शितः ॥

**ஏதாந் த்விஜாதயோ தேஷாந் ஸம்ஸ்ரயேரந் ப்ரயத்நத: |**
**சூத்ராஸ்து யஸ்மிந் கஸ்மிந்வா நிவஸேத் வ்ருத்திகர்ஷித: ||** 24

*பிராம்மணர், க்ஷத்ரியர், வைசியர் என்னும் த்துவிஜர்களாகிய மூவர்ணத்தாரும் முயற்சி செய்து, யக்ஞபூமிகளான இந்த தேசங்களை அடைய வேண்டும். சூத்திரர்கள் தங்கள் ஜீவனமான தொழில் நிமித்தமாக எந்தத் தேசத்திலும் வசிக்கலாம்.*

एषा धर्मस्य वो योनिः समासेन प्रकीर्तिता।
सम्भवश् चाऽस्य सर्वस्य वर्णधर्मान् निबोधत ॥

**ஏஷா தர்மஸ்ய வோயோநி: ஸமாஸேந ப்ரகீர்த்திதா |**
**ஸம்பவஷ்சாஸ்ய ஸர்வஸ்ய வர்ணதர்மாந் நிபோதத ||** 25

*இதுவரை இந்த தர்ம சாஸ்திரத்தின் தோற்றம் முழுவதுமாகக் கூறப்பட்டது. இவ்வுலகம் தோன்றிய விஷயமும் கூறப்பட்டது. இனி வர்ணதர்மங்களையும், ஆசிரம தர்மங்களையும் கூறுகிறேன், கேளுங்கள்:*

वैदिकैः कर्मभिः पुण्यैर् निषेकादिर् द्विजन्मनाम्।
कार्यः शरीरसंस्कारः पावनः प्रेत्य चेह च॥

**வைதிகை: கர்மபி: புண்யைாநிஷேகாதிர் த்விஜன்மநாம் |**
**கார்யஷ்ஷரீரஸம்ஸ்காரா: பாவந: ப்ரேத்ய சேஹ ச || 26**

பிராம்மணர்களும், க்ஷத்ரியர்களும், வைசியர்களும் கர்ப்பாதானம் முதலான வைதிகக் கிரியைகளைச் செய்ய வேண்டும். இவையே ஒருவனை பரிசுத்தமாக்குகின்றன. பரலோக வாழ்வையும் பெற்றுத் தருகின்றன.

गार्भैर् होमैर् जातकर्म-चौड-मौञ्जीनिबन्धनैः।
बैजिकं गार्भिकं चैनो द्विजानामपमृज्यते॥

**கார்ப்பைர்ஹோமைர் ஜாதகர்ம சௌட மௌஞ்ஜீநிபந்தநை: |**
**பைஜிகம் கார்பிகம் சைநோ த்விஜாநாம பம்ருஜ்யதே || 27**

கர்ப்பாதானம் முதலான ஹோம சடங்குகளாலும், ஜாதகர்மா, சவுலம், மௌஞ்சீபந்தனம், உபநயனம் முதலான சடங்குகளாலும், பெற்றோரால் ஏற்பட்ட பீஜதோஷம், கர்ப்பவாச தோஷம் முதலானவற்றால் ஏற்பட்ட தோஷங்கள் நீங்கி பிராம்மணர்களும், க்ஷத்ரியர்களும், வைசியர்களும் பரிசுத்தமாகிறார்கள்.

स्वाध्यायेन व्रतैर् होमैस् त्रैविद्येनेज्यया सुतैः।
महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः॥

**ஸ்வாத்யாயேந வ்ரதைர் ஹோமைஸ்த்ரை வித்யேநேஜ்யயா சுதை: |**
**மஹாயக்ஞைஷ்ச யக்ஞைஷ்ச ப்ராஹ்மீயம் க்ரியதே தநு: || 28**

வேதமோதுவதாலும், விரத நியமங்களாலும், ஹோமங்களாலும், காலை மாலை செய்யும் ஔபாசனம் முதலான கிரியைகளாலும், மூன்று வேதங்களிலும் நன்கு தேர்ச்சி பெறுவதாலும், புத்ரோத்பத்தியாலும், தர்ப்பணங்களாலும், பஞ்சமஹா யக்ஞங்களாலும், பெரிய யாகங்களாலும் இவ்வுடலானது பிரம்மபதத்தை அடைவதற்கு ஏற்றதாக ஆகிறது.

प्राङ् नाभिवर्धनात् पुंसो जातकर्म विधीयते।
मन्त्रवत् प्राशनं चास्य हिरण्यमधुसर्पिषाम्॥

**ப்ராங்நா பிவர்தநாத்பும்ஸோ ஜாதகர்ம விதீயதே |**
**மந்த்ரவத் ப்ராஷனம் சாஸ்ய ஹிரண்ய மது ஸர்பிஷாம் || 29**

தொப்புள் கொடி அறுப்பதற்கு முன்பே ஜாதகர்மா என்னும் சடங்கு செய்ய வேண்டும். தங்கம், நெய், தேன் இவைகளை மந்திரபூர்வமாக நாவில் தடவ வேண்டும்.

(ஒரு குழந்தை பிறந்தவுடன் முதலில் ஜாதகர்மா செய்ய வேண்டும். பிறந்ததும் செய்யும் சடங்கு இது. குழந்தை பிறந்த அன்று பித்ருக்கள் அவ்விடம் வருகிறார்கள். குழந்தையின் தந்தை குழந்தை பிறந்தவுடன், அது நடு இரவானாலும்கூட ஸ்நானம் செய்ய வேண்டும். நாந்தி சிராத்தம், தானம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். தொப்புள் கொடி அறுப்பதற்குள் இதைச் செய்ய வேண்டும். இதற்கு ஜாதகர்மா என்று பெயர்.

(இந்த ஜாதகர்மா குழந்தைக்கு ஏற்படக்கூடிய சகல தோஷங்களையும் நீக்குகிறது. பாலாரிஷ்டம் ஏற்படாது. துஷ்டகிரகங்கள் குழந்தையின் அருகே வரா. தொப்புள் கொடி அறுப்பதற்கு முன்பு தீட்டு இல்லை என்பதால், அதற்கு முன்பே இதைச் செய்ய வேண்டும்.)

नामधेयं दशम्यां तु द्वादश्यां वाऽस्य कारयेत्।
पुण्ये तिथौ मुहूर्ते वा नक्षत्रे वा गुणान्विते॥

**நாமதேயம் தஷம்யாம் து த்வாதஷ்யாம் வாஸ்ய காரயேத் ।**
**புண்யே திதௌ முஹூர்தேவா நக்ஷத்ரேவா குணாந்விதே ॥** 30

பத்தாவது நாள் கடந்த பிறகு, பதினோராவது நாள் அல்லது பன்னிரண்டாவது நாள் அல்லது வேறு ஏதாவது சிறந்த நன்னாளில், நல்ல முகூர்த்தத்தில், நல்ல நட்சத்திரத்தில் பிராம்மணனுக்கும், க்ஷத்திரியனுக்கும், வைசியனுக்கும் நாமகரணம் செய்ய வேண்டும்.

मङ्गल्यं ब्राह्मणस्य स्यात् क्षत्रियस्य बलान्वितम्।
वैश्यस्य धनसंयुक्तं शूद्रस्य तु जुगुप्सितम्॥

**மங்கல்யம் ப்ராஹ்மணஸ்யஸ்யாத் க்ஷத்ரியஸ்ய பலாந்விதம் ।**
**வைஷ்யஸ்ய தநஸம்யுக்தம் ஷூத்ரஸ்ய து ஜுகுப்ஸிதம் ॥** 31

பிராம்மண குழந்தைக்கு வைக்கும் பெயர் சுபம் தரும் வண்ணம் இருக்க வேண்டும். க்ஷத்திரியக் குழந்தைக்கு பலம் தரும் வாசகமாக இருக்க வேண்டும். வைசியக் குழந்தைக்கு செல்வம் தரும் வாசகமாக இருக்க வேண்டும். சூத்திரர்களுக்கு ஏவலன் என்பதை அறியும் வகையில் பெயர் வைக்க வேண்டும்.

शर्मवद् ब्राह्मणस्य स्याद् राज्ञो रक्षासमन्वितम्।
वैश्यस्य पुष्टिसंयुक्तं शूद्रस्य प्रैष्यसंयुतम्॥

**ஷர்மவத் ப்ராஹ்மணஸ்ய ஸ்யாத் ராக்ஞோ ரக்ஷா ஸமந்விதம் ।**
**வைஷ்யஸ்ய புஷ்டிஸம்யுக்தம் ஷூத்ரஸ்யப்ரைஷ்ய ஸம்யுக்தம் ॥** 32

பிராம்மணனுடைய பெயர் சர்மா என்ற பதம் கூடியதாக இருக்க வேண்டும். ராஜாவுக்கு ரக்ஷணம் சேர்ந்ததாக இருக்க வேண்டும். வைசியனுக்கு செல்வத்தோடு கூடியதாக இருக்க வேண்டும். சூத்திரனுக்கு தாசன் என்ற பதம் கூடியதாக இருக்க வேண்டும்.

(பிராம்மணனுக்கு நாராயணசர்மா, சிவசர்மா என்று தெய்வப் பெயர்களாக அமைய வேண்டும். பிராம்மணன் வீட்டில் எப்போதும் வேத சப்தமும், ஹோமப்புகையும் இருக்கும். அங்கே குழந்தை களையோ பெரியவர்களையோ கூப்பிடும் குரல்கூட புண்ணியத்தைத் தருவதாக அமைய வேண்டும்.

(க்ஷத்திரியனுக்கு வர்மா என்ற பதம் சேர்க்கப்பட வேண்டும். விக்ரமாதித்தன், ராஜராஜன், வீரபாண்டியன் என்பது போன்று பெயரிலேயே கம்பீரமும் 'இவன் காக்கப் பிறந்தவன்' என்ற தொனியும் தெரிய வேண்டும்.

(வைசியன் செல்வத்தைப் பெருக்குபவன். அதை உணர்த்தும் வண்ணம் தனகுப்தன் என்பது போன்று பெயர் அமைய வேண்டும். வைசியனுக்கு குப்தா என்ற பதம் அல்லது பாலன் என்ற பதம் பெயரோடு சேர்க்கப்பட வேண்டும்.

(சூத்திரன் பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களுக்குப் பணிபுரிபவன் என்பதால் இவன் பெயரோடு தாசன் என்ற பதம் சேர்க்கப்பட வேண்டும்.)

**स्त्रीणां सुखोद्यमक्रूरं विस्पष्टार्थं मनोहरम्।**
**मङ्गल्यं दीर्घवर्णान्तमाशीर्वादाभिधानवत्॥**

**ஸ்த்ரீணாம் சுகோத்யமக்ரூரம் விஸ்பஷ்டார்த்தம் மநோஹரம் |**
**மங்கள்யம் தீர்க்கவர்ணாந்த மாஷீர் வாதா பிதா நவத் ||** **33**

பெண்களுக்கு இடும் பெயர்கள் சுகமாக உச்சரிக்கக் கூடியதாகவும், குரூரமான அர்த்தம் கொடுக்கும் சொல்லாக இல்லாமலும், பொருளற்றதாக இல்லாமலும், மனத்துக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாகவும், மங்களமான சொல்லாகவும் நெடில் எழுத்து ஈற்றாக இருப்பதாகவும், அதாவது நீட்டி தீர்க்கமாகச் சொல்லும் அட்சரத்தோடு முடிவதாகவும் (உதாரணமாக ரமா, உமா என்ற பெயர்களைக் கூறலாம்.) ஆசிகளைக் கொடுக்கக் கூடியதாகவும் இருக்க வேண்டும். (காயத்ரீ தேவி, லக்ஷ்மீ தேவி முதலான பெயர்களை இதற்கு உதாரணமாகக் கூறலாம்)

चतुर्थे मासि कर्तव्य शिशोर् निष्क्रमणं गृहात्।
षष्ठेऽन्नप्राशनं मासि यद्वेष्टं मङ्गलं कुले॥

**சதுர்த்தேமாஸி கர்த்தவ்யம் ஷிமோர்நிஷ்க்ரமணம் க்ருஹாத் ।**
**ஷஷ்டே அன்னப்ரா ஷநம் மாஸி யத்வேஷ்டம் மங்களம் குலே ॥ 34**

நான்காம் மாதத்தில், குழந்தையை வீட்டிலிருந்து வெளியே கொண்டு சென்று சூரியனை தரிசிக்கச் செய்ய வேண்டும். ஆறாவது மாதம் அன்னம் ஊட்டும் சடங்கைச் செய்ய வேண்டும். அல்லது அவரவர் குல வழக்கப்படி அந்தந்த சடங்குகளைச் சுபதினங்களில் செய்ய வேண்டும்.

(இந்தச் சடங்குக்கு அன்னபிராசனம் என்று பெயர். விக்னேஸ்வர பூஜை செய்து, புண்யாஹ வாசன தீர்த்தத்தால் குழந்தையையும், அன்னத்தையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். அதாவது தீர்த்தத்தை குழந்தையின் மீதும், அன்னத்தின் மீதும் தெளித்து மந்திர பூர்வமாக சுத்தமாக்குகிறோம்.

பிரதிசரம் என்ற கங்கணம் கட்ட வேண்டும். பிரதிசரம் என்பது கயிறு. ஒன்பது இழைகளால் ஆனது.

இதை மந்திரபூர்வமாக குழந்தையின் கையில் கட்ட வேண்டும். இதை கங்கண தாரணம் என்றும் சொல்வார்கள். ஆண் குழந்தைக்கு வலது கையிலும், பெண் குழந்தைக்கு இடது கையிலும் கட்ட வேண்டும்.

பிறகு தங்கப் பாத்திரத்தில் அன்னம் வைத்து, அதனோடு சிறிது தயிர், தேன், நெய் மூன்றையும் சேர்த்துக் கலந்து, குழந்தைக்கு ஊட்ட வேண்டும்.

இதனால் குழந்தைக்கு ஔஷதி தேவதைகளின் அனுக்ரஹமும், ஜல தேவதைகளின் அனுக்ரஹமும் ஏற்படும்.)

चूडाकर्म द्विजातीनां सर्वेषामेव धर्मतः।
प्रथमेऽब्दे तृतीये वा कर्तव्यं श्रुतिचोदनात्॥

**சூடாகர்ம த்விஜாதீநாம் ஸர்வேஷாமேவ தர்மத: ।**
**ப்ரதமே அப்தே த்ருதீயே வா கர்த்தவ்யம் ஷ்ருதி சோதநாத் ॥ 35**

'சூடாகர்மா' என்னும் குடுமி வைக்கும் சடங்கானது பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களுக்கு முதலாம் ஆண்டு அல்லது மூன்றாம் ஆண்டில் செய்யப்பட வேண்டியது. அல்லது அவரவர் வழக்கப்படி செய்ய வேண்டியது.

गर्भाष्टमेऽब्दे कुर्वीत ब्राह्मणस्योपनायनम्।
गर्भादेकादशे राज्ञो गर्भात् तु द्वादशे विशः॥

**கர்ப்பாஷ்டமே அப்தேகுர்வீத ப்ராஹ்மணஸ் யோபநயநம் |**
**கர்ப்பாதேகாதஷே ராக்ஞோ கர்ப்பாத்து த்வாதஷே விஷ: ||** 36

பிராம்மணனுக்கு ஏழு வயதிலும், க்ஷத்ரியனுக்கு பத்து வயதிலும், வைசியனுக்கு பதினோராவது வயதிலும் உபநயனம் செய்ய வேண்டும்.

இது பொது விதி. அனைத்து பிராம்மணர்களுக்கும், அனைத்து க்ஷத்ரியர்களுக்கும், அனைத்து வைசியர்களுக்குமான பொது விதி. விசேஷமான விதி அடுத்துச் சொல்லப்படுகிறது.

(உபநயனம் என்பது முக்கியமான சடங்கு. ஒரு மனிதனின் வாழ்வில் மிகமிக முக்கியமான அங்கம் வகிக்கும் சடங்கு இது. இந்தச் சடங்கில் பூணூல் அணிவிக்கப்படுகிறது. இந்தச் சிறுவன் இது முதல் சிஷ்யனாகிறான். பிரம்மசாரியாகிறான். உபநயனம் என்றால் சிஷ்யனை குருவிடம் அழைத்துச் செல்வது என்று பொருள்.

பாலனாக, சிறுவனாக இருக்கும் வரை அவனுக்கு எந்த நியமமும் கிடையாது. ஆனால் உபநயனம் ஆனதும் அவனுக்குக் கட்டுப்பாடுகள் ஏற்படும்.

(உபநயனம் என்பது இன்னொரு பிறவி எடுப்பது ஆகும். முதலில் பிறந்தது ஒரு பிறவி. இப்போது மீண்டும் இன்னொரு பிறவி எடுக்கிறான். அதனால்தான் உபநயனம் என்ற சடங்கு முடித்தவர்களுக்கு த்விஜன் என்ற பெயர் ஏற்பட்டது. இதற்கு இரண்டு பிறவிகள் கொண்டவன் என்று பொருள்.

(தற்காலத்தில் த்விஜன் என்ற சொல் பிராம்மணனை மட்டும் குறிப்பதாக நினைக்கிறார்கள். அது தவறு. த்விஜன் என்ற சொல் பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன் மூவரையுமே குறிக்கும். ஏனெனில் மூவருக்குமே உபநயனச் சடங்கு உண்டு. த்விஜன் என்பதையே தமிழில் இரு பிறப்பாளன் என்று சொல்கிறார்கள்.

(இந்த உபநயனச் சடங்கை பிராம்மணனுக்கு ஏழு வயதிலும், க்ஷத்திரியனுக்கு பத்து வயதிலும், வைசியனுக்கு பதினோராவது வயதிலும் செய்ய வேண்டும் என்று இந்த ஸ்லோகத்தில் கூறுகிறார். இது பொது விதி. விசேஷ விதியும் உண்டு.

(க்ஷத்திரியர்களிலேயே அரசன், சேனாபதி போன்றோரும் பிராம்மணர்களில் பிரதான புரோகிதர் போன்றோரும், வைசியர்களிலும் மிக்க பெரும் செல்வந்தர்களும் தங்களைப் போன்றே தங்கள் பிள்ளைகள் சிறந்து விளங்க வேண்டும் என்று

*விரும்பும்போது எந்த வயதில் உபநயனம் செய்ய வேண்டும் என்பதை அடுத்த ஸ்லோகத்தில் கூறுகிறார்.)*

ब्रह्मवर्चसकामस्य कार्यं विप्रस्य पञ्चमे।
राज्ञो बलार्थिनः षष्ठे वैश्यस्येहार्थिनोऽष्टमे॥

**ப்ரஹ்மவர்ச்சஸகாமஸ்ய கார்யம் விப்ரஸ்ய பஞ்சமே |**
**ராக்ஞோ பலார்த்திநஷ்ஷஷ்டே வைஷ்யஸ்யேஹார்த்திநோ அஷ்டமே || 37**

*பிரம்மதேஜஸை விரும்பும் பிராம்மணனுக்கு ஐந்தாவது வயதிலும், பலத்தைக் கோரும் க்ஷத்ரியனுக்கு ஆறாவது வயதிலும், வாணிபம் கோரும் வைசியனுக்கு எட்டாவது வயதிலும் உபநயனம் செய்து வைக்க வேண்டும்.*

आ षोडशाद् ब्राह्मणस्य सावित्री नाऽतिवर्तते।
आ द्वाविंशात् क्षत्रबन्धोरा चतुर्विंशतेर् विशः॥

**ஆ ஷோடஷாத் ப்ராஹ்மணஸ்ய ஸாவித்ரீ நாதிவர்த்ததே |**
**ஆ த்வாவிம்ஷாத் க்ஷத்ரபந்தோரா சதுர்விம்ஷதேர்விஷ: || 38**

*பிராம்மணனுக்கு பதினாறாவது வயது வரையும், க்ஷத்ரியனுக்கு இருபத்திரண்டாவது வயது வரையும், வைசியனுக்கு இருபத்து நான்காவது வயது வரையும் காயத்ரி அழியாமலிருக்கும். அதாவது அந்த வயதுக்குள்ளாவது காயத்ரி உபதேசம் நடைபெற வேண்டும்.*

*(இப்படிக் கூறியிருப்பது தவிர்க்க முடியாத காரணத்தால் குறிப்பிட்ட வயதில் செய்ய முடியாமல் போய், அதற்குப் பிறகும் காலம் கடந்து கொண்டே போனவர்களுக்காக சொல்லப்பட்டது. இந்த வயதுகள் உபநயனத்துக்கான வயதுகள் அல்ல. ஆனால் தவிர்க்க முடியாமல் தள்ளிப் போனாலும் இந்த இந்த வயதுக்குள் செய்ய வேண்டும், செய்யலாம் என்பதற்காகக் கூறப்பட்டது.)*

अत ऊर्ध्वं त्रयोऽप्येते यथाकालमसंस्कृताः।
सावित्रीपतिता व्रात्या भवन्त्यार्यविगर्हिताः॥

**அதஊர்த்வம் த்ரயோ அப்யேதே யதாகாலமஸம் ஸ்க்ருதா: |**
**ஸாவித்ரீ பதிதா வ்ராத்யா பவந்த்யார்ய விகர்ஹிதா: || 39**

*அதுவரையிலும் உபநயனம் செய்யாதவர்கள் காயத்ரீ உபதேசம் பெறும் அருகதையை இழந்தவர்களாவர். இவர்கள் சான்றோர்களால் நிந்திக்கப்படுவார்கள். வைதீகச் சடங்குகளுக்கு இவர்களைச் சேர்க்க மாட்டார்கள்.*

नैतैरपूतैर् विधिवदापद्यपि हि कर्हिचित्।
ब्राह्मान् यौनांश्च सम्बन्धानाचरेद् ब्राह्मणः सह॥

**நைதைரபூதைர் விதிவதாபத்யபி ஹி கர்ஹிசித் |**
**ப்ராஹ்மாந் யௌநாம்ஷ்ச ஸம்பந்தாநாசரேத் ப்ராஹ்ம மணஸ்ஸஹ || 40**

இவ்வாறு தூய்மை இழந்து விதிப்படி பிராயச்சித்தம் செய்து கொள்ளாதவனோடு பிராம்மணன், யாகம், கன்யாதானம் முதலான எந்தச் சம்பந்தமும் வைத்துக் கொள்ளக் கூடாது.

कार्ष्णरौरवबास्तानि चर्माणि ब्रह्मचारिणः।
वसीरन्नानुपूर्व्येण शाणक्षौमाऽऽविकानि च॥

**கார்ஷ்ண ரௌரவ பாஸ்தாநி சர்மாணி ப்ரஹ்மசாரிண: |**
**வஸீரந்நாநுபூர்வ்யேண ஷானக்ஷௌமாவிகாநிச || 41**

பிராம்மண பிரம்மசாரி மான் தோலால் ஆன மேலாடையையும்,

க்ஷத்ரிய பிரம்மசாரி ருரு மிருகத்தின் தோலால் ஆன மேலாடையையும்,

வைசிய பிரம்மசாரி ஆட்டுத் தோலால் ஆன மேலாடையையும் அணிய வேண்டும்.

பிராம்மணன் நார்மடித் துணியை அரையாடையாக அணிய வேண்டும்.

க்ஷத்ரியன் பட்டுத் துணியை அரையாடையாக அணிய வேண்டும்.

வைசியன் சணல் ஆடையை அரையாடையாக அணிய வேண்டும்.

मौञ्जी त्रिवृत् समा श्लक्ष्णा कार्या विप्रस्य मेखला।
क्षत्रियस्य तु मौर्वी ज्या वैश्यस्य शाणतान्तवी॥

**மௌஞ்ஜீ த்ரிவ்ருத்ஸமா ஷ்ளக்ஷ்ணா கார்யா விப்ரஸ்ய மேகலா |**
**க்ஷத்ரியஸ்ய து மௌர்வீஜ்யா வைஷ்யஸ்ய ஷணதாந்தவீ || 42**

பிராம்மண பிரம்மசாரி, முஞ்சிபுல்லால் திரிக்கப்பட்டு, வழுவழு வென்று சமானமான மூன்று இழைகள் கொண்ட அரைஞாணை அணிய வேண்டும்.

அவ்வாறே க்ஷத்ரிய பிரம்மசாரி மூர்வா புல்லினால் திரிக்கப் பட்ட மூன்று இழைகளோடு கூடிய அரைஞாணை அணிய வேண்டும்.

வைசிய பிரம்மசாரி சணலால் திரிக்கப்பட்ட மூன்று இழை களோடு கூடிய அரைஞாணை அணிய வேண்டும்.

मुञ्जाऽलाभे तु कर्तव्याः कुशाऽश्मन्तकबल्वजैः।
त्रिवृता ग्रन्थिनैकेन त्रिभिः पञ्चभिरेव वा॥

**முஞ்ஜாலாபே து கர்த்தவ்யா: குஷாஷ்மந்தகபல்பஜை: |**
**த்ரிவ்ருதா க்ரந்திநைகேந த்ரிபி: பஞ்சபிரேவ வா || 43**

*முஞ்சிப்புல் முதலானவை கிடைக்காதபோது, தர்ப்பை, நாணல், கோரை முதலானவற்றை முப்புரிகளாகத் திரித்து அதை ஒரு முடிச்சோடு பிராம்மண பிரம்மசாரியும், மூன்று முடிச்சுகள் போட்டு க்ஷத்ரிய பிரம்மசாரியும், ஐந்து முடிச்சுகள் போட்டு வைசிய பிரம்மசாரியும் அணிய வேண்டும்.*

कार्पासमुपवीतं स्याद् विप्रस्योर्ध्ववृतं त्रिवृत्।
शणसूत्रमयं राज्ञो वैश्यस्याऽऽविकसौत्रिकम्॥

**கார்ப்பாஸ முபவீதம் ஸ்யாத் விப்ரஸ் யோர்த்வ வ்ருதம் த்ரிவ்ருத் |**
**ஷணஸூத்ரமயம் ராக்ஞோ வைஷ்யஸ்யாவிக ஸௌத்ரிகம் || 44**

*வலதுபுறமாக சுற்றிய ஒன்பது இழைகள் கொண்டதாக பூணூல் இருக்க வேண்டும். பிராம்மண பிரம்மசாரிகளின் பூணூல் பஞ்சினால் ஆனதாகவும், க்ஷத்ரிய பிரம்மசாரிகளின் பூணூல் சணலாலான தாகவும், வைசிய பிரம்மசாரிகளின் பூணூல் வெள்ளாட்டு முடியினா லானதாகவும் இருக்க வேண்டும்.*

ब्राह्मणो बैल्वपालाशौ क्षत्रियो वाटखादिरौ।
पैलवौदुम्बरौ वैश्यो दण्डानर्हन्ति धर्मतः॥

**ப்ராஹ்மணோ பைல்வபாலாஷௌ க்ஷத்ரியோ வாடகாதிரௌ |**
**பைல வௌதும்பரௌ வைஷ்யோ தண்டாநர்ஹந்தி தர்மத: || 45**

*பிராம்மண பிரம்மசாரி வில்வம், புரசு இவையிரண்டில் ஏதேனும் ஒன்றை தண்டமாக ஏந்த வேண்டும்.*

*க்ஷத்ரிய பிரம்மசாரி ஆல், கருங்காலி இவையிரண்டில் ஏதேனும் ஒன்றை தண்டமாக ஏந்த வேண்டும்.*

*வைசிய பிரம்மசாரி அத்தி, பைலம் இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றை தண்டமாக ஏந்த வேண்டும்.*

केशान्तिको ब्राह्मणस्य दण्डः कार्यः प्रमाणतः।
ललाटसम्मितो राज्ञः स्यात् तु नासान्तिको विशः॥

**கேஷாந்திகோ ப்ராஹ்மணஸ்ய தண்ட: கார்ய: ப்ரமாணத: |**
**லலாடஸம்மிதோ ராக்ஞ: ஸ்யாத்து நாஸாந்திகோ விஷ: || 46**

*பிராம்மணன் ஏந்தும் தண்டம் தலை வரை உயரமுடையதாக இருக்க வேண்டும். க்ஷத்ரியன் ஏந்தும் தண்டம் நெற்றி வரை இருக்க வேண்டும். வைசியன் ஏந்தும் தண்டம் மூக்கு வரை இருக்க வேண்டும்.*

ऋजवस् ते तु सर्वे स्युरव्रणाः सौम्यदर्शनाः।
अनुद्वेगकरा नृणां सत्वचोऽनग्निदूषिताः॥

**ருஜவஸ்தேது ஸர்வேஸ்யுரவ்ரணா: ஸௌம்யதர்ஷநா: |**
**அநுத்வேககரா ந்ருணாம் ஸத்வசோ நாக்நிதூஷிதா: ||** 47

அந்த தண்டங்கள் கோணலாக இருக்கக் கூடாது. வெட்டுப்பட்ட வடுக்கள் அற்றவையாக இருக்க வேண்டும். பார்க்க அழகாக இருக்க வேண்டும். பார்ப்பவர்களுக்கு அச்சம் ஏற்படும் வண்ணம் இருக்கக் கூடாது. மேல் பட்டையோடு இருக்க வேண்டும். நெருப்புப் பட்டதாக இருக்கக் கூடாது.

प्रतिगृह्येप्सितं दण्डमुपस्थाय च भास्करम्।
प्रदक्षिणं परीत्याऽग्निं चरेद् भैक्षं यथाविधि॥

**ப்ரதிக்ருஹ்யேப்ஸிதம் தண்டமுபஸ்தாய ச பாஸ்கரம் |**
**ப்ரதக்ஷிணம் பரீத்யாக்நிம் சரேத்பைக்ஷ்யம் யதாவிதி ||** 48

ஒவ்வொரு நாளும் தண்டத்தைக் கையில் ஏந்தி, சூரிய நமஸ்காரம் செய்து, தீயை வலம் புரிந்து, பிறகு முறைப்படி பிக்ஷை ஏற்கச் செல்ல வேண்டும்.

भवत्पूर्वं चरेद् भैक्षमुपनीतो द्विजोत्तमः।
भवन्मध्यं तु राजन्यो वैश्यस्तु भवदुत्तरम्॥

**பவத்பூர்வம் சரேத்பைக்ஷ்யமுபநீதோ த்விஜோத்தம: |**
**பவந்மத்யம் து ராஜந்யோ வைஷ்யஸ்து பவதுத்தரம் ||** 49

பிராம்மண பிரம்மச்சாரி 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று கூறி பிக்ஷை கேட்க வேண்டும்.

க்ஷத்ரிய பிரம்மச்சாரி 'பிக்ஷாம் பவதி தேஹி' என்று கூறி பிக்ஷை கேட்க வேண்டும்.

வைசிய பிரம்மச்சாரி 'பிக்ஷாம் தேஹி பவதி' என்று கூறி பிக்ஷை கேட்க வேண்டும்.

मातरं वा स्वसारं वा मातुर् वा भगिनीं निजाम्।
भिक्षेत भिक्षां प्रथमं या चैनं नाऽवमानयेत्॥

**மாதரம் வா ஸ்வஸாரம் வா மாதுர்வா பகிநீம் நிஜாம் |**
**பிக்ஷேத பிக்ஷாம் ப்ரதமம் யா சைநம் நாவமாநயேத் ||** 50

முதலில் தாயிடம், அல்லது சகோதரியிடம், அல்லது தாயின் சகோதரியிடம், அல்லது யார் இவனை அவமானப்படுத்த மாட்டார்களோ, அந்தப் பெண்ணிடம் பிட்சைக்ஷ ஏற்க வேண்டும்.

समाहृत्य तु तद् भैक्ष्यं यावदन्नममायया।
निवेद्य गुरवेऽश्नीयादाचम्य प्राङ्मुखः शुचिः॥

**ஸமாஸஹ்ருத்ய து தத்பைக்ஷம் யாவதர்த்தமமாயயா |**
**நிவேத்ய குரவே அஷ்நீயாதாசம்ய ப்ராஜ்முகஷ்சுசி: || 51**

இவ்வாறாக பிக்ஷான்னத்தைக் கொண்டு, குருவுக்குக் கொடுத்து, அவரது அனுமதியின் பேரில் அவர் கொடுத்த மிகுதி அன்னத்தை, ஆசமனம் செய்து, கிழக்கு நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும்.

आयुष्यं प्राङ्मुखो भुङ्क्ते यशस्यं दक्षिणामुखः।
श्रियं प्रत्यङ्मुखो भुङ्क्ते ऋतं भुङ्क्ते ह्युदङ्मुखः॥

**ஆயுஷ்யம் ப்ராங்முகோ புங்க்தே யஷஸ்யம் தக்ஷிணாமுக: |**
**ஷ்ரியம் ப்ரத்யங்முகோ புங்க்தே றுதம் புங்க்தே ஹ்யுதங்முக: || 52**

தீர்க்காயுளை வேண்டுபவன் கிழக்கு திசை நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும்.

கீர்த்தியை விரும்புபவன் தெற்கு திசை நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும்.

செல்வத்தை விரும்புபவன் மேற்கு திசை நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும்.

மோட்சத்தை விரும்புபவன் வடக்கு திசை நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும்.

उपस्पृश्य द्विजो नित्यमन्नमद्यात् समाहितः।
भुक्त्वा चोपस्पृशेत् सम्यगद्भिः खानि च संस्पृशेत्॥

**உபஸ்ப்ருஷ்ய த்விஜோ நித்யமந்நமத்யாத்ஸமாஹித: |**
**புக்த்வா சோபஸ்ப்ருஷேத்ஸம் யகத்பி: காநி சஸம்ஸ்ப்ருஷேத் || 53**

பிரம்மச்சாரி தினமும் ஆசமனம் செய்து, கிழக்கு நோக்கி அமர்ந்து வேறு நினைப்பின்றி உண்ண வேண்டும். உண்ட பிறகு கை கால்களை அலம்பிக் கொள்ள வேண்டும். முறைப்படி ஆசமனம் செய்து, நீரினால் இந்திரியங்களைத் துடைத்துக் கொள்ள வேண்டும்.

पूजयेदशनं नित्यमद्याच्चैतदकुत्सयन्।
दृष्ट्वा हृष्येत् प्रसीदेच्च प्रतिनन्देच्च सर्वशः॥

**பூஜயேதஷநம் நித்ய மத்யாச்சை ததகுத்ஸயந் |**
**த்ருஷ்ட்வா ஹ்ருஷ்யேத் ரப்ரஸீதேச்ச ப்ரதிநந் தேச்ச ஸர்வஷ: || 54**

எப்போதும் அன்னத்தை பூஜிக்க வேண்டும். அன்னத்தை நிந்திக்காமல் சாப்பிட வேண்டும். மனத்திலுள்ள கலக்கங்களை யெல்லாம் விட்டுவிட்டு சாப்பிட அமர வேண்டும். சாப்பிடும்போது நிர்மலமான மனத்தோடு சாப்பிட வேண்டும். 'இந்த அன்னம்

எனக்கு எப்போதும் கிடைக்க வேண்டும்' என்று பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

**पूजितं ह्यशनं नित्यं बलमूर्जं च यच्छति।**
**अपूजितं तु तद् भुक्तमुभयं नाशयेदिदम्॥**

**பூஜிதம் ஹ்யஷநம் நித்யம் பலமூர்ஜம் ச யச்சதி |**
**அபூஜிதம் து யத்புக்த்தமுபயம் நாஷயேதிதம் ||** 55

இவ்வாறாக தினமும் துதிக்கப்பட்டு உட்கொண்ட உணவு பலத்தையும் வீர்யத்தையும் அளிக்கும். மாறாக, துதிக்கப்படாமல் உட்கொண்ட உணவு பலத்தையும் வீரியத்தையும் அழிக்கும்.

**नोच्छिष्टं कस्यचिद् दद्यान् नाऽद्याच् चैव तथाऽन्तरा।**
**न चैवाऽत्यशनं कुर्यान् न चोच्छिष्टः क्वचिद् व्रजेत्॥**

**நோச்சிஷ்டம் கஸ்ய சித்தத்யாந் நாத்யாச்சைவ ததாந்தரா |**
**நசைவாத்யஷநம் குர்யாந் நசோச்சிஷ்ட: க்வசித்வ்ரஜேத் ||** 56

எச்சிலான உணவை யாருக்கும் கொடுக்கக் கூடாது. மத்தியானமும் இரவும் உணவுண்ண வேண்டும். அது தவிர நடுநடுவே சாப்பிட்டுக் கொண்டிருக்கலாகாது. மத்தியானமும் இரவும் சாப்பிடும் போதுகூட அளவுக்கு அதிகமாகச் சாப்பிடக் கூடாது. எச்சில் கையோடு எங்கும் போகக் கூடாது.

**अनारोग्यमनायुष्यमस्वर्ग्यं चाऽतिभोजनम्।**
**अपुण्यं लोकविद्विष्टं तस्मात् तत् परिवर्जयेत्॥**

**அநாரோக்ய மநாயுஷ் யமஸ்வர்க்யம் சாதிபோஜநம் |**
**அபுண்யம் லோகவித்விஷ்டம் தஸ்மாத் தத் பரிவர்ஜயேத் ||** 57

மிகுந்தபடியாக, அளவுக்கதிகமாக சாப்பிடுவதால், ஆரோக்கியம் கெடும். ஆயுள் குறையும். சுவர்க்கம் முதலான புண்ணிய உலகங்களை அடைவதற்கு இது எதிரி. அதாவது அதிக அளவில் சாப்பிடுவது புண்ணியலோக பிராப்திக்கு தடையாகி விடும். அவ்வாறே நற்காரியங்களைச் செய்வதற்கும் இது தடையாகும். மேலும் உலகத்தாரின் தூற்றுதலுக்கும் ஆளாக நேரிடும். எனவே அளவுக்கு அதிகமாக சாப்பிடக் கூடாது.

**ब्राह्मेण विप्रस् तीर्थेन नित्यकालमुपस्पृशेत्।**
**काय-त्रैदशिकाभ्यां वा न पित्र्येण कदाचन॥**

**ப்ராஹ்மேண விப்ரஸ்தீர்த்தேந நித்யகாலமுப ஸ்ப்ருஷேத் |**
**காயத்ரைதஷிகாப்யாம் வா ந பித்ர்யேண கதாசந ||** 58

பிராம்மாணர் முதலானோர் பிரம்ம தீர்த்தத்தால் எப்போதும் ஆசமனம் செய்ய வேண்டும். அன்றேல், காய தீர்த்தத்தாலோ

தேவதீர்த்தத்தாலோ ஆசமனம் செய்யலாம். அதன்றி பித்ரு தீர்த்தத்தால் எப்போதும் ஆசமனம் செய்யலாகாது.

अङ्गुष्ठमूलस्य तले ब्राह्मं तीर्थं प्रचक्षते।
कायमङ्गुलिमूलेऽग्रे दैवं पित्र्यं तयोरधः॥

**அங்குஷ்ட மூலஸ்ய தலே ப்ராஹ்மம் தீர்த்தம் ப்ரசக்ஷதே |**
**காயமங்குலிமூலே அக்ரேதைவம் பித்ர்யம் தயோரத: || 59**

பெருவிரலின் முதல் பாகத்தில் பிரம்ம தீர்த்தம் உள்ளதாகவும், சுண்டு விரலின் முதல் பாகத்தில் காய தீர்த்தம் உள்ளதாகவும், விரல் நுனிகளில் தேவ தீர்த்தம் உள்ளதாகவும், பெருவிரல் சுட்டுவிரல்களுக் கிடையே பித்ரு தீர்த்தம் உள்ளதாகவும் கூறப்படுகிறது.

त्रिराचामेदपः पूर्वं द्विः प्रमृज्यात् ततो मुखम्।
खानि चैव स्पृशेदद्भिरात्मानं शिर एव च॥

**த்ரிராசாமேதப: பூர்வம் த்வி: ப்ரம்ருஜ்யாத்ததோ முகம் |**
**காநி சைவ ஸ்ப்ருஷேதத் பிராத்மாநம் ஷிர ஏவ ச || 60**

பிரம்ம தீர்த்தம் முதலானவைகளால் மூன்று முறைகள் ஆசமனம் செய்ய வேண்டும். உதடுகளை மூடிக் கொண்டு நீரினால் வாயைத் துடைக்க வேண்டும். பிறகு இடது கரத்தில் தண்ணீரை வைத்துக் கொண்டு தலையில் இருக்கின்ற இந்திரியங்களான கண்கள், காதுகள், மூக்கு முதலியவைகளையும், மார்பையும் தலையையும் துடைக்க வேண்டும்.

अनुष्णाभिरफेनाभिरद्भिस् तीर्थेन धर्मवित्।
शौचेप्सुः सर्वदाऽऽचामेदेकान्ते प्रागुदङ्मुखः॥

**அனுஷ்ணா பிரபே நாபிரத்பிஸ்தீர்த்தேந தர்மவித் |**
**ஷௌசேப்ஸுஸ்ஸர்வதா அசாமேதேகாந்தே ப்ராகுதஸ்முக: || 61**

தூய்மையை விரும்பும் தர்மமறிந்த பிராம்மணன் ஏகாந்தமான இடத்தில் கிழக்கு அல்லது வடக்கு முகமாக அமர்ந்து, காய்ச்சாததும் நுரையற்றதுமான தண்ணீரினால் ஆசமனம் செய்ய வேண்டும்.

हृद्गाभिः पूयते विप्रः कण्ठगाभिस् तु भूमिपः।
वैश्योऽद्भिः प्राशिताभिस् तु शूद्रः स्पृष्टाभिरन्ततः॥

**ஹ்ருத்காபி: பூயதே விப்ர: கண்டகாபிஸ்துபூமிப: |**
**வைஷ்யோஅத்பி: ப்ராஷிதாபிஸ்து ஷூத்ர: ஸ்ப்ருஷ்டாபிரந் தத: || 62**

ஆசமனம் செய்யும் நீர், உட்கொள்ளும்போது பிராம்மணனுக்கு இருதயம் வரை செல்லும் அளவில் இருக்க வேண்டும். க்ஷத்ரியனுக்கு கழுத்து வரையில் நனைக்க வேண்டும். வைசியனுக்கு வாய்க்குள்

போகுமளவுக்கு இருக்க வேண்டும். இந்த அளவுகளில் இவர்கள் ஆசமனம் செய்வதாலேயே பரிசுத்தி பெறுகிறார்கள்.

**उद्धृते दक्षिणे पाणावुपवीत्युच्यते द्विजः।**
**सव्ये प्राचीनआवीती निवीती कण्ठसज्जने॥**

**உத்ருதே தக்ஷிணே பாணாவுபவீத்யுச்யதே த்விஜ: |**
**ஸவ்யே ப்ராசீந ஆவீதீ நிவீதீ கண்டஸஜ்ஜநே ॥** 63

பூணூலானது வலது தோளின் மீது இருக்கும்போது 'உபவீதி' எனப்படும். இடது தோளின் மீது போட்டுக் கொண்டிருக்கும் போது 'ப்ராசீனாவீதி' எனப்படும். கழுத்தில் மாலையாக போட்டுக் கொண்டால் 'நிவீதி' எனப்படும்.

**मेखलामजिनं दण्डमुपवीतं कमण्डलुम्।**
**अप्सु प्रास्य विनष्टानि गृहीतान्यानि मन्त्रवत्॥**

**மேகலாமஜிநம் தண்டமுபவீதம் கமண்டலும் |**
**அப்ஸு ப்ராஸ்ய விநஷ்டாநி க்ருஹ்ணீதாந்யாநி மந்த்ரவத் ॥** 64

அரைஞாண், மான் தோல், பூணூல், கமண்டலம் முதலானவை சேதமடைந்தால் தண்ணீரிலே போட்டுவிட்டு, புதியவற்றை மந்திரப் பூர்வமாக ஏற்க வேண்டும்.

**केशान्तः षोडशे वर्षे ब्राह्मणस्य विधीयते।**
**राजन्यबन्धोर् द्वाविंशे वैश्यस्य द्व्यधिके ततः॥**

**கேஷாந்த: ஷோடஷே வர்ஷே ப்ராஹ்மணஸ்ய விதீயதே |**
**ராஜந்யபந்தோர்த் வாவிம்ஷே வைஷ்யஸ்ய த்வயதிகே தத: ॥** 65

முடியெடுக்கும் கிரியையானது பிராமணனுக்கு கர்ப்பகாலம் தொடங்கி பதினாறாவது வருடத்திலும், க்ஷத்ரியனுக்கு கர்ப்பகாலம் தொடங்கி இருபத்திரண்டாவது வருடத்திலும் செய்ய வேண்டும். வைசியனுக்கு கர்ப்பகாலம் தொடங்கி இருபத்து நான்காவது வருடத்தில் செய்ய வேண்டும்.

**अमन्त्रिका तु कार्येयं स्त्रीणामावृदशेषतः।**
**संस्कारार्थं शरीरस्य यथाकालं यथाक्रमम्॥**

**அமந்த்ரிகா து கார்யேயம் ஸ்த்ரீணாமாவ்ருதஷேஷத: |**
**ஸம்ஸ்காரார்த்தம் ஷரீரஸ்ய யதாகாலம் யதாக்ரமம் ॥** 66

சரீர பரிசுத்திக்காக, பெண்களுக்கு எல்லாக் கிரியைகளும் குறிப்பிட்ட காலத்தில் சாஸ்திர முறைப்படி, ஆனால் மந்திரங்கள் இல்லாமல் செய்ய வேண்டும்.

**वैवाहिको विधिः स्त्रीणां संस्कारो वैदिकः स्मृतः।**
**पतिसेवा गुरौ वासो गृहार्थोऽग्निपरिक्रिया॥**

**வைவாஹிகோ விதி: ஸ்த்ரீணாம் ஸம்ஸ்காரோ வைதிகஸ்ம்ருத: |**
**பதிஸேவா குரௌ வாஸோ க்ருஹார்த்தோ அக்நிபரிக்ரியா || 67**

பெண்களுக்குத் திருமணமே, உபநயன கிரியை என்று சொல்லப்படுகிறது. பதிக்கு செய்யும் பணிவிடையே குருகுலவாசம், வீட்டு வேலைகளை நிர்வகிப்பதே அக்னிஹோத்ரம் என்னும் கிரியை யாகும்.

**एष प्रोक्तो द्विजातीनामौपनायनिको विधिः।**
**उत्पत्तिव्यञ्जकः पुण्यः कर्मयोगं निबोधत॥**

**ஏஷ ப்ரோக்தோ த்விஜாதீநாமௌப நாயநிகோ விதி: |**
**உத்பத்தி வ்யஞ்ஜக: புண்யகர்ம யோகம் நிபோதத || 68**

இருபிறப்பாளருக்கு, இரண்டாவது பிறப்பை ஏற்படுத்துவதும் புண்ணியமானதுமான உபநயன சம்பந்தமானவை அனைத்தும் கூறப்பட்டது. இனி அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளைக் கூறுகிறேன்.

**उपनीय गुरुः शिष्यं शिक्षयेच्छौचमादितः।**
**आचारमग्निकार्यं च सन्ध्योपासनमेव च॥**

**உபநீய குரு: சிஷ்யம் ஷிச்சயேச்சௌசமாதித: |**
**ஆசாரமக்னி கார்யம் ச ஸந்த்யோ பாஸநமேவ ச || 69**

குருவானவர் உபநயனம் செய்து வைத்து முதலில் ஆசாரம் முதலானவைகளையும் காலை, மாலை செய்யும் அக்னி ஹோத்ரம், சந்த்யோபாசனம் முதலியவைகளையும் கற்றுக் கொடுக்க வேண்டும்.

**अध्येष्यमाणस्त्वाचान्तो यथाशास्त्रमुदङ्मुखः।**
**ब्रह्माञ्जलिकृतोऽध्याप्यो लघुवासा जितेन्द्रियः॥**

**அத்யேஷ்யமாணஸ்த்வாசாந்தோ யதாசாஸ்த்ரமுதங்முக: |**
**ப்ரஹ்மாஞ்சலி க்ருதோ அத்யாப்யோ லகுவாஸா ஜிதேந்த்ரிய: || 70**

அத்யயனம் செய்யப் போகும் சிஷ்யன் பரிசுத்தமான ஆடைகளை அணிந்து விதிமுறைப்படி ஆசமனம் செய்து, இந்திரியங்களை அடக்கியவனாக பிரம்மாஞ்சலி செய்த பிறகு, குருவானவர் அந்த சிஷ்யனை உட்கார வைத்து, அவனை வேத அத்யயனம் செய்ய வைக்க வேண்டும்.

**ब्रह्मारम्भेऽवसाने च पादौ ग्राह्यौ गुरोः सदा।**
**संहृत्य हस्तावध्येयं स हि ब्रह्माञ्जलिः स्मृतः॥**

**ப்ரஹ்மாரம்பே அவஸாநே ச பாதௌ க்ராஹ்யௌ குரோஸ்ஸதா |**
**ஸம்ஹ்றுத்ய ஹஸ்தாவத்யேயம் ஸ ஹி ப்ரஹ்மாஞ்சலி: ஸ்ம்ருத: || 71**

*வேத அத்யயனம் ஆரம்பிக்கும் போதும், முடித்த பிறகும், எப்போதும் குருவின் பாதங்களை சேர்த்துப் பற்றிக் கொண்டு வணங்க வேண்டும். கைகளைக் கட்டிக் கொண்டு அத்யயனம் செய்ய வேண்டும். இது பிரம்மாஞ்சலி எனப்படும்.*

**व्यत्यस्तपाणिना कार्यमुपसङ्ग्रहण गुरोः।**
**सव्येन सव्यः स्प्रष्टव्यो दक्षिणेन च दक्षिणः॥**

**வ்யத்ய ஸ்தபாணிநா கார்யமுபஸங்க்ரஹணம் குரோ: |**
**ஸவ்யேந ஸவ்ய: ஸ்ப்ருஷ்டவ்யோ தட்சிணேந ச தட்சிண: || 72**

*வலது கரத்தால் குருவின் வலது பாதத்தையும், இடது கரத்தால் குருவின் இடது பாதத்தையும் பற்றிக் கொள்ள வேண்டும்.*

**अध्येष्यमाणं तु गुरुर् नित्यकालमतन्द्रितः।**
**अधीष्व भो इति ब्रूयाद् विरामोऽस्त्विति चाऽऽरमेत्॥**

**அத்யேஷ்யாமாணம் து குருர் நித்ய காலமதந்த்ரித: |**
**அதீஷ்வ போ இதி ப்ரூயாத் விராமோ அஸ்த்விதி சாரமேத் || 73**

*சோம்பலின்றி வேதாத்யயனம் செய்யப் போகும் சிஷ்யனிடம் 'ஆரம்பி' என்று சொல்லி ஆரம்பித்து வைக்க வேண்டும். முடிக்கும் போது 'நிறுத்து' என்று சொல்லி நிறுத்த வேண்டும்.*

**ब्रह्मणः प्रणवं कुर्यादादावन्ते च सर्वदा।**
**स्रवत्यनोङ्कृतं पूर्वं परस्ताच्च विशीर्यते॥**

**ப்ரஹ்மண: ப்ரணவம் குர்யாதாதாவந்தே ச ஸர்வதா |**
**ஸ்ரவத்ய நோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விஷீர்யதே || 74**

*வேதாத்யயனம் ஆரம்பிக்கும்போது, முதலிலும் முடிவிலும் எப்போதும் ஓங்காரத்தை உச்சரிக்க வேண்டும்.*

*வேதம் ஆரம்பிக்கும்போது ஓங்காரம் உச்சரிக்காவிடில் படித்தது முழுவதும் சிறிது சிறிதாக மறந்து போகும். முடிக்கும்போது ஓங்காரம் உச்சரிக்காவிடில் படித்தது எதுவும் மனத்தில் தங்காது.*

प्राक्कूलान् पर्युपासीनः पवित्रैश् चैव पावितः।
प्राणायामैस् त्रिभिः पूतस् तत ओङ्कारमर्हति॥

**ப்ராக்கூலாந் பர்யுபாஸீந: பவித்ரைஸ்சைவ பாவித: |**
**ப்ராணாயாமைஸ்த்ரிபி; பூதஸ்தத ஓங்காரமர்ஹதி || 75**

*கிழக்கு முகமாக நுனிகள் கொண்ட தர்ப்பைகளின் மீது அமர்ந்து, இரண்டு கரங்களிலும் தர்ப்பைகளை வைத்துக் கொள்வதனால் பரிசுத்தமானவனாகி, மும்முறை பிராணாயாமம் செய்து, பிறகு ஓங்காரத்தை உச்சரித்து, அதன் பிறகு வேத அத்யயனத்தை ஆரம்பிக்க வேண்டும்.*

अकारं चाऽप्युकारं च मकारं च प्रजापतिः।
वेदत्रयन् निरदुहद् भूर् भुवः स्वरितीति च॥

**அகாரம் சாப்யுகாரம் ச மகாரம் ச ப்ரஜாபதி: |**
**வேதத்யாந்நி ரதுஹத்பூர் புவஸ்வரிதீதி ச || 76**

*பிரம்மதேவர், ரிக், யஜுர், ஸாமம் என்னும் மூன்று வேதங் களிலிருந்தும் அகாரம், உகாரம், மகாரங்களையும், பூ: புவ: ஸ்வ: என்னும் மூன்றினையும் முறையே கிரஹித்தார்.*

त्रिभ्य एव तु वेदेभ्यः पादपादमदूदुहत्।
तदित्यृचोऽस्याः सावित्र्याः परमेष्ठी प्रजापतिः॥

**த்ரிப்ய ஏவது வேதேப்ய: பாதம்பாதமதூது ஹத்|**
**ததித்ர்யுசோ அஸ்யாஸ்ஸாவித்ர்யா: பரமேஷ்டீ ப்ரஜாபதி: || 77**

*பிரம்மதேவர் மூன்று வேதங்களினின்றும் 'தத்ஸவிது:' என்னும் 'ரிக்'கினுடைய ஒவ்வொரு பாதத்தையும் கிரஹித்தார்.*

एतदक्षरमेतां च जपन् व्याहृतिपूर्विकाम्।
सन्ध्ययोर् वेदविद् विप्रो वेदपुण्येन युज्यते॥

**ஏததக்ஷரமேதாம் ச ஜபந் வ்யாஹ்ருதி பூர்விகாம் |**
**ஸந்த்யயோர் வேதவித்விப்ரோ வேதபுண்யேந யுஜ்யதே || 78**

*இரண்டு சந்த்யா காலங்களிலும் ஓங்காரத்துடன்கூட இந்த 'ரிக்'கை ஜபிக்கும் வேதமறிந்தவனான பிராம்மணன் புண்ணியத்தை அடைகிறான்.*

सहस्रकृत्वस् त्वभ्यस्य बहिरेतत् त्रिकं द्विजः।
महतोऽप्येनसो मासात् त्वचेवाऽहिर् विमुच्यते॥

**ஸஹஸ்ரக்ரு த்வஸ்த்வப்யஸ்ய பஹிரேதத்ரிகம் த்விஜ: |**
**மஹதோ அப்யேநஸோ மாஸாத்வசே வாஹிர்விமுச் யதே || 79**

பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர்கள் சந்தியா காலத்திலும் மற்ற சமயங்களிலும் கிராமத்துக்கு வெளியே, ஓங்காரத்துடன் கூடிய மூன்று வியாஹ்ருதிகளைக் கொண்ட காய்த்ரி மந்திரத்தை, ஒவ்வொரு நாளும் ஆயிரம் முறை ஜபித்தால், ஒரு மாத காலத்தில், பாம்பு தன் சட்டையை விட்டு விடுவது போன்று, மகா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

**एतयर्चा विसंयुक्तः काले च क्रियया स्वया।**
**ब्रह्मक्षत्रियविद्योनिर् गर्हणां याति साधुषु॥**
**ஏதயர்ச்சா விஸம்யுக்த: காலே ச க்ரியயா ஸ்வயா |**
**ப்ரஹ்ம க்ஷத்ரியவிட்யோ நிர்கர்ஹணாம் யாதி ஸாதுஷு || 80**

சந்த்யா காலத்திலும், மற்றப் போதிலும் இந்த ‘ரிக்’கை ஜபிக்காமல், காலை, மாலை செய்ய வேண்டிய ஹோமங்களைச் செய்யாமல் இருக்கும் பிராம்மண· க்ஷத்ரிய வைசியர்கள் சான்றோரால் நிந்திக்கப் படுவார்கள்.

**ओङ्कारपूर्विकास् तिस्रो महाव्याहृतयोऽव्ययाः।**
**त्रिपदा चैव सावित्री विज्ञेयं ब्रह्मणो मुखम्॥**
**ஓங்காரபூர் விகாஸ்திஸ்ரோ மஹாவ்யாஹ்ருதயோ அவ்யயா: |**
**த்ரிபதா சைவ ஸாவித்ரீ விக்ஞேயம் ப்ரஹ்மணோ முகம் || 81**

ஓங்காரத்தை முதலாகக் கொண்டதும், அழிவற்றவைகளுமான ‘பூர்புவஸ்சுவ’ என்னும் மஹா வியாஹ்ருதிகளும், மூன்று பதங்களாக உள்ள சாவித்ரியும் வேதத்துக்கு முகமாக இருப்பவை என்று அறிய வேண்டும்.

**योऽधीतेऽहन्यहन्येतां त्रीणि वर्षाण्यतन्द्रितः।**
**स ब्रह्म परमभ्येति वायुभूतः खमूर्तिमान्॥**

**யோஅதீதே அஹந்யஹந்யேதாம் த்ரீணி வர்ஷாண்யதந்த்ரித: |**
**ஸப்ரஹ்மப மப்யேதி வாயுபூத: கமூர்த்திமாந் || 82**

சோம்பலின்றி இவைகளை மூன்று வருட காலம் ஒவ்வொரு நாளும் விடாது ஜபிப்பவன் வாயுவைப் போன்று எங்கும் செல்லக்கூடிய சக்தியை அடைவான். இறந்த பிறகு பிரம்ம லோகத்தையும் அடைவான்.

**एकाक्षरं परं ब्रह्म प्राणायामाः परं तपः।**
**सावित्र्यास् तु परं नाऽस्ति मौनात् सत्यं विशिष्यते॥**
**ஏகாக்ஷரம் பரம்ப்ரஹ்ம ப்ராணாயாமா: பரம் தப: |**
**ஸாவித்ரியாஸ்து பரம் நாஸ்தி மௌநாத்ஸத்யம் விஷிஸ்யதே || 83**

*ஓம் என்னும் ஏகாக்ஷரமே பிரம்மம்; பிராணாயாமங்களே மேலான தவம்; காயத்ரிக்கு மிஞ்சிய மந்திரமில்லை. மௌனத்தை விட சத்தியம் பேசுதல் மேலானது.*

क्षरन्ति सर्वा वैदिक्यो जुहोति-यजतिक्रियाः।
अक्षरं त्वक्षरं ज्ञेयं ब्रह्म चैव प्रजापतिः॥

**க்ஷரந்தி ஸர்வாவைதிக்யோ ஜுஹோதி யஜதிக்ரியா: |**
**அக்ஷரம் த்வக்ஷரம் ஞேயம் ப்ரஹ்ம சைவ ப்ரஜாபதி: || 84**

*வேதங்களில் வகுத்துள்ள சகல ஹோம யாகங்களாகிய கிரியைகள் அனைத்தும் நசிக்கின்றன. பிரம்ம சொரூபமான ஏகாக்ஷரம் மட்டும் அழியாமல் இருக்கும்.*

विधियज्ञाज् जपयज्ञो विशिष्टो दशभिर् गुणैः।
उपांशुः स्याच् छतगुणः साहस्रो मानसः स्मृतः॥

**விதியக்ஞாத்ஜபயக்ஞோ விசிஷ்டோ தஷபிர்குணை: |**
**உபாம்சு: ஸ்யாத்சதகுண: ஸாஹஸ்ரோ மானஸ: ஸ்ம்ருத: || 85**

*யாகங்கள், ஹோமங்களைவிட ஓம்காரம், மஹா வ்யாஹ்ருதிகளை ஜபம் செய்வது பத்து மடங்கு மேலானது. அந்த ஜபத்தையும் அருகில் இருப்பவருக்குக் கேட்காமல் ஜபிப்பது நூறு மடங்கு மேலானது. மானசிகமாக ஜபிப்பது ஆயிரம் மடங்கு மேலானது.*

ये पाकयज्ञाश् चत्वारो विधियज्ञसमन्विताः।
सर्वे ते जपयज्ञस्य कलां नार्हन्ति षोडशीम्॥

**யே பாக யக்ஞாஷ்சத்வாரோ விதியக்ஞஸமந்விதா: |**
**ஸர்வே தே ஜபயக்ஞஸ்ய கலாம் நார்ஹந்தி ஷோடஷீம் || 86**

*வைஸ்துதேவம், பலிகர்மா, நித்திய சிராத்தம், அதிதி போஜனம் மற்றும் பஞ்சமகா யக்ஞங்களில் பிரம்ம யக்ஞம் தவிர்த்து மீதியுள்ளவற்றிற்கு 'பாக யக்ஞம்' என்று பெயர். பௌர்ணமி, அமாவாசைகள் விதி யக்ஞங்கள். இந்த பாக யக்ஞங்களும் விதி யக்ஞங்களும் காயத்ரி முதலான ஜப யக்ஞத்தின் பதினாறில் ஒரு பாகத்துக்கு ஈடாகாது.*

जप्येनैव तु संसिध्येद् ब्राह्मणो नात्र संशयः।
कुर्यादन्यन् न वा कुर्यान् मैत्रो ब्राह्मण उच्यते॥

**ஜப்யேநைவது ஸம்ஸித்யேத் பிராஹ்மணோ நாதிர ஸம்ஸய: |**
**குர்யாதந் யந்நவா குர்யாந்மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே || 87**

*பிராம்மணன் ஜபத்தினாலேயே மோட்சத்தை அடைவான். இதில் சந்தேகமில்லை. மற்ற யாகம் முதலானவற்றை செய்தாலும் சரி, செய்யாமல் போனாலும் சரி, ஜபத்தினால் மோட்சத்தை ஐயமின்றி அடைவான். பிராம்மணன் சகல உயிர்களுக்கும் மித்திரனாவான்.*

**इन्द्रियाणां विचरतां विषयेष्वपहारिषु।**
**संयमे यत्नमातिष्ठेद् विद्वान् यन्तेव वाजिनाम्॥**

**இந்த்ரியாணாம் விசரதாம் விஷயேஷ்வப ஹாரிஷு ।**
**ஸம்யமே யத்நமாதிஷ்டேத் வித்வாந் யந்தேவ வாஜிநாம் ॥** 88

*நற்குணங்கள் அனைத்துக்கும் பகையாக, விஷய சுகங்களில் ஈடுபட வைக்கும் இந்திரியங்களை, தேரோட்டியானவன் குதிரைகளை அடக்கியாள்வதைப் போன்று வித்வானானவன் அடக்கியாள வேண்டும்.*

**एकादशेन्द्रियाण्याहुर् यानि पूर्वे मनीषिणः।**
**तानि सम्यक् प्रवक्ष्यामि यथावदनुपूर्वशः॥**

**ஏகாதஷேந்த்ரியாண் யாஹுர்யாநி பூர்வே மநீஷிண: ।**
**தாநி ஸம்யக்ப்ரவக்ஷ்யாமி யதாவதநு பூர்வஷ: ॥** 89

*முன்னர் மூத்தோர் எந்தப் பதினொரு இந்திரியங்களைப் பற்றி கூறியுள்ளனரோ, அவற்றை அவர்கள் கூறியபடியே கூறுகிறேன்.*

**श्रोत्रं त्वक् चक्षुषी जिह्वा नासिका चैव पञ्चमी।**
**पायूपस्थं हस्तपादं वाक् चैव दशमी स्मृता॥**

**ஷ்ரோத்ரம் த்வக்க்ஷக்ஷுஷீ ஜிஹ்வா நாஸிகா சைவ பஞ்சமீ ।**
**பாயூபஸ்தம் ஹஸ்தபாதம் வாக் சைவ தஷமீ ஸ்ம்ருதா ॥** 90

*செவிகள், தோல், கண்கள், நாக்கு, மூக்கு என்பவை ஐந்து இந்திரியங்கள். ஆசனம், ஆண் - பெண் குறி, கால்கள், கைகள், வாக்கு இவை ஐந்து இந்திரியங்கள். மொத்தம் பத்து இந்திரியங்கள்.*

**बुद्धीन्द्रियाणि पञ्चैषां श्रोत्रादीन्यनुपूर्वशः।**
**कर्मेन्द्रियाणि पञ्चैषां पाय्वादीनि प्रचक्षते॥**

**புத்தீந்த்ரியாணி பஞ்சைஷாம் ஷ்ரோத்ராதீந்யநு பூர்வஷ: ।**
**கர்மேந்த்ரியாணி பஞ்சைஷாம் பாய்வாதீநி ப்ரசக்ஷதே ॥** 91

*இந்தப் பத்து இந்திரியங்களில் செவிகள் முதலான ஐந்து இந்திரியங்கள் ஞானேந்திரியங்கள். ஆசனம் முதலான ஐந்து இந்திரியங்கள் கர்மேந்திரியங்கள்.*

एकादश मनो ज्ञेयं स्वगुणेनोभयात्मकम्।
यस्मिन् जिते जितावेतौ भवतः पञ्चकौ गणौ॥

**ஏகாதஷம் மனோஞ்ஞேயம் ஸ்வகுணேநோ பயாத்மகம் |**
**யஸ்மிந் ஜிதே ஜிதாவேதௌ பவத: பஞ்சகௌ கணௌ || 92**

பதினொன்றாவது இந்திரியம் மனம். இது தன் குணத்தினால் ஞானேந்திரியமாகவும் இருக்கும்; கர்மேந்திரியமாகவும் இருக்கும். இந்த மனத்தை வென்றவன், ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங் களையும் வென்றவனாவான்.

इन्द्रियाणां प्रसङ्गेन दोषमृच्छत्यसंशयम्।
सन्नियम्य तु तान्येव ततः सिद्धिं नियच्छति॥

**இந்த்ரியாணாம் ப்ரஸங்கேந தோஷம்ருச்சத்ய ஸம்ஸயம் |**
**ஸந்நியம்யது தாந்யேவ ததஸ்ஸித்திம் நியச்சதி || 93**

இந்திரியங்கள் விஷய சுகங்களோடு சேர்வதனால், மனிதன் இவ்வுலகில் துன்பத்தையும், மேலுலகில் பாவத்தையும் சந்தேக மின்றி அடைகிறான். இந்திரியங்களை கட்டுப்படுத்தினால்தான் மோட்ச சித்தி கிடைக்கும். எனவே இந்திரியங்களை வென்று அடக்க வேண்டும்.

न जातु कामः कामानामुपभोगेन शाम्यति।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाऽभिवर्धते॥

**ந ஜாதுகாம: காமாநாமுபபோகேந ஷாம்யதி |**
**ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவ அபிவர்த்ததே || 94**

ஆசையானது, ஆசைப்பட்டதை அனுபவிப்பதினால் அடங்குவ தில்லை. தீயில் நெருப்பை விடுவதினால் மேலும் மேலும் தீ ஓங்கி வளர்வதைப் போன்று, ஆசையும் அனுபவிப்பதனால் மேலும் மேலும் ஓங்கி வளரும்.

यश् चैतान् प्राप्नुयात् सर्वान् यश् चैतान् केवलास् त्यजेत्।
प्रापणात् सर्वकामानां परित्यागो विशिष्यते॥

**யஷ்சைதாந் ப்ராப்நுயாத் ஸர்வாந் யஷசைதாந கேவலாம்ஸ்த்யஜேத் |**
**ப்ராபணாத் ஸர்வகாமாநாம் பரித்யாகோ விஷிஷ்யதே || 95**

எவன் கோரிய சகலத்தையும் அனுபவிக்கின்றானோ, எவன் கோரிக்கைகளையே வெறுத்துத் துறக்கிறானோ; இந்த இருவரில் கோரிக்கைகளை (ஆசைகளை) துறக்கிறவனே மேலானவன்.

न तथैतानि शक्यन्ते सन्नियन्तुमसेवया।
विषयेषु प्रजुष्टानि यथा ज्ञानेन नित्यशः॥

**ந தைதாநி ஷக்யந்தே ஸ்ந்நியந்து மஸேவயா |**
**விஷயேஷு ப்ரஜுஷ்டாநி யதா ஞானேந நித்யஷ: || 96**

*விஷய சுகங்களில் ஈடுபட்டிருக்கும் இந்திரியங்களைத் திருப்புவது இயலாத காரியம். எனவே விஷய சுகங்களை விட வேண்டும் என்னும் ஞானத்தைப் பெற வேண்டும்.*

वेदास् त्यागश्च यज्ञाश्च नियमाश्च तपांसि च।
न विप्रदुष्टभावस्य सिद्धिं गच्छन्ति कर्हिचित्॥

**வேதாஸ்த்யாகஷ்ச யக்ஞாஷ்ச நியமாஷ்ச தபாம்ஸிச |**
**ந விப்ரதுஷ்ட பாவஷ்ச ஸித்திம் கச்சந்தி கர்ஹிசித் || 97**

*இந்திரியங்களை அடக்காத துஷ்ட மனம் உடையவன் செய்யும் வேதாத்யயனம், தானம், யக்ஞங்கள், நியமங்கள், தவங்கள் முதலானவை பலன்களைக் கொடா.*

श्रुत्वा स्पृष्ट्वा च दृष्ट्वा च भुक्त्वा घ्रात्वा च यो नरः।
न हृष्यति ग्लायति वा स विज्ञेयो जितेन्द्रियः॥

**ஷ்ருத்வா ஸ்ப்ருஷ்ட்வா ச த்ருஷ்ட்வா ச புக்த்தவா க்ராத்வா சயோநர: |**
**ந ஹ்ருஷ்யதி க்ளாயதி வா ஸ விக்ஞேயோ ஜிதேந்த்ரிய: || 98**

*எவனொருவன் கேட்டும், ஸ்பரிசித்தும், பார்த்தும், உண்டும், முகர்ந்தும், இன்பத்தையோ துன்பத்தையோ அடைவதில்லையோ அவனே ஜிதேந்த்ரியன்.*

इन्द्रियाणां तु सर्वेषां यद्येकं क्षरतीन्द्रियम्।
तेनाऽस्य क्षरति प्रज्ञा दृतेः पादादिवोदकम्॥

**இந்த்ரியாணாம் து ஸர்வேஷாம் யத்யேகம் க்ஷரதீந்த்ரியம் |**
**தேநாஸ்ய க்ஷரதி ப்ரக்ஞா த்ருதே: பாதாதி வோதகம் || 99**

*இந்திரியங்கள் அனைத்தின் நடுவே, ஒரு இந்திரியம் விஷய சுகத்தில் ஆட்பட்டிருந்தாலும், அத்தகையவனுடைய ஞானம், ஓட்டை விழுந்த தோல் பாத்திரத்தில் வைத்த தண்ணீரைப் போன்று வீணாகி விடும்.*

वशे कृत्वेन्द्रियग्रामं संयम्य च मनस् तथा।
सर्वान् संसाधयेदर्थानक्षिण्वन् योगतस् तनुम्॥

**வஷே க்ருத்வேந்த்ரியக்ராமம் ஸம்யம்ய ச மநஸ்தததா |**
**ஸர்வாந் ஸம்ஸாதயேத ர்த்தாந க்ஷிண்வந் யோகதஸ்தநும் || 100**

எனவே புலன்களை வென்று, மனதைக் கட்டுப்படுத்தி, தனது உடலை பீடிக்காமல் சகலத்தையும் சாதிக்க வேண்டும். அவ்வாறு சாதித்த பிறகு முறையாக தன் உடலை விட வேண்டும்.

पूर्वां सन्ध्यां जपंस् तिष्ठेत् सावित्रीमाऽर्कदर्शनात्।
पश्चिमां तु समासीनः सम्यगृक्षविभावनात्॥

**பூர்வாம் ஸந்த்யாம் ஜபம்ஸ்திஷ்டேத் ஸாவித்ரீ மார்க்கதர்ஷநாத் |**
**பஷ்சிமாம்து ஸமாஸீந: ஸம்யக்ருக்ஷ விபாவநாத் ||** 101

உதய காலத்தில் சூரியன் உதிக்கும் வரை நின்றபடி காயத்ரி மந்திரத்தை ஜபிக்க வேண்டும். மாலையில் நட்சத்திரங்கள் கண்ணுக்குத் தென்படும் வரை அமர்ந்தபடி காயத்ரி மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

पूर्वां सन्ध्यां जपंस् तिष्ठन् नैशमेनो व्यपोहति।
पश्चिमां तु समासीनो मलं हन्ति दिवाकृतम्॥

**பூர்வாம் ஸந்த்யாம் ஜபம்திஷ்டந்நைஷமேநோ வ்யபோஹதி |**
**பஷ்சிமாம்து ஸமாஸீநோ மலம் ஹந்தி திவாக்ருதம் ||** 102

உதயகாலத்தில் நின்றபடி காலை சந்தியா காயத்ரி ஜபத்தை செய்து முதல் நாள் இரவு செய்த பாபத்தை போக்கிக் கொள்கிறான். மாலையில் அமர்ந்தபடி காயத்ரி ஜபத்தை செய்து அன்று பகலில் தான் செய்த பாபத்தை போக்கிக் கொள்கிறான்.

न तिष्ठति तु यः पूर्वां नोपास्ते यश्च पश्चिमाम्।
स शूद्रवद् बहिष्कार्यः सर्वस्माद् द्विजकर्मणः॥

**ந திஷ்டதிதுய: பூர்வாம் நோபாஸ்தே யஷ்ச பஷ்சிமாம் |**
**ஸஷுத்ரவத்பஹிஷ்கார்ய: ஸர்வஸ் மாத்தவிஜ கர்மண: ||** 103

காலை சந்தியை அனுஷ்டிக்காதவனையும், மாலை சந்தியை அனுஷ்டிக்காதவனையும், சூத்திரனை ஒதுக்கி வைப்பது போன்று, எல்லா த்விஜ கர்மாக்களிலிருந்தும் ஒதுக்கி வைக்க வேண்டும்.

अपां समीपे नियतो नैत्यकं विधिमास्थितः।
सावित्रीमप्यधीयीत गत्वाऽरण्यं समाहितः॥

**அபாம் ஸமீபே நியதோ நைத்யகம் விதிமாஸ்தித: |**
**ஸாவித்ரீமப்யதீயீத கத்வாரண்யம் ஸமாஹித: ||** 104

ஆரண்யத்தில் அல்லது நதிக்கரையில் ஒருமுகப்பட்ட மனத்தோடு, இந்திரியங்களை அடக்கி, நித்ய கர்மாக்களை அனுஷ்டித்த பிறகு காயத்ரியை ஜபிக்கத் தொடங்க வேண்டும்.

**वेदोपकरणे चैव स्वाध्याये चैव नैत्यके।**
**नाऽनुरोधोऽस्त्यनध्याये होममन्त्रेषु चैव हि॥**

**வேதோபகரணே சைவ ஸ்வாத்யாயே சைவ நைத்யகே |**
**நாநுரோதோ அஸ்த்யநத்யாயே ஹோம மந்த்ரேஷு சைவஹி || 105**

வேத அங்கங்களான சிக்ஷை முதலானவற்றுக்கும் தினமும் அனுஷ்டிக்கும் பிரம்மயக்ஞ ரூபமான வேதமோதுவதற்கும், ஹோம மந்திரங்களுக்கும் அத்யயனம் பண்ணத் தகாத நாட்கள் என்று இல்லை. அதாவது படிக்கத் தகாத நாட்கள் என்று எதுவும் இல்லை.

**नैत्यके नाऽस्त्यनध्यायो ब्रह्मसत्रं हि तत् स्मृतम्।**
**ब्रह्माऽऽहुतिहुतं पुण्यमनध्यायवषट्कृतम्॥**

**நைத்யகே நாஸ்த்ய நத்யாயோ ப்ரஹ்மஸத்ரம் ஹி தத்ஸ்ம்ருதம் |**
**ப்ரஹ்மாஹுதிஹுதம் புண்யமநத்யாய வஷட்க்ருதம் || 106**

நித்தியமான வேத அத்யயனத்தில், அநத்யயன தோஷம் என்பது இல்லை. இத்தகைய நித்திய அத்யயனம் 'பிரம்ம சத்ரம்' என்று சொல்லப்படுகிறது. அத்தகைய வேதம் என்னும் ஆகுதியால் செய்யப்படும் இந்த வேள்விக்கு அநத்யாயனத்தில் செய்யப் பட்டாலும் புண்ணியத்தைத் தருமேயன்றி அநத்யயன தோஷம் ஏற்படாது.

**यः स्वाध्यायमधीतेऽब्दं विधिना नियतः शुचिः।**
**तस्य नित्यं क्षरत्येष पयो दधि घृतं मधु॥**

**யஸ்வாத்யாயமதீதே அப்தம் விதிநா நியதஸ்சுசி: |**
**தஸ்ய நித்யம் க்ஷரத்யேஷ பயோ ததி க்ருதம் மது || 107**

எவன் புலன்களை வென்றவனாக, ஒரு வருட காலம் நியமமாக வேத அத்யயனம் செய்வானோ, அவனுக்கு, இந்த நித்ய அத்யயனம் பால், தயிர், நெய், தேன் முதலானவற்றை அளிக்கும்.

**अग्नीन्धनं भैक्षचर्यामधःशय्यां गुरोर् हितम्।**
**आ समावर्तनात् कुर्यात् कृतोपनयनो द्विजः॥**

**அக்நீந்தநம் பைக்ஷசர்யாம தஷ்ஷய்யாம் குரோர்ஹிதம் |**
**ஆஸமாவர்த்தநாத் குர்யாத் க்குதோபநயநோ த்விஜ: || 108**

உபநயனமான த்விஜன் (பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன்) அக்னி ஹோத்ரம், பிட்சாடனம், உயரமான படுக்கையில் படுக்காதிருத்தல், குருவுக்கு நன்மை தரும் செயல்களைச் செய்தல் முதலியவற்றை சமாவர்த்தனம் வரை செய்து கொண்டிருக்க வேண்டும்.

(சமாவர்த்தனம் என்றால் குருகுலத்தில் இருந்து திரும்பி வருதல் என்று பொருள். இதற்கு ஸ்நான கிரியை என்றும் பெயர் உண்டு. குருவுக்குத் தட்சிணை கொடுத்து அவரிடமிருந்து விடை பெற்றுச் சென்று, விவாகம் செய்து கொள்ள வேண்டும். விவாகத்துக்கு முதல் நாளோ, விவாக தினத்தன்றோ சமாவர்த்தனம் செய்து கொள்ள வேண்டும்.

இது முதல்தான் பஞ்சகச்சம் அணிய வேண்டும். இரண்டு பூணூல் தரிக்க வேண்டும்.

இந்த ஸமாவர்த்தனம் என்னும் ஸ்நானக் கிரியைக்குப் பிறகுதான் ஒருவனுக்கு ஸ்நானதகன் என்று பெயர் ஏற்படும்.)

आचार्यपुत्रः शुश्रूषुर् ज्ञानदो धार्मिकः शुचिः ।
आप्तः शक्तोऽर्थदः साधुः स्वोऽध्याप्या दश धर्मतः ॥

**ஆசார்ய புத்ரஸ்சுஸ்ரூசுர்ஞாநதோ தார்மிகஸ்சுசி: |**
**ஆப்தஸ்ஷக்தோ அர்த்ததஸ்ஸாதுஸ்ஸ் வோத்யாப்யா தஷ தர்மத: || 109**

ஆசார்யருடைய புத்திரன், பணிவிடை புரிபவன், வேறு ஒரு வித்யையை சொல்லித் தருபவன், பரிசுத்தமானவன், உறவினன், சொல்வதை கிரஹிக்கும் திறனும் ஞாபக சக்தியும் மிகுதியாக இருப்பவன், பொருளை அளிக்கக்கூடியவன், நன்மையை விரும்புபவன், பங்காளி முதலான பத்துப் பேருக்கும் தட்சிணை பெற்றுக் கொள்ளாமல் வித்யையைக் கற்றுக் தர வேண்டும்.

नाऽपृष्टः कस्यचिद् ब्रूयान् न चाऽन्यायेन पृच्छतः ।
जानन्नपि हि मेधावी जडवल् लोक आचरेत् ॥

**நாப்ருஷ்ட: கஸ்யசித் ப்ரூயாந்ந சாந்யாயேந ப்ருச்சத: |**
**ஜாநந்நபி ஹி மேதாவீ ஜடவல்லோக ஆசரேத் || 110**

தன்னைக் கேளாதவனுக்கு எதையும் கூறலாகாது. சிரத்தையும் பக்தியும் இல்லாமல் விதண்டாவாதமாக கேட்பவனுக்கும் எதையும் கூறலாகாது. புத்திமானாக இருப்பவன், தான் அறிந்தவனாக இருந்தாலும், ஊமையைப் போன்று உலகத்தில் வாழ வேண்டும்.

अधर्मेण च यः प्राह यश् चाऽधर्मेण पृच्छति ।
तयोरन्यतरः प्रैति विद्वेषं वाऽधिगच्छति ॥

**அதர்மேண ச ய: ப்ராஹ யஷ் சாதர்மேண ப்ருச்சதி |**
**தயோரந்யதர: ப்ரைதி வித்வேஷம் வாதிகச்சதி || 111**

அதர்மமாக எவன் பதில் கூறுகிறானோ, எவன் அதர்மமாகக் கேட்கிறானோ, அவர்களில் ஒருவன் மரணமடைவான். அல்லது அவனோடு விரோதத்தை அடைவான்.

धर्मार्थौ यत्र न स्यातां शुश्रूषा वाऽपि तद्विधा।
तत्र विद्या न वप्तव्या शुभं बीजमिवोषरे॥

**தர்மார்த்தௌ யத்ர நஸ்யாதாம் சுஷ்ரூஷா வாபி தத்விதா |**
**தத்ர வித்யா நவப்தவ்யா சுபம் பீஜமிவோஷரே ||** 112

எவனிடம் தர்மம், அர்த்தம் இரண்டும் இல்லையோ, பணிவிடையும் (பணிவிடை புரியும் குணமும்) இல்லையோ, அத்தகையவனுக்கு வித்யையை சொல்லித் தரக்கூடாது. அத்தகையவனுக்கு சொல்லிக் கொடுத்த வித்யை களர் நிலத்தில் விதைத்த விதையைப் போன்று வீணாகும்.

विद्ययैव समं कामं मर्तव्यं ब्रह्मवादिना।
आपद्यपि हि घोरायां न त्वेनामिरिणे वपेत्॥

**வித்யயைவ ஸமம் காமம் மர்த்தவ்யம் ப்ரஹ்மவாதிநா |**
**ஆபத்யபி ஹி கோராயாம் நத்வேநாமிரிணே வபேத் ||** 113

தக்க தகுதி கொண்ட சிஷ்யன் கிடைக்காதபோது வேத வித்தானவன், தன் வித்யையோடு தானும் இறப்பதேகூட பரவாயில்லை. எத்தகைய கோரமான ஆபத்து வந்தாலும் வித்யையை களர் நிலத்தில் விதைக்கக் கூடாது. (அதாவது வித்யையை தகுதி யற்றவனுக்கு கற்றுக் கொடுக்கக் கூடாது.)

विद्या ब्राह्मणमेत्याऽऽह शेवधिष्टेऽस्मि रक्ष माम्।
असूयकाय मां मा दास् तथा स्यां वीर्यवत्तमा॥

**வித்யா ப்ராஹ்மண மேத்யாஹ ஷேவதிஸ்தே அஸ்மி ரக்ஷ மாம் |**
**அஸூயகாய மாம் மாதாஸ்ததா ஸ்யாம் வீர்யவத்தமா ||** 114

வித்யைக்குரிய தேவதை வித்வானான ப்ராஹ்மணனிடம், "நான் உனக்கு நிதியாகக் கிடைத்துள்ளேன்; என்னைக் காப்பாற்று; பொறாமை முதலான துர்குணங்கள் கொண்டவனிடம் என்னை அளிக்காதே. அப்படிச் செய்வாயானால் நான் வீர்யத்தோடு இருப்பேன்" என்று கூறும்.

यमेव तु शुचिं विद्यान् नियतं ब्रह्मचारिणम्।
तस्मै मां ब्रूहि विप्राय निधिपायाऽप्रमादिने॥

**யமேவ து சுசிம் வித்யாந்நியதம் ப்ரஹ்மசாரிணம் |**
**தஸ்மை மாம் ப்ரூஹி விப்ராய நிதிபாயாப்ரமாதிநே ||** 115

பரிசுத்தனாகவும், புலன்களை வென்றவனாகவும், பிரம்ம சாரியாகவும், வித்யா நிதியை காப்பாற்றக் கூடியவனாகவும் இருக்கும் சிஷ்யன் எவனோ அவனிடம் என்னைக் கூறுவாய்.

(அதாவது வித்யையாகிய என்னைக் கற்றுக் கொடுப்பாய் என்று பொருள்.)

ब्रह्म यस् त्वननुज्ञातमधीयानादवाप्नुयात्।
स ब्रह्मस्तेयसंयुक्तो नरकं प्रतिपद्यते॥

**ப்ரஹ்ம யஸ்த்வநநுஞா தமதீயாநா தவாப்நுயாத் |**
**ஸ ப்ரஹ்மஸ்தேய ஸம்யுக்தோ நரகம் ப்ரதிபத்யதே || 116**

எவன் குருவுக்குத் தெரியாமல் அவரது அனுமதியின்றி அவரிடமிருந்து வித்யையைப் பெறுகிறானோ, அவன் வேதத்தைத் திருடியவன் அடையும் பாவத்தை அடைந்து நரகத்தில் வீழ்வான்.

लौकिकं वैदिकं वाऽपि तथाऽऽध्यात्मिकमेव च।
आददीत यतो ज्ञानं तं पूर्वमभिवादयेत्॥

**லௌகிகம் வைதிகம் வாபி ததாத்யாத்மிகமேவ ச |**
**ஆததீத யதோ ஞானம் தம் பூர்வமபிவாதயேத் || 117**

உலகியல் சாஸ்திரம், வேதார்த்த ஞானம், பிரம்ம ஞானம், இவற்றை எவரிடமிருந்து கற்கிறானோ, அவரை (அவரைவிட அதிகம் கௌரவம் கொடுக்கத் தக்கவர்களிடையே அவர் இருக்கும்போதும்) முதலில் வணங்க வேண்டும். இம்மூன்று சாஸ்திரங்களைக் கற்பித்த மூவரும் இருக்கும்போது லௌகிக சாஸ்திரம் கற்பித்தவருக்கு முன்பு வேதஞானம் கற்பித்தவரையும், அவருக்கும் முன்பு பிரம்ம ஞானத்தை அளித்தவரையும் வணங்க வேண்டும்.

सावित्रीमात्रसारोऽपि वरं विप्रः सुयन्त्रितः।
नाऽयन्त्रितस् त्रिवेदोऽपि सर्वाशी सर्वविक्रयी॥

**ஸாவித்ரீ மாத்ரஸாரோ அபிவரம் விப்ரஸ்சுயந்த்ரித: |**
**நாயந்த்ரிதஸ்த்ரி வேதோ அபி ஸர்வாஷீ ஸர்வவிக்ரயீ || 118**

கட்டுப்பாடு இன்றி, விலக்கப்பட்ட உணவுகளை உண்பவனும், விலக்கப்பட்டவற்றை விற்பவனுமான, வித்வானான பிராம்மணன், மூன்று வேதங்களையும் அத்யயனம் செய்தவனாயினும், அவனைவிட கட்டுப்பாடுடன் இருக்கின்ற பிராம்மணன் காயத்ரியை மட்டும் அறிந்தவனாக இருப்பினும்கூட, அவனே உயர்ந்தவன்.

(உண்ணும் உணவும், வாழும் வழியும் தர்மத்தை மீறாததாக இருக்க வேண்டும். ஒழுக்கம்தான் முதலில் முக்கியம். படிப்பு அதற்கு அடுத்தபடியானதுதான்.)

शय्यासनेऽध्याचरिते श्रेयसा न समाविशेत्।
शय्यासनस्थश् चैवैनं प्रत्युत्थायाऽभिवादयेत्॥

**சய்யாஸநே அத்யாசரிதே ஷ்ரேயஸா ந ஸமாவிஷேத் |**
**சய்யாஸநஸ்தஷ் சைவைநம் ப்ரத்யுத்தாயா பிவாதயேத் || 119**

*தான் மஞ்சத்திலும் ஆசனத்திலும் வீற்றிருக்கும்போது, தன்னை விட உயர்ந்தவர் வந்தால், எழுந்து அவரை வரவேற்று வணங்க வேண்டும்.*

ऊर्ध्वं प्राणा ह्युत्क्रामन्ति यूनः स्थविर आयति।
प्रत्युत्थानाऽभिवादाभ्यां पुनस् तान् प्रतिपद्यते॥

**ஊர்த்வம் ப்ராணா ஹ்யுத்காரமந்தி யூநः ஸ்தவிர ஆயதி |**
**ப்ரத்யுத்தாநாபி வாதாப்யாம் புநஸ்தாந் ப்ரதிபத்யதே || 120**

*ஞானத்தாலும் வயதாலும் பெரியோராக இருப்பவர் வந்தால், சிறியோனின் பிராணன்கள் மேலெழும்பும். எனவே சிறியோர் பெரியோரைக் கண்டதும் எழுந்து வணங்கி, பிராணன்களைப் போகாமல் நிறுத்திக் கொள்ள வேண்டும்.*

अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः।
चत्वारि सम्प्रवर्धन्ते आयुर् विद्या यशो वलम्॥

**அபிவாதனஷீலஸ்ய நித்யம் வ்ருத்தோ பஸேவிநः |**
**சத்வாரி தஸ்ய வர்தந்தே ஆயுர்வித்யா யஷோ பலம் || 121**

*பெரியோர் வந்தபோது எழுந்து அவரை வரவேற்று வணங்குபவனுக்கு ஆயுள், வித்யை, புகழ், பலம் என்னும் நான்கும் விருத்தியடையும்.*

अभिवादात् परं विप्रो ज्यायांसमभिवादयन्।
असौ नामाहमस्मीति स्वं नाम परिकीर्तयेत्॥

**அபிவாதாத்பரம் விப்ரோ ஜ்யாயாம்ஸமபிவாதயந் |**
**அஸௌ நாமாஹமஸ்மீதி ஸ்வம் நாம பரிகீர்த்தயேத் || 122**

*வித்வானான பிராம்மணன் தன்னைவிட பெரியோனுக்கு அபிவாதனம் செய்து தன் பெயர், குலம், கோத்ரங்களைக் கூறி வணங்க வேண்டும்.*

नामधेयस्य ये केचिदभिवादं न जानते।
तान् प्राज्ञोऽहमिति ब्रूयात् स्त्रियः सर्वास् तथैव च॥

**நாமதேயஸ்ய யேகேசிதபிவாதம் ந ஜாநதே |**
**தாந்ப்ராக்ஞோ அஹமிதி ப்ரூயாத் ஸ்த்ரிய: ஸர்வாஸ்ததைவ ச || 123**

எவருக்கு அபிவாதனத்தின் பொருள் தெரியாதோ, அத்தகை யோருக்கு தன்னுடைய பெயரை மாத்திரம் கூறி வணங்க வேண்டும். பெண்களையும் அவ்வாறே வணங்க வேண்டும்.

भोःशब्दं कीर्तयेदन्ते स्वस्य नाम्नोऽभिवादने।
नाम्नां स्वरूपभावो हि भोभाव ऋषिभिः स्मृतः॥

**போ சப்தம் கீர்த்தயேதந்தே ஸ்வஸ்ய நாம்நோ அபிவாதநே |**
**நாம்நாம் ஸ்வரூபபாவோ ஹி போ பாவ ருஷிபி: ஸ்ம்ருத: || 124**

ஒருவன் வணங்கி அபிவாதனம் செய்யும்போது தன் பெயருக்குப் பின்னால் 'போ:' என்று சேர்த்துக் கூற வேண்டும். அப்படி 'போ:' என்று கூறுவதே பெயர்களின் சொரூபம் என்று முனிவர்களால் கூறப்பட்டது.

आयुष्मान् भव सौम्येति वाच्यो विप्रोऽभिवादने।
अकारश् चाऽस्य नाम्नोऽन्ते वाच्यः पूर्वाऽक्षरः प्लुतः॥

**ஆயுஷ்மான் பவ ஸௌம்யேதி வாச்யோ விப்ரோ அபிவாதநே |**
**அகாரஷ்சாஸ்ய நாம்நோ அந்தே வாச்ய: பூர்வாக்ஷர: ப்லுத: || 125**

அபிவாதனம் செய்யும் வித்வானான பிராம்மணனுக்கு 'ஆயுஷ்மான் பவ ஸௌம்ய' என்று ஆசி கூற வேண்டும்.

அவன் பெயர் அகாராந்தத்தில் முடிவதாக இருந்தால் நீட்டிக் கூற வேண்டும்.

க்ஷத்ரிய வைசியர்களுக்கு நீட்டியும் கூறலாம். நீட்டாமலும் ஆசி கூறலாம்.

சூத்ரனுக்கு நீட்டிக் கூற வேண்டியதில்லை.

यो न वेत्त्यभिवादस्य विप्रः प्रत्यभिवादनम्।
नाऽभिवाद्यः स विदुषा यथा शूद्रस् तथैव सः॥

**யோ ந வேத்ய பிவாதஸ்ய விப்ர: ப்ரத்யபிவாதநம் |**
**நாபிவாத்யஸ்ய விதுஷா யதா சூத்ரஸ்ததைவ ஸ: || 126**

எந்த விப்ரன் அபிவாதனம் செய்தவனுக்குப் பதில் செய்ய அறியாதவனோ, அத்தகையவன் சூத்திரனுக்கு சமமானவன். அவனுக்கு அபிவாதனம் செய்யலாகாது.

ब्राह्मणं कुशलं पृच्छेत् क्षत्रबन्धुमनामयम्।
वैश्यं क्षेमं समागम्य शूद्रमारोग्यमेव च॥

**ப்ராஹ்மணம் குஷலம் ப்ருச்சேத் க்ஷத்ர பந்துமநாமயம் |**
**வைஸ்யம் க்ஷேமம் ஸமாகம்ய சூத்ரமாரோக்யமேவ ச || 127**

தன்னிடம் வந்து அபிவாதனம் செய்தவன், சிறியவனாக இருந்தாலும் சரி, பெரியவனாக இருந்தாலும் சரி, பிராம்மணனாக இருந்தால் 'குசலமா' என்றும், க்ஷத்ரியனாக இருந்தால் 'அநாமயமா' என்றும், வைசியனாக இருந்தால் 'க்ஷேமமா' என்றும், சூத்திரனாக இருந்தால் 'ஆரோக்கியமா' என்றும் நலன் விசாரிக்க வேண்டும்.

अवाच्यो दीक्षितो नाम्ना यवीयानपि यो भवेत्।
भोभवत्पूर्वकं त्वेनमभिभाषेत धर्मवित्॥

**அவாச்யோ தீக்ஷிதோ நாம்நா யவீயாநபி யோ பவேத் |**
**போ பவத் பூர்வகம் த்வேநமபிபாஷேத தர்மவித் || 128**

யாக தீட்சை ஏற்றிருப்பவன் தன்னைவிட சிறியவனாக இருந்தாலும், தர்மம் அறிந்தவன் அவனைப் பெயர் சொல்லி விளிக்கலாகாது. போ:, பவான் முதலான பதங்களால் அழைத்துப் பேச வேண்டும்.

परपत्नी तु या स्त्री स्यादसम्बन्धा च योनितः।
तां ब्रूयाद् भवतीत्येवं सुभगे भगिनीति च॥

**பரபத்நீ து யா ஸ்த்ரீ ஸ்யாதஸம்பந்தா சயோநித: |**
**தாம் ப்ரூயாத் பவதீத்யேவம் சுபகே பகிநீதி ச || 129**

பிறன் மனைவியையும், சகோதரி போன்ற உறவு முறைகளற்ற மற்றப் பெண்களையும் சுபகே, பகினீ என்ற சொற்களால் விளிக்க வேண்டும். (அதாவது, பெண்ணே என்றோ, சகோதரியே என்றோ விளிக்க வேண்டும்)

मातुलाश् च पितृव्याश् च श्वशुरानृत्विजो गुरून्।
असावहमिति ब्रूयात् प्रत्युत्थाय यवीयसः॥

**மாதுலாம்ஷ்ச பித்ருவ்யாம்ஷ்ச ஷ்வசுராந்ருத்விஜோ குரூந் |**
**அஸாவஹமிதி ப்ரூயாத் ப்ரத்யுத்தாய யவீயஸ: || 130**

தாய்மாமன்மார், சிறிய தந்தைமார், பெண் கொடுத்த மாமனார்கள், யாகம் புரியும் புரோஹிதர்கள், குருமார்கள் முதலானோர் வந்தால் அவர்கள் தன்னைவிட சிறியோராயின், அவர்களை வரவேற்று தன் பெயரை மாத்திரம் கூற வேண்டும். அபிவாதனம் செய்யலாகாது.

मातृष्वसा मातुलानी श्वश्रूश्च पितृष्वसा।
सम्पूज्या गुरुपत्नीवत् समास् ता गुरुभार्यया॥

**மாத்ருஸ்வஸா மாதுலாநீ ஷ்வஷ்ரூரத பித்ருஷ்வஸா |**
**ஸம்பூஜ்யா குருபத்நீவத் ஸமாஸ்தா குருபார்யயா ||** 131

தாயுடன் பிறந்தோர், தாய்மாமன் மனைவி, மாமியார், தந்தையுடன் பிறந்த சகோதரி முதலானோர் குருபத்னிக்கு சமமானவர்கள். எனவே இவர்களை குருபத்னியைப் போல எதிர்கொண்டழைத்து அபிவாதனம் செய்ய வேண்டும்.

(பெண்களை அபிவாதனம் செய்யாமல் வணங்கினால் மட்டும் போதும் என்று முதலில் சொல்லப்பட்டது. இப்போது இப்படி கூறப்பட்டிருக்கிறது. ஆக, குருபத்னியை அபிவாதனத்தோடு வணங்க வேண்டும் என்று இதனால் சொல்லப்பட்டது.)

भ्रातुर् भार्योपसङ्ग्राह्या सवर्णाऽहन्यहन्यपि।
विप्रोष्य तूपसङ्ग्राह्या ज्ञातिसम्बन्धियोषितः॥

**ப்ராதுர்பார்யோபஸங்க்ராஹ்யா ஸவர்ணா அஹந்யஹந் யபி |**
**விப்ரோஷ்ய தூபஸங்க்ராஹ்யா ஞாதிஸம்பந்தி யோஷித: ||** 132

தன் வர்ணத்திலேயே மணம் புரிந்து கொண்டவளான அண்ணன் மனைவிக்கு தினமும் பாதவந்தனம் செய்ய வேண்டும். சிறிய தந்தையர், தாய்மாமன்மார், மாமனார், மற்றும் இவர்களது மனைவிமார்களை, அவர்கள் வெளியூர்களிலிருந்து வந்தபோது மட்டும் வணங்க வேண்டும்.

पितुर् भगिन्यां मातुश् च ज्यायस्यां च स्वसर्यपि।
मातृवद् वृत्तिमातिष्ठेन् माता ताभ्यो गरीयसी॥

**பிதுர்பகின்யாம் மாதுஷ்ச ஜ்யாயஸ்யாம் ச ஸ்வஸர்யபி |**
**மாத்ருவத்வ்ருத்தி மாதிஷ்டேந்மாதா தாப்யோ கரீயஸீ ||** 133

தந்தையுடன் பிறந்தவளிடமும், பெரிய தாயிடமும், தமக்கையிடமும், தாயிடம் காட்டுவது போன்ற கௌரவத்தைக் காட்ட வேண்டும். இவர்கள் அனைவரையும்விட தாய் பூஜிக்கத் தக்கவள்.

दशाब्दाख्यं पौरसख्यं पञ्चाब्दाख्यं कलाभृताम्।
त्र्यब्दपूर्वं श्रोत्रियाणां स्वल्पेनाऽपि स्वयोनिषु॥

**தஷாப்தாக்யம் பௌரசக்யம் பஞ்சாப்தாக்யம் கலாப்ருதாம் |**
**த்ரயப்தபூர்வம் ஷ்ரோத்ரியாணாம் ஸ்வல்பேநாபி ஸ்வயோநிஷு ||** 134

ஒரே ஊர்வாசிகளாக இருந்தால், தன்னைவிட பத்து வயது மூத்தவரோடு நட்பு பூணவேண்டும். கலைகள் கற்றவராக இருப்போர் தன்னைவிட ஐந்து வயது மூத்தவராக இருந்தால் நட்பு பூணவேண்டும். வேதம் படித்தவர் தன்னைவிட மூன்று வயது மூத்தவராக இருந்தால் நட்பு பூணவேண்டும். பங்காளிகள் சிறிது பெரியவராக இருந்தாலும் நட்பு பூணவேண்டும்.

ब्राह्मणं दशवर्षं तु शतवर्षं तु भूमिपम्।
पितापुत्रौ विजानीयाद् ब्राह्मणस्तु तयोः पिता॥

**ப்ராஹ்மணம் தஷ வர்ஷம்து ஷதவர்ஷம்து பூமிபம் |**
**பிதாபுத்ரௌ விஜாநீயாத் ப்ராஹ்மணஸ்து தயோ: பிதா || 135**

பத்து வயது பிராம்மணன், நூறு வயது க்ஷத்ரியன் இவர்களை முறையே தந்தையாகவும், மகனாகவும் கொள்ள வேண்டும். இவர்களில் பத்து வயது பிராம்மணனே தந்தையாக கொள்ளப் படுவான்.

वित्तं बन्धुर् वयः कर्म विद्या भवति पञ्चमी।
एतानि मान्यस्थानानि गरीयो यद्यदुत्तरम्॥

**வித்தம் பந்துர்வய: கர்ம வித்யா பவதி பஞ்சமீ |**
**ஏதாநி மாந்யஸ்தாநாநி கரீயோயத்ய துத்தரம் || 136**

செல்வம், பந்துமுறை, வயது, அனுஷ்டானம், கல்வி இவை போற்றத்தக்கவை. இவற்றில் ஒன்றைவிட ஒன்றை உயர்ந்ததாக எண்ண வேண்டும். அதாவது செல்வத்தைவிட உறவு முக்கியம். உறவினன் என்பதைவிட மூத்த வயதினால் ஒருவனை மேன்மையானவனாக எண்ண வேண்டும். அனுஷ்டானங்கள் விடாது செய்பவன் அவனைவிட உயர்ந்தவன். கல்விமான் அவனைவிட உயர்ந்தவன்.

पञ्चानां त्रिषु वर्णेषु भूयांसि गुणवन्ति च।
यत्र स्युः सोऽत्र मानार्हः शूद्रोऽपि दशमीं गतः॥

**பஞ்சாநாம் த்ரிஷுவர்ணேஷு பூயாம்ஸி குணவந்தி ச |**
**யத்ர ஸ்யுஸ்ஸோஅத்ர மாநார்ஹ: சூத்ரோஅபி தஷமீம் கத: || 137**

மூன்று வர்ணத்தாரில் முதலில் கூறிய ஐந்து குணங்களில் அதிக குணங்கள் கொண்டவன் உயர்ந்தவன். சூத்ரர்களில் வயது முதிர்ந்தவன் உயர்ந்தவன்.

चक्रिणो दशमीस्थस्य रोगिणो भारिणः स्त्रियाः।
स्नातकस्य च राज्ञश्च पन्था देयो वरस्य च॥

**சக்ரிணோ தஷமீஸ்தஸ்ய ரோகிணோ பாரிண: ஸ்த்ரியா: |**
**ஸ்நாதகஸ்ய ச ராக்ஞஷ்ச பந்தா தேயோ வரஸ்ய ச || 138**

*வண்டியில் ஏறியவனுக்கும், தொண்ணூறு வயது முதியவனுக்கும் நோயாளிக்கும் சுமை தூக்கி வருபவனுக்கும் ஸ்நாதகனுக்கும், மன்னனுக்கும் கல்யாண மாப்பிள்ளைக்கும் வழி விட_ வேண்டும்.*

तेषां तु समवेतानां मान्यौ स्नातकपार्थिवौ।
राजस्नातकयोश् चैव स्नातको नृपमानभाक्॥

**தேஷாம் து ஸமவேதாநாம் மாந்யௌ ஸ்நாதக பார்த்திவௌ |**
**ராஜஸ்நாதக யோஷ்சைவ ஸ்நாதகோ ந்ருபமாந பாக் || 139**

இவர்கள் அனைவரும் ஓரிடத்தில் இருந்தால் மன்னனுக்கும் ஸ்நாதகனுக்கும் முதல் கௌரவம் கொடுக்க வேண்டும். இவர்கள் இருவர் மட்டுமே இருக்கும்போது ஸ்நாதகனுக்கே முதல் கௌரவம் கொடுக்க வேண்டும்.

उपनीय तु यः शिष्यं वेदमध्यापयेद् द्विजः।
सकल्प सरहस्यं च तमाचार्यं प्रचक्षते॥

**உபநீயது யஷ்ஷிஷ்யம் வேதமத்யாவயேத்திவிஜ: |**
**ஸகல்பம் ஸரஹஸ்யம் ச தமாசார்யம் ப்ரசக்ஷதே || 140**

*உபநயனம் செய்து வைத்து வேதங்களை கல்பசூத்திரங் களோடும் உபநிஷத்துக்களோடும் அத்யயனம் செய்து வைத்தவன் 'ஆசாரியன்' எனப்படுவான்.*

एकदेशं तु वेदस्य वेदाङ्गान्यपि वा पुनः।
योऽध्यापयति वृत्त्यर्थमुपाध्यायः स उच्यते॥

**ஏகதேஷம் து வேதஸ்ய தோங்யாநபி வாபுந: |**
**யோ அத்யாபயதி வ்ருத்யர்த்தமுபாத்யஸ்ஸ உச்யதே || 141**

*வேதங்களில் சிறிது பாகத்தை அல்லது வேதாந்தங்களில் சிறிது பாகத்தை ஜீவனத்துக்காகச் சொல்லிக் கொடுப்பவன் 'உபாத்யாயன்' எனப்படுவான்.*

निषेकादीनि कर्माणि यः करोति यथाविधि।
सम्भावयति चाऽन्नेन स विप्रो गुरुरुच्यते॥

**நிஷேகாதீநி கர்மாணி ய: கரோதி யதாவிதி |**
**ஸம்பாவயதி சாந்நேந ஸ விப்ரோ குருருச்யதே || 142**

எவர் கர்ப்பாதானம் முதலான சம்ஸ்காரங்களைச் செய்து வைத்து, உணவு கொடுத்து போஷிப்பாரோ அவர் குரு எனப் படுவார்.

अग्न्याधेयं पाकयज्ञानग्निष्टोमादिकान् मखान्।
यः करोति वृतो यस्य स तस्यर्त्विगिहोच्यते॥

**அக்ந்யாதேயம் பாகயக்ஞாநக்னிஷ்டோமாதிகாந் மகாந் |**
**ய: கரோதி வ்ருதோ யஸ்ய ஸதஸ்யர்த்விகிஹோச்யதே || 143**

அக்னியாதேயம் முதலான பாக யக்ஞங்களையும், அக்னிஷ் டோமம் முதலான யக்ஞங்களையும் எவன், எவனால் வரிக்கப்பட்டு செய்து வைக்கிறானோ, அவன் அவனுக்கு 'ரித்விக்' எனப்படுவான்.

य आवृणोत्यवितथं ब्रह्मणा श्रवणावुभौ।
स माता स पिता ज्ञेयस् तं न द्रुह्येत् कदाचन॥

**ய ஆவ்ருணோத்யவிததம் ப்ரஹ்மணா ஷ்ரவணாவுபௌ |**
**ஸ மாதா ஸ பிதா ஞேயஸ்தம் நத்ருஹ்யேத் கதாசந || 144**

எவன் இரு செவிகளையும் சத்தியரூபமான வேதத்தால் நிரப்புகிறானோ, அவனே தந்தையும் தாயுமாவான். அவனுக்கு எப்போதும் துரோகம் செய்யக் கூடாது.

उपाध्यायान् दशाऽऽचार्य आचार्याणां शतं पिता।
सहस्रं तु पितॄन् माता गौरवेणाऽतिरिच्यते॥

**உபாத்யாயாந் தஷாசார்ய ஆசார்யாணாம் ஷதம் பிதா |**
**ஸஹஸ்ரம்து பித்ரூநாத்மா கௌரவேணாதி ரிச்யதே || 145**

உபாத்யாயனைவிட ஆசாரியன் பத்து மடங்கு உயர்ந்தவன். ஆசாரியனைவிட உபநயனம் முதலான சடங்குகளைச் செய்து வைத்த தந்தை நூறு மடங்கு உயர்ந்தவன். தந்தையை விட தாய் ஆயிரம் மடங்கு உயர்ந்தவள்.

उत्पादकब्रह्मदात्रोर् गरीयान् ब्रह्मदः पिता।
ब्रह्मजन्म हि विप्रस्य प्रेत्य चेह च शाश्वतम्॥

**உத்பாதக ப்ரஹ்மதாத்ரோர்கரீயாந் ப்ரஹ்மத: பிதா |**
**ப்ரஹ்ம ஜன்ம ஹி விப்ரஸ்ய ப்ரேத்ய சேஹ ச ஷாஷ்வதம் || 146**

த்விஜன்மம் என்னும் இரண்டாவது பிறப்பைக் கொடுப்பது உபநயனம். இந்த உபநயனத்தை செய்து வைக்கும் ஆசாரியர் தந்தையைவிட உயர்ந்தவர். இரண்டாவது பிறப்பு இகத்துக்கும் பரத்துக்கும் சாஸ்வதமான பிரம்ம பதத்தைத் தரும்.

कामान् माता पिता चैनं यदुत्पादयतो मिथः।
सम्भूतिं तस्य तां विद्याद् यद् योनावभिजायते॥

**காமாந் மாதாபிதா சைநம் யதுத்பாதயதோ மித: |**
**ஸம்பூதிம் தஸ்யதாம் வித்யாத்யத்யோ நாவ பிஜாய தே || 147**

பெற்றோர் காமத்தால் குழந்தையை உருவாக்குகிறார்கள். விலங்குகள் தங்கள் அவயவங்களைக் கொடுப்பது போல, பெற்றோரும் குழந்தைக்கு அவயவங்களைக் கொடுக்கிறார்கள்.

आचार्यस् त्वस्य यां जातिं विधिवद् वेदपारगः।
उत्पादयति सावित्र्या सा सत्या साऽजराऽमरा॥

**ஆசார்யஸ்த்வஸ்ய யாம் ஜாதிம் விதிவத் வேதபாரக: |**
**உத்பாதயதி ஸாவித்ர்யா ஸா ஸத்யா ஸா அஜரா அமரா || 148**

ஆசார்யர், தன் சிஷ்யனுக்கு காயத்ரியால் எந்த ஜன்மாவைக் கொடுக்கிறாரோ அதுவே பிரம்ம பதத்தை அடையக்கூடிய ஜன்மம். அழிவற்ற, மூப்பும் மரணமுமற்ற ஜன்மம். மோட்சத்தை அளிக்கக் கூடிய ஜன்மாவை அளிப்பதால் ஆசாரியரே சிரேஷ்டமானவர்.

अल्पं वा बहु वा यस्य श्रुतस्योपकरोति यः।
तमपीह गुरुं विद्याच् छ्रुतोपक्रियया तया॥

**அல்பம் வா பஹுவா யஸ்ய ஷ்ருதஸ்யோபகரோதி ய: |**
**தமபீஹ குரும் வித்யாச்ருதோபக்ரியயா தயா || 149**

கொஞ்சமோ, அதிகமோ, எவர் வேத உபதேசம் செய்கிறாரோ அவர், வேதஉபகாரமான காரியத்தைச் செய்ததினால் அவரே குரு என்று அறிய வேண்டும்.

ब्राह्मस्य जन्मनः कर्ता स्वधर्मस्य च शासिता।
बालोऽपि विप्रो वृद्धस्य पिता भवति धर्मतः॥

**ப்ராஹ்மஸ்ய ஜன்மந: கர்த்தா ஸ்வதர்மஸ்ய ச ஷாஸிதா |**
**பாலோ அபி விப்ரோ வ்ருத்தஸ்ய பிதா பவதி தர்மத: || 150**

உபநயனம் செய்து வைத்தவரும், வேதார்த்தங்களைச் சொல்லிக் கொடுத்தவரும் தன்னைவிடச் சிறியவராக இருந்தாலும் தர்மப்படி அவர் தந்தையின் ஸ்தானத்துக்குரியவர்.

अध्यापयामास पितॄन् शिशुराङ्गिरसः कविः।
पुत्रका इति होवाच ज्ञानेन परिगृह्य तान्॥

**அத்யாபயா மாஸ பித்ரூந் ஷிஷூராங்கிரஸ: கவி: |**
**புத்ரகா இதி ஹோவாச ஞானேந பரிக்ருஹ்ய தாந் || 151**

அங்கிரஸன் என்ற வித்வான் தன் சிறிய தந்தை முதலானோருக்கு வேதம் கற்பிக்கும்போது, அவர்கள் வயதில் பெரியோராயினும் தனது ஞானத்தினால் தனக்கு சீடர்களே என்றறிந்தான். எனவே 'பிள்ளைகளே' என்று விளித்தான்.

ते तमर्थमपृच्छन्त देवानागतमन्यवः।
देवाश् चैतान् समेत्योचुर् न्याय्यं वः शिशुरुक्तवान्॥

**தே தமர்த்தமப்ருச்சந்த தேவாநாகத மந்யவ: |**
**தேவாஷ்சைதாந் ஸமேத்யோ சுர்ந்யாயம் வஷ்ஷிஷூருக்தவாந் || 152**

இதனால் கோபம் கொண்ட அவனது பித்ருக்கள் இது விஷயமாக தேவர்களிடம் முறையிட்டார்கள். தேவர்கள் அங்கிரஸன் 'பிள்ளைகளே' என்று அழைத்த முறை சரியே என்று கூறினார்கள்.

अज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः।
अज्ञं हि बालमित्याहुः पितेत्येव तु मन्त्रदम्॥

**அஞ்ஞோ பவதிவை பால: பிதா பவதி மந்த்ரத: |**
**அஞ்ஞம் ஹி பாலமித்யாஹு: பிதேத்யேவ து மந்த்ரதம் || 153**

ஞானமறியாதவன் சிறுவனேயாவான். மந்திரமும் வேதமும் அறிந்தவனே தந்தையாவான். வேதமறியாதவனை வயதில் மூத்தோனாயினும் சிறியோன் என்றே கூற வேண்டும். வேதாத்யயனம் செய்பவனை தந்தை என்று கூறுவார்கள்.

न हायनैर् न पलितैर् न वित्तेन न बन्धुभिः।
ऋषयश् चक्रिरे धर्मं योऽनूचानः स नो महान्॥

**ந ஹாயநைர்ந பலிதைர்ந வித்தேந நபந்துபி: |**
**ருஷயஷ்சக்ரிரே தர்மம் யோஅநூ சாநஸ்ஸ நோ மஹாந் || 154**

வயதில் பெரியவன் என்பதாலோ, முடி நரைத்திருப்பதாலோ, பணக்காரன் என்பதாலோ, உறவினன் என்பதாலோ ஒருவன் உயர்ந்தவன் என்பது இல்லை. வேதம் முற்றும் அறிந்தவனே உயர்ந்தவன் என்று ரிஷிகள் விதித்துள்ளனர்.

विप्राणां ज्ञानतो ज्यैष्ठ्यं क्षत्रियाणां तु वीर्यतः।
वैश्यानां धान्यधनतः शूद्राणामेव जन्मतः॥

**விப்ராணாம் ஞானதோ ஜ்யைஷ்ட்யம் க்ஷத்ரியாணாம் து வீர்யத: |**
**வைஷ்யாநாம் தான்யதனதஷ்ஷூத்ராணாமேவ ஜந்மத: || 155**

பிராம்மணர்களுக்கு ஞானத்தால் உயர்வு ஏற்படும். க்ஷத்ரியர்களுக்கு வீர்யத்தால் உயர்வு ஏற்படும். வைசியர்களுக்கு

தனதானியங்களின் பெருக்கால் உயர்வு ஏற்படும். சூத்திரர்களுக்கு வயது முதிர்ச்சியினால் உயர்வு ஏற்படும்.

न तेन वृद्धो भवति येनाऽस्य पलितं शिरः ।
यो वै युवाऽप्यधीयानस् तं देवाः स्थविरं विदुः ॥

**நதேந வ்ருத்தோ பவதி யேநாஸ்ய பலிதம் ஷிர: |**
**யோவை யுவா அப்யதீயாநஸ்தம் தேவாஸ்த்ஸவிரம் விது: ||** 156

தலை நரைத்ததால் பிராம்மணன் வயதானவன் எனப்பட மாட்டான். சிறிய வயதினனாக இருந்தாலும் வேதாத்யயனம் செய்தவன் எவனோ அவனையே வயது முதிர்ந்தவனாகக் கொள்ள வேண்டும் என்று தேவர்கள் கூறினார்கள்.

यथा काष्ठमयो हस्ती यथा चर्ममयो मृगः ।
यश्च विप्रोऽनधीयानस् त्रयस् ते नाम बिभ्रति ॥

**யதா காஷ்டமயோ ஹஸ்தீ யதா சர்மமயோ ம்ருக: |**
**யஷ்ச விப்ரோ அநதீயாநஸ்த்ரயஸ்தே நாம பிப்ரதி ||** 157

மரத்தாலான யானையும், தோலாலான மானும், அத்யயனம் செய்யாத பிராம்மணனும் பெயரளவுக்கு யானை, மான், பிராம்மணன் என்று கூறிக் கொள்ளலாமே அன்றி, பெயருக்குத் தக்கபடியான காரியங்கள் செய்யப் போவதில்லை.

यथा षण्ढोऽफलः स्त्रीषु यथा गौर् गवि चाऽफला।
यथा चाऽज्ञेऽफलं दानं तथा विप्रोऽनृचोऽफलः ॥

**யதா ஷண்டோ அபல: ஸ்த்ரீஷு யதா கௌர்கவி சாபலா |**
**யதா சாஞ்ஞே அபலம் தானம் ததா விப்ரோ அந்ருசோ அபல: ||** 158

நபும்சகன் பெண்கள் விஷயத்தில் எவ்வாறு பயனற்றவனோ, பசுவிடம் பசு எவ்வாறு பயனற்றதோ, யோக்கியனல்லாதவனுக்கு கொடுத்த தானம் எவ்வாறு பயனற்றதோ, அவ்வாறே அத்யயனம் செய்யாத பிராம்மணனும் பயனற்றவனேயாவான்.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोऽनुशासनम्।
वाक् चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता ॥

**அஹிம்ஸயைவ பூதாநாம் கார்யம் ஷ்ரேயோ அநுஷாஸநம் |**
**வாக்சைவ மதுரா ஷ்நக்ஷ்ணா ப்ரயோஜ்யா தர்மமிச்சதா ||** 159

தர்மமறிந்த ஆசாரியன் சிஷ்யர்களுக்கு கொடிய தண்டனை விதிக்காமல், கருணையோடு உயர்ந்த விஷயங்களைப் போதிக்க வேண்டும். இனிமையோடு பேச வேண்டும்.

यस्य वाङ्मनसी शुद्धे सम्यग् गुप्ते च सर्वदा।
स वै सर्वमवाप्नोति वेदान्तोपगतं फलम्॥

**யஸ்ய வாக்மநஸீஷுத்தே ஸம்யகுப்தே ச ஸர்வதா |**
**ஸ வை ஸர்வமவாப்நோதி வேதாந்தோபகதம் பலம் || 160**

*பொய் கூறாதவனாக, நிர்மலமான மனத்தோடு இருப்பவன் வேதத்தில் கூறப்பட்ட பலன்கள் அனைத்தையும் அடைவான்.*

नाऽरुन्तुदः स्यादार्तोऽपि न परद्रोहकर्मधीः।
ययाऽस्योद्विजते वाचा नाऽलोक्यां तामुदीरयेत्॥

**நாருந்து தஸ் ஸ்யாத்ஆர்த்தோ அபி நபரத்ரோ ஹகர்ம தீ: |**
**யயாஸ்யோத்விஜதே வாசா நாலோக்யாம் தாமுதீரயேத் || 161**

*தான் துயருற்றபோதும் பிறர் மனம் நோகப் பேசலாகாது. பிறருக்குத் துரோகம் விளைவிக்கக்கூடிய காரியத்தை எண்ணலாகாது. எந்த வார்த்தையைக் கூறுவதால் மற்றவர்களுக்கு மனத்தில் பயம் தோன்றுமோ, அத்தகைய வார்த்தையைக் கூறலாகாது.*

सम्मानाद् ब्राह्मणो नित्यमुद्विजेत विषादिव।
अमृतस्येव चाऽऽकाङ्क्षेदवमानस्य सर्वदा॥

**ஸம்மாநாத் ப்ராஹ்மணோ நித்யமுத்விஜேத விஷாதிவ |**
**அம்ருதஸ்யேவ சாகாங்க்ஷேதவமாநஸ்ய ஸர்வதா || 162**

*பிறர் தன்னைப் போற்றுவதை பிராம்மணன் விஷமாக எண்ணி ஒதுக்க வேண்டும். பிறர் தன்னை அவமானப்படுத்தினால் அதை அமிர்தம் போல் எண்ணி சகித்துக் கொள்ள வேண்டும்.*

सुखं ह्यवमतः शेते सुखं च प्रतिबुध्यते।
सुखं चरति लोकेऽस्मिन्नवमन्ता विनश्यति॥

**ஸுகம் ஹ்யவமத்ஸ்ஷேதே ஸுகம் ச ப்ரதிபுத்யதே |**
**ஸுகம் சரதி லோகே அஸ்மிந்நவமந்தா விநஷ்யதி || 163**

*பிறர் தன்னை அவமானப்படுத்தினாலும், அதைப் பொறுத்துக் கொண்டு பகை பாராட்டாமலிருப்பவன் சுகமாக உறங்குவான்; சுகமாக விழித்தெழுவான்; சுகமாக சஞ்சரிப்பான். அவமானப் படுத்தியவனோ, அந்தப் பாபத்தால் நாசத்தையடைவான்.*

अनेन क्रमयोगेन संस्कृताऽऽत्मा द्विजः शनैः।
गुरौ वसन् सञ्चिनुयाद् ब्रह्माऽधिगमिकं तपः॥

**அநேந க்ரமயோகேந ஸம்ஸ்க்ருதாத்மா த்விஜஷ்ஷனை: |**
**குரௌ வஸந்ஸஞ்சிநுயாத் ப்ரஹ்மாதி கமிகம் தப: || 164**

*த்விஜன், இதுவரை சொல்லப்பட்டதை யெல்லாம், மனத்தில் பதிய வைத்துக் கொண்டவனாக, குருவிடம் வசித்தபடி இதுவரை*

கூறியதும், இனி கூறப் போவதுமான நியமங்களை கடைப்பிடித்தபடி வேதங்களைப் படிக்க வேண்டும்.

तपोविशेषैर् विविधैर् व्रतैश्च विधिचोदितैः।
वेदः कृत्स्नोऽधिगन्तव्यः सरहस्यो द्विजन्मना॥

**தபோ விஷேசைர் விவிதைர் வ்ருத்தைஷ்ச விதிசோதிதை: |**
**வேத: க்ருத்ஸ்நோ அதிகந்தவ்யஸ்ஸரஹஸ்யோ த்விஜந்மநா || 165**

திவிஜன் முழுமையான நியமங்களோடு, கூறப்பட்ட விரதங்களைக் கடைப்பிடிப்பவனாக, வேதங்களையும் உபநிஷத்துக் களையும் கற்க வேண்டும்.

वेदमेव सदाऽभ्यस्येत् तपस् तप्स्यन् द्विजोत्तमः।
वेदाऽभ्यासो हि विप्रस्य तपः परमिहोच्यते॥

**வேதமேவ ஸதாப்யஸ்யேத்தபஸ்தப்ஸ்யந் த்விஜோத்தம: |**
**வேதாப்யாஸோ ஹி விப்ரஸ்ய தப: பரமிஹோச்யதே || 166**

தவம் செய்ய எண்ணும் உத்தமனான திவிஜன் வேதத்தை எப்போதும் அத்யயனம் செய்ய வேண்டும். பிராம்மணனுக்கு வேதமோதுதலே இவ்வுலகில் முக்கியத்துவம் என்று முனிவர்கள் கூறியுள்ளனர்.

आ हैव स नखाग्रेभ्यः परमं तप्यते तपः।
यः स्रग्व्यपि द्विजोऽधीते स्वाध्यायं शक्तितोऽन्वहम्॥

**ஆஹைவ ஸ நகாக்ரேப்ய: பரமம் தப்யதே தப: |**
**ய: ஸ்ரக்வ்யபி த்விஜோ அதீதே ஸ்வாத்யாயம் ஷக்திதோ அந்வஹம் || 167**

பிரம்மசரிய விரதத்தை முடித்த பிறகும், தினமும் வேதமோதுபவன் தலை முதல் கால் நகங்கள் வரையும் தவம் செய்தவனாகிறான்.

योऽनधीत्य द्विजो वेदमन्यत्र कुरुते श्रमम्।
स जीवन्नेव शूद्रत्वमाशु गच्छति साऽन्वयः॥

**யோஅநதீத்ய த்விஜோ வேதமந்யத்ர குருதே ஷ்ரமம் |**
**ஸ ஜீவந்நேவ ஷூத்ரத்வமாஷு கச்சதி ஸாந்வய: || 168**

வேதமோதாமல், மற்ற சாஸ்திரங்களைப் படித்துக் கொண்டிருப் பவன், தான் வாழும்போதே சூத்ரனாகி விடுகிறான். மேலும் தன் வம்சத்தாரையும் சூத்ரர்களாக்குகிறான்.

मातुरग्रेऽधिजननं द्वितीयं मौञ्जिबन्धने।
तृतीयं यज्ञदीक्षायां द्विजस्य श्रुतिचोदनात्॥

**மாதுரக்ரேஅதி ஜநநம் த்விதீயம் மௌஞ்ஜிபந்தனே |**
**த்ருதீயம் யக்ஞதீக்ஷாயாம் த்விஜஸ்ய ஷ்ருதிசோத நாத் || 169**

திவிஜனுக்கு மூன்று பிறப்புகள். தாயிடமிருந்து பிறப்பது முதல் பிறப்பு. உபநயனத்தால் இரண்டாவது பிறப்பு ஏற்படுகிறது. யக்ஞத்தால் மூன்றாவது பிறப்பு ஏற்படுகிறது.

तत्र यद् ब्रह्मजन्माऽस्य मौञ्जीबन्धनचिह्नितम्।
तत्राऽस्य माता सावित्री पिता त्वाचार्य उच्यते॥

**தத்ர யத்ப்ரஹ்மஜன்மாஸ்ய மௌஞ்ஜீபந்தந சிஹ்நிதம் |**
**தத்ராஸ்ய மாதா ஸாவித்ரீ பிதாது ஆசார்ய உச்யதே || 170**

இவற்றில் பிரஹ்ம பதமடைவதற்கான பிறப்புக்கு மவுஞ்ஜீ பந்தனமே அடையாளம். அதாவது பூணூலும், முஞ்சிப்புல்லாலான அரைஞாணும், தண்டமும் அடையாளங்களாகின்றன. இந்த திவிஜனுக்கு சாவித்ரீ தேவியே தாயாகிறாள். ஆசார்யனே தந்தை யாகிறான்.

वेदप्रदानादाचार्यं पितरं परिचक्षते।
न ह्यस्मिन् युज्यते कर्म किञ्चिदामौञ्जिबन्धनात्॥

**வேத ப்ரதாநாதாசார்யம் பிதரம் பரிசக்ஷதே |**
**நஹ்யஸ்மிந் யுஜ்யதே கா்ம கிஞ்சிதா மௌஞ்ஜிபந்தநாத் || 171**

வேதத்தை அளிப்பதனால் ஆசார்யனே தந்தை என்று கூறுகிறார்கள். மௌஞ்ஜீ பந்தனத்துக்கு முன்பு எந்த சாஸ்த்ர சடங்குகளைச் செய்வதற்கும் அதிகாரமில்லை.

नाऽभिव्याहारयेद् ब्रह्म स्वधानिनयनादृते।
शूद्रेण हि समस् तावद् यावद् वेदे न जायते॥

**நாபிவ்யாஹாரயேத் ப்ரஹ்ம ஸ்வதா நிநயநாத்ருதே |**
**ஷூத்ரேண ஹி ஸமஸ்தாவத்யாவத் வேதேந ஜாயதே || 172**

உபநயனமாவதற்கு முன்பு சிராத்த காலத்தில் சொல்ல வேண்டிய மந்திரங்களைக் கூறலாம். மற்றப்படி எந்த மந்திரமும் கூறக்கூடாது. உபநயனமாகும் வரை பிராம்மணன் சூத்ரனுக்கு சமமானவனே.

कृतोपनयनस्याऽस्य व्रताऽऽदेशनमिष्यते।
ब्रह्मणो ग्रहणं चैव क्रमेण विधिपूर्वकम्॥

**க்ருதோபநய நஸ்யாஸ்ய வ்ரதாதேஷ நமிஷ்யதே |**
**ப்ரஹ்மணோ க்ரஹணம் சைவ க்ரமேண விதிபூர்வகம் || 173**

உபநயனம் ஆனபிறகே சாஸ்த்ரோக்தமான விரதங்களை மேற்கொள்ள வேண்டும். வேதங்களைக் கற்க வேண்டும்.

यद् यस्य विहितं चर्म यत् सूत्रं या च मेखला।
यो दण्डो यच्च वसनं तत्तदस्य व्रतेष्वपि॥

**யத்யஸ்ய விஹிதம் கா்ம யத்ஸூத்ரம் யா ச மேகலா |**
**யோ தண்டோ யச்ச வஸநம் தத்ததஸ்ய வ்ரதேஷ்வபி ||** 174

மேலாடை, அரைஞாண், பூணூல், தண்டம், வஸ்திரம் முதலானவைகளை தன்னுடைய வர்ண முறைப்படி உபநயன காலத்தில் பிரம்மசாரி அணிய வேண்டும். அதே போன்று கோதானம் முதலான விரத காலங்களிலும் அவற்றை புதியனவாக அணிய வேண்டும்.

सेवेतेमांस् तु नियमान् ब्रह्मचारी गुरौ वसन्।
सन्नियम्येन्द्रियग्रामं तपोवृद्ध्यर्थमात्मनः॥

**ஸேவேதேமாம்ஸ்து நியமாந் ப்ரம்மசாரீ குரௌ வஸந் |**
**ஸந்நியம்யேந்த்ரி யக்ராமம் தபோவ்ருத் யர்த்தமாத்மந: ||** 175

பிரம்மசாரி, குருகுலத்தில் வசித்தபடி, இந்திரியங்களை நன்கு அடக்கியவனாக தன்னுடைய தவவிருத்திக்காக இந்த நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

नित्यं स्नात्वा शुचिः कुर्याद् देवर्षिपितृतर्पणम्।
देवताऽभ्यर्चनं चैव समिदाधानमेव च॥

**நித்யம் ஸ்நாத்வா ஷுசி: குர்யாத் தேவர்ஷிபித்ரு தர்பணம் |**
**தேவதாப்யர்சநம் சைவ ஸமிதாதாநமேவச ||** 176

பிரம்மச்சாரி தினமும் நீராடி தூய்மையானவனாகி தேவரிஷி, பித்ரு தர்ப்பணங்களைக் கொடுக்க வேண்டும். பிறகு தெய்வ பூஜையை செய்ய வேண்டும். சமிதா தானம் செய்ய வேண்டும்.

वर्जयेन् मधु मांसं च गन्धं माल्यं रसान् स्त्रियः।
शुक्तानि यानि सर्वाणि प्राणिनां चैव हिंसनम्॥

**வர்ஜயேந்மதுமாம்ஸம் ச கந்தம் மால்யம் ரஸாந் ஸ்த்ரிய: |**
**ஷுக்தாநி யாநி ஸர்வாணி ப்ராணிநாம் சைவ ஹிம்ஸநம் ||** 177

பிரம்மச்சாரி, தேன் மாமிசம் முதலானவைகளை உண்ணலாகாது. சந்தனம் முதலான வாசனை திரவியங்களைப் பூசிக் கொள்ளலாகாது. மலர்மாலைகளை அணியலாகாது. பெண்களுடன் தொடர்பு கூடாது. புளிக்க வைக்கப்பட்டவைகளை, ரசங்களை

இவ்வாறான எவற்றையும் சாப்பிடக் கூடாது. உயிர்களைக் கொல்லக்கூடாது.

अभ्यङ्गमञ्जनं चाऽक्ष्णोरुपानच्छत्रधारणम्।
कामं क्रोधं च लोभं च नर्तनं गीतवादनम्॥

**அப்யங்கமஞ்சனம் சாஹ்ணோரு பாநச் சத்ரதாரணம் |**
**காமம் க்ரோதம்ச லோபம் ச நர்தநம் கீதவாதநம் ||** 178

எண்ணெய் தேய்த்துக் குளித்தல், கண்ணுக்கு மையிடுதல், காலணிகள் அணிதல், குடை பிடித்துக் கொள்ளல், காமம், குரோதம், லோபம், நடனம், பாட்டு, வாத்தியம் வாசித்தல் - இவையனைத்தும் விட வேண்டியவை.

द्यूतं च जनवादं च परिवादं तथाऽनृतम्।
स्त्रीणां च प्रेक्षणाऽऽलम्भमुपघातं परस्य च॥

**த்யூதம் ச ஜநவாதம் ச பரிவாதம் ததாந்ருதம் |**
**ஸ்த்ரீணாம் ச ப்ரேக்ஷணாலம் பமுபகாதம் பரஸ்யச ||** 179

சூதாட்டம், பிறருடன் தேவையின்றி வாதம் புரிந்து கொண்டிருத்தல், வம்புப் பேச்சு, பிறரை நிந்தித்தல், பொய் பேசுதல், பெண்களை ஆசையோடு பார்ப்பது, அணைப்பது, பிறர்க்குத் தீங்கிழைப்பது - இவையனைத்தும் செய்யக் கூடாதவை.

एकः शयीत सर्वत्र न रेतः स्कन्दयेत् क्वचित्।
कामाद् धि स्कन्दयन् रेतो हिनस्ति व्रतमात्मनः॥

**ஏகஷ்ஷயீத ஸர்வத்ர நரேத: ஸ்கந்தயேத் க்வசித் |**
**காமாத்தி ஸ்கந்தயந் ரேதோ ஹிநஸ்தி வ்ரதமாத்மந: ||** 180

எங்கும் தனியாகவே படுக்க வேண்டும். காமத்தால் ரேதஸை விடுபவன் பிரம்மசரிய விரதத்தை இழந்தவனாகிறான். இவ்வாறு பிரம்மசரிய விரதத்தை இழந்தவன் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்.

स्वप्ने सिक्त्वा ब्रह्मचारी द्विजः शुक्रमकामतः।
स्नात्वाऽर्कमर्चयित्वा त्रिः पुनर् मामित्यृच जपेत्॥

**ஸ்வப்நே ஸிக்த்வா ப்ரஹ்மசாரீ த்விஜஷ்ஷுக்ரமகாமத: |**
**ஸ்நாத்வா அர்க்கமர்ச்சயித்வா த்ரி: புநர்மா மித்ய்ருசம் ஜபேத் ||** 181

காம எண்ணம் இல்லாமல் கனவின் மூலமாக ரேதஸ் ஸ்கலிதம் நேருமாயின், மறுநாள் காலையில் நீராடி, சூரிய பகவானைப் பூஜித்து, 'புனர்மா' என்னும் ரிக்கை மூன்று முறை ஜபிக்க வேண்டும்.

उदकुम्भं सुमनसो गोशकृन्मृत्तिकाकुशान्।
आहरेद् यावदर्थानि भैक्षं चाऽहरहश् चरेत्॥

**உதகும்பம் சுமநஸோ கோஷக்ருந் ம்ருத்திகா குஷாந் |**
**ஆஹரேத்யாவதர்த்தாநி பைக்ஷ்யம் சாஹரஹஷ்சரேத் ||** 182

தண்ணீர், பூஜைக்குத் தேவையான மலர்கள், கோமயம், மண், தர்ப்பை முதலானவைகளையும் குருவுக்குத் தேவையானவை களையும் கொண்டு வர வேண்டும். தினமும் பிட்சைக்குச் செல்ல வேண்டும்.

वेदयज्ञैरहीनानां प्रशस्तानां स्वकर्मसु।
ब्रह्मचार्याहरेद् भैक्षं गृहेभ्यः प्रयतोऽन्वहम्॥

**தேவயக்ஞை ரஹீநாநாம் ப்ரஷஸ்தாநாம் ஸ்வகர்மசு |**
**ப்ரஹ்ம சர்யாஹரேத் பைக்ஷம் க்ருஹேப்ய: ப்ரயதோ அந்வஹம் ||** 183

நீராடி பரிசுத்தனாகி பிட்சைக்குக் கிளம்ப வேண்டும். வேதாத் யயனம், பஞ்ச மகா யக்ஞங்கள் முதலானவற்றை செய்பவர்களான இல்லறத்தாரின் இல்லங்களிலிருந்து பிட்சையைப் பெற்று வர வேண்டும்.

गुरोः कुले न भिक्षेत न ज्ञातिकुलबन्धुषु।
अलाभे त्वन्यगेहानां पूर्वंपूर्वं विवर्जयेत्॥

**குரோ: குலே ந பிக்ஷேத ந ஞாதிகுலபந்து ஷு |**
**அலாபேத்வந்யகேஹாநாம் பூர்வம் பூர்வம் விஸர்ஜயேத் ||** 184

குருகுலத்திலும், குருவின் தாய பாகத்தார் உறவினர் இல்லங்களிலும் பிட்சைக்குச் செல்லலாகாது. வேறு வழியில்லாத போது குருவின் உறவினர் இல்லத்தில் பிட்சை ஏற்கச் செல்லலாம். அதற்கும் வழி இல்லாதபோது குருவின் தாயபாகத்தார் (பங்காளிகள்) இல்லங்களுக்குச் செல்லலாம். அதற்கும் வழி இல்லாதபோது குருகுலத்திலேயே பிட்சாடனம் செய்யலாம்.

सर्वं वाऽपि चरेद् ग्रामं पूर्वोक्तानामसम्भवे।
नियम्य प्रयतो वाचमभिशस्तांस् तु वर्जयेत्॥

**ஸர்வம் வாபி சரேத் க்ராமம் பூர்வோக்தா நாமஸம்பவே |**
**நியம்ய ப்ரயதோ வாசபிஷஸ்தாம்ஸ்து வர்ஜயேத் ||** 185

முன்னர் கூறியவாறு நல்ல ஆசார ஒழுக்கங்கள் நிறைந்த சான்றோர் இல்லங்கள் இல்லாதபோது, பரிசுத்தனாகவும், இந்திரியங்களை அடக்கியவனாகவும் கிராமத்துக்குச் சென்று மௌனமாக பிட்சாடனம் செய்ய வேண்டும். அங்கும் மிகுந்த பாபிகளின் இல்லங்களுக்கு பிட்சை ஏற்கச் செல்லலாகாது.

**दूराదाहृत्य समिधः सन्निदध्याद् विहायसि।**
**सायम्प्रातश्च जुहुयात् ताभिरग्निमतन्द्रितः॥**

**தூராதாஹ்ருத்ய ஸமித: ஸந்நிதத்யா த்விஹாயஸி |**
**ஸாயம் ப்ராதஷ்ச ஜுஹுயாத் தாபிரக்நி மதந்த்ரித: ||** 186

*வனத்திலிருந்து சமித்துக்களையும் தர்ப்பைகளையும் கொண்டு வர வேண்டும். அவற்றினை வெற்று நிலத்தில் போடாமல் எதன் மீதாவது வைத்து நன்கு உலர்த்த வேண்டும். அவற்றைக் கொண்டு காலையும் மாலையும் சமிதா தானம் செய்ய வேண்டும்.*

*(சமிதா தானம் என்பது அக்னியை உபாசிக்கின்ற சிறிய கிரியை. இதை உபநயனமானவுடன் ஆரம்பிக்க வேண்டும். திருமணம் நடக்கும் வரை தினமும் விடாது செய்ய வேண்டும். சமிதா தானம் ஒரு நாள் செய்யாவிடில், அவனது ஆயுளில் ஒரு நாள் குறையும். எத்தனை நாட்கள் செய்யவில்லையோ அத்தனை நாட்களும் ஆயுள் குறையும்.*

*(நித்தியம் விடாது சமிதா தானம் செய்தவனுக்கு ஆயுள், ஆரோக்கியம், புகழ், புத்தி, தனம், நற்சந்ததி முதலான அனைத்தும் கிட்டும்.)*

**अकृत्वा भैक्षचरणमसमिध्य च पावकम्।**
**अनातुरः सप्तरात्रमवकीर्णिव्रतं चरेत्॥**

**அக்ருத்வா பைக்ஷசரண மஸமித்ய ச பாவகம் |**
**அநாதுரஸ்ஸப்த ராத்ரமவகீர்ணி வ்ரதம் சரேத் ||** 187

*தேக அசௌகர்யத்தால் பிட்சான்னம் சாப்பிடாமல், காலை மாலை சமிதா தானம் செய்யாமல் ஏழு இரவுகள் கழித்தவன் அவகீர்ண பிராயச்சித்தம் செய்ய வேண்டும்.*

**भैक्षेण वर्तयेन् नित्यं नैकान्नादी भवेद् व्रती।**
**भैक्षेण व्रतिनो वृत्तिरुपवाससमा स्मृता॥**

**பைக்ஷேண வர்தயேந்நித்யம் நைகாந்நாதீ பவேத்வரதீ |**
**பைக்ஷேண வ்ரதிநோ வ்ருத்தி ருபவாஸஸமா ஸ்ம்ருதா ||** 188

*பிரம்மசாரி, தினமும் ஒரே இல்லத்தில் பிச்சை யெடுத்து வந்து உண்ணலாகாது. வேறு வேறு இல்லங்களுக்குச் செல்ல வேண்டும். இவ்வாறு பிட்சான்னம் சாப்பிட்டு பிரம்மசாரி இருப்பதை, உபவாசத்துக்கு நிகரானதாக சான்றோர் கூறுவர்.*

व्रतवद् देवदैवत्ये पित्र्ये कर्मण्यथर्षिवत्।
काममभ्यर्थितोऽश्नीयाद् व्रतमस्य न लुप्यते॥

**வ்ரதவத் தேவ தைவத்யே பித்ர்யே கர்மண் யதர்ஷிவத் |**
**காமமப்யர்திதோ அஷ்நீயாத்வ்ரதமஸ்ய நலுப்யதே || 189**

வேள்வியின் போதும், சிராத்தத்தின் போதும் அழைக்கப்படும் பிரம்மசாரி, தனது விரதத்துக்கு பங்கம் ஏற்படாமல், தான் சாப்பிடக்கூடாதவற்றைத் தவிர்த்து மற்றபடி உண்ணலாம். இதனால் விரதபங்கம் ஏற்படாது.

ब्राह्मणस्यैव कर्मैतदुपदिष्टं मनीषिभिः।
राजन्यवैश्ययोस्त्वेवं नैतत् कर्म विधीयते॥

**ப்ராஹ்மணஸ்த்யைவ கர்மைதது பதிஷ்டம் மநீஷிபி: |**
**ராஜந்ய வைஷ்யயோ ஸ்த்வேவம் நைதத்கர்ம விதீயதே || 190**

ஒரே இல்லத்தில் பிட்சாடனம் ஏற்று உண்பது கூடாது என்பது பிராம்மண பிரம்மசாரிக்கே கண்டிப்பாக விதிக்கப்பட்ட விதி. மற்றபடி க்ஷத்ரிய வைசிய பிரம்மசாரிகளுக்கு அல்ல என்று சான்றோர் கூறுவர்.

चोदितो गुरुणा नित्यमप्रचोदित एव वा।
कुर्यादध्ययने यत्नमाचार्यस्य हितेषु च॥

**சோதிதோ குருணா நித்யமப்ரசோதித ஏவ வா |**
**குர்யாதத்யயநே யத்நமாசார்யஸ்ய ஹி தேஷு ச || 191**

குரு சொன்னாலும் சொல்லாவிட்டாலும் தினமும் வேதாத்யயனம் செய்ய வேண்டும். குருவுக்குத் தேவையான பணிவிடைகளைச் செய்ய வேண்டும்.

शरीरं चैव वाचं च बुद्धीन्द्रियमनांसि च।
नियम्य प्राञ्जलिस् तिष्ठेद् वीक्षमाणो गुरोर् मुखम्॥

**ஷரீரம் சைவ வாசம் ச புத்தீந்த்ரிய மநாம்ஸி ச |**
**நியம்ய ப்ரஞ்ஜலிஸ்திஷ்டே த்வீஹ மாணோ குரோர் முகம் || 192**

உடல், புத்தி, இந்திரியங்கள், மனம் இவைகளைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்தவனாக, குரு எந்த நேரம் எது கூறுவாரோ என்று அவரது முகத்தையே பார்த்தபடி நிற்க வேண்டும்.

नित्यमुद्धृतपाणिः स्यात् साध्वाचारः सुसंयतः।
आस्यतामिति चोक्तः सन्नासीताऽभिमुख गुरोः॥

**நித்யமுத் த்ருத பாணிஸ்யாத் ஸாத்வாசாரஸ்ஸுஸம்யத: |**
**ஆஸ்யதாமிதி சோக்தஸ்ஸந்நா ஸீதாபி முகம் குரோ: ||** 193

வஸ்திரத்தால் உடலை மறைத்து, தனது வலது தோள் வெளியே தெரியும் படியாக மேலாடை போர்த்துக் கொண்டு தூய்மை யானவனாக, குரு உட்காரச் சொன்ன பிறகு அவரெதிரே அமர வேண்டும்.

हीनाऽन्नवस्त्रवेषः स्यात् सर्वदा गुरुसन्निधौ।
उत्तिष्ठेत् प्रथमं चाऽस्य चरमं चैव संविशेत्॥

**ஹீநாந்ந வஸ்த்ரவேஷஸ் ஸ்யாத்ஸர்வதா குருஸந்நிதௌ |**
**உத்திஷ்டேத்ப்ரதமம் சாஸ்ய சரமம் சைவ ஸம்விஷேத் ||** 194

குறைவான சாப்பாடு, சாதாரண ஆடை அலங்காரங்களுடன் இருக்க வேண்டும். குருவுக்கு முன்பாகத் துயிலெழ வேண்டும். அவர் உறங்கியபின், தான் உறங்கச் செல்ல வேண்டும்.

प्रतिश्रवणसम्भाषे शयानो न समाचरेत्।
नाऽऽसीनो न च भुञ्जानो न तिष्ठन् न पराङ्मुखः॥

**ப்ரதிஷ்ரவணநஸம்பாஷே ஷயாநோ நஸமாசரேத் |**
**நாஸீநோ ந ச புஞ்ஜாநோ ந திஷ்டந்ந பராங்முக: ||** 195

படுத்தபடியோ, உட்கார்ந்து கொண்டோ, சாப்பிட்டுக் கொண்டோ, பாரா முகமாகவோ குருவின் சொல்லுக்குப் பதிலளிக்கக் கூடாது.

आसीनस्य स्थितः कुर्यादभिगच्छंस् तु तिष्ठतः।
प्रत्युद्गम्य त्वाव्रजतः पश्चाद् धावंस् तु धावतः॥

**ஆஸீநஸ்ய ஸ்தித: குர்யாதபிகச்ச ம்ஸ்து திஷ்டத: |**
**ப்ரத்யுத்கம்ய த்வாவ்ரஜத: பஷ்சாத் தாவம்ஸ்து தாவத: ||** 196

குரு ஆசனத்தில் அமர்ந்து கொண்டு கட்டளையிட்டால் சிஷ்யன் நின்று கொண்டும், நின்றபடி கட்டளையிட்டால் எதிரே சென்றும், நடந்து வந்தபடியே கட்டளையிட்டால் எதிர்கொண்டு சென்றும், விரைந்தபடியே கட்டளையிட்டால் தான் ஓடிச் சென்று அவரைப் பின்பற்றியபடியும், அவர் கட்டளைப்படி செய்வதோ, பதிலளிப்பதோ வேண்டும்.

पराङ्मुखस्याऽभिमुखो दूरस्थस्यैत्य चाऽन्तिकम्।
प्रणम्य तु शयानस्य निदेशे चैव तिष्ठतः॥

**பராங்முகஸ்யாபிமுகோ தூரஸ்தஸ்தைத்ய சாந்திகம் |**
**ப்ரணம்ய து ஷயாநஸ்ய நிதேஷே சைவ திஷ்டத: || 197**

குரு எங்கோ கவனமாக இருக்கும்போது தான் எதிரே சென்றும், தூரத்தில் இருக்கும்போது அருகில் சென்றும், படுத்துக் கொண்டிருக்கும் போது அவரை வணங்கியபடியும், நின்று கொண்டிருக்கும்போது, தானும் சற்றுத் தள்ளி நின்று கொண்டும் குருவின் கட்டளையை நிறைவேற்றவோ, பதிலளிக்கவோ வேண்டும்.

नीचं शय्याऽऽसनं चाऽस्य सर्वदा गुरुसन्निधौ।
गुरोस् तु चक्षुर्विषये न यथेष्टासनो भवेत्॥

**நீசம்ஷய்யாஸநம் சாஸ்ய ஸர்வதா குரு சந்நிதௌ |**
**குரோஸ்து சக்ஷுர்விஷயே ந யதேஷ்டாஸநோ பவேத் || 198**

குருவின் படுக்கை, ஆசனம் இவற்றைவிட சிஷ்யனுடையவை தாழ்ந்திருக்க வேண்டும். குருவின் கண்ணெதிரில் தன் இஷ்டப்படி அமரக் கூடாது.

नोदाहरेदस्य नाम परोक्षमपि केवलम्।
न चैवाऽस्याऽनुकुर्वीत गतिभाषितचेष्टितम्॥

**நோதாஹரேதஸ்ய நாம பரோக்ஷமபி கேவலம் |**
**நசைவாஸ்யாநுகுர்வீத கதிபாஷித சேஷ்டிதம் || 199**

குரு எதிரில் இல்லாத போதும் அவர் பெயரைக் கூறக்கூடாது. குருநாதர், உபாத்யாயர் என்று மரியாதையோடு கூற வேண்டும். குரு இல்லாதபோது அவரைப் போன்று நடந்தும், பேசியும், அவர் செய்வதைப் போன்று செய்தும் பரிகசிக்கக் கூடாது.

गुरोर् यत्र परीवादो निन्दा वाऽपि प्रवर्तते।
कर्णौ तत्र पिधातव्यौ गन्तव्यं वा ततोऽन्यतः॥

**குரோர்யத்ர பரீவாதோ நிந்தா வாபி ப்ரவர்த்ததே |**
**கர்ணௌ தத்ர பிதாதவ் யௌ கந்தவ்யம் வா ததோ அந்தயத: || 200**

தன் குருவைப் பிறர் தூற்றுவது, அபவாதம் பேசுவது போன்றவற்றைக் கேட்க நேர்ந்தால், உடனே தன் காதுகளை மூடிக் கொள்ள வேண்டும். அல்லது அங்கிருந்து நகர்ந்து வேறோர் இடத்துக்குப் போய் விட வேண்டும்.

परीवादात् खरो भवति श्वा वै भवति निन्दकः।
परिभोक्ता कृमिर् भवति कीटो भवति मत्सरी॥

**பரீவாதாத்கரோ பவதி ஷ்வாவை பவதி நிந்தக: |**
**பரிபோக்தா க்ரிமிர்பவதி கீடோ பவதி மத்ஸரீ || 201**

சிஷ்யன் குருவின் மீது அபவாதம் சுமத்தினால், அந்தப் பாபத்தினால் அடுத்துக் கழுதையாகப் பிறப்பான். குருவை நிந்தை செய்தால் நாயாகப் பிறப்பான். அவரது செல்வத்தை எடுத்துக் கொண்டு அனுபவிப்பவன் கிருமியாகப் பிறப்பான். குருவைத் துவேஷிப்பவன் புழுவாகப் பிறப்பான்.

दूरस्थो नाऽर्चयेदेनं न क्रुद्धो नाऽन्तिके स्त्रियाः।
यानाऽऽसनस्थश् चैवैनमवरुह्याऽभिवादयेत्॥

**தூரஸ்தோ நார்சயே தேநம் நக்ருத்தோ நாந்திகே ஸ்த்ரியா: |**
**யாநா ஸநஸ்தஷ்சைவைந மவருஹ்யாபி வாதயேத் || 202**

சிஷ்யன் நோயுற்றிருக்கும்போது தவிர்த்து மற்றப் பொழுதில் பிறரைக் கொண்டு குருவுக்குப் பணிவிடை செய்து வைத்தல் கூடாது. தான் கோபத்தோடிருக்கும்போதும், குரு தன் மனைவியோடு இருக்கும்போதும் அவரை வணங்கலாகாது.

प्रतिवातेऽनुवाते च नाऽऽसीत गुरुणा सह।
असंश्रवे चैव गुरोर् न किञ्चिदपि कीर्तयेत्॥

**ப்ரதிவாதே அநுவாதேச நாஸீத குருணா ஸஹ |**
**அஸம்ஷ்ரவேசைவ குரோர்ந கிஞ்சிதபி கீர்தயேத் || 203**

எதிர்காற்று வீசும்படியோ, பின்னிருந்து காற்று வீசும்படியோ குருவின் எதிரில் அமரலாகாது. குரு கேளாதபோது எதையும் உரைத்தலாகாது.

गोऽश्वोष्ट्रयानप्रासादप्रस्तरेषु कटेषु च।
आसीत गुरुणा सार्धं शिलाफलकनौषु च॥

**கோ அஷ்வோஷ்ட்ரயாந ப்ராஸாத ப்ரஸ்தரேஷு கடேஷுச |**
**ஆஸீத குருணா ஸார்த்தம் ஷிலாபலகநௌஷு ச || 204**

மாட்டு வண்டி, குதிரை வண்டி, ஒட்டகம் பூட்டிய வண்டி, மேடை, பாறை, பாய், கல், பலகை, படகு இவைகளின் மீது மட்டும் குருவுக்குச் சமமாக உட்காரலாம்.

गुरोर् गुरौ सन्निहिते गुरुवद् वृत्तिमाचरेत्।
न चाऽनिसृष्टो गुरुणा स्वान् गुरूनभिवादयेत्॥

**குரோர்குரௌ ஸந்நிஹிதே குருவத்வ்ருத்திமாசரேத் |**
**ந சா நிஸ்ருஷ்டோ குருணா ஸ்வாந் குரூநபி வாதயேத் || 205**

குருவினுடைய குரு வந்தால், தன் குருவுக்குச் செய்வதைப் போன்று அபிவாதனம் செய்ய வேண்டும். தான் குருகுலத்தில் இருக்கும்போது, தன்னுடைய தாய் தந்தையர் வந்தால், குருவின் அனுமதியின்றி அவர்களுக்கு அபிவாதனம் செய்யலாகாது.

विद्यागुरुष्वेतदेव नित्या वृत्तिः स्वयोनिषु।
प्रतिषेधत्सु चाऽधर्माद् धितं चोपदिशत्स्वपि॥

**வித்யாகுருஷ்வேததேவ நித்யா வ்ருத்தி: ஸ்வயோநிஷு ।**
**ப்ரதி ஷேதத்சு சாதர் மாத்திதம் சோபதி ஷத்ஸ்வபி ॥** **206**

தன் குருவைத் தவிர்த்த மற்ற உபாத்யாயர்கள், தன் பெரிய தந்தை, சிறிய தந்தை முதலானோர், பாவத்தினின்றும் தன்னைத் தடுத்தவர், ஹிதத்தைப் போதிப்பவர் முதலானோரிடத்தும் இதே முறையில் அபிவாதனம் செய்ய வேண்டும்.

श्रेयःसु गुरुवद् वृत्तिं नित्यमेव समाचरेत्।
गुरुपुत्रेषु चाऽर्येषु गुरोश्चैव स्वबन्धुषु॥

**ஷ்ரேயஸ்சு குருவத் வ்ருத்திம் நித்யமேவ ஸமாசரேத் ।**
**குருபுத்ரேஷு சார்யேஷு குரோஷ்சைவ ஸ்வபந்துஷு ॥** **207**

தவம், வித்யை இவைகளால் உயர்ந்தோரிடத்தும், தன்னைவிட வயதில் மூத்த குருபுத்திரர்களிடத்தும், குருவின் சுற்றத்தாரிடத்தும், இவ்வாறே தன் சுற்றத்தாரிடத்தும், குருவிடம் மரியாதையுடன் நடந்து கொள்வதைப் போன்றே நடந்து கொள்ள வேண்டும்.

बालः समानजन्मा वा शिष्यो वा यज्ञकर्मणि।
अध्यापयन् गुरुसुतो गुरुवन् मानमर्हति॥

**பாலஸ்ஸமாநஜந்மா வா ஷிஷ்யோ வா யக்ஞகர்மணி ।**
**அத்யாபயந் குருசுதோ குருவத்மாந மர்ஹதி ॥** **208**

தன்னைவிட சிறியவனாக இருந்தாலும், அல்லது தன் வயதை ஒத்தவனாக இருந்தாலும், தன் சிஷ்யனாகவே இருந்தாலும், குருவின் புத்திரன் யக்ஞத்துக்கு வந்திருந்தால், குருவைப் போன்று கௌரவிக்க வேண்டும்.

उत्सादनं च गात्राणां स्नापनोच्छिष्टभोजने।
न कुर्याद् गुरुपुत्रस्य पादयोश् चाऽवनेजनम्॥

**உத்ஸாதநம் ச காத்ராணாம் ஸ்நாபநோச்சிஷ்ட போஜநே ।**
**ந குர்யாத் குருபுத்ரஸ்ய பாதயோஷ்சாவ நேஜநம் ॥** **209**

ஆனாலும், குரு புத்திரனுக்கு சந்தனம் பூசுதல், நீராட்டி வைத்தல், குரு புத்திரன் சாப்பிட்ட மீதியைச் சாப்பிடல், பாதங்களைக் கழுவுதல் போன்றவற்றைச் செய்யக் கூடாது.

गुरुवत् प्रतिपूज्याः स्युः सवर्णा गुरुयोषितः ।
असवर्णास् तु सम्पूज्याः प्रत्युत्थानाऽभिवादनैः ॥

**குருவத்ப்ரதிபூஜ்யா: ஸ்யுஸ்ஸவர்ணா குருயோஷித: |**
**அஸவர்ணாஸ்து ஸம்பூஜ்யா: ப்ரத்யுத்தாநாபிவாதநை: ||** 210

தன் வர்ணத்தைச் சேர்ந்த குருபத்தினிகளை குருவைப் போன்று பூஜிக்க வேண்டும். மாற்று வர்ணமாக இருந்தால், எதிர்கொண் டழைத்தல், அபிவாதனம் செய்தல் இவற்றை மட்டும் செய்ய வேண்டும்.

अभ्यञ्जनं स्नापनं च गात्रोत्सादनमेव च ।
गुरुपत्न्या न कार्याणि केशानां च प्रसाधनम् ॥

**அப்யஞ்ஜநம் ஸ்நாபநம் சகாத்ரோத்ஸாதநமேவ ச |**
**குருபத்ந்யா ந கார்யாணி கேஷாநாம் ச ப்ரஸாதநம் ||** 211

குருபத்தினிக்கும்கூட, தலைக்கு எண்ணெய் தேய்த்துவிடல், நீராட்டுதல், சந்தனம் பூசுதல், தலை சீவுதல் முதலானவற்றைச் செய்யக் கூடாது.

गुरुपत्नी तु युवतिर् नाऽभिवाद्येह पादयोः ।
पूर्णविंशतिवर्षेण गुणदोषौ विजानता ॥

**குரு பத்நீது யுவதிர் நாபிவாத்யேஹ பாதயோ: |**
**பூர்ணவிம்ஷதிவர்ஷேண குணதோஷெள விஜாநதா ||** 212

குருபத்தினி இளம் பெண்ணாக இருந்தால், இருபது வயதைக் கடந்த, குணதோஷங்களை அறிந்த சிஷ்யன், அந்த இளம் வயது குருபத்தினிக்கு அபிவாதனம் செய்யும் போது, அவள் கால்களைத் தொட்டுச் செய்யக் கூடாது.

स्वभाव एष नारीणां नराणामिह दूषणम् ।
अतोऽर्थान् न प्रमाद्यन्ति प्रमदासु विपश्चितः ॥

**ஸ்வபாவ ஏஷ நாரீணாம் நராணாமிஹ தூஷணம் |**
**அதோ அர்த்தாந்ந ப்ரமாத்யந்தி ப்ரமதாசு விபஷ்சித: ||** 213

ஆண்களை நிலை தடுமாறச் செய்யும் தன்மை பெண்களுக்கு உண்டு. எனவே அறிந்தவர்கள் பெண்கள் விஷயத்தில் நிலை தடுமாறாமல் இருக்க வேண்டும்.

अविद्वांसमलं लोके विद्वांसमपि वा पुनः ।
प्रमदा ह्युत्पथं नेतुं कामक्रोधवशाऽनुगम् ॥

**அவித்வாந்ஸமலம் லோகே வித்வாந்ஸமபிவா புந: |**
**ப்ரமதாஹ்யுத்பதம் நேதும் காமக்ரோத வஷாநுகம் ||** 214

வித்வானாக இருந்தாலும் சரி, படிக்காதவனாக இருந்தாலும் சரி, அவர்களைக் காமத்துக்கும் குரோதத்துக்கும் ஆளாக்கி தங்களுக்கு வசப்படுத்தும் சக்தி பெண்களுக்கு உண்டு.

मात्रा स्वस्रा दुहित्रा वा न विविक्तासनो भवेत्।
बलवानिन्द्रियग्रामो विद्वांसमपि कर्षति॥

**மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ரா வா ந விநிக்தாஸநோ பவேத் |**
**பலவாநிந்த்ரிய க்ராமோ வித்வாம்ஸமபி கர்ஷதி || 215**

இந்திரியங்களின் கூட்டமானது மிகவும் பலமுடையது. விவேகம் நிறைந்தவனையும் தவறான வழியில் இழுக்கும். எனவே, தாய், சகோதரி, மகள் இவர்களுடன்கூட தனித்திருக்கக் கூடாது.

कामं तु गुरुपत्नीनां युवतीनां युवा भुवि।
विधिवद् वन्दनं कुर्यादसावहमिति ब्रुवन्॥

**காமம் து குருபத்நீநாம் யுவதீநாம் யுவா புவி |**
**விதிவத் வந்தனம் குர்யாத் அஸாவஹமிதி ப்ருவந் || 216**

வாலிப வயதில் இருக்கும் சிஷ்யன் தன் குருவின் இளம் வயது மனைவியருக்கு, கால்களைத் தொடாமல் பூமியில் விழுந்து அபிவாதனம் செய்ய வேண்டும். அதாவது வணங்க வேண்டும்.

विप्रोष्य पादग्रहणमन्वहं चाऽभिवादनम्।
गुरुदारेषु कुर्वीत सतां धर्ममनुस्मरन्॥

**விப்ரோஷ்ய பாதக்ரஹண மந்வஹம் சாபிவாதநம் |**
**குருதாரேஷு குர்வீத ஸதாம் தர்மமநுஸ்மரந் || 217**

எப்போதும், வயது முதிர்ந்த குருவின் பத்தினியரை அவர் தம் பாதங்களைத் தொட்டு அபிவாதனம் செய்ய வேண்டும்.

यथा खनन् खनित्रेण नरो वार्यधिगच्छति।
तथा गुरुगतां विद्यां शुश्रूषुरधिगच्छति॥

**யதா கநந் கநித்ரேண நரோ வார்யதிகச்சதி |**
**ததா குருகதாம் வித்யாம் சுஷ்ருஷுரதிகச்சதி || 218**

மண்வெட்டியால் பூமியைத் தோண்டியவன் தண்ணீரைப் பெறுவதைப் போன்று, குருவுக்குப் பணிவிடை செய்யும் சிஷ்யன் வித்யையை அடைவான்.

मुण्डो वा जटिलो वा स्यादथवा स्याच् छिखाजटः।
नैनं ग्रामेऽभिनिम्लोचेत् सूर्यो नाऽभ्युदियात् क्वचित्॥

**முண்டோ வா ஜடிலோ வா ஸ்யாதத வாஸ்யாச்சி காஜட: |**
**நைநம் க்ராமே அபி நிம்ளேச்சேத் சூர்யோ நாப்யுதியாத் க்வசித் || 219**

*பிரம்மசாரி முண்டிதனாக இருக்கலாம் (தலையை மொட்டை அடித்துக் கொண்டிருக்கலாம்.) அல்லது குடுமி வைத்துக் கொள்ளலாம். அல்லது சிறிது முடியை வைத்துக் கொண்டு சடை பின்னலிட்டு, மற்ற இடத்தை மொட்டையடித்துக் கொண்டும் இருக்கலாம்.*

*இத்தகைய பிரம்மசாரி எந்தக் கிராமத்தில் வசித்தாலும் சரி, இவனுக்குத் தெரியாமல் சூரியன் அஸ்தமிக்கவும் கூடாது. உதய மாகவும் கூடாது.*

*அதாவது சூரியோதய அஸ்தமனக் காலங்களில் உறங்கிக் கொண்டிருக்கக் கூடாது என்று பொருள்.*

तं चेदभ्युदियात् सूर्यः शयानं कामचारतः।
निम्लोचेद् वाऽप्यविज्ञानाज् जपन्नुपवसेद् दिनम्॥

**தம் சேதப்யுதியாத் சூர்ய: ஷயாநம் காமசாரத: |**
**நிம்ளேசேத் வாப் ய விக்ஞாஞாஜ் ஜபந்நுபதேத்திநம் || 220**

*தன்னை மறந்து சூரியோதய நேரத்தில் உறங்கினானேயானால், பகல் முழுவதும் உபவாசமிருந்து காயத்ரியை ஜபிக்க வேண்டும். சூரிய அஸ்தமன நேரத்தில் உறங்கினால் மறுநாள் உபவாசமிருந்து காயத்ரி ஜபமும் செய்ய வேண்டும்.*

सूर्येण ह्यभिनिर्मुक्तः शयानोऽभ्युदितश्च यः।
प्रायश्चित्तमकुर्वाणो युक्तः स्यान् महतैनसा॥

**சூர்யேணஹ்யபிநிர் முக்த: ஷயாநோ அப்யுதிதஷ்ச ய: |**
**ப்ராயஷ்சித்தமகுர்வாணோ யுக்த: யயாந்மஹ தைநஸா || 221**

*சூரிய உதய சமயத்திலோ, அஸ்தமன சமயத்திலோ உறங்கிய பிரம்மசாரி பெரும் பாதகத்தைச் செய்தவனாகிறான். பாவம் போவதற்குப் பிராயச்சித்தம் செய்யாதவன் மகாபாபி.*

आचम्य प्रयतो नित्यमुभे सन्ध्ये समाहितः।
शुचौ देशे जपञ् जप्यमुपासीत यथाविधि॥

**ஆசம்ய ப்ரயதோ நித்யமுபே ஸந்த்யே ஸமாஹித: |**
**ஷூசௌ தேஷே ஜபந் ஜப்யமுபாஸீத யதாவிதி || 222**

சூரிய உதய அஸ்தமனம் என்னும் இரண்டு சந்தியா காலங்களிலும் ஆசமனம் செய்து பரிசுத்தனாகி தூய்மையான இடத்தில் அமர்ந்து மனத்தில் வேறு சிந்தனையற்றவனாகி முறையாக காயத்ரி மஹா மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

यदि स्त्री यद्यवरजः श्रेयः किञ्चित् समाचरेत्।
तत् सर्वमाचरेद् युक्तो यत्र चाऽस्य रमेन् मनः॥

**யதி ஸ்த்ரீ யுத்யவரஜ: ஷ்ரேய: கிஞ்சித்ஸமாசரேத் |**
**தத்ஸர்வமாசரேத்யுக்தோ யத்ர சாஸ்ய ர மேந்மந: ||** 223

பெண்ணாக இருந்தாலும், சூத்திரனாக இருந்தாலும் அவர்கள் நல்ல காரியங்களைச் செய்வார்களாயின், அவற்றைப் பற்றி நன்கு ஆராய்ந்து, அவை தன் மனத்துக் கிசைந்ததாகவும், சாஸ்திரத்துக்கு விரோதமில்லாததாகவும் இருந்தால் அவற்றைத் தானும் செய்யலாம்.

धर्माऽर्थावुच्यते श्रेयः कामाऽर्थौ धर्म एव च।
अर्थ एवेह वा श्रेयस् त्रिवर्ग इति तु स्थितिः॥

**தர்மார்த்தௌ உச்யதே ஷ்ரேய: காமார்த்தௌ தர்ம ஏவச |**
**அர்த்தயேவேஹ வா ஷ்ரேயஸ்த்ரிவர்க இதிது ஸ்திதி: ||** 224

அறம், பொருள், இன்பம் இவற்றில் அறமும் இன்பமுமே சிறந்தவை என்று சிலர் கூறுவார்கள்.

பொருளும் இன்பமுமே சிறந்தவை என்று சிலர் கூறுவார்கள்.

அறமே சிறந்தது என்று சிலர் கூறுவார்கள்.

மூன்றுமே சிறந்தவை என்பது என் அபிப்ராயம்.

आचार्यश्च पिता चैव माता भ्राता च पूर्वजः।
नाऽर्तेनाऽप्यवमन्तव्या ब्राह्मणेन विशेषतः॥

**ஆசார்யோ ப்ரஹ்மணோ மூர்த்தி: பிதா மூர்த்தி: ப்ரஜாபதே: |**
**மாதா ப்ருதிவ்யா மூர்த்திஸ்து ப்ராதா ஸ்வோ மூர்த்திராத்மந: ||** 225

ஆசார்யன் இறைவனின் சொரூபம்.

தந்தை பிரம்ம சொரூபம்.

தாய் பூமி பிராட்டியின் சொரூபம்.

தமையன் தன்னுடைய ஆத்மாவின் சொரூபம் என்று கொள்ள வேண்டும்.

आचार्यो ब्रह्मणो मूर्तिः पिता मूर्तिः प्रजापतेः।
माता पृथिव्या मूर्तिस्तु भ्राता स्वो मूर्तिरात्मनः॥

**ஆசார்யஷ்ச பிதா சைவ மாதா ப்ராதா ச பூர்வஜ: |**
**நார்த்தேவாப் யவமந்தவ்யா ப்ராஹ்மணேந விசேஷத: ||** 226

*ஆசார்யன், தாய் தந்தையர், தமையன் இவர்களை தான் கஷ்ட தசையில் இருக்கும் போதும் அவமானப்படுத்தக் கூடாது. அதிலும் முக்கியமாக பிரம்மணன் செய்யக் கூடாது.*

यं मातापितरौ क्लेशं सहेते सम्भवे नृणाम्।
न तस्य निष्कृतिः शक्या कर्तुं वर्षशतैरपि॥

**யம் மாதாபிதரௌ க்லேஷம் ஸஹேதே ஸம்பவே ந்ருணாம் |**
**ஸதஸ்ய நிஷ்க்ருதிஷ்ஷக்யா கர்தும் வர்ஷஷதை ரபி ||** 227

*தாய் தந்தையர், பிள்ளையைப் பெற்று வளர்த்து கல்வி கற்பிக்கும் வரை படும் பாடுகளுக்கு பிள்ளை எத்தனை பிறவிகள் எடுத்தும் நன்றிக் கடனைத் தீர்க்க முடியாது.*

तयोर् नित्यं प्रियं कुर्यादाचार्यस्य च सर्वदा।
तेष्वेव त्रिषु तुष्टेषु तपः सर्वं समाप्यते॥

**தயோர்நித்யம் ப்ரியம் குர்யாதாசார்யஸ்ய ச ஸர்வதா |**
**தேஷ்வேவ த்ரிஷு துஷ்டேஷு தபஸ்ஸர்வம் ஸமாப்யதே ||** 228

*இத்தகைய தாய் தந்தையருக்கும், குருவுக்கும் பிரீதி ஏற்படுமாறு எப்போதும் நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் மூவரும் பிரீதியடைந்தால்தான் இவனது சகல தவமும் பூர்த்தியாகும்.*

तेषां त्रयाणां शुश्रूषा परमं तप उच्यते।
न तैरनभ्यनुज्ञातो धर्ममन्यं समाचरेत्॥

**தேஷாம் த்ரயாணாம் அஷ்ரூஷா பரமம் தபஉச்யதே |**
**நதை ரநப் யநுஜ்ஞாதோ தர்மமந்யம் ஸமாசரேத் ||** 229

*அம்மூவருக்கும் செய்யும் பணிவிடையே மேலான தவமாகும். அவர்கள் அனுமதியின்றி எந்தப் புண்ணிய கர்மாவும் செய்ய லாகாது.*

त एव हि त्रयो लोकास् त एव त्रय आश्रमाः।
त एव हि त्रयो वेदास् त एवोक्तास् त्रयोऽग्नयः॥

**தஏவ ஹி த்ரயோ லோகாஸ்த ஏவ த்ரய ஆஸ்ரமா: |**
**தஏவ ஹி த்ரயோ வேதாஸ்த ஏவோக்தாஸ்த்ரயோ அக்நய: ||** 230

*அவர்கள் மூவருமே மூன்று உலகங்கள்; அவர்கள் மூவருமே மூன்று (பிரம்மசர்யாஸ்ரமம், கிருஹஸ்தாஸ்ரமம், வானபிரஸ்*

*தாஸ்ரமம்) ஆஸ்ரமங்கள்; அவர்கள் மூவருமே மூன்று வேதங்கள். அவர்கள் மூவருமே திரேதாக்னிகள்.*

पिता वै गार्हपत्योऽग्निर् माताऽग्निर् दक्षिणः स्मृतः।
गुरुराहवनीयस् तु साऽग्नित्रेता गरीयसी॥

**பிதாவை கார்ஹபத் யோ அக்னிர்மாதாக் நிர்தக்ஷிண: ஸ்ம்ருத: |**
**குருராஹவநீயஸ்து ஸாக்நித்ரேதா கரீயஸீ ||** 231

*பிதா கார்ஹபத்யம் என்னும் அக்னி, மாதா தக்ஷிணாக்னி, குரு ஆஹவநீய அக்னி. இவ்வாறு அக்னி சொரூபமான மூவரும் மிகவும் சிரேஷ்டமானவர்கள்.*

त्रिष्वप्रमाद्यन्नेतेषु त्रीन् लोकान् विजयेद् गृही।
दीप्यमानः स्ववपुषा देववद् दिवि मोदते॥

**த்ரிஷ்வப்ரமாத்யந்நேதேஷுத்ரீந் லோகாந் விஜயேத் க்ருஹீ |**
**தீப்யமாந: ஸ்வவபுஷா தேவவத்திவி மோததே ||** 232

*இம்மூவரிடமும் பக்தியுடன் வாழ்பவன், மூவுலகங்களிலும் உயர்ந்தவனாவான். திவ்ய சரீரத்தைப் பெற்று, சூரியன் முதலான தேவர்களைப் போல விண்ணுலகில் ஒளிர்வான்.*

इमं लोकं मातृभक्त्या पितृभक्त्या तु मध्यमम्।
गुरुशुश्रूषया त्वेव ब्रह्मलोकं समश्नुते॥

**இமம் லோகம் மாத்ருபக்த்யா பித்ரு பக்த்யா து மத்யமம் |**
**குரு சுஷ்ரூஷயாத்வேவம் ப்ரஹ்மலோகம் ஸமஷ்நுதே ||** 233

*தாயிடம் கொண்ட பக்தியால் இவ்வுலகத்தையும், தந்தையிடம் கொண்ட பக்தியால் தேவ உலகத்தையும், குருவுக்குச் செய்யும் பணிவிடையால் பிரம்மலோகத்தையும் அடைவான்.*

सर्वे तस्याऽऽदृता धर्मा यस्यैते त्रय आदृताः।
अनादृतास्तु यस्यैते सर्वास् तस्याऽफलाः क्रियाः॥

**ஸர்வே தஸ்யாத்ருதா தர்மாயஸ்த்யைதே த்ரய ஆத்ருதா: |**
**அநாத்ருதாஸ்து யஸ்த்யைதே ஸர்வாஸ்ஸ்யாபலா: க்ரியா: ||** 234

*தாய், தந்தை, குரு மூவரையும் ஆதரிப்பவனுக்கு அவன் செய்யும் சகல தர்ம, சாஸ்திர காரியங்களும் நற்பலனை நல்கும்.*

*அம்மூவரையும் ஆதரிக்காதவனுக்கு அவன் செய்யும் சகல தர்ம, சாஸ்திர காரியங்களும் நற்பலனை நல்கா.*

यावत् त्रयस् ते जीवेयुस् तावन् नाऽन्यं समाचरेत्।
तेष्वेव नित्यं शुश्रूषां कुर्यात् प्रियहिते रतः॥

**யாவத் த்ரயஸ்தே ஜீவேயு ஸ்தாவந்நாந்யம் ஸமாசரேத் |**
**தேஷ்வேவ நித்யம் சுஷ்ரூஷாம் குர்யாத் ப்ரியஹிதே ரத: || 235**

இம்மூவரும் ஜீவித்திருக்கும் காலம் வரை, அவர்கள் அனுமதியின்றி தர்ம காரியம் எதையும் செய்யலாகாது. தினமும் பிரீதியான, ஹிதத்தைத் தருவதான செயல்களைச் செய்தபடி அவர்களுக்குப் பணிவிடை புரிய வேண்டும்.

तेषामनुपरोधेन पारत्र्यं यद्यदाचरेत्।
तत्तन् निवेदयेत् तेभ्यो मनोवचनकर्मभिः॥

**தேஷாமநுபரோதேந பாரத்ரயம் யத்யதாசரேத் |**
**தத்தந்நி வேதயேத்தேப்யோ மநோவசன கர்மபி: || 236**

அவர்களுக்குச் செய்யும் பணிவிடைகளுக்கு குந்தகம் ஏற்படாமல், தான் நல்லுலகைப் பெறுவதற்கான காரியங்களைச் செய்ய வேண்டும். அவற்றை அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

त्रिष्वेतेष्वितिकृत्यं हि पुरुषस्य समाप्यते।
एष धर्मः परः साक्षादुपधर्मोऽन्य उच्यते॥

**த்ரிஷ்வே தேஷ்விதி க்ருத்யம் ஹி புருஷஸ்ய ஸமாப்யதே |**
**ஏஷ தர்ம: பரஸ்ஸாக்ஷாதுப தர்மோ அந்ய உச்யதே || 237**

இம்மூவருக்கும் பணிவிடை புரிதலே முக்கியமான தர்மம். மற்ற தர்மங்கள் இதற்கு அடுத்தாற் போன்றதே.

श्रद्दधानः शुभां विद्यामाददीतावरादपि।
अन्त्यादपि परं धर्मं स्त्रीरत्नं दुष्कुलादपि॥

**ஷ்ரத்ததா நஷ்ஷுபாம் வித்யாமாததீதா வராதபி |**
**அந்த்யாதபி பரம் தர்மம் ஸ்த்ரீரத்னம் துஷ்குலாதபி || 238**

சிரத்தை இருப்பவன் தன்னைவிட கீழானவனிடமிருந்துகூட மேன்மையான வித்யையைப் பெறலாம்.

மோட்சம் தரும் மேலான தர்மத்தை சண்டாளனிடமிருந்தும் பெறலாம்.

தாழ்ந்த குலத்திலிருந்தும் நல்ல பெண்ணை ஏற்கலாம். (பெண் குலத்துக்கே ரத்தினமாக விளங்கும் பெண்ணையும், மோட்சத்தையே தரக்கூடிய தர்ம வழியையும், உயர்ந்த வித்யையையும் தாழ்ந்த குலம் என்று பாராமல் ஏற்க வேண்டும் என்பது பொருள்.)

विषादप्यमृतं ग्राह्यं बालादपि सुभाषितम्।
अमित्रादपि सद्वृत्तममेध्यादपि काञ्चनम्॥

**விஷாதப்யம்ருதம் க்ராஹ்யம் பாலாதபி சுபாஷிதம் |**
**அமித்ராதபிசத்வ்ருத்தம மேத்யா தபி காஞ்சநம் ||** 239

*விஷத்திலிருந்து அமிர்தம் கிடைக்குமாயின், அதைப் பெறலாம். சிறுவனாக இருந்தாலும் அவன் சொல்வது நீதியாக இருந்தால் அதை ஏற்கலாம். சத்குருவிடமிருந்து நல்லொழுக்கத்தை ஏற்கலாம். தூய்மையற்றதனிடமிருந்தும் தங்கத்தை எடுக்கலாம்.*

स्त्रियो रत्नान्यथो विद्या धर्मः शौचं सुभाषितम्।
विविधानि च शिल्पानि समादेयानि सर्वतः॥

**ஸ்த்ரியோ ரத்னாந்யதோ வித்யா தர்மஷ்ஷௌசம் சுபாஷிதம் |**
**விவிதாநி ச ஷில்பாநி ஸமாதேயாநி ஸர்வத: ||** 240

*பெண்கள், ரத்தினங்கள், வித்யை, தர்மம், ஒழுக்கம், நீதிகள், பலவிதமான கலைகள் - இவைகள் எங்கிருந்து கிடைத்தாலும் ஏற்க வேண்டும்.*

अब्राह्मणादध्ययनमापत्काले विधीयते।
अनुव्रज्या च शुश्रूषा यावदध्ययनं गुरोः॥

**அப்ராஹ்மணாதத்யய நமாபத்காலே விதீயதே |**
**அநுவ்ரஜ்யா ச சுஷ்ருஷாயாவதத்யயநம் குரோ: ||** 241

*பிராம்மணன் இல்லாத இடத்தில், க்ஷத்ரியனிடமிருந்தும், வைசியனிடமிருந்தும் வேதம் கற்கலாம்.*

*கற்கின்ற வரையில் அந்தக் குருவுக்கு பணிவிடைகள் புரிய வேண்டும்.*

नाऽब्राह्मणे गुरौ शिष्यो वासमात्यन्तिकं वसेत्।
ब्राह्मणे चाऽननूचाने काङ्क्षन् गतिमनुत्तमाम्॥

**நாப்ராஹ்மணே குரௌ சிஷ்யோ வாஸ மாத்யந்திகம் வஸேத் |**
**ப்ராஹ்மணே சாநநூசாநே காங்க்ஷந் கதிமநுத்தமாம் ||** 242

*மோட்சம் என்னும் உத்தம பதத்தை அடைய விரும்பும் பிரம்மசாரி, பிராம்மணன் அல்லாத மற்றக் குருவினிடத்தும், பிராம்மணனாக இருந்தாலும் முழுமையான வேதாத்யயன அனுஷ்டானமில்லாத குருவினிடத்தும், ஜீவித்திருக்கும் காலம் வரை பணிவிடைகள் புரிந்தபடி உடன் வசித்தல் கூடாது.*

यदि त्वात्यन्तिकं वासं रोचयेत गुरोः कुले।
युक्तः परिचरेदेनमा शरीरविमोक्षणात्॥

**யதி த்வா த்யந்திகம் வாஸம் ரோசயேத குரோ:குலே |**
**யுக்த: பாிசரேதேந மா ஷரீரவிமோக்ஷணாத் || 243**

நைஷ்டிக பிரம்மசாரியாக இறுதி வரை வாழ நினைக்கும் பிரம்மசாரி, குருகுலத்தில் வசித்தபடி, புலன்களை வென்று, இறுதி வரை குருவுக்குப் பணிவிடைகளைப் புரிய வேண்டும்.

आ समाप्तेः शरीरस्य यस् तु शुश्रूषते गुरुम्।
स गच्छत्यञ्जसा विप्रो ब्रह्मणः सद्म शाश्वतम्॥

**ஆ ஸமாப்தேஷ்ஷரீரஸ்ய யஸ்து சுஷ்ரூஷதே குரும் |**
**ஸ கச்சத்யஞ்சஸா விப்ரோ ப்ரஹ்மணஸ் ஸத்ம ஷாஷ்வதம் || 244**

உடல் நசிக்கும் வரை குரு பணிவிடை புரிபவன், நிரந்தரமான பிரம்ம லோகத்தை அடைகிறான்.

न पूर्वं गुरवे किञ्चिदुपकुर्वीत धर्मवित्।
स्नास्यंस् तु गुरुणाऽऽज्ञप्तः शक्त्या गुर्वर्थमाहरेत्॥

**ந பூர்வம் குரவே கிஞ்சிதுப குர்வீத தர்மவித் |**
**ஸ்நாஸ்யம்ஸ்து குருணா அங்கப் தஷ்ஷக்த்யா குர்வர்த்தமாஹரேத் || 245**

வேத அத்யயனம் செய்வதற்கு முன்பு சிஷ்யன் சிறிதளவும்கூட குருவுக்குத் தட்சிணை கொடுக்கலாகாது. வேத அத்யயனம் செய்து முடித்த பிறகு, பிரம்மசரியத்தை விட்டு இல்லற தர்மத்தை ஏற்க விரும்பி, குருவிடம் அனுமதி கோரும்போது குரு கோரும் தட்சிணையைக் கொடுக்க வேண்டும்.

क्षेत्रं हिरण्यं गामश्वं छत्रोपानहमासनम्।
धान्यं शाकं च वासांसि गुरवे प्रीतिमावहेत्॥

**க்ஷேத்ரம் ஹிரண்யம் காமஷ்வம் சத்ரோ பாநஹமாஸநம் |**
**தான்யம் ஷாகம்ச வாஸாம்ஸி குரவே ப்ரீதிமாவஹேத் || 246**

பூமி, தங்கம், பசுக்கள், குதிரைகள், குடை, பாதுகைகள், ஆசனம், தானியங்கள், காய்கனிகள், ஆடைகள் முதலானவற்றை வழங்கினால் குருவுக்கு சந்தோஷம் ஏற்படும்.

आचार्ये तु खलु प्रेते गुरुपुत्रे गुणाऽन्विते।
गुरुदारे सपिण्डे वा गुरुवद् वृत्तिमाचरेत्॥

**ஆசார்யே து கலு ப்ரேதே குருபுத்ரே குணாந்விதே |**
**குருதாரே ஸபிண்டே வா குருவத் வ்ருத்திமாசரேத் || 247**

நைஷ்டிக பிரம்மசாரி, தன் குரு மரணமடைந்த பிறகு, குருவைப் போன்றே நற்குணங்கள் நிறைந்த அவர் மகனுடனோ, குரு பத்தினியுடனோ, அவரது தாயத்தாரிடமோ (பங்காளியிடமோ) வசித்தபடி, தன் உயிர் உள்ள வரை அவருக்குப் பணிவிடை புரியலாம்.

एतेष्वविद्यमानेषु स्नानाऽऽसनविहारवान्।
प्रयुञ्जानोऽग्निशुश्रूषां साधयेद् देहमात्मनः॥

**ஏதேஷ்வ வித்யமாநேஷு ஸ்நாநாஸந விஹாரவாந் |**
**ப்ரயுஞ்ஜாநோ அக்நி சுஷ்ரூஷாம் ஸாதயேத் தேஹமாத்மந: ||** **248**

இவர்கள் யாரும் இல்லாதபோது, குரு ஹோமம் செய்து கொண்டிருந்த அக்னி குண்டத்தருகில், ஆசனத்தில் அமர்ந்து தினமும் அந்த அக்னி குண்டத்தில் தீ வளர்த்து ஹோமம் செய்தபடி தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டும்.

एवं चरति यो विप्रो ब्रह्मचर्यमविप्लुतः।
स गच्छत्युत्तमस्थानं न चेहाऽऽजायते पुनः॥

**ஏவம் சரதி யோ விப்ரோ ப்ரஹ்மசர்யமவிப்லுத: |**
**ஸ கச்சத்யுத்தமம் ஸ்தானம் ந சேஹாஜாயதே புந: ||** **249**

இதுவரை கூறிய முறையில் நைஷ்டிக பிரம்மசரிய விரதத்தை சரியாகக் கடைப்பிடிக்கும் பிரம்மசாரி உத்தம லோகத்தை அடைவான். அவனுக்கு மறுபிறவி என்பது இல்லை.

(இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 3

षट्त्रिंशदाब्दिकं चर्यं गुरौ त्रैवेदिकं व्रतम्।
तदर्धिकं पादिकं वा ग्रहणान्तिकमेव वा॥

**ஷட் த்ரிம்ஷதாப்திகம் சர்யம் குரௌ த்ரைவேதிகம் வ்ரதம் |**
**ததர்திகம் பாதிகம் வா க்ரஹணாந்திகமேவ வா || 1**

*பிரம்மச்சாரி மூன்று வேதங்களையும் முழுமையாக பயில்வதற்காக குருகுலத்தில் முப்பத்தாறு வருடங்கள் இருக்க வேண்டும். அல்லது அதில் பாதியான பதினெட்டு வருடங்கள் இருக்க வேண்டும். அல்லது அதிலும் பாதியான ஒன்பது வருடங்கள் இருக்க வேண்டும். அதுவும் இல்லையெனில் நன்கு கற்றுக்கொள்ளும் வரையிலாவது இருக்க வேண்டும்.*

वेदानधीत्य वेदौ वा वेदं वाऽपि यथाक्रमम्।
अविप्लुतब्रह्मचर्यो गृहस्थाऽऽश्रममावसेत्॥

**வேதாநதீத்ய வேதௌ வா வேதம் வாபி யதாக்ரமம் |**
**அவிப்லுத ப்ரஹ்மசர்யோ க்ருஹஸ்தாஷ்ரமமாவ ஸேத் || 2**

*பிரம்மச்சாரி, மூன்று வேதங்களை அல்லது இரண்டு வேதங்களை அல்லது ஒரு வேதத்தையாவது பயின்ற பிறகு கிருஹஸ்தாஸ்ரமத்தினை மேற்கொள்ள வேண்டும்.*

तं प्रतीतं स्वधर्मेण ब्रह्मदायहरं पितुः।
स्रग्विणं तल्प आसीनमर्हयेत् प्रथमं गवा॥

**தம் ப்ரதீதம் ஸ்வதர்மேண ப்ரஹ்மதாய ஹரம் பிதுः |**
**ஸ்ரக்விணம் தல்ப ஆஸீந மர்ஹயேத்ப்ரத மம்கவா || 3**

*தந்தையிடமோ, ஆசார்யனிடமோ முறைப்படி வேதம் கற்று முடித்தவனை, தந்தையோ அல்லது ஆசார்யனோ அவனை மலர்களால் அலங்கரித்து உயர்ந்த ஆசனத்தில் அமர்த்தி கோதான விரதத்தைச் செய்ய வைத்து மதுபர்கம் அளித்து (தேன், தயிர், பழம் சேர்ந்தது மதுபர்கம்) உபசரிக்க வேண்டும்.*

गुरुणाऽनुमतः स्नात्वा समावृत्तो यथाविधि।
उद्वहेत द्विजो भार्यां सवर्णां लक्षणाऽन्विताम्॥

**குருணாதுமதः ஸ்நாத்வா ஸமாவ்ருத்தோ யதாவிதி |**
**உத்வஹேத த்விஜோ பார்யாம் ஸவர்ணாம் தக்ஷணாந்விதாம் || 4**

குருவின் அனுமதி பெற்றுச் சென்று, ஸ்நானம், சமாவர்தனம் முதலானவைகளைச் செய்ய வேண்டும். பிறகு தன் வர்ணத்தில் பிறந்தவளான, லட்சணமான பெண்ணை மணக்க வேண்டும்.

असपिण्डा च या मातुरसगोत्रा च या पितुः ।
सा प्रशस्ता द्विजातीनां दारकर्मणि मैथुने ॥

**அஸபிண்டா சயா மாதுரஸகோத்ரா ச யா பிது: |**
**ஸா ப்ரஷஸ்தா த்விஜாதீநாம் தாரகர்மணி மைதுநே ||** 5

தாயின் ரத்த பந்தத்தைச் சேர்ந்தவளாக இல்லாதவளும், தந்தையின் கோத்திரத்தைச் சேர்ந்தவளாக இல்லாதவளுமான பெண், த்விஜர்களுக்கு வேள்வி, தானம் முதலானவற்றைச் செய்வதற்கும் சந்ததியை அடைவதற்கும் தக்கவள்.

महान्त्यपि समृद्धानि गोऽजाऽविधनधान्यतः ।
स्त्रीसम्बन्धे दशैतानि कुलानि परिवर्जयेत् ॥

**மஹாந்த்யபி ஸம்ருத்தாநி கோ அஜாவிதநதான்யத: |**
**ஸ்த்ரீஸம்பந்தே தஷைதாநி குலாநி பரிவர்ஜயேத் ||** 6

பசுக்கள், ஆடுகள், தனதானியங்கள் என்று செழிப்பாக இருந்தாலும் பின்வரும் பத்துக் குலங்களைச் சேர்ந்தவர்களிடம் திருமண சம்பந்தம் வைத்துக் கொள்ளக் கூடாது.

हीनक्रिय निष्पुरुषं निश्छन्दो रोमशाऽर्शसम् ।
क्षय्यामयाव्यपस्मारिश्वित्रिकुष्ठिकुलानि च ॥

**ஹீநக்ரியம் நிஷ்பருஷம் நிஷ்சந்தோ ரோமஷார்ஷஸம் |**
**க்ஷய்யாமயாவ்ய பஸ்மாரிஷ்வித்ரி குஷ்டிகுலாநி ச ||** 7

ஜாதகர்மா முதலான கிரியைகளை அனுஷ்டிக்காத குலம், நீண்ட ரோமங்கள் கொண்டவள், மூலரோகிகள் உள்ள குலம், க்ஷயரோகிகள் உள்ள குலம், வயிற்றுவலிக்காரர்கள் குலம், பைத்தியம் பிடித்தோர் உள்ள குலம், குஷ்டரோகியர் குலம், யானைக்கால் வியாதி உள்ளோர் குலம் இவைகளில் சம்பந்தம் வைத்துக் கொள்ளக் கூடாது.

नोद्वहेत् कपिलां कन्यां नाऽधिकाङ्गीं न रोगिणीम् ।
नाऽलोमिकां नाऽतिलोमां न वाचालां न पिङ्गलाम् ॥

**நோத்வஹேத்கபிலாம் கந்யாம் நாதிகாங்கீம் ஸரோகிணீம் |**
**நாலோமிகாம் நாதிலோமாம் ந வாசாடாம் ந பிங்கலாம் ||** 8

கபில நிற கேசங்கள் கொண்டவள், மிகவும் உயரமானவள், தீராத வியாதி கொண்டவள், அதிக ரோமங்கள் கொண்டவள், ரோமங்களே அற்றவள், அதிகம் கடுஞ்சொல் பேசுபவள், பச்சை நிறக் கண்களைக் கொண்டவள் - இப்படியான பெண்ணை மணம் புரியலாகாது.

नर्क्षवृक्षनदीनाम्नीं नाऽन्त्यपर्वतनामिकाम्।
न पक्ष्यहिप्रेष्यनाम्नीं न च भीषणनामिकाम्॥

**நக்ஷத்ர வ்ருக்ஷ நதீநாம்நீம் நாந்த்ய பர்வத நாமிகாம் |**
**நபக்ஷ்யஹி ப்ரேஷ்ய நாம்நீம் நச பீஷண நாமிகாம் || 9**

நட்சத்திரங்கள், மரங்கள், நதிகள் முதலானவைகளின் பெயர்களைக் கொண்ட பெண்ணையும், இழிவான பெயர், மலைகளின் பெயர்களைக் கொண்ட பெண்களையும், பறவைகள், பாம்புகள், அடிமைகள் இவ்வகையான பெயர்களைக் கொண்ட பெண்ணையும், பயங்கரமான பெயர் கொண்டவளையும் மணம் புரியக்கூடாது.

अव्यङ्गाऽङ्गीं सौम्यनाम्नीं हंसवारणगामिनीम्।
तनुलोमकेशदशनां मृद्वङ्गीमुद्वहेत् स्त्रियम्॥

**அவ்யங்காங்கீம் சௌம்யநாம்நீம் ஹம்ஸவாரண காமிநீம் |**
**தநுலோமகேஷ் தஷநாம் ம்ருத்வங்கீமுத்வஹேத் ஸ்த்ரியம் || 10**

அழகிய அங்கங்கள் கொண்டவள், வசீகரமான பெயர் கொண்டவள், அன்னத்தைப் போன்றும், யானையைப் போன்றும் அழகாக நடப்பவள், அழகிய முடி, பற்கள் கொண்டவள், மென்மையான தேகம் கொண்டவள் - இப்படியான பெண்ணை மணக்க வேண்டும்.

यस्यास् तु न भवेद् भ्राता न विज्ञायेत वा पिता।
नोपयच्छेत तां प्राज्ञः पुत्रिकाधर्मशङ्कया॥

**யஸ்யாஸ்து ந பவேத்ப்ராதா நவிஞாயேத வா பிதா |**
**நோபயச்சேத தாம் ப்ராக்ஞ: புத்ரிகா தர்மஷங்கயா || 11**

கூடப் பிறந்த சகோதரனில்லாத பெண்ணை மணக்கக்கூடாது. தந்தை யாரென்று தெரியாத பெண்ணையும் மணக்கக்கூடாது.

सवर्णाऽग्रे द्विजातीनां प्रशस्ता दारकर्मणि।
कामतस्तु प्रवृत्तानामिमाः स्युः क्रमशो वराः॥

**ஸவர்ணா அக்ரே த்விஜாதீநாம் ப்ரஷஸ்தா தாரகர்மணி |**
**காமதஸ்து ப்ரவ்ருத்தா நாமிமாஸ்யு: க்ரமஷோ வரா: || 12**

பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர் என்னும் த்விஜாதியினருக்கு முதல் விவாகத்தின்போது அவரவர் வருணத்தைச் சேர்ந்த பெண்ணை மணப்பதே சிரேஷ்டம். விருப்பப்பட்டு திருமணம் செய்து கொள்பவர் களுக்கு எந்தெந்த திருமணம் சிரேஷ்டம் என்று இனி பார்ப்போம்.

शूद्रैव भार्या शूद्रस्य सा च स्वा च विशः स्मृते।
ते च स्वा चैव राज्ञश्च ताश्च स्वा चाऽग्रजन्मनः॥

**சூத்ரைவ பார்யா சூத்ரஸ்ய ஸாச ஸ்வாச விஷ: ஸ்ம்ருதே |**
**தேச ஸ்வா சைவ ராக்ஞஷ்ச தாஷ்ச ஸ்வா சாக்ர ஜன்மந: || 13**

சூத்திரன், சூத்திரப் பெண்ணை மணப்பதே சிறந்தது.

வைசியன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும் மணக்கலாம்.

க்ஷத்ரியன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும், க்ஷத்ரியப் பெண்ணையும் மணக்கலாம்.

பிராம்மணன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும், க்ஷத்ரியப் பெண்ணையும், பிராம்மணப் பெண்ணையும் மணக்கலாம்.

न ब्राह्मणक्षत्रिययोरापद्यपि हि तिष्ठतोः।
कस्मिंश् चिदपि वृत्तान्ते शूद्रा भार्योपदिश्यते॥

**ந ப்ராஹ்மண க்ஷத்ரியயோராபத்யபி ஹி திஷ்டதோ: |**
**கஸ்மிந்சிதபி வ்ருத்தாந்தே சூத்ரா பார்யோபதிஷ்யதே || 14**

ஆயினும் கிருகஸ்த ஆஸ்ரமத்தை ஏற்க எண்ணும் பிராம்மண க்ஷத்ரியர்கள், ஆபத்துக் காலங்களிலும்கூட சூத்திரப் பெண்ணை மணந்ததாக சரித்திரம் இல்லை.

हीनजातिस्त्रियं मोहादुद्वहन्तो द्विजातयः।
कुलान्येव नयन्त्याशु ससन्तानानि शूद्रताम्॥

**ஹீநஜாதிஸ்த்ரியம் மோஹாதுத்வஹந்தோ த்விஜாதய: |**
**குலாந்யேவ நயந்த்யாஷு ஸஸந்தாநாநி ஷூத்ரதாம் || 15**

மோகத்துக்கு ஆட்பட்டு சூத்திரப் பெண்ணை மணக்கும் பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர்கள் தங்கள் குலத்தை சூத்திர குலமாக்குகிறார்கள். அவர்களுக்குப் பிறக்கும் சந்ததிகள் சூத்திரர் களேயாவர்.

शूद्रावेदी पतत्यत्रेरुतथ्यतनयस्य च।
शौनकस्य सुतोत्पत्त्या तदपत्यतया भृगोः ॥

**சூத்ராவேதீ பததியதிரேருதத்ய தநயஸ்ய ச |**
**ஷௌனகஸ்ய சுதோத்பத்யா ததபத்ய தயா ப்ருகோ: ||** 16

*சூத்திரப் பெண்ணை மணந்தவன் பதிதன் என்று அத்ரி மஹரிஷியும், கௌதம மஹரிஷியும் கூறியுள்ளனர்.*

*சூத்திரப் பெண்ணிடம் புத்திரனைப் பெற்றால் அவன் பதிதன் என்று சௌனக மஹரிஷி கூறியுள்ளார்.*

*சூத்திரப் பெண்ணிடம் பிறந்தவன் பதிதன் என்று பிருகு மஹரிஷி கூறியுள்ளார்.*

शूद्रां शयनमारोप्य ब्राह्मणो यात्यधोगतिम्।
जनयित्वा सुतं तस्यां ब्राह्मण्यादेव हीयते॥

**சூத்ராம் ஷயநமாரோப்ய ப்ராஹ்மணோ யாத்யதோ கதிம் |**
**ஜநயித்வா சுதம் தஸ்யாம் ப்ராஹ்மண்யா தேவஹீயதே ||** 17

*சூத்திரப் பெண்ணை தன் மஞ்சத்தில் ஏற்றிக் கொண்ட பிராம்மணன் அதோ கதியை அடைவான். அந்த சூத்திரப் பெண்ணிடம் சந்ததியையும் ஏற்படுத்தினானேயானால் பிராம்மணத் தன்மையை இழப்பான்.*

दैवपित्र्यातिथेयानि तत्प्रधानानि यस्य तु।
नाश्नन्ति पितृदेवास् तन् न च स्वर्गं स गच्छति॥

**தைவ பித்ர்யாதிதேயாநி தத்ப்ரதாநாநி யஸ்யது |**
**நாஷ்நந்தி பித்ருதேவாஸ்தந்ந ச ஸ்வர்கம் ச கச்சதி ||** 18

*பிராம்மணன், தான் செய்யும் ஹோமம் முதலான தெய்விக கிரியைகளிலும், சிராத்தம் முதலான பித்ரு காரியங்களிலும், அதிதி பூஜையிலும், சூத்திர ஜாதிப் பெண்ணைக் கொண்டு செய்வானே யானால், அந்த ஹவ்யகவ்யங்களை தேவர்களும் பித்ருக்களும் ஏற்கமாட்டார்கள். அத்தகைய பிராம்மணனுக்கு சொர்க்கமும் கிட்டாது.*

वृषलीफेनपीतस्य निःश्वासोपहतस्य च।
तस्यां चैव प्रसूतस्य निष्कृतिर् न विधीयते॥

**வ்ருஷலீபே நபீதஸ்ய நிஷ்வாஸோப ஹதஸ்ய ச |**
**தஸ்யாம் சைவ ப்ரசூதஸ்ய நிஷ்க்ருதிர் ந வீதீயதே ||** 19

சூத்திரப் பெண்ணிடம் அதரபானம் செய்தவனுக்கும், அவளது நீண்ட மூச்சுக் காற்றுப்பட இருந்தவனுக்கும், அவளிடம் சந்ததியை உண்டுபண்ணியவனுக்கும் பிராயச்சித்தமே கிடையாது.

चतुर्णामपि वर्णानां प्रेत्य चेह हिताऽहितान्।
अष्टाविमान् समासेन स्त्रीविवाहान् निबोधत॥

**சதுர்ணாமபி வர்ணாநாம் ப்ரேத்ய சேஹ ஹிதாஹிதாந் |**
**அஷ்டாவிமாந் ஸமாஸேந ஸ்த்ரீவிவாஹாந்நி போதத ||** **20**

நான்கு வர்ணத்தாருக்கும், இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை பயக்கக்கூடியவை, பயக்காதவை என்று இருக்கும் எட்டு வகையான திருமணங்களை முழுமையாகக் கூறுகிறேன், கேளுங்கள்.

ब्राह्मो दैवस् तथैवाऽऽर्षः प्राजापत्यस् तथाऽऽसुरः।
गान्धर्वो राक्षसश् चैव पैशाचश् चाऽष्टमोऽधमः॥

**ப்ராஹ்மோ தைவஸ்ததைவார்ஷ: ப்ராஜாபத்யஸ்ததாசுர: |**
**காந்தர்வோ ராக்ஷஸஷ்சைவ பைஷா சஷ்சாஷ்டமௌ அதம: ||** **21**

பிராம்மம், தெய்வம், ஆர்ஷம், பிராஜாபத்யம், ஆசுரம், காந்தர்வம், ராட்சசம், அதமமான பைசாசம் என்று திருமணங்கள் எட்டு விதமானவை.

यो यस्य धर्म्यो वर्णस्य गुणदोषौ च यस्य यौ।
तद् वः सर्वं प्रवक्ष्यामि प्रसवे च गुणाऽगुणान्॥

**யோ யஸ்ய தர்ம்யோ வர்ணஸ்ய குணதோஷௌச யஸ்யயௌ |**
**தத் வஸ்ஸர்வம் ப்ரவக்ஷ்யாமி ப்ரஸவே ச குணாகுணாந் ||** **22**

எந்த வர்ணத்தாருக்கு எது சாஸ்திர சம்மதமானதோ, எவருக்கு எந்த திருமணத்தால் குண தோஷமோ, அந்த திருமணத்தால் பிறந்த பிள்ளைகளுக்கு குணாகுணங்கள் எவையோ, அவையனைத்தையும் உங்களுக்குக் கூறுகிறேன்.

षडानुपूर्व्या विप्रस्य क्षत्रस्य चतुरोऽवरान्।
विट्शूद्रयोस् तु तानेव विद्याद् धर्म्यानराक्षसान्॥

**ஷடாநுபூர்வ்யா விப்ரஸ்ய க்ஷத்ரஸ்ய சதுரோ அவராந் |**
**விட்சூத்ரயோஸ்து தாநேவ வித்யா தர்மாந்ந ராக்ஷஸாந் ||** **23**

படித்த பிராம்மணனுக்கு முதல் ஆறு திருமண வகைகளும் சாஸ்திர சம்மதமானவை. க்ஷத்திரியனுக்கு அதற்கடுத்த நான்கு திருமண வகைகளும், வைசியனுக்கு ராட்சசம் தவிர்த்த மற்ற திருமண வகைகளும் சாஸ்திர சம்மதமானவை.

चतुरो ब्राह्मणस्याऽऽद्यान् प्रशस्तान् कवयो विदुः।
राक्षसं क्षत्रियस्यैकमासुरं वैश्यशूद्रयोः॥

**சதுரோ ப்ராஹ்மண ஸ்யாத்யாந் ப்ரஷஸ்தாந் கவயோ விது: |**
**ராட்சசம் க்ஷத்ரியஸ்த்யைகமாசுரம் வைஷ்ய சூத்ரயோ: || 24**

*முதல் நான்கு திருமண வகைகள் பிராம்மணனுக்கு உயர்வானவை என்றும், க்ஷத்ரியனுக்கு ராட்சசமும், வைசியனுக்கும் சூத்திரனுக்கும் ஆசுரம் ஒன்றே உயர்வானது என்றும் பெரியோர் கூறுவர்.*

पञ्चानां तु त्रयो धर्म्या द्वावधर्म्यौ स्मृताविह।
पैशाचश् चाऽऽसुरश् चैव न कर्तव्यौ कदाचन॥

**பஞ்சாநாம் து த்ரயோ தர்ம்யாத்வாவதர்ம்யௌ ஸ்ம்ருதாவிஹ |**
**பைஷா சஷ்சாசுரஷ்சைவ ந கர்த்தவ்யௌ கதாசந || 25**

*பிராம்மம், தெய்வம், பிராஜாபத்யம் மூன்றும் தர்ம சாஸ்திர சம்மதமானவை. ஆர்ஷமும், ஆசுரமும் சாஸ்திர சம்மதமான வையல்ல.*

पृथक्पृथग् वा मिश्रौ वा विवाहौ पूर्वचोदितौ।
गान्धर्वो राक्षसश् चैव धर्म्यौ क्षत्रस्य तौ स्मृतौ॥

**ப்ருதக் ப்ருதக்வா மிஷ்ரௌ வா விவாஹௌ பூர்வசோதிதௌ |**
**காந்தர்வோ ராட்சஸஷ்சைவ தர்ம்யௌ க்ஷத்ரஸ்ய தௌ ஸ்ம்ருதௌ || 26**

*முதலில் கூறப்பட்டபடி, ராட்சச விவாகமும், காந்தர்வ விவாகமும் க்ஷத்ரியர்களுக்கு சாஸ்திர சம்மதமானவை. இரண்டையும் இணைத்தும் செய்து கொள்ளலாம். தனித்தனியான முறையிலும் செய்து கொள்ளலாம்.*

आच्छाद्य चाऽर्चयित्वा च श्रुतिशीलवते स्वयम्।
आहूय दानं कन्याया ब्राह्मो धर्मः प्रकीर्तितः॥

**ஆச்சாத்ய சார்சயித்வாச ஷ்ருதிஷீலவதே ஸ்வயம் |**
**ஆஹூய தாநம் கந்யாயா ப்ராஹ்மௌ தர்ம: ப்ரகீர்த்தித: || 27**

*வேதம் படித்த, ஆசாரமான பிரம்மச்சாரியை, தானே அழைத்து வந்து, வஸ்திரங்கள் கொடுத்து, மரியாதைகள் செய்து, நன்கு அலங்கரித்த பெண்ணை தானம் கொடுப்பது பிராம்ம விவாகம் எனப்படும்.*

यज्ञे तु वितते सम्यगृत्विजे कर्म कुर्वते।
अलङ्कृत्य सुतादानं दैवं धर्मं प्रचक्षते॥

**யக்ஞேது விததே ஸம்யக்ருத்விஜே கர்ம குர்வதே |**
**அலங்க்ருத்ய சுதாதானம் தைவம் தர்ம்யம் ப்ரசக்ஷதே || 28**

*யக்ஞங்கள் செய்து வைக்கும் ரித்விக்கான பிராம்மணனுக்கு அலங்கரிக்கப்பட்ட தன் பெண்ணை வழங்குவது தெய்வ விவாகம் எனப்படும்.*

एकं गोमिथुनं द्वे वा वरादादाय धर्मतः।
कन्याप्रदानं विधिवदार्षो धर्मः स उच्यते॥

**ஏகம் கோமிதுநம் த்வே வா வராதாதாய தர்மத: |**
**கன்யா ப்ரதாநம் விதிவத் ஆர்ஷோ தர்மஸ்ஸ உச்யதே || 29**

*யாகத்துக்கு உதவும் வண்ணம் தர்ம நிமித்தமாக ஒரு பசுவையும் காளையையுமோ அல்லது இரண்டையும் சேர்த்தோ வரனிடமிருந்து பெற்றுக்கொண்டு, விதிமுறைப்படி வரனுக்குத் தன் பெண்ணைக் கொடுப்பதற்கு ஆர்ஷ விவாகம் என்று பெயர்.*

सहोभौ चरतां धर्ममिति वाचाऽनुभाष्य च।
कन्याप्रदानमभ्यर्च्य प्राजापत्यो विधिः स्मृतः॥

**ஸஹோபௌ சரதாம் தர்மமிதி வாசாநு பாஷ்ய ச |**
**கன்யா ப்ரதாநமப்யர்ச்ய ப்ராஜாபத்யோ விதி: ஸ்ம்ருத: || 30**

*நீங்கள் இருவரும் சேர்ந்து தர்மத்தைக் கடைப்பிடியுங்கள் என்று கூறி, பெற்றோர் வரனைப் பூஜித்து தம் பெண்ணைக் கொடுப்பது பிராஜபத்ய விவாகம் எனப்படும்.*

ज्ञातिभ्यो द्रविणं दत्त्वा कन्यायै चैव शक्तितः।
कन्याऽऽप्रदानं स्वाच्छन्द्यादासुरो धर्म उच्यते॥

**ஞாதிப்யோ த்ரவிணம் தத்வா கன்யாயை சைவ ஷக்தித: |**
**கன்யாப்ரதாநம் ஸ்வாச்சந்த்யாதாசுரோ தர்ம உச்யதே || 31**

*பெண்ணின் பெற்றோருக்கு வேண்டிய அளவு பணத்தைக் கொடுத்துவிட்டு, பெண்ணை தன் விருப்பப்படி மணப்பது ஆசுர விவாகம் எனப்படும்.*

इच्छयाऽन्योऽन्यसंयोगः कन्यायाश्च वरस्य च।
गान्धर्वः स तु विज्ञेयो मैथुन्यः कामसम्भवः॥

**இச்சயா அந்யோந்யஸம்யோக: கன்யாயாஷ்ச வரஸ்யச |**
**காந்தர்வஸ்ஸது விஞேயோ மைதுந்ய: காமஸம்பவ: || 32**

ஆண், பெண் இருவரும் விரும்பி இணைவது காந்தர்வ விவாகம் எனப்படும். இது காமசம்பவமாகவும், மைதுனத்துக்காக ஏற்பட்டதாகவும் இருக்கிறது.

हत्वा छित्वा च भित्वा च क्रोशन्तीं रुदतीं गृहात्।
प्रसह्य कन्याहरणं राक्षसो विधिरुच्यते॥

**ஹித்வா சித்வா சபித்வா ச க்ரோஷந்தீம் ருததீம் க்ருஹாத் |**
**ப்ரஸஹ்ய கன்யாஹரணம் ராக்ஷஸோ விதிருச்யதே ||** 33

திருமணத்துக்கு பெண்ணின் உறவினர்கள் சம்மதியாதபோது, அவர்களை ஹிம்சித்து பெண்ணை பலவந்தமாக தூக்கிக்கொண்டு வருவது ராட்சச விவாகம் எனப்படும்.

सुप्तां मत्तां प्रमत्तां वा रहो यत्रोपगच्छति।
स पापिष्ठो विवाहानां पैशाचः प्रथितोऽधमः॥

**சுப்தாம் மத்தாம் ப்ரமத்தாம் வா ரஹோ யத்ரோபகச்சதி |**
**ஸபாபிஷ்டோ விவாஹாநாம் பைஷாசஷ்சாஷ்டமோ அதம: ||** 34

தூங்கிக் கொண்டிருப்பவளையாவது, போதையில் இருப்பவளையாவது, ஏமாந்த நிலையில் அகப்பட்டவளாக இருப்பவளையாவது பலாத்காரம் செய்வது பைசாசம் எனப்படும். இது எட்டாவது விவாக முறை. இது மிக மிக அதமமானது.

अद्भिरेव द्विजाऽग्र्याणां कन्यादानं विशिष्यते।
इतरेषां तु वर्णानामितरेतरकाम्यया॥

**அத்பிரேவத்விஜா க்ரியாணாம் கந்யாதாநம் விஷிஷ்யதே |**
**இதரேஷாம்து வர்ணாநாமிதரே தரகாம்யயா ||** 35

நீர் வார்த்து கன்யாதானம் செய்வது பிராம்மணர்களுக்கு உத்தமமான திருமண முறை. மற்றவர்களுக்கு நீர் வார்த்து கன்யாதானம் செய்யும் முறையில்தான் திருமணம் செய்ய வேண்டும் என்னும் நியமம் இல்லை.

यो यस्यैषां विवाहानां मनुना कीर्तितो गुणः।
सर्वं शृणुत तं विप्राः सम्यक् कीर्तयतो मम॥

**யோ யஸ்யைஷாம் விவாஹாநாம் மநுநா கீர்திதோ குண: |**
**ஸர்வம் ஸ்ருணுத தம் விப்ரா: ஸர்வம் கீர்தயதோ மம ||** 36

முனிவர்களே, எந்த எந்த விவாகத்துக்கு எந்த எந்த குணம் உண்டோ அதை மனுபகவான் கூறியபடியே உங்களுக்குக் கூறுகிறேன், கேளுங்கள்.

दश पूर्वान् परान् वंश्यानात्मानं चैकविंशकम्।
ब्राह्मीपुत्रः सुकृतकृन् मोचयत्येनसः पितृन्॥

**தஷபூர்வாந் பராந் வம்ஷ்யாநாத்மாநம் சைக விம்ஷகம் |**
**ப்ராஹ்மீ புத்ரஸ்ஸுக்ருதக்ருத் மோசயேதேந ஸ: பித்ரூந் || 37**

*பிராம்ம விவாகத்தால் பிறந்த புத்திரன் புண்ணியாத்மா. அவன் தன் முன் பத்து தலைமுறையினரையும், பின் பத்து தலைமுறையினரையும், தன் தலைமுறையைச் சேர்ந்தவரையும் என மொத்தம் இருபத்தொரு தலைமுறையினரையும் பாபங்களினின்றும் விலக்கி கரையேற்றுகிறான்.*

दैवोढाजः सुतश्चैव सप्तसप्त परावरान्।
आर्षोढाजः सुतस् त्रींस्त्रीन् षट्षट् कायोढजः सुतः॥

**தைவோடாஜஸ் சுதஷ்சைவ ஸப்த ஸப்த பராவராந் |**
**ஆர்ஷோடா ஜஸ் அதஸ்த்ரீம்ஸ்த்ரீந் ஷட் ஷட் காயோட ஜஸ் அத: || 38**

*தெய்வ விவாகத்தால் பிறந்த புத்திரன், தன் முன்னேழு தலைமுறையினரையும், பின்னேழு தலைமுறையினரையும், தன் தலைமுறையினரையும் சேர்த்து மொத்தம் பதினைந்து தலைமுறையினரை பாபங்களினின்றும் விலக்கி கடைத்தேற்றுகிறான்.*

*அவ்வாறே பிராஜாபத்ய விவாகத்தால் பிறந்த புத்திரன் முன் ஆறு தலைமுறையினரையும் பின் ஆறு தலைமுறையினரையும் தன் தலைமுறையினரையும் கடைத்தேற்றுகிறான்.*

*ஆர்ஷ விவாகத்தால் பிறந்த புத்திரன், முன் மூன்று தலைமுறையினரையும் பின் மூன்று தலைமுறையினரையும், தன் தலைமுறையினரையும் கடைத்தேற்றுகிறான்.*

ब्राह्मादिषु विवाहेषु चतुर्ष्वेवानुपूर्वशः।
ब्रह्मवर्चसिनः पुत्रा जायन्ते शिष्टसम्मताः॥

**ப்ராஹ்மாதிஷு விவாஹேஷு சதுர்ஷ்வே வாநுபூர்வஷ: |**
**ப்ரஹ்ம வர்சஸிந: புத்ரா ஜாயந்தே ஷிஷ்டஸம்மதா: || 39**

*பிராம்ம விவாகம், தெய்வ விவாகம், ஆர்ஷ விவாகம், பிராஜாபத்ய விவாகம் - இந்த நான்கு விவாகங்கள் மூலம் பிறந்த புத்திரர்கள் பிரம்மதேஜஸுடன் கூடியவர்களாகவும், சான்றோர் விரும்புகிறவர்களாகவும் இருப்பர்.*

रूपसत्त्वगुणोपेता धनवन्तो यशस्विनः।
पर्याप्तभोगा धर्मिष्ठा जीवन्ति च शतं समाः॥

**ரூபஸத்வ குணோபேதா தநவந்தோ யஷஸ்விந: |**
**பர்யாப்தபோகா தர்மிஷ்டா ஜீவந்தி ச ஷதம் ஸமா: || 40**

*மேலும் அவர்கள் அழகு, பலம், நற்குணங்கள் கூடியவர்களாகவும், தனவான்களாகவும், புகழோடு எல்லா போக பாக்கியங்களும் நிறைந்தவர்களாகவும், தர்மிஷ்டர்களாகவும் நூறாண்டு வாழ்வர்.*

इतरेषु तु शिष्टेषु नृशंसाऽनृतवादिनः।
जायन्ते दुर्विवाहेषु ब्रह्मधर्मद्विषः सुताः॥

**இதரேஷு து சிஷ்டேஷு ந்ருஷம்ஸாந்ருத வாதிந: |**
**ஜாயந்தே துர்விவாஹேஷு ப்ரஹ்ம தர்ம த்விஷஸ்சுதா: || 41**

*மற்றபடி, ஆசுரம், காந்தர்வம், ராட்சசம், பைசாசம் என்னும் விவாகங்களால் பிறந்த புத்திரர்கள் குரூரர்களாகவும், பொய் பேசுபவர்களாகவும், தர்ம காரியங்களையும், வேதத்தையும் வெறுப்பவர்களாகவும் இருப்பர்.*

अनिन्दितैः स्त्रीविवाहैरनिन्द्या भवति प्रजा।
निन्दितैर् निन्दिता नृणां तस्मान् निन्द्यान् विवर्जयेत्॥

**அநிந்திதை: ஸ்த்ரீ விவாஹைரநிந்த்யா பவதிப்ரஜா |**
**நிந்திதைர் நிந்திதா ந்ருணாம் தஸ்மாந்நிந்த்யாந் விவர்ஜயேத் || 42**

*உயர்வாகக் கூறப்படும் விவாகங்களால் உயர்வான சந்ததிகள் பிறப்பார்கள். நிந்திக்கத்தக்க விவாகங்களால் நிந்தனைக்குரிய சந்ததிகள் பிறப்பார்கள்.*

पाणिग्रहणसंस्कारः सवर्णासूपदिश्यते।
असवर्णास्वयं ज्ञेयो विधिरुद्वाहकर्मणि॥

**பாணிக்ரஹண ஸம்ஸ்கார: ஸவர்ணாஸூபதிஷ்யதே |**
**அஸவர்ணாஸ்வயம் ஞேயோ விதிருத்வாஹ கர்மணி || 43**

*தன் வர்ணத்தைச் சேர்ந்த பெண்ணை பாணிகிரஹண முறையில் மணக்க வேண்டும். மற்ற வர்ணத்து பெண்களை இனி கூறப்போகும் முறைகளில் மணக்கலாம்.*

शरः क्षत्रियया ग्राह्यः प्रतोदो वैश्यकन्यया।
वसनस्य दशा ग्राह्या शूद्रयोत्कृष्टवेदने॥

**ஷர: க்ஷத்ரியயா க்ராஹ்ய: ப்ரதோதோ வைஷ்யகந்யயா |**
**வஸநஸ்ய தஷா க்ராஹ்யா சூத்ரயோத்க்ருஷ்டவே தநே || 44**

க்ஷத்ரியப் பெண் பிராம்மணனை மணக்கும்போது, பிராம்மணன் கரத்தில் பிடித்துள்ள ஒரு அம்பின் நுனியை பற்றிக்கொள்ள வேண்டும்.

வைசியப் பெண், பிராம்மணனையோ, க்ஷத்ரியனையோ மணக்கும்போது மணமகன் கரத்திலுள்ள சாட்டையின் நுனியைப் பற்றிக்கொள்ள வேண்டும்.

சூத்திரப் பெண் பிராம்மணனையோ, க்ஷத்ரியனையோ, வைசியனையோ மணக்கும்போது மணமகனின் மேலாடை நுனியை பற்றிக்கொள்ள வேண்டும்.

ऋतुकालाऽभिगामी स्यात् स्वदारनिरतः सदा।
पर्ववर्जं व्रजेच् चैनां तद्व्रतो रतिकाम्यया॥

**ருதுகாலாபிகாமீ ஸ்யாத்ஸ்வதார நிரதஸ்ஸதா ।**
**பர்வவர்ஜம் வ்ரஜேச்சைநாம் தத்வ்ரதோ ரதிகாம்யயா ॥ 45**

மனைவியை சந்தோஷப்படுத்துவதை நோக்கமாகக் கொள்ள வேண்டும். அந்நியப் பெண்களை நினைக்கக் கூடாது. பௌர்ணமி, அமாவாசை மற்றும் தவிர்க்கச் சொல்லும் நாட்களை விட்டுவிட்டு மற்ற நாட்களில் மனைவியுடன் ரமிக்க வேண்டும்.

ऋतुः स्वाभाविकः स्त्रीणां रात्रयः षोडश स्मृताः।
चतुर्भिरितरैः सार्धमहोभिः सद्विगर्हितैः॥

**ருஸ்ஸவாபாவிக: ஸ்த்ரீணாம் ராத்ரய: ஷோடஷ ஸ்ம்ருதா: ।**
**சதுர்பிரிதரைஸ்ஸார்த மஹோபிஸ்ஸத்விகர் ஹிதை: ॥ 46**

பெண்களுக்கு பொதுவாக பதினாறு தினங்கள் ருதுகாலமாக இருக்கும். அதில் முதல் நான்கு நாட்கள் சான்றோர்களால் ஏற்கப் படவில்லை.

तासामाद्यास् चतस्रस् तु निन्दितैकादशी च या।
त्रयोदशी च शेषास् तु प्रशस्ता दश रात्रयः॥

**தாஸாமாத் யாஷ்சதஸ்ரஸ்து நிந்திதைகாதஷீ சயா ।**
**திரயோதஷீ சஷேஷாஸ்து ப்ரஷஸ்தா தஷ ராத்ரய: ॥ 47**

அந்த ருதுகாலத்துக்கான தினங்களில் முதல் நான்கு தினங்களும் பதினொன்றாவது இரவும், பதிமூன்றாவது இரவும் தகாதவைகள். மற்ற பத்து இரவுகளும் சேரத் தகுந்தவை.

युग्मासु पुत्रा जायन्ते स्त्रियोऽयुग्मासु रात्रिषु।
तस्माद् युग्मासु पुत्रार्थी संविशेदार्तवे स्त्रियम्॥

**யுக்மாஅ புத்ரா ஜாயந்தே ஸ்த்ரியோ அயுக்மாசு ராத்ரிஷு |**
**தஸ்மாத் யுக்மாசு புத்ரார்த்தீ ஸ்ம்விஷேதார்த்தவே ஸ்த்ரியம் || 48**

*கூறிய இந்த பத்து இரவுகளில், ஆறாவது, எட்டாவது இரவுகளில் புத்திரர்கள் பிறப்பார்கள். மற்ற இரவுகளில் புத்திரிகள் பிறப்பார்கள். புத்திரனை விரும்புபவன் அதற்குரிய இரவுகளிலும், புத்ரியை விரும்புபவன் அதற்குரிய இரவுகளிலும் மனைவியுடன் சேரவேண்டும்.*

पुमान् पुंसोऽधिके शुक्रे स्त्री भवत्यधिके स्त्रियाः।
समेऽपुमान् पुंस्त्रियौ वा क्षीणेऽल्पे च विपर्ययः॥

**புமாந்பும்ஸோ அதிகே ஷுக்ளே ஸ்த்ரீபவத்யதிகே ஸ்த்ரியா: |**
**ஸமே அபுமான் பும்ஸ்த்ரியௌ வா க்ஷீணே அல்பே ச விபர்யய: || 49**

*ஆணின் சுக்லம் மிகுதியானால் ஆண் குழந்தையும், பெண்ணின் ஸ்ரோணிதம் மிகுதியானால் பெண் குழந்தையும் பிறக்கும். இரண்டும் சமமாக சுரந்தால் நபும்சகனான குழந்தையோ, ஆண் பெண் என இரட்டைக் குழந்தைகளோ பிறக்கும். சுக்ல சோணிதங்கள் இல்லாமல் போனாலோ, குறைவானாலோ கர்ப்பம் ஏற்படாது.*

निन्द्यास्वष्टासु चान्यासु स्त्रियो रात्रिषु वर्जयन्।
ब्रह्मचार्येव भवति यत्रतत्राऽऽश्रमे वसन्॥

**நிந்த்யாஸ்வஷ்டாசு சாந்யாசு ஸ்த்ரியோ ராத்ரிஷு வர்ஜயந் |**
**ப்ரஹ்மசார்யேவ பவதி யத்ரதத்ராஷ்ரமே வஸந் || 50**

*முதலில் கூறிய தவிர்க்கப்பட வேண்டிய நான்கு தினங்களையும், பதினொன்றாவது, பதிமூன்றாவது தினங்களையும், அமாவாசை பௌர்ணமி தினங்களையும் விட்டுவிட்டு, மற்ற இரவுகளில் மனைவி யுடன் கூடுபவன், கிருஹஸ்த ஆஸ்ரமத்தில் இருந்தாலும், பிரம்ம சரியத்தை கடைப்பிடிப்பவனாகவே கூறுகின்றனர்.*

न कन्यायाः पिता विद्वान् गृह्णीयाच् छुल्कमण्वपि।
गृह्णञ् छुल्कं हि लोभेन स्यान् नरोऽपत्यविक्रयी॥

**நகன்யாயா: பிதா வித்வாந் க்ருஹ்ணீயாச்சுல்கமண்வபி |**
**க்ருஹ்ணஞ்சுல்கம் ஹிலோபேந ஸ்யாந்நரோ அபத்ய விக்ரயீ || 51**

*அறிவாளியான பெண்ணைப் பெற்ற தந்தை, சிறிதளவும் வரனிடமிருந்து பொருள் பெற்றுக் கொள்ளக்கூடாது. லோப குணத்தோடு பெற்றுக்கொள்பவன், தன் பெண்ணை விலைக்கு விற்றவனாவான்.*

स्त्रीधनानि तु ये मोहादुपजीवन्ति बान्धवाः।
नारीयानानि वस्त्रं वा ते पापा यान्त्यधोगतिम्॥

**ஸ்த்ரீதநாநி துயே மோஹாதுபஜீவந்தி பாந்தவா: |**
**நாரீயாநாநி வஸ்த்ரம் வா தே பாபாயாந்தி யதோகதிம் ||** 52

ஒரு பெண்ணுக்கு, திருமண சமயத்தில் வழங்கப்பட்ட தனம் அவளுடையது. அந்த தனத்தையோ, வாகனங்களையோ, வஸ்திரங் களையோ சுற்றத்தார் யாரேனும் அபகரித்துக் கொண்டால், அவர்கள் பெரும் பாவத்துக்கு ஆளானவர்களாய் அதோகதியை அடைவார்கள்.

आर्षे गोमिथुनं शुल्कं केचिदाहुर् मृषैव तत्।
अल्पोऽप्येवं महान् वाऽपि विक्रयस् तावदेव सः॥

**ஆர்ஷே கோமிதுநம் ஷுல்கம் கேசிதாஹுர்ம்ருஷைவ தத் |**
**அல்போ அப்யேவம் மஹாந் வாபி விக்ரயஸ்தாவதேவ ஸ: ||** 53

ஆர்ஷ விவாகத்தில் ஒரு காளை, ஒரு பசு இவைகளை சுல்கமாகப் பெற்றுக் கொள்ளலாம் என சிலர் கூறியிருந்தாலும் அது சரியல்ல. சுல்கத்தை கொஞ்சமாகப் பெற்றுக்கொண்டாலும், அது பெண்ணை விற்றதற்கே சமம்.

यासां नाऽददते शुल्कं ज्ञातयो न स विक्रयः।
अर्हणं तत् कुमारीणामानृशंस्यं च केवलम्॥

**யாஸாம் நாததேதே ஷுல்கம் ஞாதயோ நஸ விக்ரய: |**
**அர்ஹணம் தத்குமாரீணாமா ந்ருஷம்ஸ்யம் ச கேவலம் ||** 54

பெண்ணின் விவாக சமயத்தில் அவள் உறவினர் சுல்கம் பெற்றுக் கொள்ளாவிடில், பெண்ணை விற்றதாகாது.

மேலும் விவாக சமயத்தில் வரன் பெண்ணுக்குக் கொடுத்த தனத்தை, அவளுக்காகவே உபயோகப்படுத்த வேண்டும்.

पितृभिर् भ्रातृभिश् चैताः पतिभिर् देवरैस् तथा।
पूज्या भूषयितव्याश् च बहुकल्याणमीप्सुभिः॥

**பித்ருபிர் ப்ராது பிஷ்சைதா: பதிபிர்தேவரைஸ் ததா |**
**பூஜ்யா பூஷயிதவ்யாஷ்ச பஹுகல்யாண மீப்சுபி: ||** 55

விவாக சமயத்தில் வரன் கொடுத்த தனத்தை பெண்ணுக்கே கொடுப்பதோடு, தங்கள் நலனை விரும்பும் தந்தைமார்களும், சகோதரர்களும், கணவன்மார்களும், பெண்களுக்கு விருந்தளித்து, உபசரித்து, வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் வழங்க வேண்டும்.

यत्र नार्यस् तु पूज्यन्ते रमन्ते तत्र देवताः।
यत्रैतास् तु न पूज्यन्ते सर्वास् तत्राऽफलाः क्रियाः॥

**யத்ர நார்யஸ்து பூஜ்யந்தே ரமந்தே தத்ர தேவதா: |**
**யத்ரைதாஸ்து ந பூஜ்யந்தே ஸர்வாஸ்தத்ராபலா: க்ரியா: ||** 56

எங்கு பெண்கள் போற்றப்படுகிறார்களோ, அங்கு தேவர்கள் சந்தோஷத்தோடு இருப்பார்கள். எங்கு பெண்கள் போற்றப்படுவதில்லையோ, அங்கு செய்யும் கிரியைகள் எல்லாம் பலன் தராது போகும்.

शोचन्ति जामयो यत्र विनश्यत्याशु तत् कुलम्।
न शोचन्ति तु यत्रैता वर्धते तद् धि सर्वदा॥

**ஷோசந்தி ஜாமயோ யத்ர விநஷ்யத்யாஷு தத்குலம் |**
**நஷோசந்தி து யத்ரைதா வர்ததே தத்தி ஸர்வதா ||** 57

உடன் பிறந்த சகோதரிகள், மனைவியர், மருமகள்கள், ஒரே தாயபாகத்துக்குரிய பெண்கள் - இவர்கள் எந்தக் குலத்தில் போற்றப்படவில்லையோ, அந்த குலம் விரைவில் நாசமடையும். எந்தக் குலத்தில் இவர்கள் போற்றப்படுகிறார்களோ, அந்தக் குலம் விருத்தியை அடைந்த வண்ணமாகவே இருக்கும்.

जामयो यानि गेहानि शपन्त्यप्रतिपूजिताः।
तानि कृत्याहतानीव विनश्यन्ति समन्ततः॥

**ஜாமயோ யாநி கேஹாநி ஷபந்த்ய ப்ரதிபூஜிதா: |**
**தாநி க்ருத்யாஹதாநீவ விநஷ்யந்தி ஸமந்தத: ||** 58

சகோதரிகள் முதலான பெண்கள், தங்களை நன்கு போற்றாத காரணத்தால் எந்தக் குலத்தைச் சபிக்கிறார்களோ, அந்தக் குலம் நாசமடையும்.

तस्मादेताः सदा पूज्या भूषणाऽच्छादनाऽशनैः।
भूतिकामैर् नरैर् नित्यं सत्कारेषूत्सवेषु च॥

**தஸ்மாதேதாஸ்ஸதா பூஜ்யா பூஷணாச்சாத நாஷநை: |**
**பூதிகாமைர் நரைர்நித்யம் ஸத்காரேஷு த்ஸவேஷு ச ||** 59

ஐஸ்வர்யத்தை விரும்புவோர் உத்ஸவ காலங்களிலும், விவாகங்கள் முதலான காலங்களிலும், உடன் பிறந்த சகோதரிகளுக்கு வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் கொடுத்து சந்தோஷப்படுத்த வேண்டும்.

सन्तुष्टो भार्यया भर्ता भर्त्रा भार्या तथैव च।
यस्मिन्नेव कुले नित्यं कल्याणं तत्र वै ध्रुवम्॥

**ஸந்துஷ்டோ பார்யயா பர்தா பர்த்ரா பார்யா ததைவ ச |**
**யஸ்மிந்நேவ குலே நித்யம் கல்யாணம் தத்ர வைத்ருவம் || 60**

*மனைவியால் கணவனும், கணவனால் மனைவியும் சந்தோஷமடைந்தவர்களாக இருக்கும் குலத்தில் எப்போதும் மங்கலம் நிறைந்திருக்கும்.*

यदि हि स्त्री न रोचेत पुमांसं न प्रमोदयेत्।
अप्रमोदात् पुनः पुंसः प्रजनं न प्रवर्तते॥

**யதி ஹி ஸ்த்ரீ நரோசேத புமாம்ஸம் ந ப்ரமோதயாத் |**
**அப்ரமோ தாத்புந: பும்ஸ: ப்ரஜநம் ந ப்ரவர்ததே || 61**

*எந்தப் பெண், வஸ்திரங்களும் ஆபரணங்களும் பெற்று சந்தோஷமாக இல்லையோ, அந்தப் பெண் தன் கணவனை சந்தோஷப்படுத்த மாட்டாள். எனவே அந்தக் கணவனுக்கு குழந்தைப் பாக்கியம் கிட்டாது.*

स्त्रियां तु रोचमानायां सर्वं तद् रोचते कुलम्।
तस्यां त्वरोचमानायां सर्वमेव न रोचते॥

**ஸ்த்ரியாந்து ரோசமாநாயாம் ஸர்வம் தத்ரோசதே குலம் |**
**தஸ்யாம் த்வரோசமாநாயாம் ஸர்வமேவ நரோசதே || 62**

*பெண்கள் எங்கு சந்தோஷத்தோடு பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்களோ, அந்தக் குலம் பிரகாசிக்கும்.*

*பெண்கள் சந்தோஷமற்று ஒளி குன்றியவர்களாக இருந்தால், அவர்கள் கணவனை சந்தோஷப்படுத்த மாட்டார்கள்.*

*அந்நிய ஆடவனுடன் சேர்க்கை ஏற்பட்டு அந்தக் குலம் நசிக்கும்.*

कुविवाहैः क्रियालोपैर् वेदानध्ययनेन च।
कुलान्यकुलतां यान्ति ब्राह्मणातिक्रमेण च॥

**குவிவாஹை: க்ரியாலோபை ர்வேதாநத்ய யநேநச |**
**குலாந்ய குலதாம் யாந்தி ப்ராஹ்ம ணாதிக்ர மேண ச || 63**

*தகாத விவாகங்களாலும், ஜாதகர்மா முதலான கிரியைகள் நடத்தப் பெறாமையாலும், வேதங்களை அத்யயனம் செய்யாததாலும், பிராம்மணர்களை கௌரவிக்காததாலும் நற்குலமும் க்ஷீணத்தை அடையும்.*

शिल्पेन व्यवहारेण शूद्रापत्यैश् च केवलैः।
गोभिरश्वैश् च यानैश् च कृष्या राजोपसेवया॥

**ஷில்பேந வ்யவஹாரணே ஷூத்ராபத்யைஷ்ய கேவலை: |**
**கோபிஷ்வைஷ்ய யானைஷ்ச க்ருஷ்யா ராஜோப .ஸேவய || 64**

ஓவியம் முதலான கலைகளில் ஈடுபடுவதாலும், வழக்குகளாலும், சூத்திர குலத்துப் பெண்ணை மணந்து சந்ததி ஏற்படுத்துவதாலும், பசுக்கள் குதிரைகள் வண்டிகள் இவைகளை வாங்கவும் விற்கவுமான வியாபாரம் செய்வதாலும், ராஜசேவையில் ஈடுபடுவதாலும், மேன்மையான குலம் க்ஷீணமடையும்.

अयाज्ययाजनैश् चैव नास्तिक्येन च कर्मणाम्।
कुलान्याशु विनश्यन्ति यानि हीनानि मन्त्रतः॥

**அயாஜ்யயாஜனநஷ்சைவ நாஸ்திக்யேந ச கர்மணாம் |**
**குலாந்யாஷு விநஷ்யந்தி யாநிஹீநாநி மந்த்ரத: || 65**

யக்ஞங்கள் செய்ய அருகதையற்றவர்களைக் கொண்டு யக்ஞங்கள் செய்வதாலும், கிரியைகளில் நம்பிக்கையற்ற நாஸ்திகத் தன்மையாலும், வேதாத்யயனத்தை விடுவதாலும், நற்குலம் நாச மடையும்.

मन्त्रतस् तु समृद्धानि कुलान्यल्पधनान्यपि।
कुलसङ्ख्यां च गच्छन्ति कर्षन्ति च महद् यशः॥

**மந்த்ரதஸ்து ஸம்ருத்தாநி குலாந்ய ல்பதநாந்யபி |**
**குலஸங்க்யாம் ச கச்சந்தி கர்ஷந்தி ச மஹத்யஷ: || 66**

மந்திர அனுஷ்டானங்களோடு, ஞானத்தோடு வாழும் குலங்கள், செல்வத்தோடு விளங்காவிடினும், இக்குலங்கள் எண்ணிக்கைகளால் விரிவடைந்து, மிக்க புகழோடு விளங்கும்.

वैवाहिकेऽग्नौ कुर्वीत गृह्यं कर्म यथाविधि।
पञ्चयज्ञविधानं च पक्तिं चान्वाहिकीं गृही॥

**வைவாஹிகே அக்நௌ குர்வீத க்ருஹ்யம் கர்ம யதாவிதி |**
**பஞ்சயக்ஞவிதாநம் ச பங்திம் சாந்வாஹிகீம் க்ருஹீ || 67**

கிருகஸ்தன், விவாக அக்நியில் காலையும் மாலையும் ஔபாசனம் செய்ய வேண்டும்.

வைஷ்யதேவம் முதலான பஞ்ச யக்ஞங்களையும் செய்ய வேண்டும். வந்த விருந்தினரைப் போற்றி உணவளிக்க வேண்டும்.

पञ्च सूना गृहस्थस्य चुल्ली पेषण्युपस्करः।
कण्डनी चोदकुम्भश् च बध्यते यास् तु वाहयन्॥

**பஞ்ச நூநா க்ருஹஸ்தஸ்ய சுல்லீ பேஷண்யவஸ்கர: |**
**கண்டநீ சோதகும்பஷ்ச பத்யதே யாஸ்து வாஹயந் ||** **68**

*முறம், உரல், உலக்கை, துடைப்பம், தண்ணீர்க் குடம் இவற்றை உபயோகப்படுத்துவதால் கிருஹஸ்தர்கள் கொலைப் பாபங்களை அடைகின்றனர்.*

तासां क्रमेण सर्वासां निष्कृत्यर्थं महर्षिभिः।
पञ्च क्लृप्ता महायज्ञाः प्रत्यहं गृहमेधिनाम्॥

**தாஸாம் க்ரமேண ஸர்வாஸாம் நிஷ்க்ருத்யர்த்தம் மஹர்ஷிபி: |**
**பஞ்சக்ளுப்தா மஹாயக்ஞா: ப்ரத்யஹம் க்ருஹமேதி நாம் ||** **69**

*கிருஹஸ்தர்களின் அந்த மஹா பாபங்கள் போவதற்காக மஹரிஷிகள் முறையே ஐந்து மஹா யக்ஞங்களை விதித்துள்ளனர்.*

अध्यापनं ब्रह्मयज्ञः पितृयज्ञस् तु तर्पणम्।
होमो दैवो बलिर् भौतो नृयज्ञोऽतिथिपूजनम्॥

**அத்யாபநம் ப்ரஹ்மயக்ஞ: பித்ருயக்ஞஸ்து தர்பணம் |**
**ஹோமோ தைவோ பலிர்பூதோ ந்ருயக்ஞோ அதிதிபூஜநம் ||** **70**

*வேதமோதுதல் - பிரம்ம யக்ஞம்.*

*பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்தல் - பித்ரு யக்ஞம்.*

*ஹோமங்கள் செய்வது - தேவ யக்ஞம்.*

*வைஷ்வ தேவம், பூதபலி - பூத யக்ஞம்.*

*விருந்தோம்பல் - மநுஷ்ய யக்ஞம்.*

पञ्चैतान् यो महायज्ञान् न हापयति शक्तितः।
स गृहेऽपि वसन् नित्यं सूनादोषैर् न लिप्यते॥

**பஞ்சைதாந் யோ மஹாயக்ஞாந் ந ஹாபயதி ஷக்தித: |**
**ஸ க்ருஹே அபி வஸந்நித்யம் சூநாதோஷைர் நலிப்யதே ||** **71**

*இந்தப் பஞ்சமஹா யக்ஞங்களையும் தன் சக்திக்கேற்ப நடத்திக் கொண்டிருக்கும் கிருஹஸ்தனுக்கு, பஞ்சமஹா பாபங்களும் நீங்கிப் போகும்.*

देवताऽतिथिभृत्यानां पितृणामात्मनश् च यः।
न निर्वपति पञ्चानामुच्छ्वसन् न स जीवति॥

**தேவதாதிதி ப்ருத்யாநாம் பித்ரூணாமாத்ம நஷ்சய: |**
**நநிர்வபதி பஞ்சாநா முச்வஸந்ந ஸ ஜீவதி ||** 72

*தெய்வங்களுக்கும், பூதங்களுக்கும், விருந்தினருக்கும், பித்ருக்களுக்கும் உரியபடி உணவளிக்காதவன், தன்னையும் சரிவரக் காத்துக்கொள்ளாதவன், உயிரோடிருந்தாலும் இறந்தவனுக்குச் சமம்.*

अहुतं च हुतं चैव तथा प्रहुतमेव च।
ब्राह्म्यं हुतं प्राशितं च पञ्चयज्ञान् प्रचक्षते॥

**அஹூதம் ச ஹூதம் சைவ ததா ப்ரஹூதமேவ ச |**
**ப்ராஹ்ம்யம் ஹூதம் ப்ராஷிதம் ச பஞ்ச யக்ஞாந் ப்ரசக்ஷதே ||** 73

*அஹூதம், ஹூதம், பிரஹூதம், பிராம்யஹூதம், பிராஷிதம் என்று ஐந்து மஹாயக்ஞங்கள் கூறப்படுகின்றன.*

जपोऽहुतो हुतो होमः प्रहुतो भौतिको बलिः।
ब्राह्म्यं हुतं द्विजाऽग्र्यार्चा प्राशितं पितृतर्पणम्॥

**ஜபோ அஹூதோ ஹூதோ ஹோம: ப்ரஹூதோ பௌதிகோ பலி: |**
**ப்ராஹ்ம்யம் ஹூதம் த்விஜாக்ர்யார்சா ப்ராஷிதம் பித்ருதர்பணம் ||** 74

*அஹூதம் என்றால் ஜபம்.*

*ஹூதம் என்றால் அக்னி ஹோத்ரத்தில் செய்யப்படும் ஹோமம்.*

*பிரஹூதம் என்றால் பூதங்களுக்கு அளிக்கப்படும் பலி.*

*பிராம்யஹூதம் என்றால் உத்தம பிராம்மணர்களை பூஜிப்பது.*

*பிராஷிதம் என்றால் பித்ரு தர்பணம்.*

स्वाध्याये नित्ययुक्तः स्याद् दैवे चैवेह कर्मणि।
दैवकर्मणि युक्तो हि बिभर्तीदं चराचरम्॥

**ஸ்வாத்யாயே நித்யயுக்தஸ்ஸ்யாத் தைவே சைவேஹ கர்மணி |**
**தைவே கர்மணி யுக்தோ ஹி பிபர்த்தீம் சராசரம் ||** 75

*வறுமையினால் தினமும் விருந்தோம்பல் என்னும் அதிதி பூஜை செய்ய இயலாதவன், வேதாத்யயனம் செய்வதில் எப்போதும் ஊக்கத்தோடிருக்க வேண்டும். அக்னி ஹோத்ரம் முதலான வற்றையும், தெய்வ பூஜையையும் சிரத்தையோடு செய்பவன் சராசரரூபமான இவ்வுலகை போஷித்தவனாகிறான்.*

अग्नौ प्रास्ताऽऽहुतिः सम्यगादित्यमुपतिष्ठते।
आदित्याज् जायते वृष्टिर् वृष्टेरन्नं ततः प्रजाः॥

**அக்நௌ ப்ராஸ்தாஹுதிஸ்ஸம் யகாதித்ய முபதிஷ்டதே |**
**ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர்வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: || 76**

*அக்னியில் நன்கு செய்யப்படும் ஹோமம் சூரியனைச் சென்றடையும்; அந்தச் சூரியனிடமிருந்து மழை பொழியும்; அந்த மழையினால் அன்னம் விளையும்; அந்த அன்னத்தால் மாந்தர்கள் பிறப்பார்கள்.*

यथा वायुं समाश्रित्य सर्वे जीवन्ति जन्तवः।
तथा गृहस्थमाश्रित्य वर्तन्ते सर्व आश्रमाः॥

**யதா வாயும் ஸமாஸ்ரித்ய ஸர்வே ஜீவந்தி ஜந்தவ: |**
**ததா க்ருஹஸ்தமாஷ்ரித்ய வர்த்தந்தே ஸர்வ ஆஷ்ரமா: || 77**

*காற்றினாலேயே சகல உயிர்களும் உயிர் வாழ்வதைப் போல், கிருஹஸ்தாஸ்ரமத்தில் உள்ளவனை ஆச்ரயித்தே மற்ற மூன்று ஆஸ்ரமவாசிகளும் வாழ்வார்கள்.*

यस्मात् त्रयोऽप्याश्रमिणो ज्ञानेनाऽन्नेन चाऽन्वहम्।
गृहस्थेनैव धार्यन्ते तस्माज् ज्येष्ठाऽऽश्रमो गृही॥

**யஸ்மாத் த்ரயோ அப்யாஷ்ரமிணோ ஞாநேநாந்நேந சாந்வஹம் |**
**க்ருஹஸ் தேநைவ தார்யந்தே தஸ்மாத் ஜ்யேஷ்டாஷ்ரயோ க்ருஹீ || 78**

*கிருஹஸ்தன் மற்ற ஆஸ்ரமவாசிகளை வேதாத்யயனம் செய்ய வைப்பவனாகவும், அவர்களுக்கு அன்னபானங்களைக் கொடுத்து தினமும் போஷிப்பவனாகவும் இருப்பதால், அவனே, மற்ற ஆஸ்ரம வாசிகளைக் காட்டிலும் உயர்ந்தவன்.*

स सन्धार्यः प्रयत्नेन स्वर्गमक्षयमिच्छता।
सुखं चेहेच्छता नित्यं योऽधार्यो दुर्बलेन्द्रियैः॥

**ஸஸந்தார்ய: ப்ரயத்நேந ஸ்வர்கமக்ஷய மிச்சதா |**
**சுகம் சேஹேச்சதா நித்யம் யோ அதார்யோ துர்பலேந்த் ரியை: || 79**

*இம்மையிலும் மறுமையிலும் சுகத்தை வேண்டும் கிருஹஸ்தன், இல்லற தர்மத்தை நன்கு கடைப்பிடிக்க வேண்டும். இந்திரியங்களை அடக்கி வாழாதவனால் இல்லற தர்மத்தை நன்கு கடைப்பிடிக்க இயலாது.*

ऋषयः पितरो देवा भूतान्यतिथयस् तथा।
आशासते कुटुम्बिभ्यस् तेभ्यः कार्यं विजानता॥

**ருஷய: பிதரோ தேவா: பூதாந்யதிதயஸ்ததா |**
**ஆஷாஸதே குடும்பிப்யஸ்தேப்ய: கார்யம் விஜாநதா ||** 80

ரிஷிகள், பித்ருக்கள், பூதங்கள், அதிதிகள் இவர்கள் தமக்கு வேண்டியவைகளை கிருஹஸ்தனிடமிருந்து எதிர்பார்ப்பார்கள். அதனால் கிருஹஸ்தன் அவர்களுக்குத் தேவையானதையறிந்து அளிக்க வேண்டும்.

स्वाध्यायेनाऽर्चयेतर्षीन् होमैर् देवान् यथाविधि।
पितॄन् श्राद्धैश् च नॄनन्नैर् भूतानि बलिकर्मणा॥

**ஸ்வாத்யாயேநார்சயேதர்ஷீந் ஹோமைர் தேவாந் யதாவிதி |**
**பித்ரூந் ஷ்ராத்தைஷ்ச ந்ருநந்நைர்பூதாநி பலிகர்மணா ||** 81

வேதாத்யயனம் செய்வதால் ரிஷிகள் பூஜிக்கப்பட்டவர் களாகின்றனர்.

ஹோமங்கள் செய்வதால் தேவர்கள் பூஜிக்கப்பட்டவர் களாகின்றனர்.

சிரார்த்த கருமங்கள் செய்வதால் பித்ருக்கள் பூஜிக்கப்பட்டவர் களாகின்றனர்.

அன்னமளிப்பதால் அதிதிகள் பூஜிக்கப்பட்டவர்களாகின்றனர்.

பலி கொடுப்பதால் பூதங்கள் பூஜிக்கப்பட்டவர்களாகின்றனர். (பலி என்பது உயிர்வதை அல்ல. உணவு கொடுப்பதே யாகும்.)

कुर्यादहरहः श्राद्धमन्नाद्येनोदकेन वा।
पयोमूलफलैर् वाऽपि पितृभ्यः प्रीतिमावहन्॥

**குர்யாதஹரஹ: ஷ்ராத்தமந்நாத்யே நோதகேந வா |**
**பயோ மூல பலைர்வாபி பித்ருப்ய: ப்ரீதி மாவஹேந் ||** 82

பித்ரு தேவர்களின் பிரீதிக்காக தினமும் அன்னத்தாலோ, தண்ணீராலோ, பால், கிழங்குகள், பழங்கள் முதலியவற்றாலோ சிரார்த்தம் செய்ய வேண்டும்.

एकमप्याशयेद् विप्रं पित्रर्थे पाञ्चयज्ञिके।
न चैवाऽत्राऽऽशयेत् कञ्चिद् वैश्वदेवं प्रति द्विजम्॥

**ஏகமப்யாஷயே த்விப்ரம் பித்ரர்தே பாஞ்சயஞுகே |**
**நசைவபத்ராஷயேத்கஞ்சித் வைஷ்வதேவம் ப்ரதி த்விஜம் ||** 83

பஞ்ச யக்ஞங்களில் ஒன்றான பித்ரு யக்ஞத்தில் ஒரு பிராம்மணனுக்காவது தினமும் அன்னமளிக்க வேண்டும். வைஷ்வதேவம் என்னும் பூதயக்ஞத்தில் அன்னமிடாமல் போனாலும் பலியை மட்டும் போட வேண்டும்.

वैश्वदेवस्य सिद्धस्य गृह्योऽग्नौ विधिपूर्वकम्।
आभ्यः कुर्याद् देवताभ्यो ब्राह्मणो होममन्वहम्॥

**வைஷ்வதேவஸ்ய ஸித்தஸ்ய க்ருஹ்யே அக்நெள விதிபூர்வகம் |**
**ஆப்ய: குர்யாத் தேவதாப்யோ ப்ராஹ்மணோ ஹோமமந்வஹம் || 84**

வைஷ்வ தேவத்துக்காக சமைத்த அன்னத்தை கிருஹ அக்னியில் தேவர்களுக்காகத் தினமும் ஹோமம் செய்ய வேண்டும்.

अग्नेः सोमस्य चैवाऽऽदौ तयोश् चैव समस्तयोः।
विश्वेभ्यश् चैव देवेभ्यो धन्वन्तरय एव च॥

**அக்நேஸ்ஸோமஸ்ய சைவாதெள தயோஷ்சைவ ஸமஸ்தயோ: |**
**விஷ்வேப்யஷ்சைவ தேவேப்யோ தந்வந்தரய ஏவ ச || 85**

ஹோமம் செய்யும் அக்னியில் முதலில் அக்னிக்கும், பிறகு சோமனுக்கும், அடுத்து அக்னி, சோமன் இருவருக்கும் சேர்த்தும், அடுத்து விஷ்வே தேவர்களுக்கும், அடுத்து தன்வந்திரிக்கும் ஹோமம் செய்ய வேண்டும்.

कुह्वै चैवाऽनुमत्यै च प्रजापतय एव च।
सहद्यावापृथिव्योश् च तथा स्विष्टकृतेऽन्ततः॥

**குஹ்வை சைவாநுமத்யை ச ப்ரஜாபதய ஏவ ச |**
**ஸஹத்யா வா ப்ருதிவ்யோஷ்ச ததா ஸ்விஷ்டக் ருதேஅந்தத: || 86**

அடுத்து குஹூ, அனுமதி, பிரஜாபதி, த்யு, பிருத்வி, அக்னி இவர்களுக்கு ஹோமம் செய்ய வேண்டும்.

एवं सम्यग् घविर् हुत्वा सर्वदिक्षु प्रदक्षिणम्।
इन्द्राऽन्तकाऽप्पतीन्दुभ्यः साऽनुगेभ्यो बलिं हरेत्॥

**ஏவம் ஸம்யக்கவிர்ஹுத்வா ஸர்பதிக்ஷு ப்ரதக்ஷிணம் |**
**இந்த்ரா ந்தகாப்பதீந்துப்ய: சாநுகேப்யோ பலிம் ஹரேத் || 87**

இவ்வாறு நன்கு ஹோமம் செய்து, இந்திரன் முதல் திக்பாலர் களுக்கு பிரதட்சிணமாக அவரவர் திக்கில் பலியிட வேண்டும்.

मरुद्भ्य इति तु द्वारि क्षिपेदप्स्वद्भ्य इत्यपि।
वनस्पतिभ्य इत्येवं मुसलोलूखले हरेत्॥

**மருத்ப்ய இதிது த்வாரி க்ஷிபேதப்ஸ்வத்ப்ய இத்யபி |**
**வநஸ்பதிப்ய இத்யேவம் முஸலோலூகலே ஹரேத் || 88**

*வாயிலருகில் 'மருத்ப்ய: ஸ்வாஹா' என்று மருத்துகளுக்கும், நீர்நிலையில் 'அத்ப்ய: ஸ்வாஹா' என்று ஜலதேவதைகளுக்கும், உரல், உலக்கையில் 'வனஸ்பதிப்ய: ஸ்வாஹா' என்று வனதெய்வங்களுக்கும் பலி வைக்க வேண்டும்.*

उच्छीर्षके श्रियै कुर्याद् भद्रकाल्यै च पादतः।
ब्रह्मवास्तोष्पतिभ्यां तु वास्तुमध्ये बलिं हरेत्॥

**உச்சீர்ஷகே ஷ்ரியை குர்யாத்பத்ரகாள்யை ச பாதத: |**
**ப்ரஹ்ம வாஸ்தோஷ்பதிப்யாம் து வாஸ்து மத்யே பலிம் ஹரேத் || 89**

*வீட்டின் வடகிழக்கு மூலை அல்லது படுக்கையின் தலைமாட்டில் லட்சுமிக்கும், தென்மேற்கு மூலை அல்லது படுக்கையின் கால்மாட்டில் பத்ரகாளிக்கும், வீட்டு நடுப் பகுதியில் பிரம்ம தேவருக்கும், வாஸ்து புருஷனுக்கும் பலியளிக்க வேண்டும்.*

विश्वेभ्यश्चैव देवेभ्यो बलिमाकाश उत्क्षिपेत्।
दिवाचरेभ्यो भूतेभ्यो नक्तञ्चारिभ्य एव च॥

**விஷ்வேப்யஷ்சைவ தேவேப்யோ பலிமாகாஷ உக்ஷிபேத் |**
**திவாசரேப்யோ பூதேப்யோ நக்தம்சாரிப்ய ஏவ ச || 90**

*பகலில் சஞ்சரிக்கும் பூதங்களுக்கும், இரவில் சஞ்சரிக்கும் பிராணிகளுக்கும் வீட்டுக்கு வெளியில் பலி வைக்க வேண்டும்.*

पृष्ठवास्तुनि कुर्वीत बलिं सर्वात्मभूतये।
पितृभ्यो बलिशेषं तु सर्वं दक्षिणतो हरेत्॥

**ப்ருஷ்டவாஸ்துநி குர்வீத் பலிம் ஸர்வாத்ம பூதயே |**
**பித்ருப்யோ பலிசேஷம் து ஸர்வம் தக்ஷிணதோ ஹரேத் || 91**

*வீட்டில் மேற்பகுதியில் 'சர்வாத்ம பூதயே ஸ்வாஹா' என்று பரம்பொருளுக்கு பலி வைக்க வேண்டும்.*

*மிகுந்த பலியன்னத்தைக் கொண்டு வீட்டின் தெற்கில் பித்ருக்களுக்கு பலி வைக்க வேண்டும்.*

शुनां च पतितानां च श्वपचां पापरोगिणाम्।
वायसानां कृमीणां च शनकैर् निर्वपेद् भुवि॥

**ஷுநாம் ச பதிதாநாம் ச ஷ்வபசாம் பாபரோகிணாம் |**
**வாயஸாநாம் க்ருமீணாம் ச ஷநைகர்நிர்வபேத் புவி || 92**

நாய்களுக்கும், பதிதர்களுக்கும், சண்டாளருக்கும், கொடிய நோய் பீடித்தவர்களுக்கும், காக்கைகளுக்கும், கிருமிகளுக்கும் தூசியில்லாத இடத்தில் பலி போட வேண்டும்.

एवं यः सर्वभूतानि ब्राह्मणो नित्यमर्चति।
स गच्छति परं स्थानं तेजोमूर्तिं पथर्जुना॥

**ஏவம் யஸ்ஸர்வபூதாநி ப்ராஹ்மணோ நித்யமர்சதி |**
**ஸ கச்சதி பரம் ஸ்தாநம் தேஜோமூர்த்தி: பதர்ஜுநா || 93**

இவ்வாறு பிராம்மணன் சகல பூதங்களுக்கும் பலி கொடுத்தலைச் செய்து, பிரம்ம தேஜஸைப் பெற்று, பிரம்ம பதத்தை அடைவான்.

कृत्वैतद् बलिकर्मैवमतिथिं पूर्वमाशयेत्।
भिक्षां च भिक्षवे दद्याद् विधिवद् ब्रह्मचारिणे॥

**க்ருத்வைதத்பலி கர்மைவ மதிதிம் பூர்வமாஷயேத் |**
**பிக்ஷாம் ச பிக்ஷவே தத்யாத்விதிவத் ப்ரஹ்ம சாரிணே || 94**

இவ்வாறாக கிருஹஸ்தன் பலி கர்மாவை முடித்த பிறகு முதலில் தன் இல்லத்துக்கு வந்திருக்கும் அதிதிக்கு உணவளிக்க வேண்டும். பிறகு சந்யாசிக்கும் பிரமமசாரிக்கும் பிட்சையிட வேண்டும்.

यत् पुण्यफलमाप्नोति गां दत्त्वा विधिवद् गुरोः।
तत् पुण्यफलमाप्नोति भिक्षां दत्त्वा द्विजो गृही॥

**யத் புண்யபலமாப்நோதி காம்தத்வா விதிவத் குரோ: |**
**தத் புண்யபலமாப்நோதி பிக்ஷாம் தத்யாத் த்விஜோ க்ருஹீ || 95**

கிருஹஸ்தன் சாஸ்திர முறைப்படி தன் குருவுக்கு கோதானம் செய்வதால் எந்த புண்ணியத்தை அடைவானோ, அந்தப் புண்ணியத்தை பிட்சையளிப்பதால் அடைவான்.

भिक्षामप्युदपात्रं वा सत्कृत्य विधिपूर्वकम्।
वेदतत्त्वार्थविदुषे ब्राह्मणायोपपादयेत्॥

**பிக்ஷாம்ப்யுத பாத்ரம் வா ஸத்க்ருத்ய விதிபூர்வகம் |**
**வேத தத்வார்த்த விதுஷே ப்ராஹ்மணோ ஸோப பாதயேத் || 96**

வேத தத்துவங்களை உணர்ந்த சான்றோனுக்கு பிட்சையிட சக்தி இல்லாதபோது, சாஸ்திர விதிப்படி பூஜித்து சக்திக்கேற்ற பிட்சையையோ, காய்கறிகளையோ, பாத்திரத்தில் நீரையோ அளிக்க வேண்டும்.

नश्यन्ति हव्यकव्यानि नराणामविजानताम्।
भस्मीभूतेषु विप्रेषु मोहाद् दत्तानि दातृभिः॥

**நஷ்யந்தி ஹவ்யகவ்யாநி நராணாமவி ஜாநதாம் |**
**பஸ்மீ பூதேஷு விப்ரேஷு மோஹாத்தத்தாநி தாத்ருபி: ||** 97

வேதமறியாத ஞானமற்றவருக்குக் கொடுக்கும் ஹவ்ய கவ்யங்கள் சாம்பலில் இட்ட ஆஹுதி போல் வீணாகும்.

विद्यातपःसमृद्धेषु हुतं विप्रमुखाग्निषु।
निस्तारयति दुर्गाच्च महतश्चैव किल्बिषात्॥

**வித்யா தபஸ்ஸம்ருத்தேஷு ஹுதம் விப்ரமுகதக்நிஷு |**
**நிஸ்தாரயதி துர்காச்ச மஹதஷ்சைவ கில்பிஷாத் ||** 98

வித்யை, தவம், பிரம்மதேஜசுடன் கூடின பிராம்மணனுக்கு கொடுக்கப்பட்ட தானங்கள் தீராத வியாதிகளைத் தீர்க்கும். சத்ரு பயத்தைப் போக்கும். மன்னனால் ஏற்படக்கூடிய உபத்திரவத்தை நீக்கும். மகா பாபங்களினின்றும் விடுவிக்கும்.

सम्प्राप्ताय त्वतिथये प्रदद्यादासनोदके।
अन्नं चैव यथाशक्ति सत्कृत्य विधिपूर्वकम्॥

**ஸம்ப்ராஸ்தாய த்வதிதயே ப்ரதத்யாதாஸநோ தகே |**
**அன்னம் சைவ யதா ஷக்தி ஸத்க்ருத்ய விதிபூர்வகம் ||** 99

வந்த அதிதிக்கு ஆசனமளித்து, ப்ாதத்தை அலம்ப தண்ணீர் கொடுத்து, சாஸ்திர முறைப்படி பூஜித்து, நல்ல விருந்தை அளிக்க வேண்டும்.

शिलानप्युञ्छतो नित्यं पञ्चाग्नीनपि जुह्वतः।
सर्वं सुकृतमादत्ते ब्राह्मणोऽनर्चितो वसन्॥

**ஷிலாநப்யுஞ்சதோ நித்யம் பஞ்சாக்னீநபி ஜுஹ்வத: |**
**ஸர்வம் சுக்ருதமாதத்தே ப்ராஹ்மணோ அநர்சிதோ வஸந் ||** 100

வயலில் சிந்தியிருக்கும் தானியங்களைக் கொணர்ந்து, அதைக் கொண்டு ஜீவனம் நடத்துபவனாக இருப்பவன் அடையும் புண்ணியத்தையும், பஞ்சாக்னி நடுவிலிருந்து தவம் செய்பவன் அடையும் புண்ணியத்தையும், அதிதியை நன்கு பூஜித்து விருந் தளித்தவன் அடைவான்.

तृणानि भूमिरुदकं वाक् चतुर्थी च सूनृता।
एतान्यपि सतां गेहे नोच्छिद्यन्ते कदाचन॥

**த்ருணாநி பூமிருதகம் வாக் சதுர்தீ ச ஸூந்ருதா |**
**ஏதாந்யபி ஸதாம் கேஹே நோச்சித்யந்தே கதாசந ||** 101

*அதிதிக்கு போஜனமளிக்க முடியாத போதிலும், படுப்பதற்கு இடம் கொடுத்து, பாய் கொடுத்து, அருந்த நீர் கொடுத்து, இனிய சொற்களால் உபசரிப்பது என்பது நல்லோர் இல்லங்களில் குறைவறக் கிடைக்கும். எனவே இவைகளை அளிக்க வேண்டும்.*

एकरात्रं तु निवसन्नतिथिर् ब्राह्मणः स्मृतः।
अनित्यं हि स्थितो यस्मात् तस्मादतिथिरुच्यते॥

**ஏகராத்ரம் து நிவஸந்நதிதிர்ப்ராஹ்மண: ஸ்ம்ருத: |**
**அநித்யம் ஹி ஸ்திதோ யஸ்மாத்தஸ்மாத்ததி திருச்யதே ||** 102

*ஒருவரில்லத்தில் ஓரிரவு மட்டுமே தங்கும் பிராம்மணனுக்கு அதிதி என்று பெயர்.*

*ஒரு நாளேனும் ஓரிடத்தில் நிலைத்து இருக்காததால் அவன் அதிதி எனப்படுகிறான்.*

नैकग्रामीणमतिथिं विप्रं साङ्गतिकं तथा।
उपस्थितं गृहे विद्याद् भार्या यत्राग्नयोऽपि वा॥

**நைகக்ராமீணமதிதிம் விப்ரம் ஸாங்கதிகம் ததா |**
**உபஸ்திதம் க்ருஹே வித்யாத்பார்யா யத்ராக்நயோ அபிவா ||** 103

*தன் கிராமத்திலேயே வசிப்பவனை, வாய் ஜாலம் பேசுபவனை, தன் மனைவி, அக்னி ஹோத்ரங்களோடு வசியாமல் இருப்பவனை அதிதியாக எண்ணக்கூடாது.*

उपासते ये गृहस्थाः परपाकमबुद्धयः।
तेन ते प्रेत्य पशुतां व्रजन्त्यन्नादिदायिनाम्॥

**உபாஸதே யே க்ருஹஸ்தா: பரபாகமபுத்தய: |**
**தேந தே ப்ரேத்ய பஷுதாம் வ்ரஜந்த்யந்நாதி தாயிநாம் ||** 104

*அறிவிலிகளாக, எப்போதும் பிறர் சாப்பாட்டை உண்பவர்கள், இறந்த பிறகு ஜன்மாந்தரங்களில் அன்னத்தையளித்தவன் வீட்டில் மிருகங்களாய் பிறப்பார்கள்.*

अप्रणोद्योऽतिथिः सायं सूर्योढो गृहमेधिना।
काले प्राप्तस् त्वकाले वा नाऽस्याऽनश्नन् गृहे वसेत्॥

**அப்ரணோத்யோ அதிதிஸ்ஸாயம் சூர்யோடோ க்ருஹமேதி நா |**
**காலே ப்ராப்தஸ்த்வகாலே வா நாஸ்யாநஷ்நந் க்ருஹே வசேத் || 105**

சூரியன் அஸ்தமித்த பிறகு வந்த அதிதியையும் கிருஹஸ்தன் அலட்சியப்படுத்தக்கூடாது. சாப்பாட்டு நேரத்துக்கு வந்தாலும், சாப்பாட்டு நேரம் கடந்து வந்தாலும் கண்டிப்பாக அதிதிக்கு அன்னமிட வேண்டும். அவ்வாறு தன்னை கௌரவிக்காத இல்லத்தில் அதிதி இருக்கலாகாது.

न वै स्वयं तदश्नीयादतिथिं यन् न भोजयेत्।
धन्यं यशस्यमायुष्यं स्वर्ग्यं चाऽतिथिपूजनम्॥

**நவை ஸ்வயம் ததஷ்நீயாததிதிம் யஸ்ந போஜயேத் |**
**தன்யம் யஷஸ்யம் ஆயுஷ்யம் ஸ்வர்க்யம் சாதிதிபூஜநம் || 106**

அதிதிக்கு இடாமல் தான் போஜனம் செய்யக்கூடாது. அதிதி பூஜை தனத்தைக் கொடுக்கும்; புகழைக் கொடுக்கும்; ஆயுளை வளர்க்கும்; சொர்க்கத்தைப் பெற்றுத் தரும். எனவே கண்டிப்பாக அதிதியை கௌரவிக்க வேண்டும்.

आसनाऽवसथौ शय्यामनुव्रज्यामुपासनाम्।
उत्तमेषूत्तमं कुर्याद् धीने हीनं समे समम्॥

**ஆஸநாவஸதௌ ஷய்யா மநுவ்ரஜ்யாமுபாஸநம் |**
**உத்தமேஷு உத்தமம் குர்யாத்தீநே ஹீநம்ஸமே ஸமம் || 107**

ஆசனம், இருக்க இடம், படுக்கை, பின்தொடர்ந்து சென்று வழியனுப்புதல், பணிவிடை புரிதல் - இவைகளை அதிதிகளின் தகுதிக்கேற்ப, உயர்ந்தவனுக்கு உயர்வாகவும், தகுதி குறைந்தவனுக்குக் குறைவாகவும், சமமானவர்களுக்குச் சமமாகவும் செய்ய வேண்டும்.

वैश्वदेवे तु निर्वृत्ते यद्यन्योऽतिथिराव्रजेत्।
तस्याऽप्यन्नं यथाशक्ति प्रदद्यान् न बलिं हरेत्॥

**வைஷ்வதேவே து நிர்வ்ருத்தே யதந்யோ அதிதிராவ் ரஜேத் |**
**தஸ்யாப்யந்நம் யதாஷக்தி ப்ரதத்யாந்ந பலிம் ஹரேத் || 108**

வைஷ்வதேவம் செய்து அதிதிக்கு உணவளித்த பிறகு வேறொரு அதிதி வந்தால், பலியன்னம் வைக்காமல், அந்த அதிதிக்கும் தன் சக்திக்கேற்ற அன்னத்தையளிக்க வேண்டும்.

न भोजनार्थं स्वे विप्रः कुलगोत्रे निवेदयेत्।
भोजनार्थं हि ते शसन् वान्ताऽशीत्युच्यते बुधैः॥

**ந போஜநார்த்தம் ஸ்வே விப்ர: குலகோத்ரே நிவேதயேத் |**
**போஜநார்த்தம் ஹி தே ஷம்ஸந் வாந்தாஷீத்யுச்யதே புதை: || 109**

*அதிதியாக வந்த பிராம்மணன் போஜனத்துக்காக தன் குலகோத்திரங்களைத் தெரியப்படுத்தக்கூடாது. போஜனம் சாப்பிட வேண்டும் என்பதற்காக, தன் குல கோத்திரங்களைக் கூறுபவன், வாந்தியெடுத்த அன்னத்தை சாப்பிடுபவனுக்கு நிகர் என்று சான்றோர் கூறுகின்றனர்.*

न ब्राह्मणस्य त्वतिथिर् गृहे राजन्य उच्यते।
वैश्यशूद्रौ सखा चैव ज्ञातयो गुरुरेव च॥

**ந ப்ராஹ்மணஸ்ய த்வதிதிர் க்ருஹே ராஜந்ய உச்யதே |**
**வைஷ்ய சூத்ரௌ ஸகா சைவ ஞாதயோ குருரேவ ச || 110**

*பிராம்மணனுடைய இல்லத்தில், க்ஷத்ரியனும் வைசியனும் அதிதிகளாக மாட்டார்கள்.*

*நண்பர்களும், உறவினர்களும் அதிதிகளாக மாட்டார்கள்.*

*குருவுக்கு செய்யும் பூஜை அதிதி பூஜையாகமாட்டாது.*

यदि त्वतिथिधर्मेण क्षत्रियो गृहमाव्रजेत्।
भुक्तवत्सु च विप्रेषु कामं तमपि भोजयेत्॥

**யதித்வதிதி தர்மேண க்ஷத்ரியோ க்ருஹமாவ்ரஜேத் |**
**புக்தவத்சு ச விப்ரேஷு காமம்தமபி போஜயேத் || 111**

*அதிதி தர்மத்தோடு க்ஷத்ரியன் வந்தால், பிராம்மணர்கள் சாப்பிட்ட பிறகு க்ஷத்ரியனுக்கு உணவளிக்க வேண்டும்.*

वैश्यशूद्रावपि प्राप्तौ कुटुम्बेऽतिथिधर्मिणौ।
भोजयेत् सह भृत्यैस् तावानृशंस्यं प्रयोजयन्॥

**வைஷ்ய க்ஷத்ராவபி ப்ராப்தௌ குடும்பே அதிதி தர்மி ணௌ |**
**போஜயேத்ஸஹ ப்ருத்யைஸ்தாவாந்ரு ஷம்ஸ்யம் ப்ரயோஜ யந் || 112**

*வைசிய சூத்திரர்கள் அதிதி தர்மத்தோடு வந்தால், அவர்களுக்குத் தனது வேலையாட்களுடன் அமர்த்தி உணவளிக்க வேண்டும்.*

इतरानपि सख्यादीन् सम्प्रीत्या गृहमागतान्।
प्रकृत्याऽन्नं यथाशक्ति भोजयेत् सह भार्यया॥

**இதராநபி ஸக்யாதீந் ஸம்ப்ரீத்யா க்ருஹமாகதாந் |**
**ஸத்க்ருத்யாந்நம் யதாஷக்தி போஜயேத் ஸஹபார்யபா || 113**

நண்பர்கள் இல்லத்துக்கு வந்தால், கிருஹஸ்தனின் மனைவி, அவர்களுக்கு மரியாதையோடு போஜன சமயத்தில் போஜனமளிக்க வேண்டும்.

सुवासिनीः कुमारीश् च रोगिणो गर्भिणीः स्त्रियः।
अतिथिभ्योऽग्र एवैतान् भोजयेदविचारयन्॥

**சுவாஸிநீ: குமாரீஷ்ச ரோகிணோ கர்பிணீ: ஸ்த்ரிய: |**
**அதிதிப்யோ அக்ர ஏவைதாந் போஜயேதவிசாரயந் || 114**

சுமங்கலிகள், சிறுமிகள், நோயாளிகள், கர்ப்பிணிப் பெண்கள் இவர்களுக்கு, அதிதிகளுக்கும் முன்பாகவே, சந்தேகமின்றி போஜன மளிக்கலாம்.

अदत्त्वा तु य एतेभ्यः पूर्वं भुङ्क्तेऽविचक्षणः।
स भुञ्जानो न जानाति श्वगृध्रैर् जग्धिमात्मनः॥

**அதத்வா து ய ஏதேப்ய: பூர்வம் புங்தே அவிசக்ஷண: |**
**ஸ புஞ்ஜாநோ நஜாநாதி ஷ்வக்ருத்ரைர்ஜக்தி மாத்மந: || 115**

அதிதிகள் முதல் வேலையாட்கள்வரை போஜனமளித்த பிறகே கிருஹஸ்தன் உண்ண வேண்டும். அவ்வாறன்றி முதலில் தான் சாப்பிடுவானேயாகில், அவன் இறந்த பின்னர் அவன் உடலை நாய்கள், நரிகள், கழுகுகள் சாப்பிடும் என்பதை அவன் அறியான்.

भुक्तवत्स्वथ विप्रेषु स्वेषु भृत्येषु चैव हि।
भुञ्जीयातां ततः पश्चादवशिष्टं तु दम्पती॥

**புக்தவத்ஸ்வத விப்ரேஷு ஸ்வேஷு ப்ருத்யேஷு சைவ ஹி |**
**புஞ்ஜீயாதாம் தத: பஷ்சாதவஷிஷ்டம் து தம்பதீ || 116**

பிராம்மணர்களும், அதிதிகளும், வேலையாட்களும் உண்ட பிறகு கணவனும் மனைவியும் மிகுந்த உணவை உண்ண வேண்டும்.

देवानृषीन् मनुष्यांश् च पितॄन् गृह्याश् च देवताः।
पूजयित्वा ततः पश्चाद् गृहस्थः शेषभुग् भवेत्॥

**தேவாந்ருஷீந் மநுஷ்யாம்ஷ்ச பித்ரூந் க்ருஹ்யாஷ்ச தேவதா: |**
**பூஜயித்வா தத: பஷ்சாத் க்ருஹஸ்தஷ்ஷேஷபுக் பவேத் || 117**

தேவர்களையும், ரிஷிகளையும், மனிதர்களையும், பித்ருக் களையும், கிருஹதெய்வங்களையும், நைவேத்தியம், பலி, அன்ன மிடுதலால் பூஜித்தபிறகு, மிகுந்த அன்னத்தை கிருஹஸ்தன் சாப்பிட வேண்டும்.

अघं स केवलं भुङ्क्ते यः पचत्यात्मकारणात्।
यज्ञशिष्टाशनं ह्येतत् सतामन्नं विधीयते॥

**அகம்ஸ கேவலம் புங்தே ய: பசத்யாத்ம காரணாத் |**
**யக்ஞ ஷிஷ்டாஷநம் ஹ்யேதத்ஸதாமன்னம் விதீயதே ||** **118**

எவன், தனக்காக மட்டுமே சமைத்துச் சாப்பிடுகிறானோ, அவன் பாபத்தை சாப்பிடுபவனாகிறான். பஞ்ச யக்ஞத்தில் மிகுந்த அன்னத்தை உண்பதே சிரேஷ்டமானது என்று பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கிறது.

राजर्त्विक्स्नातकगुरून् प्रियश्वशुरमातुलान्।
अर्हयेन् मधुपर्केण परि संवत्सरात् पुनः॥

**ராஜர்த்விக்ஸ்நாதககுரூந் ப்ரியஷ்வஷுர மாதுலாந் |**
**அர்ஹயேந்மதுபர்கேண பரி ஸம்வத்ஸராத்புந: ||** **119**

அரசன், ரித்விக், இல்லறத்தில் நுழையவிருக்கும் ஸ்நாதகன், நண்பர்கள், மாமனார், தாய்மாமன் முதலானோர் ஓராண்டு கழித்து வருவராயின், பழம், தயிர், தேன் முதலானவைகளுடன் உபசரிக்க வேண்டும்.

राजा च श्रोत्रियश् चैव यज्ञकर्मण्युपस्थितौ।
मधुपर्केण सम्पूज्यौ न त्वयज्ञ इति स्थितिः॥

**ராஜா ச ஷ்ரோத்ரியஷ்சைவ யக்ஞகர்மண்யு பஸ்தி தௌ |**
**மதுபர்கேண ஸம்பூஜ்யௌ ந த்வயக்ஞ இதி ஸ்திதி: ||** **120**

ராஜா, இல்லறத்தில் நுழையவிருப்பவன் முதலானோர் வந்து சென்று, ஓராண்டு முடிவதற்குள் மீண்டும் வருவரேல், பழம், தயிர், தேன் கொண்டு உபசரிக்க வேண்டியதில்லை. ஆனால் அவர்கள் யக்ஞத்துக்கோ, விவாகத்துக்கோ வந்திருந்தால் பழம், தயிர், தேன் முதலியவற்றால் உபசரித்து கௌரவிக்க வேண்டும்.

सायं त्वन्नस्य सिद्धस्य पत्न्यमन्त्रं बलिं हरेत्।
वैश्वदेवं हि नामैतत् सायम्प्रातर् विधीयते॥

**ஸாயம் த்வந்நஸ்ய ஸித்தஸ்ய பந்த்யமந்த்ரம் பலிம் ஹரேத் |**
**வைஷ்வதேவம் ஹி நாமைதத்ஸாயம் ப்ராதர் விதீயதே ||** **121**

சாயந்திர காலத்தில் சமைத்த அன்னத்தை இல்லத்தரசி பலியாக வைக்க வேண்டும். இது மந்திரமில்லாமல் செய்வது. இதுவும் வைஷ்வதேவம் எனப்படும். பகலில் கணவன் செய்யும் வைஷ்வதேவ பலிகர்மா மந்திரத்தோடு செய்வது.

पितृयज्ञं तु निर्वर्त्य विप्रश् चेन्दुक्षयेऽग्निमान्।
पिण्डाऽन्वाहार्यकं श्राद्धं कुर्यान् मासाऽनुमासिकम्॥

**பித்ருயக்ஞம் து நிர்வர்த்ய விப்ரஷ்சேந்துக்ஷயே அக்நிமாந் |**
**பிண்டாந்வாஹாா்யகம் ஷ்ராத்தம் குர்யாத்மாஸாநு மாஸிகம் ||** 122

பிராம்மணன் பித்ரு யக்ஞத்தை அமாவாசையன்று செய்ய வேண்டும். பிறகு மாதந்தோறும் செய்ய வேண்டிய பிண்டம் கொடுக்கும் சிராத்தத்தைச் செய்ய வேண்டும்.

पितृणां मासिकं श्राद्धमन्वाहार्यं विदुर् बुधाः।
तच्चाऽऽमिषेण कर्तव्यं प्रशस्तेन प्रयत्नतः॥

**பித்ருணாம் மாஸிகம் ஷ்ராத்தமந்வாஹார்யம் விதுர்புதா: |**
**தச்சாமிஷேண கர்தவ்யம் ப்ரஷஸ்தேந ப்ரயத்னத: ||** 123

பித்ருக்களுக்கு மாதாமாதம் செய்யும் மாசிக சிராத்தத்துக்கு அந்வாஹார்யம் என்று பெயர். இதைச் செய்யும்போது நல்ல மாமிசத்தை சம்பாதித்து, அதைக் கொண்டு முயற்சியோடு சிராத்தம் செய்ய வேண்டும்.

तत्र ये भोजनीयाः स्युर् ये च वर्ज्या द्विजोत्तमाः।
यावन्तश् चैव यैश् चाऽन्नैस् तान् प्रवक्ष्याम्यशेषतः॥

**தத்ர யே போஜநீயாஸ் ஸ்யுர்யே ச வர்ஜ்யா த்விஜோத்தமா: |**
**யாவந்தஷ்சைவ யைஷ்சாந்நைஸ்தாந் ப்ரவக்ஷ்யாம்யசேஷத: ||** 124

இந்த சிராத்தத்தில் உண்ணத்தக்கவர்கள், தகாதவர்கள், எத்தனை பேர் சாப்பிடலாம், சாப்பிடத் தகாதவைகள் எவையெவை இவை யனைத்தையும் கூறுகிறேன், கேளுங்கள்.

द्वौ दैवे पितृकार्ये त्रीनेकैकमुभयत्र वा।
भोजयेत् सुसमृद्धोऽपि न प्रवर्तेत विस्तरे॥

**த்வௌ தைவே பித்ருகார்யே த்ரீநேகைக முபயத்ர வா |**
**போஜயேத்சுச ம்ருத்தோஅபி ந ப்ரவர்தேத விஸ்தரே ||** 125

தேவஸ்தானத்துக்கு இரண்டு பிராம்மணர்களையும், பித்ரு ஸ்தானத்துக்கு மூன்று பிராம்மணர்களையும் நியமிக்க வேண்டும். எவ்வளவு தனிகனாக இருந்தாலும் இந்த எண்ணிக்கைக்கு மேல் அதிகமானவர்களை நியமிக்கக்கூடாது.

सत्क्रिया देशकालौ च शौचं ब्राह्मणसम्पदः।
पञ्चैतान् विस्तरो हन्ति तस्मान् नेहेत विस्तरम्॥

**ஸத்க்ரியாம் தேஷகாலெள ச ஷெளசம் ப்ராஹ்மண ஸம்பத: |**
**பஞ்சைதாந் விஸ்தரோ ஹந்தி தஸ்மாக்நேஹேத விஸ்தரம் || 126**

*வரிக்கப்பட்ட பிராம்மணர்களை நன்கு உபசரிப்பது, தேவையான இடம், குறித்தபடி அபர காலத்தில் செய்து முடிப்பது, ஆசாரம், தகுதியான பிராம்மணர்கள் என்னும் ஐந்தும், அதிக அளவில் பிராம்மணர்களை அழைத்துச் செய்யும்போது கெடும்.*

प्रथिता प्रेतकृत्यैषा पित्र्यं नाम विधुक्षये।
तस्मिन् युक्तस्यैति नित्यं प्रेतकृत्यैव लौकिकी॥

**ப்ரதிதா ப்ரேதக்ருத்யைஷா பித்ர்யம் நாம விதுக்ஷயே |**
**தஸ்மிந் யுக்தஸ்த் யைதி நித்யம் ப்ரேதக்ருத்யைவ லெளகிகீ || 127**

*அமாவாசையன்று பித்ருக்களுக்காக செய்யும் சிராத்தம் பிரசித்தமானது.*

*இதைச் சிரத்தையோடு செய்பவன் நல்ல பிள்ளைகள், தன தானியங்கள் பெற்று சிறப்போடு வாழ்வான்.*

श्रोत्रियायैव देयानि हव्यकव्यानि दातृभिः।
अर्हत्तमाय विप्राय तस्मै दत्तं महाफलम्॥

**ஷ்ரோத்ரியாயைவ தேயாநி ஹவ்யகவ்யாகி தாத்ருபி: |**
**அர்ஹத்தமாய விப்ராய தஸ்மைதத்தம் மஹாபலம் || 128**

*வேதாத்யயனம் செய்தவனுக்கே ஹவ்ய கவ்யங்களை வழங்க வேண்டும்.*

*வேதமோதியவனுக்கு வழங்கும் ஹவ்ய கவ்யங்கள், வழங்கியவனுக்கு மிகுந்த பலனைக் கொடுக்கும்.*

एकैकमपि विद्वांसं दैवे पित्र्ये च भोजयेत्।
पुष्कलं फलमाप्नोति नामन्त्रज्ञान् बहूनपि॥

**ஏகைகமபி வித்வாம்ஸம் தைவே பித்ர்யே ச போஜயேத் |**
**புஷ்கலம் பலமாப்நோதி நாமந்த்ரக்ஞாந் பஹூநபி || 129**

*தேவ கிரியைகளின் போதும், பித்ரு கிரியைகளின் போதும், வேதமோதிய பிராம்மணன் ஒருவனுக்காவது அன்னமளிக்க வேண்டும். இதனால் பூரணமான பலனைப் பெறமுடியும்.*

*அவ்வாறன்றி, வேதமறியாத பல பிராம்மணர்களுக்கு அன்னமளித்தாலும் அதனால் சிறிதும் பலனில்லை.*

दूरादेव परीक्षेत ब्राह्मणं वेदपारगम्।
तीर्थं तद् हव्यकव्यानां प्रदाने सोऽतिथिः स्मृतः॥

**தூராதேவ பரீக்ஷேத ப்ராஹ்மணம் வேதபாரகம் |**
**தீர்தம் தத்தவ்யகவ்யாநாம் ப்ரதாநே ஸோ அதிதி: ஸ்ம்ருத: ||** 130

*வேதாத்யயனம் செய்த பிராம்மணனை நன்கு பரீட்சித்து அறிஞர்தான் என்று அறிந்தபிறகு, அவரை நியமிக்க வேண்டும். இப்படிப்பட்டவர் 'அதிதி' எனப்படுவார்.*

सहस्रं हि सहस्राणामनृचां यत्र भुञ्जते।
एकस् तान् मन्त्रवित् प्रीतः सर्वानर्हति धर्मतः॥

**ஸஹஸ்ரம் ஹி ஸஹஸ்ரா ணாமந்ருசாம் யத்ர பூஞ்ஜதே |**
**ஏகஸ்தாந் மந்த்ரவித் ப்ரீத: ஸர்வாநர்ஹதி தர்மத: ||** 131

*கிரியைகளின் போது, வேதமறியாத ஆயிரக்கணக்கானவர் உண்டால் கிடைக்கும் பலன், வேதமறிந்த ஒருவர் சாப்பிடுவதால் கிடைக்கும்.*

ज्ञानोत्कृष्टाय देयानि कव्यानि च हवींषि च।
न हि हस्तावसृग्दिग्धौ रुधिरेणैव शुध्यतः॥

**ஞாநோத்க்ருஷ்டாய தேயாநி கவ்யாநி ச ஹவீம்ஷி ச |**
**நஹி ஹஸ்தா வஸ்ருக் திக்தௌ ருதிரேணைவ ஷுத்யத: ||** 132

*ஞானத்தால் உயர்ந்தோருக்கே ஹவ்ய கவ்யங்களைக் கொடுக்க வேண்டும்.*

*ரத்தம் தோய்ந்த கரங்களை ரத்தத்தால் சுத்தப்படுத்த முடியாது.*

यावतो ग्रसते ग्रासान् हव्यकव्येष्वमन्त्रवित्।
तावतो ग्रसते प्रेत्य दीप्तशूलर्ष्ट्ययोगुडान्॥

**யாவதோ க்ரஸதே க்ராஸாந் ஹவ்யகவ்யே ஷ்வமந்த்ர வித் |**
**தாவதோ க்ரஸதேப்ரேத்ய தீபஷூலர்ஷ்ட் யயோகுடாந் ||** 133

*வேத மந்திரங்களை அறியாதவனை நியமித்து, அவனுக்கு உணவளித்தவன், உண்டவன் எத்தனை கவளங்களை உண்டானோ, அத்தனை நெருப்பில் சுட்ட இரும்புக் கோளங்களை நரகத்தில் உண்பான்.*

ज्ञाननिष्ठा द्विजाः केचित् तपोनिष्ठास् तथाऽपरे।
तपःस्वाध्यायनिष्ठाश् च कर्मनिष्ठास् तथाऽपरे॥

**ஞானநிஷ்டா: த்விஜா: கேசித்தபோ நிஷ்டா ஸ்ததாபரே |**
**தபஸ்வாத்யாய நிஷ்டாஷ்ச கா்மநிஷ்டாஸ் ததாபரே || 134**

*சில திவிஜர்கள் ஆத்ம ஞானிகளாக இருப்பார்கள்; சிலர் தபஸ்விகளாக இருப்பார்கள். வேதாத்யயனத்திலும், தவத்திலும் சிறந்தவர்களாக சிலர் இருப்பார்கள்.*

*யாகங்கள் முதலான கிரியைகள் புரிவதில் சிறந்தவர்களாக சிலர் இருப்பார்கள்.*

ज्ञाननिष्ठेषु कव्यानि प्रतिष्ठाप्यानि यत्नतः।
हव्यानि तु यथान्यायं सर्वेष्वेव चतुर्ष्वपि॥

**ஞானநிஷ்டேஷு கவ்யாநி ப்ரதிஷ்டாப்யாநி யத்நத: |**
**ஹவ்யாநி து யதாந்யாயம் ஸர்வேஷ்வேவ சதுர்ஷ்வபி || 135**

*பித்ருக்களுக்கு செய்யும் கிரியைகளின்போது முயற்சி செய்து தேடி, ஆத்ம ஞானிகளையே நியமிக்க வேண்டும். வேத கிரியை களின்போது நால்வகையினரையும் நியமிக்கலாம்.*

अश्रोत्रियः पिता यस्य पुत्रः स्याद् वेदपारगः।
अश्रोत्रियो वा पुत्रः स्यात् पिता स्याद् वेदपारगः॥

**அஷ்ரோத்ரிய: பிதா யஸ்ய புத்ர: ஸ்யாத் வேத பாரக: |**
**அஷ்ரோத்ரியோ வா புத்ரஸ்ஸ்யாத்பிதா ஸ்யாத் வேத பாரக: || 136**

*வேதம் படித்த தந்தைக்கு வேதம் படிக்காத மகன் இருப்பான். வேதம் படிக்காத தந்தைக்கு வேதம் படித்த மகன் இருப்பான்.*

ज्यायांसमनयोर् विद्याद् यस्य स्याच् छ्रोत्रियः पिता।
मन्त्रसम्पूजनार्थं तु सत्कारमितरोऽर्हति॥

**ஜ்யாயாம்ஸமநயோர் வித்யாத்யஸ்ய ஸ்வாச்சோத்ரிய: பிதா |**
**மந்த்ரஸம்பூஜ நார்த்தம் து ஸத்காரமிதரோ அர்ஹதி || 137**

*இவர்களில், வேதம் படித்த மகனைவிட, வேதம் படித்த தந்தையின் மகனே சிறந்தவன்.*

*தந்தை வேதாத்யயனம் செய்யாமல் மகன் செய்திருப்பானே யாகில், அவன் படித்த வேதத்துக்காக அவனை கௌரவிக்க வேண்டும்.*

न श्राद्धे भोजयेन् मित्रं धनैः कार्योऽस्य सङ्ग्रहः ।
नारिं न मित्रं यं विद्यात् तं श्राद्धे भोजयेद् द्विजम् ॥

**ந ஷ்ராத்தே போஜயேந் மித்ரம் தநை: கார்யோ அஸ்ய ஸங்க்ரஹ: |**
**நாரிம் ந மித்ரம் யம் வித்யாத்தம் ஷ்ராத்தே போஜயேத் த்விஜம் || 138**

*சிராத்தத்தில் நண்பனை நியமிக்கக்கூடாது. அவனுக்கு வேறு வகைகளால் தனங்களைக் கொடுக்கலாம். தனக்கு சத்ருவாகவோ, நண்பனாகவோ நினைக்காதவனை சிராத்தத்தில் நியமிக்க வேண்டும்.*

यस्य मित्रप्रधानानि श्राद्धानि च हवींषि च।
तस्य प्रेत्य फलं नास्ति श्राद्धेषु च हविःषु च॥

**யஸ்ய மித்ர ப்ரதாநாநி ஷ்ராத்தாநி ச ஹவீம்ஷி ச |**
**தஸ்ய ப்ரேத்ய பலம் நாஸ்தி ஷ்ராத்தேஷு ச ஹவிஷ்ஷு ச || 139**

*தேவ பித்ரு கிரியைகளில் எவன், தன் நண்பர்களை நியமிக்கின்றானோ, அவனுக்கு, அவன் செய்த அக்கிரியைகளால் பலன் கிட்டாது.*

यः सङ्गतानि कुरुते मोहाच् छ्राद्धेन मानवः।
स स्वर्गाच् च्यवते लोकाच् छ्राद्धमित्रो द्विजाधमः॥

**யஸ்ஸங்கதாநி குருதே மோஹாத் ச்ராத்தேந மாநவ: |**
**ஸஸ்வர் காச்ச்யவதே லோகாச்சிராத்த மித்ரோ த்விஜாதம: || 140**

*சிராத்தத்தில் நண்பர்களை நியமிப்பவன் ஸ்வர்கத்தினின்றும் விலக்கப்பட்டவனாக கீழே விழுவான்.*

सम्भोजनी साऽभिहिता पैशाची दक्षिणा द्विजैः ।
इहैवाऽऽस्ते तु सा लोके गौरन्धेवैकवेश्मनि ॥

**ஸம்போஜநீ ஸாஅபிஹிதா பைஷாசீ தக்ஷிணா த்விஜை: |**
**இஹைவாஸ்தே து ஸா லோகே கௌரம் தேவைக வேஷ்மநி || 141**

*நண்பர்களைச் சந்தோஷப்படுத்துவதற்காக, அவர்களை சிராத்தத்தில் நியமித்து தட்சிணைகளைக் கொடுத்தால், அதற்கு பிசாசதட்சிணை என்று பெயர். இது, வீட்டிலேயே திரியும் குருட்டு மாட்டைப் போல பலன் தராது.*

यथेरिणे बीजमुप्त्वा न वप्ता लभते फलम्।
तथाऽनृचे हविर् दत्त्वा न दाता लभते फलम्॥

**யதேரிணே பீஜமுப்த்வாந வப்தா லபதே பலம் |**
**ததா அந்ருசே ஹவிர்தத்வா நதாதா லபதே பலம் || 142**

களர் நிலத்தில் விதையைப் போட்டவனுக்கு பலன் கிட்டாது. தகாதவரை சிராத்தத்தில் நியமிப்பவனுக்கும் எந்தப் பலனும் கிட்டாது.

दातॄन् प्रतिग्रहीतॄंश् च कुरुते फलभागिनः।
विदुषे दक्षिणा दत्ता विधिवत् प्रेत्य चेह च॥

**தாத்ரூந் ப்ரதிக்ரஹீத்ரூம்ஷ்ச குருதே பலபாகிந: |**
**விதுஷே தக்ஷிணா தத்தா விதிவத் ப்ரேத்ய சேஹ ச || 143**

தக்கவரை நியமித்து விதிப்படி பூஜித்து தட்சிணைகள் அளிப்பதால், அளித்தவனுக்கும், அதை ஏற்றவனுக்கும் நற்பலன்கள் ஏற்படும்.

कामं श्राद्धेऽर्चयेन् मित्रं नाऽभिरूपमपि त्वरिम्।
द्विषता हि हविर् भुक्तं भवति प्रेत्य निष्फलम्॥

**காமம் ஷ்ராத்தே அர்சயேந்மித்ரம் நாபிரூபமபி த்வரிம் |**
**த்விஷதா ஹி ஹவிர்புக்தம் பவதி ப்ரேத்ய நிஷ்பலம் || 144**

ஞானவான்களான தக்கவர்கள் கிடைக்காதபோது, நல்லவனான நண்பனை சிராத்தத்தில் நியமிக்கலாம். நல்லவனாக இருந்தாலும் பகைவனை நியமிக்கக் கூடாது. அவ்வாறு பகைவனை நியமித்து செய்த சிராத்தம் பலன் தராது.

यत्नेन भोजयेच् छ्राद्धे बह्वृचं वेदपारगम्।
शाखान्तगमथाऽध्वर्युं छन्दोगं तु समाप्तिकम्॥

**யத்நேந போஜயேத்ஷ்ராத்தே பஹ்வ்ருசம் வேதபாரகம் |**
**ஷாகாந்தகமதாத்வர்யும் சந்தோகம் து ஸமாப்திகம் || 145**

ரிக் வேதி, யஜுர் வேதி, ஸாம வேதி இவர்களை முயற்சி செய்து சிராத்தத்தில் வரித்து, உணவளிக்க வேண்டும்.

एषामन्यतमो यस्य भुञ्जीत श्राद्धमर्चितः।
पितॄणां तस्य तृप्तिः स्याच् छाश्वती साप्तपौरुषी॥

**ஏஷாமந்யதமோ யஸ்ய புஞ்ஜீத ஷ்ராத்தமர்சித: |**
**பித்ரூணாம் தஸ்ய த்ருப்தி: ஸ்யாத் ஷாஷ்வதீ ஸாப்தபௌருஷீ || 146**

இப்போது கூறியவர்களில் ஒருவராவது சிராத்தத்தில் நியமிக்கப் பட்டால், அந்த சிராத்தம் செய்தவனது முன் ஏழு தலைமுறை யினருக்கு திருப்தி கிட்டும்.

एष वै प्रथमः कल्पः प्रदाने हव्यकव्ययोः।
अनुकल्पस् त्वयं ज्ञेयः सदा सद्भिरनुष्ठितः॥

**ஏஷ வை ப்ரதம: கல்ப: ப்ரதாநே ஹவ்யகவ்யயோ: |**
**அநுகல்பஸ்த்வயம் ஞேய: ஸதா ஸத்பிரதுஷ்டித: ||** 147

*இதுவரை கூறப்பட்டவைகள் பிரதானமானவை. இனி உரைக்கப் போவது சாதாரணமானவை. இவற்றையே பெரியோர்கள் கடைப்பிடித் தார்கள்.*

मातामहं मातुलं च स्वस्रीयं श्वशुरं गुरुम्।
दौहित्रं विट्पतिं बन्धुमृत्विग्याज्यौ च भोजयेत्॥

**மாதாமஹம் மாதுலம் ச ஸ்வஸ்ரீயம் ஷ்வஷூரம் குரும் |**
**தௌஹித்ரம் விட்பதிம் பந்தும்ருத்விக் யாஜ்யௌ ச போஜயேத் ||** 148

*இக் கிரியைகளின் போது தக்க ஞானியர் கிடைக்காவிடில், தந்தையை, தாய் மாமனை, மருகனை, மாமனாரை, குருவை, தன் பெண்ணின் மகனை, மாப்பிள்ளையை, சிறிய தாயின் பிள்ளைகளை, யக்ஞங்கள் செய்து வைத்த ரித்விக்கை, சிஷ்யனை நியமிக்கலாம்.*

न ब्राह्मणं परीक्षेत दैवे कर्मणि धर्मवित्।
पित्र्ये कर्मणि तु प्राप्ते परीक्षेत प्रयत्नतः॥

**நப்ராஹ்மணம் பரீக்ஷேத தைவே கர்மணி தர்மவித் |**
**பித்ர்யே கர்மணி து ப்ராப்தே பரீக்ஷேத ப்ரயத்னத: ||** 149

*தர்ம சாஸ்திரத்தை அறிந்தவன் தேவ கிரியையில், பிராம்மணனின் குலம், கோத்ரம், தகுதிகளை பரீட்சிக்க வேண்டிய தில்லை. ஆனால் சிராத்த கிரியையில் பரீட்சிக்க வேண்டும்.*

ये स्तेनपतितक्लीबा ये च नास्तिकवृत्तयः।
तान् हव्यकव्ययोर् विप्राननर्हान् मनुरब्रवीत्॥

**யே ஸ்தேநபதிதக்ளீபா யே ச நாஸ்திக்ய வ்ருத்தய: |**
**தாந் ஹவ்யகவ்யயோர்விப்ராநநர்ஹாந் மநுரப்ரவீத் ||** 150

*திருடன், பதிதன், நபும்சகன், நாஸ்திகன் இத்தகைய பிராம்ம ணர்கள், சிராத்த காரியத்திலும், தேவ காரியத்திலும் நியமிக்க யோக்கியதையற்றவர்கள் என்று மநு கூறியுள்ளார்.*

जटिलं चानधीयानं दुर्बलं कितवं तथा।
याजयन्ति च ये पूगांस् तांश् च श्राद्धे न भोजयेत्॥

**ஜடிலம் சாநதீயாநம் துர்பலம் கிதவம் ததா |**
**யாஜயந்தி சயே பூகாம்ஸ்தாம்ஸ்ச ஷ்ராத்தே ந போஜயேத் ||** 151

ஜடை தரித்தவன், வேதமோதாதவன், வழுக்கைத் தலையன், யாகம் செய்து கொண்டிருப்பவன் இவர்களை சிராத்தத்தில் வரித்து உணவளிக்கக்கூடாது.

चिकित्सका देवलका मांसविक्रयिणस् तथा।
विपणेन च जीवन्तो वर्ज्याः स्युर् हव्यकव्ययोः॥

**சிகித்ஸகாந் தேவலகா மாம்ஸ விக்ரயிணஸ்ததா |**
**விபணேந ச ஜீவந்தோ வர்ஜ்யா: ஸ்யுர்ஹவ்யகவ்யயோ || 152**

வைத்தியன், பூஜாரி, மாமிசம் விற்பவன், வர்த்தகன் - இவர்களையும் ஹவ்ய கவ்யங்கள் அளிக்கும் விஷயத்தில் சேர்க்கக் கூடாது.

प्रेष्यो ग्रामस्य राज्ञश्च कुनखी श्यावदन्तकः।
प्रतिरोद्धा गुरोश्चैव त्यक्ताऽग्निर् वार्धुषिस् तथा॥

**ப்ரேஷ்யோ க்ராமஸ்ய ராக்ஞஷ்ச குநகீ ஷ்யாவதந்தக: |**
**ப்ரதிரோத்தா குரோஷ்சைவ த்யக்தாக் நிர்வார்துஷிஸ் ததா || 153**

அரசனுக்கும் ஊராருக்கும் கூலிக்காக உழைப்பவன், சொத்தை நகங்களுள்ளவன், கறுப்புப் பற்களையுடையவன், குருவுக்கு விரோதமாக நடப்பவன், அக்னி ஹோத்ரம் செய்யாதவன், வட்டியால் ஜீவிப்பவன் இவர்களையும் இக்கிரியைகளில் சேர்க்கக் கூடாது.

यक्ष्मी च पशुपालश्च परिवेत्ता निराकृतिः।
ब्रह्मद्विट् परिवित्तिश्च गणाऽभ्यन्तर एव च॥

**யக்ஷ்மீ ச பஷுபாலஷ்ச பரிவேத்தா நிராக்ருதி: |**
**ப்ரஹ்மத்விட் பரிவித்திஷ்ச கணாப்யந்தர ஏவ ச || 154**

க்ஷயரோகியும், ஜீவனத்துக்காக ஆடு மாடுகளை மேய்ப்பவனும், அண்ணனுக்கு முன்பே திருமணம் செய்து கொண்டவனும், பஞ்சயக்ஞங்கள் செய்யாதவனும், பிராம்மண துவேஷியும், தம்பிக்குத் திருமணமான பிறகும் தான் மணம் புரியாதிருப்பவனும், உறவினர் பணத்தில் வாழ்பவனும், தேவ பித்ரு கிரியைகளில் சேர்க்கத் தகாதவர்கள்.

कुशीलवोऽवकीर्णी च वृषलीपतिरेव च।
पौनर्भवश्च काणश्च यस्य चोपपतिर् गृहे॥

**குஷீலவோ அவகீர்ணீ ச வ்ருஷலீ பதிரேவ ச |**
**பௌனர்பவஷ்ச காணஷ்ச யஸ்ய சோப பதிர்க்ருஹே || 155**

கூத்தன், பெண்ணாசையால் தன் பிரம்மசரியத்தை இழந்தவன், தன் இனத்துப் பெண்ணை மணக்காமல் தாழ்ந்த இனத்தவளை மணந்தவன், விதவையை மறுமணம் புரிந்து அதனால் பிறந்த பிள்ளை, ஒற்றைக் கண்ணன், சோர புருஷன் முதலானவர்களும் தேவ பித்ரு கிரியைகளில் சேர்க்கத் தகாதவர்கள்.

भृतकाऽध्यापको यश्च भृतकाऽध्यापितस् तथा।
शूद्रशिष्यो गुरुश् चैव वाग्दुष्टः कुण्डगोलकौ॥

**ப்ருதகாத்யாபகோ யஷ்ச ப்ருதகாத்யா பிதஸ் ததா |**
**சூத்ரஷிஷ்யோ குருஷ்சைவ வாக்துஷ்ட: குண்டகோள கௌ || 156**

கூலிக்கு வேதமோதுபவன், கூலி கொடுத்து வேதம் படித்தவன், சூத்திரனுடைய சிஷ்யன், சூத்திரனுடைய குரு, கடுஞ்சொல் பேசுபவன், சோரம் போன பெண் பெற்ற பிள்ளை முதலானவர் களும் சேர்க்கத் தகாதவர்கள்.

अकारणपरित्यक्ता मातापित्रोर् गुरोस् तथा।
ब्राह्मैर् यौनैश् च सम्बन्धैः संयोगं पतितैर् गतः॥

**அகாரண பரித்யக்தா மாதாபித்ரோர் குரோஸ்ததா |**
**ப்ராஹ்மைர்யோனைஷ்ச ஸம்பந்தைஸ்ஸம் யோகம் பதிதைர் கத: || 157**

காரணமின்றி பெற்றோரையும் குருவையும் விட்டவன், பதிதனுடன் சேர்ந்து வேதமோதியவன், பதிதனுடன் விவாக சம்பந்தம் வைத்துக் கொண்டவன் இவர்களும் இக்கிரியைகளில் சேர்க்கத் தகாதவர்கள்.

अगारदाही गरदः कुण्डाशी सोमविक्रयी।
समुद्रयायी बन्दी च तैलिकः कूटकारकः॥

**அகாரதாஹீ கரத: குண்டாஷீ ஸோம விக்ரயீ |**
**ஸமுத்ர யாயீபந்தீ ச தைலிக: கூடகாரக: || 158**

வீட்டுக்கு நெருப்பு வைத்தவன், விஷம் வைத்தவன், விபசாரியின் அன்னம் உண்பவன், கள் விற்பவன், சமுத்திரம் கடந்து சென்றவன், துதி பாடுபவன், எண்ணெய் ஆட்டுபவன், பொய்சாட்சி கூறியவன் இவர்களும் விலக்கத் தக்கவர்கள்.

पित्रा विवदमानश्च कितवो मद्यपस् तथा।
पापरोग्यभिशस्तश्च दाम्भिको रसविक्रयी॥

**பித்ரா விவதமாநஷ்ச கிதவோ மத்யபஸ்ததா |**
**பாபரோக்யபி ஷஸ்தஷ்ச தாம்பிகோ ரஸவிக்ரயீ || 159**

தந்தையுடன் வாதிடுபவன், சூதாடிகளுக்குப் பணம் கொடுத்து தனக்காக ஆடச் சொல்பவன், போதையளிக்கும் கள் முதலானவை களைக் குடிப்பவன், பாவத்தால் ரோகியானவன், குற்றம் சுமத்தப் பட்டவன், டம்பத்துக்காக தர்மம் புரிவோன், ரசங்களை விற்பவன் முதலானவர்களும் விலக்கப்பட வேண்டியவர்கள்.

धनुःशराणां कर्ता च यश् चाऽग्रेदिधिषूपतिः ।
मित्रध्रुग् द्यूतवृत्तिश्च पुत्राचार्यस् तथैव च ॥

**தநுஷ்ஷராணாம் கர்தா ச யஷ்சாக்ரேதிதிஷூபதி: |**
**மித்ரத்ருக்த்யூத வ்ருத்திஷ்ச புத்ராசார்யஸ்ததைவ ச || 160**

வில், பாணங்கள் போன்றவற்றைச் செய்பவன், மூத்தவள் மணமாகாமல் இருக்கும்போது இளையவளை மணந்தவன், நண்பனுக்குத் துரோகம் செய்தவன், சூதாடி ஜீவிப்பவன், மகனிடம் வேதம் படித்தவன் முதலானோரும் விலக்கப்பட வேண்டியவர்கள்.

भ्रामरी गण्डमाली च श्वित्र्यथो पिशुनस् तथा ।
उन्मत्तोऽन्धश्च वर्ज्याः स्युर् वेदनिन्दक एव च ॥

**ப்ராமரீ கண்டமாலீ ச ஷ்வித்ர்யதோ பிஷுநஸ்ததா |**
**உன்மத்தோ அந்தஷ்ச வர்ஜ்யா: ஸ்யுர்வேதநிந்தக ஏவ ச || 161**

உன்மத்தன், கண்டமாலை நோய் கொண்டவன், வெண் குஷ்டன், கோள் சொல்கிறவன், பைத்தியம் பிடித்தவன், குருடன், வேதத்தை நிந்திப்பவன் முதலானவர்களும் விலக்கப்பட வேண்டியவர்கள்.

हस्तिगोऽश्वोष्ट्रदमको नक्षत्रैर् यश्च जीवति ।
पक्षिणां पोषको यश्च युद्धाऽऽचार्यस् तथैव च ॥

**ஹஸ்தி கோஷ்வோஷ்ட்ரதமகோ நக்ஷத்ரைர்யஷ்ச ஜீவதி |**
**பக்ஷிணாம் போஷகோ யஷ்ச யுத்தாசார்ய ஸ்ததைவ ச || 162**

யானைகள், பசுக்கள், ஒட்டகங்கள், குதிரைகள் முதலான வற்றைப் பழக்குபவனும், ஜோதிஷத்தால் ஜீவிக்கிறவனும், பறவைகளை வளர்ப்ப வனும், வில்வித்தை கற்றுத் தருபவனும் விலக்கப்பட வேண்டியவர்கள்.

स्रोतसां भेदको यश्च तेषां चाऽऽवरणे रतः ।
गृहसंवेशको दूतो वृक्षाऽऽरोपक एव च ॥

**ஸ்ரோதஸாம் பேதகோ யஷ்ச தேஷாம் சாவரணே ரத: |**
**க்ருஹஸம்வேஷகோ தூதோ வ்ருக்ஷாரோபக ஏவ ச || 163**

தண்ணீர்க் கரையை வெட்டுபவன், ஓடும் நீருக்குள் குறுக்கே அணைகட்டித் தேக்குபவன், வாஸ்து சாஸ்திரத்தைக் கொண்டு ஜீவிப்பவன், தூதன், கூலிக்கு மரம் செடிகளை வளர்ப்பவன் முதலானோரும் விலக்கத்தக்கவர்கள்.

श्वक्रीडी श्येनजीवी च कन्यादूषक एव च।
हिंस्रो वृषलवृत्तिश्च गणानां चैव याजकः॥

**ஷ்வக்ரீடீ ஷ்யேநஜீவீச கந்யாதூஷக ஏவ ச |**
**ஹிம்ஸ்ரோ வ்ருஷலவ்ருத்திஷ்ச கணாநாம் சைவ யாஜக: ||** 164

நாயுடன் விளையாடுபவன், குருவிகளைப் பிடித்து விற்பவன், கன்னிப் பெண்ணை அடைய நினைப்பவன், தூஷிக்கத்தக்கவன், பிறரை இம்சிப்பவன், கீழான தொழில்களைச் செய்பவன், கணங்கள் முதலான சிறு தெய்வங்களுக்கு யக்ஞம் செய்விப்பவன் முதலானவர்களும் விலக்கத் தக்கவர்கள்.

आचारहीनः क्लीबश्च नित्यं याचनकस् तथा।
कृषिजीवी श्लीपदी च सद्भिर् निन्दित एव च॥

**ஆசாரஹீந: க்லீபஷ்ச நித்யம் யாசநக ஸ்ததா |**
**க்ருஷிஜீவீ ஷ்லீபதீ ச ஸத்பிர்நிந்தித ஏவ ச ||** 165

ஆசாரமற்றவன், நபும்சகன், யாசகத்தால் ஜீவிப்பவன், தானே விவசாயம் செய்து ஜீவிப்பவன், யானைக்கால் வியாதியஸ்தன், பெரியோரால் நிந்திக்கப்பட்டவன் போன்றோரும் விலக்கத் தக்கவர்கள்.

औरभ्रिको माहिषिकः परपूर्वापतिस् तथा।
प्रेतनिर्यातकश् चैव वर्जनीयाः प्रयत्नतः॥

**ஔரப்ரிகோ மாஹிஷிக: பரபூர்வாபதிஸ் ததா |**
**ப்ரேத நிர்யாதகஷ்சைவ வர்ஜநீயா: ப்ரயத்நத: ||** 166

ஆடுகளை விற்றுப் பிழைப்பவன், எருமைகளால் ஜீவிப்பவன், விதவையை மணந்தவன், கூலிக்கு சவங்களை சுமப்பவன் இவர்களையும் கவனத்தோடு விலக்க வேண்டும்.

एतान् विगर्हिताऽऽचारानपाङ्क्तेयान् द्विजाऽधमान्।
द्विजातिप्रवरो विद्वानुभयत्र विवर्जयेत्॥

**ஏதாந்விகர்ஹிதா சாராநபாக்தேயாந் த்விஜாதமாந் |**
**த்விஜாதி ப்ரவரோ வித்வாநுபயத்ர விவர்ஜயேத் ||** 167

இவ்வாறான நிந்திக்கத்தக்கவர்களையும், நல்லோருடன் சம பந்தியில் அமர்ந்துண்ண அருகதையற்ற பிராம்மண அதமர்களையும் முயற்சி யோடு விலக்க வேண்டும்.

ब्राह्मणस् त्वनधीयानस् तृणाग्निरिव शाम्यति।
तस्मै हव्यं न दातव्यं न हि भस्मनि हूयते॥

**ப்ராஹ்மணஸ்த்வ நதீ யாநஸ்த்ருணாக்நிரிவ ஷாம்யதி |**
**தஸமை ஹவ்யம் நதாதவ்யம் நஹி பஸ்மநி ஹூயதே || 168**

எரிந்த புல்லின் சாம்பலில் ஹவிஸை சொரிந்தால் எப்படி பயனற்றதோ, அவ்வாறு வேதமோதாத பிராம்மணனுக்கு கொடுத்த ஹவ்ய கவ்யங்கள் பலனற்றதே.

अपाङ्क्तदाने यो दातुर् भवत्यूर्ध्वं फलोदयः।
दैवे हविषि पित्र्ये वा तत् प्रवक्ष्याम्यशेषतः॥

**அபாங்க்ததாநே யோ தாதுர்பவ த்யூர்த்வம் பலோதய: |**
**தைவே ஹவிஷி பித்ர்யே வா தத் ப்ரவக்ஷ்யாம்ய ஷேஷத: || 169**

பந்தியில் அமர அருகதையற்ற இவ்வாறானவர்களுக்கு தேவ கிரியைகளிலும், பித்ரு கிரியைகளிலும் ஹவ்ய கவ்யங்கள் கொடுப்பவனுக்கு எந்த பலன்கள் கிடைக்கும் என்பதை முழுமை யாகக் கூறுகிறேன், கேளுங்கள்.

अव्रतैर् यद् द्विजैर् भुक्तं परिवेत्रादिभिस् तथा।
अपाङ्क्तेयैर् यदन्यैश् च तद् वै रक्षांसि भुञ्जते॥

**அவ்ரதைர் யத்த்விஜைர் புக்தம் பரிவேத்ராதி பிஸ்ததா |**
**அபாங்தேயைர் யதந்யைஷ்ச தத்வை ரக்ஷாம்ஸி பூஞ்ஜதே || 170**

விரதானுஷ்டானமில்லாதவர்களாலும், பரிவேத்தர்களாலும் பந்தியில் அமர அருகதையற்றவர்களாலும் உண்ணப்பட்ட அன்னத்தை ராட்சசர்கள் உண்பார்கள்.

दाराग्निहोत्रसंयोगं कुरुते योऽग्रजे स्थिते।
परिवेत्ता स विज्ञेयः परिवित्तिस् तु पूर्वजः॥

**தாராக்நிஹோத்ர ஸம்யோகம் குருதேயோ அக்ரஜேஸ்திதே |**
**பரிவேத்தா ஸ விக்ஞேய: பரிவித்திஸ்து பூர்வஜ: || 171**

தமையனுக்கு முன் திருமணமும், அக்னி காரியங்களும் செய்யும் தம்பி 'பரிவேத்தன்' எனப்படுவான். அந்த தமையன் 'பரிவித்தி' எனப்படுவான்.

परिवित्तिः परीवेत्ता यया च परिविद्यते।
सर्वे ते नरकं यान्ति दातृयाजकपञ्चमाः॥

**பரிவித்தி: பரிவேத்தா யயா ச பரிவித்யதே |**
**ஸர்வே தே நரகம் யாந்தி தாத்ரு யாஜகபஞ்சமா: || 172**

*பரிவித்தி, பரிவேத்தன், அவனை மணந்து கொண்ட பெண், அப்பெண்ணை கன்யாதானம் செய்தவன், அந்தத் திருமணத்தை ஹோமம் செய்து நடத்தி வைத்தவன் - இந்த ஐவரும் நரகத்தை அடைவார்கள்.*

भ्रातुर् मृतस्य भार्यायां योऽनुरज्येत कामतः।
धर्मेणापि नियुक्तायां स ज्ञेयो दिधिषूपतिः॥

**ப்ராதுர் ம்ருதஸ்ய பார்யாயாம் யோஅநுரஜ்யேத காமத: |**
**தர்மேணாபி நியுக்தாயாம் ஸ ஞேயோ திதிஷூபதி: || 173**

*இறந்து போன அண்ணன் மனைவியை முறைப்படி மணந்தவனாக இருந்தாலும், அவளோடு காமத்தோடிருப்பவன் 'அக்தேதிரிசன்' எனப்படுவான்.*

परदारेषु जायेते द्वौ सुतौ कुण्डगोलकौ।
पत्यौ जीवति कुण्डः स्यान् मृते भर्तरि गोलकः॥

**பரதாரேஷு ஜாயேதே த்வெள சுதெள குண்டகோளகெள |**
**பத்யெள ஜீவதி குண்ட: ஸ்யாந்ம்ருதே பர்தரி கோளக: || 174**

*கணவன் இருக்கும்போதே இன்னொருவன் தொடர்பால் பிறந்தவன் குண்டன். கணவன் இறந்த பிறகு இன்னொருவன் தொடர்பால் பிறந்தவன் கோளகன்.*

तौ तु जातौ परक्षेत्रे प्राणिनौ प्रेत्य चेह च।
दत्तानि हव्यकव्यानि नाशयेते प्रदायिनाम्॥

**தெள து ஜாதெள பரக்ஷேத்ரே ப்ராணிநெள ப்ரேத்ய சேஹச |**
**தத்தாநி ஹவ்யகவ்யாநி நாஷயேதே ப்ரதாயிநாம் || 175**

*இவ்வாறு வேறு இடத்தில் பிறந்த குண்டனுக்கும் கோளக னுக்கும் ஹவ்யகவ்யங்கள் அளித்தால், அதற்குரிய பலன் கிட்டாது. மேலும் அளித்தவனுடைய இம்மை மறுமை இன்பங்களும் நாச மடையும்.*

अपाङ्क्त्यो यावतः पाङ्क्त्यान् भुञ्जानाननुपश्यति।
तावतां न फलं तत्र दाता प्राप्नोति बालिशः॥

**அபாங்க்த்யோ யாவத: ப்ராக்ஞாந் பூஞ்ஜாநாநநு பஷ்யதி |**
**தாவதாம் ந பலம் தத்ர தாதா ப்ராப்நோதி பாலிஷ: || 176**

பந்தியில் அமரத் தகாதவன் பந்தியில் அமர்ந்து, அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போது, எத்தனை பெரியோர் சாப்பிடுகிறார்களோ, அப்பெரியோர் சாப்பிடுவதால் அன்னமளித்தவனுக்கு எவ்வளவு பலன் கிடைக்க வேண்டுமோ, அவ்வளவு பலனும் கிட்டாது போகும். எனவே பெரியோருக்கு அன்னமிடும்போது, தகாதவர் பார்வை படாதவண்ணம் அன்னமிட வேண்டும். இல்லையேல், அந்த அருகதையற்றவன் அவ்வளவு பலனையும் அழித்து விடுவான்.

वीक्ष्यान्धो नवतेः काणः षष्टेः श्वित्री शतस्य तु।
पापरोगी सहस्रस्य दातुर् नाशयते फलम्॥

**வீக்ஷ்யாந்தோ நவதே: காண: ஷஷ்டே: ஷ்வித்ரீ ஷதஸ்யது |**
**பாபரோகீ ஸஹஸ்ரஸ்ய தாதுர் நாஷயதே பலம் ||** 177

குருடன் தன் பந்தியில் தொண்ணூறு பேர் சாப்பிட்ட பலனை, அன்னதாதாவுக்குக் கிட்டாமல் அழிப்பான்.

ஒரு கண் குருடானவன் அறுபது பேர் சாப்பிட்ட பலனையும், வெண்குஷ்டன் நூறு பேர் சாப்பிட்ட பலனையும், ராஜபிளவை வியாதிக்காரன் ஆயிரம் பேர் சாப்பிட்ட பலனையும் அழிப்பர்.

यावतः संस्पृशेदङ्गैर् ब्राह्मणाञ् छूद्रयाजकः।
तावतां न भवेद् दातुः फलं दानस्य पौर्तिकम्॥

**யாவதஸ்ஸம்ஸ்ப்ரு ஷேதம்கைர் ப்ராஹ்மணாந் சூத்ரயாஜக: |**
**தாவதாம் ந பவேத் தாது: பலம் தானஸ்ய பௌர்திகம் ||** 178

சூத்திரர்களுக்கு புரோகிதம் செய்பவன், தன் பந்தியில் அமர்ந்திருக்கும் எத்தனை பேரைத் தொடுகிறானோ, அத்தனை பேர் சாப்பிட்ட பலனை அன்னதாதாவுக்குக் கிட்டாதபடி அழிப்பான்.

वेदविच् चापि विप्रोऽस्य लोभात् कृत्वा प्रतिग्रहम्।
विनाशं व्रजति क्षिप्रमामपात्रमिवाम्भसि॥

**வேதவிச்சாபி விப்ரோ அஸ்ய லோபாத்க்ருத்வா ப்ரதிக்ரஹம் |**
**விநாஷம் வ்ரஜதி க்ஷிப்ரமாமபாத் ரமிவாம்பஸி ||** 179

வேத வித்தான பிராம்மணன் ஆசையினால், சூத்திரர்க்கு புரோஹிதம் செய்யும் பிராம்மணனிடமிருந்து தானம் பெறுவானே யாகில், சுடாத மண்பானை நீரில் விழுந்தால் கரைந்து போவது போன்று நாசமடைவான்.

सोमविक्रयिणे विष्ठा भिषजे पूयशोणितम्।
नष्टं देवलके दत्तमप्रतिष्ठं तु वार्धुषौ॥

**ஸோம விக்ரயிணே விஷ்டா பிஷஜே பூயஷோணிதம் |**
**நஷ்டம் தேவலகே தத்தம ப்ரதிஷ்டம் து வார்துஷௌ ||** 180

கள் விற்பவனுக்கு தானம் கொடுத்தவன் ஜன்மாந்தரத்தில் மலம் உண்ணும் பன்றியாய் பிறப்பான். வைத்தியனுக்கு தானம் கொடுத்தவன் சீழையும் ரத்தத்தையும் உண்ணும் புழுவாகப் பிறப்பான்.

பூஜாரிக்கும், வட்டியால் ஜீவிப்பவனுக்கும் தானம் கொடுப்பவன், தானத்துக்குரிய பலனை அடைய மாட்டான்.

यत् तु वाणिजके दत्तं नेह नाऽमुत्र तद् भवेत्।
भस्मनीव हुतं हव्यं तथा पौनर्भवे द्विजे॥

**யத்து வாணிஜகேதத்தம் நேஹ நாமுத்ர தத்பவேத் |**
**பஸ்மநீவ ஹுதம் ஹவ்யம் ததா பௌனர்பவே த்விஜே ||** 181

வணிகனுக்கும், மறுமணம் புரிந்து கொண்டவள் பெற்ற பிள்ளைக்கும் சிராத்தத்தில் போஜனமளித்தால், சாம்பலில் இட்ட ஆஹுதிபோல், அந்த போஜன பலன் கிட்டாது.

इतरेषु त्वपाङ्क्त्येषु यथोद्दिष्टेष्वसाधुषु।
मेदोऽसृङ्मांसमज्जाऽस्थि वदन्त्यन्नं मनीषिणः॥

**இதரேசுத்வபாங்தைஷு யதோத்திஷ்டேஷ்வஸாதுசு |**
**மேதோ அஸ்ருக்மாம்ஸ மஜ்ஜாஸ்தி வதந்த்யந்நம் மநீஷிண: ||** 182

மற்றும் விலக்கப்பட்டவர்களாகக் கூறப்பட்ட திருடன் முதலான எவருக்கும் அன்னமளித்தவன், ஜன்மாந்தரத்தில் கொழுப்பு, ரத்தம், மாமிசம், எலும்புகள் முதலானவற்றை சாப்பிடும் ஜாதிகளில் பிறப்பார்கள்.

अपाङ्क्त्योपहता पङ्क्तिः पाव्यते यैर् द्विजोत्तमैः।
तान् निबोधत कार्त्स्न्येन द्विजाऽग्र्यान् पङ्क्तिपावनान्॥

**அபாங்த்யோபஹதா பங்தி: பாவ்யதே யைர்த்விஜோத் தமை: |**
**தாந்நிபோதத கார்ஸ்ந்யே நத்விஜாக்ர்யாந் பங்தி பாவநாந் ||** 183

பந்தியில் அமரத்தகாதவர்களால் பரிசுத்தமிழந்த, பிராம்மணர்களுடைய பந்தியை பரிசுத்தப்படுத்தக் கூடியவர்களான பிராம்மண உத்தமர்கள் யாரென்பதைக் கூறுகிறேன், கேளுங்கள்.

अग्र्याः सर्वेषु वेदेषु सर्वप्रवचनेषु च।
श्रोत्रियाऽन्वयजाश् चैव विज्ञेयाः पङ्क्तिपावनाः॥

**அக்ர்யாஸ்ஸர்வேஷு வேதேஷு ஸர்வ ப்ரவசனேஷு ச |**
**ஷ்ரோத்ரி யாந்வயஜாஷ்சைவ விக்ஞேயா: பங்திபாவனா: ||** 184

வேதங்களை முழுமையாக அத்யயனம் செய்தவர்களும், அதன் ஆறு அங்கங்களையும் அறிந்தவர்களும், வேதவித்துக்களின் வம்சத்தில் பிறந்தவர்களும் பந்தியை தூய்மையாக்குபவர்கள்.

त्रिणाचिकेतः पञ्चाग्निस् त्रिसुपर्णः षडङ्गवित्।
ब्रह्मदेयात्मसन्तानो ज्येष्ठसामग एव च॥

**த்ரிணாசிகேத: பஞ்சாக்னிஸ் ஸ்த்ரிசுபர்ணஷ்ஷடங்கவித் |**
**ப்ரஹ்மதேயாத்ம ஸந்தாநோ ஜ்யேஷ்டஸாமக ஏவ ச ||** 185

யஜுர் வேதபாகமாகிய திரிணாசிகேதத்தையும், அந்த விரதத்தையும் நன்கு அறிந்தவனும், பஞ்சாக்னி ஹோத்ரனும், ரிக்வேத பாகமாகிய திரிசுவர்ணத்தையும் அந்த விரதத்தையும் நன்கு அறிந்தவனும், ஷடங்கங்களை உபதேசிக்கக்கூடியவனும் பிராம்ம விவாகம் செய்து கொண்ட பெண் பெற்ற மகனும், ஸாமகானம் செய்பவனும், பந்தியை தூய்மையாக்குபவர்கள்.

वेदार्थवित् प्रवक्ता च ब्रह्मचारी सहस्रदः।
शतायुश् चैव विज्ञेया ब्राह्मणाः पङ्क्तिपावनाः॥

**வேதார்த்த வித்ப்ரவக்தா ச ப்ரஹ்மசாரீ சஹஸ்ரத: |**
**ஷதாயுஷ்சைவ விக்ஞேயா ப்ராஹ்மணா: பங்தி பாவநா: ||** 186

வேதார்த்தத்தை நன்கு அறிந்தவனும், வேத அர்த்தத்தை எடுத்துரைப்பவனும், பிரம்மசரிய விரதத்தை அனுஷ்டிப்பவனும், ஆயிரக்கணக்காய் பசுக்களை வழங்கியவனும், வேதம் முற்றும் அறிந்தவனுமான பிராம்மணர்கள் பந்தியை தூய்மையாக்குபவர்கள்.

पूर्वेद्युरपरेद्युर् वा श्राद्धकर्मण्युपस्थिते।
निमन्त्रयेत त्र्यवरान् सम्यग् विप्रान् यथोदितान्॥

**பூர்வேத்யுரபரேத்யுர்வா ஷ்ராத்தகர்மண்யு பஸ்திதே |**
**நிமந்த்ரயேத த்ர்யவராந் ஸம்யக்விப்ராந் யதோதிதாந் ||** 187

சிராத்தத்துக்கு இரண்டு நாட்கள் முன்பாகவோ அல்லது முன்தினமோ இதுவரை கூறியபடியான பிராம்மண உத்தமர்களை மூவருக்குக் குறையாமல் நியமிக்க வேண்டும்.

निमन्त्रितो द्विजः पित्र्ये नियतात्मा भवेत् सदा।
न च च्छन्दांस्यधीयीत यस्य श्राद्धं च तद् भवेत्॥

**நிமந்த்ரிதோ த்விஜ: பித்ர்யே நியதாத்மா பவேத்ஸதா |**
**நசசந்தாம்ஸ்யதீயீத யஸ்ய ஷ்ராத்தம் ச தத் பவேத் ||** 188

சிராத்தத்தில் நியமிக்கப்பட்ட திவிஜனும், சிராத்தத்தைச் செய்பவரும் சிராத்த தினத்தில் இந்திரியங்களை அடக்கி இருக்க வேண்டும். காயத்ரீ போன்ற அன்றாட ஜபங்களை செய்யலாம். மற்றபடி வேதபாகங்களை அத்யயனம் செய்வது முதலானவற்றை செய்யக்கூடாது.

**निमन्त्रितान् हि पितर उपतिष्ठन्ति तान् द्विजान्।**
**वायुवच् चाऽनुगच्छन्ति तथाऽऽसीनानुपासते॥**

**நிமந்த்ரிதாந் ஹி பிதர உபதிஷ்டந்தி தாந் த்விஜாந் |**
**வாயுவச்சாநு கச்சந்தி ததாஸீநா நுபாஸதே || 189**

நியமிக்கப்பட்ட அவர்களிடம் பித்ருக்கள் சமீபித்து இருப் பார்கள். வாயுவைப் போன்று அவர்களைப் பின் தொடர்வார்கள். அவர்கள் அமரும்போது தாமும் அமர்வார்கள்.

**केतितस् तु यथान्यायं हव्यकव्ये द्विजोत्तमः।**
**कथञ्चिदप्यतिक्रामन् पापः सूकरतां व्रजेत्॥**

**கேதிதஸ்து யதாந்யாயம் ஹவ்யகவ்யே த்விஜோத்தம: |**
**கதஞ்சி தப் யதிக்ராமந் பாபஸ்ஸூகரதாம் வ்ரஜேத் || 190**

ஹவ்யகவ்யங்களில் நியமிக்கப்பட்ட பிராம்மணன், எந்த காரணத்தாலோ வராமல் போனால், பன்றியாய்ப் பிறப்பெடுப்பான்.

**आमन्त्रितस् तु यः श्राद्धे वृषल्या सह मोदते।**
**दातुर् यद् दुष्कृतं किञ्चित् तत् सर्वं प्रतिपद्यते॥**

**ஆமந்த்ரிதஸ்து ய: ஷ்ராத்தே வ்ருஷல்யா ஸஹ மோததே |**
**தாதுர்யத்துஷ்க்ருதம் கிஞ்சித்தத்ஸர்வம் ப்ரதிபத்யதே || 191**

நியமிக்கப்பட்ட பிராம்மணன் தாழ்குலத்துப் பெண்ணுடன் கூடினால், தன்னை நியமித்த கர்த்தாவின் பாபம் மொத்தத்தையும் தான் அடைகிறான்.

**अक्रोधनाः शौचपराः सततं ब्रह्मचारिणः।**
**न्यस्तशस्त्रा महाभागाः पितरः पूर्वदेवताः॥**

**அக்ரோதநாஷ் சௌசபராஸ்ஸததம் ப்ரஹ்மசாரிண: |**
**ந்யஸ்தஷஸ்த்ரா மஹாபாகா: பிதர: பூர்வதேவதா: || 192**

பித்ரு தேவர்கள் குரோதமற்றவர்களாயும், ஆசார சீலர்களாயும், பிரம்மசாரிகளாகவும், விரோதமற்றவர்களாகவும், மஹாபாகர் களாகவும், தொன்மையான தேவர்களாகவும் இருப்பவர்கள்.

यस्माद्रुत्पत्तिरेतेषां सर्वेषामप्यशेषतः।
ये च यैरुपचर्याः स्युर् नियमैस् तान् निबोधत॥

**யஸ்மாதுத்பத்திரேதேஷாம் ஸர்வேஷாமப்யசேஷத: |**
**யே ச யைரூப சர்யாஸ்ஸ்யுர்நியமைஸ் தாந் நிபோதத || 193**

*எவரால் இந்த பித்ரு தேவர்கள் தோன்றினார்களோ, எந்த பித்ரு தேவர்கள் எவருக்கு எப்படிப்பட்ட நியமங்களோடு பூஜிக்கத்தக்கவர்களோ, அவையனைத்தையும் எடுத்துக் கூறுகிறேன், கேளுங்கள்.*

मनोर् हैरण्यगर्भस्य ये मरीच्यादयः सुताः।
तेषामृषीणां सर्वेषां पुत्राः पितृगणाः स्मृताः॥

**மநோர்ஹிரண்யகர்பஸ்ய யே மரீச்யாதய: சுதா: |**
**தேஷாம்ருஷீணாம் ஸர்வேஷாம் புத்ரா: பித்ருகணா: ஸ்ம்ருதா: || 194**

*பிரம்ம தேவரின் மகன் மநு. மநுவின் புத்திரர்களான மரீசி முதலான புத்திரர்களின் புத்திரரனைவரும் பித்ரு கணங்கள் எனப் படுவர்.*

विराट्सुताः सोमसदः साध्यानां पितरः स्मृताः।
अग्निष्वात्ताश्च देवानां मारीचा लोकविश्रुताः॥

**விராட் சுதாஸ் ஸோமஸத: ஸாத்யாநாம் பிதர: ஸ்ம்ருதா: |**
**அக்னிஷ்வாத்தாஷ்ச தேவாநாம் மாரீசா லோக விஷ்ருதா: || 195**

*விராட் புத்திரர்களான சோமசதர்கள் சாத்யர்களின் பித்ருக்கள். அக்னிஷ்வாத் என்னும் மரீசி புத்திரர்கள் தேவர்களின் பித்ருக்கள்.*

दैत्यदानवयक्षाणां गन्धर्वोरगरक्षसाम्।
सुपर्णकिन्नराणां च स्मृता बर्हिषदोऽत्रिजाः॥

**தைத்யதானவ யக்ஷாணாம் கந்தர்வோரக ரக்ஷஸாம் |**
**சுவர்ண கிந்நராணாம் ச ஸ்ம்ருதா பர்ஹிஷதோ அத்ரிஜா: || 196**

*தைத்யர்கள், தானவர்கள், யட்சர்கள், கந்தர்வர்கள், உரகர்கள், ராட்சதர்கள், கருடர்கள், கின்னரர்கள் முதலானோருக்கு அத்ரி புத்திரர்களான பர்ஹிஷதர்கள் பித்ரு தேவர்கள்.*

सोमपा नाम विप्राणां क्षत्रियाणां हविर्भुजः।
वैश्यानामाज्यपा नाम शूद्राणां तु सुकालिनः॥

**ஸோமபா நாம விப்ராணாம் க்ஷத்ரியாணாம் ஹவிர்புஜ: |**
**வைஷ்யாநாமாஜ்யபா நாம க்ஷத்ராணாம் து சுகாலிந: || 197**

*பிராம்மணர்களுக்கு சோமபர்கள் என்போர் பித்ரு தேவர்கள். க்ஷத்ரியர்களுக்கு ஹவிர்புஜர்கள் என்போர் பித்ரு தேவர்கள். வைசியர்களுக்கு ஆஜ்யபர்கள் என்போர் பித்ரு தேவர்கள். சூத்திரர்களுக்கு சுகாலர்கள் என்போர் பித்ரு தேவர்கள்.*

**सोमपास् तु कवेः पुत्रा हविष्मन्तोऽङ्गिरःसुताः।**
**पुलस्त्यस्याऽऽज्यपाः पुत्रा वसिष्ठस्य सुकालिनः॥**

**ஸோமபாஸ்து கவே: புத்ரா: ஹவிஷ்மந்தோ அங்கிரஸ் சுதா: |**
**புலஸ்த்யஸ்யாஜ்யபா: புத்ரா: வஸிஸ்டஸ்ய சுகாலிந: || 198**

*சோமர்கள் சுக்ரரின் புத்திரர்கள்.*

*அங்கிரசின் புத்திரர்கள் ஹவிர்புஜர்கள் அல்லது ஹவிஸ் மந்தர்கள்.*

*புலஸ்தியரின் புத்திரர்கள் ஆஜ்யபர்கள்.*

*வசிஷ்டரின் புத்திரர்கள் சுகாலர்கள்.*

**अग्निदग्धाऽनग्निदग्धान् काव्यान् बर्हिषदस् तथा।**
**अग्निष्वात्तांश् च सौम्यांश् च विप्राणामेव निर्दिशेत्॥**

**அக்நிதக்தா நக்நிதக்தாந் காவ்யாந் பர்ஹிஷதஸ் ததா |**
**அக்நிஷ்வாத்தாம்ஷ்ச ஸௌம்யாம்ஷ்ச விப்ராணாமேவ நிர்திஷேத் || 199**

*அக்நி தக்தர்கள், அனக்நி தக்தர்கள், காவ்யர்கள், பர்ஹிஷ தர்கள், அக்நிஷ் வாத்தர்கள், ஸௌம்யர்கள் முதலானோர் பிராம்மணர்களின் பித்ருக்கள்.*

**य एते तु गणा मुख्याः पितृणां परिकीर्तिताः।**
**तेषामपीह विज्ञेयं पुत्रपौत्रमनन्तकम्॥**

**ய ஏதே து கணா: முக்யா: பித்ரூணாம் பரிகீர்த்திதா: |**
**தேஷாமபீஹ விக்ஞேயம் புத்ரபௌத்ர மனந்தகம் || 200**

*இந்த பித்ரு கணங்களில் முக்கியமானவர்கள் என்று கூறப்படு கின்றவர்களுக்கு, இவ்வுலகில் இருப்பவர்கள் புத்திரபௌத்திரர் களாகின்றனர்.*

**ऋषिभ्यः पितरो जाताः पितृभ्यो देवमानवाः।**
**देवेभ्यस् तु जगत् सर्वं चरं स्थाण्वनुपूर्वशः॥**

**ருஷிப்ய: பிதரோ ஜாதா: பித்ருப்யோ தேவதாநவா: |**
**தேவேப்யஸ்து ஜகத்ஸர்வம் சரம் ஸ்தாண்வநு பூர்வஷ: || 201**

ரிஷிகளிடமிருந்து பித்ருக்கள் தோன்றினார்கள். பித்ருக்களினால் தேவ தானவர்கள் தோன்றினார்கள். தேவர்களால் சராசரங்கள் தோன்றின.

राजतैर् भाजनैरेषामथो वा रजतान्वितैः।
वार्यपि श्रद्धया दत्तमक्षयायोपकल्पते॥

**ராஜதைர்பாஜலிநரேஷா மதோ வா ராஜதாந்விதை: |**
**வார்யபி ஷ்ரத்தயா தத்தமக்ஷயாயோப கல்பதே || 202**

வெள்ளிப் பாத்திரத்தில் அல்லது வெள்ளி கலந்த பாத்திரத்தில் வைத்துக் கொடுத்தது, தண்ணீராக இருந்தாலும்கூட பித்ருக்களுக்கு அட்சயமாகத் திருப்தியைக் கொடுக்கும்.

देवकार्याद् द्विजातीनां पितृकार्यं विशिष्यते।
दैवं हि पितृकार्यस्य पूर्वमाप्यायनं स्मृतम्॥

**தேவகார்யாத்த்விஜாதீநாம் பித்ருகார்யம் விசிஷ்யதே |**
**தைவம் ஹி பித்ருகார்யஸ்ய பூர்வமாப்யாயநம் ஸ்ம்ருதம் || 203**

த்விஜருக்கு தேவ காரியத்தைவிட பித்ரு காரியம் முக்கியமானது பித்ரு காரியத்தில் தேவ பூசையை முதலில் செய்ய வேண்டும்.

तेषामारक्षभूतं तु पूर्वं दैवं नियोजयेत्।
रक्षांसि हि विलुम्पन्ति श्राद्धमारक्षवर्जितम्॥

**தேஷாமாரக்ஷபூதம் து பூர்வம் தைவம் நியோஜயேத் |**
**ரக்ஷாம்ஸி ஹி விலும்பந்தி ஷ்ராத்தமாரக்ஷ வர்ஜிதம் || 204**

சிராத்தத்தைக் கெடுக்க ராட்சதர்கள் முனைவார்கள். எனவே முதலில் பித்ருக்களுக்கு காப்பாக விஸ்வேதேவரை ஒரு பிராம்மணரிடம் ஆவாஹனம் செய்ய வேண்டும்.

दैवाद्यन्तं तदीहेत पित्राद्यन्तं न तद् भवेत्।
पित्राद्यन्तं त्वीहमानः क्षिप्रं नश्यति सान्वयः॥

**தைவாத்யந்தம் ததீஹேத பித்ராத்யந்தம் நதத்ப வேத் |**
**பித்ராத்யந்தம் த்வீஹமாந: க்ஷிப்ரம் நஸ்யதி ஸாந்வய: || 205**

சிராத்தத்தின் போது முன்னும் பின்னும் தேவர்கள் இருக்க வேண்டும். சிராத்தம் இதனால் ரட்சிக்கப்படும். பித்ருக்களை ஆவாஹனம் செய்வதற்கு முன்பு ஒரு பிராம்மணனிடம் விஷ்வேதேவரை ஆவாஹனம் செய்ய வேண்டும். பிறகு பித்ருக்கள், பிறகு விஷ்ணு இப்படி ஆவாஹனம் செய்ய வேண்டும். இப்படியின்றி பித்ருக்களை

முதலிலோ அல்லது இறுதியிலோ ஆவாஹனம் செய்து சிராத்தம் செய்பவன் வம்சத்தோடு விரைவில் அழிவான்.

**शुचिं देशं विविक्तं च गोमयेनोपलेपयेत्।**
**दक्षिणाप्रवणं चैव प्रयत्नेनोपपादयेत्॥**

**சுசிம் தேவம் விவிக்தம் ச கோமயே நோபலேபயேத் |**
**தக்ஷிணாப்ரவணம் சைவ ப்ரயத்நேநோ பபாதயேத் ||** 206

சிராத்தம் செய்யும் இடத்தை கோமயத்தால் மெழுகி சுத்தமாக வைக்க வேண்டும். யாரும் நடமாடக்கூடாது. தெற்குப்புறத்துக்கு வசதியாக அந்த இடம் இருக்க வேண்டும்.

**अवकाशेषु चोक्षेषु नदीतीरेषु चैव हि।**
**विविक्तेषु च तुष्यन्ति दत्तेन पितरः सदा॥**

**அவகாசேஷு சோக்ஷேஷு நதீதீரேஷு சைவஹி |**
**விவிக்தேஷு ச துஷ்யந்தி தத்தேந பிதரஸ்ஸதா ||** 207

வனத்திலும், ஏகாந்தமான இடத்திலும், நதிக்கரையிலும் செய்யப்பட்ட சிராத்தத்தால் பித்ருக்கள் எப்போதும் திருப்தி யடைவார்கள்.

**आसनेषूपक्लृप्तेषु बर्हिष्मत्सु पृथक्पृथक्।**
**उपस्पृष्टोदकान् सम्यग् विप्रांस् तानुपवेशयेत्॥**

**ஆஸநேஷு பக்லுப்தேஷு பர்ஹிஷ்மத்சு ப்ருதக் ப்ருதக் |**
**உபஸ்ப்ருஷ்டோதகாந் ஸம்யக்விப்ரா ந்ஸ்தாநு பவேஷயத் ||** 208

தூய்மை செய்த இடத்தினைப் பிரித்துக் கொண்டு, தேவதா ஸ்தானத்தில் கிழக்கு நோக்கி நுனி இருக்குமாறு இரண்டு தர்ப்பைகளையும், பித்ரு ஸ்தானங்களில் தெற்கு நோக்கி நுனி இருக்குமாறு மூன்று தர்ப்பைகளையும் கீழே பரப்பி ஆசனங்களிட்டு, நியமிக்கப்பட்ட பிராம்மணர்கள் நீராடி வந்ததும் அவற்றில் அமர வைக்க வேண்டும்.

**उपवेश्य तु तान् विप्रानासनेष्वजुगुप्सितान्।**
**गन्धमाल्यैः सुरभिभिरर्चयेद् देवपूर्वकम्॥**

**உபவேஷ்ய து தாந் விப்ராநாஸநேஷ்வஜுகுப்ஸிதாந் |**
**கந்த மூல்யைஸ்ஸுரபி பிரர்சயேத் தேவ பூர்வகம் ||** 209

இவ்வாறு பரிசுத்தமான ஆசனங்களிலமர்ந்த பிராம்மணர்களை, வாசனையுடன் கூடிய புஷ்பங்களால் தேவபூர்வமாக அர்ச்சிக்க வேண்டும்.

तेषामुदकमानीय सपवित्रांस् तिलानपि।
अग्नौ कुर्यादनुज्ञातो ब्राह्मणो ब्राह्मणैः सह॥

**தேஷாமுதகமாநீய ஸபவித்ரா ந்ஸ்திலாநபி ।**
**அக்நௌ குர்யாதநுஞாதோ ப்ராஹ்மணோ ப்ராஹ்மணைஸ் ஸஹ ॥ 210**

சிராத்தம் நடத்தும் கர்த்தா, அவர்களுக்கு பவித்ரம் எள்ளுடன் நீர்வார்த்து, அவர்கள் அனுமதி பெற்று அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும்.

अग्नेः सोमयमाभ्यां च कृत्वाऽऽप्यायनमादितः।
हविर्दानेन विधिवत् पश्चात् सन्तर्पयेत् पितॄन्॥

**அக்நேஸ் ஸோமயமாப்யாம் ஸ க்ருத்வா அப்யா யநமாதித: ।**
**ஹவிர்தாநேந விதிவத்பஷ்சாத் ஸந்தர்பயேத் பித்ரூந் ॥ 211**

முதலில் அக்னிக்கும் சோமனுக்கும் யமனுக்கும் ஹோமம் செய்து, பிறகு பித்ரு தேவர்களுக்கு ஹோமம் செய்ய வேண்டும்.

अग्न्यभावे तु विप्रस्य पाणावेवोपपादयेत्।
यो ह्यग्निः स द्विजो विप्रैर् मन्त्रदर्शिभिरुच्यते॥

**அக்ந்யபாவே து விப்ரஸ்ய பாணாவேவோ பபாதயேத் ।**
**யோஹ்யக்நிஸ்ஸ த்விஜோ விப்ரைர்மந்த்ர தர்ஷிபிருச் யதே ॥ 212**

பிரம்மசாரி, மனைவியில்லாதவன் இவர்களுக்கு அக்னி ஹோத்ரம் கிடையாது. இவர்கள் சிராத்தம் செய்தால், அமர்ந்திருக்கும் பிராம்மணனின் வலது கரத்தில், ஆஹுதிகளை இட வேண்டும். பிராம்மணனே அக்னி வடிவினன் என்று சான்றோர் கூறுவர்.

अक्रोधनान् सुप्रसादान् वदन्त्येतान् पुरातनान्।
लोकस्याऽऽप्यायने युक्ताञ् छ्राद्धदेवान् द्विजोत्तमान्॥

**அக்ரோதநாந் சுப்ரஸாதாந் வதந்த்யேதாந் புராதநாந் ।**
**லோகஸ் யாப்யாயநே யுக்தாந் ஷ்ராத்ததேவாந் த்விஜோத்தமாந் ॥ 213**

நியமிக்கப்பட்ட பிராம்மணர்களிடம் எழுந்தருளியுள்ள பித்ருதேவர்கள் கோபமற்றவராயும், மிகுந்த தயையுடன் கூடியவர்களாயும், தொன்மையானவர்களாயும், உலகங்களுக்கு நன்மையை அளிக்க வேண்டும் என்னும் எண்ணங் கொண்டவர்களாயும்

இருப்பவர்கள். எனவே அவர்கள் எழுந்தருளியுள்ள 'பிராம்மணர் கரத்தில் செய்யும் ஹோமம் அக்னியில் செய்தது போன்றே புண்ணிய பலனைக் கொடுக்கும்.

अपसव्यमग्नौ कृत्वा सर्वमावृत्य विक्रमम्।
अपसव्येन हस्तेन निर्वपेदुदकं भुवि॥

**அபஸவ்மக்நௌ க்ருத்வா ஸர்வமாவ்ருத்ய விக்ரமம் |**
**அபஸவ்யேந ஹஸ்தேந நிர்வபேதுதகம் புவி || 214**

ஹோமத் தீயின் தெற்குப் பகுதியில் பித்ருக்களுக்கு ஹோமம் செய்ய வேண்டும்.

பிண்டம் அளிக்கும் இடத்தில், மூன்று இடங்களில் நுனி தெற்கு நோக்கி வைத்த தர்ப்பைகளின் மீது, கைமறித்து எள்ளும் நீரும் இடவேண்டும்.

त्रींस्तु तस्माद् धविःशेषात् पिण्डान् कृत्वा समाहितः।
औदकेनैव विधिना निर्वपेद् दक्षिणामुखः॥

**த்ரீம்ஸ்து தஸ்மாத்தவிஷ்ஷேஷாத் பிண்டாந் க்ருத்வா ஸமாஹித: |**
**ஔதகே நைவ விதிநா நிர்வபேத்தக்ஷிணா முக: || 215**

பிறகு ஹோமம் செய்து மிகுந்த அன்னத்தை மூன்று உருண்டைகளாகப் பிடித்து, தெற்குப் புறமாக அமர்ந்து கொண்டு முன்பு எள்ளும் நீரும் இறைத்த இடத்தில் அந்த உருண்டைகளை கைமறித்து வைக்க வேண்டும். பிறகு மீண்டும் அவற்றின் மீது எள்ளும் நீரும் இறைக்க வேண்டும்.

न्युप्य पिण्डांस् ततस् तांस् तु प्रयतो विधिपूर्वकम्।
तेषु दर्भेषु तं हस्तं निमृज्याल् लेपभागिनाम्॥

**நுப்ய பிண்டாந்ஸ்ததஸ்தாம்ஸ்து ப்ரயதோ விதிபூர்வகம் |**
**தேஷு தர்பேஷு தம் ஹஸ்தம் விம்ரு ஜ்யால்லேப பாகிநாம் || 216**

இவ்வாறாக விதிமுறைப்படி சிரத்தையோடு பிண்டங்களை வைத்த பிறகு ஒட்டிக் கொண்டிருக்கும் பருக்கைகளை எடுத்து முந்தைய மூன்று தலைமுறையினருக்காக போட வேண்டும்.

आचम्योदक् परावृत्य त्रिरायम्य शनैरसून्।
षड्ऋतूंश्च नमस्कुर्यात् पितॄनेव च मन्त्रवत्॥

**ஆசம்யோதக் பராவ்ருத்ய த்ரிரா யம்ய ஷநைரஸூந் |**
**ஷட்ருதூம்ஷ்ச நமஸ்குர்யாத் பித்ருநேவ ச மந்த்ரவித் || 217**

பிறகு ஆசமனம் செய்து, மும்முறை பிராணாயாமம் செய்து, ஆறு ருதுக்களையும், உரிய மந்திரங்களைக் கூறி நமஸ்கரித்து, பிறகு பித்ரு தேவர்களுக்கும் உரிய மந்திரங்களைக் கூறி நமஸ்கரிக்க வேண்டும்.

उदकं निनयेच् छेषं शनैः पिण्डान्तिके पुनः।
अवजिघ्रेच् च तान् पिण्डान् यथान्युप्तान् समाहितः॥

**உதகம் நிநயேச்சேஷம் ஷநை: பிண்டாந்திகே புந: |**
**அவஜிக்ரேச்ச தாந் பிண்டாக் யதா ந்யுப்தாந் ஸமாஹித: ||** **218**

பிண்டதானம் செய்த பிறகு மிகுந்திருக்கும் தண்ணீரை ஒரு தொன்னையில் ஊற்றிக்கொண்டு, மூன்று பிண்டங்களையும் சுற்றி பூமியில் விழுமாறு, கைமறித்து அந்த நீரை விடவேண்டும்.

பிறகு மூன்று பிண்டங்களிலிருந்தும் சிறிது சிறிது எடுத்து முகர்ந்து பார்க்க வேண்டும். பிறகு அந்தப் பருக்கைகளை கீழே எறிய வேண்டும்.

पिण्डेभ्यस् त्वल्पिकां मात्रां समादायानुपूर्वशः।
तेनैव विप्रानासीनान् विधिवत् पूर्वमाशयेत्॥

**பிண்டேப்யஸ்த்வல்பிகாம் மாத்ராம் ஸமாதாயாநு பூர்வஷ: |**
**தாநேவ விப்ராநாஸீநாந் விதிவத் பூர்வமாஷயேத் ||** **219**

அந்தந்த பிண்டங்களிலிருந்து சிறிது சிறிது எடுத்து நியமிக்கப்பட்ட பிராம்மணர்கள் சாப்பிட அமர்ந்திருக்கும் பாத்திரத்தில் வைக்க வேண்டும். யாராக எந்தப் பிராம்மணர் ஆவாஹனம் செய்யப்பட்டாரோ, அந்தப் பிண்டான்னத்தை அவர் சாப்பிட வேண்டும்.

ध्रियमाणे तु पितरि पूर्वेषामेव निर्वपेत्।
विप्रवद् वाऽपि तं श्राद्धे स्वकं पितरमाशयेत्॥

**த்ரியமாநே து பிதரி பூர்வேஷாமேவ நிர்வபேத் |**
**விப்ரவத்வாபிதம் ஷ்ராத்தே ஸ்வகம் பிதரமாஷயேத் ||** **220**

தகப்பன் இருக்கும்போது தாய்க்கு சிராத்தம் செய்ய நேரிட்டால், பாட்டன், முப்பாட்டன், முப்பாட்டனின் தந்தை என்னும் மூவருக்கும் பிண்டதானம் அளிக்க வேண்டும்.

पिता यस्य निवृत्तः स्याज् जीवेच् चाऽपि पितामहः।
पितुः स नाम सङ्कीर्त्य कीर्तयेत् प्रपितामहम्॥

**பிதா யஸ்ய து வ்ருத்தஸ்யாஜ்ஜீ வேச்சாபி பிதாமஹ: |**
**பிதுஸ்ஸ நாம ஸங்கீர்த்ய கீர்த்தயேத் ப்ரபிதாமஹம் ||** **221**

*பாட்டன் இருக்கும்போது தந்தை இறந்து சிராத்தம் செய்ய நேர்ந்தால், அப்போது தந்தை, முப்பாட்டன், முப்பாட்டனின் பாட்டன் ஆகியோருக்கு பிண்டதானம் அளிக்க வேண்டும்.*

**पितामहो वा तच् छ्राद्धं भुञ्जीतेत्यब्रवीन् मनुः।**
**कामं वा समनुज्ञातः स्वयमेव समाचरेत्॥**

**பிதாமஹோ வா தத்ச்ராத்தம் பூஞ்ஜீதேத்ய ப்ரவீந் மநு: |**
**காமம் வா ஸமநுஞாத: ஸ்வயமேவ ஸமாசரேத் ||** 222

*அல்லது பாட்டன் அனுமதி கொடுத்தால், பாட்டன் ஸ்தானத்தில் அவரையே அமர வைத்து, மற்ற ஸ்தானங்களுக்கு வேறு பிராம்மணர்களை அமர்த்தலாம்.*

**तेषां दत्त्वा तु हस्तेषु सपवित्रं तिलोदकम्।**
**तत्पिण्डाग्रं प्रयच्छेत स्वधैषामस्त्विति ब्रुवन्॥**

**தேஷாம் தத்வாது ஹஸ்தேசு ஸபவித்ரம் திலோதகம் |**
**தத்பிண்டாக்ரம் ப்ரயச்சேத ஸ்வதைஷாமஸ்த்விதி ப்ருவந் ||** 223

*அவர்களுக்கு பிண்ட சேஷத்தை பரிமாறும்போது, அவர்கள் கையில் தர்ப்பையை வைத்து அதன் மீது எள்ளும் நீரும் விட்டு, பிறகு பிண்டத்திலிருந்து எடுத்த சிறுபாகத்தை வைத்து, திருப்தி யுண்டாகட்டும் என்று கூறும் மந்திரத்தைக் கூற வேண்டும்.*

**पाणिभ्यां तूपसङ्गृह्य स्वयमन्नस्य वर्धितम्।**
**विप्रान्तिके पितॄन् ध्यायन् शनकैरुपनिक्षिपेत्॥**

**பாணிப்யாம் து உபஸம்க்ருஹ்ய ஸ்வயமந்நஸ்ய வர்திதம் |**
**விப்ராந்திகே பித்ரூந் த்யாயந் ஷநகைருபநிக்ஷி பேத் ||** 224

*கர்த்தா, அன்னம் முதலானவை வைக்கப்பட்டுள்ள பாத்திரத்தை இரண்டு கைகளாலும் கொண்டு வந்து, பித்ருக்களை தியானித்து, அந்த பிராம்மணர்கள் முன் வைக்க வேண்டும்.*

**उभयोर् हस्तयोर् मुक्तं यदन्नमुपनीयते।**
**तद् विप्रलुम्पन्त्यसुराः सहसा दुष्टचेतसः॥**

**உபயோர் ஹஸ்தயோர்முக்தம் யதந்நமுபநீயதே |**
**தத்விப்ரலும்பந்த்ய சுராஸ்ஸஹஸா துஷ்ட சேதஸ: ||** 225

*சிராத்த அன்னமுள்ள பாத்திரத்தை ஒரு கையால் ஏந்தி, மற்றொரு கையால் அதை மூடிக்கொண்டு எடுத்து வரவேண்டும். அவ்வாறின்றி அதை மூடாமல் கொண்டு வந்தால், அந்த அன்னத்தை துஷ்டர்களான ராட்சதர்கள் அபகரிப்பர்.*

गुणांश् च सूपशाकाऽऽद्यान् पयो दधि घृतं मधु।
विन्यसेत् प्रयतः पूर्वं भूमावेव समाहितः ॥

**குணாம்ஷ்ச ஸூபஷாகாத்யாந் பயோ ததிக்ருதம் மது |**
**விந்யஸேத் ப்ரயத: பூர்வம் பூமாவேவ ஸமாஹித: || 226**

நல்ல கறியமுதுகள், பருப்பு முதலானவற்றையும், பால், தயிர், நெய், தேன் முதலானவற்றையும் பாத்திரங்களோடு கொண்டு வந்து வைக்க வேண்டும். இவைகளை அன்னம் கொண்டு வருவதற்கு முன்பே கொண்டு வந்து வைக்க வேண்டும்.

भक्ष्यं भोज्यं च विविधं मूलानि च फलानि च।
हृद्यानि चैव मांसानि पानानि सुरभीणि च ॥

**பக்ஷ்யம் போஜ்யம் ச விவிதம் மூலாநி ச பலாநி ச |**
**ஹ்ருத்யாநி சைவ மாம்ஸாநி பாநாநி ஸுரபீணி ச || 227**

வடைகள், அப்பங்கள், பாயசம், பழங்கள், மாமிசம், பானங்கள் முதலானவற்றையும் கொண்டு வந்து வைக்க வேண்டும்.

उपनीय तु तत् सर्वं शनकैः सुसमाहितः।
परिवेषयेत् प्रयतो गुणान् सर्वान् प्रचोदयन् ॥

**உபநீய து தத்ஸர்வம் ஷநகைஸ்ஸுஸமா ஹித: |**
**பரிவேஷயேத் ப்ரயதோ குணாந் ஸர்வாந் ப்ரசோதயந் || 228**

இவ்வாறாக அவையனைத்தையும் வைத்துக்கொண்டு, அந்தந்த பதார்த்தங்களைப் பற்றி எடுத்தியம்பிய வண்ணம் பரிமாற வேண்டும்.

नाऽस्रमापातयेज् जातु न कुप्येन् नाऽनृतं वदेत्।
न पादेन स्पृशेदन्नं न चैतदवधूनयेत् ॥

**நா ஸ்ரமாபாதயேத்ஜாது நகுப்யேந்நாந்ருதம் வதேத் |**
**ந பாதேந ஸ்ப்ருஷேதந்நம் ந சைததவதூநயேத் || 229**

உணவைப் பரிமாறும் போது, இறந்தவர்களை எண்ணி அழக்கூடாது; எதற்காகவும் கோபப்படக் கூடாது; பொய் பேசக்கூடாது; சிந்திய அன்னத்தை காலால் மிதித்து விடக் கூடாது. அன்னம் சிந்துமாறு பரிமாறக்கூடாது.

अस्रं गमयति प्रेतान् कोपोऽरीननृतं शुनः।
पादस्पर्शस् तु रक्षांसि दुष्कृतीनवधूननम् ॥

**அஸ்ரம் கமயதிப்ரேதாந் கோபோ அரீநந்ருதம் ஷுந: |**
**பாதஸ்ப்ரஷ்ஸ்து ரக்ஷாம்ஸி துஷ்க்ருதீ நவதூநநம் || 230**

கண்ணீர் விட்டால் சிராத்த அன்னத்தை பிரேதங்கள் உண்ணும்.

கோபவசப்பட்டால் பகைவருக்காகும்.

பொய் கூறினால் சிராத்த அன்னம் நாய்களைச் சேரும்.

காலில் மிதிபட்டால் ராட்சதர்களைச் சேரும்.

பரிமாறும்போது அன்னம் சிதறினால் பாபாத்மாக்களை சென்றடையும்.

यद्यद् रोचेत विप्रेभ्यस् तत्तद् दद्यादमत्सरः।
ब्रह्मोद्यास् च कथाः कुर्यात् पितृणामेतदीप्सितम्॥

**யத்யத் ரோசேத விப்ரேப்யஸ் தத்தத்யாத மத்ஸர: |**
**ப்ரஹ்மோத்யாஷ் ச கதா: குர்யாத் பித் ரூணாமேத தீப்ஸிதம் || 231**

பிராம்மணர்கள் விரும்பும் உணவு வகைகளை, பொறாமை யின்றி பரிமாற வேண்டும். பிரம்ம ஞானமளிக்கும் கதைகளைக் கூறவேண்டும். பித்ருக்களுக்கு இத்தகைய கதைகள் விருப்பமானவை.

स्वाध्याय श्रावयेत् पित्र्ये धर्मशास्त्राणि चैव हि।
आख्यानानीतिहासांश् च पुराणानि खिलानि च॥

**ஸ்வாத்யாயம் ஷ்ராவயேத் பித்ர்யே தர்ம சாஸ்த்ராணி சைவஹி |**
**ஆக்யாநாநீதிஹாஸாம்ஷ்ச புராணிநி கிலாநி ச || 232**

உண்ணும்போது தர்ம சாஸ்திரங்களையும், வேதங்களையும், இதிஹாஸ புராணங்களையும், சூக்தங்களையும் செவிமடுக்கச் செய்யலாம்.

हर्षयेद् ब्राह्मणास् तुष्टो भोजयेच् च शनैःशनैः।
अन्नाद्येनाऽसकृच् चैतान् गुणैश् च परिचोदयेत्॥

**ஹர்ஷயேத் ப்ராஹ்மணாம்ஸ்துஷ்டோ போஜயேச்ச ஷனை: ஷனை: |**
**அந்யாத்யேநாஸக்ருச்சைதாந் குணைஷ்ச பரிசோதயேத் || 233**

அவர்கள் உண்ண உண்ண சிறிது சிறிதாகப் பரிமாறி, 'இது நன்றாக இருக்கும், இன்னும் சிறிது சாப்பிடுங்கள்' என்று சந்தோஷ மாகக் கூறியபடி, அவர்கள் சந்தோஷமாகச் சாப்பிடும்படி செய்ய வேண்டும்.

व्रतस्थमपि दौहित्रं श्राद्धे यत्नेन भोजयेत्।
कुतपं चाऽऽसने दद्यात् तिलैश्च विकिरेन् महीम्॥

**வ்ரதஸ்தமபி தௌஹித்ரம் ஷ்ராத்தே யத்நேந போஜயேத் |**
**குதபம் சாஸநே தத்யாத்திலைஷ்ச விகிரேந் மஹீம் || 234**

பிரம்மசாரியாக இருந்தாலும் பெண் வயிற்றுப் பேரனை சிராத்தத்தில் நன்கு உபசரித்து உண்ணச் செய்ய வேண்டும். எள்ளை இறைத்து, ஆசனமாக கம்பளத்தைப் பரப்ப வேண்டும்.

त्रीणि श्राद्धे पवित्राणि दौहित्रः कुतपस् तिलाः।
त्रीणि चात्र प्रशंसन्ति शौचमक्रोधमत्वराम्॥

**த்ரீணிஷ்ராத்தே பவித்ராணி தௌஹித்ர: குதபஸ்திலா: |**
**த்ரீணி சாத்ர ப்ரஷம்ஸந்தி ஷௌசமக்ரோதமத் வராம் || 235**

பெண் வயிற்றுப் பேரன், பிற்பகல், எள் இம்மூன்றும் பரிசுத்த மானவை. சுத்தம், கோபமின்மை, அவசரமின்றி சாவகாசமாய் செய்தல் இம்மூன்றையும் பித்ருக்கள் போற்றுவார்கள்.

अत्युष्णं सर्वमन्नं स्याद् भुञ्जीरंस् ते च वाग्यताः।
न च द्विजातयो ब्रूयुर् दात्रा पृष्टा हविर्गुणान्॥

**அத்யுஷ்ணம் ஸர்வமந்நம் ஸ்யாத் பூஞ்ஜீரம்ஸ்தே ச வாக்யதா: |**
**நச த்விஜாதயோ ப்ரூயுர்தாத்ரா ப்ருஷ்டா ஹவிர் குணாந் ||| 236**

உணவு வகைகள் நல்ல சூடாக இருக்க வேண்டும். சாப்பிடும் பிராம்மணர்கள் மௌனமாக சாப்பிட வேண்டும். கர்த்தா, எப்படி யிருக்கிறது என்று கேட்கும்போது குறைகளைக் கூறக்கூடாது.

यावदुष्णं भवत्यन्नं यावदश्नन्ति वाग्यताः।
पितरस् तावदश्नन्ति यावन् नोक्ता हविर्गुणाः॥

**யாவதுஷ்ணம் பவத்யந்நம் யாவதஷ்நந்தி வாக்யதா: |**
**பிதரஸ்தாவதஷ்நந்தி யாவந்நோக்தா ஹவிர்குணா: || 237**

உணவு வகைகள் எவ்வளவு சூடாக இருக்குமோ, உண்பவர்கள் எவ்வளவு மௌனமாக உண்கிறார்களோ, எவ்வளவுக்கு உணவு வகைகளைக் குறைகூறாமல் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கு பித்ருக்கள் அந்த உணவை ஏற்பார்கள்.

यद् वेष्टितशिरा भुङ्क्ते यद् भुङ्क्ते दक्षिणामुखः।
सोपानत्कश्च यद् भुङ्क्ते तद् वै रक्षांसि भुञ्जते॥

**யத்வேஷ்டிதஷிரா புங்தே யத்புங்தே தக்ஷிணாமுக: |**
**ஸோபாநத்கஷ்ச யுத்புங்தே தத்வை ரக்ஷாம்ஸி பூஞ்ஜதே || 238**

உண்பவர்கள், தலைக்குத் துணியைப் போட்டுக் கொண்டும் (தலைப்பாகை போன்றவை), காலில் பாதுகைகள் அணிந்து கொண்டும், தெற்கு நோக்கியும் உண்டால், அவற்றை ராட்சதர்கள் சாப்பிடுவார்களேயன்றி பித்ரு தேவர்கள் சாப்பிட மாட்டார்கள்.

चाण्डालश् च वराहश् च कुक्कुटः श्वा तथैव च।
रजस्वला च षण्ढश् च नेक्षेरन्नश्नतो द्विजान्॥

**சாண்டாலஷ்ச வராஹஸ்ச குக்குடஷ்ஷ்வா ததைவச |**
**ரஜஸ்வலா ச ஷண்டஷ்ச நேக்ஷே ரந்நஷ்நதோ த்விஜாந் ||** 239

*சண்டாளன், நபும்சன், தூரஸ்த்ரீ இவர்களின் பார்வையும், பன்றி, கோழி, நாய் முதலானவற்றின் பார்வையும், திவிஜர்கள் சிராத்த போஜனம் சாப்பிடும்போது படக்கூடாது.*

होमे प्रदाने भोज्ये च यदेभिरभिवीक्ष्यते।
दैवे हविषि पित्र्ये वा तद् गच्छत्ययथातथम्॥

**ஹோமே ப்ரதாநே போஜ்யே ச யதேபிரபிவீக்ஷ்யதே |**
**தைவே ஹவிஷி பித்ர்யே வா தத்கச்சத்ய தாததம் ||** 240

*ஹோமம், தானம், பிராம்மண போஜனம், சிராத்தம், தெய்வ பூஜை முதலியவற்றின் போது இப்போது கூறிய சண்டாளன் முதலான பார்வை பட்டால் அந்தக் காரியம் எந்தப் பலனை உத்தேசித்துச் செய்யப்படுகிறதோ, அந்தப் பலனைத் தராது.*

घ्राणेन सूकरो हन्ति पक्षवातेन कुक्कुटः।
श्वा तु दृष्टिनिपातेन स्पर्शेनाऽवरवर्णजः॥

**க்ராணேந சூகரோ ஹந்தி பக்ஷவாதேந குக்குட: |**
**ஷ்வாது த்ருஷ்டிநிபாதேந ஸ்பர் ஷேநாவரவர்ணஜ: ||** 241

*பன்றியானது வாசனையை முகர்வதாலும், கோழி இறகுகளைப் படபடவென அடிக்கும்போது ஏற்படும் காற்று படுவதாலும், நாயின் பார்வை படுவதாலும், ஈன ஜாதியினர் தீண்டுவதாலும், உணவுப் பதார்த்தங்கள் அசுத்தமடையும்.*

खञ्जो वा यदि वा काणो दातुः प्रेष्योऽपि वा भवेत्।
हीनाऽतिरिक्तगात्रो वा तमप्यपनयेत् पुनः॥

**கஞ்ஜோ வா யதிவா காணோ தாது: ப்ரேஷ்யோ அபி வா பவேத் |**
**ஹீநாதிரிக்த காத்ரோ வா தமப்யபநயேத்பூந: ||** 242

*குருடன், ஒற்றைக் கண்ணன், அங்கக் குறைபாடுடையவன் போன்றோர் சிராத்தம் செய்யும் கர்த்தாவின் வீட்டில் வேலையாட்களாக இருந்தால், சிராத்த தினத்தன்று அவர்களை வெளியேற்றிவிட வேண்டும்.*

ब्राह्मणं भिक्षुकं वाऽपि भोजनार्थमुपस्थितम्।
ब्राह्मणैरभ्यनुज्ञातः शक्तितः प्रतिपूजयेत्॥

**ப்ராஹ்மணம் பிக்ஷுகம் வாபி போஜநார்த்தமுபஸ்திதம் |**
**ப்ராஹ்மணைரப்யநுஞாத: ஷக்தித: ப்ரதிபூஜயேத் ||** 243

*சிராத்த காலத்தில் வரும் அதிதிக்கும், சன்யாசிக்கும், போஜனத் துக்காக வந்த பிராம்மணருக்கும், சிராத்தத்துக்கு நியமிக்கப்பட்ட பிராம்மணர்களின் அனுமதி பெற்று, தன் சக்திக்கேற்ப உணவளித்து உபசரிக்க வேண்டும்.*

सार्ववर्णिकमन्नाद्यं सन्नीयाऽऽप्लाव्य वारिणा।
समुत्सृजेद् भुक्तवतामग्रतो विकिरन् भुवि॥

**ஸார்வவர்ணிக மந்நாத்யம் ஸந்நீயாப்ளாவ்ய வாரிணா |**
**சமுத்ஸ்ரு ஜேத்புக்தவதாமக்ரதோ விகிரந் புவி ||** 244

*சிராத்த பிராம்மணர்கள் சாப்பிட்ட பிறகு மிகுந்ததனைத்தையும் சேர்த்து, சிறிது தண்ணீர் விட்டு ஒரு பிண்டமாக்கி, அதை சிராத்த பிராம்மணர்கள் எதிரில் தர்ப்பைகள் பரப்பிய நிலத்தில் விகர பிண்டமாக வைக்க வேண்டும்.*

असंस्कृतप्रमीतानां त्यागिनां कुलयोषिताम्।
उच्छिष्टं भागधेयं स्याद् दर्भेषु विकिरश्च यः॥

**அஸம்ஸ்க்ருத ப்ரமீதாநாம் த்யாகிநாம் குலயோஷிதாம் |**
**உச்சிஷ்டம் பாகதேயம் ஸ்யாத் தர்பேஷு விகிரஷ்சய: ||** 245

*அக்னி சம்ஸ்காரத்துக்கு அருகதையற்ற சிறுவர்களுக்கும், குலப் பெண்களுக்கும், அனைவரையும் விட்டு தனித்திருந்தவர்க்கும் இந்த விகர பிண்டதானம் திருப்தியைக் கொடுக்கும்.*

उच्छेषणं भूमिगतमजिह्मस्याऽशठस्य च।
दासवर्गस्य तत् पित्र्ये भागधेयं प्रचक्षते॥

**உச்சேஷணம் பூமிகதமஜி ஹ்மாஷ்யாஷடஸ்ய ச |**
**தாஸவர்கஸ்ய தத்பித்ர்யே பாகதேயம் ப்ரசக்ஷதே ||** 246

*இவ்வாறு பூமியில் வைத்த மிகுதியன்னத்தை, கபடமின்றி, சோம்பலின்றி, தன் பணியாட்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும்.*

आसपिण्डक्रियाकर्म द्विजातेः संस्थितस्य तु।
अदैवं भोजयेच् छ्राद्धं पिण्डमेकं च निर्वपेत्॥

**ஆசபிண்ட க்ரியா கர்ம த்விஜாதே ஸ்ஸம்ஸ்திதஸ்ய து |**
**அதைவம் போஜயேச்ச்ராத்தம் பிண்டமேகம் ச நிர்வபேத் ||** 247

இறந்து போனதும் செய்யும் கிரியைகளில் சபிண்டீ கரணம் வரையில் தேவ ஸ்தானத்தில் யாரையும் நியமிக்காமல், ஒரு பிராம்மணனை மட்டும் நியமித்து, சிறந்த போஜனம் செய்விக்க வேண்டும். ஒரு பிண்டம்தான் போட வேண்டும்.

सहपिण्डक्रियायां तु कृतायामस्य धर्मतः।
अनयैवाऽऽवृता कार्यं पिण्डनिर्वपणं सुतैः॥

**ஸஹபிண்டக்ரியாயாம் து க்ருதாயாமஸ்ய தர்மத: |**
**அஸயைவாவ்ருதா கார்யம் பிண்ட நிர்வபணம் சுதை: ||** 248

சபிண்டீகரணம் ஆன பிறகு அமாவாசை முதலானவைகளில் பிள்ளைகள் சிராத்தம் செய்யும்போது தேவதா ஸ்தானங்களுடன் மூன்று பிண்டங்கள் போட வேண்டும்.

श्राद्धं भुक्त्वा य उच्छिष्टं वृषलाय प्रयच्छति।
स मूढो नरकं याति कालसूत्रमवाक्शिराः॥

**ஷ்ராத்தம் புக்த்வா ய உச்சிஷ்டம் வ்ருஷலாய ப்ரயச்சதி |**
**ஸ மூடோ நரகம் யாதி காலசூத்ரமவாக்சிரா: ||** 249

சிராத்தத்தில் மிகுந்த அன்னத்தை, சூத்திரனுக்குக் கொடுத்தால், கொடுத்தவனான அந்த சிராத்த கர்த்தாவான மூடன் தலைகீழாக காலசூத்ரம் என்னும் நரகத்தில் விழுவான்.

श्राद्धभुग् वृषलीतल्पं तदहर् योऽधिगच्छति।
तस्याः पुरीषे तं मासं पितरस् तस्य शेरते॥

**ஷ்ராத்த புக் வ்ருஷலீதல்பம் ததஹர்யோ அதிகச்சதி |**
**தஸ்யா: புரீஷே தந்மாஸம் பிதரஸ்தஸ்ய ஷேரதே ||** 250

சிராத்தத்தில் சாப்பிட்ட பிராம்மணன், மனைவி தானாக விரும்பி வந்தாலும்கூட, அன்று அவளுடன் கூடினால், அவன் பித்ருக்கள் அவள் மலத்தில் ஒரு மாதம் வரை விழுந்து கிடப்பார்கள்.

पृष्ट्वा स्वदितमित्येवं तृप्तानाचामयेत् ततः।
आचान्तांश् चाऽनुजानीयादभि भो रम्यतामिति॥

**ப்ருஷ்ட்வா ஸ்வதிதமித்யேவம் த்ருப்தாநாசாம யேத்தத: |**
**ஆசாம் தாம்ஷ்சாநு ஜாநீயா தபிபோ ரம்யதா மிதி ||** 251

திருப்தியாக அவர்கள் சாப்பிட்ட பிறகு, 'திருப்தியாகச் சாப்பிட்டீர்களா?' என்று வினவ வேண்டும். சாப்பிட்டுக் கையலம்பிய அவர்கள் ஆசமனம் செய்த பிறகு 'அமர்ந்து கொள்ளுங்கள்' என்று சௌகரியமான இடத்தில் அமரச் செய்ய வேண்டும்.

स्वधाऽस्त्वित्येव तं ब्रूयुर् ब्राह्मणास् तदनन्तरम्।
स्वधाकारः परा ह्याशीः सर्वेषु पितृकर्मसु॥

**ஸ்வதாஸ்த் வித்யேவதம் ப்ரூயுர் ப்ராஹ்மணா ஸ்ததநந்தரம் |**
**ஸ்வதாகார: பராஹ்யாஷீ: ஸர்வேசு பித்ருகர்மசு || 252**

*அதன் பிறகு, பிராம்மணர்கள் சிராத்த கர்த்தாவைப் பார்த்து 'அஸ்துஸ்வதா' என்று ஆசீர்வாதம் கூற வேண்டும். பித்ரு கர்மாக்களில் இவ்வாறு கூறுவதே உயர்ந்த ஆசீர்வாதம்.*

ततो भुक्तवतां तेषामन्नशेषं निवेदयेत्।
यथा ब्रूयुस् तथा कुर्यादनुज्ञातस् ततो द्विजैः॥

**ததோ புக்தவதாம் தேஷாமந்ந சேஷம் நிவேதயேத் |**
**யதா ப்ரூயுஸ்ததா குர்யாதநு ஞாதஸ்ததோ த்விஜை: || 253**

*ஆசீர்வாதம் பெற்ற பிறகு சிராத்த கர்த்தா மிகுந்து போன அன்னத்தை அப்பிராம்மணர்கள் அனுமதி பெற்று அவர்கள் கட்டளைப்படி விநியோகிக்க வேண்டும்.*

पित्र्ये स्वदितमित्येव वाच्यं गोष्ठे तु सुशृतम्।
सम्पन्नमित्यभ्युदये दैवे रुचितमित्यपि॥

**பித்ர்யே ஸவதிதமித்யேவ வாச்யம் கோஷ்டே து சுஷ்ருதம் |**
**ஸம்பந்ந மித்யப் யுதயே தைவே ருசிதமித்யபி || 254**

*பித்ரு சிராத்தத்தின் போது 'ஸ்வதிகம்' என்றும், கோஷ்டி சிராத்தத்தில் 'சுஸ்ருத' என்றும், விருத்தி ச்ராத்தத்தில் 'சம்பந்ந' என்றும், தேவதைகளை உத்தேசித்த சிராத்தத்தில் 'ருசித' என்றும் வினாவ வேண்டும்.*

अपराह्णस् तथा दर्भा वास्तुसम्पादनं तिलाः।
सृष्टिर् मृष्टिर् द्विजाश्चाऽग्र्याः श्राद्धकर्मसु सम्पदः॥

**அபராஹ்னஸ்ததா தர்பாசநம் துஸம்பாதநம் திலா: |**
**ஸ்ஷ்டிர்ம்ருஷ்டிர்த்வி ஜாஷ்சாக்ர்யா: ஷ்ராத்தகர்மசு ஸம்பத: || 255**

*பிற்பகல் நேரம், தர்ப்பைகள், எள், சிராத்தம் நடத்த தக்க இடம், யாசிக்காமல் சிராத்தத்துக்குத் தேவையான பொருட்களைத் திரட்டுதல், பந்தியைப் பரிசுத்தமாக்கும் பிராம்மணர்களைத் தேடிக் கண்டுபிடித்து நியமித்தல் முதலானவை சிராத்த கிரியைகளுக்கு சம்பத்துகளாகும்.*

दर्भाः पवित्रं पूर्वाह्णो हविष्याणि च सर्वशः।
पवित्रं यच् च पूर्वोक्तं विज्ञेया हव्यसम्पदः॥

**தர்பா: பவித்ரம் பூர்வாஹ்ணோ ஹவிஷ்யாணி ச ஸர்வஷ: |**
**பவித்ரம் யச்ச பூர்வோக்தம் விக்ஞேயா ஹஸ்ய சம்பத: || 256**

*தர்ப்பைகள், மந்திரங்கள், பூர்வான்னம், ஹவிஸ் முதலானவை, மேலும் இதற்கு முன் கூறியவைகளனைத்தும் தெய்வ கிரியைகளுக்கு வேண்டிய சம்பத்துகள்.*

मुन्यन्नानि पयः सोमो मांसं यच् चाऽनुपस्कृतम्।
अक्षारलवणं चैव प्रकृत्या हविरुच्यते॥

**முந்யந்நாநி பயஸ்ஸோமோ மாம்ஸம் யச்சா நுபஸ்க்ருதம் |**
**அக்ஷாரலவணம் சைவ ப்ரக்ருத்யா ஹவிருச்யதே || 257**

*சாதம், பால், சோமரஸம், நல்ல மாமிசம், இயற்கையில் புளிப்பும் உப்பும் இல்லாத பொருட்கள் இவற்றை ஹவிஸ் என்பார்கள்.*

विसृज्य ब्राह्मणांस् तांस् तु नियतो वाग्यतः शुचिः।
दक्षिणां दिशमाकाङ्क्षन् याचेतेमान् वरान् पितृन्॥

**விஸ்ருஜ்ய ப்ராஹ்மணாம் ஸ்தாம் ஸ்து நியதோ வாக்யதஷ்ஷுசி: |**
**தக்ஷிணாம் திஷமாகாக்ஷந் யாசேதேமாந் வராந் பித்ரூந் || 258**

*பிராம்மணர்கள் கிளம்பியதும், மௌனமாய் சிறிது தூரம் பின் தொடர்ந்து சென்று, பிறகு தெற்கு முகமாய் நின்று மனத்தை ஒருமுகப்படுத்தி இவ்வாறு பிரார்த்திக்க வேண்டும்.*

दातारो नोऽभिवर्धन्तां वेदाः सन्ततिरेव च।
श्रद्धा च नो मा व्यगमद् बहु देयं च नोऽस्त्विति॥

**தாதாரோநோ அபிவர்த்தந்தாம் வேதாஸ்ஸந்ததிரேவச |**
**ஷ்ரத்தா ச நோ மாவ்யகமத் பஹூ தேயம் ச நோ அஸ்த்விதி || 259**

*"எங்கள் குலம் கொடைவள்ளல்களான புத்திரர்களால் அபிவிருத்தி யடையட்டும். வேதாத்யயனம் செய்வதும், அதன் பொருளை எடுத்துரைப்பதும், யாகங்கள் செய்வதுமாயிருப்ப வர்களால் அபிவிருத்தி யடையட்டும். புத்திர பௌத்திர சம்பத்தும் அபிவிருத்தியடையட்டும். எங்களுக்கு வேதார்த்தங்களில் சிரத்தை நீங்காதிருக்கட்டும். மற்றவர்களுக்குத் தாராளமாக வழங்கத் தக்கப்படி செல்வம் எங்களுக்குக் கிட்டட்டும்."*

एवं निर्वपणं कृत्वा पिण्डांस् तांस् तदनन्तरम्।
गां विप्रमजमग्निं वा प्राशयेदप्सु वा क्षिपेत्॥

**ஏவம் நிர்வபணம் க்ருத்வா பிண்டாந்ஸ்தா ம்ஸ்ததநந்தரம் |**
**காம் விப்ரமஜமக்னிம் வா ப்ராஷயேதப்சு வா க்ஷிபேத் ||** 260

*இவ்வாறு அந்த பிராம்மணர்களை பிரார்த்தித்த பிறகு பிராம்மணர்களிடம் ஆவாஹநம் செய்துள்ள பித்ருக்களை விசர்ஜநம் செய்ய வேண்டும். பிண்டங்களைப் பசுவுக்குக் கொடுக்க வேண்டும். அல்லது பிராம்மணனுக்கும் சாப்பிடக் கொடுக்கலாம். அல்லது நெருப்பிலோ நீரிலோ போடலாம்.*

पिण्डनिर्वपणं केचित् पुरस्तादेव कुर्वते।
वयोभिः खादयन्त्यन्ये प्रक्षिपन्त्यनलेऽप्सु वा॥

**பிண்ட நிர்வபணம் கேசித் புரஸ்தாதேவ குர்வதே |**
**வயோபி: காதயந்த் யந்யே ப்ரக்ஷிபந்த்யந லேஅல்சு வா ||** 261

*சிலர், பிராம்மணர் போஜனம் செய்த பிறகு பிண்ட பிரதானம் செய்வார்கள். மேலும் நீரிலும் நெருப்பிலும் போடுவது போன்றே பறவைகளுக்கும் சிலர் போடுவார்கள்.*

पतिव्रता धर्मपत्नी पितृपूजनतत्परा।
मध्यमं तु ततः पिण्डमद्यात् सम्यक् सुतार्थिनी॥

**பவித்ரதா தர்மபத்னீ பித்ருபூஜந தத்பரா |**
**மத்யமம் து தத: பிண்ட மத்யாத்ஸம்யக் சுதார்திநீ ||** 262

*பதிவிரதையாகவும், தர்மபத்தினியாகவும், பித்ரு பூஜைகளில் சிரத்தை கொண்டவளாயும், புத்திரரைக் கோருபவளாயும் இருக்கின்ற மூத்த மனைவி, அந்தப் பிண்டங்களில் நடுப்பிண்டமாக இருக்கின்ற பிதாமஹ பிண்டத்தை சாப்பிட வேண்டும்.*

आयुष्मन्तं सुतं सूते यशोमेधासमन्वितम्।
धनवन्तं प्रजावन्तं सात्त्विकं धार्मिकं तथा॥

**ஆயுஷ்மந்தம் சுதம் சூதே யஷோ மேதாஸமந்விதம் |**
**தநவந்தம் ப்ரஜாவந்தம் ஸாத்விகம் தார்மிகம் ததா ||** 263

*அதனைச் சாப்பிடுவதால், தீர்க்க ஆயுள், புத்தி, செல்வம், நன்மக்கள், பலம், தர்மம் இவற்றோடு கூடிய புத்திரன் பிறப்பான்.*

प्रक्षाल्य हस्तावाचम्य ज्ञातिप्रायं प्रकल्पयेत्।
ज्ञातिभ्यः सत्कृतं दत्त्वा बान्धवानपि भोजयेत्॥

**ப்ரக்ஷால்ய ஹஸ்தாவாசம்ய ஞாதிப்ராயம் ப்ரகல்பயேத் |**
**ஞாதிப்யஸ்ஸத் க்ருதம் தத்வா பாந்தவாநபி போஜயேத் ||** 264

சிராத்தகர்த்தா கைகால்களை அலம்பிக் கொண்டு ஆசமனம் செய்து கொண்ட பிறகு, பங்காளிகள் அனைவருக்கும் நன்கு உபசரித்துச் சாப்பிடச் செய்யவேண்டும். மற்ற பந்துக்களையும் அவ்வாறே சாப்பிடச் செய்ய வேண்டும்.

उच्छेषणं तु तत् तिष्ठेद् यावद् विप्रा विसर्जिताः।
ततो गृहबलिं कुर्यादिति धर्मो व्यवस्थितः॥

**உச்சேஷணம் து தத்திஷ்டேத்யாவத் விப்ராः விஸர்ஜிதாः |**
**ததோக்ருஹபலிம் குர்யாதிதி தர்மோ வ்யவஸ்தித: ||** 265

உணவருந்திய சிராத்த பிராம்மணர்கள் விடைபெற்றுச் செல்லும்வரை அவர்கள் சாப்பிட்ட எச்சிலை எடுக்கக்கூடாது. அவர்கள் சென்ற பிறகு அந்த இடத்தைச் சுத்தம் செய்ய வேண்டும். பிறகு வைஷ்வதேவம், பலிஹோமம், நித்யசிராத்தம், அதிதி போஜனம் முதலானவற்றைச் செய்ய வேண்டும்.

हविर् यच् चिररात्राय यच् चाऽनन्त्याय कल्पते।
पितृभ्यो विधिवद् दत्तं तत् प्रवक्ष्याम्यशेषतः॥

**ஹவிர் யச்சிரராத்ராய யச்சாநந்த்யாய கல்பதே |**
**பித்ருப்யோ விதிவத் தத் ப்ரவக்ஷ்யாம்ய சேஷத: ||** 266

நெடுங்காலம் பித்ருக்களுக்கு திருப்தி தரக்கூடியதையும், எந்த முறையில் நடத்தினால் எவ்வளவு காலம் அவர்களுக்குத் திருப்தி தரும் என்பதையும் முழுமையாகக் கூறுகிறேன்.

तिलैर् व्रीहियवैर् माषैरद्भिर् मूलफलेन वा।
दत्तेन मासं तृप्यन्ति विधिवत् पितरो नृणाम्॥

**திலைர்வ்ரீஹி யவைர் மாஷைர் அத்பிர்மூலபலேந வா |**
**தத்தேந மாஸம் த்ருப்யந்தி விதிவத் பிதரோ ந்ருணாம் ||** 267

எள், தானியம், யவை, உளுந்து, தண்ணீர், கிழங்கு வகைகள், கனி வகைகள் முதலானவற்றை சாஸ்திரப்படி அளித்தால், பித்ருக்கள் ஒரு மாதம் திருப்தியடைவார்கள்.

द्वौ मासौ मत्स्यमांसेन त्रीन् मासान् हारिणेन तु।
औरभ्रेणाऽथ चतुरः शाकुनेनाऽथ पञ्च वै॥

**த்வௌ மாஸௌ மத்ஸ்யமாம்ஸேந த்ரீந் மாஸாந் ஹாரிநேண து |**
**ஔரப்ரேணாத சதுர: ஷாகுநேநாத பஞ்ச வை ||** 268

மீன் மாமிசத்தால் இரு மாதங்களும், மான் மாமிசத்தால் மூன்று மாதங்களும், செம்மறியாட்டு மாமிசத்தால் நான்கு மாதங்களும்,

*பறவை மாமிசத்தால் ஐந்து மாதங்களும் பித்ருக்கள் திருப்தி யடைவார்கள்.*

षण् मासांश् छागमांसेन पार्षतेन च सप्त वै।
अष्टावेणस्य मांसेन रौरवेण नवैव तु॥

**ஷண்மாஸாம் ஷ்சாகமாம்ஸேந பார்ஷதேந ச ஸப்தவை |**
**அஷ்டாவேணஸ்ய மாம்ஸேந நௌரவேண நவைவது || 269**

*வெள்ளாட்டின் மாமிசத்தால் ஆறு மாதங்களும், புள்ளிமான் மாமிசத்தால் ஏழு மாதங்களும், கலைமான் மாமிசத்தால் ஒன்பது மாதங்களும் பித்ருக்கள் திருப்தியடைவார்கள்.*

दश मासांस् तु तृप्यन्ति वराहमहिषाऽऽमिषैः।
शशकूर्मयोस् तु मांसेन मासानेकादशैव तु॥

**தஷமாஸாம்ஸ்து த்ருப்யந்தி வராஹ மஹிஷாமிஷை |**
**ஷஷகூர்மயோஸ்து மாம்ஸேந மாஸாநேகாதஷைவ து || 270**

*முள்ளம்பன்றி, காட்டெருமை மாமிசங்களால் பத்து மாதங்களும், முயல், ஆமை மாமிசங்களால் பதினொரு மாதங்களும் பித்ருக்கள் திருப்தியடைவார்கள்.*

संवत्सरं तु गव्येन पयसा पायसेन च।
वार्ध्रीणसस्य मांसेन तृप्तिर् द्वादशवार्षिकी॥

**ஸம்வத்ஸரம் து கவ்யேந பயஸா பாயஸேந ச |**
**வார்த்ரீணஸஸ்ய மாம்ஸேந த்ருப்திர்த்வாதஷ வார்ஷிகீ || 271**

*பசும்பால், தயிர், நெய், இவற்றால் ஒரு வருட காலமும், வார்தீநம் (இரண்டு காதுகளும் நீரில்பட மூழ்கி நீரருந்தும் ஆடு) என்னும் ஆட்டின் மாமிசத்தால் பன்னிரண்டு ஆண்டுகளும் பித்ருக்கள் திருப்தி யடைவார்கள்.*

कालशाकं महाशल्काः खड्गलोहाऽऽमिषं मधु।
आनन्त्यायैव कल्प्यन्ते मुन्यन्नानि च सर्वशः॥

**காலஷாகம் மஹாஷல்கா: கட்கலோஹாமிஷம் மது |**
**ஆநந்த்யாயைவ கல்ப்யந்தே முந்யந்நாநி ச ஸர்வஷ: || 272**

*அந்தக் காலத்தில் விளைகின்ற காய்கறிகள், முட்கள் உள்ள மீன் மாமிசம், கட்கமிருக மாமிசம், சிவப்பு ஆட்டு மாமிசம், காட்டு செந்நெல், தேன் இவற்றால் எல்லையற்ற காலம் பித்ருக்கள் திருப்தி யடைவார்கள்.*

यत् किञ्चिन् मधुना मिश्रं प्रदद्यात् तु त्रयोदशीम्।
तदप्यक्षयमेव स्याद् वर्षासु च मघासु च॥

**யத்கிஞ்சித் மதுநா மிஷ்ரம் பிரதத்யாத்து த்ரயோதஷீம் |**
**ததப்யக்ஷயமேவ ஸ்யாத்வார்ஷாஸு ச மகாஅச || 273**

மழைக்காலமான புரட்டாசி மாதம் கிருஷ்ண பட்ச திரயோதசியும், மக நட்சத்திரமும் கூடிய நாளில் தேன் கலந்து செய்த (பட்சணம் அல்லது பாயசம்) பொருளால் பித்ருக்கள் அட்சயமாய் திருப்தியடைவார்கள்.

अपि नः स कुले जायाद् यो नो दद्यात् त्रयोदशीम्।
पायसं मधुसर्पिर्भ्यां प्राक्छाये कुञ्जरस्य च॥

**அபிநஸ்ஸ குலே ஜாயாத்யோ நோ தத்யாத் த்ரயோதஷீம் |**
**பாயஸம் மதுஸர்பிர்ப்யாம் ப்ராக்சாசயே குஞ்ஜரஸ்ய ச|| 274**

இவ்வாறு புரட்டாசி கிருஷ்ணபட்ச திரயோதசியில் பாயஸத்தாலும், நெய்யால் செய்த அப்பங்களாலும், அதிரசங்களாலும் சிராத்தம் செய்பவன் நம் குலத்தில் பிறப்பானா, என்று பித்ருக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

यद्यद् ददाति विधिवत् सम्यक् श्रद्धासमन्वितः।
तत्तत् पितॄणां भवति परत्रानन्तमक्षयम्॥

**யத்யத்ததாதி விதிவத்ஸம்யக் ஷ்ரத்தா ஸமந்வித: |**
**தத்தத் பித்ரூணாம் பவதி பரத்ராநந்தமக்ஷயம் || 275**

எதையெதை சிரத்தையோடும் சாஸ்திர முறைப்படியும் பித்ருக்களுக்கு அளிக்கிறார்களோ, அவையவை அந்த பித்ருக்களுக்கு மேலான திருப்தியை அட்சயமாக அளிக்கின்றன.

कृष्णपक्षे दशम्यादौ वर्जयित्वा चतुर्दशीम्।
श्राद्धे प्रशस्तास् तिथयो यथैता न तथेतराः॥

**க்ருஷ்ணபக்ஷே தஷம்யாதௌ வர்ஜயித்வா சதுர்தஷீம் |**
**ஷ்ராத்தே ப்ரஹஸ்தாஸ்திதயோ யதைதா ந ததேதரா: || 276**

கிருஷ்ணபட்சத்தில் சதுர்த்தசி நீங்கலாக தசமி முதல் அமாவாசை வரையுள்ள திதிகள் சிராத்தத்துக்கு மிகமிக உகந்த திதிகள். மற்ற திதிகள் அப்படியல்ல.

युक्षु कुर्वन् दिनर्क्षेषु सर्वान् कामान् समश्नुते।
अयुक्षु तु पितॄन् सर्वान् प्रजां प्राप्नोति पुष्कलाम्॥

**யுக்ஷு குர்வந் தினநக்ஷத்ரேஷு ஸர்வாந் காமாந் ஸமஷ்நுதே |**
**அயுக்ஷுது பித்ருந் ஸர்வாந் ப்ரஜாம் ப்ராப்நோதி புஷ்கலாம் || 277**

இரட்டையாக வரும் திதிகளிலும், இரட்டையாக வரும் பரணி ரோஹிணி முதலான நட்சத்திரங்களிலும் சிராத்தம் செய்பவன் மனோவிருப்பங்கள் அனைத்தும் நிறைவேறும். பிரதமை முதலான ஒற்றை திதிகளிலும், அஸ்வினி கிருத்திகை முதலான ஒற்றை நட்சத்திரங்களிலும் சிராத்தம் செய்பவன் பெருஞ்செல்வமும், கல்வியும் கொண்ட சந்ததியை அடைவான்.

यथा चैवाऽपरः पक्षः पूर्वपक्षाद् विशिष्यते।
तथा श्राद्धस्य पूर्वाह्णादपराह्णो विशिष्यते॥

**யதாசைவாபர: பக்ஷ: பூர்வபக்ஷாத் விசிஷ்யதே |**
**ததா ஷ்ராத்தஸ்ய பூர்வாஹ்ணாதபரா ஹ்ணோ விசிஷ்யதே || 278**

பித்ரு கிரியைகளில் எவ்வாறு சுக்ல பட்சத்தைவிட கிருஷ்ண பட்சம் சிறந்ததோ அவ்வாறே முற்பகலைவிட பிற்பகல் சிறந்தது.

प्राचीनावीतिना सम्यगपसव्यमतन्द्रिणा।
पित्र्यमा निधनात् कार्यं विधिवद् दर्भपाणिना॥

**ப்ராசீநாசவீதிநா ஸம்யகபஸவ்ய மதந்த்ரிணா |**
**பித்ர்யமாநிதநாத்கார்யம் விதிவத் தர்பபாணிநா || 279**

பூணூலை இடது தோளில் போட்டுக்கொண்டு, தர்ப்பைகளை கையில் கொண்டு, கைமறித்து தீர்த்தமிடும் சிராத்தத்தை நன்கு சிரத்தையோடு செய்ய வேண்டும்.

रात्रौ श्राद्धं न कुर्वीत राक्षसी कीर्तिता हि सा।
सन्ध्ययोरुभयोश् चैव सूर्ये चैवाऽचिरोदिते॥

**ராத்ரௌ ஷ்ராத்தம் ந குர்வீத ராக்ஷஸீ கீர்திதா ஹி ஸா |**
**ஸந்த்ய யோருபயோஷ்சைவ சூர்யே சைவா சிரோதிதே || 280**

ராத்திரியை ராட்சசி என்று கூறுவார்கள். எனவே இரவு நேரத்தில் சிராத்தம் செய்யக்கூடாது.

காலை, மாலை, சந்தி காலங்களிலும் செய்யக்கூடாது.

சூரியோதயமான உடனேயும் செய்யக்கூடாது.

अनेन विधिना श्राद्धं त्रिरब्दस्येह निर्वपेत्।
हेमन्तग्रीष्मवर्षासु पाञ्चयज्ञिकमन्वहम्॥

**அநேந விதிநா ஷ்ராத்தம் த்ரிரப்தஸ்யேஹ நிர்வபேத் |**
**ஹேமந்த் க்ரீஷ்ம வர்ஷாசு பாஞ்சயஞு கமந்வஹம் ||** 281

இவ்வாறாக வருடத்துக்கு மூன்று முறைகளேனும், பனிக்காலம், இலையுதிர் காலம், மழைக்காலங்களில் சிராத்தம் செய்ய வேண்டும். பஞ்ச யக்ஞுங்களையும் நடத்த வேண்டும்.

न पैतृयज्ञियो होमो लौकिकेऽग्नौ विधीयते।
न दर्शेन विना श्राद्धमाहिताऽग्नेर् द्विजन्मनः॥

**ந பைத்ரு யக்ஞுயோ ஹோமோ லௌசிகே அக்நௌ விதீயதே |**
**ந தர்ஷேந விநா ஷ்ராத்தமாஹி தாக்நேர் த்விஜன்மந: ||** 282

பித்ரு சிராத்தத்தில் செய்யும் ஹோமத்தை வீட்டு நெருப்பில் செய்யக்கூடாது. பிராம்மணனுடைய கரத்தில் செய்ய வேண்டும்.

மாத சிராத்தத்தை அமாவாசையில் செய்ய வேண்டும்.

இறந்த திதியில் செய்யும் வருட சிராத்தத்துக்கு மட்டும் இது விலக்கு.

यदेव तर्पयत्यद्भिः पितृन् स्नात्वा द्विजोत्तमः।
तेनैव कृत्स्नमाप्नोति पितृयज्ञक्रियाफलम्॥

**யதேவ தர்பயத்யத்பி: பித்ரூந் ஸ்நாத்வா த்விஜோத்தம: |**
**தேநைவ க்ருத்ஸ்நமாப்நோதி பித்ருயக்ஞுக்ரியா பலம் ||** 283

எங்கே த்விஜோத்தமன் நீராடியதும் தண்ணீரினால் தர்ப்பணம் செய்கிறானோ, அதனால் அவன் பித்ருக்கள் அனைவரும் திருப்தியடைவார்கள். செய்பவனும் பித்ருயக்ஞும் செய்த பலனை அடைவான்.

वसून् वदन्ति तु पितृन् रुद्रांश् चैव पितामहान्।
प्रपितामहांस् तथाऽऽदित्यान् श्रुतिरेषा सनातनी॥

**வசூந் வதந்தி பித்ரூந் ருத்ராம்ஷ்சைவ பிதாமஹாந் |**
**ப்ரபிதாமஹாம்ஸ் ததாதித்யாந் ஷ்ருதிரேஷா ஸநாதநீ ||** 284

பித்ருக்களை வசுக்களின் சொரூபம் என்று பழமையான வேதம் கூறுகிறது.

பாட்டனை ருத்திர தேவரின் ரூபமாகவும், முப்பாட்டனை ஆதித்ய தேவரின் ரூபமாகவும் கூறுகிறது.

विघसाशी भवेन् नित्यं नित्यं वाऽमृतभोजनः।
विघसो भुक्तशेषं तु यज्ञशेषं तथाऽमृतम्॥

**விகசாஷீ பவேந்நித்யம் நித்யம்வர அம்ருதபோஜநः |**
**விகஸோ புக்தசேஷம் து யக்ஞசேஷம் ததாஅம்ருதம் || 285**

எப்போதும் விகசத்தை உண்பவனாகவும், அம்ருதத்தை உண்பவனாகவும் இருக்க வேண்டும். விகசம் என்றால் அதிதி சாப்பிட்ட பிறகு மிகுந்தது. அம்ருதம் என்றால் யக்ஞத்தில் மிகுந்தது.

एतद् वोऽभिहितं सर्वं विधानं पाञ्चयज्ञिकम्।
द्विजातिमुख्यवृत्तीनां विधानं श्रूयतामिति॥

**ஏதத்வோ அபிஹிதம் ஸர்வம் விதாநம் பாஞ்ஜயக்ஞகம் |**
**த்விஜாதி முக்ய வ்ருத்தீநாம் விதாநம் ஷ்ரூயதாமிதி || 286**

பஞ்சயக்ஞ சம்பந்தமான முறைகளை எடுத்துரைத்தேன். இனி த்விஜாதிகளில் முக்கியமானவனான பிராம்மணனைப் பற்றிய விதானங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்.

(மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 4

चतुर्थमायुषो भागमुषित्वाऽऽद्यं गुरौ द्विजः।
द्वितीयमायुषो भागं कृतदारो गृहे वसेत्॥

**சதுர்தமாயுஷோ பாகமு ஷித்வா ஆத்யம் குரௌ த்விஜ: |**
**த்விதீய மாயுஷோ பாகம் க்ருததாரோ க்ருஹே வஸேத் || 1**

*பிராம்மணன் தன் ஆயுளின் நான்கு பாகத்தில் முதல் ஒரு பாகத்தை குருகுலவாசத்தால் கடத்த வேண்டும். இரண்டாவது பாகத்தில் திருமணம் புரிந்து கொண்டு இல்லத்தில் வசிக்க வேண்டும்.*

अद्रोहेणैव भूतानामल्पद्रोहेण वा पुनः।
या वृत्तिस् तां समास्थाय विप्रो जीवेदनापदि॥

**அத்ரோஹேணைவ பூதாநாமல்ப த்ரோஹேண வா புந: |**
**யா வ்ருத்திஸ்தாம் ஸாமாஸ்தாய விப்ரோ ஜீவேதநாபதி || 2**

*பிராம்மணன், ஆபத்து ஏதும் இல்லாதபோது எந்த ஜீவனுக்கும் துரோகம் செய்யாமல் இருக்கத்தக்கபடி தன் ஜீவனோபாயத்தை அமைத்துக் கொள்ள வேண்டும். இயலாத போது குறைந்த பாதிப்பை மட்டுமே அளிக்கவல்ல தொழிலால் ஜீவிக்க வேண்டும்.*

यात्रामात्रप्रसिद्ध्यर्थं स्वैः कर्मभिरगर्हितैः।
अक्लेशेन शरीरस्य कुर्वीत धनसञ्चयम्॥

**யாத்ராமாத்ர ப்ரஸித்த்யர்த்தம்ஸ்வை: கர்ம பிரகர் ஹிதை: |**
**அக்ளேஷே ந ஷரீரஸ்ய குர்வீத தநஸஞ்சயம் || 3**

*பழிப்புக்கிடமில்லாதபடியான, தன் குலத்துக்கு விதிக்கப்பட்ட தொழில்களை செய்ய வேண்டும. சுகத்தில் பற்று வையாமல், உடலுக்கும் உபாதையளிக்காமல் செல்வத்தைத் தேட வேண்டும்.*

ऋताऽमृताभ्यां जीवेत् तु मृतेन प्रमृतेन वा।
सत्याऽनृताभ्यामपि वा न श्ववृत्त्या कदाचन॥

**ருதா ம்ருதாப்யாம் ஜீவேத்து ம்ருதேன ப்ரம்ருதே ந வா |**
**ஸ்தயாந்ருதாப்யாமபி வா ந ஷ்வவ்ருத்யா கதாசந || 4**

*ருதம், அம்ருதம், ம்ருதம், ப்ரம்ருதம், சத்யாந்ருதம் இவைகளால் பிராம்மணர்கள் தங்கள் ஜீவனோபாயத்தை நடத்த வேண்டும். ஆனால் நாயைப் போன்று ஒரு காலும் ஜீவிக்கக் கூடாது.*

ऋतमुञ्छशिलं ज्ञेयममृतं स्यादयाचितम्।
मृतं तु याचितं भैक्षं प्रमृतं कर्षणं स्मृतम्॥

**ருதமுஞ்ஷிலம் ஞேயமம்ருதம் ஸ்யாதயாசிதம் |**
**ம்ருதம் து யாசிதம் பைக்ஷம் ப்ரம்ருதம் கர்ஷணம் ஸ்ம்ருதம் || 5**

கீழே சிந்திக்கிடக்கும் தானியங்களை பொறுக்கி எடுத்து வருவது 'ருதம்' எனப்படும். தானியக்கதிர்கள் விழுந்து கிடந்தால் அவைகளை எடுத்து வருவது 'சிலம்' எனப்படும். யாரையும் யாசிக்காமல் தானாகக் கிடைத்தது 'அம்ருதம்' எனப்படும். யாசித்துக் கொண்டு வந்தது 'ம்ருதம்' எனப்படும். பயிரிட்டுப் பெறுவது 'ப்ரம்ருதம்' எனப்படும்.

सत्याऽनृतं तु वाणिज्यं तेन चैवाऽपि जीव्यते।
सेवा श्ववृत्तिराख्याता तस्मात् तां परिवर्जयेत्॥

**ஸத்யாந்ருதம் து வாணிஜ்யம் தேந சைவாபி ஜீவ்யதே |**
**ஸேவா ஷ்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பிரிவர்ஜயேத் || 6**

வர்த்தகம் செய்வது 'சத்யாந்ருதம்' எனப்படும். வர்த்தகம் செய்தும் பிராம்மணன் ஜீவிக்கலாம்.

சேவகத் தொழில் செய்வது நாயின் பிழைப்பைக் போன்றது. எனவே ஒருகாலும் அதை செய்யக் கூடாது.

कुसूलधान्यको वा स्यात् कुम्भीधान्यक एव वा।
त्र्यहैहिको वाऽपि भवेदश्वस्तनिक एव वा॥

**குசூலதான்யகோ வாஸ்யாத் கும்பீதாந்யக ஏவ வா |**
**திரய ஹைஹறிகோ வாபி பவேதஷ்வஸ்தநிக ஏவ வா || 7**

மூன்று ஆண்டுகளுக்குத் தேவையான தானியங்களையும், அதற்கு மேலும் களஞ்சியத்தில் சேர்த்து வைத்துக் கொள்பவன் 'குசூலதான்யகன்' எனப்படுவான்.

ஒரு வருடத்துக்குத் தேவையான தானியங்களை சேர்த்து வைத்துக் கொள்பவன் 'கும்பீதான்யகன்' எனப்படுவான்.

மூன்று நாட்களுக்குத் தேவையானதை சேகரித்து வைத்துக் கொள்பவன் 'திரயஹைஹறிகன்' எனப்படுவான்.

மறு நாளைக்குத் தேவையானதை மட்டும் வைத்துக் கொள்பவன் 'அஷ்வஸ்தநிகன்' எனப்படுவான்.

चतुर्णामपि चैतेषां द्विजानां गृहमेधिनाम्।
ज्यायान् परःपरो ज्ञेयो धर्मतो लोकजित्तमः॥

**சதுர்ணாமபி சைதேஷாம் த்விஜாநாம் க்ருஹமேதிநாம் |**
**ஜ்யாயாக் பர: பரோ ஞேயோ தர்மதோ லோகஜித்தம: || 8**

இப்போது கூறிய நான்கு வகையானவர்களில் முதலில் கூறியவரை விட அடுத்தடுத்ததுக் கூறியவர்கள் முறையே சிறந்தவர்கள். ஏனெனில் ஜீவனத்தை நடத்திய படி, மற்ற விஷயங்களில் மனத்தைச் செலுத்தாமல், பகவானை தியானித்தபடி இருப்பார்கள் இறுதியாகக் கூறியவர்கள்.

षट्कर्मैको भवत्येषां त्रिभिरन्यः प्रवर्तते।
द्वाभ्यामेकश् चतुर्थस् तु ब्रह्मसत्रेण जीवति॥

**ஷட்கர்மைகோ பவத்யேஷாம் த்ரிபிரக்ய: ப்ரவர்ததே |**
**த்வாப்யா மேகஷ் சதுர்தஸ்து ப்ரஹ்மஸத்ரேண ஜீவதி || 9**

முதலில் கூறியவன் (மூன்று வருடங்களுக்கும் அதற்கு மேலும் சேர்த்துக் வைத்துக் கொள்பவன்) ஆறு வகைகளில் ஜீவனம் நடத்தலாம். அதாவது கீழே சிந்திக் கிடக்கும் தானியங்களை பொறுக்கி எடுத்து வருதல், கீழே கிடக்கும் தானியக்கதிர்களை சேர்த்து எடுத்து வருதல், யாரையும் யாசிக்காமல் தானாகக் கிடைத்ததை வைத்துக் கொள்ளல், யாசித்துப் பெறுதல், விவசாயம், வர்த்தகம் என்னும் ஆறு வகைகளாலும் ஜீவனம் நடத்தலாம்.

அதற்கடுத்தவன், ( ஒரு வருடத்துக்குத் தேவையானதை சேர்த்து வைப்பவன்) வேள்வி செய்தல், வேதம் சொல்லிக் கொடுத்தல், தானம் பெறுதல் என்னும் மூன்று வகைகளால் ஜீவிக்கலாம்.

அதற்கடுத்தவன் (மூன்று நாட்களுக்குத் தேவையானதை சேகரித்து வைத்துக் கொள்பவன்) வேள்வி புரிதல், வேதத்தின் பொருள் உரைத்தல் என்னும் இருவகைகளால் ஜீவிக்கலாம்.

மறுநாளுக்கு மட்டுமே சேகரிப்பவன் வேதம் கற்பிப்பதால் மட்டுமே ஜீவிக்கலாம்.

वर्तयंश् च शिलोञ्छाभ्यामग्निहोत्रपरायणः।
इष्टीः पार्वायणान्तीयाः केवला निर्वपेत् सदा॥

**வர்த்தயம்ச ஷிலாம்சாப்யாமாக்நி ஹோத்ர பராயண: |**
**இஷ்டி: பார்வாயநாந்தீயா : கேவலா நிர்வபேத்ஸதா || 10**

இவ்வாறு ஜீவிப்பவன் செல்வத்தைக் கொண்டு செய்யக் கூடிய மற்ற கிரிகைளை செய்ய இயலாதாகையால், எப்போதும் அக்னி

ஹோத்ரம் செய்து கொண்டு அமாவாசை பௌர்ணமி ஆக்ரயண இஷ்டிகளை செய்ய வேண்டும்.

न लोकवृत्तं वर्तेत वृत्तिहेतोः कथञ्चन।
अजिह्मामशठां शुद्धां जीवेद् ब्राह्मणजीविकाम्॥

**ந லோகவ்ருத்தம் வர்தேத வ்ருத்திஹேதோ: கதஞ்சந |**
**அஜிஹ்மாமஷடாம் ஷுத்தாம் ஜீவேத் ப்ராஹ்மண ஜீவிகாம் ||** 11

பிராம்மணன் ஜீவனத்துக்காக விகடம் பண்ணுதல் முதலான தொழில்களில் ஈடுபடலாகாது. பொய் கூறுதல், டம்பமாகப் பேசுதல் முதலானவைகள் கலக்காத பிராம்மணனுக்கான தொழில்கள் செய்து பிழைக்க வேண்டும்.

सन्तोषं परमास्थाय सुखार्थी संयतो भवेत्।
सन्तोषमूलं हि सुखं दुःखमूलं विपर्ययः॥

**ஸந்தோஷம் பரமாஸ்தாய சுகார்த்தீ ஸம்யதோ பவேத் |**
**ஸந்தோஷ மூலம் ஹி சுகம் துக்க மூலம் விபர்யய: ||** 12

தனக்குக் கிடைத்தவைகளைக் கொண்டு திருப்தியடைந்து, அதற்கு மேலும் ஆசைப்படாமல் வாழ வேண்டும்.

இவ்வாறு சுகமாக வாழ்வதே சந்தோஷத்தைக் கொடுக்கும். திருப்தியின்றி இருப்பது துக்கத்தைக் கொடுக்கும்.

अतोऽन्यतमया वृत्त्या जीवंस्तु स्नातको द्विजः।
स्वर्ग्यायुष्ययशस्यानि व्रतानीमानि धारयेत्॥

**அதோ அந்யதமயா வ்ருத்யா ஜீவம்ஸ்து ஸ்நாதகோ த்விஜ: |**
**ஸ்வர்காயுஷ்ய ஷஸ்யாநி வ்ரதாநீமாநி தாரயேத் ||** 13

இதற்கு முன் கூறிய ஜீவனவிருத்திகளில் தனக்குத் தக்க ஜீவன விருத்தியை செய்து கொண்டு, பரலோகம், ஆயுள், கீர்த்தியை அளிக்கக்கூடியதான இந்த விரதங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

वेदोदितं स्वकं कर्म नित्यं कुर्यादतन्द्रितः।
तद् धि कुर्वन् यथाशक्ति प्राप्नोति परमां गतिम्॥

**வேதோதிதம் ஸ்வகம் கர்ம நித்யம் குர்யாததந்த்ரிய: |**
**தத்தி குர்வந் யதாஷக்தி ப்ராப் நோதி பரமாம் கதிம் ||** 14

நித்யம் அனுஷ்டிக்க வேண்டும் என்று வேதத்தில் கூறப்பட்ட கிரியைகளை சோம்பலின்றி செய்ய வேண்டும். அவ்வாறு தன் கர்மானுஷ்டானங்களை, சக்திக்குத் தக்கபடி செய்பவன் உத்தம கதியை அடைவான்.

नेहेतार्थान् प्रसङ्गेन न विरुद्धेन कर्मणा।
न विद्यमानेष्वर्थेषु नार्त्यामपि यतस् ततः ॥

**நேஹேதார்தாந் ப்ரசங்கேந ந விருத்தேந கர்மணா |**
**ந வித்யமா நேஷ்வர்த்தேஷு நார்த்யாமபி யதஸ்தத: ||** 15

பாட்டு, நாட்டியம் போன்றவற்றால் பணம் சம்பாதிக்கக் கூடாது. தகாதவனுக்கு யாகம் செய்து வைக்கக் கூடாது. பணம் இருக்கிறதோ இல்லையோ பாவிகளிடம் தானம் வாங்கக் கூடாது.

इन्द्रियार्थेषु सर्वेषु न प्रसज्येत कामतः।
अतिप्रसक्तिं चैतेषां मनसा सन्निवर्तयेत्॥

**இந்த்ரியார்தேஷு ஸர்வேஷீ ஸ ப்ரசஜ்யேத காமத: |**
**அதிப்ரசக்திம் சைதேஷாம் மநஸா ஸந்நிவர்தயேத் ||** 16

சகல இந்திரியங்களின் விஷயங்களிலும் ஆசையை விட வேண்டும். எந்த இந்திரிய விஷயத்திலும் அதிக ஆவல் கொள்ளாமல் மனத்தை அதில் செல்லவிடாமல் தடுக்க வேண்டும்.

सर्वान् परित्यजेदर्थान् स्वाध्यायस्य विरोधिनः।
यथातथाऽध्यापयंस् तु सा ह्यस्य कृतकृत्यता ॥

**ஸர்வாந் பரித்யஜேதர்த்தாந் ஸ்வாத்யாயஸ்ய விரோதிந: |**
**யதா ததா அத்யாபயம்ஸ்து ஸாஹ்யஸ்ய க்ருதக் ருக்யதா ||** 17

வேதாத்யயனம் செய்வதற்கு இடையூறாக இருக்கும் சகலத்தையும் விலக்கிவிட வேண்டும்.

வேதாத்யயனமும், சொல்லிக் கொடுத்தலுமே பிராம்மணனுக்கு பிறவிப்பயனை நல்கும்.

वयसः कर्मणोऽर्थस्य श्रुतस्याभिजनस्य च।
वेषवाग्बुद्धिसारूप्यमाचरन् विचरेदिह॥

**வயஸ: கர்மணோ அர்த்தஸ் ய ஷ்ருதஸ்யாபிஜ நஸ்ய ச |**
**வேஷவாக் புத்தி ஸாரூப்ய மாசரந் விசரேதிஹ ||** 18

தன்னுடைய வயதுக்கேற்றபடியும், தான் செய்யும் யாகம் இயற்றுதல் அல்லது வேறு தொழிலுக்குத் தக்கபடியும், தன் செல்வநிலைக்குத் தக்கபடியும், குலத்துக்குத் தக்கபடியும் ஆடை, பேச்சு, புத்தியுடன் இருக்க வேண்டும்.

बुद्धिवृद्धिकराण्याशु धन्यानि च हितानि च।
नित्यं शास्त्राण्यवेक्षेत निगमांश् चैव वैदिकान्॥

**புத்தி வ்ருத்திகராண்யாஷு தந்யாநி ச ஹிதாநி ச |**
**நித்யம் ஷாஸ்த்ராண்யவே க்ஷேத நிகமாந்ஷ்சைவ வைதிகாந் ||** 19

புத்தியை வளர்க்கக்கூடிய, வேத ஞானத்தை வழங்கக்கூடிய பொருளீட்டப் பயன்படக்கூடிய, தனக்கு நன்மையை நல்கக் கூடிய நூல்களை தினமும் படிக்க வேண்டும்.

यथायथा हि पुरुषः शास्त्रं समधिगच्छति।
तथातथा विजानाति विज्ञानं चाऽस्य रोचते॥

**யதாயதாஹி புருஷ: ஷாஸ்த்ரம் ஸமதிகச்சதி |**
**ததா ததா விஜாநாதி விக்ஞானம் சாஸ்ய ரோசதே ||** 20

எவ்வளவுக்கெவ்வளவு சாஸ்திரத்தை அய்யாசம் செய்கிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய ஞானம் பிரகாசிக்கும்.

ऋषियज्ञं देवयज्ञं भूतयज्ञं च सर्वदा।
नृयज्ञं पितृयज्ञं च यथाशक्ति न हापयेत्॥

**ருஷியக்ஞும், தேவயக்ஞும் பூதயக்ஞும் ச ஸர்வதா |**
**ந்ருயக்ஞும் பித்ருயக்ஞும் ச யதாஷக்தி நஹாபயேத் ||** 21

கிருஹஸ்தன் வேதமோதுதல், தேவ பூஜை செய்தல், வைஸ்வ தேவம் முதலான ஹோமங்கள் செய்தல், அதிதிபோஜனம், சிராத்தம் முதலானவைகளை சக்திக்குத் தக்கபடி செய்ய வேண்டும். ஒருகாலும் விடக் கூடாது.

एतानेके महायज्ञान् यज्ञशास्त्रविदो जनाः।
अनीहमानाः सततमिन्द्रियेष्वेव जुह्वति॥

**ஏதாநேகே மஹாயக்ஞாந் யக்ஞ ஷாஸ்த்ரவிதோ ஜநா: |**
**அநீஹமாநாஸ்ஸதத மிந்த்ரியேஷ்வேவ ஜுஹ்வதி ||** 22

மாபெரும் ஞானிகள் மட்டுமே பஞ்சமஹா யக்ஞங்களான இவைகளைச் செய்ய மாட்டார்கள். அவர்கள் தங்கள் இந்திரியங் களிலேயே இந்த ஹோமங்களைச் செய்தவர்களாகின்றனர்.

वाच्येके जुह्वति प्राणं प्राणे वाचं च सर्वदा।
वाचि प्राणे च पश्यन्तो यज्ञनिर्वृत्तिमक्षयाम्॥

**வாச்யேகே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணே வாசம் ச ஸர்வதா |**
**வாசி ப்ராணே ச பஷ்யந்தோ யக்ஞ நிர்வ்ருத்தி மக்ஷயாம் ||** 23

மேலோர் சிலர் யக்ஞபலன்கள் தங்கள் வாக்கிலும் பிராணனிலும் இருப்பதாகக் கருதுவர். வாக்கையும் பிராணனையும் கொண்டு யக்ஞபலனை அடைவார்கள்.

ज्ञानेनैवाऽपरे विप्रा यजन्त्येतैर् मखैः सदा।
ज्ञानमूलां क्रियामेषां पश्यन्तो ज्ञानचक्षुषा॥

**ஞாநேநைவாபரே விப்ரா யஜந்த்யேதைர் மகைஸ்ஸதா |**
**ஞான மூலம் க்ரியாமேஷாம் பஷ்யந்தோ ஞான சக்ஷுஷா ||** 24

*சில ஞானியர் பிரம்ம ஞானம் என்னும் கண்ணாலேயே எல்லா கிரியைகளின் பலனும் கிடைக்கும் என்று ஞானத்தில் திளைத்திருப்பர்.*

अग्निहोत्रं च जुहुयादाद्यन्ते द्युनिशोः सदा।
दर्शेन चाऽर्धमासाऽन्ते पौर्णमासेन चैव हि॥

**அக்நிஹோத்ரம் ச ஜுஹுயா தாத்யந்தே த்யுநி ஷோஸ்ஸதா |**
**தர்ஷேந சார்த்தமாஸாந்தே பௌர்ணமாஸேந சைவஹி ||** 25

*காலையும் மாலையும் அக்நிஹோத்ர ஹோமம் செய்ய வேண்டும். பௌர்ணமி அமாவாசைகளிலும் யக்ஞம் செய்ய வேண்டும்.*

सस्याऽन्ते नवसस्येष्ट्या तथर्त्वन्ते द्विजोऽध्वरैः।
पशुना त्वयनस्याऽऽदौ समाऽन्ते सौमिकैर् मखैः॥

**ஸஸ்யாந்தே நவஸஸ்யேஷ்ட்யா ததர்த்வந்தே த்விஜோ அத்வரை: |**
**பஷுநா த்வயநஸ்யாதௌ ஸமாந்தே ஸௌமிகைர்மகை: ||** 26

*பழைய தானியங்கள் தீர்ந்து போகும் தருணத்தில், புதிய தானியங்களை அறுவடை செய்வதற்கு முன்பு ஹோமம் செய்ய வேண்டும். ருதுக்கள் முடியும் தருணத்தில் சாதுர்மாஸத்தில் ஹோமம் செய்ய வேண்டும்.*

*தக்ஷிணாயன ஆரம்பத்திலும், உத்தராயன ஆரம்பத்திலும் ஹோமம் செய்ய வேண்டும். வருட ஆரம்பத்திலும் முடிவிலும் ஹோமம் செய்ய வேண்டும்.*

नाऽनिष्ट्वा नवसस्येष्ट्या पशुना चाऽग्निमान् द्विजः।
नवाऽन्नमद्यान् मांसं वा दीर्घमायुर् जिजीविषुः॥

**நாநிஷ்ட்வா நவஸ ஸ்யேஷ்ட்யா பஷுநா சாக்நிமாந் த்விஜ: |**
**நவாந்நமத்யாந்மாம்ஸம் வா தீர்கமாயுர்ஜிஜீவிஷு: ||** 27

*நீண்ட ஆயுளை விரும்புவன், புது தானியம் வந்ததும், ஹோமம் செய்யாமல் அதை உண்ணலாகாது.*

*தட்சிணாயன ஆரம்பத்திலும் உத்தராயன ஆரம்பத்திலும் ஹோமம் செய்யாமல் மாமிசம் சாப்பிடக் கூடாது.*

नवेनाऽनर्चिता ह्यस्य पशुहव्येन चाऽग्नयः।
प्राणानेवाऽत्तुमिच्छन्ति नवाऽन्नाऽऽमिषगर्धिनः॥

**நவேநாநர்சிதா ஹ்யஸ்ய பஷுஹவ்யே ந சாக்நய: |**
**ப்ராணா நேவாத்து மிச்சந்தி நவாந்நாமி ஷகர்திந: || 28**

*இவ்வாறு செய்யாவிட்டால் அவன் இல்லத்திலுள்ள மூன்று அக்னிகளும் புதிய அன்னத்தின் மீதும், மாமிசத்தின் மீதும் கொண்ட ஆவல் தீராமையால், அந்த கிருஹஸ்தன் உயிரை உண்ண விரும்பும்.*

आसनाऽशनशय्याभिरद्भिर् मूलफलेन वा।
नाऽस्य कश्चिद् वसेद् गेहे शक्तितोऽनर्चितोऽतिथिः॥

**ஆஸநாஷநஷய்யாபிரத்பிர் மூல பலேந வா |**
**நாஸ்ய கஷ்சித்வஸேத் கேஹே ஷக்திதோ நர்சிதோ அதிதி: || 29**

*கிருஹஸ்தன் தன் இல்லத்துக்கு வந்த அதிதிக்கு ஆசனம், போஜனம், கிழங்குகள், பழங்கள் முதலானவற்றால் உபசரித்து படுக்க வசதியும் தன் சக்திக்குத் தக்கபடி செய்து தர வேண்டும்.*

*அவ்வாறில்லாத கிருஹஸ்தனுடைய வீட்டில் அதிதி இருக்கக் கூடாது.*

पाषण्डिनो विकर्मस्थान् वैडालव्रतिकाञ् छठान्।
हैतुकान् बकवृत्तींश् च वाङ्मात्रेणाऽपि नाऽर्चयेत्॥

**பாஷாண்டிநோ விகர்மஸ்தாந் பைடாலவ்ரதிகாந் ஷடான் |**
**ஹைதுகாந் பகவ்ருத்தீம்ஷ்ச வாக்மாத்ரேணாபி நார்சயேத் || 30**

*வேத வழிக்குப் புறம்பான பாஷாண்டர்கள், சாஸ்திரம் அனுமதிக்காத காரியங்களைச் செய்பவர்கள், பூனையைப் போன்ற குணம் கொண்டவர்கள், கொக்கைப் போன்ற குணம் கொண்டவர்கள், வேதத்துக்கு எதிராக தர்க்கம் செய்பவர்கள் முதலானோர் அதிதிகளாக வந்தால் அவர்களுக்கு எந்த வகையான உபசாரமும் செய்யக்கூடாது.*

*இந்த உபசாரங்கள் மட்டுமல்ல, வாய் வார்த்தையால்கூட உபசரிக்கக் கூடாது.*

वेदविद्याव्रतस्नाताञ् श्रोत्रियान् गृहमेधिनः।
पूजयेद् धव्यकव्येन विपरीतांश् च वर्जयेत्॥

**வேதவித்யா வ்ரதஸ்நாதாந் ஷ்ரோத்ரியாந் க்ருஹமேதிந: |**
**பூஜயேத் ஹவ்யக்வயேந விபரீதாம்ஷ்ச வர்ஜயேத் || 31**

வேதங்களை முழுமையாகப் படித்து, விரதங்களை முழுமையாக செய்யாமல் சமாவர்த்தனம் செய்பவன் வித்யாஸ்நாதகன் எனப்படுவான்.

விரதங்களை முழுமையாகச் செய்து வேதங்களை முழுமை யாகப் படிக்காதவன் விரதஸ்நாதகன் எனப்படுவான்.

வேதங்களையும் முழுமையாகப் படித்து, விரதங்களையும் முழுமையாக முடித்து, அதன்பின் குருகுல வாசத்தை முடித்துவிட்டு வந்தவன் வித்யாவிரதஸ்நாதகன் எனப்படுவான்.

இம்மூவகையாரையும் தேவ காரியங்களிலும் பித்ரு காரியங் களிலும் நியமித்து பூஜிக்க வேண்டும். மற்றவர்களை பூஜிக்கக் கூடாது.

शक्तितोऽपचमानेभ्यो दातव्यं गृहमेधिना ।
संविभागश् च भूतेभ्यः कर्तव्योऽनुपरोधतः ॥

**ஷக்திதோ அபசமாநேப்யோ தாதவ்யம் க்ருஹமேதிநா |**
**ஸம்விபாகஷ்ச பூதேப்ய: கர்தவ்யோ அநுபரோதத: || 32**

தன் குடும்ப போஷணத்துக்கு குறைவு ஏற்படாவண்ணம், பிரம்மசாரிக்கும், சந்யாசிக்கும் பிட்சையளிக்க வேண்டும். (மரம் இருந்தால் நீர்வார்த்தல், பூனை போன்றவை இருந்தால் சாப்பிடக் கொடுத்தல் இப்படியாக) சகல பூதங்களுக்கும் திருப்தி ஏற்படுத்தும் வண்ணம் அவற்றுக்குத் தேவையானதை வழங்க வேண்டும்.

राजतो धनमन्विच्छेत् संसीदन् स्नातकः क्षुधा ।
याज्यान्तेवासिनोर् वाऽपि न त्वन्यत इति स्थितिः ॥

**ராஜதோ தநமந்விச்சேத்ஸம்ஸீதந் ஸநாதக: க்ஷுதா |**
**யாஜ் யாந்தேவாஸி நோர்வாபி ந த்வந்யத இதி ஸ்திதி: || 33**

ஸ்நாதகனான கிருஹஸ்தன் கொடிய வறுமை வந்துற்ற போது, அரசன், தன்னைக்கொண்டு யாகங்கள் செய்வித்துக் கொண்டவன், தன் சிஷ்யன் முதலானோரிடமிருந்து வேண்டியதை பெற்றுக் கொள்ளலாம். இவர்கள் இருக்கும் போது மற்றவர்களிடம் பெறக் கூடாது. இவர்கள் யாரும் இல்லை என்றால் மற்ற திவிஜர்களிடம் பெறலாம். அவர்களும் இல்லாதபோது எவரிடமிருந்தும் பெறலாம்.

न सीदेत् स्नातको विप्रः क्षुधा शक्तः कथञ्चन ।
न जीर्णमलवद्वासा भवेच् च विभवे सति ॥

**நஸீதேத்ஸ்நாதகோ விப்ர: க்ஷுதா ஷக்த: கதஞ்சந |**
**நஜீர்ணமலவத் வாஸாபவேச்ச விபவே ஸதி || 34**

வித்யை, விரதம் முதலானவைகளை பூர்த்தி செய்தவன், தானம் பெறத் தகுதியுள்ளவன், மேற் கூறிய மூவரும் இருக்கும் போது பசியினால் துவண்டு இளைத்துப் போகக் கூடாது. அவர்களிடம் பெற்று நல்லபடி இருக்க வேண்டும். செல்வம் கிடைக்கும்போது கிழிந்த ஆடைகளை உடுத்தக் கூடாது.

क्लृप्तकेशनखश्मश्रुर् दान्तः शुक्लाम्बरः शुचिः ।
स्वाध्याये चैव युक्तः स्यान् नित्यमात्महितेषु च ॥

**க்லுப்தகேஷ நகஷ்மஷ்ருர்தாந்தஷ்ஷுக்லாம்பரஷ்ஷுசி: |**
**ஸ்வாத்யாயே சைவ யுக்தஸ்யாந்நித்யமாத்ம ஹிதேஷி ச ||** **35**

கிருஹஸ்தன், அந்தந்த காலத்தில் கேசங்களையும், நகங்களையும், மீசை தாடிகளையும் க்ஷவரம் செய்து கொண்டு, விரதங்களால் ஏற்படும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொண்டு, வெண்ணிற ஆடைகளை உடுத்தி பரிசுத்தனாக வேதமோதுதலை செய்தபடி, ஔஷதங்களால் உடலைப் பேணியபடி வாழ வேண்டும்.

वैणवीं धारयेद् यष्टिं सोदकं च कमण्डलुम् ।
यज्ञोपवीतं वेदं च शुभे रौक्मे च कुण्डले ॥

**வைணவீம் தாரயேத் யஷ்டிம் ஸோதகம் ச கமண்டலும் |**
**யக்ஞோபவீதம் வேதம் ச ஷுபே ரௌக்மே ச குண்டலே ||** **36**

மூங்கில் கோல், நீர் நிறைந்த கமண்டலம், பூணூல், தங்க மோதிரம், பொற்குண்டலங்கள் இவைகள் கிருஹஸ்தன் அணியத் தக்கவை.

नेक्षेतोद्यन्तमादित्यं नास्तं यन्तं कदाचन ।
नोपसृष्टं न वारिस्थं न मध्यं नभसो गतम् ॥

**நேக்ஷேதோத்யத்தை மாதித்யம் நாஸ்தம் யந்தம் கதாசந |**
**நோபஸ்ருஷ்டம் ந வாரிஸ்தம் ந மத்யம் நபஸோ கதம் ||** **37**

சூரியனை உதயகாலத்திலும் அஸ்தமன காலத்திலும் பார்க்கக் கூடாது. அவ்வாறே கிரஹண காலத்திலும், உச்ச வேளையிலும் பார்க்கக்கூடாது. நீரில் சூரியனுடைய பிரதிபிம்பத்தையும் பார்க்கக் கூடாது.

न लङ्घयेद् वत्सतन्त्रीं न प्रधावेच्च वर्षति ।
न चोदके निरीक्षेत स्वं रूपमिति धारणा ॥

**நலங்கயேத் வத்ஸதந்த்ரீம் நப்ரதாவேச்ச வர்ஷதி |**
**ந சோதகே நிரீக்ஷேத ந்வம் ரூபமிதி தாரணா ||** **38**

கன்றைக் கட்டியிருக்கும் கயிற்றைத் தாண்டக் கூடாது. மழை பொழியும் போது ஓடக்கூடாது. தண்ணீரில் தெரியும் தன் பிரதிபிம்பத்தைப் பார்க்கக் கூடாது.

**मृदं गां दैवतं विप्रं घृतं मधु चतुष्पथम्।**
**प्रदक्षिणानि कुर्वीत प्रज्ञाताश् च वनस्पतीन्॥**

**ம்ருதம் காம் தைவதம் விப்ரம் க்ருதம் மது சதுஷ்பதம் |**
**ப்ரதக்ஷிணாநி குர்வீத ப்ரக்ஞாதாம்ஷ்ச வனஸ்பதீந் || 39**

பிரயாணம் செய்யும் போது எதிர்ப்படும் குன்று, பசு, தெய்வ விக்ரகங்கள், பிரம்மணர்கள், நெய்க்குடம், தேன்குடம், நான்கு பாதைகள் கூடும் இடத்தில் உள்ள அரசு முதலான மரங்கள் முதலானவைகளை பிரதட்சிணமாக சுற்றிக் கொண்டு செல்ல வேண்டும்.

**नोपगच्छेत् प्रमत्तोऽपि स्त्रियमार्तवदर्शने।**
**समानशयने चैव न शयीत तया सह॥**

**நோபகச்சேத் ப்ரமத்தோ அபி ஸ்த்ரியமார்தவதர்நே |**
**ஸமாநஷயநே சைவ ந ஷயீத தயாஸஹ || 40**

காமுகனாக இருந்தாலும் பெண் ரஜஸ்வலையான நாட்களில் கூடக்கூடாது. கூடாவிட்டாலும், ஒரே படுக்கையில் படுக்கவும் கூடாது. (வீட்டுக்கு விலக்காகப் பெண் இருப்பதற்கு ரஜஸ்வலை என்று பெயர்).

**रजसाऽभिप्लुतां नारीं नरस्य ह्युपगच्छतः।**
**प्रज्ञा तेजो बलं चक्षुरायुश् चैव प्रहीयते॥**

**ரஜஸா அபிப்ளுதாம் நாரீம் நரஸ்ய ஹ்யுபக கச்சத: |**
**ப்ரக்ஞா தேஜோ பலம் சக்ஷு ராயுஷ்சைவ ப்ரஹீயதே || 41**

ரஜசுடன் இருக்கும் பெண்ணைக் கூடியவனுடைய புத்தி, வீரியம், பலம், கண்பார்வை, ஆயுள் இவை நசிக்கும்.

**तां विवर्जयतस् तस्य रजसा समभिप्लुताम्।**
**प्रज्ञा तेजो बलं चक्षुरायुश् चैव प्रवर्धते॥**

**தாம் விவர்ஜயதஸ்தஸ்ய ரஜஸாஸமபிப்ளுதாம் |**
**ப்ரக்ஞா தேஜோ பலம் சக்ஷுராயுஷ்சைவ ப்ரவர்ததே || 42**

அவ்வாறு செய்யாதவனுக்கு புத்தி, வீர்யம், பலம், கண்பார்வை, ஆயுள் முதலானவை விருத்தியடையும்.

नाऽश्नीयाद् भार्यया सार्धं नैनामीक्षेत चाऽश्नतीम्।
क्षुवती जृम्भमाणां वा न चाऽऽसीनां यथासुखम्॥

**நாஷ்நீயாத் பார்யயா ஸார்தம் நைநாமீ க்ஷேத சாஷ்நதீம் |**
**க்ஷுவதீம் ஜ்ரும்பமாணாம் வா ந சாஸீநாம் யதா சுகம் || 43**

*மனைவியுடன் சேர்ந்து உண்ணலாகாது. மனைவி இருமும் போதும், தும்மும் போதும், கொட்டாவி விடும் போதும், சாவகாசமாய் தன்னிஷ்டத்துக்கு உட்கார்ந்திருக்கும் போதும் கணவன் பார்க்கக்கூடாது.*

नाऽञ्जयन्तीं स्वके नेत्रे न चाऽभ्यक्तामनावृताम्।
न पश्येत् प्रसवन्तीं च तेजस्कामो द्विजोत्तमः॥

**நாஞ்ஜயந்தீம் ஸ்வகேநேத்ரே ந சாப்யக்தா மநா வ்ருதாம் |**
**ந பஷ்யேத் ப்ரஸவந்தீம் ச தேஜ ஸ்காமோ த்விஜோத்தம: || 44**

*கண்ணுக்கு மையிட்டுக் கொள்ளும் போதும், தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் போதும், மேலாடை இல்லாத போதும், பிரசவ காலத்திலும் மனைவியைக் கணவன் பார்க்கக் கூடாது.*

नाऽन्नमद्यादेकवासा न नग्नः स्नानमाचरेत्।
न मूत्रं पथि कुर्वीत न भस्मनि न गोव्रजे॥

**நாந்ந மத்யாதேகவாஸா நநக்நஸ்ஸநாநமாசரேத் |**
**நமூத்ரம் பதி குர்வீத நபஸ்மநி ந கோவ்ரஜே || 45**

*கிருஹஸ்தன் ஒற்றை ஆடையோடு உணவருந்தக்கூடாது. ஆடையின்றி நீராடக் கூடாது. வழியில், சாம்பலில், பசுக் கொட்டிலில் மலஜலம் கழிக்கக் கூடாது.*

न फालकृष्टे न जले न चित्यां न च पर्वते।
न जीर्णदेवाऽऽयतने न वल्मीके कदाचन॥

**நபாலக்ருஷ்டே நஜலே நசித்யாம் நச பர்வதே |**
**ந ஜீர்ண தேவாயதநே ந வல்மீகே கதாசந || 46**

*உழுதநிலம், தண்ணீர்நிலை, யாக சாலை, மலை, பாழ்பட்ட கோயில், புற்று இவைகளிலும் மலஜலம் கழிக்கக் கூடாது.*

न ससत्वेषु गर्तेषु न गच्छन्नाऽपि च स्थितः।
न नदीतीरमासाद्य न च पर्वतमस्तके॥

**நஸஸத்வேஷு கர்தேஷு ந கச்சந்நாபி ச ஸ்தித: |**
**ந நதீதீரமாஸாத்ய நச பர்வதமஸ்தகே || 47**

ஐந்துக்கள் வசிக்கும் பொந்துகள் போன்றவற்றிலும், நடந்து கொண்டும், நின்று கொண்டும், ஆற்றங்கரையிலும், மலையுச்சியிலும் மலஜலம் கழிக்கக் கூடாது.

वाय्वग्निविप्रमादित्यमपः पश्यंस् तथैव गाः।
न कदाचन कुर्वीत विण्मूत्रस्य विसर्जनम्॥

**வாய்வக்நி விப்ராமாதித்யமப: பஷ்யம்ஷ்ததைவ கா: |**
**ந கதாசந குர்வீத விண்மூத்ரஸ்ய விஸர்ஜநம் ||** **48**

வாயுவையும், அக்நியையும், பிராம்மணனையும், சூரியனையும், நீரையும், பசுவையும் பார்த்தபடி எதிரில் அமர்ந்து மலஜலம் கழிக்கக் கூடாது. (வாயு என்றால் எதிர்க்காற்று வீசும் வண்ணம் அமர்வது என்று பொருள்.)

तिरस्कृत्योच्चरेत् काष्ठलोष्टपत्रतृणादिना।
नियम्य प्रयतो वाचं संवीताङ्गोऽवगुण्ठितः॥

**திரஸ்க்ருத்யோச்ச ரேத் காஷ்டலோஷ் பத்ரத் ருணாதிநா |**
**நியம்ய ப்ரயதோ வாசம் ஸம் வீதாங்கோ அவகுண்டித: ||** **49**

நிலத்தில் கழிகள், மண் கட்டிகள், வைக்கோல், இலைகள் போன்றவற்றைப் போட்டு மூடி, மௌனத்தோடு, உடலைப் போர்த்திக் கொண்டு, தலையைத் துணியால் மூடிக்கொண்டு, தலை குனிந்தபடி மலஜலம் கழிக்க வேண்டும்.

मूत्रोच्चारसमुत्सर्गं दिवा कुर्यादुदङ्मुखः।
दक्षिणाऽभिमुखो रात्रौ सन्ध्ययोश् च यथा दिवा॥

**மூத்ரோச்சாரஸமுத்ஸர்கம் திவா குர்யாதுதங்முக: |**
**தக்ஷிணாபிமுகோ ராத்ரௌ ஸந்த்யயோஷ்ச யதா திவா ||** **50**

காலை, மாலை பகல் பொழுதுகளில் வடக்கு முகமாகவும், இரவில் தெற்கு முகமாகவும் அமர்ந்து மலஜலம் கழிக்க வேண்டும்.

छायायामन्धकारे वा रात्रावहनि वा द्विजः।
यथासुखमुखः कुर्यात् प्राणबाधाभयेषु च॥

**சாயாயாமந்தகாரே வா ராத்ராவஹநி வா த்விஜ: |**
**யதா சுகமுக: குர்யாத்ப்ராணாபாதபயேஷு ச ||** **51**

இரவிலும் பகலிலும் அந்தகாரமும் பனிமூட்டமும் இருக்கும் போது திக்கு திசை தெரியாவிட்டால், அப்போது எந்த திசையிலும் அமர்ந்து கழிக்கலாம். துஷ்ட மிருகங்களாலும், திருடர்களாலும் பயந்து போயிருக்கும்போதும் திசையைப் பற்றி கவலைப்பட வேண்டாம்.

प्रत्यग्निं प्रतिसूर्यं च प्रतिसोमोदकद्विजान्।
प्रतिगां प्रतिवातं च प्रज्ञा नश्यति मेहतः॥

ப்ரத்யக்நிம் ப்ரதிசூர்யம் ச ப்ரதிஸோ மோ தக த்விஜாந் |
ப்ரதிகாம் ப்ரதி வாதம் ச ப்ரக்ஞா நஷ்யதி மேஹத: || 52

அக்னிக்கு எதிரிலும், சூரியனுக்கு எதிர்முகமாகவும், சந்திரனுக்கு எதிர்முகமாகவும் தண்ணீரைப் பார்த்தபடி எதிர்முகமாகவும், பிராம்மணர்களுக்கு எதிர்முகமாகவும், பசுவுக்கு எதிரிலும், காற்றின் திசைக்கு எதிரிலும் மலஜலங்களை விடுபவனுக்கு ஞானம் நசிக்கும்.

नाऽग्निं मुखेनोपधमेन् नग्नां नेक्षेत च स्त्रियम्।
नाऽमेध्यं प्रक्षिपेदग्नौ न च पादौ प्रतापयेत्॥

நாக்நிம் முகே நோ பத மேந்நக்நாம் நிக்ஷேத ச ஸ்த்ரியம் |
நாமேத்யம் ப்ரக்ஷிபேதக் நௌ ந ச பாதௌ ப்ரதாபயேத் || 53

நெருப்பை வாயால் ஊதக் கூடாது. நிர்வாணமாக உள்ள பெண்ணைப் பார்க்கக் கூடாது. அசுத்தமானவைகளை நெருப்பில் போடக் கூடாது. நெருப்பில் காலைக் காட்டி குளிர் காயக் கூடாது.

अधस्तान् नोपदध्याच् च न चैनमभिलङ्घयेत्।
न चैनं पादतः कुर्यान् न प्राणाऽऽबाधमाचरेत्॥

அதஸதாந் நோபதத்யாச் ச நசைநமபிலங்கயேத் |
நசைநம் பாதத: குர்யாந் ந ப்ராணாபாதமாசரேத் || 54

கட்டிலுக்கருகில் நெருப்பை வைத்துக் கொண்டு படுக்கக் கூடாது. நெருப்பை தாண்டக் கூடாது. கால்மாட்டில் நெருப்பை வைக்கக் கூடாது. மற்றவர்கள் உயிருக்கு ஆபத்து நேரும் வண்ணம் செய்யக்கூடாது.

नाऽश्नीयात् सन्धिवेलायां न गच्छेन् नाऽपि संविशेत्।
न चैव प्रलिखेद् भूमिं नाऽऽत्मनोऽपहरेत् स्रजम्॥

நாஷ்நீயாத்ஸந்தி வேலாயாம் ன கச்சேந்நாபி ஸம் விசேத் |
நசைவே ப்ரலிகேத் பூமிம் நாத்மநோ பஹரேத் ஸ்ருஜம் || 55

சந்தியா காலத்தில் சாப்பிடக்கூடாது. வழிப்பயணம் போகக் கூடாது. படுத்துக் கொள்ளக் கூடாது. நிலத்தைக் கீறக் கூடாது. தான் தலையில் சூடிக் கொண்ட பூச்சரத்ததை தானே எடுக்கக் கூடாது.

नाऽप्सु मूत्रं पुरीषं वा ष्ठीवनं वा समुत्सृजेत्।
अमेध्यलिप्तमन्यद् वा लोहितं वा विषाणि वा॥

நாப்சு மூத்ரம் புரீஷம் வா ஷ்டீவநம் வா ஸமுத்ஸ்ருஜேத் |
அமேத் லிப்தமந்யத்வா லோஹிதம் வா விஷாணி வா || 56

தண்ணீரில் சிறுநீர், மலம் , கோழை, அசுத்தமான பொருள், ரத்தம், விஷம் இவைகளைக் கலக்கக் கூடாது.

नैकः स्वप्याच् छून्यगेहे श्रेयांसं न प्रबोधयेत्।
नोदक्ययाऽभिभाषेत यज्ञं गच्छेन् न चाऽवृतः ॥

**நைகஸ்ஸ்வயா சூந்யகேஹே ஷ்ரேயாம்ஸம் ந ப்ரபோத யேத் |**
**நோதக்யயா அபிபாஷேத யக்ஷம் கச்சேந் ந சாவ்ருத: || 57**

பாழடைந்த வீட்டில் தனியாகப் படுத்துறங்கக் கூடாது. தன்னைவிட, கல்வியாலும் தனத்தாலும் மேம்பட்டவனை அவன் உறங்கும் போது எழுப்பக்கூடாது. மாத விலக்கான பெண்ணுடன் பேசக் கூடாது. வேதவித், தன்னை அழைக்காத போது யாக கர்மாவில் கலந்து கொள்ளப் போகக் கூடாது.

अग्न्यगारे गवां गोष्ठे ब्राह्मणानां च सन्निधौ।
स्वाध्याये भोजने चैव दक्षिणं पाणिमुद्धरेत्॥

**அக்ந்யகாரே கவாம் கோஷ்டே ப்ராஹ்மணாநாம் ச ஸந்நிதௌ |**
**ஸ்வாத்யாயே போஜநே சைவ தக்ஷிணம் பாணிமுத்த ரேத் || 58**

யாக சாலையிலிருக்கும் போதும், பசுக்கொட்டிலில் இருக்கும் போதும், பிராம்மணர்கள் முன் இருக்கும் போதும், வேதாத்யயனம் செய்யும்போதும், போஜனம் செய்யும் போதும் உத்தரீயத்துக்கு வெளியே வலதுகை இருக்க வேண்டும்.

न वारयेद् गां धयन्तीं न चाऽऽचक्षीत कस्य चित्।
न दिवीन्द्रायुधं दृष्ट्वा कस्यचिद् दर्शयेद् बुधः॥

**ந வாரயேத் காம் தயந்தீம் ந சா சக்ஷீத கஸ்யசித் |**
**ந திவீந்த்ராயுதம் த்ருஷ்ட்வா கஸ்யசித் தர்ஷயேத் புத: || 59**

நீரருந்தும் பசுவையும், பாலருந்தும் கன்றையும், அவை குடிக்க விடாமல் செய்யக் கூடாது. கன்று பாலருந்துவதை பிறருக்குக் காட்டக் கூடாது. வானவில்லைப் பார்த்தால், பிறரைக் கூப்பிட்டு அதைக் காட்டக்கூடாது.

नाऽधार्मिके वसेद् ग्रामे न व्याधिबहुले भृशम्।
नैकः प्रपद्येताऽध्वानं न चिरं पर्वते वसेत्॥

**நாதார் மிகே வஸேத் க்ராமே நவ்யாதிபஹுளே ப்ருஷம் |**
**நைக: ப்ரபத்யேதாத்வாநம் ந சிரம் பர்வதே வஸேத் || 60**

தர்மம் அற்றவர்கள் வசிக்கும் கிராமத்தில் வசிக்கக் கூடாது. வியாதிகள் அதிகமாக உள்ள இடத்திலும் வசிக்கக் கூடாது. தனியாக வழி நடைப் பயணம் கூடாது. மலை மீது வெகுகாலம் வசிக்கக் கூடாது.

न शूद्रराज्ये निवसेन् नाऽधार्मिकजनाऽऽवृते।
न पाषण्डिगणाऽऽक्रान्ते नोपसृष्टेऽन्त्यजैर् नृभिः ॥

**ந சூத்ரராஜ்யே நிவஸேந் நாதார்மிக ஜநாவ்ருதே |**
**ந பாஷண்டிகணாக்ராந்தே நோபஸ்ருஷ்டே அந்த்யஜைர் ந்ருபி: || 61**

சூத்திரன் மன்னனாக இருக்கும் நாட்டில் வசிக்கக்கூடாது. தர்மநெறிப்படி வாழாதவர்கள் அதிகமாக இருக்கும் கிராமத்தில் வசிக்கக் கூடாது. வேதத்துக்கு விரோதமான நெறிகளையுடைய பாஷாண்டிகள் அதிகமாக உள்ள கிராமத்தில் வசிக்கக் கூடாது. சண்டாளர்கள் வசிக்கும் கிராமத்திலும் வசிக்கக் கூடாது.

न भुञ्जीतोद्धृतस्नेहं नाऽतिसौहित्यमाचरेत्।
नाऽतिप्रगे नाऽतिसायं न सायं प्रातराशितः ॥

**ந புஞ்ஜீதோத் த்ருதஸ்நேஹம் நாத் ஸௌஹித்யமாசரேத் |**
**நாதிப்ரகே நாதிஸாயம் ந ஸாயம் ப்ராதராஷித: || 62**

எண்ணெய் எடுத்த பிண்ணாக்கு போன்ற சாரமற்றதை சாப்பிடக் கூடாது. அளவுக்கதிகமாக சாப்பிடக் கூடாது. சூரியன் உதிக்கும் நேரத்திலும் அஸ்தமிக்கும் நேரத்திலும் சாப்பிடக்கூடாது. பகலில் விசேஷமான உணவை சாப்பிட்டால் இரவில் சாப்பிட வேண்டாம்.

न कुर्वीत वृथाचेष्टां न वार्यञ्जलिना पिबेत्।
नोत्सङ्गे भक्षयेद् भक्ष्यान् न जातु स्यात् कुतूहली ॥

**ந குர்வீத வ்ருதா சேஷ்டாம் ந வார்யஞ்ஜலிநா பிபேத் |**
**நோத்ஸங்கே பக்ஷயேத் பக்ஷ்யாந் ந ஜாதுஸ்யாத் குதூஹலீ || 63**

இம்மைக்கோ மறுமைக்கோ உதவாத செயலை செய்யக் கூடாது. உள்ளங்கையில் நீரை ஏந்திக் குடிக்கக் கூடாது. பட்சணங்களை மடியில் வைத்துக் கொண்டு சாப்பிடக் கூடாது. தேவையற்றதற்கெல்லாம் குதூகலமடையக் கூடாது.

न नृत्येदथवा गायेन् न वादित्राणि वादयेत्।
नाऽऽस्फोटयेन् न च क्ष्वेडेन् न च रक्तो विरावयेत् ॥

**ந ந்ருத்யேததவா காயேந்ந வாதித்ராணி வாதயேத் |**
**நாஸ்போட யேந் ந ச க்ஷ்வே டேந் ந ச ரக்தோ விராவயேத் || 64**

சாஸ்திர விரோதமாக நாட்டியமாடக் கூடாது. பாட்டுப் பாடக்கூடாது. வாத்தியங்களை இசைக்கக் கூடாது. தோள்களைத் தட்டுவது, பற்கள் வெளியே தெரியாமல் மூடிக்கொண்டு இருமுவது, வேண்டுமென்றே கழுதை முதலான பிராணிகளைப் போல கத்துவது இவையெல்லாம் கூடாது.

न पादौ धावयेत् कांस्ये कदाचिदपि भाजने।
न भिन्नभाण्डे भुञ्जीत न भावप्रतिदूषिते॥

**ந பாதௌ தாவயேத் காம்ஸ்யே கதாசிதபி பாஜநே ।**
**ந பின்ன பாண்டே பூஞ்ஜீத ந பாவப்ரதி தூஷிதே ॥** 65

வெண்கலப்பாத்திரத்தில தண்ணீர் எடுத்து அலம்பக்கூடாது. உடைந்த மண் தட்டிலும், மனத்துக்குப் பிடிக்காத எந்தப் பாத்திரத்திலும் உணவுண்ணக் கூடாது.

उपानहौ च वासश् च धृतमन्यैर् न धारयेत्।
उपवीतमलङ्कारं स्रजं करकमेव च॥

**உபாநஹோ ச வாஸஷ்ச திருத மன்யைர் ந தாரயேத் ।**
**உபவீதமலங்காரம் ஸ்ரஜம் கரக மேவ ச ॥** 66

பிறர் உபயோகித்த செருப்புகளையும், ஆடைகளையும், பூணூலையும், ஆபரணங்களையும், பூமாலைகளையும், கமண்டலத்தையும் தான் உபயோகிக்கக் கூடாது.

नाऽविनीतैर् व्रजेद् धुर्यैर् न च क्षुद्व्याधिपीडितैः।
न भिन्नशृङ्गाऽक्षिखुरैर् न वालधिविरूपितैः॥

**நாவிநீதைர்வ்ரு ஜேத்துர்த்யர் ந ச க்ஷூத்வ்யாதி பீடிகை: ।**
**ந பிந்ந ஷ்ருங்கா க்ஷி ருரைர்ந வாலதிவி ரூபிதை: ॥** 67

பழக்கப்படாதவை, பசியினால் பீடிக்கப்பட்டவை, கொம்பொடிந்தவை, குருடானவை, வாலறுந்தவை, குளம்பு தேய்ந்தவையுமான எருதுகள் பூட்டிய வண்டிகளில் பிரயாணம் செய்யக்கூடாது.

विनीतैस् तु व्रजेन् नित्यमाशुगैर् लक्षणाऽन्वितैः।
वर्णरूपोपसम्पन्नैः प्रतोदेनाऽतुदन् भृशम्॥

**விநீதைஸ்து வ்ரஜேந்நித்ய மாஷீகைர்லக்ஷணாந்விதை: ।**
**வர்ணரூபேபஸம்பந்நை: ப்ரதோதேநாதுதந் ப்ருஷம் ॥** 68

பழக்கப்பட்டவை, விரைந்து செல்பவை, நல்ல லட்சணங்கள் பொருந்தியவை, கண்கவர் அழகுடன் திகழ்பவையுமான எருதுகள் பூட்டிய வண்டியில், அவற்றை சாட்டையால் அதிகம் அடிக்காமல் பிரயாணம் செய்ய வேண்டும்.

बालाऽऽतपः प्रेतधूमो वर्ज्यं भिन्नं तथाऽऽसनम्।
न छिन्द्यान् नखलोमानि दन्तैर् नोत्पाटयेन् नखान्॥

**பாலாஆப: ப்ரேததூமோ வர்ஜ்யம் பிந்நம் ததாஆஸநம் ।**
**நச்சிந்த்யாந்நகலோமாநி தந்தைர் நோத் பாடயேந்நகாந் ॥** 69

இளம் வெயில், எரியும் பிணப்புகை, உடைந்த இருக்கை இவைகளை நீக்க வேண்டும். நகம், முடி இவைகளை ஒடிக்கக் கூடாது. நகங்களை பற்களால் கடிக்கக் கூடாது.

न मृल्लोष्टं च मृद्नीयान् न च्छिन्द्यात् करजैस् तृणम्।
न कर्म निष्फलं कुर्यान् नायत्यामसुखोदयम्॥

**நம்ருல்லோஷ்டம் ச ம்ருத்நீயாந்நச்சிந்த்யாத்கரஜைஸ்த்ருணம் |**
**ந கர்மநிஷ்பலம் குர்யாந்நாயத்யாம சுகோதயம் ||** 70

காரணமின்றி மண்கட்டிகளை உடைக்கக் கூடாது. நகத்தால் புல்லைக் கிள்ளக் கூடாது. பலனில்லாத செயலை செய்யக்கூடாது. பின்னால் வருத்தம் ஏற்படக் கூடிய செயலைச் செய்யக்கூடாது.

लोष्टमर्दी तृणच्छेदी नखखादी च यो नरः।
स विनाशं व्रजत्याशु सूचकोऽशुचिरेव च॥

**லோஷ்டமர்த்தீ த்ருணச்சேதீ நககாதீ ச யோநா: |**
**ஸ விநாஷம் ப்ரஜத்யாஷு சூசகோ அஷீசிரேவ ச ||** 71

காரணமின்றி மண்கட்டிகளை உடைப்பவன், புற்களை நகத்தால் கிள்ளியெறிபவன், நகங்களைக் கடிப்பவன், கோள் சொல்பவன், அசுத்தமாக இருப்பவன் முதலானோர் நாசத்தை யடையவர்.

न विगर्ह्य कथां कुर्याद् बहिर् माल्यं न धारयेत्।
गवां च यानं पृष्ठेन सर्वथैव विगर्हितम्॥

**ந விகரஹ்யகதாம் குர்யாத பஹிர்மால்யம் ந தாரயேத் |**
**கவாம் ச யாநம் ப்ருஷ்டேந ஸர்வதைவ விகர்ஹிதம் ||** 72

எந்த விஷயமாயினும் தான் சொல்வதையே வலியுறுத்திக் கொண்டிருக்கலாகாது. தலைமுடிக்கு வெளியே தெரியுமாறு பூச்சரங்களை சூடிக் கொள்ளலாகாது. எருதின் மீதேறி சவாரி செய்யக் கூடாது. எருதை வண்டியில் பூட்டி அதில் செல்லலாம்.

अद्वारेण च नातीयाद् ग्रामं वा वेश्म वाऽऽवृतम्।
रात्रौ च वृक्षमूलानि दूरतः परिवर्जयेत्॥

**அத்வாரேண ச நாதீயாத் க்ராமம் வா வேஷ்ம வாஆவ்ருதம் |**
**ராத்ரௌ ச வ்ருக்ஷமூலாநி தூரத : பரவர்ஜயேத் ||** 73

வீடாயினும், கிராமமாயினும் வாயில் மூடப்பட்டிருக்கும் போது, வேறு வழியில் ஏறிக் குதித்து, அல்லது பின் வாசல் வழியே நுழையக் கூடாது. இரவில் மரத்தடியில் தங்கக்கூடாது. மரங்களை விட்டு தூரமாக இருக்க வேண்டும்.

नाऽक्षैः क्रीडेत् कदाचित् तु स्वयं नोपानहौ हरेत्।
शयनस्थो न भुञ्जीत न पाणिस्थं न चाऽऽसने॥

**நாக்ஷைத: க்ரீடேத் கதாசித்து ஸ்வயம் நோபாநஹோ ஹரேத் |**
**ஷயநஸ்தோ ந பூஞ்ஜீத ந பாணிஸ்தம் ந சாஆஸநே || 74**

*விளையாட்டுக்குக்கூட சொக்கட்டான் போன்றவை கூடாது. தன் செருப்பை கையில் தூக்கிக் கொண்டு போகக் கூடாது. படுக்கையில் அமர்ந்து கொண்டு சாப்பிடக் கூடாது. கையில் சாத உருண்டையை வைத்துக் கொண்டு சிறிது சிறிதாக உண்ணக் கூடாது. உட்காரும் ஆசனத்தின் மீது சாப்பாட்டை வைத்துக் கொண்டு சாப்பிடக் கூடாது.*

सर्वं च तिलसम्बद्धं नाऽद्यादस्तमिते रवौ।
न च नग्नः शयीतेह न चोच्छिष्टः क्वचिद् व्रजेत्॥

**ஸர்வம்ச திலஸம்பந்தம் நாத்யாதஸ்தமிதே ரவௌ |**
**நச நக்னஷ்ஷயீதேஹ ந சோச்சிஷ்ட: க்வசித்வ்ரஜேத் || 75**

*சூரியன் அஸ்தமித்த பிறகு எள் சேர்த்த உணவுப் பொருளை சாப்பிடக் கூடாது. ஆடையின்றி உறங்கக்கூடாது. சாப்பிட்ட பிறகு கையலம்பாமல் வெளியே போகக் கூடாது.*

आर्द्रपादस् तु भुञ्जीत नाऽऽर्द्रपादस् तु संविशेत्।
आर्द्रपादस् तु भुञ्जानो दीर्घमायुरवाप्नुयात्॥

**ஆர்த்ரபாதஸ்து பூஞ்ஜீத நார்த்ரபாதஸ்து ஸம்விசேஷ் |**
**ஆர்த்ரபாதஸ்து பூஞ்ஜாநோ தீர்க்கமாயுரவாப்நுயாத் || 76**

*கால்களை அலம்பிக் கொண்டு சாப்பிட உட்கார வேண்டும். கால்களின் ஈரம் உலருமுன்பே சாப்பிட்டு எழுந்து விட வேண்டும். ஈரக்கால்களோடு உண்பவன் தீர்க்காயுளை அடைவான். ஆனால் ஈரக்கால்களோடு படுக்கக் கூடாது.*

अचक्षुर्विषयं दुर्गं न प्रपद्येत कर्हिचित्।
न विण्मूत्रमुदीक्षेत न बाहुभ्यां नदीं तरेत्॥

**அசக்ஷுர்விஷயம் துர்கம் ந ப்ரபத்யேத கர்ஹிசித் |**
**ந விண்மூத்ரமுதீக்ஷேத ந பாஹுப்யாம் நதீம் தரேத் || 77**

*அடர்ந்த மரங்களோடு இருண்டிருக்கும் ஆரண்யங்களில் நுழைய முடியாத புதர்களில் நுழையக்கூடாது. தன் மல ஜலங்களை கண்ணால் பார்க்கக் கூடாது. கைகளால் நீந்தி நதியைக் கடக்கக் கூடாது.*

अधितिष्ठेन् न केशांस् तु न भस्मास्थिकपालिकाः।
न कार्पासास्थि न तुषान् दीर्घमायुर् जिजीविषुः॥

**அதி திஷ்டேந்ந கேஷாஸ்து ந பஸ்மாஸ்திக பாலிகா: |**
**ந கார்பாஸாஸ்தி நதுஷாந் தீர்கமாயுர்ஜிஜீவிஷு ||** 78

*நீண்ட ஆயுளோடு வாழ நினைப்பவன், தலைமுடிகள், சாம்பல், எலும்புகள், உடைந்த ஓடுகள், பஞ்சு, மண்டை ஓடுகள், உமி முதலானவைகளின் மீது நிற்கக் கூடாது.*

न संवसेच्च पतितैर् न चाण्डालैर् न पुल्कसैः।
न मूर्खैर् नावलिप्तैश् च नान्त्यैर् नान्त्यावसायिभिः॥

**ந ஸம்வஸேச்ச பதிதைர் ந சாண்டாலைர்ந புல்கஸை: |**
**ந மூர்கைர் நாவலிப்தைஷ்ச நாந்த்யைர் நாந்த்யாவஸாயிபி: ||** 79

*பிரஷ்டர்களுடனும், சண்டாளர்களுடனும், வேட்டைக்காரர் களுக்கும் சூத்திரர்களுக்கும் பிறந்தவர்களான புல்கசர்களோடும், மூர்க்கர்களோடும், தான் பெற்றுள்ள செல்வம் முதலியவற்றால் கர்வத்தோடு இருப்பவர்களோடும், வேட்டைக்காரப் பெண்ணுக்கும் சண்டாளனுக்கும் பிறந்த நீச ஜாதிக்காரர்களோடும் ஒரு இடத்தில் கூடியிருக்கக் கூடாது.*

न शूद्राय मतिं दद्यान् नोच्छिष्टं न हविष्कृतम्।
न चास्योपदिशेद् धर्मं न चास्य व्रतमादिशेत्॥

**ந சூத்ராய மதிம் தத்யாந்நோச்சிஷ்டம் ந ஹவிஷ்க்ருதம் |**
**ந சாஸ்யோபதிஷேத்தர்மம் ந சாஸ்ய வ்ரதமாதிஷேத் ||** 80

*சூத்ரனுக்கு இகலோகத்துக்கு பயன்தரக்கூடிய அர்த்தசாஸ்திரம் முதலான நூல்களை கற்றுக் கொடுக்கக் கூடாது. தான் சாப்பிட்டு மிகுந்த உச்சிஷ்டான்னத்தை (சாப்பிட்டு மிகுந்தது ) சிஷ்யனல்லாத சூத்திரனுக்கு கொடுக்கக் கூடாது.*

*ஹவிசில் மிகுந்ததையும் கொடுக்கக் கூடாது.*

*அவனுக்கு தர்மத்தையும் விரதங்களையும் தானே நேரடியாக போதிக்காமல் இன்னொருவரைக் கொண்டு போதிக்கச் செய்ய வேண்டும்.*

यो ह्यस्य धर्ममाचष्टे यश्चैवादिशति व्रतम्।
सोऽसंवृत नाम तमः सह तेनैव मज्जति॥

**யோஹ்யஸ்ய தர்ம மாச ஷ்டே யஷ்சை வாதிஷதி வ்ரதம் |**
**ஸோ அஸம்வ்ருதம் நாம தம: ஸஹதேனைவ மஜ்ஜதி ||** 81

*அவ்வாறன்றி, எவன் இந்த சூத்திரனுக்கு தர்மத்தையும், விரதங்களையும் உபதேசிக்கிறானோ அவன், அந்த சூத்திரனோடு கூட அசம்விருதம் என்னும் பெயருள்ள நரகத்தில் விழுவான்.*

न संहताभ्यां पाणिभ्यां कण्डूयेदात्मनः शिरः ।
न स्पृशेच् चैतदुच्छिष्टो न च स्नायाद् विना ततः ॥

**நஸம்ஹதாப்யாம் பாணிப்யாம் கண்டூயேதாத்மநஷ்ஷிர: |**
**ந ஸ்ப்ரு ஷேச்சைததுச்சிஷ்டோ நச ஸ்நாயாத்விநா தத: ||** 82

இரண்டு கைகளாலும் தலையை சொரியக் கூடாது. சாப்பிட்ட பிறகும்கூட கை, கால்களை அலம்பிக் கொள்வதற்கு முன்னம் தலையைத் தொடக்கூடாது. தலையை விட்டு உடம்புக்கு மட்டுமாகக் குளிக்கக் கூடாது.

केशग्रहान् प्रहारांश् च शिरस्येतान् विवर्जयेत् ।
शिरःस्नातश्च तैलेन नाङ्गं किञ्चिदपि स्पृशेत् ॥

**கேஷக்ரஹாந் ப்ரஹாராம்ஷ்ச ஷிரஸ்யேதாந் விஸர்ஜயேத் |**
**ஷிரஸ்நாதஷ்ச தைலேந நாங்கம் கிஞ்சிதபி ஸ்ம்ருஷேத் ||** 83

கோபத்திலும்கூட தலைமுடியைப் பற்றி இழுத்து தலையில் அடிக்கக் கூடாது. தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளித்த பிறகு, அன்றைய நாளில் சிறிதளவு எண்ணெயைக்கூட உடலில் பூசிக் கொள்ளக்கூடாது.

न राज्ञः प्रतिगृह्णीयादराजन्यप्रसूतितः ।
सूनाचक्रध्वजवतां वेशेनैव च जीवताम् ॥

**ந ராக்ஞ: ப்ரதிக்ருஹ்ணீயாதராஜந்ய ப்ரஸூதித: |**
**ஸூநாசக்ர த்வஜவதாம் வேஷேநைவ ச ஜீவதாம் ||** 84

க்ஷத்ரிய குலத்தில் பிறக்காத மன்னனிடம் தானம் வாங்கக் கூடாது. மிருகங்களை ஹிம்சித்து ஜீவனம் நடத்துபவனிடமும், எள்ளை ஆட்டி எண்ணெய் எடுப்பவனிடமும், கள்ளை விற்பவனிடமும், வேசிகளைக் கொண்டு ஜீவனம் நடத்துப வனிடமும் தானம் வாங்கக் கூடாது.

दशसूनासमं चक्रं दशचक्रसमो ध्वजः ।
दशध्वजसमो वेशो दशवेशसमो नृपः ॥

**தஷஸூநாஸமம் சக்ரம் தஷசக்ரஸமோ த்வ ஜ: |**
**தஷத்வஜஸமோ வேஷோ தஷவேஷஸமோ ந்ருப: ||** 85

எண்ணெய் ஆட்டுவோன் ஒருவன், மிருகங்களை ஹிம்சித்து ஜீவனம் நடத்தும் கசாப்புக்காரர்களான பத்து பேருக்கு சமம். இவனைப்போன்ற பத்து பேருக்கு சமமானவன் கள்ளை விற்பவன். இவனைப் போன்ற பத்து பேருக்கு சமமானவன் வேசிகளை வைதது பிழைப்பு நடத்துபவன். இவனைப் போன்ற பத்து பேருக்கு சமமானவன் க்ஷத்ரிய குலத்தில் பிறக்காத மன்னன்.

दशसूनासहस्राणि यो वाहयति सौनिकः।
तेन तुल्यः स्मृतो राजा घोरस् तस्य प्रतिग्रहः॥

**தஷசூநாஸஹஸ்ராணி யோ வாஹயதி ஸௌநிக: |**
**தேந துல்ய: ஸ்ம்ருதோ ராஜா கோரஸ்தஸ்ய ப்ரதிக்ரஹ: || 86**

*ஜந்துக்களை ஹிம்சிக்கும் கசாப்புக்காரரைப் போன்ற பத்தாயிரம் பேருக்கு சமம் இத்தகைய மன்னன். எனவே இத்தகைய மன்னனிடம் தானம் வாங்கக் கூடாது.*

यो राज्ञः प्रतिगृह्णाति लुब्धस्योच्छास्त्रवर्तिनः।
स पर्यायेण यातीमान् नरकानेकविंशतिम्॥

**யோராக்ஞ : ப்ரதிக்ருஹ்ணாதி லுப்தஸ்யோச்சாஸ்த்ர வர்திந: |**
**ஸ பர்யாயேண யாதீமாந்நரகாநேக விம்ஷதிம் || 87**

*சாஸ்திரத்தை மீறுபவனும், லோபியும், க்ஷத்ரியனல்லாதவனுமான மன்னனிடம் தானம் வாங்கியவன் இருபத்தொரு நரகங்களை வரிசையாக அடைவான்.*

तामिस्रमन्धतामिस्रं महारौरवरौरवौ।
नरकं कालसूत्रं च महानरकमेव च॥

**தாமிஸ்ரமந்ததாமிஸ்ரம் மஹாரௌரவ ரௌர வௌ |**
**நரகம் கால சூத்ரம ச மஹா நரக மேவ ச || 88**

सञ्जीवनं महावीचिं तपनं सम्प्रतापनम्।
संहातं च सकाकोलं कुड्मलं प्रतिमूर्तिकम्॥

**ஸஞ்ஜீவனம் மஹாவீசிம் தபநம் ஸம்ப்ரதாபநம் |**
**ஸந்ஹாதம் ச ஸகாகோலம் குட்மலம் ப்ரதி மூர்த்திகம் || 89**

लोहशङ्कुमृजीषं च पन्थानं शाल्मली नदीम्।
असिपत्रवनं चैव लोहदारकमेव च॥

**லோஹஷங்கு ம்ருஜீஷம் ச பந்தானம் ஷால்மலீம் நதீம் |**
**அஸிபத்ரவனம் சைவ லோஹதாரகமேவச || 90**

*தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம், மஹாரவுரம், ரவுரம், காலசூத்ரம், நரகம், மஹாநரகம், சஞ்ஜீவனம், மஹாவீசி, தபநம், சப்பிரதாபநம், சங்காதம், ககோலம், குட்மலம், பிரதி மூர்த்திகம், லோஹசங்கு, ருஜீஷம், பந்தானம், ஷால்மலீநதி, அசிபத்ரவனம், லோகதாரகம், இவை அந்த இருபத்தொரு நரகங்கள்.*

एतद् विदन्तो विद्वांसो ब्राह्मणा ब्रह्मवादिनः।
न राज्ञः प्रतिगृह्णन्ति प्रेत्य श्रेयोऽभिकाङ्क्षिणः॥

**எதத்விதந்தோ வித்வாம்ஸோ ப்ராஹ்மணா: ப்ரஹமவாதிந: |**
**நராக்ஞ: ப்ரதிக்ருஹ்நந்தி ப்ரேத்ய ஷ்ரேயோபிகா க்ஷிண: || 91**

இவ்வாறான நரகங்களுக்கு வழிவகுப்பது இந்த தானம் என்பதை அறிந்த வேதமுணர்ந்த பிராம்மணர்கள், தங்கள் மறுமையின்பத்தை காத்துக் கொள்ள வேண்டி, இத்தகைய அரசனிடம் தானம் வாங்க மாட்டார்கள்.

ब्राह्मे मुहूर्ते बुध्येत धर्मार्थौ चाऽनुचिन्तयेत्।
कायक्लेशांश् च तन्मूलान् वेदतत्त्वार्थमेव च॥

**ப்ராஹ்மே முஹுர்தே புத்யேத தர்மார்த்தௌ சாநு சிந்தயேத் |**
**காயக்ளேஷாம்ஷ்ச தந்மூலாந் வேததத்வார்த்த மேவ ச || 92**

பிரம்ம முகூர்த்த நேரத்தில் கண் விழிக்க வேண்டும். தர்மத்தைப் பற்றியும், அர்த்தத்தைப்பற்றியும் சிந்திக்க வேண்டும். அப்படி தர்மத்தை நடத்துவதிலும், பொருளைத் தேடுவதிலும் எப்படி உழைப்பது என்று சிந்திக்க வேண்டும். பிறகு வேத தத்துவ விஷயங்களைப்பற்றி சிந்திக்க வேண்டும்.

उत्थायाऽऽवश्यकं कृत्वा कृतशौचः समाहितः।
पूर्वां सन्ध्यां जपंस् तिष्ठेत् स्वकाले चाऽपरां चिरम्॥

**உத்தாயாவஷ்யகம் க்ருத்வா க்ருத ஷௌசஸ்ஸமாஹித: |**
**பூர்வாம் சந்த்யாம் ஜபம்ஸ்திஷ்டேத் ஸ்வகாலேசாபராம் சிரம் || 93**

பிறகு எழுந்து காலைக்கடன்களை முடிக்க வேண்டும். பிறகு பரிசுத்தனாகி காலை சந்தியாவந்தனம், ஜபம் செய்ய வேண்டும். இவ்வாறே மாலையிலும் நட்சத்திர உதய நேரத்தில் காயத்ரீஜபம் செய்ய வேண்டும்.

ऋषयो दीर्घसन्ध्यत्वाद् दीर्घमायुरवाप्नुयुः।
प्रज्ञां यशश् च कीर्तिं च ब्रह्मवर्चसमेव च॥

**ருஷயோ தீர்க்கஸந்த்யத்வாத் தீர்க்க மாயுரவாப்நுயு: |**
**ப்ரக்ஞாம் யஷஷ்சச கீர்த்திம் ச ப்ரஹ்மவர்ச்சஸமேவ ச || 94**

ரிஷிகள் தீர்க்க காலம் சந்தியாவந்தன அனுஷ்டானங்களை செய்து தீர்க்க ஆயுளைப் பெற்று மேதாவிகளாகவும் புகழுடனும் வாழ்ந்தார்கள்.

श्रावण्यां प्रौष्ठपद्यां वाऽप्युपाकृत्य यथाविधि।
युक्तश् छन्दांस्यधीयीत मासान् विप्रोऽर्धपञ्चमान्॥

**ஷ்ராவண்யாம் ஸ்ரௌஷ்டபத்யாம் வா அப்யுபாக்ருத்ய யதாவிதி |**
**யுக்தஷ்சந்தாஸ்யதீயீத மாஸாந் விப்ரோ அர்த்த பஞ்சமாந் ||** **95**

*ஆவணி பௌர்ணமியன்றோ புரட்டாசி பௌர்ணமியன்றோ தங்கள் சூத்திரத்துக்கு ஏற்றுவாறு உபாகர்மா நடத்தி, நாலரை மாதம் காலம் தொடர்ந்து வேதாத்யயனம் செய்ய வேண்டும்.*

पुष्ये तु च्छन्दसां कुर्याद् बहिरुत्सर्जनं द्विजः।
माघशुक्लस्य वा प्राप्ते पूर्वाह्णे प्रथमेऽहनि॥

**புஷ்யே து சந்தஸாம் குர்யாத் பஹிருத்ஸர்ஜநம் த்விஜ: |**
**மாக சுக்ளஸ்ய வா ப்ராப்தே பூர்வாஹ்ணே ப்ரதமே அஹநி ||** **96**

*நான்கரை மாதங்கள் ஆனபிறகு தைமாத தேய்பிறை பிரதமை, அல்லது மாசி மாத தேய்பிறை பிரதமையில் ஊருக்கு வெளியே சென்று உத்சர்ஜன கிரியையை அவரவர் முறைப்படி செய்ய வேண்டும்.*

यथाशास्त्रं तु कृत्वैवमुत्सर्गं छन्दसां बहिः।
विरमेत् पक्षिणीं रात्रिं तदेवैकमहर्निशम्॥

**யதா சாஸ்த்ரம் து க்ருத்வை வமுத்ஸர்கம் சந்தஸாம் பஹி: |**
**விரமேத் பக்ஷிணீம் ராத்ரிம் ததேவைகமஹர்நிஷம் ||** **97**

*இவ்வாறு ஊருக்கு வெளியே உத்சர்ஜனக்கிரியையை செய்த பிறகு மூன்று நாட்களோ அல்லது தொண்ணூறு நாழிகைகளோ அல்லது ஒரு நாளோ வேதாத்யயனம் செய்யக் கூடாது.*

अत ऊर्ध्वं तु छन्दांसि शुक्लेषु नियतः पठेत्।
वेदाङ्गानि च सर्वाणि कृष्णपक्षेषु सम्पठेत्॥

**அத ஊர்த்வம் து சந்தாம்ஸி சுக்ளேஷு நியத: படேத் |**
**வேதாங்காநி ச ஸர்வாணி க்ருஷ்ணபக்ஷேஷுஸம்படேத் ||** **98**

*பிறகு வளர்பிறைகளில் வேதங்களைப் படிக்க வேண்டும். தேய்பிறைகளில் வேதாங்கங்களைப் படிக்க வேண்டும்.*

नाऽविस्पष्टमधीयीत न शूद्रजनसन्निधौ।
न निशान्ते परिश्रान्तो ब्रह्माऽधीत्य पुनः स्वपेत्॥

**நாவிஸ்பஷ்டமதீயீத ந சூத்ரஜநஸந்நிதௌ |**
**ந நிஷாந்தே பரிஷ்ராந்தோ ப்ரஹ்மாதீத்ய புந: ஸ்வபேத் ||** **99**

*ஸ்வரமும் வர்ணங்களும் சரியாக அறிய முடியாத படி வேதம் ஓதக்கூடாது. சூத்திரர்கள் அருகில் வேதம் ஓதக் கூடாது.*

அதிகாலையில் எழுந்து வேதாத்யயனம் செய்து, பிறகு மீண்டும் படுத்துறங்கக் கூடாது.

**यथोदितेन विधिना नित्यं छन्दस्कृतं पठेत्।**
**ब्रह्म च्छन्दस्कृतं चैव द्विजो युक्तो ह्यनापदि॥**

**யதோதிதேந விதிநா நித்யம் சந்தஸ்க்ருதம் படேத் |**
**ப்ரஹ்ம சந்தஸ்கிருதம் சைவ த்விஜோ யுக்தோ ஹ்யநாபதி || 100**

கூறப்பட்ட விதிமுறைப்படி தினமும் காயத்ரி முதலான சந்தஸ்களுடன் கூடிய மந்திரங்களை ஜபிக்க வேண்டும். மற்ற கர்மாக்கள் நேரும்போது சாஸ்திரம் விதித்தபடியான மந்திரங்களை படிக்க வேண்டும்.

**इमान् नित्यमनध्यायानधीयानो विवर्जयेत्।**
**अध्यापनं च कुर्वाणः शिष्याणां विधिपूर्वकम्॥**

**இமாந்நித்யநத்யாயாநதீயாநோ விவர்ஜயேத் |**
**அத்யாநம் ச குர்வாண: ஷிஷ்யாணாம் விதிபூர்வகம் || 101**

வேதத்தைப்படிக்கும் சிஷ்யனும், படிப்பிக்கும் குருவும் வேதமோதக் கூடாத நாளில் படிக்க, படிப்பிக்கக் கூடாது.

**कर्णश्रवेऽनिले रात्रौ दिवा पांसुसमूहने।**
**एतौ वर्षास्वनध्यायावध्यायज्ञाः प्रचक्षते॥**

**கர்ணஷ்ரவே அநிலே ராத்ரௌ திவா பாம் சுஸ மூஹநே |**
**ஏதௌ வர்ஷாஸ்வநத்யாயா வத்யாயக்ஞா: ப்ரசக்ஷதே || 102**

மழைக்காலத்து இரவில் சத்தத்தோடு காதுகளைத் துளைக்கும் வண்ணம் காற்று வீசும் போதும், பகலில் புழுதி கவிழ்ந்திருக்கும் போதும் வேதாத்யயனம் செய்யக் கூடாது. வேதாத்யயனம் செய்யும் போது, இத்தகைய காற்று வீசினாலோ, புழுதி கவிழ்ந்தாலோ உடனே வேதாத்யயனத்தை நிறுத்த வேண்டும்.

**विद्युत्स्तनितवर्षेषु महोल्कानां च सम्प्लवे।**
**आकालिकमनध्यायमेतेषु मनुरब्रवीत्॥**

**வித்யுத் ஸ்தநித வர்ஷேசு மஹோல்காநாம் ச ஸம்ப்ளவே |**
**ஆகாலிகமநத்யாய மேதேசு மநுரப்ரவீத் || 103**

இடி மின்னல்களுடன் பெருத்த மழை பொழியும் போதும், வால் நாட்சத்திரம் விழும் போதும், அப்போது தொடங்கி மறுநாள் அதே நேரம் வரை அத்யயனம் செய்யக் கூடாது என்று மனு கூறியுள்ளார்.

एतांस् त्वभ्युदितान् विद्याद् यदा प्रादुष्कृताऽग्निषु।
तदा विद्यादनध्यायमनृतौ चाऽभ्रदर्शने॥

ஏதாம் ஸ்த்வப்யுதிதாந் வித்யாத்யதா ப்ராதுஷ்க்ருதாக்நிசு |
ததா வித்யாதநத்யாயமந்ருதௌ சாப்ரதர்ஷநே || 104

இடி மின்னல்கள் ஏற்படும் போது, மழைக்காலத்தில்தான் வேதம் ஓதக்கூடாது. மற்ற காலங்களுக்கு இது பொருந்தாது. ஆனால் எல்லாக்காலங்களிலும் அக்நிகாரியங்கள் ஆரம்பிக்கும்போது சந்தியா காலத்தில் மேகமூட்டம் மட்டும் தென்பட்டால்கூட வேதமோதக்கூடாது.

निर्घाते भूमिचलने ज्योतिषां चोपसर्जने।
एतानाकालिकान् विद्यादनध्यायानृतावपि॥

நிர்காதே பூமிசலனே ஜ்யோதிஷாம் சோபஸர்ஜநே |
ஏதாநாகலிகாந் வித்யாதநத்யா யாந்ருதாவபி || 105

மழைக்காலமில்லாத போதும்கூட இடி விழுந்த போதும், பூகம்பம் ஏற்பட்ட போதும், நட்சத்திரங்கள் உதிர்ந்த போதும் அப்போது தொடங்கி மறுநாள் அந்த நேரம் வரையில் வேதமோதக் கூடாது.

प्रादुष्कृतेष्वग्निषु तु विद्युत्स्तनितनिःस्वने।
सज्योतिः स्यादनध्यायः शेषे रात्रौ यथा दिवा॥

ப்ராது ஷ்க்ருதேஷ்க்நிசு து வித்யுத் ஸ்தநிநிஸ்வநே |
ஸஜ்யோதிஸ்ஸ் யாதநத்யாய : ஷேஸே ராத்ரௌ யதா திவா || 106

ஹோமத்துக்காக அக்னியை ஏற்படுத்தும் சமயத்திலும், காலை சந்தியாகாலத்திலும் இடி மின்னல்கள் மட்டும் ஏற்பட்டால் வெளிச்சம் இருக்கும் பொழுதுவரை வேதமோதக்கூடாது. இரவில் இடி மின்னல் களோடு மழையும் பொழிந்தால் அந்த பகலும் இரவும் வேதமோதக் கூடாது.

नित्याऽनध्याय एव स्याद् ग्रामेषु नगरेषु च।
धर्मनैपुण्यकामानां पूतिगन्धे च सर्वशः॥

நித்யாநத்யாய ஏவஸ்யாத்க்ராமேஷு நகரேஷு ச |
தர்மநைபுண்யகாமாநாம் பூதிகந்தே ச ஸர்வதா || 107

உயர்வான தர்மத்தை அறிவதில் நிபுணத்துவம் பெற நினைக்கும் சிஷ்யனுக்கு 'தர்மநைபுண்ய காமன்' என்று பெயர். இந்த தர்ம நைபுண்யகாமன், நகரத்திலும் கிராமத்திலும் துர்நாற்றம் வியாபித்திருக்கும் போது, அந்த துர்கந்தம் நீங்கும் வரையில் வேதமோதக் கூடாது.

உயர்வான வித்தையில் மட்டும் நிபுணத்துவம் பெற நினைப்பவனுக்கு 'வித்யாநைபுண்ய காமன்' என்று பெயர். இந்த வித்யா நைபுண்ய காமன், இவ்வாறான துர்கந்தம் வியாபித்த தருணங்களில் வேதமோதலை நிறுத்த வேண்டிய அவசியமில்லை.

**अन्तर्गतशवे ग्रामे वृषलस्य च सन्निधौ।**
**अनध्यायो रुद्यमाने समवाये जनस्य च॥**

**அந்தர்கதஷவே க்ராமே வ்ருஷலஸ்ய ச சந்நிதௌ |**
**அநத்யாயோருத்யமாநே ஸமவாயே ஜநஸ்ய ச ॥ 108**

சவம் கிராமத்தில் இருக்கும்போதும், அதர்மவான்கள் அருகில் இருக்கும்போதும், மக்கள் கூட்டம் கூடி, ஏதோ காரணத்தால் அழும்போதும் வேதம் ஓதக் கூடாது.

**उदके मध्यरात्रे च विण्मूत्रस्य विसर्जने।**
**उच्छिष्टः श्राद्धभुक् चैव मनसाऽपि न चिन्तयेत्॥**

**உதகே மத்யராத்ரே ச விண்மூத்ரஸ்ய விசர்ஜநே |**
**உச்சிஷ்ட: ஷ்ராத்தபுக்சைவ மனஸா அபி ந சிந்தயேத் ॥ 109**

நீரின் நடுவில் இருக்கும்போதும், நடுஇரவிலும், மலஜலங்கள் கழிக்கும்போதும், சிராத்தத்துக்கு தன்னை நியமித்திருக்கும் போதும், எச்சிலுடன் இருக்கும்போதும் வேதத்தை மனத்தாலும் நினைக்கக் கூடாது.

**प्रतिगृह्य द्विजो विद्वानेकोद्दिष्टस्य केतनम्।**
**त्र्यहं न कीर्तयेद् ब्रह्म राज्ञो राहोश् च सूतके॥**

**ப்ரதிக்ருஹ்ய த்விஜோ வித்வாநேகோத்திஷ்டஸ்ய கேதநம் |**
**த்ர்யஹம் நகீர்தயேத் ப்ரஹ்ம ராக்ஞோ ராஹோஷ்ச ஸூதகே ॥ 110**

ஏகோத்திஷ்ட சிராத்தத்துக்கு நியமிக்கப்பட்டால், அன்று முதல் மூன்று தினங்களுக்கும், தன் அரசனுக்குப் புத்திரன் பிறந்தபோதும், சூரியசந்திர கிரஹணங்களின் போதும் மூன்று நாட்கள் வேதம் ஓதக் கூடாது.

**यावदेकाऽनुदिष्टस्य गन्धो लेपश् च तिष्ठति।**
**विप्रस्य विदुषो देहे तावद् ब्रह्म न कीर्तयेत्॥**

**யாவதேகாநுதிஷ்டஸ்ய கந்தோ லேபஷ்ச திஷ்டதி |**
**விப்ரஸ்ய விதுஷோ தேஹே தாவத்ப்ரஹ்ம ந கீர்தயேத் ॥ 111**

ஏகோத்திஷ்டத்தில் நியமிக்கப்பட்டவன், தான் சாப்பிட்டது முழுமையாக ஜீரணமாகும் வரை வேதத்தைப் படிக்கக் கூடாது.

शयानः प्रौढपादश् च कृत्वा चैवाऽवसक्थिकाम्।
नाऽधीयीताऽमिषं जग्ध्वा सूतकाऽन्नाद्यमेव च॥

**ஷயாந: ப்ரௌட பாதஷ் ச க்ருத்வா சைவாவஸக்திகாம் |**
**நாதீயீதாமிஷம் ஜக்த்வா ஸூதகாந்நாத்யமேவ ச || 112**

*படுத்துக் கொண்டும், கால்களை நீட்டிக் கொண்டும், இடுப்புக்கும் முழங்கால்களுக்குமாக துணியைக் கட்டிக் கொண்டும், மாமிசம் சாப்பிட்டு விட்டும், ஜனன மரண சௌசங்கள் இருப்பவருடைய சாப்பாட்டைச் சாப்பிட்ட பிறகும் வேதாத்யயனம் கூடாது.*

नीहारे बाणशब्दे च सन्ध्ययोरेव चोभयोः।
अमावास्याचतुर्दश्योः पौर्णमास्यष्टकासु च॥

**நீஹாரே பாணஷப்தே ச ஸந்த்ய யோரேவ சோபயோ: |**
**அமாவாஸ்யா சதுர்தஸ்யோ: பௌர்ண மாஸ் யஷ்டகாசு ச || 113**

*பனி மூடியிருக்கும்போதும், வீணையோசை கேட்டபோதும், காலை மாலை சந்தியா காலங்களின்போதும், சதுர்த்தசி அமாவாசைகளிலும், பௌர்ணமி அஷ்டமிகளிலும் வேதாத்யயனம் செய்யக் கூடாது.*

अमावास्या गुरुं हन्ति शिष्यं हन्ति चतुर्दशी।
ब्रह्माऽष्टकापौर्णमास्यौ तस्मात् ताः परिवर्जयेत्॥

**அமாவாஸ்யா குரும்ஹந்தி சிஷ்யம் ஹந்தி சதுர்தஷீ |**
**ப்ரஹ்மாஷ்டகா பௌர்ணமாஸ்யோ தஸ்மாத்தா: பரிவர்ஜயேத் || 114**

*அமாவாசையில் வேதமோதுதல் குருவைக் கொல்லும். சதுர்த்தசியில் சிஷ்யனைக் கொல்லும். அஷ்டமி, பௌர்ணமிகளில் படிக்கப்பட்ட வேதம் தானே நசிக்கும். எனவே இந்நாட்களில் வேதம் படிக்கக்கூடாது.*

पांसुवर्षे दिशां दाहे गोमायुविरुते तथा।
श्वखरोष्ट्रे च रुवति पङ्क्तौ च न पठेद् द्विजः॥

**பாம்சுவர்ஷே திஷாம் தாஹே கோமாயுவிருதே ததா |**
**ஷ்வகரோஷ்ட்ரே ச ருவதி ப்ரக்ஞா சநபடேத் த்விஜ: || 115**

*மண்மாரி பெய்யும் போதும், திக்குகள் பற்றி எரியும்போதும், நரிகள் கத்தும்போதும், நாய்கள், கழுதைகள் அழுகுரல் எழுப்பும் போதும், பலபேர் மத்தியில் இருக்கும்போதும் வேதம் ஓதக் கூடாது.*

नाऽधीयीत श्मशानाऽन्ते ग्रामाऽन्ते गोव्रजेऽपि वा।
वसित्वा मैथुनं वासः श्राद्धिकं प्रतिगृह्य च॥

**நாதீயீத ஷ்மஷாநாந்தே க்ராமாந்தே கோவ்ரஜே அபி வா ।**
**வஸித்வா மைதுநம் வாஸ: ஷ்ராத்திகம் ப்ரதிக்ருஹ்ய ச ॥ 116**

*சுடுகாட்டு சமீபத்திலும், கிராம சமீபத்திலும் பசுக் கொட்டிலிலும், பெண் சம்போகத்தின்போது அணிந்த ஆடையை அணிந்தபடியும், சிராத்த சாப்பாட்டை சாப்பிட்ட பிறகும் வேதாத்யயனம் செய்யக் கூடாது.*

प्राणि वा यदि वाऽप्राणि यत् किञ्चिच् छ्राद्धिकं भवेत्।
तदालभ्याऽप्यनध्यायः पाण्यास्यो हि द्विजः स्मृतः॥

**ப்ராணி வா யதிவா அப்ராணி யத்கிஞ்சித் ச்ராத்திகம் பவேத் ।**
**ததாலப்யாப்யநத்யாய: பாண்யாஸ்யோ ஹி த்விஜ: ஸ்ம்ருத: ॥ 117**

*பிராணன் இருக்கும் பசுக்கள் குதிரைகள் முதலியவற்றையோ, பிராணனற்ற வஸ்திரங்கள், தானியங்கள் முதலியவற்றையோ கையால் தானம் வாங்கினால் அன்றைய தினம் வேதம் ஓதக் கூடாது. பிராம்மணனுக்கு கரமே வாய் அல்லவா! எனவே கரம் வாங்கிய தானம் வாய்க்கும் உரித்தாகும்.*

चोरैरुपद्रुते ग्रामे सम्भ्रमे चाऽग्निकारिते।
आकालिकमनध्यायं विद्यात् सर्वाऽद्भुतेषु च॥

**சோரைருபத்ருதே க்ராமே ஸம்ப்ரமே சாக்நிகாரிதே ।**
**ஆகாலிகமநத்யாயம் வித்யாத்ஸர்வாத்புதேசு ச ॥ 118**

*ஊரில் திருடர்களால் உபத்திரவம் ஏற்பட்டபோதும், நெருப்பால் உபத்திரவம் ஏற்பட்டபோதும், சகலவிதமான அற்புதங்கள் நிகழ்ந்த போதும், மறுநாள் அந்த நேரம் வரையில் வேதம் ஓதக்கூடாது.*

उपाकर्मणि चोत्सर्गे त्रिरात्रं क्षेपणं स्मृतम्।
अष्टकासु त्वहोरात्रमृत्वन्तासु च रात्रिषु॥

**உபாகர்மணி சோத்ஸர்கே த்ரிராத்ரம் க்ஷேபணம் ஸ்ம்ருதம் ।**
**அஷ்டகாசு த்வ அஹோராத்ரம்ருத்வந்தாசு ச ராத்ரிசு ॥ 119**

*ஆவணி, புரட்டாசி மாதங்களில் உபாகர்மம் நடந்த பின்பும், தை, மாசி மாதங்களில் உத்சர்ஜன விரதம் அனுஷ்டிக்கும் போதும், மூன்று நாட்கள் வேதம் ஓதலாகாது. மேலும் மார்கழி பௌர்ணமிக்குப் பிறகு மூன்று தேய்பிறை அஷ்டமிகளில் இரவும் பகலும் வேதம் ஓதலாகாது.*

சித்திரை, ஆடி, ஐப்பசி, தை மாதப் பிறப்புகளின் போதும் வேதமோதலாகாது.

नाऽधीयीताऽश्वमारूढो न वृक्षं न च हस्तिनम्।
न नावं न खरं नोष्ट्रं नेरिणस्थो न यानगः॥

**நாதீயீதா ஷ்வமாரூடோ நவ்ருக்ஷம் நசஹஸ்திநம் |**
**ந நாவம் ந கரம் நோஷ்ட்ரம் நேரிணஸ்தோ ந யாநக: || 120**

குதிரையின் மீது அமர்ந்து கொண்டும், மரத்திலேறி அமர்ந்து கொண்டும், யானையின் மீது அமர்ந்து கொண்டும், படகில் அமர்ந்து கொண்டும், கழுதையின் மீது அமர்ந்து கொண்டும், ஒட்டகத்தின் மீது அமர்ந்து கொண்டும், களர்நிலத்தில் அமர்ந்து கொண்டும், வண்டிகளில் அமர்ந்து பிரயாணம் செய்யும் போதும் வேதம் ஓதலாகாது.

न विवादे न कलहे न सेनायां न सङ्गरे।
न भुक्तमात्रे नाऽजीर्णे न वमित्वा न शुक्तके॥

**ந விவாதே நகலஹே நஸேநாயாம் நஸங்கரே |**
**ந புக்தமாத்ரே நாஜீர்ணே நவமித்வா நசூதகே || 121**

வாயால் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் போதும், கைகலப்பு ஏற்பட்டிருக்கும்போதும், சேனைகள் தங்கி இருக்கும் இடத்திலும், போர் நடந்து கொண்டிருக்கும் போதும், சாப்பிட்ட உடனேயும், அஜீர்ண மாயிருக்கும்போதும், வாந்தியெடுத்த போதும், சூதகம் ஏற்பட்ட போதும் வேதம் ஓதலாகாது.

अतिथिं चाऽननुज्ञाप्य मारुते वाति वा भृशम्।
रुधिरे च स्रुते गात्राच् छस्त्रेण च परिक्षते॥

**அதிதிம் சாநநுஞாப்ய மாருதேவாதி வா ப்ருஷம் |**
**ருதிரே ச ஸ்ருதே காத்ராச் சஸ்த்ரேண ச பரிக்ஷதே || 122**

அதிதி இருந்தால் அவரிடம் அனுமதி பெறாமலும், பெருங்காற்று வீசும் போதும், உடலிலிருந்து ரத்தம் வழியும் போதும், வழியாவிட்டாலும் ரத்தக் காயம் ஏற்பட்டிருந்தாலும் வேதம் ஓதக்கூடாது.

सामध्वनावृग्यजुषी नाऽधीयीत कदाचन।
वेदस्याऽधीत्य वाऽप्यन्तमारण्यकमधीत्य च॥

**ஸாமத்வ நாவ்ரு க்யஜுஷீ நாதீயீத கதாசந |**
**வேதஸ்யாதீத்ய வாப்யந்தமாரண்யகமதீத்ய ச || 123**

சாமவேதம் கானம் செய்யும் சப்தம் கேட்கும்போது ரிக், யஜுர் வேதங்களை ஓதக்கூடாது. வேதம் முழுதையும் ஓதிய பிறகும், நாரண்யகம் என்னும் வேத பாகத்தை ஓதிய பிறகும் அன்றைய தினம் வேதமோதக் கூடாது.

ऋग्वेदो देवदैवत्यो यजुर्वेदस् तु मानुषः ।
सामवेदः स्मृतः पित्र्यस् तस्मात् तस्याऽशुचिर् ध्वनिः ॥

**ருக்வேதோ தேவதைவத்யோ யஜுர்வேதஸ்து மானுஷ: |**
**ஸாமவேத: ஸ்ம்ருத: பித்ர்யஸ் தஸ்மாத் தஸ்யாசுசிர்த்வநி: ||** 124

ரிக் வேதம் தேவர்களையும், யஜுர் வேதம் மானிடர்களையும், சாமவேதம் பித்ருக்களையும் தேவதைகளாகக் கொண்டுள்ளன. எனவே சாம வேத த்வனி தூய்மை குறைந்தது.

एतद् विदन्तो विद्वांसस् त्रयीनिष्कर्षमन्वहम् ।
क्रमतः पूर्वमभ्यस्य पश्चाद् वेदमधीयते ॥

**ஏதத்விதந்தோ வித்வாம்ஸஸ்த்ர யீநிஷ்கர்ஷ மந்வஹம் |**
**க்ரமத: பூர்வமப்யஸ்ய பஷ்சாத் வேதமதீயதே ||** 125

இதையறிந்த வித்வான்கள் தினமும் பிரம்ம யக்ஞம் செய்யும்போது ரிக், யஜுர், சாம வேதங்களின் சாரமான பிரணவ வியாஹ்ருதி சாவித்ரிகளை முறையாக அத்யயனம் செய்து, பிறகு வேதங்களை அத்யயனம் செய்கிறார்கள்.

पशुमण्डूकमार्जारश्वसर्पनकुलाऽऽखुभिः ।
अन्तरागमने विद्यादनध्यायमहर्निशम् ॥

**பசுமண்டூக மார்ஜாரஷ்வஸர்ப நகுலாகுபி: |**
**அந்தராகமநே வித்யாதநத்யாயமஹர் நிஷம் ||** 126

பசு, தவளை, பூனை, நாய், பாம்பு, ஓணான், எலி முதலானவை குருவுக்கும் சிஷ்யனுக்கும் இடையில் வந்தால் அன்றைய தினம் முழுவதும் வேதம் ஓதலாகாது.

द्वावेव वर्जयेन् नित्यमनध्यायौ प्रयत्नतः ।
स्वाध्यायभूमिं चाऽशुद्धामात्मानं चाऽशुचिं द्विजः ॥

**த்வாவேவ வரயேந்நித்யமநத்யாயௌ ப்ரயத்நத: |**
**ஸ்வாத்யாய பூமிம் சாசுத்தாமாத்மா நம் சாசுசிம் த்விஜ: ||** 127

வேதாத்யயனம் செய்யும் இடம் அசுத்தமடைந்த போதும், தன்னுடைய சுத்தம் குறைந்திருக்கும் போதும் வேதமோதலாகாது.

अमावास्यामष्टमीं च पौर्णमासीं चतुर्दशीम्।
ब्रह्मचारी भवेन् नित्यमप्यृतौ स्नातको द्विजः॥

**அமாவாஸ்யாமஷ்டமீம் ச பௌர்ணமாஸீம் சதுர்தஷீம் |**
**ப்ரஹ்மசாரீ பவேந்நித்யமப் ய்ருதௌ ஸ்நாதகோ த்விஜ: || 128**

*அமாவாசை, அஷ்டமி, பௌர்ணமி, சதுர்த்தசி இந்நாட்களில் மனைவி ருது ஸ்நானம் செய்து வந்தவளான போதும் விரத ஸ்நாதகனான த்விஜன் மனைவியைக் கூடக்கூடாது.*

न स्नानमाचरेद् भुक्त्वा नाऽऽतुरो न महानिशि।
न वासोभिः सहाऽजस्रं नाऽविज्ञाते जलाऽऽशये॥

**நஸ்நாநமாசரேத் பூக்த்வா நாதுரோ ந மஹாநிஷி |**
**நவாஸோபிஸ்ஸஹாஜஸ்ரம் நாவிக்ஞாதே ஜலாஷயே || 129**

*சாப்பிட்டுவிட்டு நீராடக் கூடாது. நோயாளியும் நீராடக் கூடாது. நள்ளிரவில் நீராடக் கூடாது. அழுக்காடையுடன் நீராடக் கூடாது. பழக்கமில்லாத, ஆழம் எவ்வளவு, முதலைகள் உண்டா என்றெல்லாம் தெரியாத நீர்நிலைகளில் நீராடக் கூடாது.*

देवतानां गुरो राज्ञः स्नातकाऽऽचार्ययोस् तथा।
नाऽऽक्रामेत् कामतश् छाया बभ्रुणो दीक्षितस्य च॥

**தேவதாநாம் குரோ ராக்ஞ: ஸ்நாதகாசார்ய யோஸ்ததா |**
**நாக்ராமேத்காமதஷ்சாயாம் பப்ருணோ தீக்ஷிதஸ்ய ச || 130**

*தெய்வ விக்கிரகங்களின் நிழலை மிதிக்கவோ தாண்டவோ கூடாது. அவ்வாறே தந்தையுடைய, குருவுடைய, அரசனுடைய, விரதஸ்நாதகனுடைய, ஆசார்யனுடைய யக்ஞம் செய்ய தீட்சை ஏற்றிருப்பவனுடைய நிழல்களையும் தாண்டவும் மிதிக்கவும் கூடாது.*

मध्यन्दिनेऽर्धरात्रे च श्राद्धं भुक्त्वा च साऽमिषम्।
सन्ध्ययोरुभयोश् चैव न सेवेत चतुष्पथम्॥

**மத்யந்திநே அர்த்தராத்ரேச ஷ்ராத்தம் புக்த்வா ச ஸாமிஷம் |**
**ஸந்த்யயோருபயோத்ஷ்சைவ ந ஸேவேத சதுஷ்பதம் || 131**

*நடு மத்தியான வேளையிலும், நடு இரவிலும் ஒரிடத்தில் நெடுநேரம் நிற்கக் கூடாது. சிராத்த போஜனம் சாப்பிட்ட பிறகு நெடுநேரம் அங்கேயே இருக்கக் கூடாது. காலை சந்தியா காலத்திலும் மாலை சந்தியா காலத்திலும் ஒரிடத்தில் நெடுநேரம் நிற்கக் கூடாது. நான்கு வழிகள் கூடுமிடத்திலும் நெடுநேரம் நிற்கக் கூடாது.*

उद्वर्तनमपस्नानं विण्मूत्रे रक्तमेव च।
श्लेष्मनिष्ठ्यूतवान्तानि नाऽधितिष्ठेत् तु कामतः॥

**உத்வர்தநமபஸ்நானம் விண்மூத்ரே ரக்தமேவ ச |**
**ஷ்லேஷ்ம நிஷ்ட்யூதவாந்தாநி நாதிதிஷ்டேத்து காமத: ||** 132

*பொடிகள், நீராடிய தண்ணீர், மல மூத்திரங்கள், ரத்தம், கபம், வாந்தி, மென்று துப்பியது இவைகளை மிதிக்கக் கூடாது.*

वैरिणं नोपसेवेत सहायांश् चैव वैरिणः।
अधार्मिकं तस्करं च परस्यैव च योषितम्॥

**வைரிணம் நோபஸேவேத ஸஹாயம் சைவ வைரிண: |**
**அதார்மிகம் தஸ்கரம் ச பரஸ்த்யைவ ச யோஷிதம் ||** 133

*பகைவன், பகைவனின் நண்பன், அதர்மவான், திருடன், பிறன் மனைவி முதலானோருடன் உறவு வைத்துக் கொள்ளக் கூடாது.*

न हीदृशमनायुष्यं लोके किञ्चन विद्यते।
यादृशं पुरुषस्येह परदारोपसेवनम्॥

**நஹீத்ருஷமநாயுஷ்யம் லோகே கிஞ்சஞ வித்யதே |**
**யாத்ருஷம் புருஷஸ்யேஹ பரதாரோபசேவநம் ||** 134

*பிறர் மனைவியைக் கூடுவதைப் போன்று, ஒருவன் ஆயுளைக் குறைப்பது உலகத்தில் வேறொன்றுமில்லை.*

क्षत्रियं चैव सर्पं च ब्राह्मणं च बहुश्रुतम्।
नाऽवमन्येत वै भूष्णुः कृशानपि कदाचन॥

**க்ஷத்ரியம் சைவ ஸர்பம் ச ப்ராஹ்மணம் ச பஹுஸ்ருதம் |**
**நாவமந்யேத வை பூஷ்ணு: க்ருஷாநபி கதாசந ||** 135

*க்ஷத்ரியனும், பாம்பும், பிராம்மணனும் நிலை தாழ்ந்திருந்த போதும், தான் நல்லபடியாக செல்வ சுகங்களோடு இருக்க வேண்டும் என்று நினைப்பவன் அவர்களை அவமானப்படுத்தக் கூடாது.*

एतत् त्रयं हि पुरुषं निर्दहेदवमानितम्।
तस्मादेतत् त्रयं नित्यं नाऽवमन्येत बुद्धिमान्॥

**ஏதத் த்ரயம் ஹி புருஷம் நிர்தஹேதவமாநிதம் |**
**தஸ்மாதேதத் த்ரயம் நித்யம் நாவமந்யேத புத்திமாந் ||** 136

*இம்மூவரும் தம்மை அவமானப்படுத்தியவரை தகித்து விடுவார்கள். எனவே தனக்கு நன்மையை விரும்பும் புத்திசாலி எக்காலத்திலும் இவர்களை அவமதிக்கக் கூடாது.*

नाऽत्मानमवमन्येत पूर्वाभिरसमृद्धिभिः।
आ मृत्योः श्रियमन्विच्छेन् नैनां मन्येत दुर्लभाम्॥

**நாத்மாநமவமந்யேத பூர்வாபிர ஸம்ருத்திபி: |**
**ஆம்ருத்யோ: ஷ்ரியமந்விச்சேந்நை நாம் மந்யேத துர்லபாம் ||** 137

*தான் செய்த வியாபாரம் போன்றவற்றால் நஷ்டமடைந்து, செல்வமனைத்தையும் இழந்த போதும் தன்னைத் தானே நிந்தித்துக் கொள்ளக் கூடாது. வாழுங் காலம் வரையும் செல்வத்தைச் சம்பாதிக்க முயல வேண்டும். செல்வம் அடைய முடியாதது என்று நினைக்கக் கூடாது.*

सत्यं ब्रूयात् प्रियं ब्रूयान् न ब्रूयात् सत्यमप्रियम्।
प्रियं च नाऽनृतं ब्रूयादेष धर्मः सनातनः॥

**ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் நப்ரூயாத்ஸத்யமப்ரியம் |**
**ப்ரியம் ச நாந்ரும் ப்ரூயாதேஷ தர்மஸ்ஸநாதந: ||** 138

*சத்தியம் பேச வேண்டும். பிரியமானதாகப் பேச வேண்டும். தீங்கு விளைவிக்குமாயின் சத்தியத்தையும், பிரியமானதாக இருந்தாலும் அசத்தியத்தையும் பேசக்கூடாது.*

भद्रं भद्रमिति ब्रूयाद् भद्रमित्येव वा वदेत्।
शुष्कवैरं विवादं च न कुर्यात् केनचित् सह॥

**பத்ரம் பத்ரமிதி ப்ரூயாத் பத்ரமித்யேவ வா வதேத் |**
**சுஷ்கவைரம் விவாதம் ச ந குர்யாத்கேநசித் ஸஹ ||** 139

*எப்போதும் மங்களம் ஏற்படட்டும் என்றே கூறிக் கொண்டிருக்க வேண்டும். அமங்கலமானவற்றையும் மங்கலச் சொல்லால் குறிப்புணர்த்த வேண்டும். யாருடனும் வீண் விவாதம் புரிந்து கொண்டிருக்கக் கூடாது.*

नाऽतिकल्यं नाऽतिसायं नाऽतिमध्यन्दिने स्थिते।
नाऽज्ञातेन समं गच्छेन् नैको न वृषलैः सह॥

**நாதிகல்யம் நாதிசாயும் நாதிமத்யம் திநேஸ்திதே |**
**நாஞாதேந ஸமம் கச்சேத்நைகோ நவ்ருஷலைஸ்ஸஹ ||** 140

*மிகவும் அதிகாலை நேரத்திலும், மாலை பிரதோஷ நேரத்திலும், நடுப்பகல் நேரத்திலும், அறிமுகமில்லாத புதியவனுடனும், பாவியருடனும் பிரயாணம் செய்யக்கூடாது.*

हीनाऽङ्गानतिरिक्ताऽङ्गान् विद्याहीनान् वयोऽधिकान्।
रूपद्रव्यविहीनांश् च जातिहीनांश् च नाऽऽक्षिपेत्॥

**ஹீநாங்கா நதிரிக்தாங்காந் வித்யாஹீநாந் வயோதிகாந் ।**
**ரூபத்ரவ்ய விஹீநாம்ஷ் ச ஜாதிஹீநாம்ஷ்ச நாக்ஷிபேத்॥** **141**

*அங்கஹீனர்கள், அதிக அங்கம் கொண்டவர்கள் (ஆறு விரல் கொண்டவர்கள்), வயோதிகர்கள், அழகற்ற குரூபிகள், ஏழைகள், ஈன ஜாதிக்காரர்கள் முதலானோரை குறை கூறிப் பேசலாகாது.*

न स्पृशेत् पाणिनोच्छिष्टो विप्रो गोब्राह्मणाऽनलान्।
न चाऽपि पश्येदशुचिः सुस्थो ज्योतिर्गणान् दिवि॥

**ந ஸ்ப்ரு ஷேத்பாணிநோச்சிஷ்டோ விப்ரோ கோப்ராஹ்மணா நலாந் ।**
**ந சாபி பஷ்யேதசுசி ஸ்சுஸ்தோ ஜ்யோதிர் கணாந் திவி ॥** **142**

*எச்சிற் கையோடிருக்கும்போது பசுக்களையும் பிராம்மணர் களையும் தொடக் கூடாது.*

*பரிசுத்தியோடில்லாதபோது ஆகாயத்தில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்களைப் பார்க்கக் கூடாது.*

स्पृष्ट्वैतानशुचिर् नित्यमद्भिः प्राणानुपस्पृशेत्।
गात्राणि चैव सर्वाणि नाभिं पाणितलेन तु॥

**ஸ்ப்ருஷ்ட்வைதா நசுசிர்நித்யமத்பி: ப்ராணாநுப ஸ்ருசேத் ।**
**காத்ராணி சைவ சர்வாணி நாபிம் பாணிதலேந து ॥** **143**

*ஒருவேளை பசு அந்தணர்களைத் தொட்டுவிட நேர்ந்தால் ஆசமனம் செய்து நீரால் இந்திரியங்களையும், சிரசையும், புஜங் களையும், முழங்கால்களையும், பாதங்களையும் நாபியையும் தொட வேண்டும்.*

अनातुरः स्वानि खानि न स्पृशेदनिमित्ततः।
रोमाणि च रहस्यानि सर्वाण्येव विवर्जयेत्॥

**அநாதுர: ஸ்வாநி காநி ந ஸ்ப்ருஷேத நிமித்தத: ।**
**ரோமாணி ச ரஹஸ்யாநி ஸர்வாண்யேவ விவர்ஜயேத் ॥** **144**

*அவசியமில்லாமல் தன் இந்திரியங்களைத் தொடக் கூடாது. மர்ம ஸ்தானங்களையும் ரோமங்களையும் தொடக்கூடாது.*

मङ्गलाऽऽचारयुक्तः स्यात् प्रयताऽऽत्मा जितेन्द्रियः।
जपेच् च जुहुयाच् चैव नित्यमग्निमतन्द्रितः॥

**மங்களாசாரயுக்தஸ்யாத் ப்ரயதாத்மா ஜிதேந்த்ரிய: ।**
**ஜபேச் ச ஜுஹுயாச்சைவ நித்யமக்நி மதந்த்ரித: ॥** **145**

மங்களங்களைத் தரக்கூடிய கஸ்தூரி, சந்தனம் முதலானவைகளைத் தரிக்க வேண்டும். குருவுக்குப் பணிவிடை புரிதல் முதலான ஆசாரங்களைச் செய்ய வேண்டும். பரிசுத்த மனத்தோடு புலன்களை அடக்கியவனாக இருக்க வேண்டும். சோம்பலின்றி காயத்ரி ஜபம், அக்னி ஹோத்ரம் முதலானவைகளைச் செய்ய வேண்டும்.

मङ्गलाऽऽचारयुक्तानां नित्यं च प्रयताऽऽत्मनाम्।
जपतां जुह्वतां चैव विनिपातो न विद्यते॥

**மங்களாசாரயுக்தா நாம் நித்யம் ச ப்ரயதாத்மநாம் |**
**ஜபதாம் ஜுஹ்வதாம் சைவ விநிபாதோ ந வித்யதே || 146**

மங்களமான ஆசாரங்களோடு, பரிசுத்தனாக, ஜபங்களையும் ஹோமங்களையும் செய்து கொண்டிருப்பவனுக்கு எப்போதும் உபத்திரவம் ஏற்படாது.

वेदमेव जपेन् नित्यं यथाकालमतन्द्रितः।
तं ह्यस्याऽऽहुः परं धर्ममुपधर्मोऽन्य उच्यते॥

**வேதமேவஜபேந்நித்யம் யதாகாலமதந்த்ரித: |**
**தம் ஹ்யஸ் யாஹு: பரம் தர்மமுபதர்மோ அந்ய உச்யதே || 147**

நித்யானுஷ்டானங்களோடும், வேதங்களை எப்போதும் ஓதுபவனாகவும் இருப்பதே முக்கிய தர்மம். மற்றவை அனைத்தும் சாதாரணமானவை.

वेदाऽभ्यासेन सततं शौचेन तपसैव च।
अद्रोहेण च भूतानां जातिं स्मरति पौर्विकीम्॥

**வேதாப்யாஸேந ஸததம் சௌசேந தபஸைவ ச |**
**அத்ரோஹேண ச பூதாநாம் ஜாதிம் ஸ்மரதி பௌர்விகீம் || 148**

எப்போதும் வேதமோதுவதனாலும், ஆசாரமாக இருப்பதனாலும், தவத்தாலும், உயிர்களுக்குத் துரோகம் நினைக்காமையாலும் தன் முற்பிறவிகளை அறியும் ஞானம் ஏற்படும்.

पौर्विकीं संस्मरञ् जातिं ब्रह्मैवाऽभ्यस्यते पुनः।
ब्रह्माऽभ्यासेन चाऽजस्रमनन्तं सुखमश्नुते॥

**பௌர்விகீம் ஸம்ஸ்மரந் ஜாதிம் ப்ரஹ்மை வாப்யஸ்யதே புந: |**
**ப்ரஹ்மாப்யாஸேந சாஜஸ்ரமநந்தம் சுகமஷ்நுதே || 149**

தன் ஜன்மாந்திரங்களையும், அப்போதைய சுகதுக்கங்களையும், அறிவதனால் மேலும் பிறவியெடுக்காமையை விரும்புவான். அதனால் விடாமல் வேதமோதி பிரம்மத்தை அடைவான்.

सावित्रान् शान्तिहोमांश् च कुर्यात् पर्वसु नित्यशः।
पितृंश् चैवाऽष्टकास्वर्चेन् नित्यमन्वष्टकासु च॥

**ஸாவித்ராந் ஷாந்தி ஹோமாம்ஷ் ச குர்யாத் பர்வசு நித்யஷ: |**
**பித்ரும்ஷ்சைவ வாஷ்டகாஸ்வர்சேந்நித்யமந்வஷ்டகாசு ச || 150**

அமாவாசை, பௌர்ணமிகளில் சாவித்ரி முதலான ஹோமங்களையும், சாந்தி ஹோமங்களையும் செய்ய வேண்டும்.

ஆக்ரஹாயணத்துக்கு அடுத்து மூன்று கிருஷ்ணாஷ்டமிகளிலும் அஷ்டகம், அன்வஷ்டகம் என்னும் சிராத்தங்கள் செய்து பித்ரு தேவர்களை மகிழ்விக்க வேண்டும்.

दूरादावसथान् मूत्रं दूरात् पादाऽवसेचनम्।
उच्छिष्टाऽन्ननिषेकं च दूरादेव समाचरेत्॥

**தூராதாவத தாந்மூத்ரம் தூராத்பாதாவசேசநம் |**
**உச்சிஷ்டான்னம் நிஷேகம் ச தூராதேவ ஸமாசரேத் || 151**

வீட்டிற்கு தென்மேற்கே அம்பு எய்தால் விழும் தூரத்தில் மலஜலங்களைக் கழிப்பது, கால்களை அலம்புவது, சாப்பிட்ட மிகுதிகளைப் போடுவது, கழிவுகளைப் போடுவது முதலானவற்றை செய்ய வேண்டும்.

मैत्रं प्रसाधनं स्नानं दन्तधावनमञ्जनम्।
पूर्वाह्ण एव कुर्वीत देवतानां च पूजनम्॥

**மைத்ரம் ப்ரசாதநம் ஸ்நாநம் தந்ததாவநமஞ்ஜநம் |**
**பூர்வாஹ்ண ஏவ குர்வீத தேவதாநாம் ச பூஜநம் || 152**

பல் தேய்த்தல், நீராடுதல், அலங்கரித்துக் கொள்ளல், பூஜை செய்தல் இவைகளை மத்தியான நேரத்துக்குள் முடித்துக் கொள்ள வேண்டும்.

दैवतान्यभिगच्छेत् तु धार्मिकांश् च द्विजोत्तमान्।
ईश्वरं चैव रक्षार्थं गुरूनेव च पर्वसु॥

**தைவதாந்யபிகச்சேத்து தார்மிகாம்ஷ்ச த்விஜோத்தமாந் |**
**ஈஷ்வரம் சைவ ரக்ஷார்தம் குரூநேவ ச பர்வசு || 153**

அமாவாசை, பௌர்ணமி தினங்களில் ஆலயங்களுக்குச் சென்று தெய்வங்களை வழிபட வேண்டும். தன் ரட்சணத்துக்காக ராஜாவையும், தர்மாத்மாக்களான த்விஜோத்தமர்களையும், பெற்றோர், குரு முதலானோரையும் தரிசனம் செய்ய வேண்டும்.

अभिवादयेद् वृद्धांश् च दद्याच् चैवाऽऽसनं स्वकम्।
कृताऽञ्जलिरुपाऽऽसीत गच्छतः पृष्ठतोऽन्वियात्॥

**அபிவாதயே த்வ்ருத்தாம்ஷ்ச தத்யாச்சை வாஸநம் ஸ்வகம் |**
**க்ருதாஞ்சலிருபாசீத கச்சத: ப்ருஷ்டதோஅந்வியாத் ||** **154**

வீட்டிற்கு வந்த பெரியோரை வணங்க வேண்டும். தனது ஆசனத்தைக் கொடுக்க வேண்டும். கைகூப்பியபடி அவர்கள் அருகில் அமர வேண்டும். அவர்கள் நடந்தால் பின்தொடர்ந்து செல்ல வேண்டும்.

श्रुतिस्मृत्युदितं सम्यङ् निबद्धं स्वेषु कर्मसु।
धर्ममूलं निषेवेत सदाचारमतन्द्रितः॥

**ஷ்ருதிஸ்ம்ருத்யுதிதம் ஸம்யக்நிபத்தம் ஸ்வேசு கர்மசு |**
**தர்மமூலம் நிஷேவேத ஸதாசாரமதந்த்ரித: ||** **155**

வேதங்களிலும், சுருதிகளிலும் கூறப்பட்ட, ஸ்வகர்மாக்களையும், தர்மத்துக்கு மூலமாக விளங்கும் ஆசார அனுஷ்டானங்களையும் சோம்பலின்றி நடத்த வேண்டும்.

आचाराल् लभते ह्यायुराचारादीप्सिताः प्रजाः।
आचाराद् धनमक्षय्यमाचारो हन्त्यलक्षणम्॥

**ஆசாராத் லபதேஹ்யாயு: ஆசாராதீப்சிதா: ப்ரஜா: |**
**ஆசாராத் தநமக்ஷய்ய மாசாரோஹ்யந்த்யலக்ஷணம் ||** **156**

ஆசாரத்தால் தீர்க்க ஆயுள் கிடைக்கும். ஆசாரத்தால் விரும்பிய புத்ர பௌத்திரர்கள் கிடைப்பார்கள். ஆசாரத்தால் குறைவற்ற செல்வம் கிடைக்கும். ஆசாரத்தோடு இருப்பவனுக்கு அசுபங்களும், தகாதவைகளும் ஏற்படா.

दुराचारो हि पुरुषो लोके भवति निन्दितः।
दुःखभागी च सततं व्याधितोऽल्पायुरेव च॥

**துராசாரோஹி புருஷோ லோகே பவதி நிந்தித: |**
**துக்கபாகீ ச ஸததம் வ்யாதிதோ அல்பாயுரேவ ச ||** **157**

துராசாரத்தோடு இருப்பவன் உலக நிந்தைக்கு ஆளாவான். ஒன்று மாற்றி ஒன்றாக எப்போதும் துக்கங்களை அடைந்தும், வியாதியஸ் தனாகவும் இருந்து அற்பாயுளில் மாள்வான்.

सर्वलक्षणहीनोऽपि यः सदाचारवान् नरः।
श्रद्दधानोऽनसूयश् च शतं वर्षाणि जीवति॥

**ஸர்வலக்ஷணஹீநோ அபி யஸ்ஸதா சார வாந்நர: |**
**ஷ்ரத்ததாநோ அநக்ஷயுஷ்ச ச தம் வர்ஷாணி ஜீவதி ||** **158**

எந்த லட்சணமும் இல்லாதவனாயினும், எப்போதும் ஆசாரத்தைக் கடைப்பிடிப்பவனாகவும், சிரத்தையோடு செய்பவனாகவும், பொறாமை யற்றவனாகவும் இருந்தால் அவன் நூறாண்டு வாழ்வான்.

यद्यत् परवशं कर्म तत्तद् यत्नेन वर्जयेत्।
यद्यदात्मवशं तु स्यात् तत्तत् सेवेत यत्नतः॥

**யத்யத்பரவஷம் கர்ம தத்தத் யத்நேந வர்ஜயேத் |**
**யத்யதாத்மவஷம் து ஸ்யாத் தத்தத் ஸேவேத யத்நத: || 159**

எந்தெந்த காரியங்கள் பிறரை அண்டி நிறைவேற்றிக் கொள்ளக் கூடியவையோ, அவைகளை முயற்சி செய்து விட்டுவிடவேண்டும்.

எந்தெந்த காரியங்கள் தன் வசத்தில் இருக்கின்றனவோ, அவற்றை முயற்சி செய்து நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்.

सर्वं परवशं दुःखं सर्वमात्मवशं सुखम्।
एतद् विद्यात् समासेन लक्षणं सुखदुःखयोः॥

**ஸர்வம் பரவஷம் துக்கம் ஸர்வமாத்மவஷம் ஸுகம் |**
**ஏதத் வித்யாத்ஸமாசேந லக்ஷணம் சுகதுக்கயோ: || 160**

பிறர் வசத்திலிருக்கும் எதுவும் துக்ககரம். தன் வசத்திலிருக்கும் எதுவும் சுககரம். இவையே சுக துக்கங்களுக்குக் காரணம் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

यत् कर्म कुर्वतोऽस्य स्यात् परितोषोऽन्तरात्मनः।
तत् प्रयत्नेन कुर्वीत विपरीतं तु वर्जयेत्॥

**யத்யத்கர்ம குர்வதோ அஸ்யஸ்யாத் பரிதோஷோ அந்தராத்மந: |**
**தத்ப்ரயத்நேந குர்வீத விபரீதம் து வர்ஜயேத் || 161**

எந்தக் காரியம் செய்யும்போது, தன் மனத்துக்கு ஆனந்தம் ஏற்படுமோ, அந்தக் காரியத்தை, சாஸ்திர விரோதமின்றி, முயற்சியோடு செய்ய வேண்டும். விபரீதமாகத் தோன்றுவதைச் செய்யக் கூடாது.

आचार्यं च प्रवक्तारं पितरं मातरं गुरुम्।
न हिंस्याद् ब्राह्मणान् गाश् च सर्वांश् चैव तपस्विनः॥

**ஆசார்யம் ச ப்ரவக்தாரம் பிதரம் மாதரம் குரும் |**
**ந ஹிம்ஸ்யாத் ப்ராஹ்மணாந் காஷ்ச ஸர்வாந்ஷ்சைவ தபஸ்விந: || 162**

ஆசார்யன், உபாத்யாயன், தந்தை, தாய், குரு, பிராம்மணர்கள், தபஸ்விகள் முதலானோர் மனத்தை நோகடிக்கக் கூடாது. பசுக்களுக்கு சிறு துன்பமும் விளைவிக்கக் கூடாது.

नास्तिक्यं वेदनिन्दां च देवतानां च कुत्सनम्।
द्वेषं दम्भं च मानं च क्रोधं तैक्ष्ण्यं च वर्जयेत्॥

**நாஸ்திக்யம் வேதநிந்தாம்ச தேவதாநாம் ச குத்ஸநம் |**
**த்வேஷம் தம்பம் ச மௌனம் ச க்ரோதம் தைக்ஷ்ணம் ச வர்ஜயேத் || 163**

*நாஸ்திகம் பேசுவது, வேத நிந்தை, தெய்வங்களைத் தூற்றுவது, பகை, துவேஷம், டம்பம், கோபம், கொடூரம் முதலான குணங்களை விலக்க வேண்டும்.*

परस्य दण्डं नोद्यच्छेत् क्रुद्धो नैव निपातयेत्।
अन्यत्र पुत्राच् छिष्याद् वा शिष्ट्यर्थं ताडयेत् तु तौ॥

**பரஸ்ய தண்டம் நோத்யச்சேத் க்ருத்தோ நைவ நிபாதயேத் |**
**அந்யத்ர புத்ராச் சிஷ்யாத்வா ஷிஷ்ட்யர்த்தம் தாடயேத் து தௌ || 164**

*பிறரை அடிப்பதற்காகத் தண்டத்தை ஓங்கக்கூடாது. ஓங்கிய பிரம்பை (தண்டத்தை) கோபத்தோடு வீசியெறியக் கூடாது. மனைவி, பணியாள் போன்றோர் குற்றமிழைத்தால், அவர்களை மட்டும் அந்த குற்றத்துக்குத் தக்கபடி சாட்டை, பிரம்பு போன்ற வற்றால் அடிக்கலாம்.*

ब्राह्मणायाऽवगूर्यैव द्विजातिर् वधकाम्यया।
शतं वर्षाणि तामिस्रे नरके परिवर्तते॥

**ப்ராஹ்மணாயாவ கூர்வைவ த்விஜாதிர்வத காம்யயா |**
**ஷதம் வர்ஷாணி தாமிஸ்ரே நரகே பரிவர்ததே || 165**

*ஒரு அந்தணனைக் கொல்ல ஆயுதமெடுத்தவன் அந்தணனே ஆனாலும் நூறு வருடங்கள் தாமிஸ்ரம் என்னும் நரகத்தில் உழல்வான்.*

ताडयित्वा तृणेनाऽपि संरम्भान् मतिपूर्वकम्।
एकविंशतिमाजातीः पापयोनिषु जायते॥

**தாடயித்வா த்ருணேநாபிமாரம்பாந் மதிபூர்வகம் |**
**ஏகவிம்ஷதிமாஜாதீ: பாபயோநிசு ஜாயதே || 166**

*பிராம்மணனை அறிவுபூர்வமாக புல்லால் அடித்தாலும் இருபத்தொரு ஜன்மங்கள் நாய் முதலான ஈனப் பிறப்புகளை எடுக்க வேண்டி வரும்.*

अयुध्यमानस्योत्पाद्य ब्राह्मणस्याऽसृगङ्गतः।
दुःखं सुमहदाप्नोति प्रेत्याऽप्राज्ञतया नरः॥

**அயுத்யமாநஸ்யோத்பாத் ப்ராஹ்மணஸ்யாஸ்ரு கங்கத: |**
**து:கம் ச மஹதாப்நோதி ப்ரேத்யாஅப்ராக்ஞதயா நர: || 167**

தன்னோடு போர் புரிய வராத பிராம்மணன் உடலிலிருந்து ரத்தம் பெருகுமாறு தாக்கியவன், அந்தப் பிறவிக்குப் பின் பெரும் துன்பங்களுக்கு ஆளாவான்.

शोणितं यावतः पासून् सङ्गृह्णाति महीतलात्।
तावतोऽब्दानमुत्राऽन्यैः शोणितोत्पादकोऽद्यते॥

**ஷோணிதம் யாவத: பாம்ஸூந் ஸம்க்ருஹ்ணாதி மஹீதலாத் |**
**தாவதோ அப்தாநமுத்ரா ந்யைஷ்ஷோணி தோத்பாதகோ அத்யதே || 168**

அடிபட்ட பிராம்மணனின் உடலிலிருந்து ஒழுகிய ரத்தம் மண்ணில் விழுந்து எத்தனை புழுதிகளை நனைக்குமோ அத்தனை வருட காலம், இவன் இறந்த பிறகு இவன் ரத்தத்தை நரிகள் முதலானவை உறிஞ்சும்.

न कदाचिद् द्विजे तस्माद् विद्वानवगुरेदपि।
न ताडयेत् तृणेनाऽपि न गात्रात् स्रावयेदसृक्॥

**நகதாசித்த்விஜே தஸ்மாத் வித்வாநவகுரேதபி |**
**ந தாடயே த்ருணேநாபி ந காத்ரா த்ஸ்ராவயேதஸ்ருக்|| 169**

இதை அறிந்தவன் பிராம்மணனை நிந்திக்கக் கூடாது. புல்லால் கூட அடிக்கக் கூடாது. ரத்தம் வர அவனை அடிக்கக் கூடாது.

अधार्मिको नरो यो हि यस्य चाऽप्यनृतं धनम्।
हिंसारतश् च यो नित्यं नेहाऽसौ सुखमेधते॥

**அதார்மிகோ நரோயோ ஹி யஸ்ய சாப்யந்ருதம் தநம் |**
**ஹிம்ஸாரதஷ்ச யோநித்யம் நேஹாஸௌ சுகமேததே || 170**

சாஸ்திர விரோதமானதைச் செய்பவனும், பொய்சாட்சி கூறி அதனால் பணம் வாங்கிப் பிழைப்பவனும், பிறரை துன்புறுத்து வதையே எப்போதும் செய்பவனும் இவ்வுலகில் சுகமாக வாழ முடியாது.

न सीदन्नपि धर्मेण मनोऽधर्मे निवेशयेत्।
अधार्मिकाणां पापानामाशु पश्यन् विपर्ययम्॥

**நஸீதந்நபி தர்மேஷு மநோ அதர்மே நிவேஷயேத் |**
**அதார்மிகாணாம் பாபாநாமாஷு பஷ்யந் விபர்யயம் || 171**

தான் தர்மவானாக இருந்து வறுமையில் கஷ்டப்படுபவன், தர்மமற்ற வழிகளில் நடப்பவன் சௌக்கியமாக வாழ்வதைப் பார்த்து மனம் தடுமாறாமல், கடைசியில் அவன் அழிவான் என்பதை அறிந்து கொண்டு, அதர்ம வழியில் தன் மனத்தைச் செலுத்தாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

नाऽधर्मश् चरितो लोके सद्यः फलति गौरिव।
शनैरावर्तमानस् तु कर्तुर् मूलानि कृन्तति॥

**நாதர்மஷ்சரிதோ லோகே ஸத்ய: பலதி கௌரிவ |**
**ஷநைர் ராவர்த்தமாநஸ்து கர்துர் மூலாநி க்ருந்ததி ||** 172

அதர்மங்கள் செய்பவன், அதற்கான பாவபலன்களை உடனே அடைந்து விடுவதில்லை. ஆனால் காலம் கனியும்போது அவன் அழிவான்.

यदि नाऽऽत्मनि पुत्रेषु न चेत् पुत्रेषु नप्तृषु।
न त्वेव तु कृतोऽधर्मः कर्तुर् भवति निष्फलः॥

**யதி நாஆத்மநி புத்ரேசு நசேத்புத்ரேசு நப்த்ருஷு |**
**நத்வேவ து க்ருதோ அதர்ம: கர்துர்பவதி நிஷ்பல: ||** 173

அதர்மவான் அதன் பலனை, அழிவை அடையாவிட்டாலும், அவன் புத்திரர்களோ, பௌத்திரர்களோ அல்லது அவர்களது பிள்ளைகளோ அந்தப் பலனை அடைந்து அழிவார்கள். ஒரு நாளும் ஒருவன் செய்த அதர்மம் அதன் பலனைத் தராது போகாது.

अधर्मेणैधते तावत् ततो भद्राणि पश्यति।
ततः सपत्नाञ् जयति समूलस् तु विनश्यति॥

**அதர்மேணைததே தாவத்ததோ பத்ராணி பஷ்யதி |**
**ததஸ்ஸபத்நாந் ஜயதி ஸமூலஸ்து விநஷ்யதி ||** 174

ஒருவன் செய்த அதர்மங்கள் பரிபக்குவ நிலையை அடையும் வரை, அவன் போக பாக்கியங்களோடு வாழ்வான். தன்னைவிடக் குறைந்த சத்ருக்களை வெல்வான். எப்போது அவன் செய்த பாபங்கள் பரிபக்குவமடையுமோ அப்போது அவன் தன் சொத்து சுகம் பிள்ளைகளோடு தானும் அழிவான்.

सत्यधर्माऽऽर्यवृत्तेषु शौचे चैवाऽऽरमेत् सदा।
शिष्यांश् च शिष्याद् धर्मेण वाग्बाहूदरसंयतः॥

**ஸத்ய தர்மார்யவ்ருத்தேஷு சௌசே சைவாரமேத் ஸதா |**
**சிஷ்யாம்ஷ்ச சிஷ்யாத்தர்மேண வாக்பாஹூதர ஸம்யத: ||** 175

சத்தியம், தர்மம், நல்லொழுக்கம், தூய்மை இவற்றில் எப்போதும் சிரத்தை கொண்டிருக்க வேண்டும். மனைவி மக்கள், வேலையாட்கள், சிஷ்யர்கள் ஆகியோர் சத்தியம், தர்மம், நல்லொழுக்கம், தூய்மை இவற்றை மீறும்போது தண்டிக்க வேண்டும். வாக்கு, கைகள், வயிறு இவற்றைக் கட்ட வேண்டும். அதாவது வாக்கால் சத்தியம் மட்டுமே பேச வேண்டும். கைகளைக் கொண்டு எந்த அதர்மமும் செய்யக்கூடாது. கிடைத்ததை உண்டு திருப்தியோடிருக்க வேண்டும்.

परित्यजेदर्थकामौ यौ स्यातां धर्मवर्जितौ।
धर्मं चाऽप्यसुखोदर्कं लोकविक्रुष्टमेव च॥

**பரித்யஜேதர்த்தகாமௌ யௌ ஸ்யாதாம் தர்மவர்ஜிதௌ |**
**தர்மம் சாப்யசுகோதர்க்கம் லோகவிக்ருஷ்டமேவ ச || 176**

எந்தப் பொருளும் இன்பமும் தர்மத்துக்கு விரோதமான வைகளோ அத்தகைய பொருளையும் இன்பத்தையும் பெற நினைக்கக் கூடாது. உலகத்தோரால் நிந்திக்கப்பட்ட காரியத்தைச் செய்யக்கூடாது.

न पाणिपादचपलो न नेत्रचपलोऽनृजुः।
न स्याद् वाक्चपलश् चैव न परद्रोहकर्मधीः॥

**ந பாணிபாதசபலோ ந நேத்ரசபலோ அந்ருஜு: |**
**நஸ்யாத் வாக்சபலஷ்சைவ ந பரத்ரோஹகர்மதீ: || 177**

கைகளால் திருடுதல் முதலானவற்றைச் செய்யக் கூடாது. கால்களால் பயனில்லாமல் வெட்டியாகத் திரிந்து கொண்டிருக்கக் கூடாது.

கண்களால் அடுத்த பெண்களை சபலத்தோடு பார்க்கக் கூடாது.

வாக்கால் பிறருக்கு எந்த வகையிலும் தீங்கு விளைவிக்கக் கூடாது. கபடம் கூடாது. யாருக்கும் துரோகம் நினைக்கக் கூடாது.

येनाऽस्य पितरो याता येन याताः पितामहाः।
तेन यायात् सतां मार्गं तेन गच्छन् न रिष्यते॥

**யேநாஸ்ய பிதரோ யாதா யேநயாதா: பிதாமஹா: |**
**தேந யாயாத்ஸதாம் மார்கம்தே ந கச்சந்நரிஷ்யதே || 178**

எந்தத் தர்மத்தை குலமூத்தோர் கடைப்பிடித்தார்களோ, எந்தத் தர்மத்தை பாட்டனார்கள் கடைப்பிடித்தார்களோ, அந்த ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இவ்வாறு கடைப் பிடிப்பதனால் குறையற்ற வாழ்வு வாழலாம்.

ऋत्विक्पुरोहिताऽऽचार्यैर् मातुलाऽतिथिसंश्रितैः।
बालवृद्धाऽऽतुरैर् वैद्यैर् ज्ञातिसम्बन्धिबान्धवैः॥

**ருத்விக் புரோஹிதா சார்யைர் மாதுலாதி திஸம்ஷ்ரிதை: |**
**பாலவ்ருத்தாதுரைர்வைத்யைர் ஞாதி ஸம்பந்திபாந்தவை: || 179**

ருத்விக், புரோகிதர், ஆசார்யர், தாய்மாமன், அதிதிகள், வேலை யாட்கள், சிறுவர்கள், முதியோர்கள், நோயாளிகள், வைத்தியர்கள், பங்காளிகள், சம்பந்திகள், பந்துக்கள்...

मातापितृभ्यां जामीभिर् भ्रात्रा पुत्रेण भार्यया।
दुहित्रा दासवर्गेण विवादं न समाचरेत्॥

**மாதாபித்ருப்யாம் ஜாமீபிர் ப்ராத்ரா புத்ரேண பார்யயா |**
**துஹித்ரா தாசவர்கேண விவாதம் ந சமாசரேத் || 180**

தாய் தந்தையர், உடன்பிறந்தோர், மருமகள்கள், பிள்ளைகள், மனைவி, மகள், அடிமை வர்க்கத்தார் - இவர்களுடன் விவாதம் செய்யலாகாது.

एतैर् विवादान् सन्त्यज्य सर्वपापैः प्रमुच्यते।
एभिर् जितैश् च जयति सर्वाल् लोकानिमान् गृही॥

**ஏதைர் விவாதாந் ஸம்த்யஜ்ய ஸர்வபாபை: ப்ரமுச்யதே |**
**ஏபிர்ஜிதைஷ்ச ஜயதி ஸர்வாந் லோகாந் இமாந் க்ருஹீ || 181**

இவ்வாறு இவர்களுடன் சண்டையிடாமல் வாழ்பவன் சகல பாபங்களிலிருந்தும் விடுதலையடைகிறான். வாழ்நாளுக்குப் பிறகு சிறந்த உலகங்களை அடைகிறான்.

आचार्यो ब्रह्मलोकेशः प्राजापत्ये पिता प्रभुः।
अतिथिस् त्विन्द्रलोकेशो देवलोकस्य चर्त्विजः॥

**ஆசார்யோ ப்ரஹ்மலோகேஷ: ப்ராஜாபத்யே பிதா ப்ரபு: |**
**அதிதிஸ்த்விந்த்ரலோகேஷோ தேவலோகஸ்ய சரித்விஜ: || 182**

ஆசார்யனுடன் விவாதம் புரியாமல் இருக்கும் கிருஹஸ்தனுக்குப் பிரம்மலோகம் கிடைக்கும்.

தந்தையுடன் விவாதம் புரியாமல் இருக்கும் கிருஹஸ்தனுக்குப் பிராஜாபத்ய லோகம் கிடைக்கும்.

அதிதியுடன் விவாதம் புரியாமல் இருக்கும் கிருஹஸ்தனுக்கு இந்திரலோகம் கிடைக்கும். -

ருத்விக்குகளுடன் விவாதம் புரியாமல் இருக்கும் கிருஹஸ்தனுக்குத் தேவலோகம் கிடைக்கும்.

जामयोऽप्सरसां लोके वैश्वदेवस्य बान्धवाः।
सम्बन्धिनो ह्यपां लोके पृथिव्यां मातृमातुलौ॥

**ஜாமயோ அப்ஸரசாம் லோகே வைஷ்வதேவஸ்ய பாந்தவா: |**
**ஸம்பந்திநோஹ்யபாம் லோகே ப்ருதிவ்யாம் மாத்ருமாதுலௌ || 183**

உடன்பிறந்தாருடன் மற்றும் மருமகள்களுடன் விவாதம் புரியாமல் இருப்பவன் அப்சர லோகத்தை அடைவான்.

பந்துக்களுடன் விவாதம் புரியாமல் இருப்பவன் விஸ்வேதேவர்களின் லோகத்தை அடைவான்.

சம்பந்தி வர்க்கத்தாருடன் விவாதம் புரியாமல் இருப்பவன் வருண லோகத்தை அடைவான்.

தாய்மாமனுடன் விவாதம் புரியாமல் இருப்பவன் பூலோகத்தை அடைவான்.

**आकाशेशास् तु विज्ञेया बालवृद्धकृशाऽऽतुराः ।**
**भ्राता ज्येष्ठः समः पित्रा भार्या पुत्रः स्वका तनुः ॥**

**ஆகா ஷேஷாஸ்து விக்ஞேயா பாலவ்ருத்த க்ருஷாதுரா: |**
**ப்ராதா ஜ்யேஷ்டஸ்ஸம: பித்ரா பார்யா புத்ர: ஸ்வகாதநு: || 184**

சிறுவர்கள், வயோதிகர்கள், ஏழைகள், வியாதியஸ்தர்கள் இவர்களுடன் விவாதம் புரியாமல் இருந்தால் விண்ணுலகை அடைவான்.

தமையன் தந்தைக்கு நிகரானவன். எனவே தமையனுடன் விவாதம் புரியாமல் இருப்பவன் பிரஜாபதி லோகத்தை அடைவான்.

இனி, மனைவியும் மகனும் தன்னுடைய சொந்த சரீரமே போன்றவர்கள். அவர்களுடன் விவாதம் செய்வது என்பது தன்னுடன் தானே சண்டையிட்டுக் கொள்வது போன்றது.

**छाया स्वो दासवर्गश् च दुहिता कृपणं परम् ।**
**तस्मादेतैरधिक्षिप्तः सहेताऽसञ्ज्वरः सदा ॥**

**சாயா ஸ்வோ தாஸவர்கஷ்ச துஹிதா க்ருபணம் பரம் |**
**தஸ்மாதேதைரதிக்ஷிப்த: ஸஹேதாஸஞ்ஜ் வரஸ்ஸதா || 185**

ஏவலாட்கள் தன் நிழல் போன்றவர்கள். மகளோ அன்பாகப் பேண வேண்டியவள். இவர்கள் எப்போதாவது தூஷித்தாலும், அதைப் பொறுத்துக் கொண்டு அவர்களுடன் விவாதம் செய்யலாகாது.

**प्रतिग्रहसमर्थोऽपि प्रसङ्गं तत्र वर्जयेत् ।**
**प्रतिग्रहेण ह्यस्याऽऽशु ब्राह्मं तेजः प्रशाम्यति ॥**

**ப்ரதிக்ரஹ ஸமர்தோ அபி ப்ரஸங்கம் தத்ர வர்ஜயேத் |**
**ப்ரதிக்ரஹேண ஹ்யஸ்யாஷு ப்ராஹ்மம் தேஜ: ப்ரஷாம்யதி || 186**

கிருஹஸ்தன் தானம் வாங்குவதற்குத் தக்க பாத்திரமாக இருந்தாலும், மீண்டும் மீண்டும் தானம் வாங்குவதிலேயே விருப்பத் தோடிருக்கக் கூடாது. தானம் வாங்குவதால் பிரம்ம தேஜஸ் குறைவுறும். எனவே தேவைக்குத் தக்க அளவு தானம் வாங்க வேண்டும்.

न द्रव्याणामविज्ञाय विधिं धर्म्यं प्रतिग्रहे।
प्राज्ञः प्रतिग्रहं कुर्यादवसीदन्नपि क्षुधा॥

**ந த்ரவ்யாணா மவிக்ஞாய விதிம் தர்ம்யம் ப்ரதிக்ரஹே |**
**ப்ராக்ஞ: ப்ரதிக்ரஹம் குர்யாதவஸீதந்நபி க்ஷுதா || 187**

திரவியங்களைத் தானம் வாங்கும்போது, தர்ம சாஸ்திரம் கூறியிருப்பதை நன்கு தெரிந்து கொண்டு, வாங்கத்தக்கவை என்று தர்ம சாஸ்திரம் கூறியிருப்பவற்றை மட்டும் வாங்க வேண்டும். தகாதது என்று கூறியிருக்கும் வஸ்துக்களைப் பசியால் துடிக்கும்போது கூட வாங்கக் கூடாது.

हिरण्यं भूमिमश्वं गामन्नं वासस् तिलान् घृतम्।
प्रतिगृह्णन्नविद्वांस् तु भस्मीभवति दारुवत्॥

**ஹிரண்யம் பூமிமஷ்வம் காமந்நம் வாசஸ்திலாந் க்ருதம் |**
**ப்ரதி க்ருஹ்ணந்நவித்வாம்ஸ்து பஸ்மீபவதி தாருவத் || 188**

பொன், பூமி, குதிரை, பசு, அன்னம், வஸ்திரம், எள், நெய் இவைகளைத் தகுதியற்றவன் தானம் பெற்றால் காய்ந்த விறகு தீப்பற்றி எரிவதைப் போன்று பஸ்மமாவான்.

हिरण्यमायुरन्नं च भूर् गौश् चाप्योषतस् तनुम्।
अश्वश् चक्षुस् त्वचं वासो घृतं तेजस् तिलाः प्रजाः॥

**ஹிரண்ய மாயுரந்நம் ச பூர்கௌஷ்சாப்யோ ஷதஸ்தநும் |**
**அஸ்வஷ்சக்ஷுஸ்த்வசம் வாஸோ க்ருதம் தேஜஸ்திலா: ப்ரஜா: || 189**

தங்க தானம் ஆயுளைக் குறைக்கும். அன்னம், பூமி, பசு முதலானவைகள் தேகத்தைத் தகிக்கும். குதிரை தானம் கண் பார்வையைக் கெடுக்கும். வஸ்திரதானம் தோலை தகிக்கும். நெய் தானம் தேஜஸை அழிக்கும். எள் தானம் சந்ததியை நசிக்கச் செய்யும்.

अतपास् त्वनधीयानः प्रतिग्रहरुचिर् द्विजः।
अम्भस्यश्मप्लवेनेव सह तेनैव मज्जति॥

**அதபா ஸ்த்வநதீயாந: ப்ரதிக்ரஹ ருசிர்த்விஜ: |**
**அம்பஸ்யஷ்மப்ளவேநேவ ஸஹ தேநைவ மஜ்ஜதி || 190**

கல் தோணியில் ஏறி ஆற்றைக் கடக்க நினைப்பவன், தோணியோடு கூட தானும் மூழ்கிப் போவான். அவ்வாறே, தவமும் வித்யையுமற்ற பிராம்மணன் ஆசையால் தானம் வாங்கினால், தகுதியற்றவன் தானம் பெற்றதால் ஏற்படும் பாவத்தை அடைந்து நரகத்தில் வீழ்வான்.

तस्मादविद्वान् बिभियाद् यस्मात्तस्मात् प्रतिग्रहात्।
स्वल्पकेनाऽप्यविद्वान् हि पङ्के गौरिव सीदति॥

**தஸ்மாத் அவித்வான் பிபியாத்யஸ்மாத்தஸ்மாத் ப்ரதிக்ரஹாத் |**
**ஸ்வல்பகே நாப்யவித்வாந் ஹி பங்கேகௌரிவ சீததி ||** 191

*தான் வாங்கிய தானத்தின் பாப பலனைப் போக்கிக் கொள்ள சக்தியற்ற அறிவிலி, சிறிதளவே தானம் வாங்கினாலும் சேற்றில் அகப்பட்ட பசுவைப் போன்று நரகத்தில் வீழ்வான்.*

न वार्यपि प्रयच्छेत् तु वैडालव्रतिके द्विजे।
न बकव्रतिके विप्रे नाऽवेदविदि धर्मवित्॥

**ந வார்யபி ப்ரயச்சேத்து பைடாலவ்ரதிகே த்விஜே |**
**நபகவ்ரதிகே விப்ரே நாவேதவிதி தா்மவித் ||** 192

*தா்மம் அறிந்தவன் பைடால (பூனை) விரதனான த்விஜனுக்கும், பக (கொக்கு) விரதனான பிராம்மணனுக்கும், வேதாத்யயனம் செய்யாதவனுக்கும் வெறும் தண்ணீரைக்கூட தானம் கொடுக்கக் கூடாது. (அதாவது பூனையைப் போன்றும் கொக்கைப் போன்றும் குணம் கொண்டவனுக்குக் கொடுக்கக் கூடாது.)*

त्रिष्वप्येतेषु दत्तं हि विधिनाऽप्यर्जितं धनम्।
दातुर् भवत्यनर्थाय परत्राऽऽदातुरेव च॥

**த்ரிஷ்வப்யேதேஷு தத்தம் ஹி விதிநா அப்யா்ஜிதம் தநம் |**
**தாதுா்பவத்யநா்தாய பரத்ரா தாதுரேவ ச ||** 193

*இம்மூவருக்கும் கொடுக்கப்பட்ட தானம் நியாயமான முறையில் சம்பாதித்தாக இருந்தாலும்கூட, கொடுத்தவனையும், வாங்கியவனையும் நரகத்தில் தள்ளிவிடும்.*

यथा प्लवेनौपलेन निमज्जत्युदके तरन्।
तथा निमज्जतोऽधस्तादज्ञौ दातृप्रतीच्छकौ॥

**யதா ப்ளவே நௌபலேந நிமஜ்ஜத்யுதகே தரந் |**
**ததா நிமஜ்ஜதோ அதஸ்தாதக்ஞௌதாத் ருப்ரதீச்ச கௌ ||** 194

*கல் தோணியில் ஏறி தண்ணீரைத் தாண்ட நினைப்பவன் தோணியோடு தானும் நீரில் மூழ்குவதைப் போன்று, இத்தகு தானம் கொடுத்தவனும், தானம் வாங்கியவனும் நரகத்தில் வீழ்கிறார்கள்.*

धर्मध्वजी सदा लुब्धश् छाद्मिको लोकदम्भकः।
वैडालव्रतिको ज्ञेयो हिंस्रः सर्वाऽभिसन्धकः॥

**தா்மத்வஜீ ஸதா லுப்தஷ்சத்மிகோ லோகதம்பக: |**
**பைடால வ்ரதிகோ ஞேயோ ஹிம்ஸ்ரஸ்ஸா்வாபிஸந்தக: ||** 195

பலபேர் முன்னிலையில் தர்மம் செய்து தானாகவும், பிறரைக் கொண்டும் அதைப் பரப்புபவன் 'தர்மத்வஜி' எனப்படுவான். இப்படிப்பட்டவனும், பிறர் பொருளில் ஆசை வைப்பவனும், கபடமாக நடப்பவனும், வஞ்சகனும், பிறரை ஹிம்சிக்கும் சுபாவம் கொண்ட வனும், பிறர் புகழைப் பொறுக்காமல் அனைவரையும் தூற்றுபவனும் - ஆக இத்தனை பேருக்கும் 'பைடாலவிரதிகன்' என்றுதான் பெயர்.

अधोदृष्टिर् नैष्कृतिकः स्वार्थसाधनतत्परः।
शठो मिथ्याविनीतश् च बकव्रतचरो द्विजः॥

**அதோ த்ருஷ்டிர்நைஷ்க்ருதிக: ஸ்வார்தஸாதந தத்பர: |**
**ஷடோ மித்யாவிநீதஷ்ச பகவ்ரதசரோ த்விஜ: || 196**

தான் பணிவுடன் இருப்பதைப் போல் காட்டிக் கொண்டு நடிப்பவன், கொடூரமானவன், தன் காரியத்தை நடத்திக் கொள்வதிலேயே கண்ணாக இருப்பவன், பிறர் நலனைக் கெடுப்பதில் கண்ணாக இருப்பவன், கபடமான வினயம் காட்டுபவன் - இத்தனை பேருக்கும் 'பகவிரதன்' என்றே பெயர்.

ये बकव्रतिनो विप्रा ये च मार्जारलिङ्गिनः।
ते पतन्त्यन्धतामिस्रे तेन पापेन कर्मणा॥

**யே பகவ்ரதிநோ விப்ரா: யே ச மார்ஜாரலிங்கிந: |**
**தே பதந்த்யந்ததா மிஸ்ரே தேநோபாஸேநகர்மசி || 197**

எவர்கள் இத்தகைய பைடால விரதனாகவும், பக விரதனாகவும் இருக்கிறார்களோ, அவர்கள் அந்ததாமிஸ்ரம் எனும் நரகத்தில் வீழ்வார்கள்.

न धर्मस्यापदेशेन पापं कृत्वा व्रतं चरेत्।
व्रतेन पापं प्रच्छाद्य कुर्वन् स्त्रीशूद्रदम्भनम्॥

**ந தர்மஸ்யாபதேஷேந பாபம்க்ருத்வா வ்ரதம் சரேத் |**
**வ்ரதேந பாபம் ப்ரச்சாத்ய குர்வந் ஸ்த்ரீசூத்ர தம்பநம் || 198**

தன் பாபம் நீங்குவதற்காக தர்மங்களைச் செய்தவன், அதை மறைத்து தான் தர்ம காரியங்களைச் செய்ததாகப் பாசாங்கு செய்யக்கூடாது.

பாவம் நீங்க அனுஷ்டித்த விரதங்களை, 'தர்மத்துக்காக விரதங்களை அனுஷ்டிக்கிறேன்' என்று கூறி பெண்களையும் சூத்திரர்களையும் ஏமாற்றக் கூடாது.

प्रेत्येह चेदृशा विप्रा गर्ह्यन्ते ब्रह्मवादिभिः।
छद्मना चरितं यच्च व्रतं रक्षांसि गच्छति॥

**ப்ரேத்யேஹ சேத்த்ருஷா விப்ரா கர்ஹ்யந்தே ப்ரஹ்மவாதிபி: |**
**சத்மநா சரிதம் யச்ச வ்ரதம் ரக்ஷாம்ஸி கச்சதி ||** 199

இத்தகையவர்களை பிரம்மவாதிகள் நிந்திக்கிறார்கள். இவர்கள் செய்யும் விரதங்களின் பயனும், தர்மங்களின் பயனும் ராட்சதர்களைச் சென்றடையும்.

अलिङ्गी लिङ्गिवेषेण यो वृत्तिमुपजीवति।
स लिङ्गिनां हरत्येनस् तिर्यग्योनौ च जायते॥

**அலிங்கீலிங்கி வேஷேண யோ வ்ருத்திமுபஜீவதி |**
**ஸலிங்காநாம் ஹரத்யேந ஸ்திர்யக்யோநௌ ச ஜாயதே ||** 200

கிருஹஸ்தன், பிரம்மசாரி வேஷமணிந்து பிச்சையெடுத்து ஜீவிப்பானேயாகில், வாழும் காலத்தில் மற்ற பிரம்மசாரிகளின் பாபத்தை அடைகிறான். இறந்த பிறகு விலங்காகப் பிறக்கிறான்.

परकीयनिपानेषु न स्नायाच्च कदाचन।
निपानकर्तुः स्नात्वा तु दुष्कृतांशेन लिप्यते॥

**பரகீயநிபாநேஷு நஸ்நாயாச்ச கதாசந |**
**நிபாந கர்துஸ்நாத்வா து துஷ்க்ருதாம்ஷேந லிப்யதே ||** 201

பிறர் வெட்டிய குளத்தில் நீராடக் கூடாது. அப்படி நீராடினால் இவன் புண்ணியம் குளத்தை வெட்டியவனுக்குப் போகும். மேலும் வெட்டியவனுடைய பாபம் இவனை அடையும்.

வேறு வழியின்றி அதில்தான் நீராட வேண்டும் என்னும் நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அக்குளத்திலிருந்து கைப்பிடி மண்ணெடுத்து வெளியே போட்டு விட்டு நீராட வேண்டும்.

यानशय्याऽऽसनान्यस्य कूपोद्यानगृहाणि च।
अदत्तान्युपयुञ्जानः एनसः स्यात् तुरीयभाक्॥

**யாநஷய்யாஸ நாந்யஸ்ய கூபோத்யா நக்ருஹாணிச |**
**அதத் தாந்யுபபுஞ்ஜாந: ஏநஸஸ் ஸ்யாத்துரீயபாக் ||** 202

வாகனம், படுக்கை, ஆசனம், கிணறு, தோட்டம், வீடு முதலானவைகளை, அதன் உடைமைக்காரர்கள் அவற்றைத் தனக்கு வழங்காத நிலையில், அவைகளைத் தான் அனுபவித்து வந்தால், உடைமைக்காரனின் பாவத்தில் நான்கில் ஒரு பங்கை அடைவான்.

नदीषु देवखातेषु तडागेषु सरःसु च।
स्नानं समाचरेन् नित्यं गर्तप्रस्रवणेषु च॥

**நதீஷு தேவகாதேஷு தடாகேஷு ஸரஸ்ஸு ச |**
**ஸ்நானம் ஸமாசரேந்நித்யம் கர்தப்ரஸ்ரவணேஷு ச || 203**

ஓடும் நதியிலும், தேவர்களால் வெட்டப்பட்ட குளம், கிணறுகளிலும், மடுக்களிலும் தினமும் நீராட வேண்டும்.

यमान् सेवेत सततं न नित्यं नियमान् बुधः।
यमान् पतत्यकुर्वाणो नियमान् केवलान् भजन्॥

**யமாந் ஸேவேத ஸததம் ந நித்யம் நியமாந் புத: |**
**யமாந் பதத்ய குர்வாணோ நியமாந் கேவலாந் பஜந் || 204**

புத்திசாலி எப்போதும் யமங்களைக் கடைப்பிடிக்காமல் நியமங்களைக் கடைப்பிடிக்கலாகாது. அவ்வாறு செய்பவ்ன் நரகத்தில் வீழ்வான்.

(பிரம்மசரியம், தயை, பொறுமை, சத்தியம், பாவம் செய்யாமை, அஹிம்சை, திருடாமை, இன்சொல், வெளிப்புலன்களை அடக்குதல் - இவை யமம் எனப்படும்.

(ஸ்நானம், மௌனம், உபவாசம், யாகம், வேதாத்யயனம், புலனடக்கம், குரு பணிவிடை, ஆசாரம், சினமின்மை - இவை நியமம் எனப்படும். )

नाऽश्रोत्रियतते यज्ञे ग्रामयाजिकृते तथा।
स्त्रिया क्लीबेन च हुते भुञ्जीत ब्राह्मणः क्वचित्॥

**நாஆஷ்ரோத்ரியததே யக்ஞே க்ராம யாஜிக்ருதே ததா |**
**ஸ்த்ரியா க்லீபேந ச ஹுதே பூஞ்ஜீத ப்ராஹ்மண: க்வசித் || 205**

வேதமறியாதவன் செய்யும் யாகத்திலும், கிராம புரோஹிதன் செய்யும் யாகத்திலும், பெண்களும் நபும்சகர்களும் செய்யும் யாகத்திலும் பிராம்மணன் போஜனம் செய்யக்கூடாது.

अश्लीकमेतत् साधूनां यत्र जुह्वत्यमी हविः।
प्रतीपमेतद् देवानां तस्मात् तत् परिवर्जयेत्॥

**அஷ்லீகமேதத்ஸாதூநாம் யத்ர ஜுஹ்வத்யமீ ஹவி: |**
**ப்ரதீபமேதத் தேவாநாம் தஸ்மாத் தத் பரிவர்ஜயேத் || 206**

இவர்கள் யாகத்தில் ஹோமம் செய்தால் அந்த ஹவிஸ் சாதுக்களுக்கு அலக்ஷ்மிகரமாகிறது. தேவர்களுக்கு பிரதிகூலமாகிறது. எனவே இத்தகைய யாகங்களில் சாப்பிடக் கூடாது.

मत्तक्रुद्धाऽऽतुराणां च न भुञ्जीत कदाचन।
केशकीटाऽवपन्नं च पदा स्पृष्टं च कामतः॥

**மத்தக்ருத்தாதுராணாம் ச ந பூஞ்ஜீரந் கதாசந |**
**கேஷ கீடாவபந்நம் சபதா ஸ்ப்ருஷ்டம் ச காமத: ||** 207

குடிபோதையில் உள்ளவர்களும், கோபத்தோடு இருப்பவர்களும், நோயாளிகளும் சமைத்த அன்னத்தைச் சாப்பிடலாகாது.

முடி, புழு இவைகள் கலந்து விட்டிருக்கும் அன்னத்தையும் சாப்பிடலாகாது.

காலால் உதைத்த அன்னத்தையும் சாப்பிடலாகாது.

भ्रूणघ्नाऽवेक्षितं चैव संस्पृष्टं चाऽप्युदक्यया।
पतत्रिणाऽवलीढं च शुना संस्पृष्टमेव च॥

**ப்ரூணக்நாவேக்ஷிதம் சைவ ஸம்ஸ்ப்ருஷ்டம் சாப்யுதக்யயா |**
**பதத்ரிணாபலீடம் ச ஷுநா ஸம்ஸ்ப்ருஷ்ட மேவ ச ||** 208

குழந்தையைக் கொன்றவன், பசுவைக் கொன்றவன் இவர்களால் பார்க்கப்பட்ட அன்னம், ருதுவான பெண் சாப்பிட்டு மிகுந்த அன்னம், காகம், நாய் போன்றவை முகர்ந்த அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

गवा चाऽन्नमुपाऽऽघ्रातं घुष्टाऽन्नं च विशेषतः।
गणाऽन्नं गणिकाऽन्नं च विदुषा च जुगुप्सितम्॥

**கவாசாந்நமுபாஆக்ராதம் குஷ்டான்னம் ச விசேஷத: |**
**கணாந்நம் கணிகாந்நம் ச விதுஷா ச ஜுகுப்ஸிதம் ||** 209

பசு முகர்ந்த அன்னம், சத்திரத்து சாப்பாடு, எல்லோரையும் கூப்பிட்டுக் கொடுக்கும் அன்னம், வேசியர் கொடுக்கும் அன்னம் - இவைகளைச் சான்றோர் நிந்திப்பார்கள்.

स्तेनगायनयोश् चाऽन्नं तक्ष्णो वार्धुषिकस्य च।
दीक्षितस्य कदर्यस्य बद्धस्य निगडस्य च॥

**ஸ்தேநகாயநயோஷ்சாந்நம் தக்ஷ்ணோ வார்துஷிகஸ்ய ச |**
**தீக்ஷிதஸ்ய கதர்யஸ்ய பத்தஸ்ய நிகடஸ்ய ச ||** 210

திருடன் தரும் அன்னம், சங்கீதம் பாடுபவன் அன்னம், வட்டி வாங்குபவன் அன்னம், தச்சனுடைய அன்னம், யக்ஞ தீட்சை ஏற்றிருப்பவருடைய அன்னம், லோபியின் அன்னம், கைதியின் அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

अभिशस्तस्य षण्ढस्य पुंश्चल्या दाम्भिकस्य च।
शुक्तं पर्युषितं चैव शूद्रस्योच्छिष्टमेव च॥

**அபிஷஸ்தஸ்ய ஷண்டஸ்ய பூம்ஷ்சல்யா தாம்பிகஸ்ய ச |**
**ஷுக்தம் பர்யுஷிதம் சைவ சூத்ரஸ்யோச்சிஷ்டமேவ ச || 211**

பெரும் பாதகனின் அன்னம், நபும்சகனின் அன்னம், டாம்பீகக்காரனின் அன்னம், புளித்துப் போன பால், பழைய சாதம், சூத்ரன் சாப்பிட்டு மிகுந்த அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

चिकित्सकस्य मृगयोः क्रूरस्योच्छिष्टभोजिनः।
उग्रान्नं सूतिकान्नं च पर्याचान्तमनिर्दशम्॥

**சிகித்ஸகஸ்ய ம்ருகயோ: க்ரூரஸ்யோச்சிஷ்ட போஜிந: |**
**உக்ரான்னம் சூதிகான்னம் ச பர்யாசாந்தம நிர்தஷம் || 212**

வைத்தியனின் அன்னம், வேடுவனின் அன்னம், குரூரமான குணங் கொண்டவனின் அன்னம், எச்சில் அன்னத்தைச் சாப்பிடு பவனின் அன்னம், கொடிய காரியங்களைச் செய்பவனுடைய அன்னம், குழந்தை பெற்ற பெண்ணுக்காகச் சமைத்த அன்னம், பந்தியில் சாப்பிடும் போது, ஒருவன் எழுந்து போன பிறகு மற்றவர்கள் சாப்பிடும் அன்னம், தீட்டுக்காரனுடைய அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

अनर्चितं वृथामांसमवीरायाश् च योषितः।
द्विषदन्नं नगर्यन्नं पतितान्नमवक्षुतम्॥

**அநர்சிதம் வ்ருதா மாம்ஸமவீராயாஷ்ச யோஷித: |**
**த்விஷதந்நம் நகர்யன்னம் பதிதாந்நமவக்ஷுதம் || 213**

மரியாதையின்றி பரிமாறப்பட்ட அன்னம், தெய்வங்களுக்கு நிவேதிக்காத அன்னம், கணவனும் பிள்ளையுமற்றவள் சமைத்த அன்னம், எதிரிகள் கொடுத்த அன்னம், பதிதன் இட்ட அன்னம், தூசி விழுந்த அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

पिशुनानृतिनोश् चान्नं क्रतुविक्रयिणस् तथा।
शैलूष-तुन्नवायान्नं कृतघ्नस्यान्नमेव च॥

**பிஷூநாந்ருதிநோஷ்சாந்நம் க்ரதுவிக்ரயிணஸ்ததா |**
**ஷைலூஷதுந்நவாயாந்நம் க்ருதக்நஸ்யாந்நமேவ ச || 214**

கோள் சொல்பவன் அன்னம், பொய்சாட்சி கூறுபவன் அன்னம், யக்ஞபலனை பிறருக்கு விற்பவனுடைய அன்னம், நட்டுவாங்கம் செய்பவனுடைய அன்னம், தையல்காரனின் அன்னம், நன்றி மறப்பவன் அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

कर्मारस्य निषादस्य रङ्गाऽवतरकस्य च।
सुवर्णकर्तुर् वेणस्य शस्त्रविक्रयिणस् तथा॥

**கர்மாரஸ்ய நிஷாதஸ்ய ரங்காவதரகஸ்ய ச |**
**சுவர்ண கர்துர்வைணஸ்ய சஸ்த்ர விக்ரயிணஸ்ததா ||** 215

இரும்புப் பட்டறையில் வேலை செய்யும் கருமானின் அன்னம், வலைஞனின் அன்னம், கூத்தாடுபவனின் அன்னம், பொற் கொல்லனின் அன்னம், பிரம்பைக் கொண்டு பொருட்களைத் தயாரிப்பவனின் அன்னம், ஆயுதங்களை விற்பவனின் அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

श्ववतां शौण्डिकानां च चैलनिर्णेजकस्य च।
रञ्जकस्य नृशंसस्य यस्य चोपपतिर् गृहे॥

**ஷ்வவதாம் ஷௌண்டிகாநாம் ச சைலநிர்ணேஜகஸ்ய ச |**
**ரஞ்ஜகஸ்ய ந்ருஷம்ஸஸ்ய யஸ்ய சோபபதிர் க்ருஹே ||** 216

வேட்டை போன்றவற்றுக்காக நாய்களை வளர்ப்பவன், கள் விற்பவன், வண்ணான், துணிகளுக்குச் சாயம் போடுபவர்கள், கருணையற்றவன், கூடாவொழுக்கம் கொண்ட பெண்ணின் கணவன் - இவர்களுடைய அன்னத்தைப் புசிக்கக் கூடாது.

मृष्यन्ति ये चोपपतिं स्त्रीजितानां च सर्वशः।
अनिर्दशं च प्रेताऽन्नमतुष्टिकरमेव च॥

**ம்ருஷ்யந்தி யே சோபபதிம் ஸ்த்ரீஜிதாநாம் ச ஸர்வஷ: |**
**அநிர்தஷம் ச ப்ரேதான்ன மதுஷ்டிகரமேவ ச ||** 217

தன் மனைவி கள்ளத் தொடர்பு வைத்திருப்பவன் தன் வீட்டிலேயே இருப்பதை அறிந்த பின்னும் அவனை விரட்டாமல் இருப்பவனுடைய அன்னம், பெண்ணுக்கடங்கி அடிமையா யிருப்பவனுடைய அன்னம், மரணத் தீட்டு கழியாதவனுடைய அன்னம், தன் மனத்துக்குப் பிடிக்காத அன்னம் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.

राजाऽन्नं तेज आदत्ते शूद्राऽन्नं ब्रह्मवर्चसम्।
आयुः सुवर्णकाराऽन्नं यशश् चर्माऽवकर्तिनः॥

**ராஜான்னம், தேஜ ஆதத்தே சூத்ரான்னம் ப்ரஹ்மவர்சசம் |**
**ஆயுஸ்சுவர்ணகாரான்னம் யஷஷ்சர்மாவகர்திந: ||** 218

இதுவரை யார் யாருடைய சாப்பாட்டை சாப்பிடக் கூடாது என்பது கூறப்பட்டது. இனி யார் சாப்பாட்டைச் சாப்பிட்டால் என்ன கெடுபலன் எனக் கூறப்படுகிறது.

ராஜாவுடைய அன்னத்தைப் புசித்தவனுடைய தேஜஸ் அழியும்.

சூத்திரனுடைய அன்னத்தைப் புசித்தவனுடைய பிரம்ம தேஜஸ் அழியும்.

பொற்கொல்லனுடைய அன்னத்தைப் புசித்தவனுடைய ஆயுள் குறையும்.

செருப்பு தைப்பவனுடைய அன்னத்தைச் சாப்பிட்டால் கீர்த்தி நசிக்கும்.

कारुकाऽन्नं प्रजां हन्ति बलं निर्णेजकस्य च।
गणाऽन्नं गणिकाऽन्नं च लोकेभ्यः परिकृन्तति॥

**காருகாந்நம் ப்ரஜாம் ஹந்தி பலம் நிர்ணேஜகஸ்ய ச |**
**கணாந்நம் கணி காந்நம் ச லோகேப்ய: பரிக்ருந்ததி ||** 219

சிற்பியின் அன்னத்தைப் புசித்தால் சந்ததி அழியும். வண்ணானின் அன்னத்தைப் புசித்தால் பலம் அழியும். பலருக்கும் வழங்கப்படும் சாப்பாடும், வேசியின் சாப்பாடும் நல்ல உலகங்கள் கிட்டாமல் செய்யும்.

पूयं चिकित्सकस्याऽन्नं पुंश्चल्यास् त्वन्नमिन्द्रियम्।
विष्ठा वार्धुषिकस्याऽन्नं शस्त्रविक्रयिणो मलम्॥

**பூயம் சிகித்ஸக ஸ்யாந்நம் பும்ஷ்சல்யாஸ்த்வந்நமிந்த்ரியம் |**
**விஷ்டா வார்துஷிகஸ்யாந்நம் ஷஸ்த்ர விக்ரயிணோ மலம் ||** 220

வைத்தியனின் சாப்பாடு சீழை உண்பதற்குச் சமம்.

நபும்சகனுடைய சாப்பாடு சாப்பிடுவது வீரியத்தைச் சாப்பிடுவதற்கு சமம்.

வட்டி வியாபாரி, ஆயுதம் விற்பவன் இவர்களின் அன்னம் மலத்துக்குச் சமம்.

य एतेऽन्ये त्वभोज्याऽन्नाः क्रमशः परिकीर्तिताः।
तेषां त्वगस्थिरोमाणि वदन्त्यन्नं मनीषिणः॥

**ய ஏதேஅந்யே த்வபோஜ்யாந்நா: க்ரமஷ: பரிகீர்திதா: |**
**தேஷாம் த்வகஸ்திரோமாணி வதந்த்யந்நம் மநீஷிண: ||** 221

இப்போது சொன்னவர்களைத் தவிர மற்றவர்களுடைய அன்னம், அவர்களுடைய சருமம், எலும்புகள், ரோமங்கள் இவைகளை உண்பதற்குச் சமம்.

भुक्त्वाऽतोऽन्यतमस्याऽन्नममत्या क्षपणं त्र्यहम्।
मत्या भुक्त्वा चरेत् कृच्छ्रं रेतोविण्मूत्रमेव च॥

**புக்த்வாதோ அந்யதமஸ்யாந்ந மமத்யா க்ஷபணம் த்ரயஹம் |**
**மத்யா புக்த்வா சரேத் க்ருச்ரம் ரேதோ விண்மூத்ரமேவ ச || 222**

இத்தகைய பேரில் யார் அன்னத்தைத் தெரியாமல் சாப்பிட்டாலும் மூன்று நாட்கள் உபவாசம் இருக்க வேண்டும். தெரிந்து சாப்பிட்டால் 'கிருச்ர விரதம்' இருக்க வேண்டும். ரேதஸ் மலஜலங்கள் உண்ணப் பட்டாலும் கிருச்ர விரதம் இருக்க வேண்டும்.

नाऽद्याच्छूद्रस्य पक्वाऽन्नं विद्वानश्राद्धिनो द्विजः।
आददीताऽऽममेवाऽस्मादवृत्तावेकरात्रिकम्॥

**நாத்யாச்சூத்ரஸ்ய பக்வாந்நம் வித்வாநஷ்ராத்திநோ த்விஜ: |**
**ஆததீதாமமேவாஸ்மாதவ்ருத்தாவேக ராத்ரிகம் || 223**

சூத்திரனிடம் சமைக்கப்பட்ட அன்னத்தைச் சாப்பிடக் கூடாது. வேறு வழியின்றேல், ஒரு பொழுதுக்குத் தேவையான அளவு அரிசி, காய்கறிகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

श्रोत्रियस्य कदर्यस्य वदान्यस्य च वार्धुषेः।
मीमांसित्वोभयं देवाः सममन्नमकल्पयन्॥

**ஷ்ரோத்ரியஸ்ய கதர்யஸ்ய வதாந்யஸ்ய ச வார்துஷே: |**
**மீமாம்சித்வோபயம் தேவாஸ்ஸமமந்நமகல்பயந் || 224**

வேதாத்யயனம் செய்யும் லோபியான பிராம்மணன், வள்ளலாக இருக்கும் வட்டி வியாபாரி, இவ்விருவரின் அன்னத்தில் எது மேலான தென்று ஆய்ந்து, இரண்டும் சமம் என்று தேவர்கள் உரைத்தனர்.

तान् प्रजापतिराहैत्य मा कृढ्वं विषमं समम्।
श्रद्धापूतं वदान्यस्य हतमश्रद्धयेतरत्॥

**தாந் ப்ரஜாபதிராஹைத்ய மாகிருஷ்ட்வம் விஷமம் ஸமம் |**
**ஷ்ரத்தா பூதம் வதாந்யஸ்ய ஹதமஷ்ரத்தயேதரத் || 225**

அப்போது பிரம்மா, "விஷமமானதை சமமானதாக எண்ணா தீர்கள். சிரத்தையோடு கொடுக்கும் வட்டி வியாபாரியின் அன்னமே மேலானது. சிரத்தையற்ற லோபியான வேத பிராம்மணனின் அன்னம் அதைவிடக் கீழானது" என்றுரைத்தார்.

श्रद्धयेष्टं च पूर्तं च नित्यं कुर्यादतन्द्रितः।
श्रद्धाकृते ह्यक्षये ते भवतः स्वागतैर् धनैः॥

**ஷ்ரத்தயேஷ்டம் ச பூர்த்தம் ச நித்யம் குர்யாததந்த்ரித: |**
**ஷ்ரத்தாக்ருதே ஹ்யக்ஷயே தே பவத: ஸ்வாகதைர்தநை: || 226**

யாகம் முதலான கிரியைகளையும், குளம் வெட்டுதல் முதலான தர்ம காரியங்களையும் பலனில் விருப்பம் வையாமல் சிரத்தையோடு செய்ய வேண்டும். நல்ல முறையில் சம்பாதிக்கப்பட்ட தனத்தைக் கொண்டு செய்ய வேண்டும். இவ்வாறான தர்மங்கள் குறையாத புண்ணிய பலன்களைத் தரும்.

दानधर्मं निषेवेत नित्यमैष्टिकपौर्तिकम्।
परितुष्टेन भावेन पात्रमासाद्य शक्तितः॥

**தானதர்மம் நிஷேவேத நித்யமைஷ்டிக பௌர்திகம் |**
**பரிதுஷ்டேந பாவேந பாத்ரமாசாத்ய ஷக்தித: || 227**

தானங்களை தக்க பாத்திரத்துக்கு சந்தோஷமாக அளிக்க வேண்டும். யக்ஞாதி கிரியைகளை வேதமோதுபவர்களான தக்கவர்களைக் கொண்டு, தன் சக்திக்குத் தக்கபடி சந்தோஷமாகச் செய்ய வேண்டும்.

यत्किञ्चिदपि दातव्यं याचितेनाऽनसूयया।
उत्पत्स्यते हि तत् पात्रं यत् तारयति सर्वतः॥

**யத்கிஞ்சிதபி தாதவ்யம் யாசிதேநாநசூயயா |**
**உத்பத்ஸ்யதே ஹி தத்பாத்ரம் யத்தாரயதி சர்வத: || 228**

யாசித்தவனுக்கு அசூயையின்றி சிறிதளவாவது தானமளிக்க வேண்டும். ஏனெனில் நரகத்துக்குப் போகாமல் இந்த யாசகர்களே தானமளித்தவனைக் காப்பாற்றுகிறார்கள்.

वारिदस् तृप्तिमाप्नोति सुखमक्षय्यमन्नदः।
तिलप्रदः प्रजामिष्टां दीपदश् चक्षुरुत्तमम्॥

**வாரிதஸ்த்ருப்திமாப்நோதி சுகமக்ஷய்ய மந்நத: |**
**திலப்ரத: ப்ரஜாமிஷ்டாம் தீபதஷ்சக்ஷுருத்தமம் || 229**

தண்ணீர் வழங்குபவன் திருப்தியை அடைவான். அன்னம் வழங்குபவன் அழிவில்லா சுகத்தை அடைவான். எள்ளை வழங்குபவன் விரும்பிய சந்ததியை அடைவான். தீபதானம் செய்பவன் நல்ல கண் பார்வையை அடைவான்.

भूमिदो भूमिमाप्नोति दीर्घमायुर् हिरण्यदः।
गृहदोऽग्र्याणि वेश्मानि रूप्यदो रूपमुत्तमम्॥

**பூமிதோ பூமிமாப்நோதி தீர்கமாயுர்ஹிரண்யத: |**
**க்ருஹதோக்ர்யாணி வேஷ்மாநி ரூப்யதோ ரூபமுத்தமம் || 230**

பூதானம் செய்தவன் பூமியை அடைவான். தங்கத்தை தானம் செய்தவன் தீர்க்காயுளை அடைவான். வீடு தானம் கொடுத்தவன்

உயர்ந்த வீடுகளை அடைவான். வெள்ளியைத் தானம் செய்தவன் பேரழகை அடைவான்.

वासोदश् चन्द्रसालोक्यमश्विसालोक्यमश्वदः।
अनडुद्दः श्रियं पुष्टां गोदो ब्रघ्नस्य विष्टपम्॥

**வாஸோதஷ்சந்த்ரஸாலோக்ய மஷ்விஸாலோக்யமஷ்வத: |**
**அநடுத்த: ஷ்ரியம் புஷ்டாம் கோதோ பத்நஸ்ய விஷ்டபம் ||** 231

வஸ்திர தானமளித்தவன் சந்திர லோகத்தை அடைவான். குதிரை தானமளித்தவன் அஸ்வினி தேவர்களுடைய லோகத்தை அடைவான். காளையை தானமளித்தவன் உயர்ந்த செல்வங்களை அடைவான். கோதானம் செய்தவன் சூரிய லோகத்தை அடைவான்.

यानशय्याप्रदो भार्यामैश्वर्यमभयप्रदः।
धान्यदः शाश्वतं सौख्यं ब्रह्मदो ब्रह्मसार्ष्टिताम्॥

**யாநஷய்யாப்ரதோ பார்யாமைஷ்வர்யமபயப்ரத: |**
**தாந்யதஷ்ஷாஷ்வதம் சௌக்யம் ப்ரஹ்மதோ ப்ரஹ்மஸார்ஷ்டி தாம் ||** 232

வாகனம், படுக்கை இவைகளைத் தானம் செய்பவர்கள் நல்ல மனைவியை அடைவார்கள். அபயமளித்தவன் ஐசுவரியத்தை அடைவான். தானியங்களைத் தானமளித்தவன் சாஸ்வதமான சுகத்தை அடைவான். வேதம் சொல்லிக் கொடுப்பவன் பிரம்ம லோகத்தை அடைவான்.

सर्वेषामेव दानानां ब्रह्मदानं विशिष्यते।
वार्यन्नगोमहीवासस्तिलकाञ्चनसर्पिषाम्॥

**ஸர்வேஷாமேவ தாநாநாம் ப்ரஹ்மதாநம் விசிஷ்யதே |**
**வார்யந்ந கோ மஹீவாசஸ்தில காஞ்சநஸர்பிஷாம் ||** 233

தண்ணீர் தானம், அன்னதானம், கோதானம், பூதானம், வஸ்திர தானம், எள் தானம், ஸ்வர்ண தானம், நெய் தானம் இவைகளைவிட ஞான தானம் மிகவும் சிறப்புடையது.

येनयेन तु भावेन यद्यद् दानं प्रयच्छति।
तत्तत् तेनैव भावेन प्राप्नोति प्रतिपूजितः॥

**யேந யேந து பாவேந யத்யத்தாநம் ப்ரயச்சதி |**
**தத்தத்தேநைவ பாவேந ப்ராப்நோதி ப்ரதிபூஜித: ||** 234

எதை எதை வேண்டி எந்தெந்த தானத்தைச் செய்கிறார்களோ, அதையதை கௌரவத்தோடு பெறுவார்கள்.

योऽर्चितं प्रतिगृह्णाति ददात्यर्चितमेव च।
तावुभौ गच्छतः स्वर्गं नरकं तु विपर्यये॥

**யோ அர்சிதம் ப்ரதிக்ருஹ்ணாதி ததாத்யர்சிதமேவ ச |**
**தாவுபௌ கச்சதஸஸ்வர்கம் நரகம் து விபர்யயே ||** **235**

*எவன் பூஜை செய்து தானம் அளிக்கின்றானோ, எவன் பூஜை செய்து தானம் பெறுகின்றானோ, இவ்விருவருமே சொர்க்கத்தை அடைவார்கள். இவ்வாறு பூஜாபூர்வமாக கொடுக்காதவனும், வாங்கியவனும் நரகத்தை அடைவார்கள்.*

न विस्मयेत तपसा वदेदिष्ट्वा च नाऽनृतम्।
नाऽऽर्तोऽप्यपवदेद् विप्रान् न दत्त्वा परिकीर्तयेत्॥

**ந விஸ்மயேத தபஸா வதேதிஷ்ட்வா ச நாந்ருதம் |**
**நார்தோ அப்யபவதேத்விப்ராந் ந தத்வா பரிகீர்தயேத் ||** **236**

*தான் இயற்றிய தவத்தை எண்ணி, 'நாமா இவ்வளவு தவம் செய்தோம்?' என்று ஆச்சரியப்படக்கூடாது.*

*யாகம் செய்தவன் பொய் பேசக் கூடாது. தான் தொல்லைக் காளானபோதும் பிராம்மணர்களைத் தூற்றக்கூடாது. தானம் செய்துவிட்டு, 'நான் செய்தேன்' என்று பறைசாற்றிக் கொண்டிருக்கக் கூடாது.*

यज्ञोऽनृतेन क्षरति तपः क्षरति विस्मयात्।
आयुर् विप्राऽपवादेन दानं च परिकीर्तनात्॥

**யக்ஞோ அந்ருதேந க்ஷரதி தப: க்ஷரதி விஸ்மயாத் |**
**ஆயுர்விப்ராபவாதேந தாநம்ச பரிகீர்தநாத் ||** **237**

*பொய் பேசுவதால் யக்ஞ பலன் கிட்டாமல் போகும். கர்வப்படுவதால் தவப்பலன் கிட்டாமல் போகும். பிராம்மணர் களைத் தூற்றுவதால் ஆயுள் குறையும். செய்த தானத்தைப் பிறரிடம் கூறுவதால் தான பலன் கிட்டாமல் போகும்.*

धर्मं शनैः सञ्चिनुयाद् वल्मीकमिव पुत्तिकाः।
परलोकसहायार्थं सर्वभूतान्यपीडयन्॥

**தர்மம் ஷநைஸ்ஸஞ்சிநுயாத்வல்மீகமிவ புத்திகா: |**
**பரலோகஸஹாயார்தம் சர்வபூதாந் யபீடயந் ||** **238**

*எவ்வுயிருக்கும் தீங்கு விளைவிக்காமல், மேலான உலகை அடைவதற்காக வேண்டி, எறும்புகள் புற்றைச் சிறுகச் சிறுக உருவாக்குவது போன்று, தர்மத்தைச் சிறிது சிறிதாகச் சேர்க்க வேண்டும்.*

नाऽमुत्र हि सहायार्थं पिता माता च तिष्ठतः।
न पुत्रदारा न ज्ञातिर् धर्मस् तिष्ठति केवलः॥

**நாமுத்ரஹி ஸஹாயார்தம் பிதா மாதா ச திஷ்டத: |**
**ந புத்ரதாரா ந ஞாதிர் தர்மஸ்திஷ்டதி கேவல: || 239**

பரலோகத்தில் உதவுவதற்கு தாயும் தந்தையும் வர மாட்டார்கள். மனைவியும் பிள்ளைகளும் வரமாட்டார்கள். பங்காளிகள் வர மாட்டார்கள். தர்மம் ஒன்றுதான் உற்ற துணையாக விளங்கும்.

एकः प्रजायते जन्तुरेक एव प्रलीयते।
एकोऽनुभुङ्क्ते सुकृतमेक एव च दुष्कृतम्॥

**ஏக: ப்ரஜாயதே ஜந்துரேக ஏவ ப்ரலீயதே |**
**ஏகோ அநு புங்க்தேசுக்ருதமேக ஏவ ச துஷ்க்ருதம் || 240**

ஜீவன் தனியாகவே பிறக்கும். தனியாகவே இறக்கும். தனியாகவே நல்வினையை அனுபவிக்கும். தனியாகவே தீவினையையும் அனுபவிக்கும்.

मृतं शरीरमुत्सृज्य काष्ठलोष्टसमं क्षितौ।
विमुखा बान्धवा यान्ति धर्मस् तमनुगच्छति॥

**ம்ருதம் ஷரீர முத்ஸ்ருஜ்ய காஷ்டலோஷ்டஸமம் க்ஷிதௌ |**
**விமுகா பாந்தவா யாந்தி தர்மஸ்தமநு கச்சதி || 241**

இறந்த பிறகு அவன் உறவினர்கள் விறகுக்கும் மண்ணுக்கும் சமமாக அவன் உடலைப் போட்டுவிட்டுச் செல்கிறார்கள். ஆனால் தர்மம் மட்டுமே அவனைப் பின்தொடர்கிறது.

तस्माद् धर्मं सहायार्थं नित्यं सञ्चिनुयाच् छनैः।
धर्मेण हि सहायेन तमस् तरति दुस्तरम्॥

**தஸ்மாத்தர்மம் ஸஹாயார்தம் நித்யம் ஸஞ்சினு யாச்சநை: |**
**தர்மேண ஹி ஸஹாயேந தமஸ்தரதி துஸ்தரம் || 242**

அவ்வாறு சேர்த்த தர்மத்தினால் தாண்ட முடியாததான பாபம் என்னும் இருட்டைத் தாண்ட முடியும். எனவே தன்னுடன் வந்து தனக்கு உதவியாக இருக்க வேண்டி, தர்மத்தைச் சிறிது சிறிதாகச் சேர்க்க வேண்டும்.

धर्मप्रधानं पुरुषं तपसा हतकिल्बिषम्।
परलोकं नयत्याशु भास्वन्तं खशरीरिणम्॥

**தர்மப்ரதாநம் புருஷம் தபஸா ஹதகில்பிஷம் |**
**பரலோகம் நயத்யாஷு பாஸ்வந்தம் கஷரீரிணம் || 243**

தர்மத்தையே பிரதானமாக கடைப்பிடிப்பவனாக, ஒருவேளை அறியாமல் ஏதும் பாபம் நேர்ந்தால், அதற்குத் தக்க பரிகார விரதங்களை அனுஷ்டித்து அப்பாபத்தை போக்கிக் கொண்டவனாக, தர்மத்தால் ஏற்பட்ட தேஜஸோடு விளங்கும் மனிதனை, அவனுடைய தர்மம் உத்தம லோகங்களை அடையச் செய்யும்.

उत्तमैरुत्तमैर् नित्यं सम्बन्धानाचरेत् सह।
निनीषुः कुलमुत्कर्षमधमानधमांस् त्यजेत्॥

**உத்தமைருத்தமைர்நித்யம் ஸம்பந்தாநாசரேத் சஹ |**
**நிநீஷு: குலமுத்கர்ஷ மதமாந தமாம்ஸ்த்யஜேத் || 244**

தன் குலத்துக்கு உயர்வைத் தர விரும்புபவன், உத்தமர்களோடு சம்பந்தம் வைத்துக் கொள்ள வேண்டும். அதமர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ளக் கூடாது. குறைந்தபட்சம் தனக்குச் சமமானவர் களுடனாவது சம்பந்தம் வைத்துக் கொள்ள வேண்டும்.

उत्तमानुत्तमान् गच्छन् हीनान्हीनांश् च वर्जयन्।
ब्राह्मणः श्रेष्ठतामेति प्रत्यवायेन शूद्रताम्॥

**உத்தமாநுத்தமாந் கச்சந் ஹீநாந் ஹீநாம்ஷ்ச வர்ஜயந் |**
**ப்ராஹ்மண: ஷ்ரேஷ்டதா மேதி ப்ரத்யவாயேந சூத்ரதாம் || 245**

உத்தமர்களோடு சம்பந்தம் வைத்துக் கொள்ளும் பிராம்மணன் உத்தம நிலையை அடைவான். அதமர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொண்டால் சூத்திரத் தன்மையை அடைவான்.

दृढकारी मृदुर् दान्तः क्रूराऽऽचारैरसंवसन्।
अहिंस्रो दमदानाभ्यां जयेत् स्वर्गं तथाव्रतः॥

**த்ருடகாரீ ம்ருதுர்தாந்த: க்ரூராசாரைர ஸம்வஸந் |**
**அஹிம்ஸ்ரோ தமதாநாப்யாம் ஜயேத்ஸ்வர்கம் ததாவ்ரத: || 246**

எடுத்த காரியத்தை இடையில் விடாமல், விடாமுயற்சியுடன் செய்து முடிப்பவனும், மிருதுவான இயல்புடையவனும், குரூர குணமுடையோருடன் சகவாசம் செய்யாதவனும், அஹிம்சையை இயல்பாகக் கொண்டவனும் - தவம், விரதம் முதலானவைகளைச் செய்யாமலே, புலனடக்கம், தானம் முதலியவைகளால் சொர்க்கத்தை அடைவான்.

एधोदकं मूलफलमन्नमभ्युद्यतं च यत्।
सर्वतः प्रतिगृह्णीयान् मध्वथाऽभयदक्षिणाम्॥२४७॥

**ஏதோதகம் மூலபலமந்நமப்யுத்யம் ச யத் |**
**சா்வத: ப்ரதிக்ருஹ்ணீயாந்மத்வதாஅபய தக்ஷிணாம் || 247**

கட்டைகள், தண்ணீர், கிழங்குகள், பழங்கள், தங்கம், தேன் முதலானவைகளை தானாக முன்வந்து யாரும் கொடுத்தால், பதிதர்கள், பாஷாண்டர்கள் போன்றவரல்லாத, மற்றவர்களிடமிருந்து ஏற்றுக் கொள்ளலாம்.

आहृताऽभ्युद्यतां भिक्षां पुरस्तादप्रचोदिताम्।
मेने प्रजापतिर् ग्राह्यामपि दुष्कृतकर्मणः॥

**ஆஹ்ருதாப்யுத்யதாம் பிக்ஷாம் புரஸ்தாதப்ர சோதிதாம் ।**
**மேநே ப்ரஜாபதிர்க்ராஹ்யாமபி துஷ்க்ருத கர்மண: ॥** **248**

நாடி வந்து கொடுக்கப்பட்டதும், முன்பே கொடுக்க வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டதுமான பொருட்களை பதிதர்களைத் தவிர மற்றவர்களிடமிருந்து ஏற்கலாம் என்பது பிரம்மாவின் கருத்து.

नाऽश्नन्ति पितरस् तस्य दश वर्षाणि पञ्च च।
न च हव्यं वहत्यग्निर् यस् तामभ्यवमन्यते॥

**நாஷ்நந்தி பிதர: தஸ்ய தஷவர்ஷாணி பஞ்ச ச ।**
**நசஹவ்யம் வஹத்யக்நிர்யஸ்தாமப்யவமந்யதே ॥** **249**

இவ்வாறான தானத்தை ஏற்றுக் கொள்ள மறுப்பவனுடைய பித்ருக்கள் அவன் தரும் உணவை பதினைந்து வருடங்கள் ஏற்க மாட்டார்கள். மேலும் அக்னியும் அவன் தரும் ஹவிஸை ஏற்று தேவர்களுக்கு அளிக்க மாட்டார்.

शय्यां गृहान् कुशान् गन्धानपः पुष्पं मणीन् दधि।
धाना मत्स्यान् पयो मांसं शाकं चैव न निर्णुदेत्॥

**ஷய்யாம் க்ருஹாந் குஷாந் கந்தாநாப: புஷ்பம் மணீந்ததி ।**
**தாநாமத்ஸ்யாந் பயோ மாம்சம் ஷாகம் சைவ ந நிர்ணுதேத் ॥** **250**

படுக்கை, வீடுகள், தர்பைகள், சந்தனம், சாம்பிராணி, அகில் முதலான நறுமணப் பொருட்கள், தண்ணீர், புஷ்பங்கள், மணிகள், தயிர், அவல், மீன்கள், பால், மாமிசம், காய்கறிகள் முதலானவைகளைத் தானாக முன்வந்து தரும்போது மறுக்கலாகாது.

गुरून् भृत्यांश्चोज्जिहीर्षन्नर्चिष्यन् देवताऽतिथीन्।
सर्वतः प्रतिगृह्णीयान् न तु तृप्येत् स्वयं ततः॥

**குரூந் ப்ருத்யாம்ஷ்சோஜ்ஜிஹீர்ஷந் அர்சிஷ்யந் தேவதாதிதீந் ।**
**சர்வத: ப்ரதிக்ருஹ்ணீயாந்நது த்ருப்யேத் ஸ்வயம் தத: ॥** **251**

பசியால் வாடும் பெற்றோரையும், குருமார்களையும் வேலையாட்களையும், மனைவி முதலானோரைக் காப்பதற்காகவும் தேவபூஜை அதிதி பூஜைகளுக்காகவும், பதிதர்களல்லாத மற்ற

அனைவரிடமிருந்தும் தானம் பெறலாம். ஆனால் அந்தத் தானத்தால் தான் எப்போதும் திருப்தி அடையக்கூடாது.

गुरुषु त्वभ्यतीतेषु विना वा तैर् गृहे वसन्।
आत्मनो वृत्तिमन्विच्छन् गृह्णीयात् साधुतः सदा॥

**குருஷுத்வப்யதீதேஷு விநா வா தைர்க்ருஹே வஸந் |**
**ஆத்மநோ வ்ருத்திமந்விச்சந் க்ருஹ்ணீயாத் ஸாதுதஸ்ஸதா || 252**

யாருமற்ற அனாதையும், அல்லாது தான் மட்டும் தனியாக வசிப்பவனும் தன் ஜீவனத்துக்காக எப்போதும் சாதுக்களிடமே தானம் பெற வேண்டும்.

आर्धिकः कुलमित्रं च गोपालो दासनापितौ।
एते शूद्रेषु भोज्याऽन्ना यश् चाऽऽत्मानं निवेदयेत्॥

**ஆர்திக: குலமித்ரம் ச கோபாலோ தாசநாபிதௌ |**
**ஏதேசூத்ரேஷு போஜ்யாஅந்நா யஷ்சாத்மாநம் நிவேதயேத் || 253**

தன் பூமியை உழுது பயிரிடுபவன், தன் குலத்துக்கு சிநேகிதன், பசு மேய்ப்பவன், தன் வேலையாள், தனக்கு க்ஷவரம் செய்பவன், தன் சர்வத்தையும் அர்ப்பணம் செய்தவன் (தன்னையே அர்ப்பணித்துத் தனக்கு பக்தியோடு ஊழியம் செய்பவன்) இவர்கள் சூத்திரர் என்றபோதும் இவர்கள் அன்னத்தை ஏற்கலாம்.

यादृशोऽस्य भवेदात्मा यादृशं च चिकीर्षितम्।
यथा चोपचरेदेनं तथाऽऽत्मानं निवेदयेत्॥

**யாத்ருஷோ அஸ்ய பவேதாத்மா யாத்ருஷம் ச சிகீர்ஷிதம் |**
**யதா சோபசரேதேநம் ததாத்மாநம் நிவேதயேத் || 254**

சூத்திரன் ஜீவனத்துக்காக ஒருவரை அண்டி வரும்போது தன் குலம், தன் திறமை, கோரிக்கை செய்யத் தெரிந்த வேலை முதலானவற்றைக் கூற வேண்டும்.

योऽन्यथा सन्तमात्मानमन्यथा सत्सु भाषते।
स पापकृत्तमो लोके स्तेन आत्माऽपहारकः॥

**யோ அந்யதாஸந்த மாத்மாநமந்யதா ஸத்சு பாஷதே |**
**ஸ பாக்ருத்தமோ லோகேஸ்தேந ஆத்மா ஹாரக: || 255**

தான் ஒரு வகையானவனாக இருந்து, தன்னை வேறு வகையானவனாகக் கூறிக் கொள்பவனை, பாவி என்றும் திருடன் என்றும் கூறலாம்.

वाच्यर्था नियताः सर्वे वाङ्मूला वाग्विनिःसृताः।
तां तु यः स्तेनयेद् वाचं स सर्वस्तेयकृन् नरः॥

**வாச்யர்தா நியதாஸ்ஸர்வே வாங்மூலா வாக்விநிஸ்ஸ்ருதா: |**
**தாம் து ய: ஸ்தேநயேத்வாசம் ஸஸர்வஸ்தேயக்ருந்நர: ||** **256**

அனைத்து விஷயங்களும் வாக்கை ஆதாரமாகக் கொண்டுள்ளன. சப்தங்கள் அனைத்தும் வாக்கை ஆதாரமாகக் கொண்டுள்ளன. சப்தங்கள் வாக்கின் மூலமாக வெளிப்படுகின்றன. இத்தகைய வாக்கைக் கூறி பிறகு அதை மாற்றிப் பேசுபவன் அனைத்தையும் திருடிய திருடன் ஆகிறான்.

महर्षिपितृदेवानां गत्वाऽऽनृण्यं यथाविधि।
पुत्रे सर्वं समासज्य वसेन् माध्यस्थ्यमाश्रितः॥

**மஹர்ஷி பித்ருதேவாநாம் கத்வா அந்ருண்யம் யதாவிதி |**
**புத்ரே சர்வம் ஸமாஸஜ்ய வசேந் மாத்யஸ்த்ய மாஷ்ரித: ||** **257**

கிருஹஸ்தன் வேதாத்யயனம் செய்து ரிஷிகளுடைய கடனைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். புத்திரர்களைப் பெற்று பித்ருக்களுடைய கடனைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். யக்ஞங்கள் செய்து தேவர்களுடைய கடனைத் தீர்த்துக் கொள்ள வேண்டும்.

பிறகு மகனிடம் குடும்ப பாரம் முழுவதையும் ஒப்படைத்து விட்டு, தான் மத்யஸ்தனாக எந்த விஷயத்திலும் முனைந்து ஈடுபடாமல் வீட்டில் வசிக்க வேண்டும்.

एकाकी चिन्तयेन् नित्यं विविक्ते हितमात्मनः।
एकाकी चिन्तयानो हि परं श्रेयोऽधिगच्छति॥

**ஏகாகீ சிந்தயேந்நித்யம் விவிக்தே ஹிதமாத்மந: |**
**ஏகாகீ சிந்தயாநோ ஹி பரம் ஷ்ரேயோ அதிகச்சதி ||** **258**

இவ்வாறு உலக விஷயங்களில் ஈடுபடாமல், தனிமையில் இருந்தபடி தனக்கு ஹிதம் தருவதான நல்லுலகை விரும்பி, பரமாத்மாவை சிந்தித்திருப்பவன் மேலான மோட்சத்தை அடைவான்.

एषोदिता गृहस्थस्य वृत्तिर् विप्रस्य शाश्वती।
स्नातकव्रतकल्पश् च सत्त्ववृद्धिकरः शुभः॥

**ஏஷோதிதா க்ருஹஸ்தஸ்ய வ்ருத்திர்விப்ரஸ்ய ஷாஷ்வதீ |**
**ஸ்நாதக வ்ரத கல்பஷ் ச ஸத்வ வ்ருத்திகர: சுப: ||** **259**

இந்த அத்தியாயத்தில் கிருஹஸ்தனுக்கு முக்கியமான சாஸ்வதமான ஜீவனோபாயம் கூறப்பட்டது. ஸ்நாதவிரதம் பற்றியும் சத்வகுணம் மேலோங்குவதற்கான முறைகளும் கூறப்பட்டன.

अनेन विप्रो वृत्तेन वर्तयन् वेदशास्त्रवित्।
व्यपेतकल्मषो नित्यं ब्रह्मलोके महीयते॥

**அநேந விப்ரோ வ்ருத்தேந வர்தயந் வேதசாஸ்த்ரவித் |**
**வ்யபேத கல்மஷோ நித்யம் ப்ரஹ்மலோகே மஹீயதே ||** **260**

வேத சாஸ்திரமறிந்த அந்தணன் இதுகாறும் கூறப்பட்ட முறையில் வாழ்ந்தால் பாபங்களெல்லாம் தொலைந்து பிரம்ம லோகத்தை அடைவான்.

(நான்காவது அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 5

श्रुत्वैतानृषयो धर्मान् स्नातकस्य यथोदितान्।
इदमूचुर् महात्मानमनलप्रभवं भृगुम्॥

**ஷ்ருத்வைதாந் ருஷயோ தர்மாந் ஸ்நாதகஸ்ய யதோதிதாந் |**
**இதமூசுர் மஹாத்மானமநல ப்ரபவம் ப்ருகும் ||** 1

*ரிஷிகள், இவ்வாறு கூறப்பட்ட ஸ்நாதகனுடைய இந்த தர்மங்களைக் கேட்டு மஹாத்மாவான பிருகுவிடம் இவ்வாறு கூறினர்:*

एवं यथोक्तं विप्राणां स्वधर्ममनुतिष्ठताम्।
कथं मृत्युः प्रभवति वेदशास्त्रविदां प्रभो॥

**ஏவம் யதோக்தம் விப்ராணாம் ஸ்வதர்மமநுதிஷ்டதாம் |**
**கதம் ம்ருத்யு: ப்ரபவதி வேதசாஸ்த்ரவிதாம் ப்ரபோ ||** 2

*"இவ்வாறாக சாஸ்திரம் கூறியபடி சகல தர்மங்களையும் அனுஷ்டிக்கின்ற வேதசாஸ்திர விற்பன்னர்களான பிராம்மணர்களுக்கு மிருத்யு எவ்வாறு ஏற்படும்?" - என்று கேட்டனர்.*

स तानुवाच धर्मात्मा महर्षीन् मानवो भृगुः।
श्रूयतां येन दोषेण मृत्युर् विप्रान् जिघांसति॥

**ஸ தாநுவாச தர்மாத்மா மஹர்ஷீந் மாநவோ ப்ருகு: |**
**ஷ்ரூயதாம் யேந தோஷேண ம்ருத்யுர்விப்ராந் ஜிகாம்ஸதி ||** 3

*இவ்வாறு கேட்க, தர்மாத்மாவான பிருகு, ரிஷிகளைப் பார்த்து, "எந்த தோஷத்தால் மிருத்யு பிராம்மணர்களைக் கொல்கிறானோ, அந்த தோஷத்தைக் கூறுகிறேன். கேளுங்கள்," என்றார்.*

अनभ्यासेन वेदानामाचारस्य च वर्जनात्।
आलस्यादन्नदोषाच्च मृत्युर् विप्रान् जिघांसति॥

**அநப்யாசேந வேதாநாமசாரஸ்ய ச வர்ஜநாத் |**
**ஆலஸ்யாதந்ந தோ ஷாச்ச ம்ருத்யுர்விப்ராந் ஜிகாம்ஸதி ||** 4

*வேதாப்யாசம் செய்யாமையாலும், ஆசாரமின்மையாலும், அனுஷ்டானங்களில் ஈடுபாடின்றி இருத்தலாலும், போஜன விஷயத்தில் ஏற்படும் தோஷங்களாலும் மிருத்யு இவர்களைக் கொல்கிறான்.*

लशुनं गृञ्जनं चैव पलाण्डुं कवकानि च।
अभक्ष्याणि द्विजातीनाममेध्यप्रभवाणि च॥

**லசுநம் க்ருஞ்ஜநம் சைவ பலாண்டும் கவகாநி ச |**
**அபக்ஷ்யாணி த்விஜாதீநாமமேத்ய ப்ரபவாணி || 5**

*வெள்ளைப் பூண்டு, நீருள்ளி, வெங்காயம், காளான் மற்றும் தூய்மையற்ற இடத்தில் விளைந்தவை போன்றவற்றை திவிஜர்கள் உண்ணலாகாது.*

लोहितान् वृक्षनिर्यासान् व्रश्चनप्रभवास् तथा।
शेलुं गव्यं च पेयूषं प्रयत्नेन विवर्जयेत्॥

**லோஹிதாந் வ்ருக்ஷ நிர்யாசாந் வ்ரஷ்சநப்ரபவாம்ஸ்ததா |**
**ஷேலும் கவ்யம் ச பீயூஷம் ப்ரயத்நேந விவர்ஜயேத் || 6**

*மரத்திலிருந்து தானாக ஒழுகும் சிவப்பு நிற பால், கத்தியால் கீறி எடுக்கும் பால், முருங்கைக்காய், ஆலம்பால் முதலானவைகளை முக்கியமாக நீக்க வேண்டும்.*

वृथाकृसरसंयावं पायसापूपमेव च।
अनुपाकृतमांसानि देवान्नानि हवींषि च॥

**வ்ருதாக்ருசரஸம் யாவம் பாயஸாஅபூ பமேவ ச |**
**அநுபாக்ருதமாம்ஸாநி தேவாந்நாநி ஹவீம்ஷிச || 7**

*நைவேத்தியத்துக்காக அன்றி தனக்காகச் செய்து கொண்ட எள்ளுச்சாதம், பாயசம், வடைகள் முதலானவையும், வேள்விக்காக அன்றி தங்களுக்காக கொல்லப்பட்ட மிருகமாமிசம், தெய்வங்களுக்காக தயாரித்து இன்னும் நிவேதனமாகாத அன்னம், ஹோமத்துக்காக தயாரித்து இன்னும் ஹோமம் செய்யப்படாத ஹவிஸ் - இவைகளைச் சாப்பிடக் கூடாது.*

अनिर्दशाया गोः क्षीरमौष्ट्रमैकशफं तथा।
आविकं सन्धिनीक्षीरं विवत्सायाश् च गोः पयः॥

**அநிர்தஷா யாகோ: க்ஷீர மௌஷ்ட்ரமைகஷபம் ததா |**
**ஆவிகம் ஸந்திநீக்ஷீரம் விவத்ஸாயாஷ்ச கோ: பய: || 8**

*கன்று ஈன்று பத்து நாட்கள் கழியாத பசுவின்பாலும், ஒட்டகம், ஆடு, குதிரை, ஒற்றைக் கொம்புள்ள மிருகங்களின் பாலும், கன்றில்லாத பசுவின் பாலும் சாப்பிடலாகாது.*

आरण्यानां च सर्वेषां मृगाणां माहिषं विना।
स्त्रीक्षीरं चैव वर्ज्यानि सर्वशुक्तानि चैव हि॥

**ஆரண்யாநாம் ச ஸர்வேஷாம் ம்ருகாணாம் மாஹிஷம் விநா |**
**ஸ்த்ரீக்ஷீரம் சைவ வர்ஜ்யாநி ஸர்வஷுக்தாநி சைவ ஹி ||** 9

*எருமைப் பாலைச் சாப்பிடலாம். மற்ற காட்டு விலங்குகள் அத்தனையின் பாலும், தாய்ப் பாலும், புளித்துப்போனவைகளும் சாப்பிடலாகாது*

दधि भक्ष्यं च शुक्तेषु सर्वं च दधिसम्भवम्।
यानि चैवाऽभिषूयन्ते पुष्पमूलफलैः शुभैः॥

**ததி பக்ஷ்யம் ச ஷுக்தேஷு ஸர்வம்ச ததிஸம்பவம் |**
**யாநிசைவாபி சூயந்தே புஷ்பமூல பலை: சுபை: ||** 10

*தயிர், மோர் முதலான புளிக்க வைக்கப்பட்டவைகளையும் போதையைத் தராத, புளிக்கவைக்கப்பட்ட ஆசவங்களையும் (பழங்கள், பூக்கள் போன்றவற்றை புளிக்க வைப்பது) சாப்பிடலாம்.*

क्रव्यादान् छकुनान् सर्वान् तथा ग्रामनिवासिनः।
अनिर्दिष्टांश् चैकशफांष् टिट्टिभं च विवर्जयेत्॥

**க்ரவ்யாதாந் சகுநீந் ஸர்வாந்ஸ்ததா க்ராமநிவாசிந: |**
**அநிர்திஷ்டாம்ஷ்சைக ஷபாம்ஷ்டிட்டிபம் ச விவர்ஜயேத் ||** 11

*மாமிசம் உண்ணும் கழுகு முதலான பறவைகளையும், ஊருக்குள் வாழும் புறா முதலான பறவைகளையும், வேதத்தால் ஒதுக்கப்பட்ட ஒற்றைக் கொம்புடைய மிருகங்களையும், சிட்டுக் குருவியையும் சாப்பிடக் கூடாது.*

कलविङ्कं प्लवं हंसं चक्राह्वं ग्रामकुक्कुटम्।
सारसं रज्जुदालं च दात्यूहं शुकसारिके॥

**கலவிங்கம் ப்ளவம் ஹம்ஸம் சக்ராங்கம் க்ராம குக்குடம் |**
**சாரசம் ரஜ்ஜுவாலம் ச தாத்யூஹம் சுகஷாரிகே ||** 12

*ஊர்க்குருவி, நீர்க்காக்கை, அன்னம், சக்ரவாகம், ஊர்க்கோழி, சாரசப்பறவை, கயிறுவால் குருவி, கருங்குருவி, கிளி, சாரிகை முதலான பறவைகளைச் சாப்பிடக் கூடாது.*

प्रतुदान् जालपादांश् च कोयष्टिनखविष्किरान्।
निमज्जतश् च मत्स्यादान् सौनं वल्लूरमेव च॥

**ப்ரதுதாந்ஜாலபாதாம்ஷ்ச கோயஷ்டிநகவிஷ்கிராந் |**
**நிமஜ்ஜதஷ்ச மத்ஸ்யாதாந் சௌநம் வல்லூரமேவ ச ||** 13

மரங்கொத்தி, சராரி, குருட்டுக் கொக்கு, காகம், விச்சுளி, ராஜாளி, வல்லூறு முதலான பறவைகளைச் சாப்பிடக் கூடாது.

बकं चैव बलाकां च काकोलं खञ्जरीटकम्।
मत्स्यादान् विड्वराहांश् च मत्स्यानेव च सर्वशः॥

**பகம் சைவ பலாகாம் ச காகோலம் கஞ்ஜரீடகம் |**
**மத்ஸ்யாதாந் விட்வராஹாம்ஷ்ச மத்ஸ்யாநேவ ச சர்வஷ: || 14**

கொக்கு, நாரை, அண்டங்காக்கை, கறுங்குருவி முதலான பறவைகளையும், முதலை, பன்றிகளையும், மீன்களையும் சாப்பிடக் கூடாது.

यो यस्य मांसमश्नाति स तन्मांसाद उच्यते।
मत्स्यादः सर्वमांसादस् तस्मान् मत्स्यान् विवर्जयेत्॥

**யோ யஸ்ய மாம்ஸமஷ்நாதிஸ தந்மாம்சாத உச்யதே |**
**மத்ஸ்யாதஸ்ஸர்வமாம்ஸாதஸ்தஸ்மாந்மத்ஸ்யாந் விவர்ஜயேத் || 15**

எது எதனுடைய மாமிசத்தை உண்ணுகிறதோது, உண்ணப் பட்ட அது, இதனுடைய மாமிசத்தை உண்ணும் எனப்படும்.

இந்த வகையில் மீன்களை உண்டவன் எல்லா மாமிசங்களையும் உண்டவன் ஆவான். எனவே மீன்களைச் சாப்பிடக் கூடாது.

पाठीनरोहितावाद्यौ नियुक्तौ हव्यकव्ययोः।
राजीवान् सिंहतुण्डांश् च सशल्कांश् चैव सर्वशः॥

**பாடீந ரோஹிதாவாத்யௌ நியுக்தௌ ஹவ்யகவ்யயோ: |**
**ராஜீவாந் சிம்ஹதுண்டாம்ஷ்ச சகல்காம்ஷ்சைவ ஸர்வஷ: || 16**

ஆயிரம் பற்களுடைய மீன்கள், சிவப்புமீன், கும்பலாகத் திரியும் மீன்கள், சிங்கமுக மீன்கள், முள்நிறைந்த மீன்கள் முதலானவைகளை ஹவ்ய கவ்யங்களில் நியமிக்கப்பட்ட பிராம்மணர்கள் சாப்பிடலாம். மற்ற கர்த்தா முதலானோர் சாப்பிடக்கூடாது. அனைவருமே மற்ற சமயங்களில் சாப்பிடக்கூடாது.

न भक्षयेदेकचरानज्ञातांश् च मृगद्विजान्।
भक्ष्येष्वपि समुद्दिष्टान् सर्वान् पञ्चनखांस् तथा॥

**ந பக்ஷயே தேக சநா நக்ஞாதாம்ஷ்ச ம்ருகத்விஜாந் |**
**பக்ஷ்யேஷ்வபி ஸமுதிஷ்டாந் ஸர்வாந் பஞ்சந காந்ஸ்ததா || 17**

தனியாகத் திரியும் மிருகங்களையும், பெயர் தெரியாத மிருகங்களையும், பறவைகளையும் (பூனை, குரங்கு போன்றவை) ஐந்து நகங்கள் கொண்ட மிருகங்களையும் சாப்பிடக்கூடாது

श्वाविधं शल्यकं गोधां खड्गकूर्मशशांस् तथा।
भक्ष्यान् पञ्चनखेष्वाहुरनुष्ट्रांश् चैकतोदतः॥

**ஷ்வாவிதம் ஷல்யகம் கோதாம் கட்க கூர்ம ஷஷாம் சஸ்ததா |**
**பக்ஷ்யாந் பஞ்சநகேஷ்வாஹுரநுஷ்ட்ராந்ஷ்சைகதோதத: ||** 18

ஐந்து நகங்களுள்ள மிருகங்களில் முள்ளம் பன்றி, சல்ய மிருகம், உடும்பு, காண்டாமிருகம், ஆமை, முயல் இவைகளை உண்டாலும் உண்ணலாமே தவிர மற்றவைகளை உண்ணக் கூடாது. வேறு வழியில்லாதபோது ஒட்டகம் தவிர மற்ற ஒரு பல் வரிசையுள்ள மிருகங்களை உண்ணலாம்.

छत्राकं विड्वराहं च लशुनं ग्रामकुक्कुटम्।
पलाण्डुं गृञ्जनं चैव मत्या जग्ध्वा पतेद् द्विजः॥

**சத்ராகம் விட்வராஹம் ச லசுநம் க்ராம குக்குடம் |**
**பலாண்டும் க்ருஞ்ஜநம் சை மத்யாஜக்த்வா பதேத் த்விஜ: ||** 19

காளான், ஊர்ப்பன்றி, வெங்காயம், ஊர்க்கோழி, நீருள்ளி, வெள்ளைப் பூண்டு முதலானவைகளை தெரிந்தும் புத்திபூர்வமாக சாப்பிடுபவன் பாபியாவான்.

अमत्यैतानि षड् जग्ध्वा कृच्छ्रं सान्तपनं चरेत्।
यतिचान्द्रायणं वाऽपि शेषेषूपवसेदहः॥

**அமத்யைதாநி ஷட்ஜக்த்வா க்ருச்ரம் ஸாந்தபநம் சரேத் |**
**யதி சாந்த்ராயணம் வாபி ஷேஷேஷுபவஸேதஹ: ||** 20

தெரியாமல் இவற்றை சாப்பிட்டால், சாந்தபந விரதத்தையாவது சாந்திராயண விரதத்தையாவது செய்ய வேண்டும். மற்ற விலக்கப் பட்டவற்றை சாப்பிட்டால் ஒரு நாள் உண்ணா நோன்பிருக்க வேண்டும்.

संवत्सरस्यैकमपि चरेत् कृच्छ्रं द्विजोत्तमः।
अज्ञातभुक्तशुद्ध्यर्थं ज्ञातस्य तु विशेषतः॥

**ஸம்வத்ஸரஸ்யைகமபி சரேத்க்ருச்ரம் த்விஜோத்தம: |**
**அக்ஞாதபுக்த சுத்யர்த்தம் ஞாதஸ்ய து விசேஷத: ||** 21

திவிஜன் தெரியாமல் சாப்பிடத்தகாததை சாப்பிட்ட குற்றம் நீங்க வருடத்தில் ஒருமுறை கிருச்சர விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

தெரிந்து சாப்பிட்டால், அதற்குரிய பிராயச்சித்தங்களைச் செய்ய வேண்டும்.

**यज्ञार्थं ब्राह्मणैर् वध्याः प्रशस्ता मृगपक्षिणः।
भृत्यानां चैव वृत्त्यर्थमगस्त्यो ह्याचरत् पुरा॥**

**யக்ஞார்த்தம் ப்ராஹ்மணைர்வத்யா: ப்ரஷஸ்தா ம்ருகபக்ஷிண: |
ப்ருத்யாநாம் சைவ வ்ருத்யர்த்தமகஸ்த்யோ ஹ்யாசரத்புரா || 22**

பிராம்மணர்கள் யக்ஞங்களுக்காகவும், தான் போஷிக்க வேண்டியவர்களை போஷிப்பதற்காகவும் சாஸ்திரத்தில் ஏற்கப்பட்ட மிருகங்களையும், பறவைகளையும் வதம் செய்யலாம். முன்னர் அகஸ்தியர் இவ்வாறு செய்துள்ளார்.

**बभूवुर् हि पुरोडाशा भक्ष्याणां मृगपक्षिणाम्।
पुराणेष्वृषियज्ञेषु ब्रह्मक्षत्रसवेषु च॥**

**பபூவுர்ஹி புரோடாஷா பக்ஷ்யாணாம் ம்ருகபக்ஷிணாம் |
புராணேஷ்வபி யக்ஞேசு ப்ரஹ்மக்ஷத்ரஸவேசு ச || 23**

முற்காலத்தில் முனிவர்களின் யாகங்களிலும், பிராம்மண க்ஷத்திரியர்களின் யாகங்களிலும், சாப்பிடத்தக்க மிருகங்கள் பறவைகளின் மாமிசங்களே ஹவிஸ்களாக இருந்தன. எனவே யக்ஞங்களில் மிருகவதை செய்யலாம்.

**यत्किञ्चित् स्नेहसंयुक्तं भक्ष्यं भोज्यमगर्हितम्।
तत् पर्युषितमप्याद्यं हविःशेषं च यद् भवेत्॥**

**யத்கிஞ்சித் ஸ்நேஹஸம்யுக்தம் பக்ஷ்யம் போஜ்யமகர்ஹிதம் |
தத்பர்யுஷிதமப்யாத்யம் ஹவிஷ்ஷேசம் ச யத்பவேத் || 24**

எண்ணெய், நெய்களால் செய்யப்பட்டு, கெடாமல் இருப்பவற்றை பலநாட்கள் கழித்துச் சாப்பிடலாம். ஹவிசில் மிகுந்ததையும் (எண்ணெய், நெய்களில் பொரித்தவற்றை) அவ்வாறே சாப்பிடலாம்.

**चिरस्थितमपि त्वाद्यमस्नेहाक्तं द्विजातिभिः।
यवगोधूमजं सर्वं पयसश् चैव विक्रिया॥**

**சிரஸ்திதமபி த்வாத்யமஸ்நேஹாக்தம் த்விஜாதிபி: |
யவகோதூமஜம் ஸர்வம் பயசஷ்சைவ விக்ரியா: || 25**

யவை, கோதுமைகளால் செய்யப்பட்டவை, செய்து நாட்கணக்கானதாக இருந்தாலும், கெடாமலிருந்தால் சாப்பிடலாம். பாலிலிருந்து தயாரித்த தயிர், மோர் போன்றவற்றைச் சாப்பிடலாம்.

एतदुक्तं द्विजातीनां भक्ष्याऽभक्ष्यमशेषतः।
मांसस्याऽतः प्रवक्ष्यामि विधिं भक्षणवर्जने॥

**ஏததுக்தம் த்விஜாதீநாம் பக்ஷ்யா பக்ஷமசேஷத: |**
**மாம்ஸஸ்யாத: ப்ரவக்ஷ்யாமி விதிம் பட்சணவர்ஜநே || 26**

*இதுவரை சாப்பிடத் தக்கவை இவை, தகாதவை இவை என்பதை தெரியப்படுத்தினேன். இனி மாமிசங்களில் எவை கூடும், எவை கூடாது என்று கூறுகிறேன்.*

प्रोक्षितं भक्षयेन् मांसं ब्राह्मणानां च काम्यया।
यथाविधि नियुक्तस् तु प्राणानामेव चाऽत्यये॥

**ப்ரோக்ஷிதம் பக்ஷயேந்மாம்சம் ப்ராஹ்மணாநாம் ச காம்யயா |**
**யதாவிதி நியுக்தஸ்து ப்ராணாநாமேவ சாத்யயே || 27**

*மந்திர ஜலத்தினால் புரோட்சணம் (தெளிக்கப்பட்ட) செய்யப்பட்ட, யக்ஞத்தில் ஹவிசான மாமிசத்தையும், பிராம்மணன் பிரார்த்தித்து அழைத்துக் கொடுத்த மாமிசத்தையும் ஒருமுறை மட்டும் சாப்பிடலாம். தவிரவும் சிராத்தத்தில் தான் நியமிக்கப் பட்டபோதும், வேறு உணவின்றி உயிர் போகும் நிலையிலிருக்கும் போதும் மாமிசம் சாப்பிடலாம்.*

प्राणस्याऽन्नमिदं सर्वं प्रजापतिरकल्पयत्।
स्थावरं जङ्गमं चैव सर्वं प्राणस्य भोजनम्॥

**ப்ராணஸ் யாந்நமிதம் ஸர்வம் ப்ரஜாபதிதர கல்பயத் |**
**ஸ்தாவரம் ஜங்கமம் சைவ ஸர்வம் ப்ராணஸ்ய போஜனம் || 28**

*இனி கூறப்போகிறவைகளை பிரம்மா, ஜீவர்கள் உண்பதற்காக உருவாக்கினார். எனவே அசையும், அசையா இவை முழுவதும் ஜீவர்களுக்கு உண்ணத்தக்கவைகளே.*

चराणामन्नमचरा दंष्ट्रिणामप्यदंष्ट्रिणः।
अहस्ताश् च सहस्तानां शूराणां चैव भीरवः॥

**சராணாமந்நமசரா தம்ஷ்ட்ரிணாமப்யதம் ஷ்ட்ரிண: |**
**அஹஸ்தாஷ்ச ஸஹஸ்தாநாம் சூராணாம் சைவ பீரவ: || 29**

*ஓரிடத்திலிருந்து வேறிடத்துக்கு அலைந்து திரியக் கூடியவைகளுக்கு ஒரே இடத்திலிருக்கும் தாவரங்களும், நகங்கள் உள்ளவற்றுக்கு நகங்கள் இல்லாதவையும், வீரத்தோடிருப்பவற்றுக்கு வீரமில்லாதவையும் உணவாக உள்ளன.*

नात्ता दुष्यत्यदन्नाद्यान् प्राणिनोऽहन्यहन्यपि।
धात्रैव सृष्टा ह्याद्याश् च प्राणिनोऽत्तार एव च॥

**நாத்தா துஷ்யத்யதந்நாத்யாந் ப்ராணிநோ அஹந்யஹந்யபி |**
**தாத்ரைவ ஸ்ருஷ்டா ஹ்யாத்யாஷ்ச ப்ராணிநோத்தார ஏவச || 30**

*தினமும் உண்ணத் தக்கவைகளான பிராணிகளை உண்பவனுக்கு தோஷம் ஏதுமில்லை. பிரம்மாவே எவையெவை உண்ணலாம், அவற்றை யார்யார் உண்ணலாம் என்று விதி வகுத்துள்ளார்.*

यज्ञाय जग्धिर् मांसस्येत्येष दैवो विधिः स्मृतः।
अतोऽन्यथाप्रवृत्तिस् तु राक्षसो विधिरुच्यते॥

**யக்ஞாய ஜக்திர் மாம்சஸ்யேத்யேஷ தைவோ விதி: ஸ்ம்ருத: |**
**அதோ அந்யதா ப்ரவ்ருத்திஸ்து ராட்சஸோ விதிருச்யதே || 31**

*யக்ஞுத்துக்காக உயிர் வதை செய்து, ஹோமம் செய்து மிகுதியைச் சாப்பிடுவது தெய்வ விதி எனப்படும். தனக்காக மாமிசம் சாப்பிடுவது ராட்சச விதி எனப்படும்.*

क्रीत्वा स्वयं वाऽप्युत्पाद्य परोपकृतमेव वा।
देवान् पितृंश् चार्चयित्वा खादन् मांसं न दुष्यति॥

**க்ரீத்வா ஸ்வயம் வாப்யுத் பாத்ய பரோபக்ருதமேவ வா |**
**தேவாந் பித்ரூந்ஷ்சார் சயித்வாகாதந் மாம்சம் ந துஷ்யதி || 32**

*வாங்கியதாக இருந்தாலும், தானே தேடிப் பெற்றதாக இருந்தாலும், பிறர் கொடுத்ததாக இருந்தாலும் தேவ பித்ருக்களுக்கு வழங்கி மிகுதியை உண்பவன் மாமிசம் சாப்பிட்ட தோஷத்தை அடைய மாட்டான்.*

नाऽद्यादविधिना मांसं विधिज्ञोऽनापदि द्विजः।
जग्ध्वा ह्यविधिना मांसं प्रेतस् तैरद्यतेऽवशः॥

**நாத்யாதவிதிநா மாம்சம் விதிக்ஞோ நாபதி த்விஜ: |**
**ஜக்த்வாஹ்யவிதிநா மாம்சம் ப்ரேத்ய தைரத்யதே அவஷ: || 33**

*மாமிசம் சாப்பிடுவதற்கான இந்த விதிகளை அறிந்த இரு பிறப்பாளன். விதியை மீறி தேவ பித்ருக்களுக்கு வழங்காமல் சாப்பிடுவது, உயிருக்கு ஆபத்தற்ற காலத்திலும் சாப்பிடுவது என்று மாமிச உணவில் விருப்போடு சாப்பிட்டால், மரணத்துக்குப் பின் எந்த பிராணியின் மாமிசத்தை உண்டானோ, அந்தப் பிராணியால் தான் உண்ணப்படுவான்.*

न तादृशं भवत्येनो मृगहन्तुर् धनाऽर्थिनः।
यादृशं भवति प्रेत्य वृथामांसानि खादतः॥

**நதாத்ருஷம் பவத்யேநோ ம்ருகஹந்துர்தநார்திந: |**
**யாத்ருஷம் பவதி ப்ரேத்ய வ்ருதா மாம்சாநி காதத: || 34**

*தேவபித்ருக்களுக்கு அளிக்காமல் தனக்காக மாமிசம் தயார் செய்து சாப்பிடுபவன் அடையும் அளவு பாபத்தை ஜீவனத்துக்காக மிருகங்களைக் கொன்று விற்கும் வேடுவன்கூட அடைய மாட்டான்.*

नियुक्तस् तु यथान्यायं यो मांसं नाऽत्ति मानवः।
स प्रेत्य पशुतां याति सम्भवानेकविंशतिम्॥

**நியுக்தஸ்து யதாந்யாயம் யோ மாம்சம் நாத்திமாநவ: |**
**ஸப்ரேத்ய பஷுதாம் யாதி ஸம்பவாநேகவிம்ஷதிம் || 35**

*சிராத்தத்தில் நியமிக்கப்பட்டவன், சாஸ்திரப்படி கொடுத்த மாமிசத்தை உண்ண மறுத்தால் பிறவி முடிந்ததும் இருபத்தொரு பிறவிகள் விலங்காகப் பிறப்பான்.*

असंस्कृतान् पशून् मन्त्रैर् नाऽद्याद् विप्रः कदाचन।
मन्त्रैस् तु संस्कृतानद्याच् छश्वतं विधिमास्थितः॥

**அஸம்ஸ்க்ருதாந் பஷூந் மந்த்ரைர் நாத்யாத்விப்ர: கதாசந |**
**மந்த்ரைஸ்து ஸம்ஸ்க்ருதாநத்யாச்சாஷ்வதம் விதிமாஸ்தித: || 36**

*வேதமந்திரங்களால் தீர்த்தம் தெளிக்கப்படாமல், வெறுமனே கொல்லப்பட்ட விலங்குகளை பிராம்மணன் எந்நாளும் சாப்பிடக் கூடாது.*

*வேதமந்திரங்களால் தீர்த்தம் தெளிக்கப்பட்ட யாகங்களில் கொடுக்கப்பட்ட மாமிசத்தைச் சாப்பிடுவது ஆசாரமானது.*

कुर्याद् घृतपशुं सङ्गे कुर्यात् पिष्टपशुं तथा।
न त्वेव तु वृथा हन्तुं पशुमिच्छेत् कदाचन॥

**குர்யாத் க்ருதபசும் ஸங்கே குர்யாத்பிஷ்டபஷும் ததா |**
**நித்வேவ து வ்ருதா ஹந்தும் பஷுமிச்சேத்கதாசந || 37**

*மாமிசத்தில் ஆசை ஏற்படின் நெய், மாவினால் மிருகம் போன்ற உருவைச் செய்து சாப்பிடவேண்டுமேயன்றி யக்ஞங்கள் எதுவுமில்லாமல் வெறுமநே ஜீவஹிம்சை செய்யக்கூடாது.*

यावन्ति पशुरोमाणि तावत्कृत्वो ह मारणम्।
वृथापशुघ्नः प्राप्नोति प्रेत्य जन्मनि-जन्मनि॥

**யாவந்தி பஷுரோயாணி தாவத்க்ருத்வோ ஹ மாரணம் |**
**வ்ருதா பஷுக்ந: ப்ராப்நோதி ப்ரேத்யஜந்மநி ஜந்மநி || 38**

*அப்படி வெறுமனே மிருகவதை செய்பவன் இறந்தபிறகு, இவன் கொன்ற மிருகத்தின் உடலில் எத்தனை ரோமங்கள் இருந்தனவோ, அத்தனை பிறவிகள் எடுத்து பிறரால் கொல்லப்படுவான்.*

यज्ञार्थं पशवः सृष्टाः स्वयमेव स्वयम्भुवा।
यज्ञश् च भूत्यै सर्वस्य तस्माद् यज्ञे वधोऽवधः॥

**யக்ஞார்த்தம் பஷவஸ்ஸ்ருஷ்டா: ஸ்வயமேவ ஸ்வயம்புவா |**
**யக்ஞோ அஸ்ய பூத்யை ஸர்வஸ்யதஸ்மாத் யக்ஞேவதோ அவத: || 39**

*யக்ஞத்துக்காக பிரம்மா மிருகங்களைப் படைத்தார். இவ்வுலகின் நன்மைக்காக யக்ஞம் உருவாக்கப்பட்டது. எனவே யக்ஞத்துக்காக செய்யும் மிருகவதை, வதையாகாது.*

ओषध्यः पशवो वृक्षास् तिर्यञ्चः पक्षिणस् तथा।
यज्ञार्थं निधनं प्राप्ताः प्राप्नुवन्त्युच्छ्रितीः पुनः॥

**ஓஷத்ய: பஷவோ வ்ருக்ஷா ஸ்திர்யங்க: பக்ஷிணஸ்ததா |**
**யக்ஞார்த்தம் நிதநம் ப்ராப்தா: ப்ராப்நு வந்த்யுத்ஸ்ருதீ: புந: || 40**

*தானியங்கள், மிருகங்கள், மரங்கள், ஔஷதிகள், பறவைகள் போன்ற அனைத்தும் யக்ஞத்துக்காக நசித்து, பிறகு உத்தம பிறவியை அடைகின்றன.*

मधुपर्के च यज्ञे च पितृदैवतकर्मणि।
अत्रैव पशवो हिंस्या नान्यत्रेत्यब्रवीन् मनुः॥

**மதுபர்கே சயக்ஞே ச பித்ருதைவதகர்மணி |**
**அத்ரைவ பஷவோ ஹிம்ஸ்யா நாந்யத்தேத்ய ப்ரவீந்மநு: || 41**

*மதுபர்கத்தோடு தேவ பித்ரு கிரியைகளில் யக்ஞத்தில் மட்டும் மிருகவதை செய்யலாம். மற்றபடி செய்யக்கூடாது என்று மனு கட்டளையிட்டுக் கூறுகிறார்.*

एष्वर्थेषु पशून् हिंसन् वेदतत्त्वार्थविद् द्विजः।
आत्मानं च पशुं चैव गमयत्युत्तमां गतिम्॥

**ஏஷ்வர்த்தேஷு பசூந் ஹிம்ஸந் வேததத்வார்த்தவித் த்விஜ: |**
**ஆத்மாநம்ச பசூந்ஷ்சைவ கமயத்யுத்தமாம் கதிம் || 42**

மேலே கூறியபடி மிருகவதை செய்யும் வேத வேதாந்தங்களை நன்கறிந்த இருபிறப்பாளன் தன்னையும் அந்த மிருகத்தையும் உத்தம கதியை அடையச் செய்கிறான்.

गृहे गुरावरण्ये वा निवसन्नात्मवान् द्विजः।
नाऽवेदविहितां हिंसामापद्यपि समाचरेत्॥

**க்ருஹே குராவரண்யே வா நிவஸந் ஆத்மவாந் த்விஜ: |**
**நாவேதவிஹிதாம் ஹிம்ஸாமாபத்யபி ஸமாசரேத் ||** 43

தன்னை அறிந்த இருபிறப்பாளன், கிருஹஸ்தனாக இருந்தாலும், பிரம்மச்சாரியாக இருந்தாலும், வானபிரஸ்தனாக இருந்தாலும், எந்நிலையிலும், ஆபத்து காலத்திலும்கூட மிருகவதை செய்யலாகாது.

या वेदविहिता हिंसा नियताऽस्मिंश् चराचरे।
अहिंसामेव तां विद्याद् वेदाद् धर्मो हि निर्बभौ॥

**யா வேதவிஹிதா ஹிம்சா நியதா அஸ்மிந்சராசரே |**
**அஹிம்ஸாமேவ தாம் வித்யாத்வேதாத் தர்மோ ஹி நிர்பபௌ ||** 44

வேதம் விதித்தது ஹிம்சையாயினும் இந்த சராசரி உலகத்தில் அது அஹிம்சையேயாகும். வேதத்திலிருந்தே அல்லவா தர்மம் நன்கு விளங்குகிறது.

योऽहिंसकानि भूतानि हिनस्त्यात्मसुखेच्छया।
स जीवंश् च मृतश् चैव न क्वचित् सुखमेधते॥

**யோ அஹிம்சகாநி பூதாநி ஹிநப்த்யாத்ம சுகேச்சயா |**
**ஸ ஜீவம்ஷ்ச ம்ருதஷ்சைவ ந க்வசித் சுகமேததே ||** 45

யாருக்கும் எந்த தீங்கும் இழைக்காததான விலங்குகளை (மான் போன்றவை) தனக்காக ஹிம்சிப்பவன், தான் உயிரோடிருக்கும் போதே இறந்தவனுக்கு சமமாவான். அவன் உயிரோடிருக்கும் போதும் இறந்த பின்னும் எவ்விடத்திலும் உருப்பட மாட்டான்.

यो बन्धनवधक्लेशान् प्राणिनां न चिकीर्षति।
स सर्वस्य हितप्रेप्सुः सुखमत्यन्तमश्नुते॥

**யோ பந்தநவதக்ளேஷாந் ப்ராணிநாம் நசிகீர்ஷதி |**
**ஸ ஸர்வஸ்ய ஹிதப்ரேப்சு: சுகமத்யந்த மஷ்நுதே ||** 46

எவன், பிராணிகளை கட்டிப் போடுவது, பிராணிகளைக் கொல்வது, ஹிம்சிப்பது இவைகளைச் செய்யமாட்டானோ, எல்லா உயிர்களுக்கும் நன்மையைக் கோருகிறானோ, அவன் குறைவற்ற மேலான சுகங்களை அடைவான்.

यद् ध्यायति यत् कुरुते धृतिं बध्नाति यत्र च।
तदवाप्नोत्ययत्नेन यो हिनस्ति न किञ्चन॥

**யத்த்யாயதி யத்குருதே த்ருதிம் பத்நாதி யத்ரச |**
**ததவாப்நோதி அயத்நேந யோஹிநஸ்தி ந கிஞ்சந || 47**

மேலும் இவன், எவ்வுயிர்க்கும் தீங்கு நினையாதவன் அடையும் பலனையும், அதிகமாக தர்மங்களைச் செய்து பலனடைய நினைப்பவன் எத்தகைய பலனை அடைகிறானோ அந்தப் பலனையும், உயர்வான புகழுக்குரிய செயலைச் செய்பவன் அடையும் பலனையும், பரத்துவத்தை தியானிப்பவன் அடையும் பலனையும் எவ்வித முயற்சியும் இன்றி அடைகிறான்.

नाऽकृत्वा प्राणिनां हिंसां मांसमुत्पद्यते क्वचित्।
न च प्राणिवधः स्वर्ग्यस् तस्मान् मांसं विवर्जयेत्॥

**நாக்ருத்வா ப்ராணிநாம் ஹிம்ஸாம் மாம்ஸமுத்பத்யதே க்வசித் |**
**ஸச ப்ராணிவதஸ் ஸ்வர்க்யஸ்தஸ்மாந் மாம்ஸம் விவர்ஜயேத் || 48**

பிராணிகளை ஹிம்சிக்காமல் மாமிசம் கிடைக்காது. பிராணி ஹிம்சை செய்தாலோ ஸ்வர்க்கலோகம் கிட்டாது. எனவே சாஸ்திர விதியின்றி மாமிசம் சாப்பிடுவதை அறவே விடவேண்டும்.

समुत्पत्तिं च मांसस्य वधबन्धौ च देहिनाम्।
प्रसमीक्ष्य निवर्तेत सर्वमांसस्य भक्षणात्॥

**ஸமுத்பத்திம் ச மாம்ஸஸ்ய வதபந்தௌ ச தேஹிநாம் |**
**ப்ரஸமீக்ஷ்ய நிவர்தேத ஸர்வ மாம்ஸஸ்ய பக்ஷணாத் || 49**

மாமிச ஆசைக்கு மூலகாரணம் பிராணிகளைப் பிடிக்கவும் கொல்லவும தூண்டுகிறது. இதை எண்ணிப் பார்த்து சகல மாமிசங்களையும் உண்ணாமை வேண்டும்.

न भक्षयति यो मांसं विधिं हित्वा पिशाचवत्।
स लोके प्रियतां याति व्याधिभिश् च न पीड्यते॥

**ந பக்ஷயதியோ மாம்சம் விதிம் ஹித்வா பிசாசவத் |**
**ஸ லோகே ப்ரியதாம் யாதி வ்யாதிபிஷ்ச ந பீட்யதே || 50**

பிசாசைப் போன்று தின்று கொண்டிருக்காமல், மாமிசத்தை விட்டவன் எவனோ அவன் எல்லாவுயிர்க்கும் அன்பானவன். அவனுக்கு .எந்த நோயும் வராது. சாஸ்திர முறையில்லாமல் செய்த மாமிசங்களை உண்பவனுக்கு நோய்கள் ஏற்படும்.

अनुमन्ता विशसिता निहन्ता क्रयविक्रयी।
संस्कर्ता चोपहर्ता च खादकश् चेति घातकाः॥

**அநுமந்தா விஷஸிதா நிஹந்தா க்ரய விக்ரயீ |**
**ஸம்ஸ்கர்தா சோபஹர்தா ச காதகஷ்சேதி காதுகா: ||** 51

*பிராணியைக் கொல்லச் சொல்பவன், பிராணிகளின் அங்கங்களை வெட்டுபவன், பிராணிகளைக் கொல்பவன், மாமிசத்தை வாங்குபவன், விற்பவன், அதைச் சமைப்பவன், பரிமாறுபவன், சாப்பிடுபவன் இவர்கள் அனைவருமே கொடியவர்கள்.*

स्वमांसं परमांसेन यो वर्धयितुमिच्छति।
अनभ्यर्च्य पितॄन् देवांस् ततोऽन्यो नास्त्यपुण्यकृत्॥

**ஸ்வமாம்சம் பரமாம்சேநயோ வர்தயிதுமிச்சதி |**
**அநப்யர்ச்ய பித்ரூந் தேவாம்ஸ்ததோ அந்யோ நாஸ்தி அபுண்யக்ருத் || 52**

*எவன் யக்ஞங்களாலும் சிராத்தங்களாலும் தேவபித்ரு பூஜைகளுக் கல்லாமல், மற்றவைகளின் மாமிசத்தால் தன் மாமிசத்தைப் பெருக்க வைக்க நினைக்கிறனோ, அவனைவிட பாவி வேறொருவனுமில்லை.*

वर्षेवर्षेऽश्वमेधेन यो यजेत शतं समाः।
मांसानि च न खादेद् यस् तयोः पुण्यफलं समम्॥

**வர்ஷே வர்ஷே அஸ்வமேதேந யோ யஜேத ஷதம் ஸமா: |**
**மாம்சாநி ச ந காதேத்யஸ்தயோ: புண்யபலம் ஸமம் ||** 53

*எவன் நூறாண்டுகள் ஒவ்வொரு ஆண்டும் அஸ்வ மேதயாகம் செய்கிறானோ அவனுடைய புண்ணிய பலனும், மாமிசம் சாப்பிடாத வனுடைய புண்ணிய பலனும் சமம்.*

फलमूलाऽशनैर् मेध्यैर् मुन्यन्नानां च भोजनैः।
न तत् फलमवाप्नोति यन् मांसपरिवर्जनात्॥

**பலமூலாஷநைர்மேத்யைர் முந்யந்நாநாம் ச போஜநை: |**
**ந தத் பலமவாப்நோதி யந்மாம்ஸ பரிவர்ஜநாத் ||** 54

*பழம், கிழங்குகள் முதலானவைகளை உண்டு வாழும் முனிவனை விட அதிக பலனை சாஸ்திரம் கூறிய படியல்லாத மாமிச உணவை விட்டவன் அடையமுடியும்.*

मां स भक्षयिताऽमुत्र यस्य मांसमिहाऽद्म्यहम्।
एतन् मांसस्य मांसत्वं प्रवदन्ति मनीषिणः॥

**மாம்ஸ பக்ஷயிதாஅமுத்ர யஸ்ய மாம்ஸமிஹாத்மம்யஹம் |**
**ஏதத்மாம்ஸஸ்ய மாம்ஸத்வம் ப்ரவதந்தி மநீஷிண: || 55**

இவ்வுலகில் எதனுடைய மாமிசத்தை ஒருவன் உண்கிறானோ, அது வேறுலகில் அவனுடைய மாமிசத்தை உண்ணும் - என்பதாக மாமிசம் என்னும் சொல்லுக்கு அறிஞர்கள் பொருள் கூறுகின்றனர். இந்தச் சொல்லைப் பிரித்துப் பொருள் பார்த்தால்-, 'மாம்' என்றால் 'என்னை' என்று பொருள். 'ச:' என்றால் அது என்று பொருள். என்னை அது தின்னும் என்பதே மாமிசத்தின் பொருள்.

न मांसभक्षणे दोषो न मद्ये न च मैथुने।
प्रवृत्तिरेषा भूतानां निवृत्तिस् तु महाफला॥

**ந மாம்ஸபக்ஷணே தோஷோ ந மத்யே ந ச மைதுநே |**
**ப்ரவ்ருத்திரேஷா பூதாநாம் நிவ்ருத்திஸ்து மஹாபலா || 56**

விதிமுறை மீறாமல் மைதுனம் (பெண்சேர்க்கை), மத்யம் (மது), மாமிசம் இவைகளை அனுபவிப்பது தோஷமன்று. ஆனாலும் இவைகளில் ஆசை வைக்காமல் இருப்பதே மிக்க நற்பலனைத் தரும்.

प्रेतशुद्धिं प्रवक्ष्यामि द्रव्यशुद्धिं तथैव च।
चतुर्णामपि वर्णानां यथावदनुपूर्वशः॥

**ப்ரேத சுத்திம் ப்ரவக்ஷ்யாமி த்ரவ்ய சுத்திம் ததைவ ச |**
**சதுர்ணாமபி வர்ணாநாம் யதாவதநு பூர்வஷ: || 57**

நான்கு வர்ணத்தாருக்கும் இறப்புத் தீண்டல் சுத்தமாவதைப் பற்றியும், திரவியங்களின் சுத்தம் பற்றியும் கூறுகிறேன்.

दन्तजातेऽनुजाते च कृतचूडे च संस्थिते।
अशुद्धा बान्धवाः सर्वे सूतके च तथोच्यते॥

**தந்தஜாதே அநுஜாதே ச க்ருதசூடே ச ஸம்ஸ்திதே |**
**அசுத்தா பாந்தவாஸ்ஸர்வே சூதகே ச ததோச்யதே || 58**

பற்கள் முளைத்துக் கொண்டிருக்கும் நிலையில் உள்ளவன் (பாலன்), நன்கு முளைத்தவன், குடுமி வைத்தவன், பூணூல் அணிந்தவன் - இவர்கள் இறந்தால் பங்காளிகள் அனைவருக்கும் தீட்டு உண்டு.

दशाहं शावमाशौचं सपिण्डेषु विधीयते।
अर्वाक् सञ्चयनादस्थ्नां त्र्यहमेकाहमेव वा॥

**தஷாஹம் ஷாவமாசௌசம் சபிண்டேஷு விதீயதே |**
**அர்வாக் ஸஞ்சய நாதஸ்த்நாம் த்ர்யஹமேகா ஹமேவ ச || 59**

பிராம்மணர்களில், சபிண்டர்களுக்கு (பங்காளிகளுக்கு) இறப்புத் தீட்டு பத்து நாட்கள் இருக்கும். வேதாத்யயனம் போன்றவற்றால் சிலருக்கு இந்த தீட்டு சீக்கிரம் முடியும். வேதங்களை முழுமையாக ஓதி அக்னி ஹோத்ரம் செய்யும் ஆசாரசீலனுக்கு ஒருநாள் மட்டுமே தீட்டு. வேதங்களை ஓதுபவனாக மட்டும் இருந்தால் மூன்று நாட்கள் தீட்டு. அக்னிஹோத்ரம் மட்டும் செய்பவனாக இருந்தால் நான்கு நாட்கள் தீட்டு. இது எதுவும் இல்லாதவனுக்கு பத்து நாட்கள் தீட்டு.

**सपिण्डता तु पुरुषे सप्तमे विनिवर्तते।**
**समानोदकभावस् तु जन्मनाम्नोरवेदने॥**

**ஸபிண்டதா து புருஷே ஸப்தமே விநிவர்ததே |**
**ஸமாநோதக பாவஸ்து ஜன்மநாம்நோரவேதநே || 60**

ஒருவனுக்கு தன்னோடு சேர்த்து ஏழுதலைமுறை வரை சபிண்டத்துவம் இருக்கும். இன்னார் மகன் இன்னார் என்று தெரியும் வரை சமான உதகத்துவம் (எள்ளும், நீரும் வார்ப்பது) இருக்கும். தெரியாதபோது இல்லை.

தான், தன் தந்தை (பிதா), அவருடைய தந்தை (பிதாமஹர்), அவருடைய தந்தை (பிரபிதாமகர்), அவருடைய தந்தை (பிரபிதாமகரின் பிதா), அவருடைய தந்தை (பிரபிதாமகரின் பிதாமஹர்), அவருடைய தந்தை (பிரபிதாமகரின் பிரபிதாமகர்) என்று மொத்தம் ஏழு தலைமுறையினர்.

ஒருவனுக்கு தனக்கு முன்புள்ள ஆறு தலைமுறையினரும் சபிண்டர்கள் எனப்படுவர்.

இவர்களில் ஏழாவதாகக் கூறப்பட்ட பிரபிதாமகரின் பிரபிதா மகருக்கு கூடஸ்தர் என்று பெயர். இந்த கூடஸ்தருக்கும் முன் இருந்தவர்களின் சந்ததியினர் சமாநோதகர் எனப்படுவர். தனக்குக்கீழ் ஏழு சந்ததியினரும் சமாநோதகர் எனப்படுவர்.

**यथेदं शावमाशौचं सपिण्डेषु विधीयते।**
**जननेऽप्येवमेव स्यान् निपुणं शुद्धिमिच्छताम्॥**

**யதேதம் ஷாவமாசௌசம் ஸபிண்டேஷு விதீயதே |**
**ஜநநேப்யேவமேவ ஸ்யாந்நிபுணாம் சுத்திமிச்சதாம் || 61**

மரணத்தீட்டு சபிண்டர்களுக்கு உள்ளது போலவே ஜனனத் தீட்டும் பரிசுத்தம் விரும்புகின்றவர்களான சபிண்டர்களுக்கு உண்டு.

**सर्वेषां शावमाशौचं मातापित्रोस् तु सूतकम्।**
**सूतकं मातुरेव स्यादुपस्पृश्य पिता शुचिः॥**

**ஸர்வேஷாம் ஷாவமாஷெளசம் மாதா பித்ரோஸ்து ஸூதகம் |**
**ஸூதகம் மாதுரேவஸ்யாது பஸ்ப்ருஷ்ய பிதா சுசி: ||** 62

மரணத்தீட்டில் பிறர் தொடக்கூடாத தீட்டு சபிண்டர்கள் அனைவருக்கும் பொதுவானது.

ஜனனத்தீட்டு அப்படியல்ல. குழந்தை பிறந்ததால் ஏற்படும் தீட்டு தாய்க்கு பத்து நாட்கள். தந்தைக்கு, குழந்தையைத் தொட்டால் தீட்டு. நீராடியதும் தீட்டுப்போய் சுத்தி ஏற்படும்.

निरस्य तु पुमाञ् शुक्रमुपस्पृश्यैव शुध्यति।
बैजिकादभिसम्बन्धादनुरुन्ध्यादघं त्र्यहम्॥

**நிரஸ்ய து புமாந் சுக்ரமுபஸ்ப்ருஷ்யைவ சுத்யதி |**
**பைஜிகாதபி ஸம்பந்தாதநுருந்த்யாதகம் த்ரயஹம் ||** 63

காமத்தால் ஒருவன் வீரியத்தை விட்டால் நீராடுவதால் பரிசுத்தமடைவான். பிறர் மனைவியுடன் கூடுபவனுக்கு மூன்று தினங்கள் மட்டும் தீட்டு உண்டு.

अह्रा चैकेन रात्र्या च त्रिरात्रैरेव च त्रिभिः।
शवस्पृशो विशुध्यन्ति त्र्यहादुदकदायिनः॥

**அஹ்நாசைகேந ராத்ர்யா ச த்ரிராத்ரைரேவ ச த்ரிபி: |**
**ஷவஸ்ப்ருஷோ விசுத்யந்தி த்ரியஹாதுதக தாயிந: ||** 64

சபிண்டர்கள் பத்து நாட்களுக்குப் பிறகு தீட்டு நீங்கி சுத்த மடைவார்கள். அன்பால் சவத்தைத் தொட்டவர்களும் பத்து நாட்களுக்குப் பிறகு சுத்தமடைவார்கள்.

சமாநோதகர்கள் மூன்று தினங்களுக்குப் பிறகு சுத்தமடைவர்.

गुरोः प्रेतस्य शिष्यस् तु पितृमेधं समाचरन्।
प्रेतहारैः समं तत्र दशरात्रेण शुध्यति॥

**குரோ: ப்ரேதஸ்ய ஷிஷ்யஸ்து பித்ருமேதம் சமாசரந் |**
**ப்ரேதஹார்தைஸ்ஸமம் தத்ர தஷராத்ரேண சுத்யதி ||** 65

குருவுக்கு ஈமக் கடன்களைச் செய்த சிஷ்யன், குருவின் பங்காளிகளோடுகூட தானும் பத்து நாட்களில் சுத்தியடைவான்.

रात्रिभिर् मासतुल्याभिर् गर्भस्रावे विशुध्यति।
रजस्युपरते साध्वी स्नानेन स्त्री रजस्वला॥

**ராத்ரிபிர்மாஸதுல்யாவிர் கர்பஸ்ராவே விஷுத்யதி |**
**ரஜஸ்யுபரதே ஸாத்வீ ஸ்நாநேந ஸ்த்ரீ ரஜஸ்வலா ||** 66

பெண்ணுக்கு, மூன்றாவது மாதம் முதல், கர்ப்பச் சிதைவு ஏற்பட்டால், கர்ப்பம் எத்தனை மாதங்களோ அத்தனை நாட்களும் தீட்டு.

ரஜஸ்வலையான (மாதவிலக்கான) பெண் ரஜஸ் (ரத்தம்) நின்றபிறகு சுத்தமடைவாள்.

नृणामकृतचूडानां विशुद्धिर् नैशिकी स्मृता ।
निर्वृत्तचूडकानां तु त्रिरात्राच् छुद्धिरिष्यते ॥

**ந்ருணாமக்ருத சூடாநாம் விசுத்திர்நைஷிகீ ஸ்ம்ருதா |**
**நிர்வ்ருத்தசூடகாநாம் து த்ரிராத்ராச் சுத்திரிஷ்யதே || 67**

குடுமி வைத்தல் என்னும் கிரியை நடக்காத பாலன் இறந்தால், சபிண்டர்கள் ஒருபகலும் இரவும் தீட்டுக் காக்க வேண்டும். குடுமிவைத்தல் என்னும் கிரியை நடந்த பாலனுக்கு சபிண்டர்கள் மூன்று நாட்கள் தீட்டுக் காக்க வேண்டும்.

ऊनद्विवार्षिकं प्रेतं निदध्युर् बान्धवा बहिः ।
अलङ्कृत्य शुचौ भूमावस्थिसञ्चयनादृते ॥

**ஊநத்விவார்ஷிகம் ப்ரேதம் நிதத்யுர்பாந்தவா: பஹி: |**
**அலங்க்ருத்ய சுசௌ பூமாவஸ்திஸஞ்சயநா த்ருதே || 68**

இரண்டு வயது நிறையாத குழந்தை இறந்தால், அந்த பிரேதத்தை அலங்கரித்து ஊருக்கு வெளியே சுத்தமான பூமியில் புதைக்க வேண்டும்.

नाऽस्य कार्योऽग्निसंस्कारो न च कार्योदकक्रिया ।
अरण्ये काष्ठवत् त्यक्त्वा क्षपेत त्र्यहमेव च ॥

**நாஸ்ய கார்யோ அக்நிஸம்ஸ்காரோ நச கார்யோதக க்ரியா |**
**அரண்யே காஷ்டவத் த்யக்த்வா க்ஷபேயுஸ்த்ர்யஹமேவச || 69**

இரண்டு வயது நிறையாத குழந்தைகளுக்கு அக்னி சமஸ்காரம் என்னும் தகனக்கிரியை (எரித்தல்) கிடையாது. உதகதானம் (எள்ளால் தர்ப்பணம்) கிடையாது. ஆரண்யத்தில் விறகை விட்டெறிவது போல் சவத்தைக் கொண்டு போய் புதைத்து விட்டு வர வேண்டியது மட்டுமே. இதற்கு மூன்று நாட்கள் தீட்டு.

नाऽत्रिवर्षस्य कर्तव्या बान्धवैरुदकक्रिया ।
जातदन्तस्य वा कुर्युर् नाम्नि वाऽपि कृते सति ॥

**நாத்ரி வர்ஷஸ்ய கர்தவ்யா பாந்தவைருதக க்ரியா |**
**ஜாத தந்தஸ்ய வா குர்யுர்நாம்நி வாபி க்ருதே ஸதி || 70**

மூன்று வயது நிரம்பாத பாலகனுக்கு தந்தையோ சபிண்டர்களோ தர்ப்பணம் (உதகதானம்) செய்ய வேண்டியதில்லை.

நாமகரணமானவனுக்கும், பற்கள் முளைத்தவனுக்கும் அன்பின் காரணமாக உதகதானம் செய்யவும் செய்யலாம். செய்யாமலும் விடலாம்.

सब्रह्मचारिण्येकाऽहमतीते क्षपणं स्मृतम्।
जन्मन्येकोदकानां तु त्रिरात्राच् छुद्धिरिष्यते॥

**ஸப்ரஹ்மசாரிண்யே காஹமதீதே க்ஷபணம் ஸ்ம்ருதம் |**
**ஜந்மந்யேகோதகாநாம் து த்ரிராதராச்சுத்திரிஷ்யதே || 71**

உடன் வேதம் படித்தவன் இறந்தால் ஒருநாள் தீட்டு. புத்திரன் பிறந்தால், சகோதரர்களுக்கு மூன்று நாட்கள் தீட்டு.

स्त्रीणामसंस्कृतानां तु त्र्यहाच् छुध्यन्ति बान्धवाः।
यथोक्तेनैव कल्पेन शुध्यन्ति तु सनाभयः॥

**ஸ்த்ரிணாமஸம்ஸ்க்ருதாநாம் து த்ரியஹாச்சுத் யந்திபாந்தவா: |**
**யதோகேநைவ கல்பேந ஷுத்யந்தி து ஸநாபய: || 72**

ஒரு பெண்ணை ஒருவனுக்கு அளிப்பதாக வாக்குத்தத்தம் செய்த பிறகு அந்தப் பெண் இறந்தால், நிச்சயம் செய்யப்பட்ட அவனுக்கும் அவன் பங்காளிகளுக்கும் மூன்று நாட்கள் தீட்டு.

திருமணமான பிறகு இறந்தால், அவளின் தந்தை, தந்தையின் பங்காளிகளுக்கு மூன்று நாட்கள் தீட்டு.

अक्षारलवणाऽन्नाः स्युर् निमज्जेयुश् च ते त्र्यहम्।
मांसाऽशनं च नाऽश्नीयुः शयीरंश् च पृथक् क्षितौ॥

**அக்ஷாரலவணாந்நாஸ் ஸ்யுர்நிமஜ்ஜேயுஷ்ச தேத்ரயஹம் |**
**மாம்ஸாஷநம் ச நாஷ்நீயு: ஷயீரம்ஷ்ச ப்ருதக்க்ஷிதௌ || 73**

அவ்வாறு மூன்று நாள் தீட்டுள்ளவர்கள், அந் நாட்களில் உப்பில்லாத அன்னத்தைச் சாப்பிட வேண்டும். நதிகளில் நீராட வேண்டும். மாமிசம் சாப்பிடக் கூடாது. தரையில் படுக்க வேண்டும். பெண் சேர்க்கை கூடாது.

सन्निधावेष वै कल्पः शावाऽशौचस्य कीर्तितः।
असन्निधावयं ज्ञेयो विधिः सम्बन्धिबान्धवैः॥

**ஸந்நிதாவேஷ வை கல்பஷ்ஷாவாஷௌசஸ்ய கீர்த்தித: |**
**அஸந்நிதாவயம் ஞேயோ விதிஸ்ஸம்பந்தி பாந்தவை: || 74**

இறந்தவரின் அருகிலிருப்போருக்கே இதுவரை கூறியவை பொருந்தும். வெளியூர்களிலிருப்போரான சபிண்டர்களுக்கும் சமாநோதகர்களுக்குமான விதிமுறைகளை இனி கூறுகிறேன்.

विगतं तु विदेशस्थं शृणुयाद् यो ह्यनिर्दशम्।
यच्छेषं दशरात्रस्य तावदेवाऽशुचिर् भवेत्॥

**விகதம் து விதேஷஸ்தம் ஷ்ருணுயாத்யோ ஹ்யநிர்தஷம் |**
**யச்சேஷம் தஷராத்ரஸ்ய தாவதேவாசுசிர்பவேத் ||** 75

வெளியூர்களில் இருப்பவர்கள் ஜனன மரணங்களை பத்து நாட்கள் கடப்பதற்கு முன்பே கேள்விப்பட்டால், அந்த நாட்கள் போக, மிகுந்த தினங்கள் தீட்டுக் காக்க வேண்டும்.

अतिक्रान्ते दशाहे च त्रिरात्रमशुचिर् भवेत्।
संवत्सरे व्यतीते तु स्पृष्ट्वैवाऽपो विशुध्यति॥

**அதிக்ராந்தே தஷாஹே ச த்ரிராத்ரமசுசிர்பவேத் |**
**ஸம்வத்ஸரே சுப்தீதே து ஸ்ப்ருஷ்ட்வைவாபோவிசுத்யதி ||** 76

இறந்து பத்து இரவுகள் கடந்தபிறகு தெரிந்தால், சபிண்டர்களும், சமானோதகர்களும் மூன்று நாட்கள் தீட்டுக் காக்க வேண்டும். ஒருவருடம் சென்றபிறகு தெரிந்தால் நீராடுவதால் சுத்தமடைவார்கள்.

निर्दशं ज्ञातिमरणं श्रुत्वा पुत्रस्य जन्म च।
सवासा जलमाप्लुत्य शुद्धो भवति मानवः॥

**நிர்தஷம் ஞாதிமரணம் ஷ்ருத்வாப்ளுத்ரஸ்ய ஜன்ம ச |**
**ஸவாஸா ஜலமாப்ளுத்ய சுத்தோ பவதி மாநவ: ||** 77

பத்து நாட்கள் கடந்த பிறகு பங்காளியின் மரணத்தைக் கேள்விப் பட்டாலோ, அல்லது குழந்தை ஜனனத்தைக் கேள்விப் பட்டாலோ, கட்டிய வேட்டியுடன் நீராட சுத்தி ஏற்படும்.

बाले देशान्तरस्थे च पृथक्पिण्डे च संस्थिते।
सवासा जलमाप्लुत्य सद्य एव विशुध्यति॥

**பாலே தேஷாந்தரஸ்தே ச ப்ருதக்பிண்டே ச சம்ஸ்திதே |**
**ஸவாஸா ஜலமாப்ளுத்ய ஸத்ய ஏவ விசுத்யதி ||** 78

வெளியூரிலிருக்கும் குடுமி வைக்காத பாலகன் இறந்தாலும், மூன்று நாட்கள் தீட்டுள்ள சமாநோதகன் இறந்தாலும் கட்டிய வேட்டியோடு நீராட உடனே சுத்தி ஏற்படும்.

अन्तर्दशाऽहे स्यातां चेत् पुनर् मरणजन्मनी।
तावत् स्यादशुचिर् विप्रो यावत् तत् स्यादनिर्दशम्॥

**அந்தர் தஷாஹே ஸ்யாதாம் சேத்புநர்மரணஜன்மநீ |**
**தாவத்ஸ்யாதசுசிர்விப்ரோ யாவத்ததாஸ்யாதநிர்தஷம் ||** 79

பத்து நாட்களுக்குள் மீண்டும் பத்துநாள் தீட்டுடைய மரணமோ ஜனனமோ நிகழ்ந்தால், முதல் பத்துநாள் தீட்டு எதுவரையோ அதுவரை மட்டுமே தீட்டுக் காத்தால் போதும்.

त्रिरात्रमाहुराशौचमाचार्ये संस्थिते सति।
तस्य पुत्रे च पत्न्यां च दिवारात्रमिति स्थितिः॥

**த்ரிராத்ரமாஹுராஷௌச மாசார்யே ஸம்ஸ்திதே ஸதி |**
**தஸ்ய புத்ரே ச பத்ந்யாம் ச திவாராத்ரமிதி ஸ்திதி || 80**

ஆச்சாரியன் இறந்தால் சிஷ்யனுக்கு மூன்று நாட்கள் தீட்டு. ஆச்சாரியனுடைய புத்திரன், மனைவி இறந்தால் ஒரு இரவும் பகலும் தீட்டுக் காக்க வேண்டும்.

श्रोत्रिये तूपसम्पन्ने त्रिरात्रमशुचिर् भवेत्।
मातुले पक्षिणीं रात्रिं शिष्यर्त्विग्बान्धवेषु च॥

**ஷ்ரோத்ரியேதூபஸம்பந்நே த்ரிராத்ரமசுசிர்பவேத் |**
**மாதுலே பக்ஷிணீம் ராத்ரிம் சிஷ்யரித்விக் பாந்தவேஷு ச || 81**

அருகாமையில் இருக்கும் வேதசாஸ்திர விற்பன்னன் இறந்த போதும், தாய்மாமன், ரித்விக், சிஷ்யன், தாய்வழி உறவினன் இறந்த போதும் ஒருபகல் நேரம் தொடங்கி அடுத்த பகல் வரை தீட்டு.

प्रेते राजनि सज्योतिर् यस्य स्याद् विषये स्थितः।
अश्रोत्रिये त्वहः कृत्स्नमनूचाने तथा गुरौ॥

**ப்ரேதே ராஜநி ஸஜ்யோதிர்யஸ்ய ஸ்யாத்விஷயேஸ்தித: |**
**அஷ்ரோத்ரியேத்வஹ: க்ருத்ஸ்நமநூசாநே ததா குரௌ || 82**

நால்வர்ணத்தாரும் வசிக்கும் தேசத்து மன்னன் பகலில் இறந்தால் சூரியன் அஸ்தமிக்கும் வரையிலும், இரவில் இறந்தால் நட்சத்திரங்கள் தெரியும் வரையிலும் தீட்டு. வேதமோதுபவன் தன் இல்லத்தில் இறந்தால் மூன்று இரவுகள் தீட்டு. வேதமோதாத சாதாரணமானவன் தன் இல்லத்தில் இறந்தாலும், குரு இறந்தாலும் ஒரு நாள் தீட்டு.

शुध्येद् विप्रो दशाऽहेन द्वादशाऽहेन भूमिपः।
वैश्यः पञ्चदशाऽहेन शूद्रो मासेन शुध्यति॥

**சுத்த்யேத்விப்ரோ தஷாஹேந த்வாதஷாஹேந பூமிப: |**
**வைஷ்ய: பஞ்சதஷாஹேந சூத்ரோ மாஸேந சுத்யதி || 83**

பூணூல் அணிந்த பிறகு ஸபிண்டன் இறந்தால், பிராம்மணனுக்கு பத்துநாட்களும், வைசியனுக்கு பதினைந்து நாட்களும், சூத்திரனுக்கு ஒரு மாதமும் தீட்டு.

न वर्धयेदघाऽहानि प्रत्यूहेन् नाऽग्निषु क्रियाः।
न च तत् कर्म कुर्वाणः सनाभ्योऽप्यशुचिर् भवेत्॥

**ந வர்தயேதகாஹாநி ப்ரத்யூஹேந்நாக்நிஷு க்ரியா: |**
**ந ச தத்கர்ம குர்வாண ஸ்ஸநாப்யோ அப்யசுசிர்பவேத் ||** 84

தீட்டு தினங்களை இதற்குமேல் வளர்க்கக் கூடாது. அக்னி ஹோத்ரம் முதலான கிரியைகளுக்கு குறைவு ஏற்படுத்தக் கூடாது. தீட்டுகழிக்கும் புத்திரன் முதலானோர் அக்னிஹோத்ரம் முதலான வற்றைச் செய்யலாம்.

दिवाकीर्तिमुदक्यां च पतितं सूतिकां तथा।
शवं तत्स्पृष्टिनं चैव स्पृष्ट्वा स्नानेन शुध्यति॥

**திவாகீர்திமுதக்யாம் ச பதிதம் ஸூதிகாம் ததா |**
**ஷவம் தத்ஸ்ப்ருஷ்டிநம் சைவ ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநேந சுத்யதி ||** 85

நாவிதன், வீட்டுவிலக்கானவள், பதிதன், பிள்ளை பெற்று இன்னும் தீட்டு கழியாதவள், சவத்தைத் தொட்டவனைத் தொட்டவன் முதலானோர் நீராடுவதால் சுத்தியடைவர்.

आचम्य प्रयतो नित्यं जपेदशुचिदर्शने।
सौरान् मन्त्रान् यथोत्साहं पावमानीश् च शक्तितः॥

**ஆசம்ய ப்ரயதோ நித்யம் ஜபேதசுசிதர்ஷனே |**
**சௌராந் மந்த்ராந் யதோத்சாஹம் பாவமானீஷ்ச ஷக்தித: ||** 86

தூய்மையற்ற பொருட்களைப் பார்த்தவன், நீராடி சக்திக்கேற்ப சூரிய மந்திரங்களையும், பவமானம் போன்ற ரிக்குகளையும் முயற்சியோடு ஜபிக்க வேண்டும்.

नारं स्पृष्ट्वाऽस्थि सस्नेहं स्नात्वा विप्रो विशुध्यति।
आचम्यैव तु निःस्नेहं गामालभ्याऽर्कमीक्ष्य वा॥

**நாரம் ஸ்ப்ருஷ்ட்வாஸ்தி ஸஸ்நேஹம் ஸ்நாத்வா விப்ரோ விசுத்யதி |**
**ஆசம்யைவது நிஸ்ஸ்நேஹம் காமாலப்யார்கமீக்ஷ்யவா ||** 87

பிசுக்கோடு இருக்கின்ற மனித எலும்பைத் தொட்டால் பிராம்மணன் நீராடுவதன் மூலம் சுத்தியடைகிறான்.

பிசுக்கில்லா எலும்பைத் தொட்டால் ஆசமனம் செய்து பசுவைத் தொடுவதாலோ அல்லது சூரியனைப் பார்ப்பதாலோ பரிசுத்தி யடைவான்.

आदिष्टी नोदकं कुर्यादा व्रतस्य समापनात्।
समाप्ते तूदकं कृत्वा त्रिरात्रेणैव शुध्यति॥

**ஆதிஷ்டீ நோதகம் குர்யாத் ஆவ்ரதஸ்ய ஸமாபநாத் |**
**ஸமாப்தேதூதகம் க்ருத்வா த்ரிராத்ரேணைவ சுத்யதி || 88**

தீக்ஷை வகிப்பவன் (பிரம்மச்சரிய தீட்சை, யாக தீட்சை போன்றவை) அந்த தீக்ஷை முடியும் வரை தாய் தந்தையரைத் தவிர்த்து மற்ற பங்காளிகள் இறந்தால் தீட்டுக்காத்து உதகதானம் செய்ய வேண்டிய தில்லை. தீட்சை முடிந்த பிறகு மூன்று நாட்கள் தீட்டுக்காத்து உதகதானம் செய்து தேவைப்பட்டால் மீண்டும் தீட்சையை ஏற்க வேண்டும்.

वृथासङ्करजातानां प्रव्रज्यासु च तिष्ठताम्।
आत्मनस् त्यागिनां चैव निवर्ततोदकक्रिया॥

**வ்ருதா சங்கரஜாதாநாம் ப்ரவ்ரஜ்யாசு ச திஷ்டதாம் |**
**ஆத்மநஸ்த்யாகிநாம் சைவ நிவர்தேதோதக க்ரியா || 89**

சுயதர்மங்களை செய்யாமல் விட்டவர்கள், தாழ்த்தப்பட்ட ஜாதியில் பிறந்தவர்கள், வேதத்துக்குப் புறம்பானவர்களாக சிவப்பு ஆடை முதலானவைகளைத் தரிப்பவர்கள், தற்கொலை செய்து கொண்டவர்கள் முதலானோருக்கு உதகதானம் போன்றவைகளை செய்யத் தேவையில்லை.

पाषण्डमाश्रितानां च चरन्तीनां च कामतः।
गर्भभर्तृद्रुहां चैव सुरापीनां च योषिताम्॥

**பாஷண்டமாஷ்ரிதாநாம் ச சரந்தீநாம் ச காமத: |**
**கர்ப பர்த்ருத்ருஹாம் சைவ சுராபீநாம் ச யோஷிதாம் || 90**

வேதத்தில் சொல்லப்படாததான சிவப்பாடைகளை அணிதல் போன்றவைகளைச் செய்யும் பாஷாண்ட பெண் துறவிகள், விபச்சாரிகள், கருச்சிதைவு செய்பவர்கள், கணவனுக்கு துரோகம் செய்பவர்கள், மது அருந்துபவர்கள் முதலான இரு பிறப்பாளப் பெண்களுக்கு உதகதானம் செய்யத் தேவையில்லை.

आचार्यं स्वमुपाध्यायं पितरं मातरं गुरुम्।
निर्हृत्य तु व्रती प्रेतान् न व्रतेन वियुज्यते॥

**ஆசார்யம் ஸ்வமுபாத்யாயம் பிதரம் மாதரம் குரும் |**
**நிர்ஹ்ருத்ய து வ்ரதீ ப்ரேதாந் ந வ்ரதேந வியுஜ்யுதே || 91**

தனக்கு வேதபாடம் முழுமையாக நடத்திய ஆச்சார்யன், சிறிதாவது வேதம் சொல்லிக் கொடுத்த உபாத்யாயன், வேத வேதாந்தங்களை விளக்கியுரைத்த குரு, தாய் தந்தையர் இவர்களுக்கு இறந்தபின் கிரியைகள் செய்வதால் விரதபங்கம் ஏற்படாது.

दक्षिणेन मृतं शूद्रं पुरद्वारेण निर्हरेत्।
पश्चिमोत्तरपूर्वैस् तु यथायोगं द्विजन्मनः॥

**தக்ஷிணேந ம்ருதம் சூத்ரம் புரத்வாரேண நிர்ஹரேத் |**
**பஷ்சிமோத்தர பூர்வைஸ்து யதாயோகம் த்விஜந்மந: ||** 92

பிராம்மணனுடைய சவத்தை கிழக்கு பக்கமாகவும்,

க்ஷத்ரியனுடைய சவத்தை மேற்குப் பக்கமாகவும், மற்றவர்களின் சவத்தை தெற்குப் பக்கமாகவும் ஊருக்கு வெளியே கொண்டு போக வேண்டும்.

न राज्ञामघदोषोऽस्ति व्रतिनां न च सत्रिणाम्।
ऐन्द्रं स्थानमुपासीना ब्रह्मभूता हि ते सदा॥

**ஸ ராக் ஞாமகதோஷோஸ்தி வ்ரதிநாம் ந ச ஸத்ரிணாம் |**
**ஐந்த்ரம் ஸ்தாநமுபாஸீநா ப்ரஹ்மபூதா ஹி தே ஸதா ||** 93

இந்திரனுடைய அம்சமாக விளங்குவதால் மன்னர்களுக்கு சபிண்டர்கள் இறந்தாலும் தீட்டு கிடையாது. விரதங்களைப் பூண்டிருப்பவர்களுக்கும் (பிரம்மச்சரிய விரதம், சாந்தாரயண விரதம் போன்றவை), யாகம் செய்பவர்களுக்கும் அவ்வாறே தீட்டு கிடையாது. இவர்கள் பிரம்ம அம்சமானவர்கள்.

राज्ञो माहात्मिके स्थाने सद्यः शौचं विधीयते।
प्रजानां परिरक्षार्थमासनं चात्र कारणम्॥

**ராக்ஞோ மாஹாத்மிகே ஸ்தாநே ஸத்ய: சௌசம் விதீயதே |**
**ப்ரஜாநாம் பரிரக்ஷார்த்தமாஸநம் சாத்ர காரணம் ||** 94

உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கும் மன்னனுக்கு தீட்டு உடனே விலகிவிடும். மக்களை நன்கு ரட்சிக்க வேண்டிய ஆசனத்தில் அவன் அமர்ந்திருப்பதே காரணம்.

डिम्भाहवहतानां च विद्युता पार्थिवेन च।
गोब्राह्मणस्य चैवार्थे यस्य चेच्छति पार्थिवः॥

**டிம்பாஹவஹதாநாம் ச வித்யுதா பார்திவேந ச |**
**கோ ப்ராஹ்மணஸ்ய சைவார்த்தே யஸ்ய சேச்சதி பார்த்திவ: ||** 95

மன்னன் பங்கேற்காத யுத்தத்தில் இறந்தவனுக்கும், இடிமின்னல் தாக்கி இறந்தவனுக்கும், பசுவையும் பிராம்மணனையும் காப்பதற்காக இறந்தவனுக்கும், மன்னன் தன் காரிய நிமித்தமாக யாருக்குத் தீண்டல் ஏற்படக் கூடாது என்று நினைக்கிறானோ அவனுக்கும் உடனே நீராடியதும் தீட்டுப் போகும்.

सोमाऽग्न्यर्काऽनिलेन्द्राणां वित्ताऽप्पत्योर् यमस्य च।
अष्टानां लोकपालानां वपुर् धारयते नृपः॥

**ஸோமாக்ந்யர்காநிலேந்த்ராணாம் வித்தாப்பத்யோர்யமஸ்யச |**
**அஷ்டாநாம் லோகபாலாநாம் வபுர்தாரயதே ந்ருப: || 96**

*சோமன், அக்நி, சூரியன், வாயு, இந்திரன், குபேரன், வருணன், யமன் என்னும் லோக பாலர்களின் அம்சமாக உள்ளவன் மன்னன்.*

लोकेशाऽधिष्ठितो राजा नाऽस्याऽशौचं विधीयते।
शौचाऽशौचं हि मर्त्यानां लोकेशप्रभवाऽप्ययम्॥

**லோகேஷா திஷ்டிதோ ராஜா நாஸ்யாசௌசம் விதீயதே |**
**ஷௌசா ஷௌசம் ஹி மர்த்யாநாம் லோகேஷ ப்ரபவாப்யயம் || 97**

*மன்னன் உலகைக் காப்பவர்களான திக்பாலர்களின் அம்சமாக இருப்பதால் அவனுக்குத் தீட்டு கிடையாது. மனிதர்களுக்கு தூய்மையும் தீட்டும் திக்பாலர்களாலேயே ஏற்படுகின்றன. அவர்களின் அம்சமான வனுக்குத் தீட்டு ஏற்பட இடமில்லை.*

उद्यतैराहवे शस्त्रैः क्षत्रधर्महतस्य च।
सद्यः सन्तिष्ठते यज्ञस् तथाऽशौचमिति स्थितिः॥

**உத்யதைரா ஹவே ஹஸ்த்ரை: க்ஷத்ர தர்ம ஹதஸ்ய ச |**
**ஸத்யஸ் ஸந்திஷ்டதே யக்ஞஸ்ததா ஷௌச மிதி ஸ்திதி: || 98**

*தர்மயுத்தம் செய்து போரில் ஆயுதங்களால் அடிபட்டு இறந்த வனுக்கு, யாகம் செய்தவனுக்குக் கிடைக்கும் பலன் கிடைக்கும். தீட்டு உடனே நீங்கிப்போகும்.*

विप्रः शुध्यत्यपः स्पृष्ट्वा क्षत्रियो वाहनाऽऽयुधम्।
वैश्यः प्रतोदं रश्मीन् वा यष्टिं शूद्रः कृतक्रियः॥

**விப்ரஷ்ஷுத்த்யத் யபஸ்ஸ்ப்ருஷ்ட்வா க்ஷத்ரியோ வாஹநாயுதம் |**
**வைஷ்ய: ப்ரதோதம் ரஷ்மிந் வாயஷ்டிம் சூத்ர: க்ருதக்ரிய: || 99**

*சிராத்த கிரியைகளையெல்லாம் முடித்த பிறகு, பிராம்மணன் தண்ணீரைத் தொடுவதினால் தீட்டு நீங்கி பரிசுத்தி அடைகிறான்.*

*க்ஷத்ரியன் ஆயுதங்களையும், வாகனத்தையும் தொடுவதினால் பரிசுத்தி அடைகிறான்.*

*வைசியன் தராசு கயிறுகளைத் தொடுவதினால் பரிசுத்தி யடைகிறான்.*

*சூத்திரன் மூங்கில் குச்சியைத் தொடுவதினால் பரிசுத்தி யடைகிறான்.*

एतद् वोऽभिहितं शौचं सपिण्डेषु द्विजोत्तमाः।
असपिण्डेषु सर्वेषु प्रेतशुद्धिं निबोधत॥

**ஏதத்வோ அபிஹிதம் ஷௌசம் ஸபிண்டேஷு த்விஜோத்தமா: |**
**அஸபிண்டேஷு ஸர்வேஷு ப்ரேதசுத்திம் நிபோதத: || 100**

*த்விஜோத்தமர்களே! சபிண்டர்கள் விஷயத்தில் தீட்டுமுறைகளை உங்களுக்கு இதுவரை கூறினேன்.*

*இனி சபிண்டர்கள் அல்லாதவர் களுடையதைப் பற்றிக் கூறு கிறேன், கேளுங்கள்.*

असपिण्डं द्विजं प्रेतं विप्रो निर्हृत्य बन्धुवत्।
विशुध्यति त्रिरात्रेण मातुराप्तांश् च बान्धवान्॥

**அஸபிண்டம் த்விஜம் ப்ரேதம் நிர்ஹ்ருத்ய பந்துவத் |**
**விசுத்யதி த்ரிராத்ரேண மாதுராப்தாம்ஷ்ச பாந்தவாந் || 101**

*சபிண்டன் அல்லாத பிராம்மண சவத்தை ஸம்ஸ்காரம் செய்த பிராம்மணனுக்கும், தாய் வர்க்கத்தைச் சேர்ந்த பந்துக்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தவனுக்கும் மூன்று நாட்கள் தீட்டு.*

यद्यन्नमत्ति तेषां तु दशाहेनैव शुध्यति।
अनदन्नन्नमह्नैव न चेत् तस्मिन् गृहे वसेत्॥

**யத்யந்நமத்தி தேஷாம் து தஷாஹேநைவ ஷுத்யதி |**
**அநதந்நந்நமஹ்நைவ ந சேத் தஸ்மிந் க்ருஹே வசேத் || 102**

*சவத்தைச் சுமந்து சென்றவன் அந்த வீட்டில் சாப்பிட்டால், பங்காளிகளைப் போன்று பத்துநாட்கள் தீட்டு உண்டு. அந்த வீட்டில் உண்ணாமலும் தங்காமலும் வெளியே வந்து விட்டால், ஓர் இரவு ஒரு பகலுடன் தீட்டு போகும்.*

अनुगम्येच्छया प्रेतं ज्ञातिमज्ञातिमेव च।
स्नात्वा सचैलः स्पृष्ट्वाऽग्निं घृतं प्राश्य विशुध्यति॥

**அநுகம்யேச்சயா ப்ரேதம் ஞாதிமஞாதிமேவ வா |**
**ஸ்நாத்வா ஸசேல: ஸ்ப்ருஷ்வாக்நிம் க்ருதம் ப்ராஷ்ய விசுத்யதி || 103**

*அன்பினால் பிரேதத்தைத் தொடர்ந்து போனவன், ஆடையோடு நீராடிய பின் நெருப்பைத் தொட்டு, பின் நெய்யை உண்டால் தீட்டு நீங்கி பரிசுத்தியடைவான்.*

न विप्रं स्वेषु तिष्ठत्सु मृतं शूद्रेण नाययेत्।
अस्वर्ग्या ह्याहुतिः सा स्याच् छूद्रसंस्पर्शदूषिता॥

**ந விப்ரம் ஸ்வேஷு திஷ்டத்சு ம்ருதம் சூத்ரேண நாயயேத் |**
**அஸ்வர்க்யாஹ்யாஹூஸ் ஸ்யாச்சூத்ர ஸம்ஸ்பர்ஷ தூஷிதா || 104**

பிராம்மணன் இறந்தால் சவத்தை சூத்ரனை சுமக்கச் சொல்லக் கூடாது. அவ்வாறு செய்தால் இறந்த பிராம்மணனுக்கு சொர்க்க லோகம் கிட்டாது.

ज्ञानं तपोऽग्निराहारो मृन् मनो वार्युपाञ्जनम्।
वायुः कर्माऽर्ककालौ च शुद्धेः कर्तॄणि देहिनाम्॥

**ஞாநம் தபோ அக்நிராசாரோ ம்ருந்மநோ வார்யுபாஞ்ஜநம் |**
**வாயு: கர்மார்ககாலௌ ச சுத்தே: கர்ம்ருணி தேஹிநாம் ||** 105

ஞானம், தவம், அக்னி, ஆசாரம், மண், மனம், தண்ணீர், பெருக்கி மெழுகுதல், காற்று, கிரியை, சூரியன், காலம் இவை பிராணிகளுக்கு பரிசுத்தம் ஏற்படுத்துபவை.

सर्वेषामेव शौचानामर्थशौचं परं स्मृतम्।
योऽर्थे शुचिर् हि स शुचिर् न मृद्वारिशुचिः शुचिः॥

**ஸர்வேஷாமேவ ஷௌசா நாமர்தஷௌசம் பரம் ஸ்ம்ருதம் |**
**யோ அர்தே ஷுசிர்ஹி ஸ ஷுசிர்ந ம்ருத்வாரிசுசிச்ஷுசி: ||** 106

சுத்திகளிலெல்லாம் உயர்ந்தது திரவிய சுத்தி. அநியாயமாக பிறர் பொருளை அடையாமல், நேர்மையாக பொருளீட்டுவதே திரவிய சுத்தி. திரவிய சுத்தி உடையவனே பரிசுத்தமானவன். மண்ணாலும் நீராலும் உடலை நன்கு சுத்தமாக வைத்துக் கொண்டாலும் திரவிய சுத்தி இல்லாதவனை சுத்தமானவன் என்று கூறமுடியாது.

क्षान्त्या शुध्यन्ति विद्वांसो दानेनाऽकार्यकारिणः।
प्रच्छन्नपापा जप्येन तपसा वेदवित्तमाः॥

**க்ஷாந்த்யா சுத்யந்தி வித்வாம்ஸோ தாநேநாகார்யகாரிண: |**
**பிரச்சன்னபாபாஜப்யேந தபஸா வேதவித்தமா: ||** 107

வித்வான்கள் பொறுமையாலும், கூடாதகாரியம் செய்பவர்கள் தானத்தாலும், ரகசியமாக பாபம் செய்வோர் மந்திரஜபத்தாலும், வேதமறிந்த உத்தமர்கள் தவத்தாலும் பரிசுத்தமடைவார்கள்.

मृत्तोयैः शुध्यते शोध्यं नदी वेगेन शुध्यति।
रजसा स्त्री मनोदुष्टा सन्यासेन द्विजोत्तमः॥

**ம்ருத்தோயைஷ்ஷுத்யதே ஷோத்யம் நதீவேகேந சுத்யதி |**
**ரஜஸா ஸ்த்ரீ மநோதுஷ்டா ஸந்யாஸேந த்விஜோத்தம: ||** 108

பாத்திரங்கள், மண்ணாலும் நீராலும் சுத்தமாகும், ஆறு, பெருக்கெடுத்து ஓடுவதால் சுத்தமாகும். மனத்தால் சோரம்

போனவள் மாதவிலக்கால் சுத்தமாவாள். பிராம்மண உத்தமன் சந்யாசத்தில் பரிசுத்தனாவான்.

अद्भिर् गात्राणि शुध्यन्ति मनः सत्येन शुध्यति।
विद्यातपोभ्यां भूतात्मा बुद्धिर् ज्ञानेन शुध्यति॥

**அத்பிர் காத்ராணி அத்யந்தி மநஸ்ஸத்யேந சுத்யதி |**
**வித்யாதபோப்யாம் பூதாத்மா புத்திர் ஞாநேந ஷுத்யதி ||** 109

உடல், நீராடுவதால் சுத்தமடையும். வேண்டாத சிந்தனைகளில் ஈடுபட்ட மனம், சத்தியத்தால் தூய்மையடையும்.

ஆத்மா, வித்யையாலும் தவத்தாலும் தூய்மையடையும், புத்தி, ஞானத்தால் தூய்மையடையும்.

एष शौचस्य वः प्रोक्तः शारीरस्य विनिर्णयः।
नानाविधानां द्रव्याणां शुद्धेः शृणुत निर्णयम्॥

**ஏஷ ஷௌசஸ்ய வ: ப்ரோக்த: ஷாரீரஸ்ய விநிர்ணய: |**
**நாநாவிதாநாம் த்ரவ்யாணாம் ஷுத்தேஷ்ருணுத நிர்ணயம் ||** 110

சரீர சம்பந்தமான சுத்திகள் கூறப்பட்டன. மேலும் பல வகையான திரவியங்களின் சுத்தியை கூறுகிறேன், கேளுங்கள்.

तैजसानां मणीनां च सर्वस्याऽश्ममयस्य च।
भस्मनाऽद्भिर् मृदा चैव शुद्धिरुक्ता मनीषिभिः॥

**தைஜஸாநாம் மணீநாம் ச ஸர்வஸ்யாஷ் மமயஸ்ய ச |**
**பஸ்மநாத்பர்ம்ருதா சைவ ஷுத்திருக்தா மநீஷிபி: ||** 111

ஒளி பொருந்திய ரத்தினங்கள், தங்கம், கற்கலான அனைத்தையும் சாம்பல், மண், நீர் முதலியவற்றால் சுத்தப்படுத்த வேண்டும்.

निर्लेपं काञ्चनं भाण्डमद्भिरेव विशुध्यति।
अब्जमश्ममयं चैव राजतं चाऽनुपस्कृतम्॥

**நிர்லேபம் காஞ்சநம் பாண்டமத்பிரேவ விசுத்யதி |**
**அப்ஜமஷ்மமயம் சைவ ராஜதம் சாநுபஸ்க்ருதம் ||** 112

பிசுக்கேறாத தங்கப் பாத்திரத்தையும், தண்ணீரில் பிறக்கும் முத்து, சங்கம் முதலானவைகளையும், அழுக்கேறாத வெள்ளிப் பாத்திரங்களையும் ஜலத்தாலேயே சுத்தப்படுத்தலாம்.

अपामग्नेश् च संयोगाद् हेमं रौप्यं च निर्बभौ।
तस्मात् तयोः स्वयोन्यैव निर्णेको गुणवत्तरः॥

**அபாமக்நேஷ்ச ஸம்யோகாத்தேம ரூப்யம் ச நிர்பபௌ |**
**தஸ்மாத்தயோஸ் ஸ்வயோந்யைவ நிர்ணேகோ குணவத்தர: || 113**

தண்ணீர், அக்நி இவற்றின் சேர்க்கையால் தங்கமும் வெள்ளியும் உருவாகும். இவை உருவாகக் காரணமான அக்னியாலும் ஜலத்தாலும் இவைகளை பரிசுத்தப்படுத்துவதே சிறந்தது.

**ताम्रायःकांस्यरैत्यानां त्रपुणः सीसकस्य च।**
**शौचं यथार्हं कर्तव्यं क्षाराम्लोदकवारिभिः॥**

**தாம்ராய: காம்ஸ்யரைத்யாநாம் த்ரபுணஸ்ஸீஸகஸ்ய ச |**
**ஷௌசம் யதார்ஹம் கர்தவ்யம் க்ஷாராம்ளோதக வாரிபி: || 114**

செம்பு, இரும்பு, வெண்கலம், பித்தளை, துத்தநாகம், ஈயம் இவற்றாலான பாத்திரங்களை, அவ்வவற்றுக்குத் தக்கபடி சாம்பல், புளி, கோமயம், தண்ணீர் முதலானவற்றால் பரிசுத்தமாக்க வேண்டும்.

**द्रवाणां चैव सर्वेषां शुद्धिरुत्पवनं स्मृतम्।**
**प्रोक्षणं संहतानां च दारवाणां च तक्षणम्॥**

**த்ரவ்யாணாம் சைவ ஸர்வேஷாம் ஷுத்திருத்வ்பவநம் ஸ்ம்ருதம் |**
**ப்ரோக்ஷணம் ஸம்ஹதாநாம் ச தாரவாணாம் சதக்ஷணம் || 115**

திரவ ரூபமான திரவியங்களை (நெய், எண்ணெய் முதலானவற்றை) காகம் போன்றவை தீண்டினால், இரண்டு தர்ப்பைகளால் அவற்றிலிருந்து ஒருதுளி எடுத்து வெளியே போட்டால் சுத்தமாகும். பஞ்சு மெத்தை முதலானவைகளில் எச்சில் போன்ற எதுவும் பட்டால் தண்ணீரால் துடைத்துவிட்டு ப்ரோட்சணம் செய்ய சுத்தமாகும். மரப் பாத்திரங்கள் அசுத்தமடைந்தால் அவற்றைச் சிறிது சீவியெடுக்க பரிசுத்தி ஏற்படும்.

**मार्जनं यज्ञपात्राणां पाणिना यज्ञकर्मणि।**
**चमसानां ग्रहाणां च शुद्धिः प्रक्षालनेन तु॥**

**மார்ஜநம் யக்ஞபாத்ராணாம் பாணிநா யக்ஞகர்மணி |**
**சமசாநாம் க்ரஹாணாம் ச ஷுத்தி: ப்ரக்ஷாளநேந து || 116**

வீடுகள், பெருக்கி மெழுகுவதனால் சுத்தமடையும். யக்ஞ பாத்திரங்கள் முதலில் கைகளால் துடைத்து பிறகு நீர்விட்டு அலம்புவதால் சுத்தியடையும்.

चरूणां स्रुक्स्रुवाणां च शुद्धिरुष्णेन वारिणा।
स्फ्यशूर्पशकटानां च मुसलोलूखलस्य च॥

**சரூணாம் ஸ்ருக் ஸ்ரவாணாம் ச ஷுத்திருஷ்ணேநவாரிணா |**
**ஸ்ப்யுசூர்ப்ப ஷகடாநாம் ச முஸலோலூகலஸ்ய ச ||** 117

பிசுக்கேறிய சரு, ஸ்ருக், ஸ்ரவம் (யக்ஞத்துக்கு உபயோகப் படுத்துபவை) வெந்நீரில் அலம்பினால் சுத்தமாகும்.

பிசுக்கில்லை யெனில் தண்ணீரில் அலம்பினால் போதும்.

மேலும், முறம், உரல், உலக்கை, திரிகை, அம்மி இவைகளை தண்ணீரால் அலம்பினால் சுத்தமாகும்.

अद्भिस् तु प्रोक्षणं शौचं बहूनां धान्यवाससाम्।
प्रक्षालनेन त्वल्पानामद्भिः शौचं विधीयते॥

**அத்பிஸ்து ப்ரோக்ஷணம் ஷௌசம் பஹூநாம் தான்யவாஸஸாம் |**
**ப்ரக்ஷாளநேநத்வல்பாநாமத்பிஷ் சௌசம் வீதீயதே ||** 118

ஓராள் சுமைக்கு அதிகமான தானியங்கள், துணிமூட்டைகள் அசுத்தமானால், தண்ணீர் தெளிப்பதால் சுத்தமடையும். ஓராள் சுமையைவிட குறைவாக இருந்தால், தண்ணீரால் அலம்பி சுத்தமாக்க வேண்டும்.

चैलवच् चर्मणां शुद्धिर् वैदलानां तथैव च।
शाकमूलफलानां च धान्यवच् छुद्धिरिष्यते॥

**சேலவச்சர்மணாம் ஷுத்திர்வைதலாநாம் ததைவ ச |**
**ஷாக மூல பலாநாம் ச தான்யவத் சுத்திரிஷ்யதே ||** 119

மான்தோல், புலித்தோல் முதலான தோல்களையும், மூங்கிலால் செய்யப்பட்ட பொருட்களையும் வஸ்திரங்களைப் போல சுத்தப்படுத்த வேண்டும்.

காய்கறிகள், கிழங்குகள், பழங்கள் முதலானவற்றை தானியங்களைச் சுத்தம் செய்வது போல சுத்தம் செய்ய வேண்டும்.

कौशेयाविकयोरूषैः कुतपानामरिष्टकैः।
श्रीफलैरंशुपट्टानां क्षौमाणां गौरसर्षपैः॥

**கௌஷேயாவிகயோரூஷை: குதபாநாமரிஷ்டகை: |**
**ஷ்ரீபலைரம்ஷுபட்டாநாம் க்ஷௌமாணாம் கௌரஸர்பபை: ||** 120

பட்டுப்புழுவால் உண்டான பட்டு வஸ்திரங்களையும், ஆட்டு ரோமத்தால் செய்த கம்பளிகளையும் உவர் மண்ணால் சுத்தம் செய்ய வேண்டும். கம்பளிகளை வேப்பவிதைகளாலும், சால்வைகளை

வில்வப் பழங்களாலும் சுத்தம் செய்ய வேண்டும். வெண்பட்டை வெண்கடுகால் சுத்தம் செய்ய வேண்டும்.

क्षौमवच् छङ्खशृङ्गाणामस्थिदन्तमयस्य च।
शुद्धिर् विजानता कार्या गोमूत्रेणोदकेन वा॥

**க்ஷௌமவத் ஷங்கஷ்ருங்காணா மஸ்தி தந்தமயஸ்ய ச |**
**ஷுத்திர் விஜாநதா கார்யா கோ மூத்ரேணோதகேந வா || 121**

சங்கு, தந்தம், மான்கொம்பு முதலானவற்றை வெண் பட்டைப் போல வெண் கடுகுப் பொடியோடு கோமயத்தையோ, தண்ணீரையோ சேர்த்து சுத்தம் செய்ய வேண்டும்.

प्रोक्षणात् तृणकाष्ठं च पलालं चैव शुध्यति।
मार्जनोपाञ्जनैर् वेश्म पुनःपाकेन मृन्मयम्॥

**ப்ரோக்ஷணா த்ருணகாஷ்டம் ச பலாலம் சைவ அத்யதி |**
**மார்ஜாநோ பாஞ்ஜநைர் வேஷ்ம புந: பாகேந ம்ருந்மயம் || 122**

அசுத்தியான விறகு, புல், வைக்கோல் முதலானவை நீரைத் தெளிப்பதால் சுத்தமாகும். வீடுகள், பெருக்குதல் துடைத்தல் சுண்ணாம்பு அடித்தல் முதலியவைகளால் சுத்தியாகும். மண் பாத்திரங்கள் நெருப்பில் சுடுவதால் சுத்தமாகும்.

मद्यैर् मूत्रैः पुरीषैर् वा ष्ठीवनैः पूय-शोणितैः।
संस्पृष्टं नैव शुध्येत पुनःपाकेन मृन्मयम्॥

**மத்யைர்மூத்ரை: புரீஷைர்வாஷ்டீவநை: பூயஷோணிதை: |**
**ஸம்ஸ்ப்ருஷ்டம் நைவ சுத்யேத பந: பாகேந ம்ருந்மயம் || 123**

கள், சிறுநீர், மலம், தும்மல், சீழ், ரத்தம் இவைகள் பட்ட மண்பாத்திரங்கள் மீண்டும் சுட்டாலும் சுத்தமாகாது.

सम्मार्जनोपाञ्जनेन सेकेनोल्लेखनेन च।
गवां च परिवासेन भूमिः शुध्यति पञ्चभिः॥

**ஸம்மார்ஜநோ பாஞ்ஜநேந ஸேகேநோல்லேகநேந ச |**
**கவாம் ச பரிவா ஸேந பூமி: சுத்யதி பஞ்சபி: || 124**

பெருக்குதல், சாணம் போட்டு மெழுகுதல், கோ மூத்திரத்தைத் தெளித்தல், மேல் மண்ணைத் தோண்டி வெளியே எறிந்துவிடல், ஒரு இரவும் பகலும் பசுக்களை உள்ளே கட்டிப்போட்டு வைத்தல் என்னும் ஐந்து வகைகளால் பூமி பரிசுத்தமடையும்.

पक्षिजग्धं गवाऽऽघ्रातमवधूतमवक्षुतम्।
दूषितं केशकीटैश् च मृत्प्रक्षेपेण शुध्यति॥

**பக்ஷிஜக்தம் கவாகாத்ர மவதூதமவக்ஷுதம் |**
**தூஷிதம் கேஷக்கீடைஷ் ச ம்ருத்ப்ருக்ஷேபேண சுத்யதி || 125**

பறவை எச்சில்பட்டது, பசுவால் முகர்ந்து பார்க்கப்பட்டது, காலால் வீசியெறியப்பட்டது, மேலேயே தும்மப்பட்டது, மயிர், புழு இருப்பதுமான அன்னம், ஆகியவற்றின் மீது சிறிது மண்ணைத் தூவ சுத்தமாகும்.

यावन् नाऽपैत्यमेध्याऽक्ताद् गन्धो लेपश् च तत्कृतः।
तावन् मृद्वारि चाऽऽदेयं सर्वासु द्रव्यशुद्धिषु॥

**யாவந்நாபைத்ய மேத்யாக்தாத்கந்தோலேபஸ்ச தத்க்ருத: |**
**தாவத்ம்ருத்வாரி சாதேயம் ஸர்வாசு த்ரவ்ய சுத்திஷு || 126**

மல ஜலங்களால் அசுத்தியானவற்றை, அவையும் அவற்றின் வாடையும் போகும்வரை மண்ணைப் போட்டு நீரில் அலம்ப வேண்டும். மண்ணால் சுத்தமாகும் என்று சொல்லும்போதே நீரையும் சேர்த்துத்தான் கூறப்படுகிறது.

त्रीणि देवाः पवित्राणि ब्राह्मणानामकल्पयन्।
अदृष्टमद्भिर् निर्णिक्तं यच्च वाचा प्रशस्यते॥

**த்ரீணி தேவா: பவித்ராணி ப்ராஹ்மணா நாமகல்பயந் |**
**அத்ருஷ்ட மத்பிர் நிர்ணிக்தம் யச்ச வாசா ப்ரஷஸ்யதே || 127**

எந்த தோஷமும் இருப்பதாக கண்ணுக்குத் தெரியாத பொருள், தண்ணீரால் பரிசுத்தமடைந்தது என்று கூறப்பட்ட பொருள், பிராம்மணனால் தண்ணீரால் பரிசுத்தம் அடைந்தது என்று கூறப்பட்ட பொருள் இவை மூன்றும் பிராம்மணர்களுக்கு பரிசுத்தமானது என்று தேவர்கள் கூறியுள்ளனர்.

आपः शुद्धा भूमिगता वैतृष्ण्यं यासु गोर् भवेत्।
अव्याप्ताश् चेदमेध्येन गन्धवर्णरसान्विताः॥

**ஆப: ஷுத்தா பூமிகதா வைத்ருஷ்ண்யம் யாசுகோர்பவேத் |**
**அவ்யாப்தாஷ்சேதமேத்யேந கந்தவர்ணரஸாந்விதா: || 128**

மழையால் சேர்ந்த நீரும், பசுக்கள் குடித்ததுமே தாகம் தீர்க்கவல்லதும், தூய்மையற்ற பொருளோடு சம்பந்த மற்றதும், நல்ல மணத்தோடு இனிமையாக, நிறமாக இருப்பதுமான நீர்கள் தூய்மை யானவை.

नित्यं शुद्धः कारुहस्तः पण्ये यच्च प्रसारितम्।
ब्रह्मचारिगतं भैक्ष्यं नित्यं मेध्यमिति स्थितिः॥

**நித்யம் சுத்த: காருஹஸ்த: பண்யம்யச்ச ப்ரஸாரிதம் |**
**ப்ரஹ்மசாரிகதம் பைக்ஷம் நித்யம் மேத்யமிதி ஸ்திதி: || 129**

தேவ பூஜைக்காக மாலை தொடுப்பவனிடமுள்ள பொருட்களும், அன்னத்தைத் தவிர மற்றபடி கடையில் விற்கும் பொருட்களும், பிரம்மச்சாரி கையிலிருக்கும் பிக்ஷான்னமும் எப்போதும் சுத்தமானவை.

नित्यमास्यं शुचि स्त्रीणां शकुनिः फलपातने।
प्रस्रवे च शुचिर् वत्सः श्वा मृगग्रहणे शुचिः॥

**நித்யமாஸ்யம் ஷுசி ஸ்த்ரீணாம் ஷகுநி: பலபாதநே |**
**ப்ரஸ்ரவே ச ஷுசிர்வத்ஸ: ஷ்வா ம்ருகக்ரஹணேஷுசி || 130**

எப்போதும் பெண்ணின் முகம் பரிசுத்தமானது. காகங்கள் போன்றவை மூக்கினால் கொத்தித் தள்ளிய பழங்களும் சுத்த மானவை. பாலருந்தும் கன்றின் வாய் சுத்தம்.

श्वभिर् हतस्य यन् मांसं शुचि तन् मनुरब्रवीत्।
क्रव्याद्भिश्च हतस्यान्यैश् चण्डालाद्यैश्च दस्युभिः॥

**ஷ்வபிர்வா தஸ்ய யந்மாம்ஸம் ஷுசி தந்மநுரப்ரவீத் |**
**க்ரவ்யாத்பிஷ்ச ஹதஸ்யாந்யைஷ் சண்டாலத்யைஷ்ச தஸ்யுபி: || 131**

எனவே வேட்டை நாயால் கொல்லப்பட்ட மிருகமாமிசம் சுத்தமானது. மாமிசத்தை உண்ணும் புலி முதலான மிருகங்களால் கொல்லப்பட்ட மிருக மாமிசம் சுத்தமானது. மிருகத்தைக் கொன்று ஜீவனம் நடத்தும் வேடுவர்களால் கொல்லப்பட்ட மிருகங்களின் மாமிசம் சுத்தமானது.

ऊर्ध्वं नाभेर् यानि खानि तानि मेध्यानि सर्वशः।
यान्यधस् तान्यमेध्यानि देहाच् चैव मलाश् च्युताः॥

**ஊர்த்வம் நாபேர்யாநி காநி தாநிமேத்யாநி ஸர்வஷ: |**
**யாந்யதஸ்தாந்ய மேத்யாநி தேஹாச்சைவ மலாஷ்ச்யுதா: || 132**

தொப்புளுக்கு மேலுள்ள உறுப்புகள் சுத்தமானவை. தொப்புளுக்குக் கீழுள்ள உறுப்புகள் சுத்தமற்றவை. இந்திரிய துவாரங்களிலிருந்து வெளியேறும் அழுக்குகள் அசுத்தமானவை.

मक्षिका विप्रुषश् छाया गौरश्वः सूर्यरश्मयः।
रजो भूर् वायुरग्निश् च स्पर्शे मेध्यानि निर्दिशेत्॥

**மக்ஷிகா விப்ருஷச்சாயா கௌரஷ்வஸ்சூர்யரஷ்மய: |**
**ரஜோ பூர்வாயுரக்நிஷ்ச ஸர்வே மேத்யா விநிர்திஷேத் ||** 133

அழுக்கில் அமர்பவையாக இருந்தாலும் ஈக்கள் மேலே அமர்ந்தால் குளிக்க வேண்டும் என்பதில்லை.

பசு, குதிரை, சூரிய கிரணங்கள், தூசி, பூமி, காற்று, அக்னி இவைகளைத் தொட்டால் எல்லாவகையான அசுத்திகளும் நீங்கி பரிசுத்தம் ஏற்படும்.

विण्मूत्रोत्सर्गशुद्ध्यर्थं मृद्वार्यादेयमर्थवत्।
दैहिकानां मलानां च शुद्धिषु द्वादशस्वपि॥

**விண்மூத்ரோத்ஸர்க ஷுத்யர்தம் ம்ருத்வார்யாதேயமர்தவத் |**
**தைஹிகாநாம் மலாநாம் ச சுத்திஷு த்வாதஷஸ்வபி ||** 134

மல, மூத்திரங்கள் சேரும் இடத்தை மண்ணாலும் நீராலும் சுத்தப்படுத்த வேண்டும். மேலும் உடலிலிருந்து வெளிப்படும் பன்னிரண்டு மலங்களையும் அவற்றின் வாடை போகுமளவும் மண்ணாலும் தண்ணீரால்லும் சுத்தம் செய்ய வேண்டும்.

वसा शुक्रमसृङ् मज्जा मूत्रं विड् घ्राणकर्णविट्।
श्लेष्माश्रु दूषिका स्वेदो द्वादशैते नृणां मलाः॥

**வஸா ஷுக்ர மஸ்ருக்மஜ்ஜாமூத்ர விட்கர்ண விண்ணகா: |**
**ஷ்லேஷ்மா ஷு தூஷிகா ஸ்வேதோ த்வாதஷைதே ந்ருணாம் மலா: ||** 135

வியர்வை, வீரியம், ரத்தம், கொழுப்பு, மூத்திரம், மலம், காதிலுள்ள அழுக்கு, நகங்களிலுள்ள அழுக்கு, கபம், கண்ணீர், கண்களில் தோன்றும் அழுக்கு, உடலிலிருந்து வெளிப்படும் கெட்டநீர் முதலான பன்னிரண்டும் மனிதனுடைய உடல் மலங்கள்.

एका लिङ्गे गुदे तिस्रस् तथैकत्र करे दश।
उभयोः सप्त दातव्या मृदः शुद्धिमभीप्सता॥

**ஏகா லிங்கே குதே திஸ்ரஸ்ததைகத்ரகரே தஷ |**
**உபயோஸ்ஸப்த தாதவ்யா ம்ருதம் ஷுத்திமபீப்ஸதா ||** 136

மல ஜலம் கழித்த பின்னர் மண்ணாலும் நீராலும் லிங்கத்தை ஒரு முறையும், பாயு ஸ்தானத்தை மூன்று முறையும், இடது கையை பத்து முறையும், பிறகு இரண்டு கைகளையும் ஏழு முறையும் தேய்த்துக் கழுவ வேண்டும்.

एतच् छौचं गृहस्थानां द्विगुणं ब्रह्मचारिणाम्।
त्रिगुणं स्याद् वनस्थानां यतीनां तु चतुर्गुणम्॥

**ஏதத்சௌசம் க்ருஹஸ்தாநாம் த்விகுணம் ப்ரம்ஹசாரிணாம் |**
**த்ரிகுணம் ஸ்யாத்வநஸ்தாநாம் யதீநாம் து சதுர்குணம் || 137**

*இந்த சுத்திமுறைகள் கிருஹஸ்தனுக்குச் சொல்லப்பட்டவை. பிரம்மச்சாரிகள் இதையே இரண்டு மடங்காகவும், வானபிரஸ்தர்கள் மூன்று மடங்காகவும், சந்யாசிகள் நான்கு மடங்காகவும் செய்ய வேண்டும்.*

कृत्वा मूत्रं पुरीषं वा खान्याचान्त उपस्पृशेत्।
वेदमध्येष्यमाणश् च अन्नमश्नंश् च सर्वदा॥

**க்ருத்வா மூத்ரம் புரீஷம்வா காந்யாசாந்த உபஸ்ப்ருஷேத் |**
**வேதமத்யேஷ்யமாணஷ்ச அந்நமஷ்நம்ஷ்ச ஸர்வதா || 138**

*மலஜலங்களைக் கழித்த பிறகு முன்னர் கூறியபடி சுத்தி செய்த பிறகு, வேதாத்யயனம் செய்யவோ, சாப்பிடவோ போகும்போது மும்முறை ஆசமனம் செய்து இந்திரியங்களை நீரால் தொட வேண்டும்.*

त्रिराचामेदपः पूर्वं द्विः प्रमृज्यात् ततो मुखम्।
शारीरं शौचमिच्छन् हि स्त्री शूद्रस् तु सकृत्सकृत्॥

**த்ரிராசாமேதப: பூர்வம் த்வி: ப்ரம்ருஜ்யாத்ததோ முகம் |**
**ஷாரீரம் ஷௌசமிச்சந் ஹி ஸ்த்ரீசூத்ரஸ்து ஸக்ருத்ஸக்ருத் || 139**

*தேக சுத்தியைக் கோரும் இருபிறப்பாளர்கள் மும்முறை ஆசமனம் செய்ய வேண்டும். பிறகு வாயை இருமுறை நீரால் துடைக்க வேண்டும். பெண்களும் சூத்திரர்களும் ஒருமுறையே ஆசமனம் செய்ய வேண்டும்.*

शूद्राणां मासिकं कार्यं वपनं न्यायवर्तिनाम्।
वैश्यवच् छौचकल्पश् च द्विजोच्छिष्टं च भोजनम्॥

**சூத்ராநாம் மாஸிகம் கார்யம் வபநம் ந்யாயவர்திநாம் |**
**வைஷ்யவச் சௌசகல்பஷ்ச த்விஜோச்சிஷ்டம் ச போஜநம் || 140**

*சாஸ்திரம் கூறியபடி இருபிறப்பாளருக்கு தொண்டு செய்யும் சூத்திரன் ஒவ்வொரு மாதமும் சவரம் செய்து கொள்ள வேண்டும். வைசியர்களுக்கு விதித்தபடி ஜனன மரண தீட்டுக்களைக் கடைப்பிடிக்க வேண்டும். இருபிறப்பாளர் சாப்பிட்டு மிகுந்ததைச் சாப்பிட வேண்டும்.*

नोच्छिष्टं कुर्वते मुख्या विप्रुषोऽङ्गे पतन्ति याः।
न श्मश्रूणि गतान्यास्यं न दन्ताऽन्तरधिष्ठितम्॥

**நோச்சிஷ்டம் குர்வதே முக்யா விப்ருஷோ அங்கே பதந்தியா: |**
**ந ஷ்மஷ்ருணி கதாந்யாஸ்யம் ந தந்தாந்தர திஷ்திதம் ||** 141

*வாயிலிருந்து உடலில் விழுந்த நீர், வாயில் சிக்கிய மீசை, பற்களுக்கிடையில் ஒட்டிக் கொண்ட உணவு முதலானவற்றுக்கு எச்சில் கிடையாது.*

स्पृशन्ति बिन्दवः पादौ य आचामयतः परान्।
भौमिकैस् ते समा ज्ञेया न तैरप्रयतो भवेत्॥

**ஸ்ப்ருஷந்தி பிந்தவ: பாதௌ ய ஆசாமயத: பராந் |**
**பௌமிகைஸ்தே ஸமாஞேயா நதைரப்ரயதோ பவேத் ||** 142

*பிறர் செய்யும் ஆசமனத் தண்ணீர்த் துளி மற்றவர்கள் கால்களில் பட்டாலும் அசுத்தம் கிடையாது. அந்த நீர்த் துளிகள் பூமிக்குள் உள்ள நீருக்குச் சமம்.*

उच्छिष्टेन तु संस्पृष्टो द्रव्यहस्तः कथञ्चन।
अनिधायैव तद् द्रव्यमाचान्तः शुचितामियात्॥

**உச்சிஷ்டேநது ஸம்ஸ்ப்ருஷ்டோ த்ரவ்யஹஸ்த் கதஞ்சந |**
**அநிதாயைவ தத்த்ரவ்யமாசாந்தஷ் ஷுசிதாமியாத் ||** 143

*உடலில் எந்த பாகத்திலாவது ஒரு பொருளை வைத்துக் கொண்டிருக்கும் போது கையில் எச்சில் பட்டால், அந்தப் பொருளை கீழே வைக்காமல், அந்தக் கையை மணிக்கட்டுவரையில் அலம்பிக் கொண்டு ஆசமனம் செய்தால் தானும் பரிசுத்தனாவான். அந்தப் பொருளும் பரிசுத்தமடையும்.*

वान्तो विरिक्तः स्नात्वा तु घृतप्राशनमाचरेत्।
आचामेदेव भुक्त्वाऽन्नं स्नानं मैथुनिनः स्मृतम्॥

**வாந்தோ நிரிக்த: ஸ்நாத்வாது க்ருதப்ராஷநமாசரேத் |**
**ஆசாமேவதேவ புக்த்வாந்நம் ஸ்நாநம் மைதுநிந: ஸ்ம்ருதம் ||** 144

*வாந்தியெடுத்தால், நீராடி நெய்யை ஆசமனம் செய்ய வேண்டும். சாப்பிட்ட பிறகு வாந்தியெடுத்தால், ஆசமனம் மட்டும் செய்ய வேண்டும். பெண்ணுடன் கலவி செய்தால் நீராட வேண்டும்.*

सुप्त्वा क्षुत्वा च भुक्त्वा च निष्ठीव्योक्त्वाऽनृतानि च।
पीत्वाऽपोऽध्येष्यमाणश् च आचामेत् प्रयतोऽपि सन्॥

**சுப்த்வா க்ஷுத்வா ச புக்த்வா ச நிஷ்ஃடீவ்யோக்த்வாந்ருதாநிச |
பீத்வா ஆபோ அத்யேஷ்யமாணஷ்ச ஆசாமேத்ப்ரயதோ அபிஸந் || 145**

*உறங்கி எழுந்த பிறகும், தும்மிய பிறகும், சாப்பிட்ட பிறகும், காறி உமிழ்ந்த பிறகும், பொய்யுரைத்த பிறகும், தண்ணீர் பருகிய பிறகும், வேத மோதப் போகும் போதும் தான் தூய்மையுடன் இருந்தாலும்கூட ஆசமனம் செய்ய வேண்டும்.*

**एष शौचविधिः कृत्स्नो द्रव्यशुद्धिस् तथैव च।
उक्तो वः सर्ववर्णानां स्त्रीणां धर्मान् निबोधत॥**

**ஏஷ ஷௌச விதி: க்ருத்ஸ் நோ த்ரவ்யஷுத்தி: ததைவ ச |
உக்தோ வஸ்ஸர்வ வர்ணாநாம் ஸ்த்ரீணாம் தர்மாந்நிபோதத || 146**

*சகல வர்ணத்தாருக்கும், தீட்டு முறை, தானம் அனைத்தும் கூறப்பட்டன.*

*இனி ஸ்த்ரீ தர்மங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்.*

**बालया वा युवत्या वा वृद्धया वाऽपि योषिता।
न स्वातन्त्र्येण कर्तव्यं किञ्चित् कार्यं गृहेष्वपि॥**

**பாலயா வா யுவத்யா வா வ்ருத்தயா வாபி யோஷிதா |
ந ஸ்வாதந்த்ரேண கர்த்தவ்யம் கிஞ்சித் கார்யம் க்ருஹேஷ்வபி || 147**

*சிறுமியாயினும், யுவதியாயினும், முதியவளாயினும் எந்தப் பருவத்திலும் பெண்ணானவள் தன் இல்லத்திலும்கூட சுதந்திரமாக எந்தச் செயலையும் செய்யக் கூடாது.*

**बाल्ये पितुर् वशे तिष्ठेत् पाणिग्राहस्य यौवने।
पुत्राणां भर्तरि प्रेते न भजेत् स्त्री स्वतन्त्रताम्॥**

**பால்யே பிதுர்வஷே திஷ்டேத் பாணிக்ராஹஸ்ய யௌவநே |
புத்ராணாம் பர்தரி ப்ரேதே ந பஜேத் ஸ்த்ரீ ஸ்வதந்த்ரதாம் || 148**

*பெண், பாலபருவத்தில் தந்தையின் வசத்தில் இருக்க வேண்டும். யுவதி, கணவனுக்கு வசப்பட்டு இருக்க வேண்டும். கணவன் இறந்து போன பிறகு புத்திரர்களின் வசத்தில் இருக்க வேண்டுமேயல்லாமல் சுதந்திரமாக இருக்கக் கூடாது.*

**पित्रा भर्त्रा सुतैर् वाऽपि नेच्छेद् विरहमात्मनः।
एषां हि विरहेण स्त्री गर्ह्ये कुर्यादुभे कुले॥**

**பித்ரா பர்த்ரா சுதைர்வாபி நேச்சே த்விரஹமாத்மந: |
ஏஷாம் ஹி விரஹேண ஸ்த்ரீ கர்ஹ்யே குர்யாதுபே குலே || 149**

ஒரு பெண், தந்தை, கணவன், புத்திரன் இவர்களை விட்டு தனித்திருக்க விரும்பக் கூடாது.

அப்படி இருந்தால், பிறந்த வம்சத்துக்கும் புகுந்த வம்சத்துக்கும் நிந்தை ஏற்படும்.

सदा प्रहृष्टया भाव्यं गृहकार्ये च दक्षया।
सुसंस्कृतोपस्करया व्यये चाऽमुक्तहस्तया॥

**ஸதா ப்ரஹ்ருஷ்டயா பாவ்யம் க்ருஹகார்யேஷு தக்ஷயா |**
**சுஸம்ஸ்க்ருதோபஸ்கரயா வ்யயே சாமுக்தஹஸ்தயா || 150**

எப்போதும் சிரித்த முகத்தோடு வீட்டு வேலைகளில் திறமை படைத்தவளாக, பொருட்களை நல்லபடி பேணிப் பாதுகாப்ப வளாக, வீண்விரயம் செய்யாதவளாக இருக்க வேண்டும்.

यस्मै दद्यात् पिता त्वेनां भ्राता वाऽनुमते पितुः।
तं शुश्रूषेत जीवन्तं संस्थितं च न लङ्घयेत्॥

**யஸ்மை தத்யாத்பிதா த்வேநாம் ப்ராதா வா அநுமதே பிது: |**
**தம் சுஷ்ரூஷேத ஜீவந்தம் ஸம்ஸ்திதம் ச ந லங்கயேத் || 151**

தந்தை ஒரு பெண்ணை யாருக்கு மணம் புரிவிக்கிறானோ அல்லது சகோதரன் அப்பெண்ணை யாருக்கு மணம் புரிவிக் கிறானோ, அவனுக்கு வாழ்நாள் முழுவதும் பணிவிடை செய்ய வேண்டும்.

அவன் இறந்தபிறகு அவனுக்கு சிராத்தம் முதலான கிரியைகளை நடத்திவர வேண்டும்.

मङ्गलार्थं स्वस्त्ययनं यज्ञश् चाऽसां प्रजापतेः।
प्रयुज्यते विवाहेषु प्रदानं स्वाम्यकारणम्॥

**மங்களார்த்தம் ஸ்வஸ்த்யயநம் யக்ஞஷ்சாஸாம் ப்ரஜாபதே: |**
**ப்ரயுஜ்யதே விவாஹேஷு ப்ரதாநம் ஸ்யாம்யகாரணம் || 152**

திருமணத்தின்போது செய்யப்படும் சாந்திக்காகக் கூறப் படும் மந்திரங்கள், ஹோமங்கள் மங்களத்துக்காகச் செய்யப் படுபவை. முதலில் வாக்குதத்தம் செய்த உடனேயே அப்பெண் அம்மணமகனுக்கு உரியவளாகி விடுகிறாள்.

अनृतावृतुकाले च मन्त्रसंस्कारकृत् पतिः।
सुखस्य नित्यं दातेह परलोके च योषितः॥

**அந்ருதா வ்ருது காலே ச மந்த்ர ஸம்ஸ்கார க்ருத்பதி: |**
**சுகஸ்ய நித்யம் தாதேஹ பரலோகே ச யோஷித: || 153**

மணம் புரிந்து கொண்ட கணவன் ருதுகாலத்திலும், மற்ற தருணங்களிலும் இகலோக சுகத்தை அளிப்பவன். அவனுக்கு அனுசரணையாக நடந்து கொள்வதால் பரலோக சுகமும் கிட்டும்.

विशीलः कामवृत्तो वा गुणैर् वा परिवर्जितः।
उपचर्यः स्त्रिया साध्व्या सततं देववत् पतिः॥

**விஷீல: காமவ்ருத்தோ வாகுணைர்வா பரிவர்ஜித: |**
**உபசர்ய: ஸ்த்ரியா ஸாத்வ்யா ஸததம் தேவவத்பதி: || 154**

சீலமற்றவனாயினும், பரத்தையர் சேர்க்கை கொண்டவனாயினும், வித்யையும் நற்குணங்களும் அற்றவனாயினும் பதிவிரதையான பெண் கணவனை எப்போதும் தெய்வமாகப் பூஜிக்க வேண்டும்.

नाऽस्ति स्त्रीणां पृथग् यज्ञो न व्रतं नाऽप्युपोषणम्।
पतिं शुश्रूषते येन तेन स्वर्गे महीयते॥

**நாஸ்தி ஸ்த்ரீணாம் ப்ருதக்யக்ஞோ ந வ்ரதம் நாப்யுபோஷிதம் |**
**பதிம் சுஷ்ருஷதே யேநதேந ஸ்வர்கே மஹீயதே || 155**

பெண்ணுக்கு யக்ஞம் செய்ய வேண்டியதில்லை. கணவன் அனுமதியின்றி விரதமும் இல்லை; உபவாசமும் இல்லை. ஆயின் கணவனுக்குப் பணிவிடை புரிவதன் மூலமாகவே மனைவி ஸ்வர்க்க லோகத்தை அடைந்து, அங்கு கௌரவிக்கப்படுகிறாள்.

पाणिग्राहस्य साध्वी स्त्री जीवतो वा मृतस्य वा।
पतिलोकमभीप्सन्ती नाऽऽचरेत् किञ्चिदप्रियम्॥

**பாணிக்ராஹஸ்ய ஸாத்வீ ஸ்த்வீ ஸ்த்ரீ ஜீவதோ வாம்ருதஸ்ய வா |**
**பதிலோகம பீப்ஸந்தீ நாசரேத் கிஞ்சித் அப்ரியம் || 156**

கரம் பிடித்த கணவன் இருக்கும் போதும், இறந்தபிறகும் அவனுக்கு எதிரான எந்தக் காரியத்தையும் செய்யக் கூடாது.

कामं तु क्षपयेद् देहं पुष्पमूलफलैः शुभैः।
न तु नामाऽपि गृह्णीयात् पत्यौ प्रेते परस्य तु॥

**காமம்து க்ஷபயேத்தேஹம் புஷ்பமூலபலை: சுபை: |**
**நது நாமாபி க்ருஹ்ணீயாத் பத்யௌ ப்ரேதே பரஸ்யது || 157**

கணவன் இறந்தபிறகு, பதிவிரதையான பெண், காய்கனி, கிழங்குகளைச் சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டுமேயல்லாமல், மற்றொருவன் பெயரைக்கூட உச்சரிக்கக்கூடாது.

आसीतामरणात् क्षान्ता नियता ब्रह्मचारिणी।
यो धर्म एकपत्नीनां काङ्क्षन्ती तमनुत्तमम्॥

**ஆஸீதாமரணாத் க்ஷாந்தா நியதா ப்ரஹ்மசாரிணீ |**
**யோ தர்ம ஏகபத்நீநாம் காந்க்ஷந்தீ தமநுத்தமம் || 158**

பதிவிரதையான பெண், கணவன் இறந்த பிறகு பொறுமை யோடு நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

கணவனுக்குச் செய்ய வேண்டிய சிராத்தம் முதலானவைகளைச் செய்ய வேண்டும். நாவிற்கு சுவை தேடாதவளாக, சம்போகத்தை வேண்டாதவளாக, உயிரோடு இருக்கும் வரை பிரம்மச்சரியத் தோடிருக்க வேண்டும்.

अनेकानि सहस्राणि कुमारब्रह्मचारिणाम्।
दिवं गतानि विप्राणामकृत्वा कुलसन्ततिम्॥

**அநேகாநி ஸஹஸ்ராணி குமாரப்ரஹ்ம சாரிணாம் |**
**திவம் கதாநி விப்ராணாமக்ருத்வா குலஸந்ததிம் || 159**

சிறுவயதிலேயே பிரம்மச்சாரிகளாக விவாஹம் செய்து கொள்ளாமலே இருந்த ஆயிரமாயிரம் பேர்கள் புண்ணிய லோகங்களை அடைந்துள்ளனர். எனவே தனக்கு சந்ததி இல்லையே என்று வருத்தப்படத் தேவையில்லை.

मृते भर्तरि साध्वी स्त्री ब्रह्मचर्ये व्यवस्थिता।
स्वर्गं गच्छत्यपुत्राऽपि यथा ते ब्रह्मचारिणः॥

**ம்ருதே பர்தரி ஸாத்வீ ஸ்த்ரீ ப்ரஹ்மசர்யே வ்யவஸ்திதா |**
**ஸ்வர்கம் கச்சத்யபுத்ராபி யதா தே ப்ரஹ்மசாரிண: || 160**

எனவே, கணவன் இறந்த பிறகு மனைவி பிள்ளைகள் அற்றவளாக இருப்பினும், வேறொரு ஆணை நாடாமல், கற்புள்ளவளாக இருந்தால், நித்ய பிரம்மச்சாரிகளைப் போல ஸ்வர்க்கலோகத்தை அடைவாள்.

अपत्यलोभाद् या तु स्त्री भर्तारमतिवर्तते।
सेह निन्दामवाप्नोति परलोकाच्च हीयते॥

**அபத்ய லோபாத்யாது ஸ்த்ரீ பர்தாரமதிவர்ததே |**
**ஸேஹ நிந்தா மவாப்நோதி பதிலோகாச்ச ஹீயதே || 161**

தான் ஸ்வர்க்கலோகம் போக பிள்ளைகள் வேண்டும் என்னும் எண்ணத்தோடு வேறொரு புருஷனோடு கூடும் பெண், அவ்வாறு பெற்ற மகனால் ஸ்வர்க்கலோகத்தை அடைய மாட்டாள். மேலும் இவ்வுலகில் நிந்தனைகளுக்கு ஆளாவாள்.

नाऽन्योत्पन्ना प्रजाऽस्तीह न चाऽप्यन्यपरिग्रहे।
न द्वितीयश् च साध्वीनां क्वचिद् भर्तोपदिश्यते॥

**நாந்யோத்பந்நா ப்ரஜாஸ்தீஹ நசாப்யந்ய பரிக்ரஹே |**
**நத்விதீயஷ்ச ஸாத்வீநாம் க்வசித்பர்தோ பதிஷ்யதே ||** 162

கணவனில்லாமல் வேறொருவன் மூலமாகப் பெற்ற மகன், அப்பெண்ணுக்கு, சாஸ்திரம் ஏற்றுக் கொண்ட மகனாகமாட்டான். அம்மகன் பிறக்கக் காரணமானவனும் அவனுக்குத் தகப்பனாக மாட்டான். பதிவிரதையான பெண்ணுக்கு எவ்விடத்திலும் இரண்டாவது மணம் விதிக்கப்படவில்லை.

पतिं हित्वाऽपकृष्टं स्वमुत्कृष्टं या निषेवते।
निन्द्यैव सा भवेल् लोके परपूर्वेति चोच्यते॥

**பதிம் ஹித்வாபக்ருஷ்டம் ஸ்வமுத்க்ருஷ்டம் யா நிஷேவதே |**
**நிந்த்யைவ ஸா பவேத்லோகே பரபூர்வேதி சோச்யதே ||** 163

கணவன் தாழ்ந்தவன் என்று அவனை விட்டுவிட்டு உயர்ந்தவனான வேறொருவனைக் கணவனாக அடைகிறவள் நிந்தைக்குரியவள். இதற்கு முன் இன்னொருவனுடன் வாழ்ந்தவள் என்று உலகத்தார் அவளைத் தூற்றுவர்.

व्यभिचारात् तु भर्तुः स्त्री लोके प्राप्नोति निन्द्यताम्।
शृगालयोनिं प्राप्नोति पापरोगैश् च पीड्यते॥

**வ்யபிசாராத்து பர்து: ஸ்த்ரீ லோகே ப்ராப்நோதி நிந்த்யதாம் |**
**ஸ்ருகாலயோநிம் ப்ராப்நோதி பாபரோகைஷ்ச பீட்யதே ||** 164

விபச்சாரியான பெண் இவ்வுலகில் நிந்தனைகளுக்காளாகி, இறந்த பின் நரியாகப் பிறப்பாள்.

மேலும் குஷ்டம் போன்ற கொடிய நோய்களுக்கும் ஆளாவாள்.

पतिं या नाऽभिचरति मनोवाग्देहसंयता।
सा भर्तृलोकानाप्नोति सद्भिः साध्वीति चोच्यते॥

**பதிம் யாநாபிசரதி மநோ வாக்தேஹஸம்யதா |**
**ஸா பர்த்ருலோக மாப்நோதி ஸத்பிஸ்ஸாத்வீதி சோச்யதே ||** 165

மனத்தாலும், வாக்காலும், உடலாலும் கற்பு நெறி பிறழாத பெண், கணவன் அடைந்த உத்தம லோகத்தை அடைகிறாள். இவள் கற்பரசி என்று சாதுக்களால் போற்றப்படுகிறாள்.

अनेन नारी वृत्तेन मनोवाग्देहसंयता।
इहाग्र्यां कीर्तिमाप्नोति पतिलोकं परत्र च॥

**அநேந நாரீவ்ருத்தேந மநோவாக் தேஹஸம்யதா |**
**இஹாக்ர்யாம் கீர்திமாப்நோதி பதிலோகம் பரத்ரச ||** 166

*இவ்வாறு பெண்ணுக்குரிய தர்மத்தோடு நடந்து கொண்டு மனம், வாக்கு, உடலால் நெறியோடு வாழும் பெண், இவ்வுலகில் கீர்த்தியோடு வாழ்ந்து இறந்த பிறகு கணவன் அடைந்த உலகத்தை அடைகிறாள்.*

एवंवृत्तां सवर्णां स्त्रीं द्विजातिः पूर्वमारिणीम्।
दाहयेदग्निहोत्रेण यज्ञपात्रैश् च धर्मवित्॥

**ஏவம் வ்ருத்தாம் ஸவர்ணாம் ஸ்த்ரீம் த்விஜாதி: பூர்வமாரிணீம் |**
**தாஹயேத் அக்நி ஹோத்ரேண யக்ஞபாத்ரைஷ்ச தர்மவித் ||** 167

*கற்புக்கரசியான தன் இனத்தவளான மனைவி, தனக்கு முன் இறந்தால், சாஸ்திர முறைப்படி சம்ஸ்காரம் செய்து செய்ய வேண்டிய கிரியைகளை யெல்லாம் முறைப்படி செய்துவர வேண்டும். தான் தினம் வளர்த்த அக்னியோடும் யக்ஞ பாத்திரங்களோடும் அவளைத் தகனம் செய்ய வேண்டும்.*

भार्यायै पूर्वमारिण्यै दत्त्वाऽग्नीनन्त्यकर्मणि।
पुनर् दारक्रियां कुर्यात् पुनराधानमेव च॥

**பார்யாயை பூர்வமாரிண்யை தத்வா அக்நீநந்த்யகர்மணி |**
**புநர்தாரக்ரியாம் குர்யாத்புநராதாநமேவ ச ||** 168

*மனைவிக்கு அந்திமக் கிரியைகளைச் செய்து, சாஸ்திர முறைப்படி அனைத்தையும் முடித்த பின்னர், வேறொரு பெண்ணை மணந்து மீண்டும் வைதிக அக்னியை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.*

अनेन विधिना नित्यं पञ्चयज्ञान् न हापयेत्।
द्वितीयमायुषो भागं कृतदारो गृहे वसेत्॥

**அநேந விதிநா நித்யம் பஞ்ச யக்ஞாந்ந ஹாபயேத் |**
**த்விதீய மாயுஷோ பாகம் க்ருததாரோ க்ருஹே வஸேத் ||** 169

*இவ்வாறாக இதுவரை கூறியவாறு தினமும் பஞ்சமகா யக்ஞங்களை விடாது செய்தபடி, மனைவியுடன் கூடியவனாக வாழ்வின் இரண்டாம் பாகமான கிருஹஸ்தாஸ்ரமத்தை நடத்தவேண்டியது.*

(ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 6

एवं गृहाश्रमे स्थित्वा विधिवत् स्नातको द्विजः।
वने वसेत् तु नियतो यथावद् विजितेन्द्रियः॥

**ஏவம் க்ருஹாஷ்ரமே ஸ்தித்வா விதிவத் ஸ்நாதகோ த்விஜ: |**
**வநே வஸேத்து நியதோ யதாவத் விஜிதேந்த்ரிய: || 1**

*வித்யாவிரதஸ்நாதகனான இருபிறப்பாளன், இவ்வாறு கிரகஸ்தாஸ்ரமத்தை நடத்தி, சாஸ்திரம் நியமங்களின் படியாக வான பிரஸ்தனாகி புலன்களை அடக்கியவனாக காலம் கடத்த வேண்டும்.*

गृहस्थस् तु यदा पश्येद् वलीपलितमात्मनः।
अपत्यस्यैव चाऽपत्यं तदाऽरण्यं समाश्रयेत्॥

**க்ரஹஸ்தஸ்து யதா பஷ்யேத்வலீபலி தமாத்மந: |**
**அபத்யஸ்யைவ சாபத்யம் ததாரண்யம் ஸமாஷ்ரயேத் || 2**

*கிருஹஸ்தன் எப்போது தன் முகத்தில் சுருக்கங்களைப் பார்க்கிறானோ, தலையில் நரையைப் பார்க்கிறானோ, எப்போது மகனுடைய மகனைப் பார்க்கிறானோ, அப்போது கிருஹஸ்தாஸ்ர மத்தை விட்டு வானபிரஸ்த ஆஸ்ரமத்தை ஏற்று வனத்துக்குப் போக வேண்டும்.*

सन्त्यज्य ग्राम्यमाहारं सर्वं चैव परिच्छदम्।
पुत्रेषु भार्यां निक्षिप्य वनं गच्छेत् सहैव वा॥

**ஸந்த்யஜ்ய க்ராம்யமாஹாரம் ஸர்வம் சைவ பரிச்சதம் |**
**புத்ரேஷு பார்யாம் நிக்ஷிப்ய வநம் கச்சேத்ஸஹைவ வா || 3**

*ஊருக்குள் கிடைக்கும் தானியங்கள், காய்கறிகள் முதலான உணவுகளை விட்டு விட்டு, வனத்தில் கிடைக்கும் கிழங்குகளையும் கனிகளையும் உணவாக ஏற்க வேண்டும்.*

*சொந்த பந்தங்களை விட்டு, மனைவியை மகனின் பொறுப்பில் விட்டோ அல்லது அவளுக்கு விருப்பமிருந்தால் தன்னுடன்கூட அழைத்துக் கொண்டோ போகலாம்.*

अग्निहोत्रं समादाय गृह्यं चाग्निपरिच्छदम्।
ग्रामादरण्यं निःसृत्य निवसेन् नियतेन्द्रियः॥

**அக்நிஹோத்ரம் ஸமாதாய க்ருஹ்யம் சாக்நி பரிச்சதம் |**
**க்ராமாதரண்யம் நிஸ்ஸ்ருத்ய நிவஸேந்நியதேந்த்ரிய: ||** 4

வீட்டிலிருக்கும் அக்னியையும், அக்னி ஹோத்திரத்துக்குத் தேவையான உபகரணங்களையும் எடுத்துக் கொண்டு ஊரை விட்டு வெளியேறி ஆரண்யத்தை அடைந்து புலன்களை வென்றவனாக வாழ வேண்டும்.

मुन्यन्नैर् विविधैर् मेध्यैः शाक-मूल-फलेन वा।
एतानेव महायज्ञान् निर्वपेद् विधिपूर्वकम्॥

**முந்யந்நைர் விவிதைர் மேத்யைஷ்ஷாக மூலபலேந வா |**
**ஏதாநேவ மஹாயக்ஞாந்நிர்வபேத் விதிபூர்வகம் ||** 5

முனிவர்களின் ஆஹார நியமங்களோடிருக்க வேண்டும். ஆரண்யத்தில் கிட்டும் கனிகள், காய்கள், கிழங்குகளால் பஞ்சமகா யக்ஞங்களை விதிமுறைப்படி செய்ய வேண்டும்.

वसीत चर्म चीरं वा सायं स्नायात् प्रगे तथा।
जटाश् च विभृयान् नित्यं श्मश्रु-लोम-नखानि च॥

**வஸீத சர்ம சீரம் வா ஸாயம் ஸ்நாயாத்ப்ரகே ததா |**
**ஜடாஷ்ச பிப்ருயாந்நித்யம் ஷ்மஷ்ருலோமநகாநிச ||** 6

மான் தோல் முதலான தோல்களையாவது, மரவுரியாவது அணிய வேண்டும். காலையும் மாலையும் நீராட வேண்டும். ஜடை வளர்க்க வேண்டும். தாடி, மீசைகளை வளர்க்க வேண்டும்.

यद् भक्ष्यं स्यात् ततो दद्याद् बलिं भिक्षां च शक्तितः।
अम्-मूल-फल-भिक्षाभिरर्चयेदाश्रमागतान्॥

**யத் பக்ஷ்யம் ஸ்யாத் ததோ தத்யாத் பலிம் பிக்ஷாம் ஷக்தித |**
**அம்மூலபலபிக்ஷாபிரர் பயேதாஷ்ரமாகத தாந் ||** 7

தான் எதை உண்கிறானோ அதைக் கொண்டே நித்ய சிராத்தம், பலி, வைஸ்வதேவம் முதலானவற்றைச் செய்ய வேண்டும். தன் ஆஸ்ரமத்துக்கு வந்தவர்களுக்கு தண்ணீர், கிழங்குகள், பழங்கள் கொடுத்து உபசரிக்க வேண்டும்.

स्वाध्याये नित्ययुक्तः स्याद् दान्तो मैत्रः समाहितः।
दाता नित्यमनादाता सर्वभूतानुकम्पकः॥

**ஸ்வாத்யாயே நித்ய யுக்தஸ் ஸ்யாத்தாந்தோ மைத்ரஸ்ஸமாஹித: |**
**தாதா நித்யமநாதாதா ஸர்வ பூதா நுகம்பக: ||** 8

வேதமோதுவதில் எப்போதும் ஊக்கமுடையவனாகவும், வெயில், மழை, குளிர் முதலானவற்றைப் பொறுத்துக் கொள்பவனாகவும், பரோபகாரியாகவும், மனத்தைத் தன் வசப்படுத்திக் கொள்பவனாகவும், பிறருக்கு ஈபவனாகவும், பிறரிடமிருந்து தானம் ஏற்காதவனாகவும், எல்லா உயிர்களிடத்தும் கருணையுள்ளவனாகவும் இருக்க வேண்டும்.

वैतानिकं च जुहुयादग्निहोत्रं यथाविधि।
दर्शमस्कन्दयन् पर्व पौर्णमासं च योगतः॥

**வைதாநிகம் ச ஜுஹுயாதக்நிஹோத்ரம் யதாவிதி |**
**தர்ஷமஸ்கந்தயந் பர்வ பௌர்ணமாஸம் ச யோகத: || 9**

விதான அக்னி ஹோமங்களைச் செய்ய வேண்டும். கார்ஹபத்ய குண்டத்திலிருக்கும் அக்னிகளை ஆஹவநீய தட்சிணாக்னி குண்டங்களில் சேர்த்து விடுவது 'விதான' மெனப்படும். இத்தகைய வைதாநிகாக்னியில் ஷ்ரௌத ஸ்மார்த்த தர்ஷ பௌர்ணமிகளில் சாஸ்திரப்படி ஹோமம் செய்ய வேண்டும்.

ऋक्षेष्ट्याग्रयणं चैव चातुर्मास्यानि चाऽऽहरेत्।
तुरायणं च क्रमशो दक्षस्याऽयनमेव च॥

**றுக்ஷேஷ்ஸ்ட்யாக்ரயணம் சைவ சாதுர்மாஸ்யாநி சாஹரேத் |**
**துராயணம் ச க்ரமஷோ தாக்ஷஸ் யாயந மேவச || 10**

நட்சத்திர ஹோமம், ·புது தானியங்களின் ஹோமமான ஆக்ரயணேஷ்டி, சாதுர்மாதங்களிலும், உத்தராயன தட்சிணாயன காலங்களில் செய்யும் ஹோமங்களையும் கிரமமாகச் செய்ய வேண்டும்.

वासन्तशारदैर् मेध्यैर् मुन्यन्नैः स्वयमाहृतैः।
पुरोडाशांश् चरूंश् चैव विधिवन् निर्वपेत् पृथक्॥

**வாஸந்த ஷாரதைர் மேத்யைர் முந்யந்நை: ஸ்வய மாஹ்ருதை: |**
**புரோடாஷாம்ஷ்சரூந்ஷ்சைவ விதிவந்நிர்வபேத்ப்ருதக் || 11**

இளவேனில் காலத்திலும் கார் காலத்திலும் காட்டில் விளைந்த நெல்மணிகளைப் பொறுக்கி புரோடாசம் தயாரிக்க வேண்டும். சருவையும் சாஸ்திர முறைப்படி தயாரிக்க வேண்டும்.

देवताभ्यस् तु तद् धुत्वा वन्यं मेध्यतरं हविः।
शेषमात्मनि युञ्जीत लवणं च स्वयंकृतम्॥

**தேவதாப்யஸ்து தத்துத்வா வந்யம் மேத்யதரம் ஹவி: |**
**சேஷமாத்மநி யுஞ்ஜீத லவணம் ச ஸ்வயம்க்ருதம் || 12**

வனத்தில் கிடைக்கும் தானியங்களால் செய்யப்பட்டவையும் யாகங்களுக்கு உகந்தவையுமான புரோடாசம், சரு முதலான ஹவிஸ்களை தேவர்களுக்களித்து மிகுதியைத் தான் உண்ண வேண்டும்.

உவர் மண்ணிலிருந்து உப்பைக் காய்ச்சியெடுத்து உபயோகப் படுத்திக் கொள்ளலாம்.

स्थलजौदकशाकानि पुष्पमूलफलानि च।
मेध्यवृक्षोद्भवान्यद्यात् स्नेहांश् च फलसम्भवान्॥

**ஸ்தலஜௌதக ஷாகாநி புஷ்பமூல பலாநிச |**
**மேத்ய வ்ருக்ஷோத் பவாந்யத் யாத்ஸ்நேஹாம்ஷ்ச பல ஸம்பவாந் || 13**

நிலம், நீர் இவைகளில் விளைந்த காய்கள், மலர்கள், கிழங்குகள், பழங்கள், ஆரண்யத்திலிருக்கும் யக்ஞ சம்பந்தமான மரங்களிலிருந்து கிடைக்கும் பழங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொள்ளலாம். சில செடிகளின் விதைகளிலிருந்து எடுத்த எண்ணெய்களை உபயோகித்துக் கொள்ள வேண்டும்.

वर्जयेन् मधु मांसं च भौमानि कवकानि च।
भूस्तृणं शिग्रुकं चैव श्लेष्मातकफलानि च॥

**வர்ஜயேந் மது மாம்ஸம் ச பௌமாநி கவகாநி ச |**
**பூஸ்த்ருணம் ஷிக்ருகம் சைவ ஷ்லேஷ்மாதக பலாநி ச || 14**

தேனீ சேகரித்த தேன், மாமிசம், மண்ணிலும் மரத்திலும் முளைத்த காளான், முருங்கைக் கீரை, முருங்கைக்காய் முதலான வைகளைச் சாப்பிடக் கூடாது.

त्यजेदाश्वयुजे मासि मुन्यन्नं पूर्वसञ्चितम्।
जीर्णानि चैव वासांसि शाकमूलफलानि च॥

**த்யஜே தாஷ்வயுஜே மாஸி முந்யந்நம் பூர்வஸஞ்சிதம் |**
**ஜீர்ணாநி சைவ வாஸாம்ஸி ஷாகமூல பலாநி ச || 15**

ஒவ்வொரு வருடமும் ஐப்பசி மாதத்தில் சேர்த்து வைத்திருக்கும் முனிவர்கள் சாப்பிடத்தக்கதான தானியங்களையும், கிழிந்த ஆடைகளையும், பழையதான காய்கள், கிழங்குகள், பழங்கள் அனைத்தையும் நீக்க வேண்டும்.

न फालकृष्टमश्नीयादुत्सृष्टमपि केनचित्।
न ग्रामजातान्यार्तोऽपि मूलानि च फलानि च॥

**ந பாலக்ருஷ்டமஷ்நீயாதுத் ஸ்ருஷ்டமபி கேநசித் |**
**ந க்ராமஜாதாந்யார்தோ அபிமூலாநி ச பலாநி ச || 16**

உழுத நிலத்தில் தோன்றிய தானியங்களை, அவை உடைமையாளனால் வேண்டாமெனத் தள்ளப்பட்டதாயினும்கூட அவற்றை எடுத்துக் கொள்ளக் கூடாது. அவ்வாறன்றி கிராமத்தில் விளைந்த கிழங்குகள், பழங்களையும்கூட, நோயுற்ற காலத்தும்கூட எடுக்கக் கூடாது.

अग्निपक्वाऽशनो वा स्यात् कालपक्वभुगेव वा।
अश्मकुट्टो भवेद् वाऽपि दन्तोलूखलिकोऽपि वा॥

**அக்நி பக்வாஷநோ வா ஸ்யாத்காலபக்வ புகேவ வா |**
**அஷ்மகுட்டோ பவேத்வாபி தந்தோலூகலிகோ அபி வா || 17**

நெருப்பில் சமைத்த உணவையும், தானாகப் பழுத்த பழங்களையும், உரல் முதலானவைகளை உபயோகிக்காமல் கல்லின் மீது நுணுக்கியவைகளையும் அல்லது பற்களையே உரலாக பயன்படுத்திப் பெறப்படும் உணவுகளையே சாப்பிட வேண்டும். பற்களையே உரலாகக் கொள்வது என்பது மென்று தின்பதைக் குறிக்கும்.

सद्यःप्रक्षालको वा स्यान् माससञ्चयिकोऽपि वा।
षण्मासनिचयो वा स्यात् समानिचय एव वा॥

**ஸத்ய: ப்ரக்ஷாளகோ வா ஸ்யாந்மாஸ ஸஞ்சயிகோ அபி வா |**
**ஷண் மாஸ நிசயோ வா ஸ்யாத்ஸமாநிசய ஏவ வா || 18**

தனக்கு வேண்டிய தானியங்களை அன்றன்றோ, மாதா மாதமோ, ஆறு மாதத்துக் கொரு முறையோ, வருடத்துக் கொரு முறையோ சேகரித்து வைத்துக் கொள்ளலாம்.

नक्तं चाऽन्नं समश्नीयाद् दिवा वाऽऽहृत्य शक्तितः।
चतुर्थकालिको वा स्यात् स्याद् वाऽप्यष्टमकालिकः॥

**நக்தம் சாந்நம் ஸமஷ்நீயாத்திவா வா அஹ்ருத்ய ஷக்தித: |**
**சதுர்த்தகாலிகோ வா ஸ்யாத் ஸ்யாத்வாப்யஷ்டம காலிக: || 19**

தேவைக்குத் தக்க உணவைக் கொணர்ந்து மாலையிலோ அல்லது பகலில் நான்காம் காலத்திலோ அல்லது ஒரு நாள் உபவாசமிருந்து மறுநாள் மாலையிலோ, மூன்று நாட்கள் உபவாசமிருந்து நான்காம் நாள் இரவோ சாப்பிட வேண்டும்.

चान्द्रायणविधानैर् वा शुक्लकृष्णे च वर्तयेत्।
पक्षाऽन्तयोर् वाऽप्यश्नीयाद् यवागूं क्वथितां सकृत्॥

**சாந்த்ராயண விதானைர்வா ஷுக்ளே க்ருஷ்ணே ச வர்தயேத் |**
**பக்ஷாந்தயோர்வாப்யஷ்நீயாத்யவாகூம் க்வதிதாம் ஸக்ருத் || 20**

சாந்திராயன விரதப்படி வளர்பிறை, தேய்பிறைகளில் ஒவ்வொரு கவளமாகக் குறைக்க வேண்டும்.

சுக்ல பட்ச, கிருஷ்ண பட்ச முடிவுகளில் காலையிலோ மாலையிலோ இரு வேளையுமோ காய்ச்சிய கஞ்சியைக் குடிக்க வேண்டும்.

पुष्प-मूल-फलैर् वाऽपि केवलैर् वर्तयेत् सदा।
कालपक्वैः स्वयंशीर्णैर् वैखानसमते स्थितः॥

**புஷ்பமூல பலைர்வாபி கேவலைர்வர்தயேத்ஸதா |**
**காலபக்வைஸ் ஸ்வயம் ஷீர்ணைர்வா காநஸமதே ஸ்திதः || 21**

அல்லது தாமாய் கீழே விழுந்த பழங்களையும், பூக்களையும், தாமாய் காய்ந்து போன கிழங்குகளையும் உண்டு காலம் கடத்த வேண்டும். வைகானச தர்மத்தில் கூறியுள்ளதைக் கடைப்பிடித் தொழுக வேண்டும்.

भूमौ विपरिवर्तेत तिष्ठेद् वा प्रपदैर् दिनम्।
स्थानाऽऽसनाभ्यां विहरेत् सवनेषूपयन्नपः॥

**பூமௌ விபரிவர்தேத திஷ்டேத்வா ப்ரபதைர்திநம் |**
**ஸ்தாநாஸநாப்யாம் விஹரேத் ஸவநே ஷூபயந்நப: || 22**

காலையும், மாலையும் நீராட வேண்டும். உணவு மற்றும் ஸ்நான வேளைகளைத் தவிர்த்து மற்ற தருணங்களில் தரை மீது படுத்துப் புரளலாம். அல்லது ஏதேனும் ஆசனத்தில் அமர்ந் திருக்கலாம். முழங்கால்களின் மீது சிறிது நேரம் நிற்கலாம்.

ग्रीष्मे पञ्चतपास् तु स्याद् वर्षास्वभ्राऽवकाशिकः।
आर्द्रवासास् तु हेमन्ते क्रमशो वर्धयंस् तपः॥

**க்ரீஷ்மே பஞ்சதபாஸ்து ஸ்யாத்வர்ஷா ஸ்வப்ராவ காஷிக: |**
**ஆர்த்ர வாசாஸ்து ஹேமந்தே க்ரமஷோ வர்தயம்ஸ்தப: || 23**

தன் தவத்தை வளர்த்துக் கொள்வதற்காக கோடையில் பஞ்சாக்நி மத்தியிலும், மழைக் காலத்தில் மழையில் நனைந்தபடியும், பனிக் காலத்தில் ஈர உடைகளோடும் தவம் செய்ய வேண்டும்.

उपस्पृशंस् त्रिषवणं पितॄन् देवांश् च तर्पयेत्।
तपश् चरंश् चोग्रतरं शोषयेद् देहमात्मनः॥

**உபஸ்ப்ருஷம் ஸ்த்ரிஷவனம் பித்ரூந் தேவாம்ஷ்ச தர்பயேத் |**
**தபஷ்சரந்ஷ் சோக்ரதரம் ஷோஷயேத் தேஹமாத்மந: || 24**

மூன்று பொழுதுகளிலும் நீராடி, தேவ ரிஷி பித்ரு கிரியைகளைச் செய்து கொண்டு, பட்ச உபவாசமோ, மாத உபவாசமோ இருந்தபடி கடுந்தவம் செய்து உடலை ஒடுக்க வேண்டும்.

सग्नीनात्मनि वैतानान् समारोप्य यथाविधि।
अनग्निरनिकेतः स्यान् मुनिर् मूलफलाऽशनः॥

**அக்நீம்ஷ்சாத்மநி வைதாநாந் ஸமாரோப்ய யதாவிதி |**
**அநக்நிரநிகேதஸ் ஸ்யாத்முநிர் மூலபலாஷந: ||** **25**

இவ்வாறு ஆறு மாதங்களான பிறகு வைகானச சாஸ்திரம் கூறியபடி அக்னி காரியங்களை முடித்து விட்டு, இனி அக்னி காரியங்கள் எதுவுமில்லை என்று இதுவரை அமைத்துக் கொண்டிருந்த வீட்டைத் துறந்து, மௌன விரதம் ஏற்று, காய்கனி கிழங்குகளையே சாப்பிட்டபடி இருக்க வேண்டும். ஆங்காங்கே மரத்தடியில் தங்க வேண்டும்.

अप्रयत्नः सुखार्थेषु ब्रह्मचारी धराशयः।
शरणेष्वममश्चैव वृक्षमूलनिकेतनः॥

**அப்ரயத்நஸ் சுகார்தேஷு ப்ரஹ்மசாரீ தராஷய: |**
**ஷரணேஷ்வமமஷ்சைவ வ்ருக்ஷமூல நிகேதந: ||** **26**

சுகம் தரும் விஷயங்களில் ஈடுபடாதவனாக, பிரம்மச்சாரியாக, தரையில் படுத்தபடி, பற்றுதலற்றவனாக மரத்தடிகளில் வசித்து வர வேண்டும்.

तापसेष्वेव विप्रेषु यात्रिकं भैक्षमाहरेत्।
गृहमेधिषु चाऽन्येषु द्विजेषु वनवासिषु॥

**தாபஸேத்வேவ விப்ரேஷு யாத்ரிகம் பைக்ஷமாஹரேத் |**
**க்ருஹமேதிஷு சாந்யேஷு த்விஜேஷு வநவாசிஷு ||** **27**

தபஸ்விகளாக இருக்கும் பிராம்மணர்களிடமிருந்து தன் ஜீவனத்துக்குத் தேவையான உணவை பிட்சையாக ஏற்க வேண்டும்.

அத்தகையதோர் இல்லாதவிடத்து வனத்தில் வசிக்கும் மற்ற கிருஹஸ்தர்களிடம் பிட்சை ஏற்கலாம்.

ग्रामादाहृत्य वाऽश्नीयादष्टौ ग्रासान् वने वसन्।
प्रतिगृह्य पुटेनैव पाणिना शकलेन वा॥

**க்ராமாஹ்ருத்ய வாஷ்நீயாதஷ்டௌ க்ராஸாந் வநே வஸந் |**
**ப்ரதிக்ருஹ்ய புடேநைவ பாணிநா ஸகலேந வா ||** **28**

அத்தகையவர்களும் இல்லாதபோது கிராமத்திற்குச் சென்று எட்டு கவளங்களை மட்டும் கைகளிலோ, இலையிலோ, மரப் பாத்திரத்திலோ, தொன்னையிலோ பெற்றுக்கொண்டு வந்து உண்ண வேண்டும்.

एतास् चान्यांश् च सेवेत दीक्षा विप्रो वने वसन्।
विविधाश् चौपनिषदीरात्मसंसिद्धये श्रुतीः॥

**ஏதாஷ்சாந்யாஷ்ச ஸேவேத தீக்ஷா விப்ரோ வநே வஸந் |**
**விவிதாஷ்சௌபநி ஷதீராத் மஸம்ஸித்தயே ஷ்ருதீ: ||** 29

*வானபிரஸ்தாஸ்ரமத்தில் சொல்லப்பட்ட நியமங்களை கடைப் பிடித்தபடி, உபநிஷத் வாக்கியங்களால் பலமுறை துதித்தபடி, அவற்றின் பொருளை ஆராய்ந்தபடி, பரமாத்மாவை அடையும் வழியை எண்ணி காலங்கடத்த வேண்டும்.*

ऋषिभिर् ब्राह्मणैश् चैव गृहस्थैरेव सेविताः।
विद्यातपोविवृद्ध्यर्थं शरीरस्य च शुद्धये॥

**ருஷிபிர் ப்ராஹ்மணஷ்சைவ க்ருஹஸ்தைரேவ சேவிதா: |**
**வித்யாதபோ விவ்ருத்த்யர்த்தம் ஷரீரஸ்ய ச ஷுத்தயே ||** 30

*ரிஷிகளும், பிரம்ம பதத்தையடைந்த மற்றவர்களும், கிருஹஸ் தர்களும் உபநிஷத் வாக்கியங்களை மனனம் செய்துள்ளனர். எனவே வானபிரஸ்தர்கள் இவ்வாறு செய்ய வேண்டும்.*

अपराजितां वाऽऽस्थाय व्रजेद् दिशमजिह्मगः।
आ निपाताच् छरीरस्य युक्तो वार्यनिलाऽशनः॥

**அபராஜிதாம் வாஸ்தாய வ்ரஜேத்திஷமஜிஹ்மக: |**
**ஆ நிபாதாச்சரீரஸ்ய யுக்தோ வார்யநிலாஷந: ||** 31

*குணப்படுத்த முடியாத நோய் ஏற்பட்டபோது, ஈசான திசையை நோக்கி நடக்க வேண்டும். காற்றையும் நீரையும் புசித்தபடி உடல் கீழே விழும்வரை போக வேண்டும்.*

आसां महर्षिचर्याणां त्यक्त्वाऽन्यतमया तनुम्।
वीतशोकभयो विप्रो ब्रह्मलोके महीयते॥

**ஆசாம் மஹர்ஷிசர்யாணாம் த்யக்த்வாந்யதமயா தநும் |**
**வீதஷோகபயோ விப்ரோ ப்ரஹ்மலோகே மஹீயதே ||** 32

*இதுவரை கூறிய மகரிஷிக்குரிய முறைகளில் ஏதேனும் ஒரு வகையால் உடலை விட்ட பிராம்மணன், பய துக்கங்களற்று பிரம்ம லோகத்தை அடைகிறான்.*

वनेषु च विहृत्यैवं तृतीयं भागमायुषः।
चतुर्थमायुषो भागं त्यक्त्वा सङ्गान् परिव्रजेत्॥

**வநேஷுது விஹ்ருத்வைவம் த்ருதீயம் பாகமாயுஷ: |**
**சதுர்த்தமாயுஷோ பாகம் த்யக்த்வா ஸங்காந்பரிவ்ரஜேத் ||** 33

*வனத்தில் வாழ்வின் மூன்றாவது பாகத்தைக் கடத்தி, மனைவி மக்கள் தொடர்பை விட்டு, நான்காவது பாகமான சந்யாசத்தை ஏற்க வேண்டும்.*

**आश्रमादाश्रमं गत्वा हुतहोमो जितेन्द्रियः।
भिक्षाबलिपरिश्रान्तः प्रव्रजन् प्रेत्य वर्धते॥**

**ஆஷ்ரமாதாஷ்ரமம் கத்வாஹுதஹோமோ ஜிதேந்த்ரிய: |
பிக்ஷா பலி பரிஷ்ராந்த: ப்ரவ்ரஜந் ப்ரேத்ய வர்ததே ||** 34

*முதல் ஆஸ்ரமத்திலிருந்து அடுத்தது அடுத்தது என்று கடந்து வர வேண்டும். முதல் ஆஸ்ரமங்களில் சக்திக்குத் தக்கபடி அக்னி ஹோத்திரங்களைச் செய்ய வேண்டும்.*

*புலன்களை வென்றவனாக பிட்சை, பலி முதலியவற்றையும் விட்டு சந்யாசம் ஏற்பவன் பிரம்மபதத்தை அடைகிறான்.*

**ऋणानि त्रीण्यपाकृत्य मनो मोक्षे निवेशयेत्।
अनपाकृत्य मोक्षं तु सेवमानो व्रजत्यधः॥**

**ருணாநி த்ரீண்ய பாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேஷயேத் |
அநபாக்ருத்ய மோக்ஷம் து ஸேவமாநோ வ்ரஜத்யத: ||** 35

*ரிஷி கடன், தேவ கடன், பித்ரு கடன் என்னும் மூன்று கடன்களையும் தீர்க்காமல் மோட்சத்தை அடைய முயல்பவன் நரகத்தில் வீழ்வான்.*

**अधीत्य विधिवद् वेदान् पुत्रांश् चोत्पाद्य धर्मतः।
इष्ट्वा च शक्तितो यज्ञैर् मनो मोक्षे निवेशयेत्॥**

**அதீத்ய விதிவத் வேதாந் புத்ராந்ஷ்சோத்பாத்ய தர்மத: |
இஷ்ட்வாச ஷக்திதோ யக்ஞைர்மநோ மோக்ஷே நிவேஷயேத் ||** 36

*சாஸ்திரம் கூறியபடி வேதாத்யயனம் செய்து, புத்திரர்களைப் பெற்று, யாக யக்ஞங்களைச் செய்த பிறகு சந்யாசத்தில் மனத்தைச் செலுத்த வேண்டும்.*

**अनधीत्य द्विजो वेदाननुत्पाद्य तथा सुतान्।
अनिष्ट्वा चैव यज्ञैश् च मोक्षमिच्छन् व्रजत्यधः॥**

**அநதீத்ய த்விஜோ வேதாநநுத்பாத்ய ததா ஸுதாந் |
அநிஷ்ட்வா சைவ யக்ஞைஷ்ச மோக்ஷமிச்சந் வ்ரஜ த்யத: ||** 37

*வேதங்களை ஓதாமல், தன் மனைவியிடம் புத்திரனைப் பெறாமல், யாகங்கள் செய்யாமல் மோக்ஷத்தை அடைய எண்ணும் இரு பிறப்பாளன் நரகத்தில் வீழ்வான்.*

प्राजापत्यां निरुप्येष्टिं सर्ववेदसदक्षिणाम्।
आत्मन्यग्नीन् समारोप्य ब्राह्मणः प्रव्रजेद् गृहात्॥

**ப்ராஜாபத்யாம் நிரூப்யேஷ்டிம் ஸர்வவேதஸ தக்ஷிணாம் |**
**ஆத்மந்யக்நீந் ஸமாரோப்ய ப்ராஹ்மண: ப்ரவ்ரஜேத் க்ருஹாத் || 38**

*பிராஜாபத்ய வேள்வியை முடித்து சகலத்தையும் தக்ஷிணையாக வழங்கி, முன்னர் கூறியபடி மூன்று அக்னிகளையும் உணர்வால் தன்னுள் ஏற்று பிறகு பிராம்மணன் சந்யாசம் ஏற்க வேண்டும்.*

यो दत्त्वा सर्वभूतेभ्यः प्रव्रजत्यभयं गृहात्।
तस्य तेजोमया लोका भवन्ति ब्रह्मवादिनः॥

**யோ தத்வா ஸர்வ பூதேப்ய: ப்ரவ்ரஜத்யபயம் க்ருஹாத் |**
**தஸ்ய தேஜோமயோ லோகாபவந்தி ப்ரஹ்மவாதிந: || 39**

*எல்லா உயிர்களுக்கும் அபயமளித்து, எவ்வுயிர்க்கும் தீங்கிழைக் காதவனாக வாழ்ந்து, கிருஹஸ்தாஸ்ரமத்தை விட்டு உபநிஷத் வாக்கியங்களில் சிரத்தையோடிருந்து, சந்யாசம் ஏற்றவனுக்கு இறந்த பிறகு ஒளி பொருந்திய உலகங்கள் கிடைக்கும்.*

यस्मादण्वपि भूतानां द्विजान्नोत्पद्यते भयम्।
तस्य देहाद् विमुक्तस्य भयं नास्ति कुतश्चन॥

**யஸ்மாதண்வபி பூதாநாம் த்விஜாந்நோத்பத்யதே பயம் |**
**தஸ்ய தேஹாத் விமுக்தஸ்ய பயம் நாஸ்தி குதஷ்சந || 40**

*எந்த இருபிறப்பாளனால் சகல உயிர்களுக்கும் சிறிதளவும் பயம் ஏற்படாதோ, அத்தகையவன் இறந்த பிறகு, அவனுக்கு எதனாலும் பயம் ஏற்படாது.*

अगारादभिनिष्क्रान्तः पवित्रोपचितो मुनिः।
समुपोढेषु कामेषु निरपेक्षः परिव्रजेत्॥

**அகாராதபி நிஷ்க்ராந்த: பவித்ரோ பசிதோ முநி: |**
**ஸமுபோடேஷு காமேஷு நிரபேக்ஷ: பரிவ்ரஜேத் || 41**

*வீட்டைத் துறந்து வந்தவன் தண்டம், கமண்டலம் முதலான பரிசுத்தப் பொருட்களோடு இருக்க வேண்டும். மற்றவர்கள் சுகமளிக்கும் பொருட்களைக் கொணர்ந்து கொடுத்தாலும் அவற்றின் மீது நினைவைச் செலுத்தாமல் சந்யாச ஆஸ்ரமத்தை நடத்த வேண்டும்.*

एक एव चरेन् नित्यं सिद्ध्यर्थमसहायवान्।
सिद्धिमेकस्य सम्पश्यन् न जहाति न हीयते॥

**ஏகஏவ சரேந்நித்யம் ஸித்யர்த்தமஸஹாயவாந் |**
**ஸித்திமேகஸ்ய ஸம்பஷ்யந்ந ஜஹதிநஹீயதே || 42**

துணையின்றி தனித்து சஞ்சரிக்க வேண்டும். தனித்திருப்ப வனுக்கே மோட்சம் கிட்டும் என்பதை அறிந்து, அனைத்தையும் விட்டு துக்கங்களை அறுத்து நிற்பவன் இறுதியில் மோட்சத்தை அடைவான்.

अनग्निरनिकेतः स्याद् ग्राममन्नार्थमाश्रयेत्।
उपेक्षकोऽसङ्कुसुको मुनिर् भावसमाहितः॥

**அநக்நிரநி கேதஸ் ஸ்யாத் க்ராம மந்நார்த்தமாஷ்ரயேத் |**
**உபேக்ஷகோ அஸம்குசுகோ முநிர்பாவ ஸமாஹித: || 43**

தனக்கென்று சமைக்காமல், தனக்கென்று வீடு இல்லாமல், உடலை நோய்கள் தாக்கியபோதும் அதைப்பற்றிக் கவலைப் படாமல், உறுதியான மனத்தோடு பரமாத்மாவை தியானித்தபடி இரவும் பகலும் வனத்திலேயே இருக்க வேண்டும். உணவுக்காக மட்டும் கிராமத்துக்குச் செல்லலாம்.

कपालं वृक्षमूलानि कुचेलमसहायता।
समता चैव सर्वस्मिन्नेतन् मुक्तस्य लक्षणम्॥

**கபாலம் வ்ருக்ஷமூலாநி குசேலமஸஹாயதா |**
**ஸமதா சைவ ஸர்வஸ்மிந்நேதந் முக்தஸ்ய லக்ஷணம் || 44**

பிட்சை எடுப்பதற்காக மண்பாண்டம், தங்குவதற்கு மரத்தடி, உடுத்த கந்தைத் துணி, அனைத்திலும் பிரம்ம பாவத் தோடிருக்கும் சமபுத்தி என்னும் இவை சந்யாசிக்கு இருக்க வேண்டிய லட்சணங்கள்.

नाऽभिनन्देत मरणं नाऽभिनन्देत जीवितम्।
कालमेव प्रतीक्षेत निर्वेशं भृतको यथा॥

**நாபிநந்தேத மரணம் நாபிநந்தேத ஜீவிதம் |**
**காலமேவ ப்ரதீக்ஷேத நிர்தேஷம் ப்ருதகோ யதா || 45**

உயிரோடிருப்பதை எண்ணி சந்தோஷப்படக் கூடாது. மரணத்தைக் குறித்தும் கவலைப்படக் கூடாது. கூலியை எதிர் பார்த்துக் காத்திருக்கும் தொழிலாளியைப் போல உடல் விழும் நாளை எதிர்பார்த்திருக்க வேண்டும்.

दृष्टिपूतं न्यसेत् पादं वस्त्रपूतं जलं पिबेत्।
सत्यपूतां वदेद् वाचं मनःपूतं समाचरेत्॥

**த்ருஷ்டிபூதம் ந்யஸேத்பாதம் வஸ்த்ரபூதம் ஜலம்பிபேத் |**
**ஸத்யபூதாம் வதேத்வாசம் மந:பூதாம் ஸமாசரேத் || 46**

நன்கு பார்த்து பரிசுத்தமான இடத்தில் கால் வைத்து நடக்க வேண்டும். துணியால் வடிகட்டிய நீரையே அருந்த வேண்டும். சத்தியமே பேச வேண்டும். தீய நினைப்பற்ற மனத்தோடு பரிசுத்தமான ஆத்மாவாக இருக்க வேண்டும்.

अतिवादांस् तितिक्षेत नाऽवमन्येत कञ्चन।
न चेमं देहमाश्रित्य वैरं कुर्वीत केनचित्॥

**அதிவாதாம் ஸ்திதிக்ஷேத நாவமந்யேத கஸ்சந |**
**ந சேமம் தேஹமாஷ்ரித்ய வைரம் குர்வீத கேநசித் || 47**

பிறரை நிந்திக்கக் கூடாது. பிறர் தன்னை நிந்தித்தாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். இந்த உடலுக்காக வேண்டி யாருடனும் பகை பாராட்டக் கூடாது.

क्रुध्यन्तं न प्रतिक्रुध्येदाक्रुष्टः कुशलं वदेत्।
सप्तद्वाराऽवकीर्णां च न वाचमनृतां वदेत्॥

**க்ருத்யந்தம் ந ப்ரதிக்ருத்யேதாக்ருஷ்ட: குஷலம் வதேத் |**
**ஸப்த த்வாராவகீர்ணாம் ச நவாசமந்ருதாம் வதேத் || 48**

தன்னிடம் பிறர் கோபம் கொண்டாலும், தான் யாரையும் கோபிக்கலாகாது. தன்னையொருவன் நிந்தித்தாலும், தான் இனிய சொற்களையே பேச வேண்டும். பஞ்ச இந்திரியங்கள், மனம், புத்தி இவற்றுக்கு சம்பந்தப்பட்ட மாயையான உலக விஷயங்களைப் பேசக்கூடாது. சத்தியமான வேத வாக்கியங்களையே பேச வேண்டும்.

अध्यात्मरतिरासीनो निरपेक्षो निरामिषः।
आत्मनैव सहायेन सुखार्थी विचरेदिह॥

**அத்யாத்ம ரதிராஸீநோ நிரபேக்ஷா நிராமிஷ: |**
**ஆத்மநைவ ஸஹாயேந சுக்யார்த்தீ விசரேதிஹ || 49**

ஏதேனும் ஒரு ஆசனத்தில் (பத்மாசனம், சுகாசனம் போன்ற யோகாசனங்கள்) ஒன்றில் அமர்ந்தபடி பரமாத்ம தியானத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும். தண்டம், கமண்டலம் முதலியவற்றில்கூட கருத்து செலுத்தக் கூடாது. விஷய சுகங்களில் ஆசையை விட்டு, தன் உடலின் உதவியோடு மோட்சம் பெறும் வழியில் மட்டுமே ஈடுபட்டு சஞ்சரிக்க வேண்டும்.

न चोत्पातनिमित्ताभ्यां न नक्षत्राङ्गविद्यया।
नाऽनुशासनवादाभ्यां भिक्षां लिप्सेत कर्हिचित्॥

**நசோத்பாத்த நிமித்தாப்யாம் ந நக்ஷத்ராங்கவித்யயா |**
**நாநுஷாஸந வாதாப்யாம் பிக்ஷாம் லிப்ஸேத கர்ஹிசித் ||** 50

*பூகம்பம் முதலான கெடுதிகளைப் பற்றியும், சகுனங்களைப் பற்றி பலன்கள் கூறியும், ஜோதிஷம் கூறியும், கைரேகை பார்த்துச் சொல்லியும், இப்படி நடக்க வேண்டும், அப்படி நடக்க வேண்டும் என்று கூறியும் பிட்சையைப் பெற முயலக்கூடாது.*

न तापसैर् ब्राह्मणैर् वा वयोभिरपि वा श्वभिः।
आकीर्णं भिक्षुकैर् वाऽन्यैरगारमुपसंव्रजेत्॥

**ந தாபஸைர் ப்ராஹ்மணைர்வா வயோபிரபி வாஷ்வபி: |**
**ஆகீர்ணம் பிக்ஷுகைர்வாந்யைரகாரமுபஸம்வ்ரஜேத் ||** 51

*அதிக பிராம்மணர்கள் பிட்சைக்காக வந்திருக்கும் வீட்டிலும், பறவைகளும், நாய்களும் உணவு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் வீட்டிலும் பிட்சைக்காகப் போகக் கூடாது.*

क्लृप्त-केश-नख-श्मश्रुः पात्री दण्डी कुसुम्भवान्।
विचरेन् नियतो नित्यं सर्वभूतान्यपीडयन्॥

**க்ளுப்த கேஷ நக ஷ்மஷ்ரு: பாத்ரீதண்டீ குசும்பவாந் |**
**விசரேந் நியதோ நித்யம் ஸர்வ பூதாந்யபீட யந் ||** 52

*சிகை, நகங்கள், மீசை இவைகளை அகற்றி, கையில் பிட்சா பாத்திரம், தண்டம், கமண்டலம் வைத்துக் கொண்டு எந்த உயிருக்கும் பாதகம் ஏற்படுத்தாமல், ஒரே இடத்தில் இருக்காமல் எப்போதும் நியமங்களை விடாது சஞ்சரித்தபடி இருக்க வேண்டும்.*

अतैजसानि पात्राणि तस्य स्युर् निर्व्रणानि च।
तेषामद्भिः स्मृतं शौचं चमसानामिवाऽध्वरे॥

**அதைஜஸாநி பாத்ராணி தஸ்ய ஸ்யுர்நிர்ரவணாநி ச |**
**தேஷாமத்பி: ஸ்ம்ருதம் ஷௌசம் சமஸாநாமிவாத்வரே ||** 53

*தங்கம், வெள்ளி முதலான உலோகங்களாலான பாத்திரங்களை சந்யாசிகள் உபயோகப்படுத்தக் கூடாது. மண் பாத்திரங்களையும், மரப் பாத்திரங்களையும் உபயோகப்படுத்தலாம். ஓட்டை யில்லாதவையாக அவை இருக்க வேண்டும்; அவ்வளவே. அவற்றை யக்ஞ பாத்திரங்களைச் சுத்தம் செய்வது போன்று நீராலும், மண்ணாலும் சுத்தம் செய்ய வேண்டும்.*

अलाबु दारुपात्रं च मृन्मयं वैदलं तथा।
एतानि यतिपात्राणि मनुः स्वायम्भुवोऽब्रवीत्॥

**அலாபும் தாருபாத்ரம் ச ம்ருந்மயம் வைதளம் ததா |**
**ஏதாநி யதிபாத்ராணி மநுஸ்ஸ்வாயம்புவோ அப்ரவீத் ||** 54

சுரைக் குடுக்கை, மண் பாண்டம், மரத்தாலான பாண்டம், மூங்கில் படி இவை சந்யாசிக்குரிய பாத்திரங்கள் என்று மனு கூறியுள்ளார்.

एककालं चरेद् भैक्षं न प्रसज्जेत विस्तरे।
भैक्षप्रसक्तो हि यतिर् विषयेष्वपि सज्जति॥

**ஏக காலம் சரேத் பைக்ஷம் ந ப்ரஸஜ்ஜேத விஸ்தரே |**
**பைக்ஷே ப்ரஸக்தோ ஹி யதிர்விஷயேஷ்வபி ஸஜ்ஜதி ||** 55

சந்யாசி தினமும் ஒரு வேளை மட்டுமே பிட்சைக்குச் செல்ல வேண்டும். அதுவும் விஸ்தாரமாக சஞ்சாரம் செய்து கொண்டிருக்கக் கூடாது. மிகுந்தபடி பிட்சை ஏற்பதில் நாட்டமுடையவனுக்கு புலன் விஷயங்களில் மனம் ஈடுபட்டுவிடும்.

विधूमे सन्नमुसले व्यङ्गारे भुक्तवज्जने।
वृत्ते शरावसम्पाते भिक्षां नित्यं यतिश् चरेत्॥

**விதூமேஸந்நமுஸலே வ்யங்காரே புக்தவஜ்ஜநே |**
**வ்ருத்தே ஷராபஸம்பாதே பிக்ஷாம் நித்யம் யதிஷ்சரேத் ||** 56

சந்யாசி பிட்சை ஏற்கச் செல்லும் வீடு எப்படியிருக்க வேண்டுமெனில் - சமையல் முடிந்ததற்கு அடையாளமாக மேலே புகை வருவது நின்று போயிருக்க வேண்டும். உலக்கை சப்தம் கேட்கக் கூடாது. அடுப்பு நெருப்பை அணைத்திருக்க வேண்டும். அனைவரும் சாப்பிட்டு முடித்த பிறகு சந்யாசி அந்த வீட்டுக்கு பிட்சைக்குச் செல்ல வேண்டும்.

अलाभे न विषादी स्याल् लाभे चैव न हर्षयेत्।
प्राणयात्रिकमात्रः स्यान् मात्रासङ्गाद् विनिर्गतः॥

**அலாபே ந விஷாதீஸ்யால்லாபே சைவ ந ஹர்ஷயேத் |**
**ப்ராணயாத்ரிக மாத்ர ஸ்ஸ்யாந்மாத்ராஸங்காத் விநிர்கத: ||** 57

பிட்சை கிடைக்காத போது வருத்தப்படக் கூடாது. கிடைத்த போது சந்தோஷப்படக் கூடாது. உயிரைக் காத்துக் கொள்ளத் தேவையான அளவுக்கு மட்டுமே பிட்சை ஏற்க வேண்டும். எந்தப் பொருளின் மீதும் சிறிதளவும் பற்று வைக்கக் கூடாது.

अभिपूजितलाभांस् तु जुगुप्सेतैव सर्वशः।
अभिपूजितलाभैश् च यतिर् मुक्तोऽपि बध्यते॥

**அபிபூஜிதலாபாம்ஸ்து ஜுகுப்ஸேதைவ ஸர்வஷ: |**
**அபிபூஜிதலாபைஷ்ச யதிர்முக்தோ அபி பத்யதே || 58**

தன்னைப் போற்றி ஒருவன் பிட்சையளித்தால் ஏற்கக் கூடாது. அதை ஏற்றால், தனக்குப் பிட்சை அளித்தவனின் மீது பாசம் ஏற்படும். முக்தியின் வாயில்வரை சென்றவன்கூட ஜன்ம பந்தத்தில் சிக்கி விடுவான்.

अल्पाऽन्नाभ्यवहारेण रहःस्थानाऽऽसनेन च।
ह्रियमाणानि विषयैरिन्द्रियाणि निवर्तयेत्॥

**அல்பாந்நாப்யவஹாரேண ரஹஸ்தாவாசநேந ச |**
**ஹ்ரியமாணாநி விஷயைரிந்த்ரியாணி நிவர்தயேத் || 59**

சிறிதளவே உண்ண வேண்டும்; ஏகாந்தத்தில் இருக்க வேண்டும்; விஷயங்களில் ஈடுபடாமல் இந்திரியங்களைக் கண்காணிக்க வேண்டும்.

इन्द्रियाणां निरोधेन रागद्वेषक्षयेण च।
अहिंसया च भूतानाममृतत्वाय कल्पते॥

**இந்த்ரியாணாம் நிரோதேந ராகத்வேஷயக்ஷயேந ச |**
**அஹிம்சயா ச பூதாநாமம் ருதத்வாய கல்பதே || 60**

இந்திரியங்களை அடக்கி, எவரிடமும் பாசமோ பகையோ இல்லாமல், எந்த உயிரையும் ஹிம்சிக்காமல் இருக்கும் சந்யாசி மோட்சத்தை அடைவான்.

अवेक्षेत गतीर् नृणां कर्मदोषसमुद्भवाः।
निरये चैव पतनं यातनाश् च यमक्षये॥

**அவேக்ஷேத கதீர் ந்ருணாம் கர்ம தோஷஸமுத்பவா: |**
**நிரயே சைவ பதநம் யாதநாஷ்ச யமக்ஷயே || 61**

தகாததைச் செய்வதாலும், தக்கதைச் செய்யாமல் விடுவதாலும் மனிதர்களுக்குக் கிடைக்கும் நீச்ச ஜன்மங்களைப் பற்றியும், நரகங்களை அடைவது பற்றியும், நரகத்தில் அநுபவிக்கும் வேதனைகள் பற்றியும் சிந்திக்க வேண்டும்.

विप्रयोगं प्रियैश् चैव संयोगं च तथाऽप्रियैः।
जरया चाऽभिभवनं व्याधिभिश् चोपपीडनम्॥

**விப்ரயோகம் ஸ்ரியைஷ்சைவ ஸம்யோகம் ச ததா அப்ரியை: |**
**ஜரயா சாபிபவநம் வ்யாதிபிஷ்சோப பீடநம் || 62**

விருப்பமானவர்களுடன் ஏற்படும் பிரிவு, விருப்பமற்றவர் களுடன் ஏற்படும் உறவு, முதுமையால் வரும் துன்பம், வியாதியால் பீடிக்கப்படுதல் முதலானவற்றைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

देहादुत्क्रमणं चाऽस्मात् पुनर् गर्भे च सम्भवम्।
योनिकोटिसहस्रेषु सृतीश् चाऽस्याऽन्तरात्मनः॥

**தேஹாதுத் க்ரமணம் சாஸ்மாத் புநர்கர்பே ச ஸம்பவம் |**
**யோநிகோடி ஸஹஸ்ரே ச ஸ்ருதீஷ்சாஸ்யாந்தராத்மந: || 63**

இந்த தேகத்தை விட்டு நீங்குதல், மீண்டும் கர்ப்ப வாசம் செய்தல், எண்ணற்ற பற்பல பிறவிகளை எடுத்தல் முதலான துன்பங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

अधर्मप्रभवं चैव दुःखयोगं शरीरिणाम्।
धर्माऽर्थप्रभवं चैव सुखसंयोगमक्षयम्॥

**அதர்ம ப்ரபவம் சைவ துக்கயோகம் ஷரீரிணாம் |**
**தர்மார்த்த ப்ரபவம் சைவ சுகஸம்யோகமக்ஷயம் || 64**

சரீரம் பெற்ற ஜீவாத்மாக்களுக்கு அதர்மத்தால் கிட்டும் துக்கங் களையும், சுகத்தை அள்ளி வழங்கும் தர்மத்தின் பிரபாவத்தையும் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

सूक्ष्मतां चाऽन्ववेक्षेत योगेन परमात्मनः।
देहेषु च समुत्पत्तिमुत्तमेष्वधमेषु च॥

**சூக்ஷ்மாதாம் சாந்வவேக்ஷேத யோகேந பரமாத்மந: |**
**தேஹேஷு ச ஸமுத்பத்தி முத்தமேஷ்வதமேஷு ச || 65**

அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மாவின் சூட்சுமமான ரூபத்தையும், அதை அறிய முடியாமல் போய், பாபத்தால் நரகத்தையும், ஈனப் பிறவிகளையும் எடுப்பதைக் குறித்துச் சிந்திக்க வேண்டும்.

दूषितोऽपि चरेद् धर्मं यत्र तत्राऽऽश्रमे रतः।
समः सर्वेषु भूतेषु न लिङ्गं धर्मकारणम्॥

**தூஷிதோ அபி சரேத் தர்மம் யத்ர தத்ராஷ்ரமே ரத: |**
**ஸம: ஸர்வேஷு பூதேஷு நலிங்கம் தர்ம காரணம் || 66**

எந்த ஆஸ்ரமத்திலிருக்கிறானோ, அதற்குரிய ஆடை, அடை யாளங்களோடு இருப்பது மட்டும் போதாது. இந்த வேடங்கள் தர்மத்துக்குக் காரணங்களல்ல.

फलं कतकवृक्षस्य यद्यप्यम्बुप्रसादकम्।
न नामग्रहणादेव तस्य वारि प्रसीदति॥

**பலம் கதகவ்ருக்ஷஸ்ய யத்யப்யம்பு ப்ரஸாதகம் |**
**ந நாம க்ரஹணாதேவ தஸ்ய வாரி ப்ரஸீததி || 67**

*தேத்தாங்கொட்டை தண்ணீரைத் தெளிவிக்கும். தேத்தாங் கொட்டை என்று அதன் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் தண்ணீர் தெளிந்து விடுமா? அதை நீரில் போட்டால்தான் அழுக்கு நீங்கி தெளியும்.*

*அவ்வாறே அந்தந்த ஆஸ்ரமத்துக்குரிய அடையாளங்களை தரிப்பது மட்டும் போதாது.*

संरक्षणार्थं जन्तूनां रात्रावहनि वा सदा।
शरीरस्यात्यये चैव समीक्ष्य वसुधां चरेत्॥

**ஸம்ரக்ஷணார்த்தம் ஜந்தூநாம் ராத்ராவஹநி வா ஸதா |**
**ஷரீர ஸ்யாத்யயே சைவ சமீக்ஷ்ய வசுதாம் சரேத் || 68**

*எல்லாப் பிராணிகளின் உயிரையும் காப்பதற்காக, இரவிலும் பகலிலும், தனது உடலுக்குக் கஷ்டமாக இருந்தாலும், பூமியைப் பார்த்தபடியே நடக்க வேண்டும்.*

अह्ना रात्र्या च याञ् जन्तून् हिनस्त्यज्ञानतो यतिः।
तेषां स्नात्वा विशुद्ध्यर्थं प्राणायामान् षडाचरेत्॥

**அஹ்நா ராத்ர்யா ச யாந் ஜந்தூந் ஹிநஸ்த்ய ஞாநதோ யதி: |**
**தேஷாம் ஸ்நாத்வா விசுத்யர்த்தம் ப்ராணாயாமாந் ஷடாசரேத் || 69**

*இரவிலோ, பகலிலோ சந்யாசி அறியாமல் பிராணிகளுக்குத் தீங்கு செய்து விட்டால், அதற்குப் பரிகாரமாக ஆறு பிராணா யாமங்களைச் செய்ய வேண்டும்.*

प्राणायामा ब्राह्मणस्य त्रयोऽपि विधिवत् कृताः।
व्याहृतिप्रणवैर् युक्ता विज्ञेयं परमं तपः॥

**ப்ராணாயாமா ப்ராஹ்மணஸ்ய த்ரயோ அபி விதிவத் க்ருதா: |**
**வ்யாஹ்ருதி ப்ரணவைர்யுக்தா விக்ஞேயம் பரமம் தப: || 70**

*வியாஹ்ருதி பிரணவங்களோடு விதிமுறைப்படி மூன்று பிராணாயாமங்களாவது பிராம்மணன் செய்ய வேண்டும். அதுவே மேலான தவம் என்பதை அறிய வேண்டும்.*

दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः।
तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात्॥

**தஹ்யந்தேத் மாயமாநாநாம் தாதூநாம் ஹி யதா மலா: |**
**ததேந்த்ரியாணாம் தஹ்யந்தே தோஷா: ப்ராணஸ்ய நிக்ரஹாத் || 71**

நெருப்பிலிட்டு உலோகங்களை ஊதும்போது, அவற்றின் மாசுகள் அகன்று விடுவதைப் போன்று, பிராணாயாமங்களால் இந்திரியங்களால் ஏற்பட்ட தோஷங்கள் எரிந்து போகும்.

प्राणायामैर् दहेद् दोषान् धारणाभिश् च किल्विषम्।
प्रत्याहारेण संसर्गान् ध्यानेनाऽनीश्वरान् गुणान्॥

**ப்ராணாயாமைர் தஹேத் தோஷாந் தாரணாபிஷ்ச கில்பிஷம் |**
**ப்ரத்யாஹாரேண ஸம்ஸர்காந் த்யாநே நாநீஷ்வராந் குணாந் ||** 72

எனவே, சந்யாசி பிராணாயாமத்தால் தனக்கு ஏற்பட்ட தோஷங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். பரமாத்மாவை தியானம் செய்வதால் பாபங்கள் தொலையும். விஷய சுகங்களில் ஈடுபடாமல் இந்திரியங்களை அடக்குவதால் விஷயங்களுடனான சம்பந்தம் நீங்கும்.

उच्चावचेषु भूतेषु दुर्ज्ञेयामकृतात्मभिः।
ध्यानयोगेन सम्पश्येद् गतिमस्यान्तरात्मनः॥

**உச்சாவசேஷு பூதேஷு துக்ஞேந்யாமக்ருதாத்மபி: |**
**த்யானயோகேந ஸம்பஷ்யேத் கதிமஸ்யாந்தராத்மந: ||** 73

உயர்ந்த தேவர்கள் எப்படித் தோன்றுகிறார்கள், தாழ்ந்த மிருகப் பிறவிகள் எதனால் ஏற்படுகின்றன என்பதையெல்லாம் அஞ்ஞானிகளால் அறிய முடியாது. தியானத்தால் சந்யாசி இவற்றைப் பற்றி அறிய வேண்டும்.

सम्यग्दर्शनसम्पन्नः कर्मभिर् न निबध्यते।
दर्शनेन विहीनस् तु संसारं प्रतिपद्यते॥

**ஸம்யக் தர்ஷந சம்பந்ந: கர்மபிர்ந நிபத்யதே |**
**தர்ஷநேந விஹீநஸ்து ஸம்ஸாரம் பரதிபத்யதே ||** 74

ஞானி, புண்ணிய பாபங்களுக்கு ஆட்படமாட்டான். அஞ்ஞானி, புண்ணிய பாபங்களுக்கு ஆட்பட்டு சம்சாரத்தில் வீழ்கிறான்.

अहिंसयेन्द्रियाऽसङ्गैर् वैदिकैश् चैव कर्मभिः।
तपसश् चरणैश् चोग्रैः साधयन्तीह तत् पदम्॥

**அஹிம்சயேந்த்ரி யாஸங்கைர் வைதிகைஷ்சைவ கர்மபி: |**
**தபஸஷ்சரணைஷ் சோக்தைஸ் ஸாதயந்தீஹ தத்பதம் ||** 75

அஹிம்சையோடு இருப்பதாலும், இந்திரியங்களை விஷய சுகங்களில் ஈடுபடாமல் காப்பதாலும், வேதம் கூறிய நித்ய

கர்மாக்களைக் கடைப்பிடிப்பதாலும், உக்ரமான தவம் புரிவதாலும் இவ்வுலகத்தார் மோட்சத்தை அடைவர்.

अस्थिस्थूणं स्नायुयुतं मांसशोणितलेपनम्।
चर्मावनद्धं दुर्गन्धि पूर्णं मूत्रपुरीषयोः॥

**அஸ்திஸ்தூணம் ஸ்யாயுயுதம் மாம்ஸஷோணிதலேபநம் |**
**சர்மாவநத்தம் துர்கந்தி பூர்ணம் மூத்ரபுரீஷயோ: || 76**

எலும்புகளைத் தூண்களாகக் கொண்டதும், நரம்புகளால் இணைக்கப்பட்டதும், மாமிச, ரத்தங்களால் பூசப்பட்டதும், தோலால் கட்டப்பட்டதும், மலஜலங்களால் துர்கந்தம் கொண்டதும் -

जराशोकसमाविष्टं रोगाऽऽयतनमातुरम्।
रजस्वलमनित्यं च भूताऽऽवासमिमं त्यजेत्॥

**ஜராஷோக ஸமாவிஷ்டம் ரோகாயதநமாதுரம் |**
**ரஜஸ்வலமநித்யம் ச பூதாவாசமிமம் த்யஜேத் || 77**

கிழட்டுத்தனம், துக்கம் இவைகளால் சூழ்ந்ததும், நோய்களால் பீடிக்கப்பட்டதும், பசி தாகங்களாலும், வெயில், மழை, பனி முதலான சீதோஷ்ணங்களால் பீடிக்கப்பட்டதும், அழுக்கால் நிறைந்ததும், அழியும் தன்மையுடையதும், பஞ்ச பூதங்களின் இருப்பிடமாகவும் உள்ள உடலை விடவேண்டும்.

नदीकूलं यथा वृक्षो वृक्षं वा शकुनिर् यथा।
तथा त्यजन्निमं देहं कृच्छ्राद् ग्राहाद् विमुच्यते॥

**நதிகூலம் யதா வ்ருக்ஷோ வ்ருக்ஷம் வா ஷகுநிர்யதா |**
**ததா த்யஜந்நிமம் தேஹம் க்ருச்ராத் க்ராஹாத் விமுச்யதே || 78**

ஆற்றங்கரையிலுள்ள மரம் எவ்வாறு விழுகிறதோ அவ்வாறு கர்மவசப்பட்ட மனிதன் மரணமடைகிறான். மரத்திலிருக்கும் பறவை சுதந்திரமாக எவ்வாறு நினைத்தபோது மரத்தை விட்டுப் பறந்து போகிறதோ அவ்வாறு ஞானி தன் இச்சைப்படி தேகத்தையும், சம்சார பந்தத்தையும் விடுகிறான்.

प्रियेषु स्वेषु सुकृतमप्रियेषु च दुष्कृतम्।
विसृज्य ध्यानयोगेन ब्रह्माऽभ्येति सनातनम्॥

**ப்ரியேஷு ஸ்வேஷு சுக்ருதமப்ரியேஷு ச துஷ்க்ருதம் |**
**விஸ்ருஜ்ய த்யாந யோகேந ப்ரஹ்மாப்யேதி ஸநாதநம் || 79**

பிரம்ம ஞானியிடம் பிரியமாக இருப்பவர்கள் அவன் செய்த புண்ணியத்தை அடைகிறார்கள். வெறுப்போடிருப்பவர்கள் அவனது

பாபத்தை அடைகிறார்கள். இவ்வாறு புண்ணிய பாபங்களற்று, தியானத்திலிருந்து பிரம்ம லோகத்தை ஞானி அடைகிறான்.

यदा भावेन भवति सर्वभावेषु निःस्पृहः।
तदा सुखमवाऽऽप्नोति प्रेत्य चेह च शाश्वतम्॥

**யதா பாவேந பவதி ஸர்வபாவேஷு நிஸ்ஸ்ப்ருஹ: |**
**ததா சுகமவாப்நோதி ப்ரேத்ய சேஹ ச ஷாஷ்வதம் || 80**

சகல வஸ்துக்களின் மீதும் சிறிதும் பற்றற்றவனாக ஒருவன் எப்போது ஆகிறானோ அப்போது இவ்வுலகில் சுகமாக வாழ்ந்து, இறந்த பிறகு மோட்சத்தை அடைகிறான்.

अनेन विधिना सर्वास् त्यक्त्वा सङ्गान् छनैःशनैः।
सर्वद्वन्द्वविनिर्मुक्तो ब्रह्मण्येवाऽवतिष्ठते॥

**அநேந விதிநா ஸர்வாம்ஸ்த்யக்த்வா ஸங்காந் ஷனை: ஷனை: |**
**ஸர்வத்வந்த்வ விநிர்முக்தோ ப்ரஹ்மண்யேவாவ திஷ்டதே || 81**

அனைத்து பந்தங்களையும் விட்டு, மானத்தையும் அவமானத் தையும் விட்டு, ஞானமார்க்கத்தாலும் கர்ம மார்க்கத்தாலும் பிரம்ம லோகத்தை அடைகிறான்.

ध्यानिकं सर्वमेवैतद् यदेतदभिशब्दितम्।
न ह्यनध्यात्मवित् कश्चित् क्रियाफलमुपाऽश्नुते॥

**த்யாநிகம் ஸர்வமேவைதத் யதேததபிஷப்திதம் |**
**நஹ்யநத்யாத்ம வித் க்வசித் க்ரியா பலமுபாஷ்நுதே || 82**

பரமாத்ம தியானத்தில் ஈடுபடுபவனுக்கே இந்நிலை கிட்டும். அனைத்து பந்தங்களையும் விட்டவனாக இருந்தாலும், மானாவமானங்களை விட்டவனாக இருந்தாலும், பரமாத்ம தியானத்தில் ஈடுபடவில்லை என்றால் மோட்சத்தை அடைய முடியாது.

अधियज्ञं ब्रह्म जपेदाधिदैविकमेव च।
आध्यात्मिकं च सततं वेदान्ताऽभिहितं च यत्॥

**அதியக்ஞும் ப்ரஹ்ம ஜபேதாதிதை விகமேவ ச |**
**ஆத்யாத்மிகம் ச ஸததம் வேதாந்தாபிஹிதம் ஜயத் || 83**

யக்ஞங்களைப் பற்றியும், தெய்வங்களைப் பற்றியும், ஜீவாத்மாவைப் பற்றியும் வேதாந்தங்களில் சொல்லப்பட்டிருப்பதை சதா நினைவு கூர்ந்தபடி இருக்க வேண்டும்.

इदं शरणमज्ञानामिदमेव विजानताम्।
इदमन्विच्छतां स्वर्गमिदमानन्त्यमिच्छताम्॥

**இதம் ஷரண மக்ஞாநா மிதமேவ விஜாநதாம் |**
**இதமந்விச்சதாம் ஸ்வர்க மிதமாநந்த்ய மிச்சதாம் || 84**

*வேதாந்தங்களில் சொல்லப்பட்டிருப்பவையே, அறியாதவனுக்கு ரட்சகமாகும். அறிந்தவனுக்கும் இதுவே ரட்சகமாகும். ஸ்வர்க்கத்தை வேண்டுபவருக்கு இது ஸ்வர்க்கத்தைத் தரும். மோட்சத்தை வேண்டுபவர்களுக்கு இதுவே மோட்சத்தைத் தரும். எந்நிலையில் இருப்பவருக்கும் இது வழிகாட்டுகிறது என்பது இதன் பொருள்.*

अनेन क्रमयोगेन परिव्रजति यो द्विजः।
स विधूयेह पाप्मानं परं ब्रह्माऽधिगच्छति॥

**அநேந க்ரமயோகேந பரிவ்ரஜதி யோ த்விஜ: |**
**ஸ விதூயேஹ பாப்மாநம் பரம் ப்ரஹ்மாதி கச்சதி || 85**

*இவ்வகையில் சந்யாச ஆஸ்ரமத்தைக் கடத்துபவன் இவ்வுலகில் பாபங்களனைத்தும் நீங்கியவனாக பரமாத்மாவை அடைகிறான்.*

एष धर्मोऽनुशिष्टो वो यतीनां नियतात्मनाम्।
वेदसन्यासिकानां तु कर्मयोगं निबोधत॥

**ஏஷ தர்மோ அநுஷிஷ்டோவோ யதீநாம் நியதாத்மநாம் |**
**வேதஸந்யாஸிகாநாம்து கர்மயோகம் நிபோதத || 86**

*சந்யாசிகள் கடைப்பிடிக்க வேண்டிய நியமங்களைப் பற்றிக் கூறினேன். இல்லத்திலேயே இருக்கும் துறவறத்தைப் பற்றிக் கூறுகிறேன்; கேளுங்கள்.*

ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थो यतिस् तथा।
एते गृहस्थप्रभवाश् चत्वारः पृथगाश्रमाः॥

**ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்தஷ்ச வாநப்ரஸ்தோ யதிஸ்ததா |**
**ஏதே க்ருஹஸ்த ப்ரபவாஷ்சத்வார: ப்ருதகாஷ்ரமா: || 87**

*பிரம்மச்சாரி, கிருஹஸ்தன், வானப் பிரஸ்தன், சந்யாசி என்னும் நான்கும் வேறு வேறு ஆஸ்ரமங்களான போதும், இவை நான்குமே கிருஹஸ்தாஸ்ரமத்தாலேயே ஏற்படுகின்றன.*

सर्वेऽपि क्रमशस् त्वेते यथाशास्त्रं निषेविताः।
यथोक्तकारिणं विप्रं नयन्ति परमां गतिम्॥

**ஸர்வே அபிக்ரமஷஸ்த்வேதே யதா ஷாஸ்த்ர நிஷேவிதா: |**
**யதோக்த காரிணம் விப்ரம் நயந்தி பரமாம் கதிம் || 88**

இந்த நான்கு ஆஸ்ரமங்களிலுமே சாஸ்திர முறைப்படி கடைப்பிடித்து வாழ்ந்தால், அதாவது, ஒரு ஆஸ்ரமத்திலேயே வாழ்ந்தாலும் சரி, அடுத்தடுத்த ஆஸ்ரமங்களை அடைந்து வாழ்ந்தாலும் சரி, உயர்ந்த உலகங்களை அடையலாம்.

**सर्वेषामपि चैतेषां वेदस्मृतिविधानतः।**
**गृहस्थ उच्यते श्रेष्ठः स त्रीनेतान् बिभर्ति हि॥**

**ஸர்வேஷாமபி சைதேஷாம் வேதஸ்ம்ருதி விதாநத: |**
**க்ருஹஸ்த உச்யதே ஷ்ரேஷ்ட: ஸ த்ரிநேதாந் பிபர்திஹி ||** 89

இந்த நான்கு ஆஸ்ரமங்களிலும் சாஸ்திரங்களில் சொன்னபடி நியமங்களோடு வாழும் கிருஹஸ்தனே உயர்ந்தவன்.

கிருஹஸ்தன் மற்ற மூன்று ஆஸ்ரமவாசிகளையும் போஷிப்பதால் அவனே உயர்ந்தவன்.

**यथा नदीनदाः सर्वे सागरे यान्ति संस्थितिम्।**
**तथैवाऽऽश्रमिणः सर्वे गृहस्थे यान्ति संस्थितिम्॥**

**யதா நதீநதாஸ்ஸர்வே ஸாகரே யாந்தி ஸம்ஸ்திதம் |**
**ததைவாஷ்ரமிணஸ் ஸர்வே க்ருஹஸ்தே யாந்தி ஸம்ஸ்திதம் ||** 90

எல்லா நதிகளும் நதஸ்களும் சமுத்திரத்தை அடைவதைப் போன்று மற்ற மூன்று ஆஸ்ரமவாசிகளும் கிருஹஸ்தனிடமே வருவார்கள்.

**चतुर्भिरपि चैवैतैर् नित्यमाश्रमिभिर् द्विजैः।**
**दशलक्षणको धर्मः सेवितव्यः प्रयत्नतः॥**

**சதுர்பிரபி சைவைதைர் நித்யமாஷ்ரமிபிர்த்விஜை: |**
**தஷலக்ஷணகோ தர்ம: ஸேவிதவ்ய: ப்ரயத்நத: ||** 91

இந்த நான்கு ஆஸ்ரமத்தாரும் முயற்சியோடு கடைப்பிடிக்க வேண்டிய பத்து வகை தர்மங்களைக் கூறுகிறேன்; கேளுங்கள்:

**धृतिः क्षमा दमोऽस्तेयं शौचमिन्द्रियनिग्रहः।**
**धीर् विद्या सत्यमक्रोधो दशकं धर्मलक्षणम्॥**

**த்ருதி: க்ஷமா தமோ அஸ்தேயம் ஷௌசமிந்த்ரிய நிக்ரஹ: |**
**தீர்வித்யா ஸத்யமக்ரோதோ தஷகம் தர்மலக்ஷணம் ||** 92

திருதி, க்ஷமை, தமம், அஸ்தேயம், ஷௌசம், இந்திரிய நிக்ரஹம், தீரம், வித்யா, சத்யம், அக்ரோதம் என்னும் பத்து குணங்களும் தர்ம லட்சணங்கள் ஆகும்.

இந்த பத்து குணங்களும் நிறைந்தவன் தர்மாத்மா. முதலில், 'திருதி' என்ற குணம் வேண்டும். அதாவது தைரியம், உறுதி, ஊக்கம், தன்னடக்கம், பிறர்க்குதவும் தன்மை இவை வேண்டும்.

இரண்டாவது, க்ஷமை என்னும் குணம் அதாவது பொறுமை.

மூன்றாவது, தமம். அமைதியாக இருத்தல், அடக்கமாக இருத்தல்.

நான்காவது, அஸ்தேயம். அதாவது திருடாமை.

ஐந்தாவது, ஷௌசம். உள்ளும் புறமும் தூய்மையோடிருத்தல்.

ஆறாவது, இந்திரிய நிக்ரஹம். ஐம்புலன்களையும் அடக்கி வாழ்தல்.

ஏழாவது, தீரம். தைரியத்தோடும் எச்சரிக்கையோடும் சஞ்சலமடையாத திடமான மனத்தோடும், நல்வழியில் அறிவைச் செலுத்தி, வெளியிலிருந்து வரும் எதிர்ப்புகளை அடக்குதல்.

எட்டாவது, வித்யா. கல்வியறிவையும், உலகியல் அறிவையும், ஆத்ம ஞானத்தையும் அடைதல்.

ஒன்பதாவது, சத்தியம். உண்மை. பிறர்க்கு இன்னல் ஏற்படாத வகையில் உண்மை பேசுவதில் உறுதியோடிருத்தல்.

பத்தாவது, அக்ரோதம். குரோதமற்ற தன்மை. கோபமில்லாமை.

दश लक्षणानि धर्मस्य ये विप्राः समधीयते।
अधीत्य चाऽनुवर्तन्ते ते यान्ति परमां गतिम्॥

**தஷ லக்ஷணாநி தர்மஸ்யயே விப்ராஸ்ஸமதீயுதே |**
**அதீத்ய சாநுவர்தந்தே யாந்தி பரமாம் கதிம் ||** **93**

எவர் இந்த பத்து வித தர்மங்களையும் அறிந்தவர்களோ, எவர் இந்த பத்து வித தர்மங்களையும் கடைப்பிடிக்கிறார்களோ அவர்கள் உயர்ந்த கதியை அடைகிறார்கள்.

दशलक्षणकं धर्ममनुतिष्ठन् समाहितः।
वेदान्तं विधिवच् छ्रुत्वा सन्न्यसेदनृणो द्विजः॥

**தஷலக்ஷணம் தர்மமநுதிஷ்டந் ஸமாஹித: |**
**வேதாந்தம் விதிவத் ஸ்ருத்வா ஸந்யஸேதந்ருணோ த்விஜ: ||** **94**

இருபிறப்பாளன் இந்த பத்து தர்ம லட்சணங்களையும் அறிந்து, சற்றும் இப்படி அப்படி விலகாமல் கடைப்பிடித்து, வேதங்களின், உபநிஷத்துகளின் பொருளை கிருஹஸ்தனாக இருக்கும்போதே குருவிடமிருந்து நன்கு கற்றறிந்து, தேவ, பித்ரு, ரிஷி கடன்களையெல்லாம் முடித்து, பிறகு சந்யாசம் ஏற்க வேண்டும்.

सन्यस्य सर्वकर्माणि कर्मदोषानपाऽनुदन्।
नियतो वेदमभ्यस्य पुत्रैश्वर्ये सुखं वसेत्॥

**ஸந்யஸ்ய ஸர்வகர்மாணி கர்மதோஷாநபாநுதந் |**
**நியதோ வேதமப்யஸ்ய புத்ரைஷ்வர்யே சுகம் வசேத் ||** 95

கிருஹஸ்தன், தான் அனுஷ்டிக்க வேண்டிய அக்னி ஹோத்ரம் முதலான சகல கர்மாக்களையும் விட்டு, தெரியாமல் செய்த பாபங்கள் நீங்க பிராணாயாமங்களைச் செய்து, இந்திரியங்களை வென்று, வேத உபநிஷத்துகளின் பொருளை அறிந்து, மகனுடைய வீட்டிலேயே இருந்தபடி, அவன் தரும் உணவையும் உடையையும் ஏற்று, ஜீவனத்தைப் பற்றிய கவலையை விட்டு சுகமாகக் காலம் கடத்த வேண்டும். இப்படி இருப்பவன் இல்லற சந்யாசி எனப் படுவான்.

एवं सन्यस्य कर्माणि स्वकार्यपरमोऽस्पृहः।
सन्यासेनाऽपहत्यैनः प्राप्नोति परमां गतिम्॥

**ஏவம் ஸந்யஸ்ய கர்மாணி ஸ்வகார்ய பரமோ அஸ்ப்ருஹ: |**
**ஸந்யாஸே நாபஹத்யைந: ப்ராப்நோதி பரமாம்கதிம் ||** 96

இவ்வாறு சகல காரியங்களையும் விட்டு, எதிலும் பற்றற்று, சகல பாபங்களையும் போக்கடித்து, சந்யாசமேற்று பரமாத்ம தியானத்தில் ஈடுபடுபவன் மேலான கதியை அடைவான்.

एष वोऽभिहितो धर्मो ब्राह्मणस्य चतुर्विधः।
पुण्योऽक्षयफलः प्रेत्य राज्ञां धर्मं निबोधत॥

**ஏஷவோ அபிஹிதோ தர்மோ ப்ராஹ்மணஸ்ய சதுர்வித: |**
**புண்யோ அக்ஷயபல: ப்ரேத்ய ராக்ஞாம் தர்மம் நிபோதத ||** 97

முனிவர்களே! பிராம்மணர்களுக்குரிய நான்கு ஆஸ்ரமங்களைப் பற்றியும், அவற்றின் தர்மங்களைப் பற்றியும் கூறினேன். இனி புண்ணியமான மிகுந்த பலனைத் தரக்கூடிய ராஜ தர்மங்களைக் கூறுகிறேன்; கேளுங்கள்.

(ஆறாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 7

राजधर्मान् प्रवक्ष्यामि यथावृत्तो भवेन् नृपः।
सम्भवश्च यथा तस्य सिद्धिश्च परमा यथा॥

**ராஜதர்மாந் ப்ரவக்ஷ்யாமி யதாவ்ருத்தோ பவேந் ந்ருப: |**
**ஸம்பவஷ்ச யதா தஸ்ய ஸித்திஷ்ச பரமா யதா ||** 1

*மன்னன் அனுசரிக்க வேண்டிய தர்மங்களைப் பற்றியும், அதனால் அவன் இகத்திலும் பரத்திலும் அடையக்கூடிய மேலான பலன்களைப் பற்றியும் கூறுகிறேன்.*

ब्राह्मं प्राप्तेन संस्कारं क्षत्रियेण यथाविधि।
सर्वस्यास्य यथान्यायं कर्तव्यं परिरक्षणम्॥

**ப்ராஹ்மம் ப்ராப்தேந ஸம்ஸ்காரம் க்ஷத்ரியேண யதாவிதி |**
**ஸர்வஸ்யாஸ்ய யதாந்யாயம் கர்தவ்யம் பரிரக்ஷணம் ||** 2

*சாஸ்திர முறைப்படி சம்ஸ்காரங்கள் (உபநயனம் முதலானவை) செய்யப்பட்ட க்ஷத்ரியன் நியாயப்படி தன் நாட்டிலுள்ள மக்களைக் காக்க வேண்டும்.*

अराजके हि लोकेऽस्मिन् सर्वतो विद्रुते भयात्।
रक्षार्थमस्य सर्वस्य राजानमसृजत् प्रभुः॥

**அராஜகேஹி லோகே அஸ்மிந்ஸர்வதோ வித்ருதே பயாத் |**
**ரக்ஷார்த்தமஸ்ய ஸர்வஸ்ய ராஜாநமச்ருஜத் ப்ரபு: ||** 3

*அரசன் இல்லாவிடில் எளியோரை வலியோர் வீழ்த்தி விடுவர். அவ்வாறு ஏற்படாமல் அனைவரையும் காப்பதற்காகவே அரசனை பிரம்மா படைத்தார்.*

इन्द्रा-ऽनिल-यमा-ऽर्काणामग्नेश् च वरुणस्य च।
चन्द्रवित्तेशयोश् चैव मात्रा निर्हृत्य शाश्वतीः॥

**இந்த்ராநில யமார்காணா மக்நேஷ்ச வருணஸ்ய ச |**
**சந்த்ர வித்தேஷயோஷ்சைவ மாத்ரா நிர்ஹ்ருத்ய ஷாஷ்வதீ: ||** 4

*இந்திரன், வாயு, யமன், சூரியன், அக்னி, வருணன், சந்திரன், குபேரன் முதலானவர்களுடைய அம்சத்தைக் கிரகித்து அரசனைப் படைத்தார்.*

यस्मादेषां सुरेन्द्राणां मात्राभ्यो निर्मितो नृपः ।
तस्मादभिभवत्येष सर्वभूतानि तेजसा ॥

**யஸ்மாதேஷாம் சுரேந்த்ராணாம் மாத்ராப்யோ நிர்மிதோ ந்ருப: |**
**தஸ்மாதபி பவத்யேஷ ஸர்வ பூதாநி தேஜஸா ||** 5

*தேவ சிரேஷ்டர்களுடைய அம்சத்தால் பிறந்தவனாதலால் அரசன் எல்லோரையும்விட உயர்ந்தவனாக, தேஜஸ் மிக்கவனாக விளங்குகிறான்.*

तपत्यादित्यवच् चैष चक्षूंषि च मनांसि च ।
न चैनं भुवि शक्नोति कश्चिदप्यभिवीक्षितुम् ॥

**தபத்யாதித்ய வச்சைஷ சக்ஷூம்ஷி ச மநாம்ஸி ச |**
**நசைநம் புவி ஷக்நோதி கஷ்சித்தப்யபிவீக்ஷிதும் ||** 6

*இவன், சூரியனைப் போன்று தன்னைப் பார்ப்பவருடைய கண்ணையும் மனத்தையும் தகிக்கிறான். அதனால் எவரும் இவனை ஏறிட்டுப் பார்க்க இயலாது.*

सोऽग्निर् भवति वायुश्च सोऽर्कः सोमः स धर्मराट् ।
स कुबेरः स वरुणः स महेन्द्रः प्रभावतः ॥

**ஸோ அக்நிர்பவதி வாயுஷ்ச ஸோ அர்கஸ்ஸோமஸ்ஸதர்மராட் |**
**ஸ குபேரஸ்ய வருணஸ்ய மஹேந்த்ர: ப்ரபாவத: ||** 7

*அவனே அக்னி; அவனே வாயு; அவனே சூரியன்; அவனே சந்திரன்; அவனே குபேரன்; அவனே வருணன்; அவனே தன் பிரபாவத்தால் தேவேந்திரனுமாவான்.*

बालोऽपि नाऽवमन्तव्यो मनुष्य इति भूमिपः ।
महती देवता ह्येषा नररूपेण तिष्ठति ॥

**பாலோ அபி நாவமந்தவ்யோ மனுஷ்ய இதி பூமிப: |**
**மஹதீ தேவதா ஹ்யேஷா நரரூபேண திஷ்டதி ||** 8

*எனவே, அரசன் சிறுவனாக இருந்தாலும்கூட, அவனும் மனிதன்தானே என்று எண்ணி அவமானப்படுத்தக் கூடாது. உயர்ந்த தெய்வமே மனித உருவில் அவதரித்திருப்பதாக எண்ண வேண்டும்.*

एकमेव दहत्यग्निर् नरं दुरुपसर्पिणम् ।
कुलं दहति राजाऽग्निः सपशुद्रव्यसञ्चयम् ॥

**ஏகமேவ தஹத்யக்நிர்நரம் துருபஸர்பிநம் |**
**குலம் தஹதி ராஜாக்நி: ஸபஷூத்ரவ்ய சஞ்சயம் ||** 9

நெருப்பு, தன்னைத் தீண்டியவனை மட்டுமே எரிக்கும். அரசன் என்னும் நெருப்போ தன்னைத் தீண்டியவனை அவன் குலத்தோடு, பசு, திரவிய, தானியங்களோடு, புத்ர மித்திரர்களோடு, பந்துக்களோடு அழித்துவிடும்.

कार्यं सोऽवेक्ष्य शक्तिं च देशकालौ च तत्त्वतः।
कुरुते धर्मसिध्यर्थं विश्वरूपं पुनःपुनः॥

**கார்யம் ஸோ அவேக்ஷ்ய ஷக்திம் ச தேஷகாலௌ ச தத்வத: |**
**குருதே தா்ம ஸித்யா்த்தம் விஷ்வரூபம் புந:புந: || 10**

ராஜா தன் காரியத்தை அனுசரித்து, இடத்தையும் காலத்தையும் கணக்கிட்டு, தான் வெல்வதற்காக பல பலப்படியான தோற்றங்களை எடுப்பான். சக்தி குறைந்திருக்கும்போது எதிரியிடம் பொறுமையோடிருப்பான். தன் சக்தியைப் பெருக்கிக் கொண்டு எதிரிகளை அழிப்பான். இவ்வாறு தேசகாலங்களை அனுசரித்து, மித்ரனைப் போலவும் இருப்பான்; காலம் வந்ததும் சத்ருவாக மாறியும் அழிப்பான்.

यस्य प्रसादे पद्मा श्रीर् विजयश् च पराक्रमे।
मृत्युश् च वसति क्रोधे सर्वतेजोमयो हि सः॥

**யஸ்ய ப்ரஸாதே பத்மா ஷ்ரீா்விஜயஷ்ச பராக்ரமே |**
**ம்ருத்யுஷ்ச வஸதி க்ரோதே ஸா்வதேஜோமயோஹிஸ: || 11**

எவனுடைய அனுக்ரஹத்தில் செல்வம், வெற்றி, பராக்ரமத்தோடு திருமகளும் உள்ளாளோ, எவனுடைய கோபத்தில் மிருத்யு தேவன் வசிக்கிறானோ, அத்தகைய மன்னன் ஸர்வதேஜோமயனாக விளங்குகிறான்.

तं यस् तु द्वेष्टि सम्मोहात् स विनश्यत्यसंशयम्।
तस्य ह्याशु विनाशाय राजा प्रकुरुते मनः॥

**தம் யஸ்து த்வேஷ்டி ஸம்மோஹாத்ஸவி நஷ்யத்யஸம்ஷயம் |**
**தஸ்யஹ்யாஷு விநாஷாய ராஜா ப்ரகுருதே மந: || 12**

அத்தகைய அரசனை எவன் அஞ்ஞானத்தால் விரோதித்துக் கொள்கிறானோ, அவன் கண்டிப்பாக அழிவான். அரசன் தன் விரோதியை அழிப்பதிலேயே குறியாக இருப்பான்.

तस्माद् धर्मं यमिष्टेषु स व्यवस्येन् नराधिपः।
अनिष्टं चाप्यनिष्टेषु तं धर्मं न विचालयेत्॥

**தஸ்மாத் தா்மம் யமிஷ்டேஷு ஸம்வ்ய வஸ்யேந்நராதிப: |**
**அநிஷ்டம் சாப்யநிஷ்டே ஷு தம் தா்மம் ஸ விசாலயேத் || 13**

மன்னன் எது தர்மமோ, எது தர்ம விரோதமோ அதை விசாரித்து நிர்ணயிப்பான். தன்னுடைய விருப்பு வெறுப்புகளுக்கப்பாற்பட்டு சாஸ்திரம் விதித்ததைச் செய்வான்.

तस्यार्थे सर्वभूतानां गोप्तारं धर्ममात्मजम्।
ब्रह्मतेजोमयं दण्डमसृजत् पूर्वमीश्वरः ॥

**தஸ்யார்தே ஸர்வபூதாநாம் கோப்தாரம் தர்மமாத்மஜம் |**
**ப்ரஹ்மதேஜோமயம் தண்டமஸ்ருஜத் பூர்வமீஷ்வர: ||** 14

அரசன் உயிர்களைத் தர்மமாகக் காக்கும் பொருட்டுத் தன்னுடைய ஒளியின் உருவமாக தண்டத்தைப் படைத்தார்.

तस्य सर्वाणि भूतानि स्थावराणि चराणि च।
भयाद् भोगाय कल्पन्ते स्वधर्मान् न चलन्ति च॥

**தஸ்ய ஸர்வாணி பூதாநி ஸ்தாவராணி சராணி ச |**
**பயாத்போகாய கல்பந்தே ஸ்வதர்மாந் நசலந்தி ச ||** 15

அந்த தண்டத்துக்கு அஞ்சியே சகல உயிர்களும் தத்தமக்குரிய தர்மங்களை விடாது கடைப்பிடித்தபடி சுகமாக வாழ்கின்றன.

तं देशकालौ शक्तिं च विद्यां चावेक्ष्य तत्त्वतः।
यथार्हतः सम्प्रणयेन् नरेष्वन्यायवर्तिषु॥

**தம் தேஷகாலௌ ஷக்திம் ச வித்யாம் சாவேக்ஷ்ய தத்வத: |**
**யதார்ஹதஸ்ஸம்ப்ரண யேந்நரேஷ்வந்யாய வர்திஷு ||** 16

அந்த தண்டத்தின் சக்தியை அறிந்து, தேசத்துக்கும் காலத்துக்கும் தக்கபடி, எந்தக் குற்றத்துக்கு எந்தத் தண்டனை என்பதை சாஸ்திரப்படி நிர்ணயித்து, குற்றவாளிகளைத் தண்டிக்க வேண்டும்.

स राजा पुरुषो दण्डः स नेता शासिता च सः।
चतुर्णामाश्रमाणां च धर्मस्य प्रतिभूः स्मृतः॥

**ஸ ராஜா புருஷோ தண்டஸ்நேதா ஷாஸிதா சஸ: |**
**சதுர்ணா மாஷ்ர மாணாம் ச தர்மஸ்ய ப்ரதிபூ: ஸ்ம்ருத: ||** 17

அந்த தண்டத்திலேயே அரசனுடைய பலம் இருப்பதால் அதுவே அரசன். ஆணுக்குப் பெண்கள் கட்டுப்படுவதைப் போல, அனைவரும் அதற்குக் கட்டுப்படுவதால் அதுவே புருஷன். அந்த தண்டத்தாலேயே அனைத்துக் காரியங்களும் நிறைவேற்றப்படுவதால் அதுவே நாயகன். அந்த தண்டமே சாசனம் செய்வதால் அதுவே சாசனகர்த்தா. நான்கு ஆஸ்ரமவாசிகளுக்கும் காவலாக இருப்பதால் அதனை அரண் என்று முனிவர்கள் கூறுகிறார்கள்.

दण्डः शास्ति प्रजाः सर्वा दण्ड एवाऽभिरक्षति।
दण्डः सुप्तेषु जागर्ति दण्ड धर्मं विदुर् बुधाः॥

**தண்டஷ்ஷாஸ்தி ப்ரஜாஸ்ஸர்வா தண்ட ஏவாபிரக்ஷதி |**
**தண்டஸ்சுப்தேஷு ஜாகர்தி தண்டம் தர்மம் விதுர்புதா: || 18**

*தண்டமே பிரஜைகளனைவருக்கும் ஆணையிடுகிறது. தண்டமே பிரஜைகளைக் காப்பாற்றுகிறது. காவலர்கள் தூங்கினாலும் தான் தூங்காமல் காவல் காக்கிறது. தண்டமே தர்மத்துக்குக் காரணமாக இருப்பதால் அதை தர்மம் என்று பெரியோர் கூறினர்.*

समीक्ष्य स धृतः सम्यक् सर्वा रञ्जयति प्रजाः।
असमीक्ष्य प्रणीतस् तु विनाशयति सर्वतः॥

**ஸமீக்ஷ்ய ஸத்ருதஸ் ஸம்யக் ஸர்வா ரஞ்ஜயதி ப்ரஜா: |**
**அஸமீக்ஷ்ய ப்ரணீதஸ்து விநாஷயதி ஸர்வத: || 19**

*தண்டநீதி நன்கு செலுத்தப்பட்டால் பிரஜைகள் இன்புற்று வாழ்வார்கள். இல்லாவிடில் அனைவரும் நசிப்பர்.*

यदि न प्रणयेद् राजा दण्डं दण्ड्येष्वतन्द्रितः।
शूले मत्स्यानिवाऽपक्ष्यन् दुर्बलान् बलवत्तराः॥

**யதி ந ப்ரணயேத்ராஜா தண்டம் தண்ட்யேஷ்வதந்த்ரித: |**
**சூலே மத்ஸ்யாநி வாபக்ஷ்யந் துர்பலாந் பலவத்தரா: || 20**

*அரசன் தண்டிக்க வேண்டியவர்களைத் தக்கபடி தண்டிக்க வேண்டும். இல்லாவிடில் பலத்தோடிருப்பவர்கள் பலவீனர்களை சூலத்தில் குத்தப்படும் மீன்களைப் போன்று குத்துவார்கள். அதாவது எளியோர் துன்புறுவார்கள் என்று பொருள்.*

अद्यात् काकः पुरोडाशं श्वा च लिह्याद् धविस् तथा।
स्वाम्यं च न स्यात् कस्मिंश् चित् प्रवर्तेताऽधरोत्तरम्॥

**அத்யாத்காக: புரோடாஷம் ஷ்வா ச லிஹ்யாத் ஹவிஸ்ததா |**
**ஸ்வாம்யம் ச ந ஸ்யாத் கஸ்மிந்சித் ப்ரவர்தேதாதரோத்தரம் || 21**

*சரியாக தண்டநீதி செலுத்தப்பட வில்லையானால், யக்ஞத்தில் புரோடாசத்தை (ஹவிஸை) சாப்பிடக்கூடாத காகம் சாப்பிடும். அவ்வாறே நாய் சாப்பிடும். உரியவர்க்கு அவர்கள் உடைமைகள் சேராமல் பிறரால் பறிக்கப்படும்.*

सर्वो दण्डजितो लोको दुर्लभो हि शुचिर् नरः।
दण्डस्य हि भयात् सर्वं जगद् भोगाय कल्पते॥

**ஸர்வோ தண்டஜிதோ லோகோதுர்லபோ ஹி ஷுசிர்நர: |**
**தண்டஸ்ய ஹி பயாத் ஸர்வம் ஜகத்போகாய கல்பதே || 22**

இவ்வுலக முழுவதும் தண்டத்தினாலேயே நன்னெறியில் ஒழுகும். தண்டம் இல்லாமல் இயல்பாகவே தர்ம நெறி தவறாமல் ஒழுகும் மானிடர்கள் மிகவும் அரிது. தண்ட பயத்தாலேயே உலகத்தவர் நெறியோடு நடந்து நல்லபடி போகங்களை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள்.

**देव-दानव-गन्धर्वा रक्षांसि पतगोरगाः ।**
**तेऽपि भोगाय कल्पन्ते दण्डेनैव निपीडिताः ॥**

**தேவதாநவ கந்தர்வா ரக்ஷாம்ஸி பதகோரகா: |**
**தேஅபி போகாய கல்பந்தே தண்டேநைவ நிபீடிதா: ||** 23

தேவர்களும், அசுரர்களும், கந்தர்வர்களும், அரக்கர்களும், பறவைகளும், பாம்புகளும் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்கிறார்கள் என்றால் அதற்கு பரமாத்மாவின் தண்டத்தின் மீதுள்ள பயமே காரணம்.

**दुष्येयुः सर्ववर्णाश् च भिद्येरन् सर्वसेतवः ।**
**सर्वलोकप्रकोपश् च भवेद् दण्डस्य विभ्रमात् ॥**

**துஷ்யேயுஸ் ஸர்வவர்ணாஷ்ச பித்யேரந் ஸர்வஸேவத: |**
**ஸர்வலோக ப்ரகோபஷ்ச பவேத் தண்டஸ்ய விப்ரமாத் ||** 24

தண்டநீதி நன்கு செலுத்தப்படாவிட்டால் நான்கு வர்ணத்தாருள்ளும் மாறுபாடு ஏற்பட்டு விடும். தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்னும் நான்கும் நசிக்கும். திருட்டு வன்முறைகளால் மக்கள் கலவரத்தோடு வாழ நேரிடும்.

**यत्र श्यामो लोहिताऽक्षो दण्डश् चरति पापहा ।**
**प्रजास् तत्र न मुह्यन्ति नेता चेत् साधु पश्यति ॥**

**யத்ர ஷ்யாமோ லோஹிதாக்ஷோ தண்டஷ்சரதி பாபஹா |**
**ப்ரஜாஸ் தத்ர ந முஹ்யந்தி நேதா சேத்சதுபஷ்யதி ||** 25

தண்டநீதி நன்கு செலுத்தப்படும் நாட்டில், கறுத்த மேனியும் சிவந்த கண்களும் கொண்ட பாவத்தைப் போக்குகின்ற தண்ட நீதிக்குரிய தெய்வம் சஞ்சரித்த வண்ணம் இருக்கும். மக்கள் அங்கு கலவரமின்றி சந்தோஷமாக வாழ்வார்கள்.

**तस्याऽहुः सम्प्रणेतारं राजानं सत्यवादिनम् ।**
**समीक्ष्यकारिणं प्राज्ञं धर्मकामार्थकोविदम् ॥**

**தஸ்யாஹூஸ் ஸம்ப்ரணேதாரம் ராஜாநம் ஸத்யவாதிநம் |**
**ஸமீக்ஷ்ய காரிணம் ப்ராக்ஞம் தர்மகாமார்த கோவிதம் ||** 26

தண்டநீதி செலுத்துபவனாகிய அரசன், சத்தியவானாகவும், விசாரணை நடத்தி உண்மையைக் கண்டறிவதில் சாமர்த்தியமுடைய வனாகவும், தர்மார்த்த காமங்களைப் பற்றி நன்கு அறிந்தவனாகவும், தெளிந்த புத்தியுடையவனாகவும் இருக்க வேண்டும்.

तं राजा प्रणयन् सम्यक् त्रिवर्गेणाऽभिवर्धते।
कामाऽऽत्मा विषमः क्षुद्रो दण्डेनैव निहन्यते॥

**தம்ராஜா ப்ரணயந் ஸம்யக் த்ரிவர்கேணாபி வர்ததே |**
**காமாத்மா விஷம: க்ஷுத்ரோ தண்டேநைவ நிஹந்யதே || 27**

சரியாக தண்டநீதியைச் செலுத்தும் அரசன், தர்மார்த்த காமங்களை அடைவான். அவ்வாறன்றி விஷய சுகங்களில் ஆழ்ந்து, நீச நடத்தைகளில் ஈடுபடும் அரசன், அந்த தண்டத்தினால் தானே அழிவான்.

दण्डो हि सुमहत् तेजो दुर्धरश् चाऽकृताऽऽत्मभिः।
धर्माद् विचलितं हन्ति नृपमेव सबान्धवम्॥

**தண்டோ ஹி சுமஹத் தேஜோ துர்தரஷ்சாக்ருதாத்மபி: |**
**தர்மாத் விசலிதம் ஹந்தி ந்ருபமேவ ஸபாந்தவம் || 28**

தண்டம் என்பது மிகுந்த தேஜோமயமாய் பிரகாசிப்பது. தக்கவர்களைத் தவிர்த்து மற்றவர்களால் அதை ஏந்த முடியாது. தண்டமானது, ராஜ நீதியிலிருந்து தவறிய மன்னனை, அவன் பந்துக்களோடும் புத்திர மித்திரர்களோடும் அழித்து விடும்.

ततो दुर्गं च राष्ट्रं च लोकं च सचराचरम्।
अन्तरिक्षगतांश् चैव मुनीन् देवांश् च पीडयेत्॥

**ததோ துர்கம்ச ராஷ்ட்ரம் ச லோக்ச ஸசராசரம் |**
**அந்தரிக்ஷகதாம்ஷ்சைவ முநீந் தேவாம்ஷ்ச பீடயேத் || 29**

பிறகு கோட்டையையும், ராஜ்ஜியத்தையும், சராசரங்களையும், வானத்தில் சஞ்சரிக்கும் தேவதைகளையும், முனிவர்களையும்கூட தண்டம் என்னும் தெய்வம் அழித்து விடும்.

सोऽसहायेन मूढेन लुब्धेनाऽकृतबुद्धिना।
न शक्यो न्यायतो नेतुं सक्तेन विषयेषु च॥

**ஸோ அசஹாயேந மூடேந லுப்தேநாக்ருதபுத்திநா |**
**ஸ ஷக்யோ ந்யாயதோ நேதும் ஸக்தேந விஷயேஷுச || 30**

மந்திரிகள் முதலான துணைவர்கள் இல்லாதவன், லோபி, மூடன், படிப்பறிவற்றவன், விஷய சுகங்களில் இச்சை வைப்பவன் -

இத்தகைய அரசனால் தர்மநெறிப்படி தண்டத்தை உபயோகிக்க இயலாது.

शुचिना सत्यसन्धेन यथाशास्त्राऽनुसारिणा।
प्रणेतुं शक्यते दण्डः सुसहायेन धीमता॥

**ஷுசிநா சத்யசந்தேந யதா ஷாஸ்த்ராநு ஸாரிணா |**
**ப்ரணேதும் ஷக்யதே தண்டஸ்சுசஹாயேந தீமதா ||** 31

தூய்மையானவனும், சத்தியவந்தனும், சாஸ்திர முறையை அனுசரிப்பவனும், மந்திரிகள் முதலான துணைவர்களைக் கொண்டவனும், புத்திசாலியுமான அரசன், இந்த தண்டத்தைச் சரியாகச் செலுத்துவான்.

स्वराष्ट्रे न्यायवृत्तः स्याद् भृशदण्डश् च शत्रुषु।
सुहृत्स्वजिह्मः स्निग्धेषु ब्राह्मणेषु क्षमाऽन्वितः॥

**ஸ்வராஷ்ட்ரே ந்யாய வ்ருத்தஸ் ஸ்யாத் த்ருத தண்டஷ்ச ஷத்ருசு |**
**சுஹ்ருத்ஸ்வஜிஹ்ம: ஸ்நிக்தேஷு ப்ராஹ்மணேஷு க்ஷமாந்வித: ||** 32

தன் ராஜ்ஜியத்தில் நீதியை செலுத்துபவனாகவும், சத்ருக்களைத் தண்டிப்பவனாகவும், நண்பர்களிடம் வஞ்சனை இல்லாதவனாகவும், தவறிழைத்தவர்களே ஆனாலும் பிராம்மணர்களிடம் பொறுமையுடையவனாகவும் அரசன் இருக்க வேண்டும்.

एवंवृत्तस्य नृपतेः शिलोञ्छेनाऽपि जीवतः।
विस्तीर्यते यशो लोके तैलबिन्दुरिवाऽम्भसि॥

**ஏவம் வ்ருத்தஸ்ய ந்ருபதேஷ்ஷிலோம்சேநாபி ஜீவத: |**
**விஸ்தீர்யதே யஷோ லோகே தைலபிந்துரிவாம்பஸி ||** 33

அரசன் இப்படிப்பட்டவனாக இருந்தால், அவனிடம் செல்வம் குறைந்திருந்தாலும்கூட, தண்ணீரில் எண்ணெய்த் துளியைப் போல, அவனது புகழ் உலக முழுவதும் பரவும்.

अतस् तु विपरीतस्य नृपतेरजिताऽऽत्मनः।
सङ्क्षिप्यते यशो लोके घृतबिन्दुरिवाऽम्भसि॥

**அதஸ்து விபரீதஸ்ய ந்ருபதேரஜி தாத்மந: |**
**ஸம்க்ஷிப்யதே யஷோ லோகே க்ருதபிந்துரிவாம்பஸி ||** 34

இதற்கு மாறானவனாகவும், புலனடக்கமற்றவனாகவும் அரசன் இருந்தால், தண்ணீரில் நெய்த்துளி போல் நசித்துப் போவான்.

स्वेस्वे धर्मे निविष्टानां सर्वेषामनुपूर्वशः।
वर्णानामाश्रमाणां च राजा सृष्टोऽभिरक्षिता॥

**ஸ்வே ஸ்வே தர்மே நிவிஷ்டாநாம் ஸர்வேஷா மநுபூர்வஷ: |**
**வர்ணாநாமாஷ்ரமாணாம் ச ராஜாஸ்ருஷ்டோ அபிரக்ஷிதா ||** 35

*நான்கு வர்ணத்தாரும் தத்தமது தர்மங்களை பற்றுதலோடு கடைப்பிடித்து ஒழுகுவதற்காகவும், நான்கு ஆஸ்ரமத்தாரையும் நன்கு காப்பதற்காகவும் அரசன் படைக்கப்பட்டான்.*

तेन यद्यत् सभृत्येन कर्तव्यं रक्षता प्रजाः।
तत्तद् वोऽहं प्रवक्ष्यामि यथावदनुपूर्वशः॥

**தேந யத்யத்ஸப்ருத்யேந கர்தவ்யம் ரக்ஷதா ப்ரஜா: |**
**தத் தத்வோ அஹம் ப்ரவக்ஷ்யாமி யதாவ தநு பூர்வஷ: ||** 36

*இத்தகைய அரசன், தன் பரிவாரங்களோடு நடந்து கொள்ள வேண்டிய விதிமுறைகளைக் கூறுகிறேன்; கேளுங்கள்.*

ब्राह्मणान् पर्युपासीत प्रातरुत्थाय पार्थिवः।
त्रैविद्यवृद्धान् विदुषस् तिष्ठेत् तेषां च शासने॥

**ப்ராஹ்மணாந் பர்யுபாஸீத ப்ராதருத்தாய பார்திவ: |**
**த்ரைவித்யவ்ருத்தாந் விதுஷஸ்திஷ்டேத் ஏஷாம் ச சாஸநே ||** 37

*அரசன் அதிகாலையில் எழுந்து வேதங்களை முழுமையாகக் கற்ற வித்வான்களான பிராம்மணர்களை வணங்கி அவர்கள் வழி காட்டுதல்படி ஆணை செலுத்த வேண்டும்.*

वृद्धांश् च नित्यं सेवेत विप्रान् वेदविदः शुचीन्।
वृद्धसेवी हि सततं रक्षोभिरपि पूज्यते॥

**வ்ருத்தாந்ஷ் ச நித்யம் ஸேவேத விப்ராந் வேதவிதஷ்ஷுசீந் |**
**வ்ருத்தஸேவீ ஹி ஸததம் ரக்ஷோபிரபி பூஜ்யதே ||** 38

*வயதாலும் தவத்தாலும் பெரியோராகவும், வேதங்கள் முழுமையும் அறிந்தவர்களாகவும், உள்ளும்புறமும் தூய்மையுடன் இருப்பவர் களுமான பிராம்மணர்களை அரசன் வணங்க வேண்டும். அப்படி வணங்குபவனை அரக்கர்களும் போற்றிப் பூஜிப்பார்கள்.*

तेभ्योऽधिगच्छेद् विनयं विनीतात्मापि नित्यशः।
विनीतात्मा हि नृपतिर् न विनश्यति कर्हिचित्॥

**தேப்யோ அதிகச்சேத் விநயம் பிநீதாத்மாஅபி நித்யஷ: |**
**விநீதாத்மா ஹி ந்ருபதிர்ந விநஷ்யதி கர்ஹிசித் ||** 39

இயற்கையான அறிவாலும், அர்த்த சாஸ்திரம் முதலான நூல்களைப் படித்துப் பெற்ற அறிவாலும் நீதி (தீர்ப்பு) வழங்கத் தக்கவனாயினும் பெரியோரிடமும் கேட்டு தீர்ப்பு வழங்குபவன் என்றும் நசிக்க மாட்டான்.

बहवोऽविनयान् नष्टा राजानः सपरिच्छदाः ।
वनस्था अपि राज्यानि विनयात् प्रतिपेदिरे ॥

**பஹவோ அவிநயாந்நஷ்டா ராஜாநஸ்ஸபரிச்சதா: |**
**வநஸ்தா அபிராஜ்யாநி விநயாத் ப்ரதிபேதிரே ||** 40

பல அரசர்கள் படைபலத்தோடு, பொக்கிஷம் நிறைந்திருந்தும் கூட பெரியோர் வழிகாட்டுதல் இல்லாத காரணத்தால் அழிந்துள்ளனர். சில அரசர்கள் காடுகளில் வசிக்க நேர்ந்த போதும் பெரியோர் வழி காட்டுதலால் ராஜ்ஜியத்தை அடைந்துள்ளனர்.

वेनो विनष्टोऽविनयान् नहुषश् चैव पार्थिवः ।
सुदाः पैजवनश् चैव सुमुखो निमिरेव च ॥

**வேநோ விநஷ்டோ அவிநயாந்நஹுஷஷ்சைவ பார்திவ: |**
**சுதாஸோ யாவநஷ்சைவ சுமுகோ நிமிரேவச ||** 41

வேனன், நகுஷன், யவனபுத்திரன், சுதாசுதன், சுமுகன், நிமி முதலானோர் பெரியோர் சொல் கேளாமல் அழிந்தனர்.

पृथुस् तु विनयाद् राज्यं प्राप्तवान् मनुरेव च ।
कुबेरश् च धनैश्वर्यं ब्राह्मण्यं चैव गाधिजः ॥

**ப்ருதஸ்து விநயாத்ராஜ்யம் ப்ராப்தவாந் மநுரேவ ச |**
**குபேரஷ்ச தநைஷ்வர்யம் ப்ராஹ்மண்யம் சைவ காதிஜ: ||** 42

பிருது, மநு முதலானோர் பெரியோர் வழிகாட்டுதலோடு அரசாண்டனர். குபேரன் தனத்துக்கு அதிபதியானான். விஸ்வாமித்திரன் பிராம்மணத் தன்மையைப் பெற்றான்.

त्रैविद्येभ्यस् त्रयीं विद्यां दण्डनीतिं च शाश्वतीम् ।
आन्वीक्षिकीं चात्मविद्यां वार्तारम्भांश् च लोकतः ॥

**த்ரைவித்யேப்ய: த்ரயீம் வித்யாம் தண்டநீதிம் ச சாஸ்வதீம் |**
**அந்வீக்ஷிகீம் ச ஆத்மவித்யாம் வார்தாரம்பாம்ஷ்ச லோகத: ||** 43

மூன்று வேதங்களையும் நன்கு அறிந்தவர்களிடம், அரசன் வேதங்களைக் கற்க வேண்டும். தண்டநீதியை அந்த சாஸ்திர வல்லோரிடமும், அர்த்த சாஸ்திரத்தை அந்த சாஸ்திர வல்லோரிடமும் கற்க வேண்டும். பிரம்ம வித்தையை அதற்குரியவரிடம்

கற்க வேண்டும். பற்பல பாஷைகளையும் அந்தந்த பாஷைகளின் வல்லுநர்களிடம் கற்க வேண்டும். அனைத்துப் பயிற்சிகளையும் பெற வேண்டும்.

इन्द्रियाणां जये योगं समातिष्ठेद् दिवानिशम्।
जितेन्द्रियो हि शक्नोति वशे स्थापयितुं प्रजाः॥

**இந்த்ரியாணாம் ஜயே யோகம் ஸமாதிஷ்டேத்திவாநிஷம் |**
**ஜிதேந்த்ரியோ ஹி ஷக்நோதி வஷே ஸ்தாபயிதும் ப்ரஜா: ||** **44**

இரவும் பகலும் இந்திரியங்களைத் தன் வசத்தில் வைக்க முயல வேண்டும். இந்திரியங்களை வென்று தன் வசப்படுத்திய மன்னனே மக்களைத் தன் வசத்தில் வைத்துக் கொள்ள முடியும்.

दश कामसमुत्थानि तथाऽष्टौ क्रोधजानि च।
व्यसनानि दुरन्तानि प्रयत्नेन विवर्जयेत्॥

**தஷகாமசமுத்தாநி ததா அஷ்டௌ க்ராதஜாநிச |**
**வ்யசநாநி துரந்தாநி ப்ரயத்நேந விஸர்ஜயேத் ||** **45**

காமத்தால் தோன்றும் பத்தும், கோபத்தால் தோன்றும் எட்டும் துயரங்களையே தரும். எனவே முயற்சி செய்து காமத்தையும் கோபத்தையும் விட்டுவிட வேண்டும்.

कामजेषु प्रसक्तो हि व्यसनेषु महीपतिः।
वियुज्यतेऽर्थधर्माभ्यां क्रोधजेष्वात्मनैव तु॥

**காமஜேஷு ப்ரசக்தோ ஹி வ்யஸநேஷு மஹீபதி: |**
**வியுஜ்ய தேர்த்தர்மாப்யாம் க்ரோதஜேஷ்வாத்மநைவ து ||** **46**

காமத்தில் பற்றுள்ள அரசன் தர்மத்தையும் பொருளையும் இழப்பான். கோபம் கொள்ளும் அரசன், தனக்குத்தானே அழிவைத் தேடிக் கொள்வான்.

मृगयाऽक्षो दिवास्वप्नः परिवादः स्त्रियो मदः।
तौर्यत्रिकं वृथाऽट्या च कामजो दशको गणः॥

**ம்ருகயாக்ஷா திவாஸ்வப்ந: பரிவாத: ஸ்த்ரியோ மத: |**
**தௌர்யத்ரிகம் வ்ருதாட்யா ச காமஜோ தஷகோ கண: ||** **47**

காமத்தால் தோன்றும் பத்து: (1) வேட்டை (2) வாதம் (3) பகல் தூக்கம் (4) பெண்கள் சேர்க்கை (5) குடிபோதை (6) பிறர் நிந்தை (7) பாட்டு (8) நடனம் (9) பொய் (10) வீண் சஞ்சாரம்.

पैशुन्यं साहसं द्रोह ईर्ष्याऽसूयाऽर्थदूषणम्।
वाग्दण्डजं च पारुष्यं क्रोधजोऽपि गणोऽष्टकः॥

**பைஷுந்யம் ஸாஹஸம் த்ரோஹஈர்ஷ்யாஅசூயார்த்த தூஷணம் |**
**வாக்தண்டஜம் ச பாருஷ்யம் க்ரோதஜோ அபிகணோ அஷ்டக: || 48**

*கோபத்தால் தோன்றும் எட்டு: (1) கோள் சொல்லல் (2) வீண் துணிச்சல் (3) துரோகம் (4) பொறாமை (5) திருட்டு (6) தூற்றுதல் (7) வாய்ச் சண்டை (8) காரணமின்றி தண்டித்தல் (அடித்தல்)*

द्वयोरप्येतयोर् मूलं यं सर्वे कवयो विदुः।
तं यत्नेन जयेल् लोभं तज्जावेतावुभौ गणौ॥

**த்வயோரப்யேதயோர்மூலம் யம் ஸர்வே கவோய விது: |**
**தம்யத்நேந ஜயேத் லோபம் தஜ்ஜாவேதாவுபௌ கணௌ || 49**

*காமத்துக்கும் கோபத்துக்கும் மூலகாரணம் என்று லோப குணத்தை அறிஞர்கள் கூறுகின்றனர். எனவே முயற்சித்து லோபத்தை வென்றுவிடுவதன் மூலம் காமம், கோபம் இரண்டையும் வெல்லலாம்.*

पानमक्षाः स्त्रियश् चैव मृगया च यथाक्रमम्।
एतत् कष्टतमं विद्याच् चतुष्कं कामजे गणे॥

**பாநமக்ஷா: ஸ்த்ரியஷ்சைவ ம்ருகயா ச யதாக்ரமம் |**
**ஏதத்க்ருஷ்டதமம் வித்யாச்சதுஷ்கம் காமஜே கணே || 50**

*காமத்தால் ஏற்படும் பத்து குணங்களில், குடி, சூதாட்டம், பெண் கலவி, வேட்டை என்னும் நான்கும் மிகவும் துன்ப மளிப்பவை.*

दण्डस्य पातनं चैव वाक्पारुष्यार्थदूषणे।
क्रोधजेऽपि गणे विद्यात् कष्टमेतत् त्रिकं सदा॥

**தண்டஸ்ய பாதநம் சைவ வாக்பாருஷ்யார்த தூஷணே |**
**க்ரோதஜே அபிகணே வித்யாத் கஷ்டமேதத்ரிகம் ஸதா || 51**

*அடித்தல், வைதல் (ஏசுதல்), திருடல் என்னும் மூன்றும் கோபத்தால் விளையும் குணங்களில் மிகவும் துன்பமளிப்பவை.*

सप्तकस्यास्य वर्गस्य सर्वत्रैवानुषङ्गिणः।
पूर्वंपूर्वं गुरुतरं विद्याद् व्यसनमात्मवान्॥

**ஸப்தகஸ்யாஸ்ய வர்கஸ்ய ஸர்வத்ரைவாநுஷங்கிண: |**
**பூர்வம் பூர்வம் குருதரம் வித்யாத் வ்யஸநமாத்மவாந் || 52**

*காமத்தால் விளையும் குணங்களை எடுத்துக் கொண்டால், ஒன்றைவிட ஒன்று துயரம் அதிகம் தருவதாகும். அதே போன்றுதான்*

கோபத்தால் விளைபவையும் ஒன்றைவிட ஒன்று அதிகம் துயர் தருவதாகும்.

व्यसनस्य च मृत्योश् च व्यसन कष्टमुच्यते।
व्यसन्यधोऽधो व्रजति स्वर्यात्यव्यसनी मृतः॥

**வ்ஸநஸ்ய ச ம்ருத்யோஷ்ச வ்யசநம் கஷ்டமுச்யதே |**
**வ்யஸந்யதோ அதோ வ்ரஜதிஸ்வர்யாத்யவ்யஸநீ ம்ருத: ||** **53**

கவலை, மரணம் இரண்டையும் எடுத்துக் கொண்டால், கவலை கொடியது. கவலை கொண்டவன் தினம் தினம் க்ஷீணத்தை அடைவான். கவலையற்றவன் இறந்த பின் மேலுலகம் போவான். எனவே கவலைகளை விடவேண்டும்.

मौलाञ् शस्त्रविदः शूरांर्ं लब्धलक्षान् कुलोद्भवान्।
सचिवान् सप्त चाऽष्टौ वा प्रकुर्वीत परीक्षितान्॥

**மௌலாந் ஷாஸ்த்ர விதஷ்ஷூராந் லப்தலக்ஷாந் குலோத்பவாந் |**
**ஸசிவாந் ஸப்தசாஷ்டௌ வா ப்ரகுர்வீத பரீக்ஷிதாந் ||** **54**

அரசாங்கப் பதவிகளில் பரம்பரையாக வந்தவர்களும், சாஸ்திரமறிந்தவர்களும், சூரர்களும், வில்வித்தை போன்ற போர்ப் பயிற்சிகளில் சிறந்தவர்களும், நல்ல வம்சத்தில் பிறந்தவர்களுமான ஏழு பேரையோ அல்லது எட்டுப் பேரையோ நன்கு பரீட்சித்து மந்திரிகளாக நியமித்துக் கொள்ள வேண்டும்.

अपि यत् सुकरं कर्म तदप्येकेन दुष्करम्।
विशेषतोऽसहायेन किं नु राज्यं महोदयम्॥

**அபியத்சுககரம் கரம் கா்ம ததப்யே கேந துஷ்கரம் |**
**விசேஷதோ அசஹாயேந கிந்து ராஜ்யம் மஹோதயம் ||** **55**

சிறிய காரியத்தைக்கூட வேகமாகத் தனியாக முடிப்பது கடினம். அப்படியிருக்கும்போது மிகப் பெரும் நிர்வாகங்கள் அடங்கிய ராஜ்ய பரிபாலனத்தை ஒருவனால் எங்ஙனம் தனியாகச் செய்ய முடியும்?

तैः सार्धं चिन्तयेन् नित्यं सामान्यं सन्धिविग्रहम्।
स्थानं समुदयं गुप्तिं लब्धप्रशमनानि च॥

**தைஸ்ஸார்தம் சிந்தயேந்நித்யம் ஸாமாந்யம் ஸந்தி விக்ரஹம் |**
**ஸ்தாநம் ஸமுதயம் குப்திம் லப்தப்ரஷமநாநி ச ||** **56**

அரசன், மந்திரிகளிடம் சாதாரண விஷயங்களைப் பற்றியும், ஒரு நாட்டுடன் நட்பு பூணுவதைப் பற்றியும், படையெடுப்பதைப் பற்றியும், தண்டனையளிப்பதைப் பற்றியும், திரவியங்களைப்

(செல்வங்களைப்) பற்றியும், புரம், ராஷ்டிரம் இவைகளைப் பற்றிய விவகாரங்களைப் பற்றியும், தங்கம் முதலானவை கிடைக்கும் இடங்களைப் பற்றியும், அவற்றைத் தோண்டி எடுப்பதும், எடுத்ததைக் காப்பதும், அவற்றை நல்லபடி உபயோகிப்பது மானவைகளைப் பற்றியும் ஆலோசிக்க வேண்டும்.

तेषां स्वंस्वमभिप्रायमुपलभ्य पृथक्-पृथक्।
समस्तानां च कार्येषु विदध्याद् धितमात्मनः ॥

**தேஷாம் ஸ்வம் ஸ்வமபிப்ராயமுபலப்ய ப்ருதக் ப்ருதக் |**
**ஸமஸ்தாநாம் ச கார்யேஷு விதத்யாத்திதமாத்மந: || 57**

அந்த மந்திரிகள் ஒவ்வொருவருடைய அபிப்ராயத்தையும் தனித்தனியாகக் கூப்பிட்டு அந்தரங்கமாகக் கேட்டறிய வேண்டும். பிறகு அனைவருடைய அபிப்ராயத்தையும் பகிரங்கமாகக் கேட்டறிய வேண்டும். அதன்பிறகு எப்படிச் செய்தால் சரியோ அப்படிச் செய்ய வேண்டும்.

सर्वेषां तु विशिष्टेन ब्राह्मणेन विपश्चिता।
मन्त्रयेत् परमं मन्त्रं राजा षाड्गुण्यसंयुतम्॥

**ஸர்வேஷாம்து விஷிஷ்டேந ப்ராஹ்மணேந விபஷ்சிதா |**
**மந்த்ரயேத்பரமம் மந்த்ரம் ராஜா ஷாட்குண்ய ஸம்யுதம் || 58**

இந்த மந்திரிகளில் சிறந்தவராக, குணங்களால் உயர்ந்தவராக, வித்வானாக இருக்கும் ஒருவரிடம், சத்ருவுடன் சமாதானம் செய்து கொள்ளுதல் அல்லது போர் புரிதல் முதலான முக்கிய விஷயங்களைப் பற்றி ஆலோசனைகளை நடத்த வேண்டும்.

नित्यं तस्मिन् समाश्वस्तः सर्वकार्याणि निक्षिपेत्।
तेन सार्धं विनिश्चित्य ततः कर्म समारभेत्॥

**நித்யம் தஸ்மிந் ஸமாஷ்வஸ்த: ஸர்வகார்யாணி விக்ஷிபேத் |**
**தேந ஸார்தம் விநிஷ்சித்ய தத: கர்ம ஸமாரபேத் || 59**

தினமும் அம்மந்திரியிடம், செய்ய வேண்டியவைகளைப் பற்றி எடுத்துக் கூறி, அவரது ஆலோசனையைக் கேட்டு அப்படியே நடத்த வேண்டும்.

अन्यानपि प्रकुर्वीत शुचीन् प्राज्ञानवस्थितान्।
सम्यगर्थसमाहर्तॄनमात्यान् सुपरीक्षितान्॥

**அந்யாநபி ப்ரகுர்வீத சுசீந் ப்ராக்ஞாநவஸ்திதாந் |**
**ஸம்யகர்த ஸமாஹர்த்ருநமாத்யாந் சுபரீக்ஷிதாந் || 60**

தூய்மையானவர்களாகவும், சிறந்த அறிவாளிகளாகவும், தீரர்களாகவும், பணம் படைத்தவர்களாகவும் இருப்பவர்களை நன்கு பரீட்சித்து காரிய மந்திரிகளாக வைத்துக் கொள்ள வேண்டும்.

निर्वर्तेताऽस्य यावद्भिरितिकर्तव्यता नृभिः।
तावतोऽतन्द्रितान् दक्षान् प्रकुर्वीत विचक्षणान्॥

**நிர்வர்தேதாஸ்ய யாவத்பீரிதிகர்தவ்யதா ந்ருபி: |**
**தாவதோ அதந்த்ரிதாந் தக்ஷாந் ப்ரகுர்வீத விசக்ஷணாந் ||** 61

அம்மந்திரிகளில் திறமைசாலிகளாகவும், குலதர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்களாகவும், பொருளாசை அற்றவர்களாகவும் இருப்பவர்களை பொக்கிஷ இடத்தில் நியமிக்க வேண்டும். அவ்வாறே இத்தகையவர்களை தானியக் கருவூலங்களிலும் நியமிக்க வேண்டும்.

तेषामर्थे नियुञ्जीत शूरान् दक्षान् कुलोद्गतान्।
शुचीनाकरकर्मान्ते भीरूनन्तर्निवेशने॥

**தேஷாமர்தே நியுஞ்ஜீத சூராந் தக்ஷாந் குலோத்கதாந் |**
**ஷுசீநாகரகர்மாந்தே பீருநந்தர்நிவேஷநே ||** 62

அரண்மனையில், பயந்தவர்களை நியமிக்க வேண்டும். இல்லாவிடில் பலசாலிகளான சூரர்கள் எதிரிகளிடம் லஞ்சம் பெற்றுக் கொண்டு, ராணிகளுடன் அரசன் தனித்திருக்கும்போது கொன்று விடவும் கூடும். எனவே சூரர்களை அரண்மனையில் நியமிக்கக் கூடாது.

दूत चैव प्रकुर्वीत सर्वशास्त्रविशारदम्।
इङ्गिताऽऽकारचेष्टज्ञ शुचि दक्ष कुलोद्गतम्॥

**தூதம் சைவ ப்ரகுர்வீத ஸர்வஷாஸ்த்ர விஷாரதம் |**
**இங்கிதாகார சேஷ்டக்ஞம் சுசிம் தக்ஷம் குலோத்கதம் ||** 63

சகல சாஸ்திரங்களையும் அறிந்தவனாகவும், பிறர் மனத்தை அறியக்கூடியவனாகவும், உடல் அசைவுகள் மற்றும் கைகளால் செய்யும் சமிக்ஞைகளை அறிந்தவனாகவும், பரிசுத்தனாகவும், திறமைசாலியாகவும், வம்ச பாரம்பரியமாக வந்தவனாகவும் இருப்பவனை தூதனாக நியமிக்க வேண்டும்.

अनुरक्तः शुचिर् दक्षः स्मृतिमान् देशकालवित्।
वपुष्मान् वीतभीर् वाग्मी दूतो राज्ञः प्रशस्यते॥

**அனுரக்த: ஷுசிர்தக்ஷ: ஸ்ம்ருதிமாந் தேஷகாலவித் |**
**வபுஷ்மாந் வீதபீர்வாக்நீ தூதோ ராக்ஞ: ப்ரஷஸ்யதே ||** 64

மக்களிடம் அன்பு செலுத்துபவனாகவும், பெண், பொன் விஷயங்களில் பரிசுத்தனாகவும், திறமைசாலியாகவும், ஞாபக சக்தி மிகுந்தவனாகவும், தேச காலங்களை அறிந்தவனாகவும், உருவத்தில் எந்தக் குறைபாடும் இல்லாதவனாகவும், பயமறியாதவனாகவும், பேச்சுத் திறன் கொண்டவனாகவும் இருக்கும் தூதனைத் தன்னருகில் வைத்துக்கொள்ள வேண்டும்.

**अमात्ये दण्ड आयत्तो दण्डे वैनयिकी क्रिया।**
**नृपतौ कोशराष्ट्रे च दूते सन्धिविपर्ययौ॥**

**அமாத்யே தண்ட ஆயத்தோ தண்டே வைநயிகீ க்ரியா |**
**ந்ருபதௌ கோஷராஷ்ட்ரே ச தூதே ஸந்திவிபர்யயௌ ||** 65

நால்வகைப் படைகளும் படைத் தலைவனுக்கு அடங்கியிருக்க வேண்டும். தண்டத்துக்கு வினயம் ஆதீனமாயிருக்கும். ராஜ்ஜியத்தையும், பொக்கிஷங்களையும் அரசன் தன் ஆதீனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

அவற்றைத் தானே பார்த்துக் கொள்ள வேண்டும். போரும் சமாதானமும் தூதுவனுடைய ஆதீனத்தில் இருக்கும். போரும் சமாதானமும் தூதுவனாலேயே ஏற்படும். எனவே தூதுவனாக இருப்பவன் மிக்க திறமைசாலியாக இருக்க வேண்டும்.

**दूत एव हि सन्धत्ते भिनत्त्येव च संहतान्।**
**दूतस् तत् कुरुते कर्म भिद्यन्ते येन मानवाः॥**

**தூதஏவஹி ஸந்தத்தே பிநத்யேவ ச ஸம்ஹதாந் |**
**தூதஸ்தத்குருதே கர்ம பித்யந்தே யேந மாநவாஹ ||** 66

தூதுவனே பகைவரை நண்பனாக்க வல்லான். நண்பர்களாக இருப்பவர்களைப் பகை கொள்ள வைக்கவும் வல்லான். எதைச் செய்தால் பகைவர்கள் நண்பர்களாகி இணைவார்களோ, எதைச் செய்தால் நண்பர்கள் வேறுபடுவார்களோ, அதைச் செய்ய வல்லவன். எனவே போரும் சமாதானமும் அவன் ஆதீனத்திலுள்ளவை.

**स विद्यादस्य कृत्येषु निगूढेङ्गितचेष्टितैः।**
**आकारमिङ्गितं चेष्टां भृत्येषु च चिकीर्षितम्॥**

**ஸ வித்யாதஸ்ய க்ருதேஷு நிகூடேங்கித சேஷ்டிதை: |**
**ஆகாரமிங்கிதம் சேஷ்டாம் ப்ருத்யேஷு ச சிகீர்ஷிதம் ||** 67

தூதுவன் எதிரி மன்னனிடம் போய் மாறுவேஷத்தோடு தங்கியிருந்து, அவனது மனத்திலுள்ள அபிப்ராயத்தையும், நடவடிக்கைகளையும், அவனது வீரர்களின் அபிப்ராயங்களையும், அவர்கள்

உருவங்களையும், அங்கசேஷ்டைகளையும் அறிந்து கொள்ள வேண்டும்.

बुद्ध्वा च सर्वं तत्त्वेन परराजचिकीर्षितम्।
तथा प्रयत्नमातिष्ठेद् यथाऽऽत्मानं न पीडयेत्॥

**புத்வா ச சர்வம் தத்வேந பரராஜ சிகீர்ஷிதம் |**
**ததா ப்ரயத்னமாதிஷ்டேத் யதாத்மாநம் ந பீடயேத் ||** 68

இவ்வாறு தூதுவர்கள் மூலமாக எதிரி மன்னர்களைப் பற்றி அரசன் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அறிந்து எவ்வகையில் தனக்கு அபாயம் நேராமல் இருக்குமோ அவ்வகையாக நடந்து கொள்ள வேண்டும்.

जाङ्गलं सस्यसम्पन्नमार्यप्रायमनाविलम्।
रम्यमानतसामन्तं स्वाजीव्यं देशमावसेत्॥

**ஜாங்கலம் ஸஸ்ய ஸம்பந்நமார்ய ப்ராயமநாவிலம் |**
**ரம்ய மாஸதஸாமந்தம் ஸ்வாஜீவ்யம் தேஷமாவசேத் ||** 69

அரசன் தன் பட்டினத்துக்கருகில் வயல்களையும், வியாபாரி களுக்குரிய இடங்களையும், பசுஞ்சோலைகளையும், கிராமங் களையும் ஏற்படுத்த வேண்டும்.

धन्वदुर्गं महीदुर्गमब्दुर्गं वार्क्षमेव वा।
नृदुर्गं गिरिदुर्गं वा समाश्रित्य वसेत् पुरम्॥

**தந்வதுர்கம் மஹீதுர்கமப்துர்கம் வார்க்ஷமேவ வா |**
**ந்ருதுர்கம் கிரிதுர்கம் வா ஸமாஷ்ரித்ய வஸேத்புரம் ||** 70

ஐந்து யோஜனை தூரத்துக்கு சுற்றிலும் தண்ணீரில்லாத மணல் பரப்பு அமைக்க வேண்டும். இதற்கு மருதுர்கம் என்று பெயர். கற்களால் கட்டப்பட்ட பன்னிரண்டு முழ உயரமும், அதிக அகலமும் கொண்டதாக விசாலமான பிராகாரங்களோடு, மனிதர்கள் அங்கிருந்தே போர் புரியத் தக்கதான கற்கோட்டையைக் கட்ட வேண்டும். சுற்றிலும் ஆழமாகத் தண்ணீர் நிரப்பி வைக்க வேண்டும். முதலைகளையும் அதில் விட்டு வளர்க்க வேண்டும். இதற்கு ஜலதுர்கம் என்று பெயர். வெளிப்புறத்தைச் சுற்றிலும் ஒரு யோஜனை தூரத்துக்கு அடர்த்தியாக மரங்களை வளர்க்க வேண்டும். இதற்கு விருட்சதுர்கம் என்று பெயர். நால்வகைப் படைகளாலும் காவல் காப்பது மனிததுர்கம். நாற்புறமும் மலைகளால் சூழப்பட்டு உள்ளே நுழைய முடியாதபடி இருப்பதோடு, உட்புறமாக நதிகளும், நீர்நிலைகளும், விளைச்சல் தரும் இடங்களும் இருப்பது கிரிதுர்கம் எனப்படும்.

துர்கம் என்றால் கோட்டை. இத்தனை கோட்டைகளில் ஏதேனும் ஒன்றைத் தன் தலைநகரத்தைச் சுற்றி அமைத்துக் கொள்ள வேண்டும்.

सर्वेण तु प्रयत्नेन गिरिदुर्गं समाश्रयेत्।
एषां हि बाहुगुण्येन गिरिदुर्गं विशिष्यते॥

**ஸர்வேண து ப்ரயத்நே கிரிதுர்கம் ஸமாஷ்ரயேத் |**
**ஏஷாம் ஹி பாஹுகுண்யேந கிரிதுர்கம் விசிஷ்யதே || 71**

त्रीण्याद्यान्याश्रितास् त्वेषां मृग-गर्ताश्रया-ऽप्सराः।
त्रीण्युत्तराणि क्रमशः प्लवङ्गम-नरा-ऽमराः॥

**த்ரீண்யாத்யாஷ்ரிதாஸ் த்வேஷாம் ம்ருக கர்தாஷ்ரயா அப்ஸரா: |**
**த்ரீண்யுத்தராணி க்ரமஷஹ ப்லவங்கம நராஅமராஹ || 72**

ஐந்து யோஜனை தூரம் சூழப்பட்ட மணல் கோட்டையில் மிருகங்கள் வாழ வேண்டும்.

கற்கோட்டையில் எலி, பெருச்சாளிகள் வாழ வேண்டும்.

ஜலதுர்கத்தில் முதலைகள் வாழ வேண்டும்.

மரங்கள் சூழ்ந்த விருட்ச துர்கத்தில் வானரங்கள் வாழ வேண்டும்.

மனித துர்கத்தில் மனிதர்கள் காவல் இருக்க வேண்டும்.

கிரி துர்கத்தில் தேவதைகள் வசிக்க வேண்டும். தேவதைகளுக்கான பூஜைகளைச் செய்ய வேண்டும்.

यथा दुर्गाश्रितानेतान् नोपहिंसन्ति शत्रवः।
तथाऽरयो न हिंसन्ति नृपं दुर्गसमाश्रितम्॥

**யதா துர்காஷ்ரிதாநே தாந்நோ பஹிம்ஸந்தி ஷத்ரவ: |**
**ததாரயோ ந ஹிம்ஸந்தி ந்ருபம் துர்கம் ஸமாஷ்ரிதம் || 73**

கோட்டைகளிலிருக்கும் மிருகங்கள் முதலானவற்றை எதிரிகளால் ஹிம்சிக்க முடியவில்லை என்றால், கோட்டைக்குள்ளிருக்கும் அரசனை எதிரிகளால் நெருங்க முடியாது.

एकः शतं योधयति प्राकारस्थो धनुर्धरः।
शतं दशसहस्राणि तस्माद् दुर्गं विधीयते॥

**ஏகஷ்ஷதம் யோதயதி ப்ராகாரஸ்தோ தநுர்தர: |**
**ஷதம் தஷசஹஸ்ராணி தஸ்மாத்துர்கம் விதீயதே || 74**

*கற்கோட்டை பிரகாரத்தின் மீதுள்ள ஒரு வில் வீரன் நூறு எதிரிகளை அழிக்க முடியும். நூறு வில் வீரர்கள் பத்தாயிரம் எதிரிகளை அழிக்க முடியும். எனவே கோட்டை அரசனுக்கு மிக மிக முக்கியம்.*

तत् स्यादायुधसम्पन्नं धनधान्येन वाहनैः।
ब्राह्मणैः शिल्पिभिर् यन्त्रैर् यवसेनोदकेन च॥

**தத் ஸ்யாதாயுத ஸம்பந்தம் தனதான்யேந வாஹநை: |**
**ப்ராஹ்மணைஷ் ஷில்பிபி ரந்த்ரைர்யவ ஸேநோதகேந ச || 75**

*அந்தக் கோட்டை படைக் கலங்கள், தனங்கள், தானியங்கள், வாகனங்கள், அறிஞர்கள், பொறியியல் அறிஞர்கள், யந்திரங்கள் மற்றும் தண்ணீரோடு கூடியிருக்க வேண்டும்.*

तस्य मध्ये सुपर्याप्तं कारयेद् गृहमात्मनः।
गुप्तं सर्वर्तुकं शुभ्रं जलवृक्षसमन्वितम्॥

**தஸ்ய மத்யே சுபர்யாப்தம் காரயேத் க்ருஹமாத்மந: |**
**குப்தம் ஸர்வர்துகம் சுப்ரம் ஜலவ்ருக்ஷஸமந்விதம் || 76**

*அந்தக் கோட்டைக்கு மத்தியில் தன்னுடைய கிருஹத்தை அரசன் அமைத்துக் கொள்ள வேண்டும். மேலும் அங்கு ஆலயம், அரண்மனைப் பெண்டிருக்கான கிருஹங்கள், ஆயுதச் சாலை, சமையல் கூடம் முதலானவைகள் இருக்க வேண்டும். சுற்றிலும் அகலமான பிராகாரங்கள் இருக்க வேண்டும். புஷ்ப மரங்களும் பழ மரங்களும் நிறைந்திருக்க வேண்டும். நீர் நிறைந்த நடைவாவிகளும் அமைந்திருக்க வேண்டும். சுற்றிலும் சோலைகள் சூழ்ந்ததாக ராஜகிருஹம் இருக்க வேண்டும்.*

तदध्यास्योद्वहेद् भार्यां सवर्णां लक्षणाऽन्विताम्।
कुले महति सम्भूतां हृद्यां रूपगुणाऽन्विताम्॥

**ததத்யாஸ்யோத்வஹேத் பார்யாம் ஸவர்ணாம் லக்ஷணாந்விதாம் |**
**குலே மஹதி ஸம்பூதாம் ஹ்ருத்யாம் ரூபகுணாந்விதாம் || 77**

*க்ஷத்ரிய குலத்தில் பிறந்த, நல்ல லட்சணங்களோடு கூடிய, மனதிற்கினிய, அழகும் நற்குணங்களும் நிறைந்த பெண்ணை அரசன் மணக்க வேண்டும்.*

पुरोहितं च कुर्वीत वृणुयादेव चर्त्विजः।
तेऽस्य गृह्याणि कर्माणि कुर्युर् वैतानिकानि च॥

**புரோஹிதம் சகுர்வீத வ்ருணுயாதேவசரிக் த்விஜ: |**
**தே அஸ்ய க்ருஹ்யாணி கர்மாணி குர்யுர்வை தாநிகாநிச || 78**

ரிக்வேதிகளை புரோகிதர்களாக நியமிக்க வேண்டும். யக்ஞம் முதலான கிரியைகளையும், ராஜகிருஹ பூஜைகளையும் அவர்கள் செய்ய வேண்டும்.

यजेत राजा क्रतुभिर् विविधैराप्तदक्षिणैः।
धर्मार्थं चैव विप्रेभ्यो दद्याद् भोगान् धनानि च॥

**யஜேத ராஜா க்ரதுபிர் விதைராப்த தட்சிணை: |**
**தர்மார்தம் சைவ விப்ரேப்யோ தத்யாத் போகாந் தநாநி ச ||** 79

அவர்களைக் கொண்டு யாக யக்ஞங்களைச் செய்ய வேண்டும். தாராளமாக தட்சிணைகளை வழங்க வேண்டும். அவர்களுக்கு வீடுகள், பூமி, படுக்கை, தங்கம், வெள்ளி ஆபரணங்களை வழங்க வேண்டும்.

सांवत्सरिकमाप्तैश् च राष्ट्रादाहारयेद् बलिम्।
स्याच् चाऽऽम्नायपरो लोके वर्तेत पितृवन् नृषु॥

**ஸாம்வத்ஸரிக மாஷப்த்சைராஷ்ட் ரைதாஹாரயேத் பலிம் |**
**ஸ்வாச்சாம்நாயாவரோ லோகே வர்தேத பித்ருவத் ந்ருஷு ||** 80

அரசன் தக்க அதிகாரிகளை நியமித்து வருடத்துக்கு வர வேண்டிய வரியை வசூலிக்க வேண்டும். வரி வசூல் செய்வதில் சாஸ்திர நெறியறிந்து வசூல் செய்ய வேண்டும். தன் குடிமக்களிடம் தந்தையைப் போல் அன்பு காட்ட வேண்டும்.

अध्यक्षान् विविधान् कुर्यात् तत्रतत्र विपश्चितः।
तेऽस्य सर्वाण्यवेक्षेरन् नृणां कार्याणि कुर्वताम्॥

**அத்யக்ஷாந் விவிதாந் குர்யாத் தத்ர தத்ர விபஷ்சித: |**
**தே அஸ்ய ஸர்வாண்ய வேக்ஷேரந் ந்ருணாம் கார்யாணி குர்வதாம் ||** 81

காலாட் படை, குதிரைப் படை, தேர்ப் படை, யானைப் படை முதலான வற்றுக்கு நிர்வாகிகளாகத் தக்க அதிகாரிகளை நியமிக்க வேண்டும். அந்தந்த அதிகாரிகள் அந்தந்த இடங்களில் இருந்து கொண்டு பயிற்சிகளும் மற்ற காரியங்களும் நன்கு நடைபெறுகிறதா என்பதைக் கண்காணித்து, குறைகளை நீக்க வேண்டும்.

आवृत्तानां गुरुकुलाद् विप्राणां पूजको भवेत्।
नृपाणामक्षयो ह्येष निधिर् ब्राह्मोऽभिधीयते॥

**ஆவ்ருத்தாநாம் குருகுலாத் விப்ராணாம் பூஜகோ பவேத் |**
**ந்ருபாணாமக்ஷயோஹ்யேஷ நிதிர் ப்ரஹ்மோ அபிதீயதே ||** 82

குருகுலத்தில் படிப்பை முடித்த பிராம்மணர்களுக்குத் தேவையான தன தானியங்களை வழங்கிக் கௌரவிக்க வேண்டும். இவ்வாறு பிராம்மணர்களுக்கு வழங்கப்பட்ட நிதியே அரசனுடைய சொந்த நிதியாகும். அதுவே அரசனுக்கு எப்போதும் குறையாத நன்மைகளைத் தரும்.

न तं स्तेना न चाऽमित्रा हरन्ति न च नश्यति।
तस्माद् राज्ञा निधातव्यो ब्राह्मणेष्वक्षयो निधिः॥

**நதம் ஸ்தேநா ந சாமித்ரா ஹரந்தி ந ச நஷ்யதி |**
**தஸ்மாத் ராக்ஞாநிதாதவ்யோ ப்ராஹ்மணேஷ்வக்ஷயோ நிதி: || 83**

இவ்வாறு பிராம்மணர்களுக் களிக்கப்பட்ட பொருள் அரசனுடையது என்று கூறப்பட்டதல்லவா? இந்தப் புண்ணியமாக மாறிய நிதியை திருடர்கள் திருட முடியாது. எதிரிகள் கொள்ளையிட்டு எடுத்துச் செல்ல முடியாது. அது குறையவும் குறையாது. எனவே, அரசன் தன தானிய ரூபமான நிதியை பிராம்மணனிடம் வைக்க வேண்டும்.

न स्कन्दते न व्यथते न विनश्यति कर्हिचित्।
वरिष्ठमग्निहोत्रेभ्यो ब्राह्मणस्य मुखे हुतम्॥

**ந ஸ்கந்தந்தே நவ்யததே ந விநஷ்யதி கர்ஹிசித் |**
**வரிஷ்டமக்நி ஹோத்ரேப்யோ ப்ராஹ்மணஸ்ய முகேஹுதம் || 84**

அக்னியில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ் (நெய்) அக்னியில் விழாமல் கீழே விழலாம். ஆனால் பிராம்மணன் கையில் கொடுக்கப் பட்ட தானம் என்னும் ஹவிஸ் கீழே விழாது; கெடாது; எனவே பிராம்மணனுக்குக் கொடுக்க வேண்டும்.

सममब्राह्मणे दानं द्विगुणं ब्राह्मणब्रुवे।
प्राधीते शतसाहस्रमनन्तं वेदपारगे॥

**ஸமமப்ராஹ்மணே தாநம் த்விகுணம் ப்ராஹ்மணப்ருவே |**
**ப்ராதீதே ஷதஸாஹஸ்ரமநந்தம் வேதபாரகே || 85**

பிராம்மணனல்லாத க்ஷத்ரியன் முதலானோருக்கு வழங்கிய தானம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட அளவுக்குப் பலன் தரும். அனுஷ்டானத்தோடு கூடிய பிராம்மணனுக்கு வழங்கிய தானம் அதைவிட இருமடங்கு பலன் தரும். வேதாத்யயனம் செய்யும் பிராம்மணனுக்கு வழங்கிய தானம் லட்சம் மடங்கு மேலான பலன் தரும். வேதங்களை முழுமையாகப் படித்த பிராம்மணனுக்கு அளித்த தானம் அளவில்லாத பலனைத் தரும்.

पात्रस्य हि विशेषेण श्रद्दधानतयैव च।
अल्पं वा बहु वा प्रेत्य दानस्य फलमश्नुते॥

**பாத்ரஸ்ய ஹி விசேஷேண ஷ்ரத்ததாநதயைவ ச |**
**அல்பம் வா பஹுவா ப்ரேத்ய தாநஸ்யாவாப்யதே பலம் ||** 86

*வழங்கப்பட்ட தானம் சிறியதாயினும் அதிகமாயினும், தானம் வழங்கியவனுடைய வேதாத்யயனம், தூய்மை, தவம் முதலானவை களைப் பொறுத்தும், தானம் கொடுத்தவன் எந்த அளவுக்கு சிரத்தையாக வழங்கினான் என்பதைப் பொறுத்துத்தான் பலன் கிட்டும்.*

समोत्तमाधमै राजा त्वाहूतः पालयन् प्रजाः।
न निवर्तेत सङ्ग्रामात् क्षात्रं धर्ममनुस्मरन्॥

**ஸமோத்தமாதமை ராஜா த்வாஹூத: பாலயந் ப்ரஜா: |**
**ந நிவர்தேத ஸம்க்ராமாத் க்ஷாத்ர தர்மமனுஸ்மரந் ||** 87

*அரசன், தன்னைப் போருக்கு அழைத்தவன் தனக்கு சமமானவனாக இருந்தாலும், உயர்ந்தவனாக இருந்தாலும், தாழ்ந்தவனாக இருந்தாலும் க்ஷத்ரிய தர்மப்படி போர் புரியவே வேண்டும். பயத்தால் பின்வாங்கக் கூடாது.*

सङ्ग्रामेष्वनिवर्तित्वं प्रजानां चैव पालनम्।
शुश्रूषा ब्राह्मणानां च राज्ञां श्रेयस्करं परम्॥

**ஸம்க்ராமேஷ்வநிவர்தித்வம் ப்ரஜாநாம்சைவ பாலநம் |**
**சுஷ்ரூஷா ப்ராஹ்மணாநாம் ச ராக்ஞாம் ஷ்ரேயஸ்கரம் பரம் ||** 88

*போரில் புறங்காட்டாமை, மக்களைக் காப்பாற்றுதல், பிராம்மணர்க்குப் பணிவிடை புரிதல் இவை அரசனுக்கு மேன்மையைத் தரும்.*

आहवेषु मिथोऽन्योऽन्यं जिघांसन्तो महीक्षितः।
युध्यमानाः परं शक्त्या स्वर्गं यान्त्यपराङ्मुखाः॥

**ஆஹவேஷு மிதோ அந்யோந்யம் ஜிகாம்சந்தோ மஹீக்ஷித: |**
**யுத்யமாநா: பரம் ஷக்த்யா ஸ்வர்கம் யாந்த்ய பராங்முகா: ||** 89

*அரசர்கள் ஒருவரை ஒருவர் கொல்ல முயல்பவர்களாய்த் தங்கள் சக்தியைப் பிரயோகித்துப் போரிட்டு, அந்தப் போரில் இறந்தால் ஸ்வர்க்கத்தை அடைவார்கள்.*

न कूटैरायुधैर् हन्याद् युध्यमानो रणे रिपून्।
न कर्णिभिर् नाऽपि दिग्धैर् नाऽग्निज्वलिततेजनैः ॥

நகூடையராயுதைர்வா ந்யாத்யுத்யமாநோ ரணே ரிபூந் |
நகர்ணிபிர்நாபி திக்த்தைர் நாக்நி ஜ்வலிததேஜஸை: || 90

மேலே பார்ப்பதற்கு வெறும் மரக்கட்டையைப் போலிருந்து உள்ளே கொடிய ஆயுதம் மறைத்து வைத்திருந்து அதனால் கொல்லக்கூடாது. காதுகள் பொருந்தியுள்ள ஆயுதங்களாலும் கொல்லக்கூடாது. விஷம் தடவிய ஆயுதங்களாலும் கொல்லக் கூடாது. நெருப்பில் காய்ச்சிய நிலையில் ஒளியோடிருக்கும் ஆயுதத் தாலும் கொல்லக்கூடாது.

न च हन्यात् स्थलाऽऽरूढं न क्लीबं न कृताऽञ्जलिम्।
न मुक्तकेशं नाऽऽसीनं न तवाऽस्मीतिवादिनम्॥

நசஹந்யாத் ஸ்தலாரூடாந் ந க்லீபம் ந க்ருதாஞ்ஜலிம் |
நாமுக்தகேஷம் நாஸீநம் நதவாஸ்மீதி வாதிநம் || 91

தான் தேரில் இருக்கும்போது, தேரின்றி பூமியில் நிற்கும் எதிரியைக் கொல்லக்கூடாது. நபும்சகனைக் கொல்லக்கூடாது. சரணடைந்தவனைக் கொல்லக்கூடாது. தலை விரித்துக் கொண் டிருப்பவனையும், அமர்ந்து கொண்டிருப்பவனையும் கொல்லக் கூடாது.

न सुप्तं न विसन्नाहं न नग्नं न निरायुधम्।
नाऽयुध्यमानं पश्यन्तं न परेण समागतम्॥

ந சுப்தம் ந விஸந்நாஹம் ந நக்நம் நநிராயுதம் |
நாயுத்யமாநம் பஷ்யந்தம் நபரேண ஸமாகதம் || 92

தூங்குபவனையும், யுத்தத்துக்கு முயற்சி செய்யாதவனையும் கொல்லக்கூடாது. ஆடையற்று இருப்பவனையும், ஆயுதங்களற்று இருப்பவனையும் கொல்லக்கூடாது. தன்னுடன் யுத்தம் செய்ய வராதவனையும், யுத்தத்தை வேடிக்கை பார்ப்பவனையும் கொல்லக் கூடாது. இன்னொருவனுடன் யுத்தம் செய்து கொண்டிருப்ப வனையும் கொல்லக்கூடாது.

नाऽऽयुधव्यसनप्राप्तं नाऽऽर्तं नाऽतिपरिक्षतम्।
न भीतं न परावृत्तं सतां धर्ममनुस्मरन्॥

நாயுதவ்யசநப்ராப்தம் நார்தம் நாதிபரிக்ஷதம் |
நபீதம் நபராவ்ருத்தம் ஸதாம் தர்மமனுஸ்மரந் || 93

உடைந்த ஆயுதங்களோடு இருப்பவனையும், துயரத்தால் நிலை குலைந்து போயிருப்பவனையும், அடிபட்டு வீழ்ந்திருப்பவனையும், பயந்தவனையும், புறமுதுகு காட்டி ஓடுபவனையும் க்ஷத்ரிய தர்மத்தை எண்ணிப் பார்த்துக் கொல்லக்கூடாது.

यस् तु भीतः परावृत्तः सङ्ग्रामे हन्यते परैः।
भर्तुर् यद् दुष्कृतं किञ्चित् तत् सर्वं प्रतिपद्यते॥

**யஸ்து பீத: பராவ்ருத்த: ஸங்க்ராமே ஹந்யதே பரை: |**
**பர்துர்யத் துஷ்க்ருதம் கிஞ்சித்தத் ஸர்வம் ப்ரதிபத்யதே ||** 94

எவன் எதிரிகளுக்குப் பயந்து புறமுதுகு காட்டி ஓடும்போது எதிரிகளால் கொல்லப்படுகிறானோ, அவன் தன்னுடைய அரசனுடைய பாபம் முழுவதையும் அடைகிறான்.

यच् चाऽस्य सुकृतं किञ्चिदमुत्रार्थमुपार्जितम्।
भर्ता तत् सर्वमादत्ते परावृत्तहतस्य तु॥

**யச்சாஸ்ய சுக்ருதம் கிஞ்சிதமுத்ரார்த்தமுபார்ஜிதம் |**
**பர்தா தத்ஸர்வமாதத்தே பராவ்ருத்த ஹதஸ்ய து ||** 95

இவ்வாறு கொல்லப்பட்டவனால் எந்தப் புண்ணியங்கள் சம்பாதிக் கப்பட்டிருந்தனவோ, அவை யாவும் அவனுடைய தலைவனான அரசனைச் சென்றடையும்.

रथाऽश्वं हस्तिनं छत्रं धनं धान्यं पशून् स्त्रियः।
सर्वद्रव्याणि कुप्यं च यो यज् जयति तस्य तत्॥

**ரதாஷ்வம் ஹஸ்திநம் சத்ரம் தநம் தாந்யம் பசூந் ஸ்த்ரிய: |**
**ஸர்வ தரவ்யாணி குப்யம் சயோ யத்ஜயதி தஸ்ய தத் ||** 96

யுத்தத்தில் வென்றவன், தோற்றவனுடைய தேர்கள், யானைகள், குதிரைகள், குடை, தன தானியங்கள், பசுக்கள், பெண்கள், சகல திரவியங்கள், தங்கம், வெள்ளி போன்ற அனைத்துக்கும் உரிமை யுடையவன் ஆவான்.

राज्ञश् च दद्युरुद्धारमित्येषा वैदिकी श्रुतिः।
राज्ञा च सर्वयोधेभ्यो दातव्यमपृथग् जितम्॥

**ராக்ஞஷ்ச தத்யுருத்தாரமித்யேஷா வைதிகீ ஷ்ருதி: |**
**ராக்ஞாச ஸர்வயோதேப்யோ தாதவ்யமப்ருதக் ஜிதம் ||** 97

இவ்வாறு போரில் வென்று கிடைத்த பொருட்களில் உயர்ந்தவைகளை அரசன் தனக்கு வைத்துக் கொள்ள வேண்டும்.

மற்றவைகளை வீரர்களுக்கு அவரவர்க்குத் தக்கபடி வெகுமதிகளாகப் பகிர்ந்தளிக்க வேண்டும்.

एषोऽनुपस्कृतः प्रोक्तो योधधर्मः सनातनः।
अस्माद् धर्मान् न च्यवेत क्षत्रियो घ्नन् रणे रिपून्॥

**ஏஷோ அநுபஸ்க்ருத: பரோக்தோ யோததர்மஸ்ஸநாதந: |**
**அஸ்மாத் தர்மாந் நச்யவேத க்ஷத்ரியோக்நந் ரணேரிபூந் ॥ 98**

சாஸ்வதமாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் யுத்த தர்மம் இது. க்ஷத்திரியன் இந்த தர்மங்களை எப்போதும் கடைப்பிடிக்க வேண்டும்.

अलब्धं चैव लिप्सेत लब्धं रक्षेत् प्रयत्नतः।
रक्षितं वर्धयेच् चैव वृद्धं पात्रेषु निक्षिपेत्॥

**அலப்தம் சை லிப்ஸேத லப்தம் ரக்ஷேத் ப்ரயத்நத: |**
**ரக்ஷிதம் வர்தயேச்சைவ வ்ருத்தம் பாத்ரேஷு நிக்ஷிபேத் ॥ 99**

அரசன் தன்னிடமில்லாத பொருளை சம்பாதிக்க வேண்டும். சம்பாதித்த பொருளை நன்கு காப்பாற்ற வேண்டும். காப்பாற்றும் பொருளை பன்மடங்காகப் பெருக்க வேண்டும். பெருக்கிய பொருளை பாத்திரமறிந்து வழங்க வேண்டும்.

एतच् चतुर्विधं विद्यात् पुरुषार्थप्रयोजनम्।
अस्य नित्यमनुष्ठानं सम्यक् कुर्यादतन्द्रितः॥

**ஏதத் சதுர்விதம் வித்யாத் புருஷார்த்த ப்ரயோஜநம் |**
**அஸ்ய நித்யமனுஷ்டானம் ஸம்யக் குர்யாதந்த்ரித: ॥ 100**

இவ்வாறான நான்கு வகைகளும் புருஷார்த்தங்கள் என்றறிந்து, தினமும் முயற்சியோடு இந்நான்கு வகையான காரியங்களையும் செய்து கொண்டேயிருக்க வேண்டும்.

अलब्धमिच्छेद् दण्डेन लब्धं रक्षेदवेक्षया।
रक्षितं वर्धयेद् वृद्ध्या वृद्धं पात्रेषु निक्षिपेत्॥

**அலப்தமிச்சேத் தண்டேந லப்தம் ரக்ஷேதவேக்ஷயா ॥**
**ரக்ஷிதம் வர்தயேத்வ்ருத்யா வ்ருத்தம் தாநேந நிக்ஷிபேத் ॥ 101**

தான் கைப்பற்ற வேண்டிய பொருட்களைப் போரின் மூலமாகவே கைப்பற்ற வேண்டும். கைப்பற்றியவற்றை ஜாக்கிரதையாகக் காப்பாற்ற வேண்டும். அவ்வாறு காப்பாற்றப் படுவதை வாணிபம் போன்றவற்றால் பெருக்க வேண்டும். அப்படிப் பெருக்கியதை தக்கவர்களுக்குத் தானம் செய்ய வேண்டும்.

नित्यमुद्यतदण्डः स्यान् नित्यं विवृतपौरुषः।
नित्यं संवृतसंवार्यो नित्यं छिद्रानुसार्यरेः॥

**நித்யமுத்யததண்ட: ஸ்யாத் நித்யம் விவ்ருத பௌருஷ: |**
**நித்யம் ஸம்வ்ருத ஸம்வார்யோ நித்யம் சித்ராநுஸார்யரே || 102**

அரசன், எப்போதும் தண்ட நீதியைச் செலுத்துபவனாக இருக்க வேண்டும். நால்வகைப் படைகளும் எப்போதும் தயார் நிலையில் இருக்க வேண்டும். எப்போதும் தன்னுடைய ரகசியங்கள் சிறிதும் வெளியே கசியாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். சத்ருக்களிடம் என்ன குறைபாடுகள் உள்ளன என்பதையும் - அதை உபயோகப் படுத்தி, தான் எப்படி அவர்களை வெல்லலாம் என்பது குறித்தும் யோசித்தபடி இருக்க வேண்டும்.

नित्यमुद्यतदण्डस्य कृत्स्नमुद्विजते जगत्।
तस्मात् सर्वाणि भूतानि दण्डेनैव प्रसाधयेत्॥

**நித்யமுத்யத தண்டஸ்ய க்ருத்ஸ்நமுத் விஜதே ஜகத் |**
**தஸ்மாத் ஸர்வாணி பூதாநி தண்டேநைவ ப்ரசாதயேத் || 103**

எப்போதும், தண்டனை வழங்குபவனிடம் சகலரும் பயப் படுவார்கள். எனவே, சகல உயிர்களையும் தண்ட நீதியைச் செலுத்துவதன் மூலமே தன் சுவாதீனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

अमाययैव वर्तेत न कथञ्चन मायया।
बुध्येतारिप्रयुक्तां च मायां नित्यं स्वसंवृतः॥

**அமாத்யைவ வர்தேத ந கதஞ்சந மாயயா |**
**புத்யே தாரி ப்ரயுக்தாம் ச மாயாம் நித்யம் ஸ்வஸம்வ்ருத: || 104**

அரசன், தன் மந்திரிகளிடம் எக்காலத்தும் வஞ்சகமாக நடக்கக் கூடாது. தன்னுடைய மனத்திலுள்ள கருத்தை வெளிப்படுத்தக் கூடாது. பிறரைக் குறித்த விஷயங்களை எப்போதும் ஒற்றர்கள் மூலம் அறிந்து கொள்ள வேண்டும்.

नास्य छिद्रं परो विद्याद् विद्याच् छिद्रं परस्य तु।
गूहेत् कूर्म इवाङ्गानि रक्षेद् विवरमात्मनः॥

**நாஸ்யச்சித்ரம் பரோ வித்யாத் வித்யாச்சித்ரம் பரஸ்யது |**
**கூஹேத் கூர்ம இவாங்காநி ரக்ஷேத்விவரமாத்மந: || 105**

தன் நாட்டில் உள்ள உள் விவகாரங்களை, படைகளில் உள்ள தற்காலிக பலவீனங்களை எதிரிகள் அறியாவண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். ஆமை தன் உடலுறுப்புகளை எவ்வாறு மற்றவர் அறியா வண்ணம் மறைத்துக் கொள்கிறதோ, அவ்வாறு எதிரிகள்

அறியாவண்ணம் தன் ராஜாங்க ரகசியங்களைப் பாதுகாக்க வேண்டும். அதே தருணத்தில் எதிரிகளின் ராஜாங்க விஷயங்களை, ரகசியங்களை தான் அறிந்து கொள்ள வேண்டும்.

बकवच् चिन्तयेदर्थान् सिंहवच् च पराक्रमेत्।
वृकवच् चाऽवलुम्पेत शशवच् च विनिष्पतेत्॥

**பகவத் சிந்தயேதர்த்தாந் சிம்ஹவச்ச பராக்ரமேத் |**
**வ்ருகவச்சா அவலும்பேத ஷஷவச்ச விநிஷ்பதேத் ||** **106**

தண்ணீரில் ஓடும் மீன்களில் நல்ல மீன் கிடைக்கும் வரை, ஓடும் மீன்களையே பார்த்துக் கொண்டு, சிந்தனையை வேறு எங்கும் செலுத்தாமல் காத்திருக்கும் கொக்கு. பெரிய மீன் கிடைத்ததும் சட்டென்று பிடித்துத் தன் உணவாக்கிக் கொள்ளும். அவ்வாறு எதிரிகள் நாட்டை வெல்வதையே குறிக்கோளாகக் கொண்டு தக்க தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டும். தருணம் கிடைத்ததும் உடனே செயல்பட்டு வெல்ல வேண்டும்.

மிகவும் பலம் வாய்ந்த மிருகம் யானை. உருவத்திலும் பெரியது. அதன் தந்தங்களும் வலிமை வாய்ந்தவை. சிங்கம் யானையைவிட பலத்தில் குறைந்தது, உருவத்தில் சிறியது. அவ்வளவு நீண்ட தந்தங்களும் கிடையாது. ஆனால் தருணம் பார்த்துப் பாய்ந்து யானையைப் பிடித்திழுத்துக் கொல்லும். அவ்வாறு எதிரி மிக்க பலவானாக இருந்தாலும் சிங்கத்தின் பாய்ச்சலைப் போன்று தாக்குதலை நடத்தி அவனை வெல்ல வேண்டும்.

பசு மேய்ப்பவன் மிக்க ஜாக்கிரதையோடுதான் பசுக்களைக் காத்துக் கொண்டிருப்பான். ஆனாலும், அவன் ஏமாந்த தருணம் பார்த்து, செந்நாய் பாய்ந்து பசுவைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் தன் உணவாக்கிக் கொள்ளும். அவ்வாறு எதிரியைக் கண்காணித்துக் கொண்டேயிருக்க வேண்டும். எதிரி அரசன் கோட்டைக்குள் பாதுகாப்பாக இருந்தாலும்கூட அவன் ஏமாந்த தருணம் பார்த்து அவனை வெல்ல வேண்டும்.

வேட்டைக்காரனிடம் அகப்பட்ட முயல், தருணம் பார்த்து அவனை ஏமாற்றிவிட்டு சட்டென்று மேலே பாய்ந்து விடுவதைப் போன்று, எதிரியிடம் அகப்பட நேர்ந்தாலும் தருணம் பார்த்துத் தப்பித்துவிட வேண்டும். பிறகு மறைந்திருந்து, தன் பலத்தை, மற்ற அரசர்களின் உதவியோடு பெருக்கிக் கொண்ட பிறகு வெளிப்பட்டு, இழந்த அரசை மீட்க வேண்டும்.

இவ்வாறு அரசன், கொக்கைப் போன்று காத்திருந்தும், சிங்கத்தைப் போன்று தன்னைவிடப் பலமான எதிரியைக்கூடத்

தாக்குவதைப் போன்றும், எதிரி எவ்வளவு ஜாக்ரதையானவனாக இருந்தாலும் காத்துக் கொண்டேயிருந்து அவன் ஏமாறும் தருணத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். வேடுவனிடம் அகப்பட்ட முயல் அவன் கை சற்று தளர்ந்த நேரம் பார்த்து தப்பி விடுவதைப் போன்று, தான் தப்பித்து, பிறகு தன் பலத்தைப் பெருக்கிக் கொண்டு நட்பு நாடுகளை இணைத்துக் கொண்டு எதிரி அரசனை வெல்ல வேண்டும்.

**एवं विजयमानस्य येऽस्य स्युः परिपन्थिनः ।**
**तानानयेद् वशं सर्वान् सामादिभिरुपक्रमैः ॥**

**ஏவம் விஜயமாநஸ்ய யே அஸ்யஸ்யு: பரிபந்திந: ।**
**தாநாநயேத் வஷம் சர்வாந் சாமாதிபிருபக்ரமை: ॥ 107**

இவ்வாறாக தன் வெற்றிக்காகப் பாடுபடும் அரசன், எதிரி அரசர்களை சாமம், தானம், பேதம், தண்டம் என்னும் நான்கு வகை உபாயங்களால் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

எல்லா அரசர்களையும், படையெடுத்துச் சென்று போரிட்டு அடக்கித் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும்; அதாவது தனக்குக் கப்பம் கட்டுபவனாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைக்கக் கூடாது. படையெடுப்பது என்பது தண்டம் என்னும் உபாயம். இது எதிரி அரசனை வெல்லும் உபாயம்தான். என்றாலும், இதற்கு முன்பு குறிப்பிட்டுள்ள மூன்று உபாயங்களையும் முயற்சித்து, இறுதியாகவே தண்டம் என்னும் உபாயத்தைக் கையாள வேண்டும். அதாவது, படை நடத்திச் சென்று போரிட்டு வெல்ல வேண்டும்.

முதலில் சமாதானமாக அடைய முயல வேண்டும். அடுத்து அவன் அதிகாரிகளுக்கோ, தேவையான இடத்திலே லஞ்சம் கொடுத்தோ, தந்திரமாகவோ எதிரி அரசனைப் பணிய வைக்க வேண்டும். இதற்குத் தான உபாயம் என்று பெயர். அடுத்து எதிரி அரசனின் உள்நாட்டிலேயே கலகங்களை ஏற்படுத்தியோ, அவன் குடும்பத்தார்களிடம் கலகங்களை ஏற்படுத்தியோ, தந்திரமாக எதிரி அரசனைப் பணிய வைக்க வேண்டும். இதற்குப் பேத உபாயம் என்று பெயர்.

இந்த மூன்று உபாயங்களும் பயனளிக்காது போனால் இறுதியாக படைகளால் தாக்கி வெல்ல வேண்டும். அதாவது, தண்டோபாயத்தை பயன்படுத்த வேண்டும்.

**यदि ते तु न तिष्ठेयुरुपायैः प्रथमैस् त्रिभिः ।**
**दण्डेनैव प्रसह्यैतांश् शनकैर् वशमानयेत् ॥**

**யதி தே து ந திஷ்டேயுருபாயை: ப்ரதமைஸ் த்ரிபி: ।**
**தண்டேநைவ ப்ரஸஹ்யைதாம்ஷ் சநகைர் வஷமாநயேத் ॥ 108**

முதலில் கூறப்பட்ட மூன்று உபாயங்களுக்கும் வசப்படாத எதிரி அரசர்களைத் தன் பலத்தைப் பிரயோகித்து போர் புரிந்து அவர்களை வென்று அந்த நாடுகளைத் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

**सामादीनामुपायानां चतुर्णामपि पण्डिताः।**
**सामदण्डौ प्रशंसन्ति नित्यं राष्ट्राऽभिवृद्धये॥**

**ஸாமாதீநாமுபாயாநாம் சதுர்ணாமபி பண்டிதா: |**
**ஸாமதண்டௌ ப்ரஷம்ஸந்தி நித்யம் ராஷ்ட்ரா அபிவ்ருத்தயே || 109**

சாம, தான, பேத, தண்டம் என்னும் நான்கு உபாயங்களில் சாம உபாயத்தால், அதாவது சமாதானத்தால் எதிரியை வசப்படுத்து வதையும், போரிட்டு வென்று நாட்டைத் தன்னுடையதாக்கிக் கொள்வதையும் பண்டிதர்கள் நல்ல உபாயங்கள் என்று போற்றுகிறார்கள். இவ்விரண்டும் ராஜ்ஜியத்தின் அபிவிருத்திக்குச் சிறந்தது என்பது அவர்கள் கருத்து.

**यथोद्धरति निर्दाता कक्षं धान्यं च रक्षति।**
**तथा रक्षेन् नृपो राष्ट्रं हन्याच् च परिपन्थिनः॥**

**யதோத்தரதி நிர்தாதா கக்ஷம் தான்யம் ச ரக்ஷதி |**
**ததா ரக்ஷேந் ந்ருபோ ராஷ்ட்ரம் ஹந்யாச்ச பரிபந்திந: || 110**

வயலில் பயிரோடு வேண்டாத புல் வகைகளும் வளர்ந்து மண்டியிருக்கும். விவசாயி பயிரை மட்டும் வைத்துக்கொண்டு, வேண்டாத மற்ற புல் செடிகளை பிடுங்கி எறிவான். அப்படிச் செய்தால் மட்டுமே பயிர்கள் செழித்து வளர்ந்து நல்ல பலனைத் தரும். அவ்வாறே அரசன் தன் நாட்டில் கொடியவர்கள் தலையெடுத்தால், அவர்களைக் கொன்று நல்லவர்களான மக்களைக் காப்பாற்ற வேண்டும்.

**मोहाद् राजा स्वराष्ट्रं यः कर्षयत्यनवेक्षया।**
**सोऽचिराद् भ्रश्यते राज्याज् जीविताच्च सबान्धवः॥**

**மோஹாத் ராஜா ஸ்வராஷ்ட்ரம் ய: கர்ஷயத்யநவேக்ஷயா |**
**ஸோ அசிராத் ப்ரஷ்யதே ராஜ்யாஜ்ஜீவிதாச்ச ஸபாந்தவ: || 111**

மோகமென்னும் அறியாமையால் தன் ராஜ்ஜியத்து மக்களை, நல்லோர் தீயோர் இவர் இவரென்று பிரித்துப் பாராமல், அனை வரையும் பீடிப்பவன் அதாவது தண்டிப்பவன், தன் நாட்டை இழந்து, தன் மனைவி மக்களோடு அழிவான்.

शरीरकर्षणात् प्राणाः क्षीयन्ते प्राणिनां यथा।
तथा राज्ञामपि प्राणाः क्षीयन्ते राष्ट्रकर्षणात्॥

**ஷரீரகர்ஷணாத் ப்ராணா: க்ஷீயந்தே ப்ராணிநாம் யதா |**
**ததா ராக்ஞாமபி ப்ராணா: க்ஷீயந்தே ராஷ்ட்ர கர்ஷணாத் ||** 112

*உடலைத் தக்க உணவு, மருந்துகளைக் கொண்டு பேணாமல் போனால் உடல் மெலிந்து சக்தியற்று உயிர் போகும் நிலை வரும். அரசன், தன் மக்களுக்குத் தேவையான உணவுப் பொருட்கள், பிற தேவைகள் கிடைக்கச் செய்ய வேண்டும். திருடர்களாலும், விலங்குகளாலும் துன்பம் நேராமல் காத்தல் வேண்டும். அவ்வாறு அவர்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து நன்கு பாதுகாக்காவிட்டால் அரசன் தன் ராஜ்ஜியத்தை இழக்கும் நிலை வரும்.*

राष्ट्रस्य सङ्ग्रहे नित्यं विधानमिदमाचरेत्।
सुसङ्गृहीतराष्ट्रो हि पार्थिवः सुखमेधते॥

**ராஷ்ட்ரஸ்ய ஸங்க்ரஹே நித்யம் விதாநமிதமாசரேத் |**
**அசங்க்ருஹீத ராஷ்ட்ரோ ஹி பார்திவ: சுகமேததே ||** 113

*தன் ராஜ்ஜியத்தை நன்கு காப்பாற்றுவதற்காக அரசன் சில வழிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்படிக் கடைப் பிடிக்கும் அரசன் சுகமாக விருத்தியடைவான்.*

द्वयोस् त्रयाणां पञ्चानां मध्ये गुल्ममधिष्ठितम्।
तथा ग्रामशतानां च कुर्याद् राष्ट्रस्य सङ्ग्रहम्॥

**த்வயோஸ் த்ரயாணாம் பஞ்சாநாம் மத்யே குல்ம மதிஷ்டிதம் |**
**ததா க்ராமஷதாநாம் ச குர்யாத் ராஷ்ட்ரஸ்ய ஸங்க்ரஹம் ||** 114

*இரண்டு ஊர்களுக்கு ஒரு நிர்வாகத் தலைமையிடமோ அல்லது மூன்று ஊர்களுக்கு ஒரு தலைமையிடமோ அல்லது ஐந்து ஊர்களுக்கு நடுவில் ஒரு தலைமையிடமோ ஏற்படுத்தி உண்மையும் நேர்மையும் கொண்ட அதிகாரிகளை அங்கு நியமிக்க வேண்டும். சிறு கிராமங்களாக இருந்தால், ஐந்து கிராமங்களுக்கு ஒரு நிர்வாகத் தலைமையிடம் இருக்கலாம். சற்றுப் பெரியதாக இருந்தால், மூன்று ஊர்களுக்கு ஒரு நிர்வாகத் தலைமையிடம் இருக்க வேண்டும். அதைவிடப் பெரியதாக இருந்தால், இரண்டு ஊர்களுக்கு ஒரு தலைமையிடம் இருக்க வேண்டும்.*

*இவ்வாறு செய்வதோடு, இந்த நிர்வாக அதிகாரிகளைக் கண்காணிக்கவும், விசாரணை செய்யவும் நூறு கிராமங்களுக்கு ஒரு தலைமையிடமும் அங்கு விசாரணை அதிகாரியும் இருக்க வேண்டும். இவ்வாறு நூறு, நூறு ஊர்களுக்கு ஒரு விசாரணை அதிகாரியை ராஜ்ஜியம் முழுமைக்கும் நியமிக்க வேண்டும்.*

ग्रामस्याऽधिपतिं कुर्याद् दशग्रामपतिं तथा।
विंशतीशं शतेशं च सहस्रपतिमेव च॥

**க்ராமஸ்யா அதிபதிம் குர்யாத் தஷக்ராம பதிம் ததா |**
**விம்ஷதீஷம் ஷதேஷம் ச ஸஹஸ்ரபதிமேவ ச ||** **115**

ஒரு கிராமத்துக்கு ஒரு அதிகாரியை நியமிக்க வேண்டும். பத்து கிராமங்களுக்கு பத்து அதிகாரிகள் இருப்பார்கள். இந்தப் பத்து அதிகாரிகளுக்கு ஒரு மேலதிகாரியை நியமிக்க வேண்டும். சிறிய கிராமங்களானால் இருபது கிராமாதிகாரிகளுக்கு ஒரு மேலதிகாரியை நியமிக்க வேண்டும். பிறகு ஆயிரம் கிராமங்களுக்கு ஒரு மேலதிகாரியை நியமிக்க வேண்டும். இவ்வாறாக அதிகாரிகளைக் கண்காணிக்க மேலதிகாரிகளை நியமிக்க வேண்டும்.

ग्रामदोषान् समुत्पन्नान् ग्रामिकः शनकैः स्वयम्।
शंसेद् ग्रामदशेशाय दशेशो विंशतीशिने॥

**க்ராமதோஷாந் ஸமுத்பந்நாந் க்ராமிக: ஷநகை: ஸ்வயம் |**
**ஷம்ஸேத் க்ராமதஷேஷாய தஷேஷோ விம்ஷதீஷிநே ||** **116**

கிராமாதிகாரி தன் கிராமத்தில் நடக்கும் சிறு சிறு குற்றங்களைத் தானே விசாரித்துத் தீர்ப்பு வழங்க வேண்டும். தன் கிராமத்தைக் கடந்து உபாதை அளிக்கக்கூடிய குற்றவாளிகளைத் தன் கிராமத்தையும் சேர்த்து பத்து கிராமங்களுக்கு அதிகாரியாக இருப்பவரிடம் கொண்டு செல்ல வேண்டும்.

विंशतीशस् तु तत् सर्वं शतेशाय निवेदयेत्।
शंसेद् ग्रामशतेशस् तु सहस्रपतये स्वयम्॥

**விம்ஷதீஷஸ்து தத்ஸா்வம் ஷதேஷாய நிவேதயேத் |**
**ஷம்ஸேத் க்ராமஷதேஷஸ்து சஹஸ்ரபதயே ஸ்வயம் ||** **117**

தேசத்துக்கு ஊறு விளைவிக்கக்கூடியவன், எதிரி நாட்டவன் என்னும் பெரிய குற்றவாளிகளை, குற்றவாளிகளின் தன்மையைப் பொறுத்து இருபது, நூறு, ஆயிரம் கிராமங்களுக்குப் பொறுப்பான கிராம அதிகாரியிடம் தெரிவிக்க வேண்டும்.

यानि राजप्रदेयानि प्रत्यहं ग्रामवासिभिः।
अन्नपानेन्धनादीनि ग्रामिकस् तान्यवाप्नुयात्॥

**யாநி ராஜப்ரதேயாநி ப்ரத்யஹம் க்ராமவாஸிபி: |**
**அன்னபாநேந்தநாதீநி க்ராமிகஸ் தாந்யவாப்னுயாத் ||** **118**

கிராம மக்கள் அரசனுக்கு வழங்க வேண்டிய வரியிலிருந்து தன்னுடைய அன்னபானங்களுக்குத் தேவையான அரிசி, பருப்பு,

*விறகு முதலானவைகளை கிராமவாசிகளிடமிருந்து கிராமாதிகாரி பெற வேண்டும்.*

**दशी कुलं तु भुञ्जीत विंशी पञ्च कुलानि च।**
**ग्रामं ग्रामशताऽध्यक्षः सहस्राऽधिपतिः पुरम्॥**

**தஷீகுலம்து புஞ்ஜீத விம்ஷீ பஞ்ச குலாநி ச |**
**க்ராமம் க்ராமஷதா அத்யக்ஷ: சஹஸ்ரா அதிபதி: பூரம் ||** 119

*பத்து கிராமாதிகாரிகள், பன்னிரண்டு எருதுகள் ஒரே நாளில் உழக்கூடிய நிலம் எவ்வளவோ, அவ்வளவு நிலத்தை தன் ஜீவனத்துக்காக அனுபவிக்க வேண்டும்.*

*அந்த நிலத்தில் தேவையானதைப் பயிரிட்டு அனுபவிக்கலாம். அல்லது பயிரிட்டதை விற்றுக் கிடைக்கும் பொருளையும் எடுத்துக் கொள்ளலாம். அந்த நிலத்தின் அனுபவ பாத்தியதை பத்து கிராமங் களின் அதிகாரிக்கு உண்டு.*

*இருபது கிராமங்களின் அதிகாரி, ஒரு கிராமாதிகாரி அனுபவிக்கும் நிலத்தைப் போன்று ஐந்து மடங்கு நிலத்தை அனுபவிக்க பாத்தியதை உண்டு.*

*நூறு கிராமங்களின் அதிகாரி, ஒரு கிராமத்தின் வருவாயை அனுபவிக்கலாம்.*

*ஆயிரம் கிராமங்களின் அதிகாரி, ஒரு பட்டணத்தின் வருவாயை அனுபவிக்கலாம்.*

*அந்த அதிகாரத்தில் இருக்கும் வரை மட்டுமே இந்த அனுபவ பாத்தியதை உண்டு.*

*அனுபவ பாத்தியதை என்றால் அனுபவிக்கும் உரிமை என்று பொருள். அனுபவிக்க மட்டுமே உரிமை உண்டு. மற்றபடி அது அவன் சொத்தாகாது.*

**तेषां ग्राम्याणि कार्याणि पृथक्कार्याणि चैव हि।**
**राज्ञोऽन्यः सचिवः स्निग्धस् तानि पश्येदतन्द्रितः॥**

**தேஷாம் க்ராம்யாணி கார்யாணி ப்ருதக் கார்யாணிசைவஹி |**
**ராக்ஞோ அந்ய: ஸசிவ: ஸ்நிக்தஸ் தாநி பஷ்யேததந்த்ரித: ||** 120

*கிராமாதிகாரி முதல் படிப்படியான மேலதிகாரிகள் வரை தங்களிடம் வந்த வழக்குகளுக்குத் தெரிவித்த தீர்ப்புகள் முறைகேடானவை என்று அரசனிடம் கிராம மக்கள் வந்து முறை யிட்டால், அரசன் தனக்கு நம்பிக்கையான மந்திரியைக் கொண்டு தக்கபடி உண்மைகளை விசாரித்தறிய வேண்டும்.*

नगरेनगरे चैकं कुर्यात् सर्वार्थचिन्तकम्।
उच्चैःस्थानं घोररूपं नक्षत्राणामिव ग्रहम्॥

**நகரே நகரே சைகம் குர்யாத் ஸர்வா அர்த்தசிந்தகம் |**
**உச்சை: ஸ்தானம் கோரரூபம் நக்ஷத்ராணாமிவ க்ரஹம் ||** 121

ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு தலைமைச் செயலகத்தை ஏற்படுத்த வேண்டும். அதில் குலத்தாலும் குணத்தாலும் நூல் அறிவாலும் சிறந்த ஒருவனை பிரதான தலைவனாக நியமிக்க வேண்டும். நட்சத்திரங்களுக்கு நடுவே பிரகாசிக்கும் சந்திரனைப் போல அவன் விளங்க வேண்டும்.

स ताननुपरिक्रामेत् सर्वानेव सदा स्वयम्।
तेषां वृत्तं परिणयेत् सम्यग् राष्ट्रेषु तच्चरैः॥

**ஸ தானனுபரிக்ராமேத் ஸர்வாநேவ ஸதா ஸ்வயம் |**
**தேஷாம் வ்ருத்தம் பரிணயேத் ஸம்யக் ராஷ்ட்ரேஷுதச்சரை: ||** 122

இந்தப் பிரதான தலைவன், ஒரே ஒரு கிராமத்துக்கு அதிகாரியாக இருப்பவன் முதல் அனைத்து அதிகாரிகளையும் ஒற்றர்களைக் கொண்டு கண்காணிக்க வேண்டும். எந்த அதிகாரியையும் வரவழைத்து விசாரிக்கும் அதிகாரம் இந்தப் பிரதான தலைவனுக்கு உண்டு. இந்தத் தலைவன் தன் அதிகார பலத்தைப் பயன்படுத்தி அனைத்தையும் அறிய வேண்டும்.

राज्ञो हि रक्षाऽधिकृताः परस्वाऽऽदायिनः शठाः।
भृत्या भवन्ति प्रायेण तेभ्यो रक्षेदिमाः प्रजाः॥

**ராக்ஞோ ஹி ரக்ஷா அதிக்ருதா: பரஸ்வா ஆதாயிந: ஷடா: |**
**ப்ருத்யா பவந்தி ப்ராயேண தேப்யோ ரக்ஷேதிமா: ப்ரஜா: ||** 123

அரசாங்க அதிகாரிகள் பெரும்பாலும் பிறர் சொத்தை அபகரிப்பவர்களாக இருப்பார்கள். அத்தகைய தீயவர்களிடமிருந்து மக்களை அரசன் காக்க வேண்டும். மக்களைத் தான் பெற்ற பிள்ளைகளைப் போன்று பார்த்துக் கொள்ள வேண்டும்.

ये कार्यिकेभ्योऽर्थमेव गृह्णीयुः पापचेतसः।
तेषां सर्वस्वमादाय राजा कुर्यात् प्रवासनम्॥

**யே கார்யிகேப்யோ அர்தமேவ க்ருஹ்ணீயு: பாபசேதஸ: |**
**தேஷாம் ஸர்வஸ்வமாதாய ராஜா குர்யாத் ப்ரவாஸநம் ||** 124

பாபத்துக்கு அஞ்சாத மனம் கொண்ட அரசாங்க அதிகாரிகள், தங்களிடம் ஒரு காரிய நிமித்தமாக வந்தவர்களிடம் லஞ்சம் பெற்றுக்கொண்டு அந்தக் காரியத்தை நிறைவேற்றித் தருவார்கள்.

லஞ்சம் தராதவர்களுடைய காரியம் நிறைவேற முடியாதபடி செய்வார்கள். இத்தகையவர்களைக் கண்டுபிடித்து அவர்களுடைய சொத்துகள் முழுவதையும் பறிமுதல் செய்து, அவர்களை நாட்டை விட்டே வெளியேற்ற வேண்டும்.

**राजा कर्मसु युक्तानां स्त्रीणां प्रेष्यजनस्य च।**
**प्रत्यहं कल्पयेद् वृत्तिं स्थानकर्मानुरूपतः॥**

**ராஜா கர்மசு யுக்தாநாம் ஸ்த்ரீணாம் ப்ரேஷ்யஜனஸ்ய ச |**
**ப்ரத்யஹம் கல்பயேத் வ்ருத்திம் ஸ்தானகர்மா அனுரூபத: || 125**

அரசன் தன்னிடம் நேரடியாக வேலை செய்யும் பணியாளர்களுக்கும், வேலைக்காரிகளுக்கும் அவர்களுடைய பணிகளின் தராதரத்தைப் பொறுத்து கூலி கொடுக்க வேண்டும்.

**पणो देयोऽवकृष्टस्य षडुत्कृष्टस्य वेतनम्।**
**षाण्मासिकस् तथाऽऽच्छादो धान्यद्रोणस् तु मासिकः॥**

**பணோ தேயோ அவக்ருஷ்டஸ்ய ஷடுத்க்ருஷ்டஸ்ய வேதநம் |**
**ஷாண்மாஸிகஸ் ததா ஆச்சாதோ தான்யத்ரோணஸ்து மாஸிக: || 126**

சாதாரண வேலைக்காரர்களுக்கு தினமும் ஒரு பணம் கூலியாகக் கொடுக்க வேண்டும். மேலான வேலை செய்பவர்களுக்கு ஆறு பணம் கொடுக்க வேண்டும். மேலும் சாதாரண வேலைக்காரர்களுக்கு ஆறு மாதத்துக்கொருமுறை ஒரு ஜதை ஆடைகளைத் தர வேண்டும்.

மேலான வேலை செய்து ஆறு பணம் கூலி வாங்குபவர்களுக்கு ஆறு மாதத்துக்கொருமுறை ஆறு ஜதை ஆடைகளைத் தர வேண்டும். மாதத்துக்கு தானியம் கொடுக்க வேண்டும்.

நடுத்தர வேலைக்காரனுக்கு தினமும் மூன்று பணம் கூலி தர வேண்டும். ஆறு மாதத்துக்கொருமுறை மூன்று ஜதை ஆடைகளைத் தர வேண்டும். மாதத்துக்கு தானியம் கொடுக்க வேண்டும்.

**क्रयविक्रयमध्वानं भक्तं च सपरिव्ययम्।**
**योगक्षेमं च सम्प्रेक्ष्य वणिजो दापयेत् करान्॥**

**க்ரய விக்ரயமத்வாநம் பக்தம் ச ஸபரிவ்யயம் |**
**யோகக்ஷேமம் ச சம்ப்ரேஷ்ய வணிஜோ தாபயேத்கராந் || 127**

வணிகன் தான் விற்கும் பொருளை எந்த விலைக்கு வாங்கியுள்ளான்? எந்த விலைக்கு விற்கிறான்? இடையில் அவனுக்கு என்னென்ன செலவுகள் உள்ளன? அனைத்து செலவுகளும் போக எவ்வளவு லாபம் அவனுக்குக் கிடைக்கும்? - என்னும் இத்தனை

*விஷயங்களையும் தெரிந்து கொண்டு அந்த வணிகனிடம் தக்க வரியை வசூலிக்க வேண்டும்.*

यथा फलेन युज्येत राजा कर्ता च कर्मणाम्।
तथाऽवेक्ष्य नृपो राष्ट्रे कल्पयेत् सततं करान्॥

**யதா பலேந யுஜ்யேத ராஜா கர்தா ச கர்மணாம் |**
**ததா அவேக்ஷ்ய ந்ருபோ ராஷ்ட்ரே கல்பயேத் ஸததம் கராந் || 128**

*தன்னுடைய கஜானாவுக்கும் பணம் வந்து சேர வேண்டும். உற்பத்தியாளர்களுக்கும் வியாபாரிகளுக்கும் லாபம் கிடைக்க வேண்டும். இவைகளை யோசித்து வரி விதிக்க வேண்டும்.*

यथाऽल्पाऽल्पमदन्त्याद्यं वार्योको-वत्स-षट्पदाः।
तथाऽल्पाऽल्पो ग्रहीतव्यो राष्ट्राद् राज्ञाऽऽब्दिकः करः॥

**யதா அல்பா அல்ப மதந்த் யாத்யம் வார்யோகோவத்ஸ ஷட்பதா: |**
**ததா அல்பா அல்போ க்ரஹீதவ்யோ ராஷ்ட்ராத் ராஞா ஆப்திக: கர: || 129**

*வானத்திலிருக்கும் மேகமானது சிறிது சிறிதாக சமுத்திரத்திலிருந்து தண்ணீரை உறிஞ்சி எடுத்துக் கொள்கிறது. அதனால் சமுத்திரத்துக்கு எந்தக் குறைவும் ஏற்படுவதில்லை.*

*கன்று தன் தாய் மடியிலிருந்து சிறிது சிறிதாகப் பாலை உறிஞ்சி சாப்பிடுகிறது. தாய்க்கு ஒரு வலியும் இல்லை. தேனீ மலரிலிருக்கும் தேனைச் சிறிது சிறிதாக உறிஞ்சி எடுத்துக் கொள்கிறது. மலருக்கு அதனால் சிறிதும் வாட்டம் இல்லை.*

*அவ்வாறே அரசன் மக்களிடமிருந்து சிறிது சிறிதாக வரியை வசூலிக்க வேண்டும். வரி செலுத்துபவர்கள் வாட்டமுறாமல் வரி வசூலித்து தன் கஜானாவை நிரப்ப வேண்டும்.*

पञ्चाशद्भाग आदेयो राज्ञा पशुहिरण्ययोः।
धान्यानामष्टमो भागः षष्ठो द्वादश एव वा॥

**பஞ்சாஷத்பாக ஆதேயோ ராக்ஞா பஷுஹிரண்யயோ: |**
**தான்யாநாமஷ்டமோ பாக: ஷஷ்டோ த்வாதஷ ஏவ வா || 130**

*பசுக்கள், தங்கம் இவைகளில் கிடைக்கும் லாபத்தில் பாதியை அரசன் வரியாக வசூலிக்க வேண்டும். தானியங்களில் ஆறில் ஒரு பங்கையோ, எட்டில் ஒரு பங்கையோ, பன்னிரண்டில் ஒரு பங்கையோ விளைச்சலின் போது வரியாக வசூலிக்க வேண்டும்.*

*சில உழு நிலங்களில் விளைச்சல் அதிகம் கிடைக்கும், சிரமம் குறைவாக இருக்கும். சில நிலங்களில் சிரமத்துக்கு ஏற்ற விளைச்சல் கிடைக்கும். சில நிலங்களில் அதிகம் பாடுபட்டு சிறிதே*

விளைச்சலைப் பெற முடியும். இந்த பேதங்களைக் கணக்கில் கொண்டு ஆறுக்கு ஒன்று, எட்டுக்கு ஒன்று, பன்னிரண்டுக்கு ஒன்று என்று தானியங்களை வரியாக வசூலிக்க வேண்டும்.

आददीताऽथ षड्भागं द्रु-मांस-मधु-सर्पिषाम्।
गन्धौषधिरसानां च पुष्प-मूल-फलस्य च॥

**ஆததீதா அத ஷட்பாகம் த்ருமாம்ஸ மது ஸர்பிஷாம் |**
**கந்தௌஷதி ரஸாநாம் ச புஷ்ப மூல பலஸ்ய ச || 131**

மரங்கள், மாமிசம், தேன், நெய், சந்தனம், அகில் முதலான சுகந்த திரவியங்கள், மூலிகை ரசங்கள், மலர்கள், வேர்கள், பழங்கள் முதலானவைகளில் ஆறில் ஒரு பாகத்தை வரியாகப் பெற வேண்டும்.

पत्र-शाक-तृणानां च चर्मणां वैदलस्य च।
मृन्मयानां च भाण्डानां सर्वस्याऽश्ममयस्य च॥

**பத்ர ஷாக த்ருணாநாம் ச சர்மணாம் வைதலஸ்ய ச |**
**ம்ருந்மயாநாம் ச பாண்டாநாம் சர்வஸ்யா அஷ்ம மயஸ்யச || 132**

கீரைகள், காய்கறிகள், வைக்கோல், தோல்கள், மூங்கில், மண்பாத்திரங்கள் முதலானவைகளால் வரும் லாபத்திலும் ஆறில் ஒரு பாகத்தை வரியாகப் பெற வேண்டும்.

म्रियमाणोऽप्याददीत न राजा श्रोत्रियात् करम्।
न च क्षुधाऽस्य संसीदेच् छ्रोत्रियो विषये वसन्॥

**ம்ரியமாணோ அப்யாததீத ந ராஜா ஸ்ரோத்ரியாத் கரம் |**
**நச க்ஷுதாஅஸ்ய ஸம்சீதேச்ச்ரோத்ரியோ விஷயே வஸந் || 133**

வேதமோதுவதிலேயே ஈடுபட்டுள்ளவனிடம் அரசன் வரி வசூலிக்கக்கூடாது. அரசன் தன் நாட்டிலுள்ள வேதமோதுபவர்கள் பட்டினியிருக்கா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

यस्य राज्ञस् तु विषये श्रोत्रियः सीदति क्षुधा।
तस्याऽपि तत् क्षुधा राष्ट्रमचिरेणैव सीदति॥

**யஸ்ய ராக்ஞஸ்து விஷயே ஸ்ரோத்ரிய: சீததி க்ஷுதா |**
**தஸ்யா அபி தத் க்ஷுதா ராஷ்ட்ரமசிரேணைவ சீததி || 134**

எந்த நாட்டில் வேதமோதுவோன் பசியால் வாடுகிறானோ, அந்த நாட்டில் பஞ்சம் தலைவிரித்தாடும். எல்லா மக்களும் பசியால் வாடுவார்கள்.

श्रुतवृत्ते विदित्वाऽस्य वृत्तिं धर्म्यां प्रकल्पयेत्।
संरक्षेत् सर्वतश् चैनं पिता पुत्रमिवौरसम्॥

**ஷ்ருதவ்ருத்தே விதிவத்வா அஸ்ய வ்ருத்திம் தர்ம்யாம் ப்ரகல்பயேத் |**
**ஸம்ரக்ஷேத் ஸர்வதஷ் சைநம் பிதா புத்ரமிவௌரஸம் || 135**

வேதமோதுபவன் செய்யத்தக்க ஜீவனத்துக்கான வேலை என்ன என்று பார்த்து, தர்மமான தொழிலை அவனுக்கு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். தந்தை மகனைக் காப்பாற்றுவது போல் எந்த வகையிலும் அவனைக் காப்பாற்ற வேண்டும்.

**संरक्ष्यमाणो राज्ञा यं कुरुते धर्ममन्वहम्।**
**तेनाऽऽयुर् वर्धते राज्ञो द्रविणं राष्ट्रमेव च॥**

**ஸம்ரக்ஷமாணோ ராக்ஞா யம் குருதே தர்மமந்வஹம் |**
**தேநா ஆயுர்வர்ததே ராக்ஞோ த்ரவிணம் ராஷ்ட்ரமேவ ச ||** **136**

அரசனால் நன்கு ரட்சிக்கப்படும் வேதமோதுபவன் தன்னுடைய ஸ்வதர்மங்களை, அதாவது தர்ம சாஸ்திரத்தில் தான் கடைப்பிடிக்க வேண்டியதாகக் கூறப்பட்டுள்ள தர்மங்களை நன்கு கடைப்பிடிப்பான். அதனால் அரசனுக்கு ஆயுளும், செல்வமும் கூடும். நாடும் மேன்மை யுறும்.

பிராம்மணன் வேதமோதுதல் மற்றும் அவன் செய்யும் பூஜைகள், கிரியைகள் அனைத்தும் அவனுக்கு மட்டும் நன்மை பயப்பதன்று. பிரதானமாக நாட்டு மக்களும் செழிப்புற்றிருப்பார்கள். நாட்டில் தீய சக்திகளால் (பேய், பிசாசுகளால்) தொல்லையிருக்காது. தேவேந்திரன் முதலான அனைத்துத் தேவர்களும் மகிழ்ச்சியடைவார்கள். தேவை யான அளவு மழை பொழிந்து பயிர்கள் செழித்து வளரும். அளவுக் கதிகமான மழை பொழிந்து வெள்ளத்தால் பயிர்கள், பசுக்கள் முதலானவை அழியாது. மிகக் குறைந்த மழை பெய்து விளைச்சலும் குறையாது.

அகால மரணங்கள் ஏற்படாது. பகைவர்கள் ஒடுங்குவார்கள். நாடும், அரசனும் செல்வச் செழிப்போடு இன்பமாக இருப்பார்கள். மக்கள் மனத்தில் தர்ம சிந்தனை ஓங்கியிருக்கும். திருட்டு, கொலை முதலானவை இருக்காது. அரசனும், மக்களும் தீர்க்காயுளோடும் நல்ல ஆரோக்யத்தோடும், செல்வ சுகங்களோடும் தெய்வ அனுக்ரஹம் பெற்று வாழ வேண்டுமென்றால் பிராம்மணன் நிம்மதியாக பூஜை, ஹோமம், வேதமோதுதல் முதலியவைகளைச் செய்ய வேண்டும்.

எனவே, பிராம்மணன் தன் குடும்ப ஜீவனத்துக்காக தொழில் செய்ய வேண்டியிருப்பதை அரசன் தவிர்க்க வேண்டும். ஏனெனில், ஹோமம், பூஜை, வேதமோதுதல் இவைகளை முறையாகச் செய்தால், நாள் முழுவதும் அதற்கே செலவாகும். இதில் சம்பாதிக்க வேண்டி, அதற்காகச் செலவு செய்ய ஏது நேரம்? சம்பாதிப்பதற்காக நேரத்தைச் செலவிட்டால் தான் செய்ய வேண்டியதைச் செய்ய நேரம் கண்டிப்பாக இருக்காது.

இதையெல்லாம் யோசித்துப் பார்த்து, அரசன் அவனைக் காப்பாற்ற வேண்டும். அவன் தேவைகளுக்குத் தக்க செல்வத்தைக் குறைவின்றி அவன் அடைய தானே ஆவன செய்ய வேண்டும்.

यत्किञ्चिदपि वर्षस्य दापयेत् करसंज्ञितम्।
व्यवहारेण जीवन्तं राजा राष्ट्रे पृथग्जनम्॥

**யத்கிஞ்சிதபி வர்ஷஸ்ய தாபயேத் கரசம்ந்திதம் |**
**வ்யவஹாரேண ஜீவந்தம் ராஜா ராஷ்ட்ரே ப்ருதக்ஜனம் ||** **137**

காய்கறிகளையும் கீரைகளையும் சிறிதளவு நிலத்தில் பயிர் செய்து அதை தேவையானவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் அதற்குப் பதிலாகக் கொடுக்கும் அரிசி, பருப்பு முதலான பண்டங்களைப் பெற்று ஜீவனம் நடத்துபவனிடம் வருடத்துக்கு ஒரு முறை குறைந்த அளவு வரி வசூலிக்க வேண்டும்.

कारुकान् शिल्पिनश् चैव शूद्रांश् चाऽऽत्मोपजीविनः।
एकैकं कारयेत् कर्म मासि-मासि महीपतिः॥

**காருகாஞ்சில்பிநஷ்சைவ சூத்ராம்ஷ்சா ஆத்மோபஜீவிந: |**
**ஏகைகம் காரயேத் கர்ம மாஸி மாஸி மஹீபதி: ||** **138**

சிற்பிகள், மற்ற கலைஞர்கள், உடல் உழைப்பால் ஜீவனம் நடத்துபவர்கள் முதலானவர்களிடம் மாதத்துக்கு ஒரு நாள் வேலை வாங்க வேண்டும். இதுவே அரசன் அவர்களிடம் பெறும் வரியாகும்.

नोच्छिन्द्यादात्मनो मूलं परेषां चाऽतितृष्णया।
उच्छिन्दन् ह्यात्मनो मूलमात्मानं तांश् च पीडयेत्॥

**நோச்சிந்த்யாதாத்மாநோ மூலம் பரேஷாம் சாஅதித்ருஷ்ணயா |**
**உச்சிந்தன்ஹ்யாத்மநோ மூலமாத்மாநம் தாம்ஷ் ச பீடயேத் ||** **139**

மக்களிடம் கொண்ட அன்பால் வரி வாங்காமல் தன் பொக்கிஷத்தைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. தனக்கு அதிகம் பொருள் தேவைப்படுகிறது என்பதற்காக மக்களுக்கு அதிக வரி போட்டு அவர்களைப் பீடிக்கவும் கூடாது.

तीक्ष्णश् चैव मृदुश् च स्यात् कार्यं वीक्ष्य महीपतिः।
तीक्ष्णश् चैव मृदुश् चैव राजा भवति सम्मतः॥

**தீக்ஷ்ணஷ்சைவ ம்ருதுஷ் ச ஸ்யாத் கார்யம் வீக்ஷ்ய மஹீபதி: |**
**தீக்ஷ்ணஷ்சைவ ம்ருதுஷ்சைவ ராஜா பவதி ஸம்மத: ||** **140**

அரசன் மிகவும் மென்மையானவனாகவும் இருக்கக் கூடாது; மிகவும் கடினமானவனாகவும் இருக்கக் கூடாது. கருணை காட்ட

வேண்டிய இடத்தில் கருணை காட்ட வேண்டும். கடுந் தண்டனை வழங்க வேண்டிய கட்டத்தில் கடுந் தண்டனை வழங்கவே வேண்டும். கருணை உள்ளமும், கடின உள்ளமும் இரண்டுமே மன்னனுக்குரியவையே.

**अमात्यमुख्यं धर्मज्ञं प्राज्ञं दान्तं कुलोद्गतम्।**
**स्थापयेदासने तस्मिन् खिन्नः कार्येक्षणे नृणाम्॥**

**அமாத்யமுக்யம் தர்மக்ஞம் ப்ராக்ஞம் தாந்தம் குலோத்கதம் |**
**ஸ்தாபயேதாசநே தஸ்மிந் கிந்ந: கார்யேக்ஷணே ந்ருணாம் ||** 141

அரசன், தர்மங்களைப் பற்றி நன்கு அறிந்தவனும், சிறந்த அறிவாளியும், நற்குலத்தில் பிறந்தவனும், புலனடக்கம் மிக்கவனுமான மந்திரியை முக்கிய மந்திரியாக நியமிக்க வேண்டும். இந்த முக்கிய மந்திரியே எல்லாக் காரியங்களையும் கண்காணித்து தக்க நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

**एवं सर्वं विधायेदमितिकर्तव्यमात्मनः।**
**युक्तश् चैवाऽप्रमत्तश् च परिरक्षेदिमाः प्रजाः॥**

**ஏவம் ஸர்வம் விதாயேதமிதி கர்தவ்யமாத்மந: |**
**யுக்தஷ்சைவா அப்ரமத்தஷ்ச பரிரக்ஷேதிமா: ப்ரஜா: ||** 142

இவ்வாறு எல்லாக் காரியங்களுக்கும் நிர்வாக முறைகளை வகைப்படுத்தி, தக்க நிர்வாகிகளை ஏற்படுத்திக் குறைவின்றி அனைத்துக் காரியங்களும் நடைபெறச் செய்ய வேண்டும்.

தானும் எப்போதும் மிகுந்த விழிப்போடு இவையெல்லாம் முறையாக நடக்கின்றனவா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறாக மக்களை நன்கு ரட்சிக்க வேண்டும்.

**विक्रोशन्त्यो यस्य राष्ट्राद्ध्रियन्ते दस्युभिः प्रजाः।**
**सम्पश्यतः सभृत्यस्य मृतः स न तु जीवति॥**

**விக்ரோஷந்த்யோ யஸ்ய ராஷ்ட்ராத் த்ரியந்தே தஸ்யுபி: ப்ரஜா: |**
**ஸம்பஷ்யத: ஸப்ருத்யஸ்ய ம்ருத: ஸ ந து ஜீவதி ||** 143

கள்வர்கள் பாதிப்பால் அழுதபடி அரசனிடம் மக்கள் வந்து முறையிடும் வண்ணம் ஆளும் அரசன் உயிரோடிருந்தாலும் இறந்தவனுக்கே சமம். எனவே, அரசன் மந்திரிகளையும், அதிகாரிகளையும் கொண்டு மக்களை நன்கு காப்பாற்ற வேண்டும்.

**क्षत्रियस्य परो धर्मः प्रजानामेव पालनम्।**
**निर्दिष्टफलभोक्ता हि राजा धर्मेण युज्यते॥**

**க்ஷத்ரியஸ்ய பரோதர்ம: ப்ரஜாநாமேவ பாலனம் |**
**நிர்திஷ்டபலபோக்தா ஹி ராஜா தர்மேண யுஜ்யதே || 144**

அரசனுடைய மேலான தர்மம், அதாவது கடமை எதுவெனில், மக்களைக் காப்பாற்றுவதேயாகும். மக்களிடமிருந்து வரி பெற்று அரசாட்சி நடத்துவதும் அரசனுடைய தர்மமேயாகும்.

**उत्थाय पश्चिमे यामे कृतशौचः समाहितः।**
**हुताऽग्निर् ब्राह्मणांश्चाऽर्च्य प्रविशेत् स शुभां सभाम्॥**

**உத்தாய பஷ்சிமே யாமே க்ருதஷௌச: ஸமாஹித: |**
**ஹுதா அக்நிர் ப்ராஹ்மணாம்ஷ்சா ஆர்ச்ய ப்ரவிஷேத் ஸ சுபாம் சபாம் || 145**

இரவின் கடைசி ஜாமத்தில் எழுந்திருக்க வேண்டும். காலைக் கடன்களை முடித்து நீராடி சந்தியாவந்தனம் முதலான அனுஷ்டானங்களை (தினமும் கடைப்பிடிக்க வேண்டிய நியமங்களை) முடிக்க வேண்டும். மன ஒருமைப்பாட்டோடு ஹோமங்களைச் செய்ய வேண்டும். சிரேஷ்டர்களைப் பூஜித்து அவர்களது ஆசீர்வாதங் களைப் பெற வேண்டும். அதன் பிறகு காலை ஆஹாரத்தைச் சாப்பிட்டு சபா மண்டபத்துக்குச் செல்ல வேண்டும்.

**तत्र स्थितः प्रजाः सर्वाः प्रतिनन्द्य विसर्जयेत्।**
**विसृज्य च प्रजाः सर्वा मन्त्रयेत् सह मन्त्रिभिः॥**

**தத்ர ஸ்தத: ப்ரஜா: ஸர்வா: ப்ரதிநந்த்ய விஸர்ஜயேத் |**
**விஸ்ருஜ்ய ச ப்ரஜா: ஸர்வாமந்த்ரயேத் ஸஹ மந்த்ரிபி: || 146**

சபா மண்டபத்தில் அரச தரிசனத்துக்காக மக்கள் காத்திருப்பர். அவர்கள் மனங்குளிர நலம் விசாரித்து, குறைகள் ஏதும் சொல்ல வந்திருந்தால் அதைக் கேட்டறிந்து கொண்டு, சந்தோஷமாக அவர்கள் விடைபெற்றுச் சென்றபிறகு, மந்திரிகளோடு நாட்டு விஷயங்களைப் பற்றி ஆலோசனை நடத்த வேண்டும்.

**गिरिपृष्ठं समारुह्य प्रासादं वा रहोगतः।**
**अरण्ये निःशलाके वा मन्त्रयेदविभावितः॥**

**கிரிப்ருஷ்டம் ஸமாருஹ்ய ப்ராஸாதம் வா ரஹோகத: |**
**அரண்யே நிஷ்ஷளாகே வா மந்த்ரயேதவிபாவித: || 147**

முக்கிய விஷயங்களில் நம்பிக்கையான மந்திரிகள், படைத் தலைவர்களோடு ரகசிய ஆலோசனை நடத்த வேண்டி வரும்போது,

ஆலோசனை நடத்தும் இடம் பிறர் அறிய முடியாததாக, நுழைய முடியாததாக இருக்க வேண்டும். இந்த மாதிரி ரகசியங்களை வேறு யாருக்கும் தெரியாமல் பாதுகாக்க வேண்டும். எனவே, ஆலோசனை நடத்தும் இடத்தை காலத்துக்கும் சூழ்நிலைக்கும் தக்கபடி தேர்ந்தெடுக்க வேண்டும். எப்போதும் ஒரே இடத்தில் கூடி ஆலோசிக்காமல் வெவ்வேறு இடங்களில் ஆலோசிக்க வேண்டும். அந்த இடங்கள் மலை யுச்சியிலுள்ள இடமாக இருக்கலாம். மேன் மாடத்திலுள்ள ரகசியக் கூடமாக இருக்கலாம். ஆட்கள் நடமாட்ட மில்லாத ஆரண்யமாகவும் இருக்கலாம்.

**यस्य मन्त्र न जानन्ति समागम्य पृथग्जनाः।**
**स कृत्स्नां पृथिवीं भुङ्क्ते कोशहीनोऽपि पार्थिवः॥**

**யஸ்ய மந்த்ரம் ந ஜாநந்தி ஸமாகம்ய ப்ருதக்ஜநா: |**
**ஸ க்ருத்ஸ்நாம் ப்ருதிவீம் புங்க்தே கோஷஹீநோ அபி பார்திவ: || 148**

எந்த அரசன் செய்யும் மந்திராலோசனையை மற்றவர்கள் அறியமுடியாதோ, அந்த அரசனின் பொக்கிஷ அறையிலுள்ள பொக்கிஷங்கள் (செல்வங்கள்) குறைந்திருந்தாலும்கூட, உலக முழுவதையும் தன் ஒரு குடைக்கீழ் கொண்டு வர முடியும். உலகாளும் சக்ரவர்த்தியாக உலா வர முடியும்.

**जडमूकान्धबधिरांस् तैर्यग्योनान् वयोऽतिगान्।**
**स्त्री-म्लेच्छ-व्याधित-व्यङ्गान् मन्त्रकालेऽपसारयेत॥**

**ஜடமூகா அந்தபதிராஸ் தைர்யக்யோநாந் வயோ அதிகாந் |**
**ஸ்த்ரீ ம்லேச்ச வ்யாதித வ்யங்காந் மந்த்ரகாலே அபஸாரயேத் || 149**

மந்த புத்திக்காரர்கள், ஊமைகள், குருடர்கள், செவிடர்கள், கிழவர்கள், பெண்கள், மிலேச்சர்கள், வியாதியஸ்தர்கள், அங்க ஹீனர்கள் முதலானவர்கள் ஆலோசனை நடக்குமிடத்தில் இருக்கக் கூடாது. கிளிகளும் அங்கு இருக்கக் கூடாது.

அரண்மனையில் இப்போது குறிப்பிட்ட இத்தகையவர் களெல்லாம் வேலைக் கமர்த்தப்பட்டிருப்பார்கள். சிறுசிறு வேலைகளை இவர்கள் செய்வார்கள். விளக்குகளைத் துடைப்பது, தூபம் போடுவது, தரையைச் சுத்தம் செய்வது, தண்ணீர் கொணர்ந்து வைப்பது, தாம்பூல வட்டில் ஏந்துவது என்ற சிறு சிறு பணிகளை இத்தகையோர் செய்வார்கள். மந்திராலோசனை சமயத்தில் இத்தகையோரை நெருங்கவிடக் கூடாது.

குருடனாகவும், செவிடனாகவும், மந்தபுத்திக்காரனைப் போன்றும், ஊமையைப் போன்றும் நடிக்கும் எதிரி ஒற்றர்கள்

அரண்மனைக்குள் ஊடுருவி யாரையேனும் நம்ப வைத்து அல்லது லஞ்சம் கொடுத்து பணியைப் பெற்றிருக்கலாம். எதிரி நாட்டுப் பெண்கள் தங்கள் அழகாலும் கலை ஆற்றலாலும் அரசனுடைய அந்தப்புரம் வரை நெருங்க வாய்ப்புண்டு.

மேலே கூறப்பட்ட மற்றவர்களும் அப்படியேதான். அரசன் யாரையும் நம்பக்கூடாது. முக்கியமாக மந்திராலோசனை தருணத்தில் தனக்கு நம்பிக்கையான மந்திரிகளையும், பிரதானிகளையும் தவிர கிளிகள் போன்ற பறவைகள்கூட அங்கு இருக்கக்கூடாது. ஈ, காக்கை நுழைய முடியாத இடம் என்று பேச்சு வழக்கில் கூறுவார்களல்லவா, அந்தப்படிக்கு ஆலோசனைக் கூடம் மற்ற எதுவும் யாரும் நுழைய முடியாமலிருக்க வேண்டும்.

भिन्दन्त्यवमता मन्त्रं तैर्यग्योनास् तथैव च।
स्त्रियश् चैव विशेषेण तस्मात् तत्राऽऽदृतो भवेत्॥

**பிந்த்யந்த்யவமதா மந்த்ரம் தைர்யக்யோநாஸ் ததைவ ச |**
**ஸ்த்ரியஷ்சைவ விசேஷேண தஸ்மாத் தத்ரா ஆத்ருதோ பவேத் || 150**

மேலும், இத்தகையவர்கள், முக்கியமாகப் பெண்கள், எதிரி நாட்டு ஒற்றர்களாக இல்லாமல், தன்னுடைய நாட்டைச் சேர்ந்தவர்கள்தான், அங்கேயே பிறந்து அங்கேயே வளர்ந்த தன் பணியாட்களின் பிள்ளைகள்தான் என்று நன்கு அறிந்திருந்தாலும் கூட நம்பிவிடக் கூடாது. இத்தகையோர் சபல புத்தி படைத்த வர்களாக, எதிரிகளிடம் பணம் பெற்றுக்கொண்டு, தங்களுக்குத் தெரிந்த ரகசியங்களை வெளியிட வாய்ப்புண்டு. எனவே, கண்டிப்பாக இவர்களனைவரும் ஆலோசனைக் கூடத்திலிருந்து வெளியேற்றப்பட வேண்டும்.

मध्यन्दिनेऽर्धरात्रे वा विश्रान्तो विगतक्लमः।
चिन्तयेद् धर्मकामाऽर्थान् सार्धं तैरेक एव वा॥

**மத்யந்தினே அர்த்தராத்ரே வா விஷ்ராந்தோ விகதக்ளம: |**
**சிந்தயேத் தர்மகாமார்தாந் ஸார்தம் தைரேக ஏவ வா || 151**

நடுப்பகலிலோ, நடு இரவிலோ உடல் சோர்வில்லாது விச்ராந்தியாக அமர்ந்து தர்மம், அர்த்தம், காமங்களைப் பற்றி மந்திரிகளுடன் கூடி ஆலோசிக்க வேண்டும். அல்லது தனியாக ஆலோசிக்க வேண்டும்.

ஒரு அரசன் காலையிலிருந்து தன் அன்றாடக் காரியங்களையும், சபைக் காரியங்களையும் முடிக்க நடுப்பகல் ஆகிவிடும். பிறகு மதிய உணவை உண்டு முடித்து ஓய்வாகச் சற்று நேரம் அமர்ந்து, அன்று

அதுவரை தான் செயல்படுத்திய விஷயங்களைப் பற்றி மனத்தில் யோசிக்க வேண்டும். தர்மத்துக்கு ஏதும் விருத்தமாக அதாவது எதிர்மறையாக நடந்ததா, எந்த எந்த வேலைகளால் தன்னுடைய விருப்பங்கள் நிறைவேறும், எந்த எந்த வேலைகளால் பொக்கிஷம் பெருகும் என்பதைப் பற்றியெல்லாம் யோசிக்க வேண்டும். பசு, தான் சாப்பிட்ட புல்லை சாவதானமாக அமர்ந்து அசைபோடுவதைப் போன்று அதுவரை நடந்ததைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இனிமேல் நடத்த வேண்டியதையும் சிந்திக்க வேண்டும்.

முக்கிய தருணங்களில், அவசரம் வந்துற்ற காலங்களில் நடு இரவானாலும்கூட மந்திரி பிரதானியரை அழைத்து ஆலோசனை நடத்த வேண்டும்.

**परस्परविरुद्धानां तेषां च समुपार्जनम्।**
**कन्यानां सम्प्रदानं च कुमाराणां च रक्षणम्॥**

**பரஸ்பர விருத்தாநாம் தேஷாம் ச ஸமுபார்ஜநம் |**
**கன்யாநாம் ஸம்ப்ரதாநம் ச குமாராணாம் ச ரக்ஷணம் || 152**

அரசன், செல்வத்தைப் பெருக்கும் விஷயத்திலும், தன் விருப்பங்களை ஈடேற்றிக் கொள்ளும் விஷயத்திலும், தான் எடுக்கும் செயல்பாடுகள் தர்மத்துக்கு முரண்படாமல் இருக்கிறதா என்றும், தர்மத்துக்கு முரண்படாமல் அவற்றை நிறைவேற்றிக் கொள்வது எப்படி என்றும் யோசிக்க வேண்டும்.

தன்னுடைய பெண்ணை யாருக்கு மணமுடித்தால், அவளுக்கும், தனக்கும், தன் நாட்டுக்கும் நல்லது என்பதைப் பற்றி தீர்க்கமாக யோசிக்க வேண்டும். வெல்ல முடியாத பலம் வாய்ந்த எதிரியை, தன் மகளைக் கொடுத்து சம்பந்தியாக்கிக் கொண்டால், அந்த பலம் வாய்ந்த எதிரி அரசன் நண்பனாகி விடுவான். பகைவர்களோடு போர் புரிய வேண்டிய தருணத்தில் அவன் தன் படை பலத்தைக் கொடுத்து உதவுவான். இப்படி இரண்டு வகையில் நன்மை ஏற்படும். இவ்வாறாகப் பலப்பல வகையில் யோசித்து தன் பெண்ணின் திருமணத்தைப் பற்றி முடிவெடுக்க வேண்டும்.

தன் பிள்ளைகள் படிப்பு, போர்ப் பயிற்சி அனைத்தையும் சோம்பலின்றி கற்றுக் கொள்கிறார்களா என்பதையெல்லாம் அறிந்து கொள்ள வேண்டும். அவர்கள் போகுமிடங்களில் பகைவர்களால் துன்பம் வராதிருக்குமா, வந்தால் தங்களைக் காத்துக் கொள்வதில் அவர்கள் எந்த அளவுக்குத் திறன் பெற்றிருக்கிறார்கள் என்பதையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

दूतसम्प्रेषणं चैव कार्यशेषं तथैव च।
अन्तःपुरप्रचारं च प्रणिधीनां च चेष्टितम्॥

**தூதஸம்ப்ரேஷணம் சைவ கார்யசேஷம் ததைவ ச |**
**அந்த:புரப்ரசாரம் ச ப்ரணிதீநாம் ச சேஷ்டிதம் ||** **153**

அரசன், தூதர்களை அனுப்புதல் முதலான காரியங்களைக் கவனிக்க வேண்டும். தன் அந்தப்புரத்துப் பெண்களை மற்ற வேலைக்காரப் பெண்களைக் கொண்டு வேவு பார்க்க வேண்டும். வெளி தேசங்களில் வேவு பார்க்க தான் அனுப்பிய வேவுகாரர்கள் சரியாக வேவு பார்க்கிறார்களா என்பதை, பிற வேவுகாரர்களை அனுப்பி வேவு பார்க்க வேண்டும்.

அரசன், தூதர்கள் விஷயத்தில் தானே நேராக ஈடுபட வேண்டும். மந்திரிகளுக்கும், முக்கியமான பிரதானிகளுக்கும்கூடத் தெரியாத வண்ணம் வேவுகாரர்களைத் தனிப்பட அமர்த்தி அனைவரைப் பற்றியும் அறிய வேண்டும்.

அரண்மனையிலுள்ள பெண்கள், அரசனுடைய மனைவியராகவே இருந்தாலும்கூட நம்பக்கூடாது. அத்தனை பேரும் அரசனிடம் பக்தியோடும், விசுவாசத்தோடும், அன்போடும் இருப்பார்கள் என்று சொல்ல முடியாது. அதில் ஒருவரோ சிலரோ பிறந்த இடத்துப் பாசத்தால்கூட உடன்பிறந்த தம்பி போன்றோருக்காக, அவர்கள் ராஜ்ஜியத்தை அடைவதற்காக அரசனைக் கொல்லவும் துணியலாம். எனவே, அரசன் வேவுகாரப் பெண்களை அந்தப்புரத்தில் பணிப்பெண்களாக அமர்த்தி, தன் ராணிகளுடைய நடவடிக்கைகளை ரகசியமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

कृत्स्नं चाष्टविधं कर्म पञ्चवर्गं च तत्त्वतः।
अनुरागापरागौ च प्रचारं मण्डलस्य च॥

**க்ருத்ஸ்நம் சாஅஷ்டவிதம் கர்ம பஞ்சவர்கம் ச தத்வத: |**
**அநுராகா அபராகௌச ப்ரசாரம் மண்டலஸ்ய ச ||** **154**

1) ஒரு அரசனுடைய முதல் தேவை புலனடக்கம். காமம், கோபம் முதலியவைகளை அடக்கத் தெரிந்தவனாக இருக்க வேண்டும். இந்த இரண்டு பலவீனங்களால்தான் எதிரிகள் அவனை வீழ்த்தப் பார்ப்பார்கள்.

அரசனானவன், தன்னைச் சுற்றி எப்போதும் எதிரிகள் இருப்பார்கள் என்ற ஜாக்கிரதை உணர்வோடு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

2) குடிமக்களின் கருத்துகளை அறிதல். தன்னைச் சுற்றி யிருப்பவர்கள் கூறுவதையே நம்பிக் கொண்டிராமல், தானே அவ்வப்போது மாறுவேடமிட்டுச் சென்று மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை நேரடியாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

3) நாட்டில் பூஜைகளும், ஹோமங்களும் குறைவின்றி நடக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

4) கோட்டை கொத்தளங்கள் பழுதுபடாமல் உள்ளனவா, பாதுகாப்பு பலமாக உள்ளதா என்பதைத் தானே நேரடியாகச் சென்று கண்காணிக்க வேண்டும்.

5) தனக்குக் கீழுள்ள அரசர்களிடம் கப்பம் வசூலிக்க வேண்டும். கப்பம் கட்டாத அரசனைத் தண்டித்து தனக்குக் கீழ்ப்படிய வைக்க வேண்டும்.

6) குறித்த காலங்களில் தவறாமல் வரி வசூல் நடத்த வேண்டும். வரி செலுத்தாமல் ஏமாற்றுபவர்களைத் தண்டிக்க வேண்டும்.

7) நாட்டில் கொலை, கொள்ளை முதலான குற்றங்களைச் செய்யும் குற்றவாளிகள் தலையெடுக்கும் போதெல்லாம் அவர்களுக்குக் கடுந்தண்டனை அல்லது மரண தண்டனை கொடுத்து மக்கள் பாதுகாப்பைப் பலப்படுத்த வேண்டும்.

8) தன் பொக்கிஷம் குறையாமலிருக்கிறதா, அதைப் பெருக்கும் வழி என்ன என்று யோசிக்க வேண்டும்.

9) தன்னிடம் வந்த வழக்குகளை எச்சரிக்கையோடு விசாரித்து உரிய தீர்ப்பு வழங்க வேண்டும்.

10) தன் அரண்மனையிலும், தன் நாட்டிலும், அண்டை நாடு களிலும், தூரத்து நாடுகளிலும் நடக்கும் விஷயங்கள் அனைத்தையும் ஒற்றர்கள் மூலமாக நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

11) மந்திராலோசனைக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். எந்தத் தீர்மானத்தையும் எடுப்பதற்கு முன்பு மந்திரிகளிடம் கலந்து பேசி அவர்களது அபிப்ராயங்களை அறிந்து கொள்ள வேண்டும். அவர்களின் கருத்துகளை சீர்தூக்கிப் பார்த்து அரசன் தன்னுடைய முடிவை எடுக்க வேண்டும்.

12) தன் படை பலத்தை எப்போதும் பெருக்குவதில் கருத்து வைக்க வேண்டும். எப்போது போர் என்றாலும் உடனே உற்சாகமாகக் கிளம்பும் நிலையில் படைவீரர்கள் இருக்க வேண்டும்.

13) தண்ட நீதியை நன்கு செலுத்த வேண்டும். இதில் தனக்கு வேண்டியவர், வேண்டாதவர் என்ற பாரபட்சம் கூடாது.

எட்டும் ஐந்துமான இந்தப் பதின்மூன்றும் மன்னன் பின்பற்ற வேண்டியவையாகும். வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்பதைக் கொண்டும் அன்பு காட்டுதல், வெறுத்தல் இரண்டுமே கூடாது. பாரபட்சமின்றி மனைவி மக்களிடமும் நடந்து கொள்ள வேண்டும்.

**मध्यमस्य प्रचारं च विजिगीषोश् च चेष्टितम् ।**
**उदासीनप्रचारं च शत्रोश् चैव प्रयत्नतः ॥**

**மத்யமஸ்ய ப்ரசாரம் ச விஜிகீஷேஸ்ச சேஷ்டிதம் |**
**உதாசீந ப்ரசாரம் ச ஷத்ரோஷ் சைவ ப்ரயத்நத: || 155**

வெற்றியை விரும்பும் அரசன், தன் நாட்டுக்கும் எதிரி நாட்டுக்கும் இடையிலுள்ள அரசன் எதிரியோடு சமாதானமாக இருப்பவனாக இருந்தாலும் அவனைத் தன்னுடைய துணைவனாக்கிக் கொள்ள வேண்டும். அவன் எதிரியோடு சமாதானமாக இல்லாதவன் என்றால் இவனை அடக்கியபிறகு இவனைத் தாண்டிச் சென்று எதிரியையும் அடக்க வேண்டும். இவ்வாறு தக்கபடி யோசித்து முயற்சியோடு எதிரியை வெல்ல வேண்டும்.

**एताः प्रकृतयो मूलं मण्डलस्य समासतः ।**
**अष्टौ चाऽन्याः समाख्याता द्वादशैव तु ताः स्मृताः ॥**

**ஏதா: ப்ரக்ருதயோ மூலம் மண்டலஸ்ய ஸமாஸத: |**
**அஷ்டௌசா அந்யா: ஸமாக்யாதா த்வாதஷைவ து தா: ஸ்ம்ருதா: || 156**

அரசன், அமைச்சர்கள், படைகள், நண்பர்கள் இவர்களுக்கும், நாடு, கோட்டை, பொக்கிஷம் இவைகளுக்கும் பிரகிருதிகள் என்று பெயர். இன்னும் நாட்டு மக்களுக்கு நன்மை தரக்கூடியவை அனைத்தும் பிரகிருதிகளேயாகும். இவையே செல்வங்கள்.

1) அரசன்தான் மக்களுடைய முழுமுதற் செல்வம். தெய்வ பலம், புத்தி பலம், புஜ பலம், தர்ம பலம் கொண்ட அரசனே மக்களுக்கு செல்வத்துளெல்லாம் பெருஞ்செல்வம். இத்தகைய அரசன் வாய்க்கப் பெற்றுவிட்டால் அஷ்ட ஐஸ்வரியங்களோடு மக்கள் வாழ்வார்கள்.

2) நீர்வழியோடும் நிலவழியோடும் விளைச்சல் தரும் நல்ல மண்வளத்தோடும் இருப்பது நாட்டின் செல்வம்.

3) தர்மம் மூலமாக அடைந்த செல்வத்தோடு பொக்கிஷம் (கருவூலம்) நிறைந்திருக்க வேண்டும். பஞ்சம் ஏற்பட்டாலும் தாங்கக்கூடிய அளவில் அரசனுடைய பொக்கிஷம் இருக்க வேண்டும். இதுவும் ஒரு பிரகிருதி செல்வம்.

4) ராஜபக்தியும், புஜ பலமும், உற்சாகமும் நிறைந்த படைவீரர்கள் அமைவது ஒரு பிரகிருதி செல்வம்.

5) குதிரைப் படையும், தேர்ப் படையும், யானைப் படையும் திறமையோடு செயல்படத்தக்க முறையில் இருக்குமானால் இதுவும் ஒரு செல்வமாகும்.

6) அண்டை நாடுகள் எதிரிகளாக இல்லாமல் அரசனுக்கு வசப்பட்டு இருப்பதும் ஒரு செல்வம்.

7) அப்படியே எதிரி இருந்தாலும் அவன் கெட்டவனாக இருந்தால் அதுவும் ஒரு செல்வம்தான்.

எப்படியெனில், அவன் அரச வம்சத்தைச் சேராதவனாகவோ, காம கோபங்கள் கொண்டவனாகவோ, சாமர்த்தியமற்றவனாகவோ, மந்திராலோசனைகளை ஏற்காதவனாகவோ இருந்தால், அத்தகைய அரசனை மந்திரிகளும் அதிகாரிகளும் வெறுப்பார்கள்.

அவன் தெய்வ நம்பிக்கையற்றவனாக இருந்தால் பிராம்மணர்கள் வெறுப்பார்கள்.

அதிக வரி வசூல் செய்வது, கருணையின்றி தண்டிப்பது, பிறரை ஹிம்சிப்பதிலேயே ஆர்வத்தோடிருப்பது என்றிருப்பவனை அனைத்து மக்களுமே வெறுப்பார்கள்.

அவன் நாட்டு மக்களே அவனை வெறுக்கும் வண்ணம் இருக்கும் அரசனை வெல்வது மிக எளிது என்பதால் அதுவும் ஒரு செல்வம்தான். அவன் நாடு இந்த அரசன் வசமாகும்.

8) ஒரு அரசனுடைய நண்பர்களான அரசர்கள், அவனுக்குப் போர் வந்தபோதும், எதிரிகளால் தொல்லைகள் ஏற்பட்ட போதும், எதிரியால் தோல்வியடைந்தபோதும் விரைந்து தங்கள் படைபலத்தோடு வந்து உதவுபவர்களாக இருக்க வேண்டும். இதுவும் ஒரு செல்வம்.

இந்த எட்டு வகையான செல்வங்களுக்குள் அரசன் தானே ஒரு பெருஞ் செல்வமாக இருந்து கொண்டு சாமம், தானம், பேதம், தண்டம் என்னும் நான்கு உபாயங்களோடு நாட்டு மக்களை நன்கு பரிபாலிக்க வேண்டும்.

अमात्यराष्ट्रदुर्गाऽर्थदण्डाऽऽख्याः पञ्च चाऽपराः ।
प्रत्येकं कथिता ह्येताः सङ्क्षेपेण द्विसप्ततिः ॥

**அமாத்ய ராஷ்ட்ர துர்கா அர்த்ததண்டா ஆக்யா: பஞ்சசாபரா: |**
**ப்ரத்யேகம் கதிதாஹ்யேதா: ஸங்க்ஷேபேண த்விஸப்ததி: ||** **157**

மொத்தம் எழுபத்திரண்டு பிரகிருதி செல்வங்கள் உண்டு. மந்திரி, நாடு, கோட்டை, பொக்கிஷம், தண்டநீதி இவைகளினால் ஏற்படும் செல்வங்களைப் பற்றி விரிவாகப் பார்த்தால் அவை மொத்தம் எழுபத்திரண்டு.

अनन्तरमरि विद्यादरिसेविनमेव च।
अरेरनन्तर मित्रमुदासीन तयोः परम्॥

**அனந்தரமரிம் வித்யாதரி ஸேவிநமேவ ச |**
**அரேரனந்தரம் மித்ரமுதாஸீநம் தயோ: பரம் ||** **158**

தன் நாட்டு எல்லையிலுள்ள அரசன் நட்புடன் இல்லாவிட்டாலும் அல்லது எதிரியாகவே இருந்தாலும்கூட அவனை நண்பனாகவே கருத வேண்டும். தான் பலமான அரசனாக இருக்கும் வரையில் அவன் ஒன்றும் செய்ய இயலாது. அவனுக்கு அந்தப் பக்கத்து எல்லையிலும் பலமான அரசு இருக்குமானால் இரண்டுக்குமிடையில் அவன் அடங்கியேயிருப்பான். ஆனாலும், அவனைக் கண்காணித்தபடியே இருக்க வேண்டும். அவனுக்கு நண்பர்களாக யாரெல்லாம் இருக்கிறார் களோ அவர்களையும் கவனமாகக் கண்காணிக்க வேண்டும்.

படைபலம் மிக்க அரசன் நண்பனாக இருந்தாலும்கூட, அந்த நண்பன் வெகுதூரத்திலும், சோம்பல் மிக்கவனாகவும் இருந்தால், அவனிடமிருந்து உடனடி உதவியை எதிர்பார்க்க முடியாது.

तान् सर्वानभिसन्दध्यात् सामादिभिरुपक्रमैः।
व्यस्तैश् चैव समस्तैश् च पौरुषेण नयेन च॥

**தாந் ஸர்வாநபிஸந்தத்யாத் ஸாமாதிபிருபக்ரமை: |**
**வ்யஸ்தைஷ் சைவ ஸமஸ்தைஷ் ச பௌருஷேண நயேந ச ||** **159**

அந்த அரசர்களனைவருடனும் சாமம், தானம், பேதம், தண்டம் என்னும் நான்கு உபாயங்களைப் பயன்படுத்தி அவர்களை எந்த வகையிலேனும் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். நயமாகப் பேசியும் மற்றபடி தானத்தாலும் பேதத்தாலும் காரியம் சாதிக்க முடியாதபோது, தன் படைபலத்தைப் பிரயோகித்து அந்த நாட்டை வென்று தன் நாட்டுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

सन्धि च विग्रह चैव यानमासनमेव च।
द्वैधीभाव संश्रय च षड्गुणाश् चिन्तयेत् सदा॥

**ஸந்திம் ச விக்ரஹம்சைவ யாநமாஸநமேவ ச |**
**த்வைதீபாவம் ஸம்ஷ்ரயம் ச ஷட்குணாம்ஷ் சிந்தயேத் ஸதா ||** **160**

அரசன், சந்தி, விக்ரகம், ஆசனம், யாநம், சம்ஸ்ரயம், துவைதீபாவம் என்னும் ஆறைப் பற்றியும் எப்போதும் சிந்தித்த வண்ணம் இருக்க வேண்டும்.

அரசன் இன்னொரு அரசனுடன் சில நிபந்தனைகளோடு ஒப்பந்தம் செய்து கொள்வது 'சந்தி' எனப்படும்.

அவனுடன் விரோதம் கொண்டு அபகாரம் செய்வது 'விக்ரகம்' எனப்படும்.

ஒப்பந்தமும் செய்து கொள்ளாமல், விரோதமும் காட்டாமல் இருந்தால் அதற்கு 'யாநம்' என்று பெயர்.

எதிரியின் மீது படையெடுப்பதற்கு 'யாநம்' என்று பெயர்.

எதிரி தன்னைவிட பலமாக இருக்கும்போது பணிந்து போவது 'சம்ஸ்ரயம்' எனப்படும். உதவி நாடி ஒரு அரசனிடம் அடைக்கல மாவதற்கும் 'சம்ஸ்ரயம்' என்றே பெயர்.

आसनं चैव यानं च सन्धिं विग्रहमेव च।
कार्यं वीक्ष्य प्रयुञ्जीत द्वैधं संश्रयमेव च॥

**ஆஸநம் சைவ யாநம் ச ஸந்திம் விக்ரஹமேவ ச |**
**கார்யம் வீக்ஷ்ய ப்ரயுஞ்ஜீத த்வைதம் ஸம்ஸ்ரயமேவ ச ||** 161

அரசன், தன் வெற்றியை மனத்தில் கொண்டு காலத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் தக்கபடி, சந்தி செய்து கொள்வதையோ, படையெடுப்பதையோ, பணிவதையோ, சந்தியும் இன்றி விரோதமும் இன்றி இருப்பதையோ செய்ய வேண்டும்.

सन्धिं तु द्विविधं विद्याद् राजा विग्रहमेव च।
उभे यानाऽऽसने चैव द्विविधः संश्रयः स्मृतः॥

**ஸந்திம் து த்விவிதம் வித்யாத்ராஜா விக்ரஹமேவ ச |**
**உபே யாநா ஆஸநே சைவத்வி விதः ஸம்ஸ்ரயः ஸ்ம்ருதः ||** 162

சந்தி இரு வகையானது. விக்ரகமும் இரு வகையானது. அவ்வாறே ஆசனமும், யாநமும், சம்ஸ்ரயமும்கூட இரு வகை யானவையே.

समानयानकर्मा च विपरीतस् तथैव च।
तदात्वाऽऽयतिसंयुक्तः सन्धिर् ज्ञेयो द्विलक्षणः॥

**ஸமாநயாநகர்மா ச விபரீதஸ் ததைவ ச |**
**ததாத்வா ஆயதிஸம்யுக்தः ஸந்திர் ஞேயோ த்விளக்ஷணः ||** 163

சமாதானமாகப் போவதில் இரண்டு வகைகள் உள்ளன. யுத்தம் செய்வதால் தனக்கு வெற்றியும் கிட்டலாம், தோல்வியும் கிட்டலாம்,

இரண்டுக்கும் சமமான வாய்ப்பு உண்டு என்னும்போது சமாதானமாகப் போக வேண்டும்.

தன்னைவிட அதிக பலம் வாய்ந்த அரசன் படையெடுத்து வந்து ஆக்ரமித்துக் கொண்டபோது, உடனடியாக அவனிடம் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும். அந்த அரசன் கேட்கும் அளவு படையையும், பொக்கிஷத்தையும் கொடுத்து சமாதானம் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு சந்தி இரு வகைப்படும்.

स्वयंकृतश् च कार्यार्थमकाले काल एव वा।
मित्रस्य चैवाऽपकृते द्विविधो विग्रहः स्मृतः॥

**ஸ்வயம் க்ருதஷ் ச கார்யார்த்தமகாலே கால ஏவ வா |**
**மித்ரஸ்ய சைவா அபக்ருதே த்விவிதோ விக்ரஹ: ஸ்ம்ருத: || 164**

காலம் வந்துற்றபோது செய்வது, தக்க காலம் இல்லையென்றாலும் பரவாயில்லை என்று தன் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக எதிரிக்கு அபகாரம் செய்வது. அடுத்து தனக்காக என்றில்லாமல், தன்னுடைய நண்பனுக்காக அவ்வாறு செய்வது என்று விக்ரகம் இரு வகைப்படும்.

एकाकिनश् चाऽत्ययिके कार्ये प्राप्ते यदृच्छया।
संहतस्य च मित्रेण द्विविधं यानमुच्यते॥

**ஏகாகிநஷ்சாஅத்யயிகே கார்யே ப்ராப்தே யத்ருச்சயா |**
**ஸம்ஹதஸ்ய ச மித்ரேண த்விவிதம் யாநமுச்யதே || 165**

எதிரி மன்னன் துயரத்திலிருக்கிறான் அல்லது பஞ்சம் வெள்ளத்தால் அவன் நாடு க்ஷீணமுற்றிருக்கிறது அல்லது அவனைச் சார்ந்த மந்திரி பிரதானிகளே அவனிடம் அதிருப்தியுற்றிருக்கிறார்கள் என்னும்போது அவன் மீது படையெடுக்க வேண்டும். இப்படிப் படையெடுக்கும்போது தான் தனியாகப் போருக்குப் புறப்படுவது என்றும், பலவானான அரசன் துணையோடு, அதாவது அவன் படைபலத்தையும் சேர்த்துக்கொண்டு போருக்குப் புறப்படுவது என்றும் போரிடுவது இருவகைப்படும்.

क्षीणस्य चैव क्रमशो दैवात् पूर्वकृतेन वा।
मित्रस्य चाऽनुरोधेन द्विविधं स्मृतमासनम्॥

**க்ஷீணஸ்ய சைவ க்ரமஷோ தைவாத் பூர்வக்ருதேந வா |**
**மித்ரஸ்ய சாஅநுரோதேந த்விவிதம் ஸ்ம்ருதமாஸநம் || 166**

மாற்று அரசனோடு சமாதான ஒப்பந்தமும் செய்து கொள்ளாமல், அவனுக்கு விரோதமான காரியங்களையும் செய்யாமல் இருப்பது 'ஆசனம்' எனப்படும். இதுவும் இரண்டு வகைப்படும். தெய்வ வசத்தாலும், பூர்வ வினையாலும் தன்நிலை தாழ்ந்துவிட்ட தருணத்தில் சமாதானம் செய்து கொண்டாலும், பகை பாராட்டினாலும் தனக்குக் குறையோ நிறையோ இரண்டும் இல்லை என்னும்போது பேசாமலிருந்துவிட வேண்டும்.

அதேபோன்று நண்பனான அரசன் தனக்கு உதவுமாறு கேட்டுக் கொள்ளும்போதும், போரில் வெற்றி நிச்சயம் கிடைக்கும் என்னும்போதும் உதவி செய்யலாம். வெற்றியும் கிடைக்கலாம் தோல்வியும் கிடைக்கலாம் என்ற நிலையிலோ, வெற்றி பெறுவது துர்லபம் என்று தோன்றும் போதோ பேசாமலிருந்துவிட வேண்டும். இவ்வாறு 'ஆசனம்' இரு வகைப்படும்.

**बलस्य स्वामिनश् चैव स्थितिः कार्यार्थसिद्धये।**
**द्विविधं कीर्त्यते द्वैधं षाड्गुण्यगुणवेदिभिः॥**

**பலஸ்யஸ்வாமிநஷ் சைவ ஸ்திதி: கார்யா அர்த்தசித்தயே |**
**த்விவிதம் கீர்த்யதே த்வைதம் ஷாட்குண்ய குணவேதிபி: || 167**

ஒரு எதிரி அரசனுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு இன்னொரு எதிரி அரசனுடன் பகைமை பாராட்டுவது 'துவைதீபாவம்' எனப்படும்.

எதிரி அரசர்கள் பலமானவர்களாக இருக்கும்போது அவர்களை வெல்வது இயலாத காரியம். அத்தகைய தருணத்தில் பலமான ஒரு எதிரி அரசனை தன் நண்பனாக்கிக் கொண்டு, அவனிடமே படைபலத்தைக் கேட்டுப் பெற்று, வெற்றி பெற்றதும் செய்த உதவிக்குப் பதிலாக இவ்வளவு தருகிறேன் என்று ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும். ஆனால் இவனை நிரந்தர நண்பனாக நினைக்கக் கூடாது. காரியம் நிமித்தமாகவே ஏற்பட்ட நட்பாகவே கொள்ள வேண்டும். ஒரு எதிரி இப்போது நண்பனாகி உள்ளான். இவன் உதவியைக் கொண்டு அந்த மற்றொரு எதிரியை வெல்ல வேண்டும்.

அடுத்து, எதிரி மன்னனுக்கு ஒரு எதிரி இருந்தால், அவனுடன் 'சந்தி' செய்து கொள்ள வேண்டும். அவன் உதவியோடு எதிரி மன்னனை வீழ்த்த வேண்டும்.

இவ்வாறு துவைதீபாவம் இரு வகைப்படும்.

**अर्थसम्पादनार्थं च पीड्यमानस्य शत्रुभिः।**
**साधुषु व्यपदेशार्थं द्विविधः संश्रयः स्मृतः॥**

**அர்த்த ஸம்பாதநார்த்தம் ச பீட்யமாநஸ்ய சத்ருபி: |**
**ஸாதுஷு வ்யப தேஷார்த்தம் த்விவித: ஸம்ஷ்ரய: ஸ்ம்ருத: || 168**

தன்னைவிடப் பலமான எதிரியிடம் பணிந்து போவதும், வேறு ஒருவனிடம் அடைக்கலம் தேடுவதும் 'சம்ஸ்ரயம்' எனப்படும்.

பலமான எதிரி தன்னைத் தாக்க வரும்போது, எதிர்க்கத் தகுந்த படைபலம் இல்லையெனில் பணிந்து போக வேண்டும். அதனால் தன் நாட்டையும் செல்வத்தையும் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

அடுத்தது, கபடமாக அவனை ஏமாற்றி அப்போதைக்கு அவனிடம் பணிந்து, அவனைப் புகழ்ந்து, அவனுக்கு அதிக செல்வங்களைக் கொடுத்து அனுப்பிவிட வேண்டும். பிறகு, அவனை வெல்ல வேண்டும் என்ற ஒன்றையே மனத்தில் கொண்டு எந்த அரசன் மிகுந்த பலவானாக உள்ளானோ அவனிடம் அடைக்கலமாக வேண்டும்.

இவ்வாறு சம்ஸ்ரயம் இரண்டு வகைப்படும்.

**यदाऽवगच्छेदायत्यामाधिक्यं ध्रुवमात्मनः।**
**तदात्वे चाऽल्पिकां पीडां तदा सन्धिं समाश्रयेत्॥**

**யதா அவகச்சேதாயத் யாமாதிக்யம் த்ருவமாத்மந: |**
**ததாத்வே சாஅல்பிகாம் பிடாம் ததா ஸந்திம் ஸமாஸ்ரயேத் || 169**

எதிர் காலத்தில் தனக்கு மேன்மை ஏற்படும் என்று தோன்றினால் சிறிது செல்வத்தைக் கொடுத்து எதிரியுடன் சந்தி (சமாதானம்) செய்து கொள்ள வேண்டும். அவ்வாறே தானும் எதிரியிடமிருந்து சிறிது செல்வத்தைப் பெற்றுக்கொண்டு சமாதானம் செய்து கொள்ள வேண்டும்.

இதனால் அவன் எதிரி என்ற நிலையிலிருந்து மாறிவிடுகிறான். அவன் நாட்டின் வழியாக தன்னுடைய வர்த்தகம் பெருகும் அல்லது தனக்குத் தேவைப்பட்டபோது அவன் படை கொடுத்து உதவுவான் என்னும் காரணங்களை யோசித்து இந்த சந்தி செய்து கொள்ளல் வேண்டும்.

**यदा प्रहृष्टा मन्येत सर्वास् तु प्रकृतीर् भृशम्।**
**अत्युच्छ्रितं तथाऽऽत्मानं तदा कुर्वीत विग्रहम्॥**

**யதா ப்ரஹ்ருஷ்டா மந்யேத ஸர்வாஸ் து ப்ரக்ருதீர் ப்ருஷம் |**
**அத்யுச்ச்ரிதம் ததா ஆத்மாநம் ததாகுர்வீத விக்ரஹம் || 170**

அரசன், நாடு, அமைச்சர்கள், கோட்டை, படை, நண்பர்கள் என்னுமிவற்றுக்கு பிரக்ருதிகள் என்று பெயர்.

இந்த பிரக்ருதிகள் நல்லபடி இருக்கும்போது அரசன், எதிரி நாட்டின் மீது படையெடுக்க வேண்டும்.

முதலில் அரசன் மற்ற எந்தவிதமான தொல்லைகளும் இல்லாமல் உற்சாகமாக இருக்க வேண்டும். அடுத்து அவன் நாட்டில் பஞ்சம் வெள்ளம் போன்றவை எதுவுமில்லாமல் மக்கள் செழிப்போடு சுகமாக வாழ்பவர்களாக இருக்க வேண்டும். அவனுடைய அமைச்சர்கள் அவனுக்குத் தக்க மந்திராலோசனை கூறும் புத்திமான்களாகவும், விசுவாசமானவர்களாகவும் இருக்க வேண்டும். அடுத்து கோட்டை யரண்கள் பலமாக இருக்க வேண்டும். படைகள் வேண்டிய அளவுக்கு இருக்க வேண்டும். படை வீரர்கள் யுத்தத்தில் புறமுதுகு காட்டாதவர் களாகவும், தங்கள் அரசனுக்கு எதையும் செய்யக் கூடியவர்களாகவும், அரச பக்தி தேச பக்தி நிறைந்தவர்களாகவும் இருக்க வேண்டும். நல்ல நண்பர்கள் அதாவது அரசர்களாக இருக்கும் நண்பர்கள் தனக்கு உதவக்கூடிய நிலையில் இருக்க வேண்டும்.

இந்த நிலையில் அரசன் எதிரி நாட்டை வெல்வதைப் பற்றி யோசிக்க வேண்டும். படையெடுப்புக்கு முன்னால் எதிரி அரசனுக்கும், அவன் நாட்டுக்கும் பல தொல்லைகளை மறைமுக மாகக் கொடுக்க வேண்டும். எதிரி மன்னனுடைய உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் குலைக்க வேண்டும்.

यदा मन्येत भावेन ह्रष्टं पुष्टं बलं स्वकम्।
परस्य विपरीतं च तदा यायाद् रिपुं प्रति॥

**யதா மந்யேத பாவேந ஹ்ருஷ்டம் புஷ்டம் பலம் ஸ்வகம் |**
**பரஸ்ய விபரீதம் ச ததா யாயாத் ரிபும் ப்ரதி || 171**

இவ்வாறாக அரசன் தான் சந்தோஷத்தோடும் உற்சாகத்தோடும் பிரகிருதிகளின் பலத்தோடும் இருந்து கொண்டு, எதிரி அரசன் தொல்லைகளால் பீடிக்கப்பட்டு உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் இழந்து துயர நிலையில் இருக்கும்போது அவன் மீது படையெடுக்க வேண்டும்.

यदा तु स्यात् परिक्षीणो वाहनेन बलेन च।
तदाऽऽसीत प्रयत्नेन शनकैः सान्त्वयन्नरीन्॥

**யதா து ஸ்யாத் பரிக்ஷீணோ வாஹநேந பலேந ச |**
**ததா ஆஸீத ப்ரயத்நேந ஷநகை: ஸாந்த்வயந்நரீந் || 172**

யானைப் படையும், குதிரைப் படையும், தேர்ப் பட்டையும் குறைந்தும், போர் வீரர்கள் உற்சாகம் குறைந்தும் இருக்கும்போது எதிரி அரசன் தாக்க வந்தால், முயற்சி செய்து எவ்வகையிலேனும் எதிரி அரசனுடன் சமாதானம் செய்து கொள்ள வேண்டும்.

मन्येतारिं यदा राजा सर्वथा बलवत्तरम्।
तदा द्विधा बलं कृत्वा साधयेत् कार्यमात्मनः॥

**மந்யேதா அரிம் யதா ராஜா ஸர்வதா பலவத் தரம் |**
**ததா த்விதா பலம் க்ருத்வா ஸாதயேத் கார்யமாத்மந: || 173**

எதிரி அரசன் எவ்வகையிலும் சமாதானத்துக்கு இணங்கவில்லை என்றால், தன் படையை இரண்டாகப் பிரித்து ஒரு பகுதியை படைத் தலைவன் தலைமையில் எதிரியைத் தாக்க அனுப்ப வேண்டும். மற்றொரு பகுதியை தன் நாட்டுக் காவலுக்காக இருத்த வேண்டும். தன் நட்பு அரசர்களின் உதவி பெறுதல் முதலான காரியங்களில் ஈடுபட்டு வெற்றி கிட்டும் வழியை ஆராய்ந்து வெற்றியைத் தேடிக்கொள்ள வேண்டும்.

यदा परबलानां तु गमनीयतमो भवेत्।
तदा तु संश्रयेत् क्षिप्रं धार्मिकं बलिनं नृपम्॥

**யதா பரபலாநாம் து கமநீயதமோ பவேத் |**
**ததா து ஸம்ஷ்ரயேத் க்ஷிப்ரம் தார்மிகம் பலிநம் ந்ருபம் || 174**

இவ்வாறு படையைப் பிரித்தும் வெற்றி பெறவோ, தன்னாட்டைக் காப்பாற்றிக் கொள்ளவோ முடியாது என்ற நிலை ஏற்பட்டால், அப்போது தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயல வேண்டும். எதிரியிடம் தான் அகப்படாமல் தப்பித்துச் சென்று படைபலம் மிகுந்தவனும், தர்மவானுமான தக்க அரசனிடம் அடைக்கலம் புகவேண்டும்.

निग्रहं प्रकृतीनां च कुर्याद् योऽरिबलस्य च।
उपसेवेत तं नित्यं सर्वयत्नैर् गुरुं यथा॥

**நிக்ரஹம் ப்ரக்ருதீநாம் ச குர்யாத் யோ அரிபலஸ்ய ச |**
**உபஸேவேத தம் நித்யம் ஸர்வ யத்நைர் குரும்யதா || 175**

எதிரி மக்களிடம் கலகங்கள் ஏற்படுத்தக்கூடியவனாகவும், எதிரிப் படைகளை வெல்லக்கூடியவனாகவும் தான் அடைக்கலம் புகும் அரசன் திறமையும் படைபலமும் கொண்டிருக்கிறானா என்று பார்த்து, அத்தகைய அரசனிடம் அடைக்கலம் புகுந்து, அனைத்து முயற்சிகளும் செய்து, அவன் மனம் தன்னிடம் ஈடுபடுமாறு அதாவது தனக்கு உதவ வேண்டும் என்னும் எண்ணம் அவன் மனத்தில் ஏற்படுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். மனப்பூர்வமாக அவன் தனக்கு உதவுமாறு அவனைப் போற்றிக் கொண்டாட வேண்டும்.

यदि तत्रापि सम्पश्येद् दोषं संश्रयकारितम्।
सुयुद्धमेव तत्रापि निर्विशङ्कः समाचरेत्॥

**யதி தத்ராஅபி ஸம்பஷ்யேத் தோஷம் ஸம்ஷ்ரயகாரிதம் |**
**சுயுத்தமேவ தத்ராஅபி நிர்விஷங்க: ஸமாசரேத் ||** 176

ஆனால், இப்படி பலம் மிகுந்த அரசன் இல்லாவிட்டால் அல்லது இருந்தும் தான் அவனை அண்டுவதால் ஒரு பயனும் இருக்காது என்பது சந்தேகமின்றித் தெரிந்தால் யுத்தம்தான் செய்ய வேண்டும். வெற்றியோ தோல்வியோ எது கிட்டினாலும் சரி, வெற்றி கிட்டினால் அரசு நிலைக்கும், மரணமெய்தினால் சொர்க்கம் கிடைக்கும் என்ற தீர்மானத்தோடு போர்க்களம் புக வேண்டும்.

सर्वोपायैस् तथा कुर्यान् नीतिज्ञः पृथिवीपतिः।
यथाऽस्याऽभ्यधिका न स्युर् मित्रोदासीनशत्रवः॥

**ஸர்வோபாயைஸ்ததா குர்யாந் நீதிஞ: ப்ருதிவீபதி: |**
**யதாஅஸ்யா அப்யதிகா ந ஸ்யுர் மித்ரோ தாஸீநஷத்ரவ: ||** 177

மித்ரர்களாயிருக்கும் அரசர்களாயினும் சரி, எதிரிகளாக இருக்கும் அரசர்களாயினும் சரி, அவர்கள் தன்னை மீறி வளர்ச்சியுற்று விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ராஜதர்மம் தெரிந்த அரசன், இந்த விஷயத்தில் சகல உபாயங்களையும் பயன் படுத்த வேண்டும்.

आयतिं सर्वकार्याणां तदात्वं च विचारयेत्।
अतीतानां च सर्वेषां गुणदोषौ च तत्त्वतः॥

**ஆயதிம் ஸர்வகார்யாணாம் ததாத்வம் ச விசாரயேத் |**
**அதீதாநாம் ச ஸர்வேஷாம் குணதோஷௌ ச தத்வத: ||** 178

அரசன், தான் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் அதைச் செய்வதால் தனக்குக் கிடைக்கும் லாபம் என்ன என்பதை யோசித்துப் பார்த்துச் செய்ய வேண்டும். இது போக, செய்து முடித்த காரியத்தால் தான் அடைந்த நன்மைகள் என்ன, தீமைகள் என்ன என்பதையும் யோசிக்க வேண்டும்.

आयत्यां गुणदोषज्ञस् तदात्वे क्षिप्रनिश्चयः।
अतीते कार्यशेषज्ञः शत्रुभिर् नाऽभिभूयते॥

**ஆயத்யாம் குணதோஷக்ஞஸ் ததாத்வே சிப்ரநிஷ்சய: |**
**அதீதே கார்யசேஷக்ஞ: ஷத்ருபிர் நாஅபிபூயதே ||** 179

தான் இதுவரை செய்த காரியங்களால் விளைந்த நன்மை தீமைகளைத் தெரிந்து வைத்துக்கொண்டு, இனி செய்யப்போகும் காரியங்களால் விளையக்கூடிய நன்மை தீமைகளையும் ஆராய்ந்து அறிந்து கொண்டு, யோசித்து முடிவெடுத்து, இப்போது செய்யும்

*காரியங்களில் விடாமுயற்சியோடு ஆற்றலைச் செலுத்திக் காரியமாற்ற வேண்டும். இப்படிச் செய்யும் மன்னன் எந்நாளும் தோல்வியடைய மாட்டான்.*

**यथैनं नाऽभिसन्दध्युर् मित्रोदासीनशत्रवः।**
**तथा सर्वं संविदध्यादेष सामासिको नयः॥**

**யதைநம் நா அபிஸந்தத்யுர் மித்ரோதாஸீ நஷத்ரவ: |**
**ததா ஸர்வம் ஸம்விதத்யாதேஷ ஸாமாஸிகோ நய: ||** 180

*ராஜதர்ம சாஸ்திரத்தை நன்கு படித்தறிந்த அரசன், எந்த வகையிலும் தன் நண்பர்களாலோ, பகைவர்களாலோ, நட்போ பகையோ இரண்டுமில்லாதவர்களாலோ தனக்கு இன்னல் நேரிடா வண்ணம் பார்த்துக் கொள்வான்.*

**यदा तु यानमातिष्ठेदरिराष्ट्रं प्रति प्रभुः।**
**तदाऽनेन विधानेन यायादरिपुरं शनैः॥**

**யதா து யாநமாதிஷ்டே தரிராஷ்ட்ரம் ப்ரதி ப்ரபு: |**
**ததா அநேந விதாநேந யாயாதரிபுரம் ஷனை: ||** 181

*அரசன், எதிரி மன்னன் மீது போருக்குப் புறப்பட வேண்டும் என்றால், அதற்கு இனி சொல்லப்போகும் முறைகளோடு யுத்த யாத்திரையைத் தொடங்க வேண்டும்.*

**मार्गशीर्षे शुभे मासि यायाद् यात्रां महीपतिः।**
**फाल्गुनं वाऽथ चैत्रं वा मासौ प्रति यथाबलम्॥**

**மார்கஷீர்ஷே சுபே மாஸி யாயாத் யாத்ராம் மஹீபதி: |**
**பல்குநம் வா அத சைத்ரம் வா மாஸௌ ப்ரதி யதா பலம் ||** 182

*படைகளோடு யுத்த யாத்திரை கிளம்பும் காலத்தை முதலில் நிர்ணயிக்க வேண்டும். நீண்ட காலம் யாத்திரை போக வேண்டிய தூரமானால் மார்கழியில் கிளம்பலாம். அல்லது தை மாத ஆரம்பத்திலும் கிளம்பலாம்.*

*எப்போதும் பனி மூட்டம் இருக்கும் பிரதேசம் என்றாலும், ஆழமான நீர்நிலைகள் நிறைந்த பிரதேசம் என்றாலும், நுழைய முடியாத அளவு புதர் மண்டிக் கிடக்கும் பிரதேசம் என்றாலும் பங்குனி, சித்திரைகளில் யுத்த யாத்திரை கிளம்ப வேண்டும்.*

**अन्येष्वपि तु कालेषु यदा पश्येद् ध्रुवं जयम्।**
**तदा यायाद् विगृह्यैव व्यसने चोत्थिते रिपोः॥**

**அந்யேஷ்வபி து காலேஷு யதா பஷ்யேத் த்ருவம் ஜயம் |**
**ததா யாயாத் விக்ருஹ்யைவ வ்யசநே சோத்திதே ரிபோ: || 183**

மற்ற காலங்களிலும்கூட யுத்த யாத்திரை கிளம்பலாம். அதாவது நிச்சயம் தனக்கு வெற்றி கிட்டும் என்ற நிலையில் எந்தக் காலத்திலும் யுத்த யாத்திரையை மேற்கொள்ளலாம். எதிரி நாட்டில் உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டிருக்கும் காலத்திலும், எதிரிப் படைகள் க்ஷீணமடைந் திருக்கும் காலத்திலும் யுத்த யாத்திரை மேற்கொள்ளலாம்.

कृत्वा विधानं मूले तु यात्रिकं च यथाविधि।
उपगृह्यास्पदं चैव चारान् सम्यग् विधाय च॥

**க்ருத்வா விதாநம் மூலேது யாத்ரிகம் ச யதாவிதி |**
**உபக்ருஹ்யா ஆஸ்பதம் சைவ சாராந் ஸம்யக் விதாய ச || 184**

தன்னுடைய நாட்டில் சிறிது பாதுகாப்புப் படையை படைத் தலைவன் ஒருவனிடம் ஒப்படைக்க வேண்டும். தானும் படையும் இல்லாதபோது நாட்டைத் தாக்கி எவரும் கைப்பற்றி விடக்கூடாது என்பதற்காக இந்தப் பாதுகாப்பு ஏற்பாடு. தான் எங்கிருந்தாலும் ஒற்றர்கள் மூலமாக தனக்கு எதிரி நாட்டுச் செய்திகள் கிடைத்த வண்ணம் இருக்க வேண்டும். இதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

தான் எந்தப் படைகளோடு செல்ல வேண்டும் என்பதைத் தீர்மானிக்க வேண்டும். எதிரியிடம் யானைப்படை இருக்குமானால் தானும் யானைப் படைகளோடும், எந்திரங்களோடும் போக வேண்டும். பொதுவாக அனைவரிடமும் பலம் வாய்ந்த யானைப்படை இருப்பது அரிது.

எந்தப் படை எதிரியிடம் அதிகமாக உள்ளதோ, அந்தப் படையை தானும் அதிகம் நடத்திச் செல்ல வேண்டும்.

எதிரியிடம் நால்வகைப் படையும் இருக்குமானால் தானும் நால்வகைப் படைகளோடும், கற்கள், ஈட்டிகளை எறியத்தக்க எந்திரங்களோடும் யாத்திரை கிளம்ப வேண்டும். முக்கியமாக விசுவாசமான போர் வீரர்களோடு போக வேண்டும்.

संशोध्य त्रिविधं मार्गं षड्विधं च बलं स्वकम्।
साम्परायिककल्पेन यायादरिपुरं शनैः॥

**ஸம்ஷோத்ய த்ரிவிதம் மார்கம் ஷட்விதம் ச பலம் ஸ்வகம் |**
**ஸாம்பராயிக கல்பேந யாயாதரிபுரம் ஷனை: || 185**

யுத்த யாத்திரை புறப்படுவதற்கு முன்பு, தொழிலாளர்களின் அதிகாரியும், காவல் துறை அதிகாரியும் அந்தப் பாதையை ஆராய வேண்டும். காவல் துறை அதிகாரி பாதுகாப்பு ஏற்பாடுகளைக்

கவனிக்க வேண்டும். படைகள் ஆங்காங்கு ஓய்வு பெறும் இடங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

தொழிலாளர்களின் அதிகாரி வழியிலுள்ள புதர்களையும் காடுகளையும் அழித்து பாதைகளைச் சரிப்படுத்த வேண்டும். படைகள் முகாமிடுவதற்கான வசதிகளை ஏற்படுத்த வேண்டும்.

மற்றபடி, கிராமங்கள் வழியாகவும், ஆரண்யங்கள் வழியாகவும் போகும்போது வழியில் விலங்குகளுக்கு உணவு, நீர் கிடைப்பதைப் பொறுத்தும், படைவீரர்களுக்குச் சமைக்க விறகுகள் கிடைப்பதைப் பொறுத்தும் எந்த எந்த இடத்தில் எவ்வளவு நாட்கள் தங்கலாம் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

பிரயாணத்துக்கு மொத்தம் எத்தனை நாட்கள் பிடிக்கும் என்று கணக்கிட்டு, தேவையான உணவுப் பொருட்களை இருமடங்காக ஆங்காங்கே முகாமிடும் இடங்களில் கொண்டு சேர்க்க வேண்டும். அல்லது ஆங்காங்கே அவை கிடைக்கத்தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

எதிரிப் படைகள் வரும் பாதையில் அவர்களுக்கு இடைஞ் சல்களை ஏற்படுத்தக்கூடிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். பாதையில் குழிகளை ஏற்படுத்தி மேலே புற்களால் மூடுவது, நீர் நிலைகளை அழிப்பது போன்றவை அவை.

யுத்த பூமிக்கு அருகில் பிரதான சேனாபதி, வீடுகளை அமைக்கும் ஸ்தபதி, வாஸ்து நிபுணர் - இவர்கள் தேர்ந்தெடுத்த இடத்தில் படைகளை நிறுத்துவதற்கான படைத் தளங்களை அமைக்க வேண்டும்.

இவ்வாறாக, பாதைகளைச் சீர்படுத்துவது, படைகள் போகும் வழியில் படைகளுக்கும் விலங்குகளுக்கும் உணவு, தண்ணீர் கிடைக்க முன்கூட்டி ஏற்பாடு செய்வது, எதிரிகள் வரும் பாதைகளை சீர்குலைப்பது என்று இம் மூவகையான ஏற்பாடுகளையும் யுத்த யாத்திரை போகும் வழியில் செய்ய வேண்டும். அடுத்து -

1) ஜோதிடர்களும், ஒற்றர்களும் 'வெற்றி நமக்கே, வெற்றி நிச்சயம்' என்று கூறியபடி வீரர்களை உற்சாகப்படுத்திய வண்ணம் இருக்க வேண்டும்.

2) படைவீரர்கள் ஒருவரோடொருவர் வாக்குவாதத்தில் ஈடுபடுவது, குடிப்பது, சூதாடுவது போன்றவற்றைச் செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

3) சூதர்களும், மாகதர்களும் ஆங்காங்கே படை வீரர்களுக்கு, அவர்கள் குலப் பெருமையையும் வீரத்தையும் போற்றியபடி இருக்க வேண்டும்.

4) ரண சிகிச்சைக்குத் தேவையான ஆயுதங்கள், மருந்துகள், எண்ணெய்கள், துணிகள் முதலானவற்றைத் தயாராக வைத்துக் கொண்டு, வைத்தியர்கள், படைவீரர்களுக்குப் பின்னால் இருக்க வேண்டும்.

5) உணவுப் பண்டங்களைக் காத்தபடி வீரர்களுக்கு உற்சாகமூட்டும் பெண்களும் வைத்தியர்களுக்கடுத்து இருக்க வேண்டும்.

6) முக்கியமாக அரசன், படைவீரர்களை நேரடியாகச் சந்தித்து உற்சாகமூட்டிய வண்ணம் இருக்க வேண்டும்.

இந்த ஆறு வழிகளில் படைவீரர்களிடம் உற்சாகமும் வீரமும் தைரியமும் குறையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு எதிரி நாட்டை நோக்கி மெதுவாக யுத்த யாத்திரை கிளம்ப வேண்டும்.

शत्रुसेविनि मित्रे च गूढे युक्ततरो भवेत् ।
गतप्रत्यागते चैव स हि कष्टतरो रिपुः ॥

**ஷத்ருசேவிநி மித்ரே ச கூடே யுக்ததரோ பவேத் |**
**கத ப்ரத்யாகதே சைவ ஸஹி கஷ்டதரோ ரிபு: || 186**

தன்னிடத்தில் மித்ரபாவத்தோடிருந்தபடி எதிரியிடம் போய் ரகசியமாகச் சேர்ந்தவன் மீண்டும் தன்னிடம் திரும்பி வந்தால், அவனிடம் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இத்தகைய வனான தளபதி போன்றோரிடமும் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இவர்கள் நம்பிக்கைக்குரியவர்களல்லர். ஆனாலும், அதை வெளிப்படுத்திக்கொள்ளக் கூடாது. அவர்கள் ரகசியமாகச் செய்ததை, தனக்குத் தெரிந்ததாகவே காட்டிக் கொள்ளாமல் எப்போதும் போல் மேலுக்கு இருந்தபடி, உள்ளே எச்சரிக்கை யோடிருந்து தக்க தருணம் வாய்த்ததும் அவர்களை அழித்துவிட வேண்டும். பகைவனைவிட இவர்கள் மிகவும் அபாயகரமானவர்கள்.

दण्डव्यूहेन तन्मार्गं यायात् तु शकटेन वा ।
वराहमकराभ्यां वा सूच्या वा गरुडेन वा ॥

**தண்டவ்யூஹேந தந்மார்கம் யாயாத்து ஷகடேந வா |**
**வராஹமகராப்யாம் வா சூச்யா வா கருடேந வா || 187**

தண்ட வியூகம், சகட வியூகம், வராக வியூகம், மகர வியூகம், ஊசி வியூகம், கருட வியூகம் போன்ற வியூகங்களில் ஏதாவது ஒரு வியூகத்தினால் எதிரி நாட்டை முற்றுகையிட வேண்டும்.

வியூகம் என்பது போர் வீரர்களைக் குறித்த முறைப்படி நிறுத்துவது. எந்த இடத்தில் எந்த வியூகப்படி வீரர்களை நிறுத்தினால் நலம் என்று தோன்றுகிறதோ அந்த முறைப்படி நிறுத்த வேண்டும்.

**यतश् च भयमाशङ्केत् ततो विस्तारयेद् बलम्।**
**पद्मेन चैव व्यूहेन निविशेत सदा स्वयम्॥**

**யதஷ்ச பயமாஷங்கேத் ததோ விஸ்தாரயேத் பலம் |**
**பத்மேந சைவ வ்யூஹேந நிவிஷேத ஸதா ஸ்வயம் ||** 188

எந்தப் பக்கத்தில் எதிரியின் தாக்குதல் அதிகமாக இருக்கும் என்று தோன்றுகிறதோ, அங்கே அதிகப் படையை நிறுத்த வேண்டும். அரசன் எப்போதும் பத்ம வியூகத்தை அமைத்துக் கொண்டு அதன் நடுவில் இருப்பது நல்லது.

**सेनापतिबलाध्यक्षौ सर्वदिक्षु निवेशयेत्।**
**यतश् च भयमाशङ्केत् प्राचीं तां कल्पयेद् दिशम्॥**

**சேநாபதி பலாத்யக்ஷௌ ஸர்வதிட்சு நிவேஷயேத் |**
**யதஷ்ச பயமாஷங்கேத் ப்ராசீம் தாம் கல்பயேத் திஷம் ||** 189

ஒரு தேர், ஒரு யானை, ஐந்து குதிரைகள், முப்பது படை வீரர்கள் (காலாட்கள்) சேர்ந்தது ஒரு அங்கம் எனப்படும்.

இவ்வாறான பத்து அங்கங்களின் தலைவனுக்கு பதிகன் என்று பெயர்.

பத்து பதிகன்களின் தலைவனுக்கு சேனாபதி என்று பெயர்.

பத்து சேனாபதிகளின் தலைவனுக்கு நாயகன் என்றும் பலாத்யக்ஷன் என்றும் பெயர்.

நாற்புறமும் இந்த சேனா நாயகர்கள் சேனைகளோடு நிறுத்தப்பட வேண்டும். எந்தத் திசையில் எதிரியின் பலம் அதிகமாக வெளிப்படும் என்று தோன்றுகிறதோ அங்கே அதிகப் படைபலம் நிறுத்தப்பட வேண்டும்.

**गुल्मांश् च स्थापयेदाप्तान् कृतसंज्ञान् समन्ततः।**
**स्थाने युद्धे च कुशलानभीरूनविकारिणः॥**

**குல்மாம்ஷ்ச ஸ்தாபயேதாப்தாந் க்ருதஸம்ஞாந் ஸமந்தத: |**
**ஸ்தாநே யுத்தே ச குஷலாந பீருநவிகாரிண: ||** 190

யுத்த களத்தின் முன்புறத்தில் பயமறியாதவர்களான மகா வீரர்களை நிறுத்த வேண்டும். சாதாரண வீரர்களில் தேவையான வர்களை எதிரியின் வருகையைத் தெரிவிக்கும் விதவிதமான

ஒலிகளை எழுப்புவதற்கும், புகையாலும் நெருப்பாலும் சத்ருக்களைப் பற்றி சூசகமாகத் தெரிவிப்பதற்கும், இடையர்கள் போன்று சாதாரண வேடத்தோடு நடமாடச் செய்ய வேண்டும்.

संहतान् योधयेदल्पान् कामं विस्तारयेद् बहून्।
सूच्या वज्रेण चैवैतान् व्यूहेन व्यूह्य योधयेत्॥

**ஸம்ஹதாந் யோதயேதல்பாந் காமம் விஸ்தாரயேத் பஹூந் |**
**ஸூச்யா வஜ்ரேண சைவைதாந் வ்யூஹேந வ்யூஹ யோதயேத் ||** **191**

சாதாரண படைவீரர்களை, அதிகம் பேர் சேர்ந்து யுத்தம் செய்யும் முறையான ஊசி வியூகம், வஜ்ர வியூகம் போன்ற வியூக முறைகளில் நிறுத்த வேண்டும்.

स्यन्दनाऽश्वैः समे युध्येदनूपे नौद्विपैस् तथा।
वृक्षगुल्माऽऽवृते चापैरसिचर्मायुधैः स्थले॥

**ஸ்யந்தநா அஷ்வை: ஸமே யுத்யேதனூபே நௌத்விபைஸ் ததா |**
**வ்ருக்ஷகுல்மா ஆவ்ருதே சாபை ரஸிசர்மாயுதை: ஸ்தலை: ||** **192**

படைகள் போர் புரியும்போது அந்தந்தப் படைக்கு அனுகூலமான பூமி அமைந்திருக்க வேண்டியது அவசியம்.

மேடுபள்ளங்களற்றதும், சுற்றிலும் செடிகொடிகளற்றதும், சக்கரங்கள் கீழிறங்கிப் புதைந்து போகாமல் கெட்டியான மண் அமைந்து இருப்பதும், மணல், சேறு, வயல்கள் அற்றதுமான பூமி தேர்ப் படைக்கு உகந்த பூமி.

தேர்ப்படைக்கு உகந்த பூமி, மற்ற மூன்று படைகளுக்கும் சிறந்த பூமியாகும்.

தண்ணீர் பிரதேசமெனில் படகுகளில் தாண்டிச் சென்று யுத்தம் செய்ய வேண்டும்.

செடிகளும், புதர்களும் நிறைந்த பிரதேசமெனில் வில் அம்புகளோடும், கத்தி வாள் முதலான ஆயுதங்களோடும் யுத்தம் செய்ய வேண்டும்.

कुरुक्षेत्रांश् च मत्स्यांश् च पञ्चालाञ् शूरसेनजान्।
दीर्घाल्ँ लघूंश् चैव नरानग्राऽनीकेषु योजयेत्॥

**குருக்ஷேத்ராம்ஷ் ச மத்ஸ்யாம்ஷ்ச பஞ்சாலாஞ்சூரஸேநஜாந் |**
**தீர்காந்லகூம்ஷ்சைவ நராநக்ரா அநீகேஷு யோஜயேத் ||** **193**

குருக்ஷேத்திரம், மத்ஸ்யதேசம், பாஞ்சால தேசம், சூரசேந தேசம் என்னும் இத்தேசங்களில் பிறந்தவர்களான வீரதீர பராக்ரம சாலிகளை படைகளின் முன்புறத்தில் யுத்தம் செய்ய நிறுத்த வேண்டும்.

प्रहर्षयेद् बलं व्यूह्य तांश् च सम्यक् परीक्षयेत्।
चेष्टाश् चैव विजानीयादरीन् योधयतामपि॥

**ப்ரஹர்ஷயேத் பலம் வ்யூஹ்ய தாம்ஷ்ச ஸம்யக் பரீக்ஷயேத் |**
**சேஷ்டாஷ்சைவ விஜாநீயாதரீந் யோதயதாமபி ||** 194

படை வீரர்களிடம் ஊக்கமும் உற்சாகமும் ஏற்படுத்த வேண்டும். அவர்களுக்கு வெற்றி பெறுவதிலுள்ள நம்பிக்கையையும் உறுதியையும் கண்டறிய வேண்டும்.

उपरुध्यारिमासीत राष्ट्रं चाऽस्योपपीडयेत्।
दूषयेच् चाऽस्य सततं यवसाऽन्नोदकेन्धनम्॥

**உபருத்யா அரிமாஸீத ராஷ்ட்ரம் சாஅஸ்யோப பீடயேத் |**
**தூஷயேச்சாஅஸ்ய ஸததம் யவஸா அந்நோதகேந்தனம் ||** 195

போர் செய்ய கோட்டையை விட்டு வெளியில் வந்த எதிரிப் படைகள் மீண்டும் உள்ளே போகாதவாறு அப்படைகளை அழிக்க வேண்டும். அந்தக் கோட்டைக்குள் எந்த வகையிலும் உணவு, நீர், விறகுகள் எதுவும் உள்ளே போகாதவாறு தடுக்க வேண்டும். உள்ளிருக்கும் நீர்நிலைகள் முதலியவற்றிலும் விஷம் கலக்கச் செய்து அவர்களுக்கு உபயோகப்படாமல் செய்ய வேண்டும்.

भिन्द्याच् चैव तडागानि प्राकारपरिखास् तथा।
समवस्कन्दयेच् चैनं रात्रौ वित्रासयेत् तथा॥

**பிந்த்யாச்சைவ தடாகாநி ப்ராகாரபரிகாஸ்ததா |**
**ஸமவஸ்கந்தயேச்சைநம் ராத்ரௌ வித்ராசயேத் ததா ||** 196

நீர் நிலைகளை அழிப்பதோடு, கோட்டையைத் தகர்க்க வேண்டும். இரவு நேரங்களில் எதிரிகளிடம், அவர்களின் நாடு கைப்பற்றப்பட்டது, அவர்களின் ஊர்கள் தீக்கிரையாயின என்பன போன்ற ஏதேனும் செய்திகளைப் பரப்பி அவர்களை அச்சுறுத்த வேண்டும்.

उपजप्यानुपजपेद् बुध्येतैव च तत्कृतम्।
युक्ते च दैवे युध्येत जयप्रेप्सुरपेतभीः॥

**உபஜப்யாநுபஜபேத் புத்யேதைவ ச தத்க்ருதம் |**
**யுக்தே ச தைவே யுத்யேத ஜயப்ரேப்சுரபேதபீ: ||** 197

ஒரு நாட்டு அரசனை வெல்ல அவனது அமைச்சர்கள், பிரதானிகள், உறவினர்களிடையே பேதத்தை ஏற்படுத்த வேண்டும். தன் எதிரிகள் இந்த முறையில் தனக்கு ஏற்படுத்தும் பேதங்களையும் அரசனாயிருப்பவன் அறிய வேண்டும். தன் படைபலமும் தெய்வ

பலமும் கூடியுள்ள நேரத்தில் வெற்றியை விரும்பும் மன்னன் பயமற்றவனாக படையெடுக்க வேண்டும்.

साम्ना दानेन भेदेन समस्तैरथवा पृथक्।
विजेतुं प्रयतेतारीन् न युद्धेन कदाचन॥

**ஸாம்நாதாநேந பேதேந ஸமஸ்தைரதவா ப்ருதக் |**
**விஜேதும் ப்ரயதேதா அரீந் நயுத்தேந கதாசந ||** **198**

சாம, பேத, தானங்களால் எதிரிகளை வசப்படுத்தப் பார்க்க வேண்டும். போர்தான் ஒரே வழி என்று நினைக்கக்கூடாது. அந்த மூன்று வழிகளாலும் முடியாத போது இறுதி நிலையில் வேறு வழியில்லை என்னும்போது போருக்குப் புறப்பட வேண்டும்.

अनित्यो विजयो यस्माद् दृश्यते युध्यमानयोः।
पराजयश् च सङ्ग्रामे तस्माद् युद्धं विवर्जयेत्॥

**அநித்யோ விஜயோ யஸ்மாத் த்ருஷ்யதே யுத்யமாநயோ: |**
**பராஜயஷ்ச ஸங்க்ராமே தஸ்மாத் யுத்தம் விவர்ஜயேத் ||** **199**

எவ்வளவுதான் முயன்றாலும் யுத்தத்தில் வெற்றி என்பது நிச்சயமான ஒன்றல்ல. தோல்வியும் ஏற்படலாம். எனவே யுத்தத்தைத் தவிர்க்கவே பார்க்க வேண்டும்.

त्रयाणामप्युपायानां पूर्वोक्तानामसम्भवे।
तथा युध्येत सम्पन्नो विजयेत रिपून् यथा॥

**த்ரயாணாமப்யுபாயாநாம் பூர்வோக்தாநாம ஸம்பவே |**
**ததா யுத்யேத ஸம்பந்நோ விஜயேத ரிபூந் யதா ||** **200**

எப்போது சாமம், பேதம், தானம் என்னும் மூன்று உபாயங்களும் பலனளிக்கவில்லையோ, அப்போது யுத்தம் செய்து எதிரிகளை வீழ்த்தி வெற்றி பெற வேண்டும்.

जित्वा सम्पूजयेद् देवान् ब्राह्मणांश् चैव धार्मिकान्।
प्रदद्यात् परिहारांश् च ख्यापयेदभयानि च॥

**ஜித்வா ஸம்பூஜயேத் தேவாந் ப்ராஹ்மணாம்ஷ்சைவ தார்மிகாந் |**
**ப்ரதத்யாத் பரிஹாரம்ஷ்ச க்யாபயேதபயாநி ச ||** **201**

எதிரியை வென்று அந்நாட்டைக் கைப்பற்றிய பிறகு அரசன், அங்குள்ள தெய்வங்களைப் பூஜிக்க வேண்டும். பிராம்மணர் களையும், தர்மாத்மாக்களான சாதுக்களையும் அழைத்து அறிமுகப் படுத்திக் கொண்டு, அவர்களைப் பூஜித்து அவர்களது ஆசிகளைப் பெற வேண்டும். படை வீரர்களுக்கும் மக்களுக்கும் பயத்தைப்

போக்கி. தன் ஆட்சியில் இனி அவர்கள் இன்னலின்றி, பயமின்றி வாழலாம் என்ற அபயத்தை நல்க வேண்டும்.

सर्वेषां तु विदित्वैषां समासेन चिकीर्षितम्।
स्थापयेत् तत्र तद्वंश्यं कुर्याच् च समयक्रियाम्॥

**ஸர்வேஷாம் து விதித்வைஷாம் ஸமாஸேந சிகீர்ஷிதம் |**
**ஸ்தாபயேத் தத்ர தத்வம்ஷ்யம் குர்யாச்ச ஸமயக்ரியாம் || 202**

அடுத்து, அங்கு, அந்த எதிரி மன்னனுடைய வம்சத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு முடிசூட்ட வேண்டும். யாருக்கு முடிசூட்டலாம் என்பதைத் தீர்மானிக்க அந்நாட்டு மந்திரி பிரதானியரை அழைத்து அவர்கள் அபிப்ராயத்தைக் கேட்டறிய வேண்டும். தனக்கு ஆண்டுக்குச் செலுத்த வேண்டிய கப்பத் தொகை முதலானவற்றைத் தீர்மானித்துக் கூற வேண்டும்.

प्रमाणानि च कुर्वीत तेषां धर्म्यान् यथोदितान्।
रत्नैश् च पूजयेदेनं प्रधानपुरुषैः सह॥

**ப்ரமாணாநி ச குர்வீத தேஷாம் தர்ம்யாந் யதோதிதாந் |**
**ரத்னைஷ்ச பூஜயேதேநம் ப்ரதான புருஷை: ஸஹ || 203**

அந்நாட்டில் எந்தெந்த தர்மங்கள், எந்தெந்த முறைகள் அனுசரிக்கப்படுகின்றனவோ அவற்றையே தானும் பிரமாணமாக எடுத்துக்கொள்ள வேண்டும். (கேரள நாட்டில் சொத்துரிமை பெண்வழியைச் சேர்ந்தது. இதுபோன்று அந்தந்த தேசத்துக்கு என்று சில தர்ம முறைகள் இருக்கும்.) தான் வென்ற தேசத்தில் எந்த தர்ம முறைகள் உள்ளனவோ அவற்றையே அங்கு ஆட்சியை நிலை நாட்டும்போது கடைப்பிடிக்க வேண்டும்.

முடிசூட்டிக் கொண்டு அரசனானவனுக்கும், அவன் மந்திரி பிரதானியருக்கும் ரத்தினங்கள் முதலானவற்றை சன்மானமாக அளித்து கௌரவிக்க வேண்டும்.

आदानमप्रियकरं दानं च प्रियकारकम्।
अभीप्सितानामर्थानां काले युक्तं प्रशस्यते॥

**ஆதாநமப்ரியகரம் தாநம் ச ப்ரியகாரகம் |**
**அபீப்ஸிதாநாமர்த்தாநாம் காலே யுக்தம் ப்ரஷஸ்யதே || 204**

வெற்றி பெற்ற அரசனுக்கே எதிரி நாட்டுப் பொக்கிஷம் முதல் அனைத்தும் உடைமையாகும். ஆனால், தூரத்திலுள்ள அந்த அரசை ஆள அங்குள்ள அரச வம்சத்தைச் சேர்ந்தவனை நியமிப்பதே சாஸ்திர சம்மதமான முறை. அவனுக்கே அங்கு கடைப்பிடிக்கப்படும்

நெறிமுறைகள் தெரியும். பூமி அமைப்பு இப்படிப்பட்டதென்று தெரியும். மக்களின் நம்பிக்கைகள் தெரியும்.

அப்படி முடிசூட்டப்பட்டவன், வென்ற அரசனுக்குக் கீழ்ப்பட்டவனாக இருந்து இவன் சொற்படி கேட்டு அரசாட்சி செலுத்த வேண்டும். கப்பம் கட்ட வேண்டும். வென்ற அரசன் அந்நாட்டுச் செல்வங்களை எடுத்துக் கொண்டு புறப்பட வேண்டும். அப்போது பொன், பொருள், ரத்தினங்களைத் தான் முடிசூட்டிய அந்தப் புதிய அரசனுக்கும் மந்திரி பிரதானிகளுக்கும் அன்பளிப்பாக அளிக்க வேண்டும்.

வெற்றி பெற்ற அரசன் தங்கள் செல்வங்களைக் கொண்டு போகும்போது அவர்களுக்கு வருத்தமாகத்தான் இருக்கும். ஆனால், தங்களுக்குப் பிடித்த பொன், பொருள், ரத்தினங்களை தங்களுக்கு அளித்துச் செல்லும்போது அவர்கள் சந்தோஷப்படுவார்கள்.

सर्व कर्मेदमायत्तं विधाने दैवमानुषे।
तयोर् दैवमचिन्त्यं तु मानुषे विद्यते क्रिया॥

**ஸர்வம் கர்மேதமாயத்தம் விதாநே தைவமானுஷே |**
**தயோர்தைவமசிந்தியம்து மானுஷே வித்யதே க்ரியா ||** **205**

செய்யும் எல்லாச் செயல்களும் பாபம், புண்ணியம் என்னும் இரண்டினைத் தருபவையே. இந்தப் பாப, புண்ணியங்களையே தெய்வச் செயல் என்று குறிப்பிடுவது வழக்கத்தில் உள்ளது. தான் ஏற்கெனவே சேர்த்து வைத்துள்ள பாப புண்ணியங்களை அறிய முடியாது. அந்தப் பாப புண்ணியங்களால் தனக்குக் கிடைக்க வேண்டியவற்றை அறிய முடியாது. ஆனால், முயற்சி செய்வது மனிதன் கையில் உள்ளது. எனவே, தன் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக எப்போதும் முயற்சி செய்து கொண்டிருக்க வேண்டும்.

सह वाऽपि व्रजेद् युक्तः सन्धिं कृत्वा प्रयत्नतः।
मित्रं हिरण्यं भूमिं वा सम्पश्यंस् त्रिविधं फलम्॥

**ஸஹ வா அபி வ்ரஜேத் யுக்த: ஸந்திம் க்ருத்வா ப்ரயத்நத: |**
**மித்ரம் ஹிரண்யம் பூமிம்வா ஸம்பஷ்யம்ஸ் த்ரிவிதம் பலம் ||** **206**

இவ்வாறாக யுத்தத்தால் வெற்றி பெற வேண்டிய எதிரியை யுத்தத்தால் வெல்ல வேண்டும். எதிரி அரசன் சமாதானத்துக்கு வருவானேயானால் அவனுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வளவு பூமி, இவ்வளவு நிதி (தங்கம், வைரம் முதலானவை) தனக்கு அளிக்கப்பட வேண்டும் என்றும் அதைப் பெற்றுக்

கொண்டுதான் சமாதானத்துக்கு உடன்படுவேன் என்றும் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும். ஒப்பந்தப்படி பூமியையும் நிதியையும் பெற்றுக்கொண்டு, மூன்றாவதாக அந்த அரசனின் நட்பையும் பெற்று நாடு திரும்ப வேண்டும்.

पार्ष्णिग्राहं च सम्प्रेक्ष्य तथाऽऽक्रन्दं च मण्डले।
मित्रादथाऽप्यमित्राद् वा यात्राफलमवाप्नुयात्॥

**பார்ஷ்ணிக்ராஹம் ச சம்ப்ரேக்ஷ்யததா ஆக்ரந்தம் ச மண்டலே |**
**மித்ராததா அப்யமித்ராத் வா யாத்ராபலமவாப்னுயாத் ||** 207

எதிரியின் மீது படையெடுப்பதற்காக யுத்த யாத்திரை கிளம்பும் மன்னன் தன் பக்கத்திலுள்ள நாட்டு அரசனைப் பற்றியும், பின்புறமுள்ள நாட்டு அரசனைப் பற்றியும் சிந்திக்க வேண்டும். அவர்கள் தனக்கு நண்பர்களாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, தன் நாட்டுக்கு தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். அவர்கள் தரும் நிதி, பூமி முதலியவற்றைப் பெற்றுக் கொண்டு அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும்.

हिरण्यभूमिसम्प्राप्त्या पार्थिवो न तथैधते।
यथा मित्रं ध्रुवं लब्ध्वा कृशमप्यायतिक्षमम्॥

**ஹிரண்ய பூமிஸம்ப்ராப்த்யா பார்திவோ ந ததைததே |**
**யதா மித்ரம் த்ருவம் லப்த்வா க்ருஷமப்யாயதிக்ஷமம் ||** 208

நல்ல நண்பன், மாபெரும் செல்வம். பூமி, தங்கம் போன்றவற்றை அதிகம் சேர்ப்பதாலேயே ஒரு அரசன் மேன்மேலும் மேன்மை பெறுவான் என்று கூற முடியாது. ஆனால் உத்தம நண்பனைப் பெற்ற அரசன் நிச்சயமாக மேன்மேலும் மேன்மை யடைவான்.

धर्मज्ञं च कृतज्ञं च तुष्टप्रकृतिमेव च।
अनुरक्तं स्थिरारम्भं लघु मित्रं प्रशस्यते॥

**தர்மக்ஞம் ச க்ருதக்ஞம் ச துஷ்ட ப்ரக்ருதிமேவ ச |**
**அனுரக்தம் ஸ்திரா ஆரம்பம் லகு மித்ரம் ப்ரஷஸ்யதே ||** 209

எத்தகைய அரச நண்பனால் உயர்வைப் பெற முடியும் என்று பார்ப்போம். முதலில் குணம். அவன் தர்மங்களை அறிந்தவனாகவும், தர்ம நெறி மாறாமல் வாழ்வதில் உறுதியானவனாகவும் இருக்க வேண்டும். இரண்டாவதாக, செய்ந்நன்றி மறவாதவனாக இருக்க வேண்டும்.

மூன்றாவதாக, அவன் நாட்டு மக்கள் அவனிடம் அன்பு பூண்டவர்களாகவும், தொல்லைகள் ஏதுமற்று செளக்கியமாக வாழ்பவர்களாகவும் இருக்க வேண்டும்.

நான்காவதாக, அவனுடைய அமைச்சர்களும் படைத் தலைவர்களும் அவனிடம் விசுவாசத்தோடிருப்பவர்களாக இருக்க வேண்டும்.

ஐந்தாவதாக, அவனுடைய கோட்டை பலம் வாய்ந்ததாக இருக்க வேண்டும்.

ஆறாவதாக, பலம் வாய்ந்த நால்வகைப் படைகளையும் வைத்திருப்பவனாக இருக்க வேண்டும்.

ஏழாவதாக, அவன் தனக்கு உண்மையான உத்தம நண்பனாக இருக்க வேண்டும். எதற்காகவும் நட்பை விட்டுக் கொடாத திடசித்தம் உள்ளவனாக இருக்க வேண்டும்.

இத்தகைய அரச நண்பனைப் பெற்றால் அதுவே பெரும் நிதியாகும். இத்தகைய நண்பனைப் பெற்றவன் பாக்கியசாலி.

प्राज्ञं कुलीनं शूरं च दक्षं दातारमेव च।
कृतज्ञं धृतिमन्तं च कष्टमाहुररिं बुधाः॥

**ப்ராக்ஞம் குளீநம் சூரம் ச தக்ஷம் தாதாரமேவ ச |**
**க்ருதக்ஞம் த்ருதிமந்தம் ச கஷ்டமாஹுரரிம் புதா: || 210**

உயர் குடியில் பிறந்தவனாகவும், படிப்பும் அறிவும் நிறைந்தவனாகவும், சூரனாகவும், திறமையாகச் செயல்படுபவனாகவும், செய்ந்நன்றியும் ஒழுக்கமும் உள்ளவனாகவும், உறுதியானவனாகவும் எதிரி அரசன் இருப்பானேயானால் அவனை வெல்வது அரிது. அத்தகையோனிடம் சந்தி செய்து கொள்வதே நல்லது.

आर्यता पुरुषज्ञानं शौर्यं करुणवेदिता।
स्थौललक्ष्यं च सततमुदासीनगुणोदयः॥

**ஆர்யதா புருஷஞானம் ஷௌர்யம் கருணவேதிதா |**
**ஸ்தௌளலக்ஷ்யம் ச ஸததமுதாஸீந குணோதய: || 211**

உயர் குணங்களும், மனிதர்களின் இயல்புகளைப் பற்றிய அறிவும், பராக்ரமமும், கருணையும், ஒழுக்கமும், வள்ளல் தன்மையும், எப்போதும் நட்பும் இன்றி பகையும் இன்றி இருக்கும் உதாசீன புத்தி இவைகளைக் கொண்ட அரசனையும் நண்பனாக்கிக் கொள்ள வேண்டும்.

**क्षेम्यां सस्यप्रदां नित्यं पशुवृद्धिकरीमपि।**
**परित्यजेन् नृपो भूमिमात्मार्थमविचारयन्॥**

**க்ஷேம்யாம் ஸஸ்யப்ரதாம் நித்யம் பசுவ்ருத்தி கரீமபி |**
**பரித்யஜேந் ந்ருபோ பூமிமாத்மார்தமவிசாரயந் ||** **212**

*மிகுந்தபடி விளைச்சலைத் தரக் கூடியதும், நீர்வசதி மிக்கதும், பயன் தரும் மரங்கள் நிறைந்ததும், புல்வெளிகள் இருப்பதால் பசுக்களுக்கு விருத்தி ஏற்படுத்துவதுமான பூமி உயர்ந்த பூமி. இதைக் கொடுத்து சமாதானம் செய்து கொள்ளக்கூடாது. சாதாரண பூமியையே கொடுக்க வேண்டும். ஆனால், தன்னைக் காத்துக் கொள்ள வேறு வழியில்லாதபோது, தன்னைவிடப் பெரியதல்ல இந்தப் பூமி என்று எண்ண வேண்டும். தன்னைக் காத்துக் கொண்டால் எதிர் காலத்தில் இழந்த பூமியை சம்பாதிக்க முடியும். தானே இல்லாதபோது அந்தப் பூமியால் ஏது பயன்? எனவே, தன்னைக் காத்துக் கொள்ள, எத்தகைய வளமான பூமியையும் விட்டுத்தான் கொடுக்க வேண்டும்.*

**आपदर्थं धनं रक्षेद् दारान् रक्षेद् धनैरपि।**
**आत्मानं सततं रक्षेद् दारैरपि धनैरपि॥**

**ஆபதர்த்தம் தனம்ரக்ஷேத் தாராந் ரக்ஷேத் தனைரபி |**
**ஆத்மாநம் ஸததம் ரக்ஷேத் தாரைரபி தனைரபி ||** **213**

*அரசன் மிகுந்த நிதியை சேர்த்து வைக்க வேண்டும். நாட்டுக்கு ஆபத்து வந்துற்ற காலத்து அந்த நிதியைக் கொடுத்து காத்துக்கொள்ள வேண்டும். அந்த நிதியால் அந்தப்புரப் பெண்களையும் காப்பாற்ற வேண்டும்.*

*நிதியையும் காப்பாற்ற முடியாது, அந்தப்புரப் பெண்களையும் காப்பாற்ற முடியாது என்னும்போது தப்பித்துச் சென்று தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.*

*இப்படிக் கூறப்பட்ட விஷயத்தில் ஒன்றை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். அரசன், பொக்கிஷத்தில் நிதி சேர்ப்பது பொருளாசையால் அல்ல. தன்னுடைய நாட்டை எதிரி தாக்க வரும்போது, அவனை வெல்ல முடியாது என்ற நிலையில் அவனிடம் சமாதானம் செய்து கொள்ள வேண்டும். அப்போது சிறிது பூமியையோ அல்லது பெரும் நிதியையோ அல்லது இரண்டையுமோ கொடுத்து சமாதானம் செய்ய வேண்டி வரும். இதற்காகவும் நிதி சேர்க்க வேண்டும்.*

*ஆனால், எல்லா சமயங்களிலும் நிதி காப்பாற்றும் என்று சொல்ல முடியாது. சமாதானத்துக்கு உடன்படாமல் எதிரி அரசன் தாக்கும்போது, மிகுந்த நிதியோடும், நல்ல துணைவர்களோடும் தன்*

அந்தப்புரத்துப் பெண்களை ரகசிய வழியாக வெளியேறச் செய்ய வேண்டும். அதற்குக்கூட அவகாசமின்றி தான் எதிரியிடம் பிடிபட்டு விடுவோம் என்று தெரிந்தால், தப்பித்துச் சென்று தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

सह सर्वाः समुत्पन्नाः प्रसमीक्ष्याऽऽपदो भृशम्।
संयुक्ताश् च वियुक्ताश् च सर्वोपायान् सृजेद् बुधः॥

**ஸஹ ஸர்வா: ஸமுத்பந்நா: ப்ரஸமீக்ஷ்யா ஆபதோ ப்ருஷம் |**
**ஸம்யுக்தாம்ஷ்ச வியுக்தாம்ஷ்ச ஸர்வோபாயாந் ஸ்ருஜேத் புத: || 214**

இயற்கையாலும், தன்னைச் சுற்றியிருப்பவர்களாலும், எதிரிகளாலும் என்று பலப்பல இன்னல்கள் ஒரே சமயத்தில் தன்னைத் தாக்கினாலும், அறிவாளியான மன்னன் சோர்ந்து போகக்கூடாது. எந்த எந்த உபாயங்களை, எந்த எந்த இடத்தில், எவர் எவரிடம் எவ்வாறு பிரயோகம் செய்தால் நிலைமைகளைச் சீர்திருத்தலாம் என்று யோசித்து கவலையும் பதட்டமுமின்றி காரியமாற்ற வேண்டும்.

उपेतारमुपेयं च सर्वोपायाश् च कृत्स्नशः।
एतत्त्रयं समाश्रित्य प्रयतेतार्थसिद्धये॥

**உபேதாரமுபேயம் ச ஸர்வோபாயாம்ஷ்ச க்ருத்ஸ்நஷ: |**
**ஏதத் த்ரயம் ஸமாஸ்ரித்ய ப்ரயதேதா அர்த்தஸித்தயே || 215**

முதலில், தான் செய்ய வேண்டிய காரியங்கள் என்னென்ன என்று அனைத்தையும் வரிசைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அடுத்ததாக, அதைச் செய்ய, தன்னிடமுள்ள சக்தி சாமர்த்தியங்களைப் பற்றி யோசிக்க வேண்டும்.

மூன்றாவதாக, தன்னுடைய சக்தி, சாமர்த்தியங்களைக் கொண்டு தான் செய்ய வேண்டிய காரியங்களை எப்படியெல்லாம் செய்ய முடியும் - என்னும் உபாயங்களைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும்.

இவ்வாறு மூன்று விஷயங்களை நன்கு ஆலோசித்துச் செய்தால் நிச்சயம் நினைத்ததை அடையலாம்.

एवं सर्वमिदं राजा सह सम्मन्त्र्य मन्त्रिभिः।
व्यायम्याऽऽप्लुत्य मध्याह्ने भोक्तुमन्तःपुरं विशेत्॥

**ஏவம் ஸர்வம் இதம்ராஜா ஸஹ ஸம்மந்த்ர்ய மந்த்ரிபி: |**
**வ்யாயம்யா ஆப்லுத்ய மத்யாஹ்நே போக்துமந்த: புரம் விஷேத் || 216**

இவ்வாறாக அரசன் மத்யான்னம் வரை மந்திரி பிரதானிகளுடன் யோசித்தல், கப்பம் வாங்குதல் முதலான ராஜ

காரியங்களைக் கவனிக்க வேண்டும். இன்றைய காலக் கணக்குப்படி மத்யான்னம் ஒன்று அல்லது ஒன்றரை மணியளவில் நீராடி, உண்டு, களைப்பு தீர்த்துக் கொள்வதற்காகத் தன் மாளிகைக்குச் செல்ல வேண்டும்.

**तत्राऽऽत्मभूतैः कालज्ञैरहार्यैः परिचारकैः ।**
**सुपरीक्षितमन्नाद्यमद्यान् मन्त्रैर् विषापहैः ॥**

**தத்ராத்ம பூதை: காலக்ஞைரஹார்யை: பரிசாரகை: |**
**சுபரீக்ஷிதமந்நாத்ய மத்யாந் மந்த்ரைர் விஷாஅபஹை: || 217**

அரசனுக்கு உணவு சமைக்கும் தலைமைச் சமையல்காரன், புதிய ஆளாகவோ, அரண்மனையைச் சேர்ந்தவனாகவோ இருந்தாலும் இதுநாள்வரை கூட இருந்தவர்களைத் தவிர்த்து மற்றவர்களை சமையல் கூடத்துக்குள் சேர்க்கக் கூடாது.

அரசன் தான் சாப்பிடுவதற்கு முன்பு, தனக்குப் பரிமாறப்பட்ட உணவுகளில் சிறிது சிறிது எடுத்து முதலில் நெருப்பிலும் பிறகு பறவைகளுக்கும் போட வேண்டும்.

விஷம் கலந்த உணவை நெருப்பில் போட்டதும் நெருப்பு படபடவென்ற ஓசையோடு நீலநிறமாக எரியும். பறவைகள் சாப்பிட்டதும் இறந்து போகும்.

இவ்வாறு பரீட்சித்துப் பார்த்த பிறகு அரசன் சாப்பிட வேண்டும்.

**विषघ्नैरगदैश् चाऽस्य सर्वद्रव्याणि योजयेत् ।**
**विषघ्नानि च रत्नानि नियतो धारयेत् सदा ॥**

**விஷக்னைரகதைஷ் சாஅஸ்ய ஸர்வத்ரவ்யாணி யோஜயேத் |**
**விஷக்நாநி ச ரத்நாநி நியதோ தாரயேத் ஸதா || 218**

விஷத்தை முறியடிக்கும் மூலிகைகளோடு வைத்தியர்கள் அருகிலிருக்க வேண்டும். விஷத்தை முறிக்கும் ரத்தினங்களை எப்போதும் அணிந்து கொண்டிருக்க வேண்டும்.

**परीक्षिताः स्त्रियश् चैनं व्यजनोदकधूपनैः ।**
**वेषाऽऽभरणसंशुद्धाः स्पृशेयुः सुसमाहिताः ॥**

**பரீக்ஷிதா: ஸ்த்ரியஷ் சைநம் வ்யஜநோதகதூபநை: |**
**வேஷா ஆபரணஸம்சுத்தா: ஸ்ப்ருஷேயு: சுசமாஹிதா: || 219**

அரச மாளிகைக்குள் சாம்பிராணி, அகில் முதலானவற்றைக் கொண்டு தூபம் போட வரும் பெண்கள், அரசனுக்கு சாமரம் வீச வரும் பெண்கள், தண்ணீர் கொண்டு வரும் பெண்கள் - இவர்கள் அரசனுடைய சயனகிருஹம் வரை செல்பவர்கள். எனவே, இவர்கள்

வேலை செய்ய அரண்மனைக்குள் வரும்போது, அவர்களின் ஆடை ஆபரணங்களை நன்கு சோதித்த பிறகே உள்ளே அனுப்ப வேண்டும். ஒற்றர்களைக் கொண்டு அவர்களின் முழு நேர நடவடிக்கைகளையும் கண்காணிக்க வேண்டும்.

एव प्रयत्न कुर्वीत यानशय्याऽऽसनाऽशने।
स्नाने प्रसाधने चैव सर्वाऽलङ्कारकेषु च॥

**ஏவம் ப்ரயத்நம் குர்வீத யாநஷய்யா ஆஸநாஅஷநே |**
**ஸ்நாநே ப்ரஸாதநே சைவ ஸர்வா அலங்காரகேஷு ச ||** 220

அவ்வாறே அரசன் ஏறுவதற்கு முன் வாகனங்களை நன்கு சோதிக்க வேண்டும். வாகன ஓட்டிகளையும் சோதிக்க வேண்டும். அவர்களையும் முழு நேரமும் ஒற்றர்களைக் கொண்டு கண்காணிக்க வேண்டும். அவ்வாறே அவரது படுக்கை, படுக்கை விரிப்பவர்கள், நீராடும் தண்ணீர், நீராட்டுவிப்பவர்கள், அரசன் அணியும் ஆடை, ஆபரணங்கள், அலங்கரிப்பவர்கள் சோதிக்கப்பட வேண்டும். இவற்றில் அஃறிணைப் பொருட்களான வாகனம், படுக்கை, தண்ணீர், ஆபரணங்கள், ஆடைகள் முதலிய அனைத்தும் ஒவ்வொரு முறையும் அரசன் உபயோகப்படுத்துவதற்கு முன்பு சோதிக்கப்பட வேண்டும்.

வாகன ஓட்டிகள், படுக்கை விரிப்பவர்கள், நீராட்டுவிப்பவர்கள், அலங்கரிப்பவர்கள், சாமரம் வீசுபவர்கள், தூபம் போடுபவர்கள், தண்ணீர் கொண்டு வருபவர்கள் முதலான அனைவரையும் ஒற்றர்களைக் கொண்டு இரவும் பகலும் கண்காணிக்க வேண்டும்.

भुक्तवान् विहरेच् चैव स्त्रीभिरन्तःपुरे सह।
विहृत्य तु यथाकाल पुनः कार्याणि चिन्तयेत्॥

**புக்தவாந் விஹரேச் சைவ ஸ்த்ரீபிரந்த:பூரே ஸஹ |**
**விஹ்ருத்ய து யதாகாலம் புந: கார்யாணி சிந்தயேத் ||** 221

அரசன் உணவு உண்ட பிறகு தன்னிஷ்டமாக சற்று நேரம் நடக்க வேண்டும். அந்தப்புரப் பெண்கள் வந்தாலும் அவர்களுடன் பேசலாம். அதன் பிறகு மூன்று மணியளவில் அடுத்தபடியான தன் அலுவல்களைக் கவனிக்க வேண்டும்.

अलङ्कृतश् च सम्पश्येदायुधीयं पुनर् जनम्।
वाहनानि च सर्वाणि शस्त्राण्याभरणानि च॥

**அலங்க்ருதஷ்ச ஸம்பஷ்யேதாயுதீயம் புநர்ஜநம் |**
**வாஹநாநி ச ஸர்வாணி ஷஸ்த்ராண்யாபரணாநி ச ||** 222

அரசன், சர்வாலங்கார பூஜிதனாகக் கிளம்பி, யானைப் படை, குதிரைப் படை, தேர்ப் படை, காலாட் படை முதலானவைகளைப்

பார்வையிட வேண்டும். ஆயுதச் சாலைகளையும், ஆபரணச் சாலைகளையும் பார்வையிட வேண்டும்.

सन्ध्यां चोपास्य शृणुयादन्तर्वेश्मनि शस्त्रभृत्।
रहस्याऽऽख्यायिनां चैव प्रणिधीनां च चेष्टितम्॥

**ஸந்த்யாம் சோபாஸ்ய ஷ்ருணு யாதந்தர்வேஷ்மநி ஷஸ்த்ரப்ருத் |**
**ரஹஸ்யா ஆக்யாயிநாம் சைவ ப்ரணிதீநாம் ச சேஷ்டிதம் || 223**

சந்தி நேரத்தில் சந்தியாவந்தனம் செய்ய வேண்டும். அதன் பிறகு ஆயுதபாணியாக ரகசிய அறையில் ஒற்றர்களைச் சந்திக்க வேண்டும். தனித்தனியாக அவர்களிடம் விவரங்களை அறிய வேண்டும்.

गत्वा कक्षान्तरं त्वन्यत् समनुज्ञाप्य तं जनम्।
प्रविशेद् भोजनार्थं च स्त्रीवृतोऽन्तःपुरं पुनः॥

**கத்வா கக்ஷாந்தரம் த்வந்யத்ஸமனுக்ஞாப்ய தம் ஜநம் |**
**ப்ரவிஷேத் போஜநார்தம் ச ஸ்த்ரீவ்ருதோ அந்த:புரம் புந: || 224**

ஒரு மாளிகையின் ரகசிய அறையில் ரகசிய ஒற்றர்களை, மிக முக்கியமானவர்களைப் பார்த்துவிட்டு பிறகு வேறொரு அறையில் காத்திருக்கும் பொதுவான ஒற்றர்களைச் சந்திக்க வேண்டும். அவர்களிடமும் தனித்தனியாகப் பேசி ரகசியச் செய்திகளை அறிந்து கொள்ள வேண்டும். அதன் பிறகு உணவு உண்பதற்காக பணிமகளிருடன் அந்தப்புரத்துக்குப் போக வேண்டும்.

तत्र भुक्त्वा पुनः किञ्चित् तूर्यघोषैः प्रहर्षितः।
संविशेत् तु यथाकालमुत्तिष्ठेच् च गतक्लमः॥

**தத்ரபுக்த்வா புந: கிஞ்சித் தூர்யகோஷை: ப்ரஹர்ஷித: |**
**ஸம்விஷேத் து யதாகால முத்திஷ்டேச்ச கதக்லம: || 225**

அங்கு உணவை உண்ட பிறகு, சிறிது நேரம் கீதம், வாத்தியங்களைக் கேட்ட பிறகு உறங்கச் செல்ல வேண்டும். அதிகாலையில் உற்சாகத்தோடு துயில் எழ வேண்டும்.

एतद् विधानमातिष्ठेदरोगः पृथिवीपतिः।
अस्वस्थः सर्वमेतत् तु भृत्येषु विनियोजयेत्॥

**ஏதத் விதாநமாதிஷ்டேதரோக: ப்ருதிவீபதி: |**
**அஸ்வஸ்த: ஸர்வமேதத் து ப்ருத்யேஷு விநியோஜயேத் || 226**

ஆரோக்கியமான அரசன் இவ்வாறாகக் காரியங்களாற்ற வேண்டும். உடல் நிலை கெட்டிருக்கும்போது தக்க மந்திரிகளைக் கொண்டு காரியமாற்றச் செய்ய வேண்டும்.

(ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 8

व्यवहारान् दिदृक्षुस् तु ब्राह्मणैः सह पार्थिवः।
मन्त्रज्ञैर् मन्त्रिभिश् चैव विनीतः प्रविशेत् सभाम्॥

**வ்யவஹாராந் தித்ருக்ஷுஸ்து ப்ராஹ்மணை: ஸஹ பார்திவ: |**
**மந்த்ரக்ஞைர் மந்த்ரி பிஷ்சைவ விநீத: ப்ரவிஷேத் ஸபாம் ||** 1

*நாட்டு விவகாரங்களைக் கவனிக்கவும், தன்னைக் காண வருபவர்களிடம் அவர்கள் குறை நிறைகளை விசாரித்தறியவும், நீதியோடு வாத பிரதிவாதங்களை விசாரித்தறியவும் வேண்டி அரசன், ஆலோசனைகள் வழங்கத்தக்க மந்திரிகள், பஞ்சாங்கப் பிராம்மணர்கள் முதலானோருடன், அடக்கமாக சபா மண்டபத்துக்குள் பிரவேசிக்க வேண்டும்.*

तत्राऽऽसीनः स्थितो वाऽपि पाणिमुद्यम्य दक्षिणम्।
विनीतवेषाऽऽभरणः पश्येत् कार्याणि कार्यिणाम्॥

**தத்ராஸீந: ஸ்திதோவாபி பாணிமுத்யம்ய தக்ஷிணம் |**
**விநீதவேஷா ஆபரண: பஷ்யேத் கார்யாணி கார்யிணாம் ||** 2

*அரசன், தனது சிம்மாசனத்தில் அமர்ந்து, சபை நடவடிக்கைகளைத் தொடங்கலாம் என்பதை தனது வலது கையை உயர்த்தி சைகையால் உணர்த்த வேண்டும். தன்னுடைய விநய குணமே தனது ஆபரணங்களாக விளங்கும் வண்ணம், தான் அமர்ந்திருப்பது தர்மாசனம் என்ற பக்தியோடு அன்றைய விவகாரங்களைக் கவனிக்க வேண்டும்.*

प्रत्यहं देशदृष्टैश् च शास्त्रदृष्टैश् च हेतुभिः।
अष्टादशसु मार्गेषु निबद्धानि पृथक्पृथक्॥

**ப்ரத்யஹம் தேஷத்ருஷ்டைஷ்ச ஷாஸ்த்ர த்ருஷ்டைஷ் ச ஹேதுபி: |**
**அஷ்டாதஷசு மார்கேஷு நிபத்தாநி ப்ருதக் ப்ருதக் ||** 3

*வழக்குகளை விசாரிக்க வேண்டி வரும்போது, சாஸ்திரம் கூறியிருப்பதையும், சாட்சிகள் கூறுவதையும் நன்கு கவனிக்க வேண்டும்.*

*வழக்குகள் மொத்தம் பதினெட்டு வகைப்படும்:*

तेषामाद्यमृणाऽऽदानं निक्षेपोऽस्वामिविक्रयः।
सम्भूय च समुत्थानं दत्तस्याऽनपकर्म च॥

**தேஷாமாத்யம்ருணா ஆதாநம் நிக்ஷேபோ அஸ்வாமிவிக்ரய: |**
**ஸம்பூய ச ஸமுத்தாநம் தத்தஸ்யா அநபகர்ம ச ||** 4

वेतनस्यैव चाऽदानं संविदश् च व्यतिक्रमः।
क्रयविक्रयाऽनुशयो विवादः स्वामिपालयोः॥

**வேதநஸ்யைவ சாஆதாநம் ஸம்விதஷ்ச வ்யதிக்ரம: |**
**க்ரயவிக்ரயா அநுஷயோ விவாத: ஸ்வாமி பாலயோ: ||** 5

सीमाविवादधर्मश् च पारुष्ये दण्डवाचिके।
स्तेयं च साहसं चैव स्त्रीसङ्ग्रहणमेव च॥

**ஸீதா விவாததர்மஷ்ச பாருஷ்யே தண்டவாசிகே |**
**ஸ்தேயம் ச ஸாஹஸம் சைவ ஸ்த்ரீஸங்க்ரஹணமேவச ||** 6

स्त्रीपुंधर्मो विभागश् च द्यूतमाह्वय एव च।
पदान्यष्टादशैतानि व्यवहारस्थिताविह॥

**ஸ்த்ரீபும் தர்மோ விபாகஷ்ச த்யூதமாஹ்வய ஏவச |**
**பதாந்யஷ்டா தஷைதாநி வ்யவஹாரஸ்திதாவிஹ ||** 7

*1. கடன் கொடுக்கல், வாங்கல்*

*2. அடைக்கலமாக வைக்கக் கொடுத்த பொருள் விவகாரம்*

*3. தன் உடைமை அல்லாதவற்றை விற்றல்*

*4. கூட்டுத் தொழிலில் வரும் விவகாரங்கள்*

*5. வாக்குத் தவறுதல்*

*6. கூலி கொடாமை*

*7. வாங்குதல் விற்றலில் வரும் விவகாரங்கள்*

*8. இடையனுக்கும் எஜமானனுக்கும் இடையில் வரும் விவகாரங்கள்*

*9. ஊர் எல்லைகளைப் பற்றியவை*

*10. ஒருவர் மீதொருவர் வசை மொழிதல்*

*11. ஏமாற்றி பணத்தைப் பறித்தல்*

*12. பலாத்காரமாகப் பணத்தைப் பறித்தல்*

*13. பெண் நெறியிழந்து பிற ஆடவனைச் சேர்தல்*

*14. ஆண், பெண் விவகாரங்கள்*

*15. பாகப் பிரிவினை*

*16. சூதாட்டம்*

*17. பந்தயம்*

*18. உடன்படிக்கையை மீறுதல்*

*- என்னும் இவையே அந்தப் பதினெட்டாகும்.*

**एषु स्थानेषु भूयिष्ठं विवादं चरतां नृणाम्।
धर्मं शाश्वतमाश्रित्य कुर्यात् कार्यविनिर्णयम्॥**

**ஏஷுஸ்தாநேஷு பூயிஷ்டம் விவாதம் சரதாம் ந்ருணாம் |
தா்மம் ஷாஷ்வதமாஸ்ரித்ய குா்யாத் காா்ய விநிா்ணயம் || 8**

*இவ்வாறாக வரும் விவகாரங்களை நன்கு விசாரிக்க வேண்டும். சாதாரண வழக்குகள் அதிகமாக வரவே செய்யும். இவைகளை விசாரித்துத் தர்மப்படி தீர்ப்பு வழங்க வேண்டும்.*

**यदा स्वयं न कुर्यात् तु नृपतिः कार्यदर्शनम्।
तदा नियुञ्ज्याद् विद्वांसं ब्राह्मणं कार्यदर्शने॥**

**யதாஸ்வயம் நகுா்யாத்து ந்ருபதி: காா்யதா்ஷநம் |
ததா நியுஞ்ஜ்யாத் வித்வாம்ஸம் ப்ராஹ்மணம் காா்யதா்ஷநே || 9**

*அரசன், தான் முக்கியமான மற்ற காரியங்களில் ஈடுபட்டிருக்கும் போதோ அல்லது பிணியுற்றிருக்கும் போதோ நேரடியாக இந்த வழக்குகளை விசாரிக்க முடியாது. எனவே, அப்போது கற்றறிந்த பிராம்மணனைக் கொண்டு விசாரணை நடத்த வேண்டும்.*

**सोऽस्य कार्याणि सम्पश्येत् सभ्यैरेव त्रिभिर् वृतः।
सभामेव प्रविश्याऽग्र्यामासीनः स्थित एव वा॥**

**ஸோ அஸ்ய காா்யாணி ஸம்பஷ்யேத் ஸப்யைரேவ த்ரிபிா்வ்ருத: |
ஸபாமேவ ப்ரவிஷ்யாகிா்யாமாஸீந: ஸ்தித ஏவ வா || 10**

*அரசனால் நியமிக்கப்பட்ட அந்தப் பிராம்மணன் தன்னுடன் மூன்று அறிஞர்களை அழைத்துக் கொண்டு, விசாரணை மண்டபத்துக்கு வரவேண்டும். அங்கே வழக்குகளை நின்று கொண்டோ அல்லது ஒரு ஆசனத்தில் அமர்ந்து கொண்டோ விசாரிக்கலாம்.*

**यस्मिन् देशे निषीदन्ति विप्रा वेदविदस् त्रयः।
राज्ञश् चाऽधिकृतो विद्वान् ब्रह्मणस् तां सभां विदुः॥**

**யஸ்மின் தேஷே நிஷீதந்தி விப்ரா வேதவிதஸ் த்ரய: |
ராக்ஞஷ் சாஅதிக்ருதோ வித்வாந் ப்ரஹ்மணஸ் தாம் ஸபாம் விது: || 11**

மூன்று வேதங்களையும் அறிந்த மூன்று பிராம்மணர்களும் அரசனால் நிர்ணயிக்கப்பட்ட பிராம்மணனும், ஆக இந்த நால்வர் இருக்கும் சபையானது பிரம்மதேவருடைய சபைக்குச் சமம் என்று அறிஞர் கூறுவர்.

धर्मो विद्धस् त्वधर्मेण सभां यत्रोपतिष्ठते।
शल्यं चाऽस्य न कृन्तन्ति विद्धास् तत्र सभासदः॥

**தர்மோ வித்தஸ் த்வதர்மேண ஸபாம் யத்ரோபதிஷ்டதே |**
**ஷல்யம் சாஅஸ்ய ந க்ருந்தந்தி வித்தாஸ் தத்ர ஸபாஸத: || 12**

அதர்மத்தால் நிலைகுலைந்த தர்மம், தீர்ப்புக்காக வழக்காடு மன்றத்துக்கு வரும்போது, நீதிபதி ஸ்தானத்தில் இருக்கும் அந்த நால்வரும் தர்மத்தைக் காப்பாற்றாவிடில் மிகுந்த பாவத்துக்காளாவர்.

सभां वा न प्रवेष्टव्यं वक्तव्यं वा समञ्जसम्।
अब्रुवन् विब्रुवन् वाऽपि नरो भवति किल्विषी॥

**ஸபாம் வா ப்ரவேஷ்டவ்யம் வக்தவ்யம்வா ஸமஞ்ஜஸம் |**
**அப்ருவந் விப்ருவந் வாஅபி நரோ பவதி கிள்விஷீ || 13**

எடுத்ததற்கெல்லாம் வழக்காடு மன்றத்துக்குப் போகக் கூடாது. போக நேர்ந்தால், நீதிபதிகள் கேட்கும் கேள்விகளுக்கு உண்மையையே கூற வேண்டும். அவ்வாறின்றி பொய் பேசுபவனும், உண்மையை மறைத்து மௌனமாக இருப்பவனும் உடனடியாக பாபத்தை அடை வார்கள்.

यत्र धर्मो ह्यधर्मेण सत्यं यत्राऽनृतेन च।
हन्यते प्रेक्षमाणानां हतास् तत्र सभासदः॥

**யத்ர தர்மோ ஹ்யதர்மேண ஸத்யம் யத்ரா அந்ருதேந ச |**
**ஹந்யதே ப்ரேக்ஷமாணாநாம் ஹதாஸ் தத்ர ஸபாஸத: || 14**

எங்கு, நீதிபதிகள் முன்னிலையிலேயே தர்மம் அதர்மத்தாலும், சத்தியம் பொய்யாலும் அடிக்கப்படுகிறதோ அங்கு நீதிபதிகள் அந்தப் பாபத்தால் அடிக்கப்படுகிறார்கள்.

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः।
तस्माद् धर्मो न हन्तव्यो मा नो धर्मो हतो वधीत्॥

**தர்மஏவ ஹதோ ஹந்தி தர்மோ ரக்ஷதி ரக்ஷித: |**
**தஸ்மாத் தர்மோ ந ஹந்தவ்யோ மா நோ தர்மோ ஹதோ வதீத் || 15**

எவன் தர்மத்தை அழிக்கிறானோ, அவனைத் தர்மம் அழிக்கும். எவன் தர்மத்தைக் காப்பாற்றுகிறானோ அவனை தர்மம் காப்பாற்றும். எனவே, தர்மத்தை அழிக்கக் கூடாது. தர்மம் அழியாமலிருந்து நம்மைக் காப்பாற்றட்டும்.

वृषो हि भगवान् धर्मस् तस्य यः कुरुते ह्यलम्।
वृषलं तं विदुर् देवास् तस्माद् धर्मं न लोपयेत्॥

**வ்ருஷோ ஹி பகவாந் தர்மஸ்தஸ்ய ய: குருதே ஹ்யலம் |**
**வ்ருஷளம் தம் விதுர்தேவாஸ் தஸ்மாத் தர்மம் ந லோபயேத் || 16**

அனைத்து நன்மைகளையும் அளிக்கின்ற தர்மம் மிகமிக உயர்ந்தது; தெய்வ உருவானது. இத்தகைய தர்மத்தை எவன் உதாசீனப்படுத்துகிறானோ, அவனை, தர்மத்தைக் கொல்பவனாக எண்ண வேண்டும்.

மழை இந்த இடம், அந்த இடம் என்று பாகுபாடின்றி எங்கும் பொழியும். அவ்வாறே தர்மமும் படித்தவன் படிக்காதவன், பிராம்மணன் - சூத்ரன், அரசன் - ஆண்டி என்றெல்லாம் வித்தியாசம் பார்க்காது. யாரெல்லாம் தன்னைக் காப்பாற்றுகிறார்களோ, அதாவது தர்மம் தவறாமல் நடக்கிறார்களோ அவர்களையெல்லாம் தர்மம் காப்பாற்றும்.

எனவே எப்போதும் தர்ம மறிந்து, தர்ம வழியில் வாழ்க்கை நடத்த வேண்டும்.

एक एव सुहृद् धर्मो निधनेऽप्यनुयाति यः।
शरीरेण समं नाशं सर्वमन्यद् धि गच्छति॥

**ஏக ஏவ சுஹ்ருத் தர்மோ நிதநே அப்யனு யாதிய: |**
**ஷரீரேண ஸமம் நாஷம் ஸர்வமந்யத்தி கச்சதி || 17**

மனிதனுக்கு தர்மம் ஒன்றே நல்ல நண்பன். அவனுடைய நன்மையை விரும்பும் நண்பன். மரணத்துக்குப் பிறகும் கைவிடாமல் உடனிருக்கும் நண்பன். மற்றவையெல்லாம் மரணத்தோடு தொடர்பற்றுப் போகும்.

पादोऽधर्मस्य कर्तारं पादः साक्षिणमृच्छति।
पादः सभासदः सर्वान् पादो राजानमृच्छति॥

**பாதோ அதர்மஸ்ய கர்தாரம் பாத: ஸாக்ஷிணம்ருச்சதி |**
**பாத: ஸபாஸத: ஸர்வாந் பாதோ ராஜாநம்ருச்சதி || 18**

தர்மத்துக்கு நான்கு கால்கள். வழக்கு விசாரணையில் தர்மம் நசுக்கப்படுமானால் அதனால் ஏற்படும் பாபமும் நான்கு பாகங்களாகும். ஒரு பாகம், அநியாயம் செய்தவனைச் சேரும். அடுத்த பாகம், பொய்சாட்சி சொன்னவனைச் சேரும். மூன்றாவது பாகம், நீதி விசாரணை நடத்திய நீதிபதிகளைச் சேரும். நான்காவது பாகம், அரசனைச் சேரும்.

राजा भवत्यनेनास् तु मुच्यन्ते च सभासदः।
एनो गच्छति कर्तारं निन्दार्हो यत्र निन्द्यते॥

**ராஜா பவத்யநேநாஸ்து முச்யந்தே ச ஸபாஸத: |**
**ஏநோ கச்சதி கர்தாரம் நிந்தாஅர்ஹோ யத்ர நிந்த்யதே ||** 19

*வழக்கில் பாபிகள் தண்டிக்கப்பட்டால், அரசனுக்குப் பாபம் பற்றாது; நீதிபதிகளும் பாபத்தை அடைய மாட்டார்கள். பாபிகள் யார் யாரோ அவர்களையே பாபம் பற்றும்.*

जातिमात्रोपजीवी वा कामं स्याद् ब्राह्मणब्रुवः।
धर्मप्रवक्ता नृपतेर् न तु शूद्रः कथञ्चन॥

**ஜாதிமாத்ரோபஜீவீவா காமம் ஸ்யாத் ப்ராஹ்மணப்ருவ: |**
**தர்மப்ரவக்தா ந்ருபதேர் நது சூத்ர: கதஞ்சந ||** 20

*வழக்கை விசாரிக்க, மூன்று வேதங்களையும் படிக்காத ஜாதியால் மட்டும் பிராம்மணனாக இருப்பவனைக்கூட அரசன் விருப்பப்பட்டால் நியமிக்கலாம். ஆனால் சூத்திரனை அந்தப் பதவிக்கு நியமிக்கக் கூடாது. இதற்கான காரணத்தைப் பார்ப்போம். பிராம்மணன் வேதம் படிக்காதவனாக இருக்கலாம். ஆனால் தாத்தா, தந்தை வழியாக தர்மங்களைப் பற்றிய ஞானம் முழுமையாக இருக்கும். தான் நன்கு விசாரிக்காமலோ, வேறு எதற்காகவோ தவறான தீர்ப்பளித்தால், நீதியைக் கேட்டு வந்தவனுக்கு நீதி கிடைக்காமல் போனால், அதனால் தான் அடையும் பாபகதி என்ன என்பது தெரியும். பாபத்தைக் கண்டு பயப்படுவான். தர்மத்தை அனுஷ்டிப்பதும், தர்மம் எது என்று எடுத்துரைப்பதுமே பிராம்மணனின் முழுநேர வேலை. எனவே இத்தகையவன் தவறான தீர்ப்பளிக்க மாட்டான்.*

*சூத்திரன் முழுநேரமும் உழைப்பவன். சாஸ்திர அறிவு அவனுக்குக் கிடையாது. பாபத்தின் பலன் எவ்வளவு கொடியது என்று கேள்விப்பட்டிருந்தாலும்கூட, அது அவ்வளவு ஆழமாக அவன் மனத்தில் பதிந்திருக்காது. மேலும் தர்மம் மிகமிக நுட்பமானது. தர்ம சாஸ்திரத்தை நன்கு அறிந்தவர்களேகூட சில சமயம் தர்மத்தை நிர்ணயிப்பதில் திணறுவார்கள்.*

*சாட்சிகளை விசாரித்தும், வாதப்பிரதிவாதங்களைக் கேட்டும் மட்டும் ஒரு வழக்கில் நீதியை நிலைநிறுத்த முடியாது. கூரிய மதியும், தர்மத்தின் நுட்பங்களும் தெரிந்திருக்கும் ஒருவனே வழக்கில் உண்மையை அறிய முடியும்.*

यस्य शूद्रस् तु कुरुते राज्ञो धर्मविवेचनम्।
तस्य सीदति तद् राष्ट्रं पङ्के गौरिव पश्यतः॥

**யஸ்ய சூத்ரஸ்து குருதே ராக்ஞோ தர்மவிவேசநம் |**
**தஸ்ய சீததி தத்ராஷ்ட்ரம் பங்கே கௌரிவ பஷ்யத: ||** 21

*எந்த அரசன் ஞானமே இல்லாத ஒருவனை நீதிபதி ஸ்தானத்தில் நிறுத்துகிறானோ, அவனுடைய ராஜ்ஜியம், புதைச் சேற்றில் அகப்பட்ட பசுவைப் போல, பார்த்துக் கொண்டிருக்கும்போதே நசித்து விடும்.*

यद् राष्ट्रं शूद्रभूयिष्ठं नास्तिकाऽऽक्रान्तमद्विजम्।
विनश्यत्याशु तत् कृत्स्नं दुर्भिक्षव्याधिपीडितम्॥

**யத் ராஷ்ட்ரம் சூத்ரபூயிஷ்டம் நாஸ்திகா ஆக்ராந்தமத்விஜம் |**
**விநஷ்யத்யாசு தத்க்ருத்ஸ்நம் துர்பிக்ஷ வியாதி பீடிதம் ||** 22

*நீதிமான்களும், தர்மபுத்திரர்களும், சிரேஷ்டர்களும் இல்லாத நாடு பஞ்சத்தாலும் நோய்களாலும் நசிக்கும்.*

धर्माऽऽसनमधिष्ठाय संवीताऽङ्गः समाहितः।
प्रणम्य लोकपालेभ्यः कार्यदर्शनमारभेत्॥

**தர்மா ஆஸநமதிஷ்டாய ஸம்வீதாஅங்க: ஸமாஹித: |**
**ப்ரணம்ய லோகபாலேப்ய: கார்யதர்ஷநமாரபேத் ||** 23

*நீதிபதி வழக்கை விசாரிக்க தனக்குரிய ஆசனத்தில் அமர வேண்டும். உடலை நன்கு போர்த்திக் கொண்டிருக்க வேண்டும். அமர்ந்ததும் லோகபாலர்களை வணங்க வேண்டும். (இந்திரனும், அக்னியும், யமதர்மனும், நிருதியும், வருணனும், வாயுவும், குபேரனும், ஈசானியனும் லோகபாலர்கள்.) அதன் பிறகு வழக்கை விசாரிக்கத் தொடங்க வேண்டும்.*

अर्थाऽनर्थावुभौ बुद्ध्वा धर्माऽधर्मौ च केवलौ।
वर्णक्रमेण सर्वाणि पश्येत् कार्याणि कार्यिणाम्॥

**அர்தா அநர்தாவுபௌ புத்வா தர்மாதர்மௌ ச கேவலௌ |**
**வர்ணக்ரமேண ஸர்வாணி பஷ்யேத் கார்யாணி கார்யிணாம் ||** 24

*வழக்கின் தன்மையை அறிந்து, தர்மத்தையும் அதர்மத்தையும் நன்கு பரிசீலித்து, அந்த வழக்கினால் யாருக்கு நன்மை, யாருக்கு தீமை என்பதையும் யோசித்து சாட்சிகளை விசாரிக்க வேண்டும். சாட்சிகள் இருக்கும்போது பிராம்மணரை முதலிலும், க்ஷத்திரியரை அடுத்தும், வைசியரை அதற்கடுத்தும், இறுதியாக சூத்திரரையும் விசாரிக்க வேண்டும்.*

முதலில் சொன்ன சாட்சிகளின் சாட்சியத்தைக் கேட்டு பின்னால் வரும் சாட்சிகள் பிறழக்கூடும். எனவே சத்தியத்துக்கும், தர்மத்துக்கும் கட்டுப்பட்டவர்களை முதலில் விசாரிக்க வேண்டும்.

**बाह्यैर् विभावयेल् लिङ्गैर् भावमन्तर्गतं नृणाम्।**
**स्वरवर्णेङ्गिताऽऽकारैश् चक्षुषा चेष्टितेन च॥**

**பாஹ்யேர் விபாவயேல் லிங்கைர் பாவமந்தர்கதம் ந்ருணாம் |**
**ஸ்வரவர்ணேங்கிதா ஆகாரைஷ்சக்ஷுஷா சேஷ்டிதேந ச || 25**

**आकारैरिङ्गितैर् गत्या चेष्टया भाषितेन च।**
**नेत्रवक्त्रविकारैश् च गृह्यतेऽन्तर्गतं मनः॥**

**ஆகாரைரிங்கிதைர் கத்வா சேஷ்டயா பாஷிதேந ச |**
**நேத்ரவக்த்ரவிகாரைஷ் ச க்ருஹ்யதேஅந்தர்கதம் மந: || 26**

வெறுமனே சாட்சிகள் சொல்லும் வார்த்தைகளை மட்டும் கேட்டுக் கொள்ளக் கூடாது. அவர்களை விசாரிக்கும்போது, குரலில் ஏற்படக்கூடிய நடுக்கம், பதட்டம், நிமிர்ந்து பார்க்க முடியாமல் தடுமாறுதல், உடல் நெளிதல், கைகளையும் கால்களையும் சாதாரணமாக வைத்திருக்க முடியாமல் திணறுதல், முகம் நிறம் மாறுதல், கண்களில் தோன்றும் பாவங்கள், உடல் அசைவுகள் இவை அனைத்தையும் கண்காணிக்க வேண்டும்.

மேலும் பேசுவதற்கு முன்பு எச்சிலை விழுங்குதல், விசாரணைக்காக எழுந்து நடந்து வரும்போது நடையிலுள்ள தன்மைகள் இவைகளையும் கண்காணிக்க வேண்டும்.

**बालदायादिकं रिक्थं तावद् राजाऽनुपालयेत्।**
**यावत् स स्यात् समावृत्तो यावच् चाऽतीतशैशवः॥**

**பாலதாயாதிகம் ரிக்தம் தாவத் ராஜா அநுபாலயேத் |**
**யாவத் ஸ ஸ்யாத் ஸமாவ்ருத்தோ யாவச்சா அதீதஷைஷவ: || 27**

தாய் தந்தையிழந்த சிறுவனுடைய சொத்தை, மற்றவர்கள் அபகரிக்காமல் அரசே காக்க வேண்டும். அவன் குருகுலத்தில் படித்தால் படித்து முடித்து திரும்ப வந்த பிறகு அவனிடம் சொத்தை ஒப்படைக்க வேண்டும். அன்றேல் சிறுவன் வாலிப வயதை அடைந்ததும் அவனிடம் ஒப்படைக்க வேண்டும்.

**वशाऽपुत्रासु चैवं स्याद् रक्षणं निष्कुलासु च।**
**पतिव्रतासु च स्त्रीषु विधवास्वातुरासु च॥**

**வஷா அபுத்ராசு சைவம்ஸ்யாத் ரக்ஷணம் நிஷ்குலாசு ச |**
**பதிவ்ரதாசு ச ஸ்திரீஷு விதவாஸ்வாதுராசு ச || 28**

கணவனால் கைவிடப்பட்ட மலடிகள், கணவனையும் பிள்ளைகளையும் இழந்த பெண்கள், நாட்டை விட்டுப் போனவனுடைய மனைவி, அனாதையான பெண்கள், விதவைகள் - இவர்களின் சொத்துகளையும் அரசனே பாதுகாக்க வேண்டும்.

जीवन्तीनां तु तासां ये तद् धरेयुः स्वबान्धवाः।
तान् छिष्याच् चौरदण्डेन धार्मिकः पृथिवीपतिः॥

**ஜீவந்தீநாம்து தாஸாம்யே தத் தரேயு: ஸ்வபாந்தவா: |**
**தாந்சிஷ்யாச் சௌரதண்டேந தார்மிக: ப்ருதிவீபதி: ||** 29

அவர்களுடைய சொத்துகளை உறவினர்கள் அபகரித்துக் கொண்டால், அதைத் திருட்டுக் குற்றமாகவே கொள்ள வேண்டும். திருட்டுக்குரிய தண்டனையைக் கொடுக்க வேண்டும்.

प्रनष्टस्वामिकं रिक्थं राजा त्र्यब्दं निधापयेत्।
अर्वाक् त्र्यब्दाद् धरेत् स्वामी परेण नृपतिर् हरेत्॥

**ப்ரநஷ்டஸ்வாமிகம் ரிக்தம் ராஜா த்ரயப்தம் நிதாபயேத் |**
**அர்வாக் த்ரயப்தாத் தரேத் ஸ்வாமீ பரேண ந்ருபதிர் ஹரேத் ||** 30

சொத்துகள் யாருடையது என்று தெரியாதபோது அந்தச் சொத்துகள் யாருடையவை என்று வந்து தெரிவிக்க வேண்டுமெனப் பிரகடனப்படுத்த வேண்டும். உரியவர்கள் வந்தால், அந்தச் சொத்துகளை அவர்களிடம் ஒப்படைக்க வேண்டும். மூன்று வருடங்கள்வரை தன்னுடையது என்று உரிமை கோரி யாரும் வராவிட்டால் அதை அரசாங்கச் சொத்துடன் சேர்த்துவிட வேண்டும்.

ममेदमिति यो ब्रूयात् सोऽनुयोज्यो यथाविधि।
संवाद्य रूपसङ्ख्यादीन् स्वामी तद् द्रव्यमर्हति॥

**மமேதமிதி யோ ப்ரூயாத்ஸோ அனுயோஜ்யோ யதாவிதி |**
**ஸம்வாத்ய ரூபஸங்க்யாதீந் ஸ்வாமீ தத் த்ரவ்ய மர்ஹதி ||** 31

இது என்னுடைய பொருள் என்று கூறிக் கொண்டு வருபவனிடம், அந்தப் பொருளைப் பற்றி அவனிடம் பல வகையாக விசாரித்து, அவன் கூறுவது உண்மைதானா என்று கண்டுபிடிக்க வேண்டும். உரிமை யாளன் அவன்தான் என்று தெரிந்தால், அவனிடம் ஒப்படைக்க வேண்டும்.

अवेदयानो नष्टस्य देशं कालं च तत्त्वतः।
वर्णं रूपं प्रमाणं च तत्समं दण्डमर्हति॥

**அவேதயாநோ நஷ்டஸ்ய தேஷம் காலம் ச தத்வத: |**
**வர்ணம் ரூபம் ப்ரமாணம் ச தத்ஸமம் தண்டமர்ஹதி ||** 32

ஒரு பொருளை, தன்னுடையது என்று கூறிக் கொண்டு வருபவனிடம், அந்தப் பொருள் எப்போது தொலைந்தது, எங்கு தொலைந்தது, அதன் உருவம் என்ன, நிறம் என்ன, எடை என்ன, மதிப்பு என்ன, எத்தனை காலமாக அவன் ஆதீனத்தில் இருந்தது என்பதையெல்லாம் கேட்டு விசாரிக்கும்போது, அவன் பொய் கூறியிருக்கிறான், பொருள் அவனுடையதல்ல என்பது தெரிந்தால், அப்பொருளின் மதிப்புக்குத் தக்க தண்டனையை அவனுக்கு வழங்க வேண்டும்.

**आददीताऽथ षड्भागं प्रनष्टाऽधिगतान् नृपः ।**
**दशमं द्वादशं वाऽपि सतां धर्ममनुस्मरन् ॥**

**ஆதத்தா அத ஷட்பாகம் ப்ரநஷ்டாஅதிகதாந் ந்ருப: |**
**தஷமம் த்வாதஷம் வா அபி ஸதாம் தர்ம மனுஸ்மரந் ||** 33

பொருளுக்குரியவனிடம் பொருளை ஒப்படைக்கும்போது, இதுவரை அதைப் பாதுகாத்தமைக்காக அப்பொருளின் ஆறில் ஒரு பாகத்தையோ, பத்தில் ஒரு பாகத்தையோ, பன்னிரண்டில் ஒரு பாகத்தையோ அரசன் எடுத்துக் கொண்டு, மிகுதியை உரியவனிடம் ஒப்படைக்க வேண்டும்.

**प्रनष्टाऽधिगतं द्रव्यं तिष्ठेद् युक्तैरधिष्ठितम् ।**
**यांस् तत्र चौरान् गृह्णीयात् तान् राजेभेन घातयेत् ॥**

**ப்ரநஷ்டா அதிகதம் த்ரவ்யம் திஷ்டேத் யுக்தைரதிஷ்டிதம் |**
**யாம்ஸ்தத்ர சௌராந் க்ருஹ்ணீயாத் தாந் ராஜேபேந காதயேத் ||** 34

காவலர்கள் யாருடைய பொருளையாவது கண்டெடுத்துக் கொண்டு வந்தால், அதைத் தனியாக வைத்துக் காவல் காக்க வேண்டும். காவலில் இருக்கும் அவற்றை யாரேனும் திருடினால், திருடியவர்களை யானையினால் மிதிக்கச் செய்து கொல்ல வேண்டும்.

**ममाऽयमिति यो ब्रूयान् निधिं सत्येन मानवः ।**
**तस्याऽऽददीत षड्भागं राजा द्वादशमेव वा ॥**

**மமாஅயமிதி யோ ப்ரூயாந் நிதிம் ஸத்யேந மாநவ: |**
**தஸ்யா ஆதத்த ஷட்பாகம் ராஜா த்வாதஷமேவ வா ||** 35

ஒருவன் புதையலைக் கண்டெடுத்தால், அதை எடுத்தது தான்தான் என்ற உண்மையை அவன் நிலைநாட்டினால் அப்புதையல் பொருளில் ஆறில் ஒரு பங்கையோ, பன்னிரண்டில் ஒரு பங்கையோ அரசன் எடுத்துக் கொள்ள வேண்டும். மிகுதியை புதையலைக் கண்டெடுத் தவனுக்கு அளிக்க வேண்டும்.

अनृतं तु वदन् दण्ड्यः स्ववित्तस्यांऽशमष्टमम्।
तस्यैव वा निधानस्य सङ्ख्ययाऽल्पीयसीं कलाम्॥

**அந்ருதம் து வதந் தண்ட்ய: ஸ்வவித்தஸ்யா அம்ஷமஷ்டமம் |**
**தஸ்யைவ வா நிதானஸ்ய ஸங்க்யயா அல்பீயஸீம் கலாம் ||** 36

*தன்னுடையதல்லாத பொருளை, ஒருவன் தன்னுடையது என்று கூறுவானாயின், அவன் சொத்தில் எட்டில் ஒரு பங்கையோ அல்லது அவன் தன்னுடையது என்று பொய்யுரைத்த பொருளின் மதிப்பில் சிறிதளவையோ தண்டம் விதித்து வசூலிக்க வேண்டும்.*

विद्वांस् तु ब्राह्मणो दृष्ट्वा पूर्वोपनिहितं निधिम्।
अशेषतोऽप्याददीत सर्वस्याऽधिपतिर् हि सः॥

**வித்வாம்ஸ் து ப்ராஹ்மணோ த்ருஷ்ட்வா பூர்வோபநிஹிதம் நிதிம் |**
**அஷேஷதோ அப்யாதத்ீத ஸர்வஸ்யா அதிபதிர் ஹி ஸஹ: ||** 37

*முன்னர் எவராலோ புதைக்கப்பட்ட நிதியை வித்வானான பிராம்மணன் கண்டெடுத்தால், அது மொத்தமும் அவனுக்கே உரியது.*

यं तु पश्येन् निधिं राजा पुराणं निहितं क्षितौ।
तस्माद् द्विजेभ्यो दत्त्वाऽर्धमर्धं कोशे प्रवेशयेत्॥

**யம் து பஷ்யேந் நிதிம் ராஜா புராணம் நிஹிதம் க்ஷிதௌ |**
**தஸ்மாத் த்விஜேப்யோ தத்வா அர்தமர்த்தம் கோஷே ப்ரவேஷயேத் ||** 38

*உரிமையாளர் யாரும் இல்லாத நிலையில் உள்ள நிதி அரசனைச் சேர்ந்தது. அரசன் அதில் பாதியை பிராம்மணர்களுக்கு அளிக்க வேண்டும். பாதியைத் தன்னுடைய பொக்கிஷத்தில் சேர்க்க வேண்டும்.*

निधीनां तु पुराणानां धातूनामेव च क्षितौ।
अर्धभाग् रक्षणाद् राजा भूमेरधिपतिर् हि सः॥

**நிதீநாம்து புராணாநாம் தாதூநாமேவ ச க்ஷிதௌ |**
**அர்தபாக் ரக்ஷணாத் ராஜா பூமேரதிபதிர் ஹிஸ: ||** 39

*பிராம்மணர்கள் தவிர்த்து, மற்றபடி கண்டெடுக்கப்பட்ட புதையலுக்கு அரசனே அதிபதி. ஏனெனில் பூமிக்கு அதிபதி அரசனல்லவா... அரசன் விரும்பினால் புதையல் எடுத்தவனுக்கு அதில் பாதிவரை கொடுக்கலாம்.*

दातव्यं सर्ववर्णेभ्यो राज्ञा चौरैर् हृतं धनम्।
राजा तदुपयुञ्जानश् चौरस्याऽऽप्नोति किल्बिषम्॥

**தாதவ்யம் ஸர்வவர்ணேப்யோ ராக்ஞா சௌரைர் ஹ்ருதம் தநம் |**
**ராஜா ததுபயுஞ்ஜாநஷ் சௌரஸ்யா ஆப்நோதி கில்விஷம் ||** 40

*அரசன், திருடர்கள் திருடிய சொத்தைக் கண்டுபிடித்து அதை உரியவரிடம் ஒப்படைக்க வேண்டும். அப்படியின்றி அதைத் தானே எடுத்துக் கொண்டால் அந்தத் திருடனுடைய பாபத்தை அரசன் அடைவான்.*

जातिजानपदान् धर्मान् श्रेणीधर्मांश् च धर्मवित्।
समीक्ष्य कुलधर्मांश् च स्वधर्मं प्रतिपादयेत्॥

**ஜாதிஜாநபதாந் தர்மாஞ்ஷ்ரேணீதர்மாம்ஷ்ச தர்மவித் |**
**ஸமீக்ஷ்ய குலதர்மாம்ஷ்ச ஸ்வதர்மம் ப்ரதிபாதயேத் ||** 41

*தர்மம் அறிந்தவனான அரசன், ஒரு விவகாரத்தில் தீர்ப்பு வழங்குவதற்கு ஜாதியையும், நாட்டையும் குலத்தையும், வியாபார முறையையும் பார்க்க வேண்டும்.*

*குற்றம் ஒன்றேயாயினும் அதை பிராம்மணன் செய்தால் பாவம் அதிகம்; தண்டனையும் அதிகம். சூத்திரன் செய்தால் தண்டனையும் பாவமும் குறைவு. இவையெல்லாம் தர்மசாஸ்திரமறிந்த அரசனுக்குத் தெரியும்.*

*அவ்வாறே ஒவ்வொரு தேசத்திலும் இருக்கும் நடைமுறைகள் வேறுவேறாக இருக்கும். அவ்வாறே தேசத்துக்குத் தேசம் வியாபார முறைகளும் மாறுபடும்.*

*ஒவ்வொரு குலத்தையொட்டி பழக்கங்கள் மாறுபடும். இவைகளை யெல்லாம் யோசித்தே விவகாரத்தைத் தீர்க்க வேண்டும்.*

स्वानि कर्माणि कुर्वाणा दूरे सन्तोऽपि मानवाः।
प्रिया भवन्ति लोकस्य स्वे-स्वे कर्मण्यवस्थिताः॥

**ஸ்வாநி கர்மாணி குர்வாணா தூரே ஸந்தோ அபி மாநவா: |**
**ப்ரியா பவந்தி லோகஸ்ய ஸ்வே ஸ்வே கர்மண்யவஸ்திதா: ||** 42

*தத்தமது சுயதர்மத்தை அனுஷ்டிப்பவர்கள் தூர தேசத்தவர் களானாலும் அனைவருக்கும் பிரியமானவர்களாக இருப்பார்கள்.*

नोत्पादयेत् स्वयं कार्यं राजा नाऽप्यस्य पूरुषः।
न च प्रापितमन्येन ग्रसेतार्थं कथञ्चन॥

**நோத்பாதயேத் ஸ்வயம் கார்யம் ராஜா நா அப்யஸ்ய பூருஷ: |**
**ந ச ப்ராபிதமந்யேந க்ரஸேதா அர்தம் கதஞ்சந ||** 43

அரசனோ, அரசனால் நியமிக்கப்பட்ட நீதிபதியோ பொருள் ஆசையால் தானாக ஒரு விவகாரத்தை ஏற்படுத்தக்கூடாது. வாதப் பிரதிவாதங்களைப் பொருளாசையால் அலட்சியப்படுத்தக் கூடாது.

**यथा नयत्यसृक्पातैर् मृगस्य मृगयुः पदम्।**
**नयेत् तथाऽनुमानेन धर्मस्य नृपतिः पदम्॥**

**யதா நயத்யஸ்ருக்பாதைர் ம்ருகஸ்ய ம்ருகயு: பதம் |**
**நயேத் ததா அனுமாநேந தர்மஸ்ய ந்ருபதி: பதம் ||** **44**

வேடன் தன்னால் தாக்கப்பட்ட மிருகம், தப்பியோடிய பாதையை, சிந்தியிருக்கும் அதன் ரத்தத் துளிகளைக் கொண்டு அறிவான். அவ்வாறே அரசன் அனுமானத்தால் உண்மையைக் கண்டறிய வேண்டும்.

**सत्यमर्थं च सम्पश्येदात्मानमथ साक्षिणः।**
**देशं रूपं च कालं च व्यवहारविधौ स्थितः॥**

**ஸத்யமர்த்தம் ச ஸம்பஷ்யேதாத்மாநமத ஸாக்ஷிண: |**
**தேஷம் ரூபம் ச காலம் ச வ்யவஹாரவிதௌ ஸ்தித: ||** **45**

வழக்கில் தீர்ப்புக் கூறுவதற்குமுன் அரசன் உண்மையைக் கண்டறிய வேண்டும். வழக்குக்கு அடிப்படைக் காரணம் வேறு ஏதேனும் இருக்குமா என்று ஆராய வேண்டும். சாட்சிகள் உண்மையைக் கூறுகிறார்களா அல்லவா என்பதையும் அறிய வேண்டும். எந்த இடத்தில், எந்தக் காலத்தில், எவ்விதத்தில் நடந்தது என்று ஆராய வேண்டும். இப்படிக் காலத்தையும், இடத்தையும், நடந்த விஷயத்தையும், அது நடந்த முறையையும் சேர்த்து ஆராயும்போது பல உண்மைகளைக் கண்டுபிடிக்க முடியும்.

**सद्भिराचरितं यत् स्याद् धार्मिकैश् च द्विजातिभिः।**
**तद् देशकुलजातीनामविरुद्धं प्रकल्पयेत्॥**

**ஸத்பிராசரிதம் யத்ஸ்யாத் தார்மிகைஷ் ச த்விஜாதிபி: |**
**தத் தேஷகுலஜாதீநாமவிருத்தம் ப்ரகல்பயேத் ||** **46**

சாஸ்திர விற்பன்னர்களான துவிஜர்களாலும் சாதுக்களாலும் தேசத்துக் குரியதாகவும், குலத்துக் குரியதாகவும், ஜாதிக்குரியதாகவும் எந்த தர்மங்கள் வரையறுக்கப்பட்டனவோ, அவற்றுக்கு விரோத மின்றி அரசன் காரியமாற்ற வேண்டும்.

अधमर्णार्थसिध्यर्थमुत्तमर्णेन चोदितः।
दापयेद् धनिकस्यार्थमधमर्णाद् विभावितम्॥

**அதமர்ணா அர்த்தஸித்யர்தமுத்தமர்ணேந சோதித: |**
**தாபயேத் தநிகஸ்யா அர்தமதமர்ணாத் விபாவிதம் ||** 47

*தன்னிடம் கடனாகப் பணம் பெற்றுக் கொண்டவன் தன்னை ஏமாற்றி விட்டான் என்று ஒருவன் வந்து வழக்குத் தொடர்ந்தால், அந்த வழக்கை எடுத்துக் கொண்டு விசாரிக்க வேண்டும். அவனுடைய பணத்தை மீட்டு அவனிடம் ஒப்படைக்க வேண்டும்.*

यैर्यैरुपायैरर्थं स्व प्राप्नुयादुत्तमर्णिकः।
तैस्तैरुपायैः सङ्गृह्य दापयेदधमर्णिकम्॥

**யைர்யைருபாயைரர்த்தம் ஸ்வம் ப்ராப்நுயாதுத்தமர்ணிக: |**
**தைஸ்தைருபாயை: ஸங்க்ருஹ்ய தாபயேததமர்ணிகம் ||** 48

*பணத்தை மீட்டு அவனிடம் ஒப்படைக்க வேண்டும் என்னும்போது அதற்கான வழிமுறைகளையும் கூற வேண்டு மல்லவா? மேலும் கடன் கொடுத்தவன் தானே மீட்டுக் கொள்ளவும் வழி கூறுகிறார்.*

धर्मेण व्यवहारेण छलेनाऽऽचरितेन च।
प्रयुक्तं साधयेदर्थं पञ्चमेन बलेन च॥

**தர்மேண வ்யவஹாரேண சலேநா ஆசரிதேந ச |**
**ப்ரயுக்தம் ஸாதயேதர்தம் பஞ்சமேந பலேந ச ||** 49

*முதலில் வாங்கிய பணத்தைக் கொடுத்துவிடும்படி நயமாக எடுத்துரைக்க வேண்டும். அவர்கள் குலத்து மூத்தோர்களைக் கொண்டோ, உறவினர்களைக் கொண்டோ அறிவுரை கூறச் செய்ய வேண்டும்.*

*'நான் பணம் வாங்கிக் கொள்ளவே இல்லை' என்று அவன் பொய்யுரைத்தால், அது பொய்தானா என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பொய்தான் என்று தெரிந்தால், அவனிட மிருக்கும் சொத்தை அபகரித்து, கடன் கொடுத்தவனுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுக்க வேண்டும்.*

यः स्वयं साधयेदर्थमुत्तमर्णोऽधमर्णिकात्।
न स राज्ञाऽभियोक्तव्यः स्वकं संसाधयन् धनम्॥

**ய:ஸ்வயம் ஸாதயேதர்தமுத்தமர்ணோ அதமர்ணிகாத் |**
**நஸ ராக்ஞா அபியோக்தவ்ய: ஸ்வகம் ஸம்ஸாதயந் தநம் ||** 50

கடன் கொடுத்தவன் தன் பணத்தை மீட்கவேண்டி எந்த உபாயத்தையும் செய்யலாம். கடனாளியை மிரட்டி, அடித்துத் தன் பணத்தை வசூலித்தாலும் அரசன் ஏன் இவ்வாறு செய்தாய் என்று கேட்கலாகாது.

அதாவது, என்னை அடித்தான், மிரட்டினான் என்று அந்தக் கடனாளி வழக்குத் தொடுத்தால், அந்த வழக்கைத் தள்ளுபடி செய்ய வேண்டும்.

अर्थेऽपव्ययमानं तु करणेन विभावितम्।
दापयेद् धनिकस्याऽर्थं दण्डलेशं च शक्तितः॥

**அர்தே அபவ்யயமாநம் து கரணேந விபாவிதம் |**
**தாபயேத் தநிகஸ்யா அர்த்தம் தண்டலேஷம் ச ஷக்தித: || 51**

கடன் வாங்கிக் கொண்டு, இல்லையென்று ஒருவன் வாதிட்டால், கடன் பத்திரம், சாட்சி முதலியவைகளைக் கொண்டு உண்மையை நிரூபித்துக் கடனைக் கொடுத்தவனுக்கு மீட்டுக் கொடுத்து, ஏமாற்றப் பார்த்தவனை, அவன் சக்திக்குத் தக்க அளவு தண்டிக்க வேண்டும்.

अपह्नवेऽधमर्णस्य देहीत्युक्तस्य संसदि।
अभियोक्ता दिशेद् देश्यं करणं वाऽन्यदुद्दिशेत्॥

**அபஹ்நவே அதமர்ணஸ்ய தேஹீத்யுக்தஸ்ய ஸம்ஸதி |**
**அபியோக்தா திஷேத் தேஷ்யம் கரணம்வா அந்யதுத்திஷேத் || 52**

கடன் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுமாறு கூறும்போது, கடனாளி தான் வாங்கவில்லை என்று மறுத்தால், கடன் கொடுத்தவன், தான் கடன் கொடுத்த இடத்தையும், கொடுத்தபோது உடனிருந்த சாட்சியையும் கூறவேண்டும். கடன் பத்திரம் முதலானவைகள் இருந்தால் அவற்றை நீதிபதியிடம் காட்ட வேண்டும்.

अदेश्यं यश्च दिशति निर्दिश्याऽपह्नुते च यः।
यश् चाऽधरोत्तरानर्थान् विगीतान् नाऽवबुध्यते॥

**அதேஷ்யம் யஷ்ச திஷதி நிர்திஷ்யா பஹ்நுதே சய: |**
**யஷ்சாதரோத்தராநர்தாந் விகீதாந்நாவ புத்யதே || 53**

நீதிபதி கடன் வாங்கிய இடத்தைப் பற்றி விசாரிக்கும்போது, தான் அப்போது அங்கே இல்லவே இல்லை என்று கூறுபவன் -

முதலில், இந்த இடத்தில் வாங்கினேன் என்று ஒப்புக் கொண்டு, பிறகு கேள்வி கேட்கும்போது இல்லை என்று மறுப்பவன்,

முன்னுக்குப் பின் முரணாகப் பதிலளிப்பவன் - இத்தகையவனை வழக்கில் பொய்யுரைப்பவராகக் கூறவேண்டும்.

अपदिश्याऽपदेश्यं च पुनर् यस् त्वपधावति।
सम्यक् प्रणिहितं चाऽर्थं पृष्टः सन् नाऽभिनन्दति॥

**அபதிஷ்யா அபதேஷ்யம் ச புநர்யஸ் த்வதாவதி |**
**ஸம்யக் ப்ரணிஹிதம் சாஅர்தம் ப்ருஷ்ட: ஸந்நா அபிநந்ததி || 54**

முதலில் நான் பணத்தைத் திருப்பிக் கொடுத்தேன் என்று கூறி, பிறகு எனக்காக இன்னார் கொடுத்தார்கள் என்று கூறுபவன், கேட்ட குறுக்குக் கேள்விகளுக்கு சரிவர பதில் கூறாது, மௌனமாகத் தலை குனிபவன் - இத்தகையவர்களைப் பொய் கூறுபவர்களாகக் கூற வேண்டும்.

असम्भाष्ये साक्षिभिश्च देशे सम्भाषते मिथः।
निरुच्यमानं प्रश्नं च नेच्छेद् यश्चाऽपि निष्पतेत्॥

**அஸம்பாஷ்யே ஸாக்ஷிபிஷ்ச தேஷே ஸம்பாஷதே மித: |**
**நிருச்யமாநம் ப்ரஷ்நம் ச நேச்சேத் யஷ்சேஅபி நிஷ்பதேத் || 55**

சாட்சிகளைத் தனியாக ஒரு இடத்துக்கு அழைத்துச் சென்று இப்படி இப்படிக் கூறுங்கள் என்று அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பவன், குறுக்கு விசாரணையின்போது பதில் கூறத் திணறுபவன், அடுத்த விசாரணையின்போது வராமலே எங்காவது ஓடிவிடுபவன் - இத்தகையவர்களையும் இவர்களின் இந்தச் செயல்களுக்காகவே அவர்கள் பொய் கூறுபவர்களாக அறிவிக்க வேண்டும்.

ब्रूहीत्युक्तश् च न ब्रूयादुक्तं च न विभावयेत्।
न च पूर्वाऽपरं विद्यात् तस्मादर्थात् स हीयते॥

**ப்ரூஹித்யுக்தஷ் ச ந ப்ரூயாதுக்தம் ச ந விபாவயேத் |**
**ந ச பூர்வா அபரம் வித்யாத் தஸ்மாதர்தாத் ஸ ஹீயதே || 56**

நீதிபதி ஒரு விஷயத்தைப் பற்றி விளக்கம் கேட்கும்போது சொல்ல முடியாதவன், முன் விஷயம் பின் விஷயம் எதுவும் தெரியாமல் பேசுபவன் - இவர்களும் பொய் கூறுபவர்களே.

साक्षिणः सन्ति मेत्युक्त्वा दिशेत्युक्तो दिशेन् न यः।
धर्मस्थः कारणैरेतैर् हीनं तमपि निर्दिशेत्॥

**ஸாக்ஷிண: ஸந்திமேத்யுக்த்வா திஷேத்யுக்தோ திஷேந் நய: |**
**தர்மஸ்த: காரணைரேதைர் ஹீநம் தமபி நிர்திஷேத் || 57**

சாட்சிகளை அழைத்து வருவதாகக் கூறிவிட்டு பின்னர் அழைத்து வராதவனையும் பொய் கூறுபவனாகவே கொள்ள வேண்டும். இந்த மாதிரியாக பொய் கூறுபவர்களை வழக்கில் தோற்றவர்களாகவே நீதிபதி கூறவேண்டும்.

अभियोक्ता न चेद् ब्रूयाद् वध्यो दण्ड्यश्च धर्मतः।
न चेत् त्रिपक्षात् प्रब्रूयाद् धर्मं प्रति पराजितः॥

**அபியோக்தா நசேத் ப்ரூயாத் வத்யோ தண்டஷ்ச தா்மத: |**
**நசேத் த்ரிபக்ஷாத் ப்ரப்ரூயாத் தா்மம் ப்ரதி பராஜித: || 58**

வழக்குத் தொடர்ந்தவன், தன் பக்கத்து நியாயத்தை நிரூபிக்காவிடில், அவனை கட்டிப் போடல் அல்லது காவலில் வைத்தல், அபராதம் விதித்தல் முதலான தண்டனைகளை வழக்கின் தன்மைக்குத் தக்கபடி விதிக்க வேண்டும்.

வழக்குத் தொடரப்பட்ட நாற்பத்தைந்து நாட்களுக்குள் பிரதிவாதி மன்றத்துக்கு வந்து தன் கட்சியைப் பற்றிப் பேசா விட்டால், அவன் தோற்றதாகத் தீர்ப்பளிக்க வேண்டும்.

यो यावन् निह्नुवीतार्थं मिथ्या यावति वा वदेत्।
तौ नृपेण ह्यधर्मज्ञौ दाप्यौ तद्द्विगुणं दमम्॥

**யோ யாவந் நிஹநுவிதா அா்தம் மித்யா யாவதிவா வதேத் |**
**தௌ ந்ருபேண ஹ்யதா்மக்ஞௌ தாப்யௌ தத் த்விகுணம் தமம் || 59**

கடன் வாங்கிக் கொண்டவன் தான் அவ்வளவு தொகை வாங்கிக் கொள்ளவில்லை என்று வாங்கிக் கொண்ட தொகையை விடக் குறைத்துக் கூறுவானாயின், அவன் குறைத்துக் கூறிய தொகைக்கு இரு மடங்கு தொகையை அபராதமாக விதிக்க வேண்டும்.

அவ்வாறே கடன் கொடுத்தவன், தான் கொடுத்த தொகைக்கும் அதிகமான தொகையைக் கூறுவானாயின் அவன் அதிகமாகக் கூறிய தொகைக்கு இருமடங்கு தொகையை அபராதமாக விதிக்க வேண்டும்.

पृष्टोऽपव्ययमानस् तु कृतावस्थो धनैषिणा।
त्र्यवरैः साक्षिभिर् भाव्यो नृपब्राह्मणसन्निधौ॥

**ப்ருஷ்டோ அபவ்யயமாநஸ் து க்ருதா அவஸ்தோ தநைஷிணா |**
**த்ரயவரை: ஸாக்ஷிபிா் பாவ்யோ ந்ருபப்ராஹ்மண ஸந்நிதௌ || 60**

கடன் வாங்கிக் கொண்டவன், தான் கடன் வாங்கவே இல்லை என்று கூறினால், அதை மூன்றுக்கு குறையாத சாட்சிகளைக்

கொண்டு, அரசன் நியமித்துள்ள மூன்று பிராம்மணர்களோடு நீதிபதியும் கொண்ட சபை முன் நிரூபிக்க வேண்டும்.

यादृशा धनिभिः कार्या व्यवहारेषु साक्षिणः।
तादृशान् सम्प्रवक्ष्यामि यथा वाच्यमृतं च तैः॥

**யாத்ருஷா தநிபி: கார்யா வ்யவஹாரேஷு ஸாக்ஷிண: |**
**தாத்ருஷாந் ஸம்ப்ரவக்ஷ்யாமி யதா வாச்யம்ருதம் ச தை: || 61**

வாதி தன் விவகாரங்களில் எத்தகையவர்களை சாட்சிகளாகக் கொண்டு வரவேண்டும். சாட்சிகள் எவ்வாறு சாட்சியுரைக்க வேண்டும் என்கிற முறைகளையும் கூறுகிறேன், கேளுங்கள்:

गृहिणः पुत्रिणो मौलाः क्षत्रविट्शूद्रयोनयः।
अर्थ्युक्ताः साक्ष्यमर्हन्ति न ये केचिदनापदि॥

**க்ருஹிண: புத்ரிணோ மௌலா: க்ஷத்ரவிட்சூத்ரயோநய: |**
**அர்த்யுக்தா: ஸாஹ்யமர்ஹந்தி நயே கேசிதநா பதி || 62**

மனைவி மக்களோடு இருப்பவன், அந்த நாட்டைச் சேர்ந்தவர்களான க்ஷத்ரியர்கள், வைசியர்கள், சூத்ரர்கள் முதலானோர் அழைக்கும் போது வந்து சாட்சி கூறத் தக்கவர்கள். ஆபத்துக் காலங்கள் தவிர மற்றபடி இவர்களைத் தவிர்த்து மற்றவர்கள் சாட்சிகளாக இருக்கக் கூடாது.

आप्ताः सर्वेषु वर्णेषु कार्याः कार्येषु साक्षिणः।
सर्वधर्मविदोऽलुब्धा विपरीतांस् तु वर्जयेत्॥

**ஆப்தா: ஸர்வேஷு வர்ணேஷு கார்யா: கார்யேஷு ஸாக்ஷிண: |**
**ஸர்வதர்மவிதோ அலுப்தா விபரீதாம்ஸ்து வர்ஜயேத் || 63**

பிராம்மணனாயினும், க்ஷத்ரியனாயினும், வைசியனாயினும், சூத்திரனாயினும் தர்மவான்களாக இருப்பவர்களே சாட்சி கூறத் தகுதியுடையவர்கள். கயமைக் குணம் கொண்டவர்களையும் தீயவர்களையும் சாட்சிகளாக ஏற்கக்கூடாது.

नाऽर्थसम्बन्धिनो नाऽऽप्ता न सहाया न वैरिणः।
न दृष्टदोषाः कर्तव्या न व्याध्यार्ता न दूषिताः॥

**நாஅர்தஸம்பந்திநோ நாஆப்தா நஸஹாயா நவைரிண: |**
**ந த்ருஷ்ட தோஷா: கர்தவ்யா நவ்யாத்யார்தா ந தூஷிதா: || 64**

எதற்காக வழக்குத் தொடுக்கப்பட்டதோ, அந்தப் பணத்தோடு சம்பந்தமுடையவர்கள், வாதி பிரதிவாதிகளின் உற்ற நண்பர்கள், உதவியாளர்கள், எதிரிகள், தீயவர்கள், நோயாளிகள், பெரும்

*பாவங்களைச் செய்தவர்கள் முதலானோர்களைச் சாட்சிகளாக ஏற்கக் கூடாது.*

न साक्षी नृपतिः कार्यो न कारुककुशीलवौ।
न श्रोत्रियो न लिङ्गस्थो न सङ्गेभ्यो विनिर्गतः॥

**நஸாக்ஷீ ந்ருபதி: கார்யோ ந காருககுஷீலவௌ |**
**நஸ்ரோத்ரியோ ந லிங்கஸ்தோ ந ஸங்கேப்யோ விநிர்கத: ||** **65**

*எக்காரணத்தைக் கொண்டும் அரசனை சாட்சியாக்கக் கூடாது. சமையல்காரன், நட்டுவாங்கம் செய்பவன், வேதம் படித்துக் கொண்டிருக்கும் மாணாக்கன், சந்நியாசி இவர்களையும் சாட்சிகளாக ஏற்கக் கூடாது.*

नाऽध्यधीनो न वक्तव्यो न दस्युर् न विकर्मकृत्।
न वृद्धो न शिशुर् नैको नाऽन्त्यो न विकलेन्द्रियः॥

**நாஅத்யதீநோ ந வக்தவ்யோ ந தஸ்யுர் ந விகர் மக்ருத் |**
**நவ்ருத்தோ நசிசுர் நைகோ நாஅந்த்யோ ந விகலேந்த்ரிய: ||** **66**

*அடிமையாக இருப்பவன், நிந்திக்கத்தக்கவன், குரூரமான செயல்களைச் செய்பவன், சாஸ்திரத்தால் தடுக்கப்பட்ட காரியங்களைச் செய்பவன், கிழவன், சிறுவன், ஒற்றையாய் வாழ்பவன், சஞ்சலபுத்தி கொண்டவன் இவர்களைச் சாட்சிகளாக ஏற்கக் கூடாது.*

नाऽऽर्तो न मत्तो नोन्मत्तो न क्षुत्तृष्णोपपीडितः।
न श्रमाऽऽर्तो न कामाऽऽर्तो न क्रुद्धो नाऽपि तस्करः॥

**நாஅர்தோ ந மத்தோ நோந்மத்தோ ந க்ஷுத்த்ருஷ்ணோப பீடித: |**
**நஸ்ரமா ஆர்தோ ந காமா ஆர்தோ நக்ருத்தோ நாபிதஸ்கர: ||** **67**

*கவலையில் ஆழ்ந்தவன், குடிகாரன், பைத்தியக்காரன், பசி தாகங்களால் பீடிக்கப்பட்டவன், களைப்புற்றவன், காமுகன், கோபிஷ்டன், திருடன் முதலானோரை சாட்சிகளாக ஏற்கக் கூடாது.*

स्त्रीणां साक्ष्यं स्त्रियः कुर्युर् द्विजानां सदृशा द्विजाः।
शूद्राश् च सन्तः शूद्राणामन्त्यानामन्त्ययोनयः॥

**ஸ்த்ரீணாம் ஸாக்ஷ்யம் ஸ்த்ரிய: குர்யுர் த்விஜாநாம் ஸத்ருஷா த்விஜா: |**
**சூத்ராஷ்ச ஸந்த: சூத்ராணாமந்த்யா நாமந்த்யயோநய: ||** **68**

*பெண்களுடைய வழக்கில் பெண்கள் சாட்சிகளாக இருக்கலாம். பிராம்மணர்களுக்கு பிராம்மணர்களும், க்ஷத்திரியர்களுக்கு க்ஷத்திரியர்களும், வைசியர்களுக்கு வைசியர்களும், சூத்திரருக்கு சூத்திரர்களும் சாட்சிகளாகலாம்.*

अनुभावी तु यः कश्चित् कुर्यात् साक्ष्यं विवादिनाम्।
अन्तर्वेश्मन्यरण्ये वा शरीरस्यापि चात्यये॥

**அனுபாவீது ய: கஷ்சித் குர்யாத் சாக்ஷ்யம் விவாதிநாம் |**
**அந்தர்வேஷ்மந்யரண்யே வா ஷரீரஸ்யா அபி சாந்யயே ||** 69

வழக்கு வீட்டிற்குள் நடந்ததாக இருந்தால் அப்போது வீட்டிற்குள் அருகிலிருந்தவர் யாராக இருந்தாலும் அவர்களை சாட்சிகளாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆரண்யத்தில் நடந்த விஷயமாக இருந்தால், அருகில் இருந்தவர், பார்த்தவர் யாராக இருந்தாலும் அவர்களைச் சாட்சிகளாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

மரணத்தறுவாயிலும் இவ்வாறேதான் அருகிலிருப்பவர் யாரா யினும் அவர்களைச் சாட்சிகளாக ஏற்கலாம்.

स्त्रियाऽप्यसम्भवे कार्यं बालेन स्थविरेण वा।
शिष्येण बन्धुना वाऽपि दासेन भृतकेन वा॥

**ஸ்த்ரியாஅப்யஸம்பவே கார்யம் பாலேந ஸ்தவிரேணவா |**
**ஷிஷ்யேண பந்துநா வா அபிதாஸேந ப்ருதகேந வா ||** 70

வீட்டிற்குள் நடந்தது முதலான வழக்குகளில் பெண்கள், சிறுவர், வயோதிகர், மாணாக்கன், உறவினன், வேலைக்காரன், அடிமை முதலானோர் சாட்சியங்களை ஏற்கலாம்.

बालवृद्धाऽऽतुराणां च साक्ष्येषु वदतां मृषा।
जानीयादस्थिरां वाचमुत्सिक्तमनसां तथा॥

**பாலவ்ருத்தா ஆதராணாம்ச சாட்ச்யேஷு வததாம்ம்ருஷா |**
**ஜாநீயா தஸ்திராம் வாசமுத்சிக் தமநஸாம் ததா ||** 71

சிறுவர், முதியோர், நோயாளி, பொய்யர் முதலான சாட்சிகளிடம் விசாரிக்கும்போது அவர்களுடைய முகபாவங் களையும், உடல் அசைவுகளையும் கவனிக்க வேண்டும்.

साहसेषु च सर्वेषु स्तेयसङ्ग्रहणेषु च।
वाग्दण्डयोश् च पारुष्ये न परीक्षेत साक्षिणः॥

**ஸாஹஸேஷு ச ஸர்வேஷு ஸ்தேயஸங்க்ரஹணேஷுச |**
**வாக் தண்டயோஷ் ச பாருஷ்யே ந பரீக்ஷேத ஸாக்ஷிண: ||** 72

வீட்டைக் கொளுத்துதல், பயிர்களை அழித்தல், கொல்லுதல் போன்ற கொடுஞ் செயல்களிலும், திருட்டிலும், பெண்களைக் கவர்ந்து போதலிலும், வாய்ச்சண்டை, அடிதடி வழக்குகளிலும் சாட்சிகளின் தராதரத்தைப் பார்க்க வேண்டியதில்லை.

बहुत्वं परिगृह्णीयात् साक्षिद्वैधे नराधिपः।
समेषु तु गुणोत्कृष्टान् गुणिद्वैधे द्विजोत्तमान्॥

**பஹுத்வம் பரிக்ருஹ்ணீயாத் ஸாக்ஷித்வைதே நராதிப |**
**ஸமேஷுது குணோத்க்ருஷ்டாந் குணித்வைதே த்விஜோத்தமாந் || 73**

சாட்சிகள் வெவ்வேறு விதமாகச் சொல்லும் போது அதிகம் பேர் சொன்னதை எடுத்துக் கொள்ள வேண்டும். சமமாக இருக்கும்போது, சாட்சிகளில் குணவான்கள் கூற்றை ஏற்க வேண்டும். குணவான்களும் இரு தரப்பாகச் சொன்னால், திவிஜோத்தமர்கள் கூற்றை அதாவது உத்தமமான பிராம்மணன், உத்தமமான க்ஷத்திரியன், உத்தமமான வைசியன் கூறுவதை ஏற்க வேண்டும்.

समक्षदर्शनात् साक्ष्यं श्रवणाच्चैव सिध्यति।
तत्र सत्यं ब्रुवन् साक्षी धर्मार्थाभ्यां न हीयते॥

**ஸமக்ஷதர்ஷநாத் ஸாக்ஷ்யம் ஷ்ரவணாச்சைவ ஸித்யதி |**
**தத்ர ஸத்யம் ப்ருவந் ஸாக்ஷீ தர்மாஅர்தாப்யாம் ந ஹீயதே || 74**

கண்ணால் பார்த்துக் கூறும் சாட்சிகளையும், காதால் கேட்டதைக் கூறும் சாட்சிகளையும் ஏற்க வேண்டும். இந்தச் சாட்சிகள் சத்தியம் மாறாமல் சாட்சி கூறினால் இவர்களை விட்டு தர்மமும் அர்த்தமும் விலகாது இருக்கும். இவன் சத்தியம் பேசி வழக்கில் உண்மையை நிலைநாட்டுவதால், தர்மம் இவனை விட்டு விலகாதிருக்கும். இவனுடைய செல்வமும் இவனை விட்டு விலகாதிருக்கும்.

साक्षी दृष्टश्रुतादन्यद् विब्रुवन्नार्यसंसदि।
अवाङ् नरकमभ्येति प्रेत्य स्वर्गाच्च हीयते॥

**ஸாக்ஷீ த்ருஷ்ட ஸ்ருதாதந்யத் விப்ருவந்நார்ய ஸம்ஸதி |**
**அவாங் நரகமப்யேதி ப்ரேத்ய ஸ்வர்காச்ச ஹீயதே || 75**

சாட்சி உரைப்பவன் தான் கண்டதையும், கேட்டதையும் அப்படியே உரைக்காமல் மாற்றிக் கூறுவானேயானால் இறந்தபிறகு சொர்க்க லோகங்கள் கிட்டாது; நரகத்தில் வீழ்வான்.

यत्रानिबद्धोऽपीक्षेत शृणुयाद् वाऽपि किञ्चन।
पृष्टस् तत्रापि तद् ब्रूयाद् यथादृष्टं यथाश्रुतम्॥

**யத்ரா அநிபத்தோ அபீக்ஷேத ஷ்ருணுயாத் வா அபிகிஞ்சந |**
**ப்ருஷ்டஸ் தத்ராஅபி தத்ப்ரூயாத் யதாத்ருஷ்டம் யதாஷ்ருதம் || 76**

வாதி, பிரதிவாதிகள் தன்னை சாட்சியாக அழைக்கா விட்டாலும்கூட, நீதிபதி வரவழைத்துக் கேட்டால், தான் கண்ணால் பார்த்ததையும், காதால் கேட்டதையும் அப்படியே கூற வேண்டும்.

एकोऽलुब्धस् तु साक्षी स्याद् बह्व्यः शुच्योऽपि न स्त्रियः।
स्त्रीबुद्धेरस्थिरत्वात् तु दोषैश् चान्येऽपि ये वृताः॥

**ஏகோ அலுப்தஸ்து ஸாக்ஷீஸ்யாத் பஹ்வ்ய: சுச்யே அபிநஸ்திரிய: |**
**ஸ்த்ரீபுத்தோரஸ்திரத்வாத்து தோஷைஷ்சா அன்யே அபியேவ்ருதா: ||** 77

பேராசையற்றவன் கூறும் ஒரு சாட்சியமே மேலானது. சலனப்படும் மனம் கொண்ட பெண்களும், ஆசை மிகுந்தவர்களும் அதிகம் பேர் சாட்சி கூறினாலும், பொருள், கடன் சம்பந்தப்பட்ட விஷயமாயின், பணத்துக்கு விலை போகக்கூடிய இந்தச் சாட்சிகளை ஏற்கத் தேவையில்லை.

स्वभावेनैव यद् ब्रूयुस् तद् ग्राह्यं व्यावहारिकम्।
अतो यदन्यद् विब्रूयुर् धर्मार्थं तदपार्थकम्॥

**ஸ்வபாவேநைவ யத் ப்ரூயுஸ் தத்க்ராஹ்யம் வ்யாவஹாரிகம் |**
**அதோ யதந்யத் விப்ருயுர் தர்மார்தம் ததபார்தகம் ||** 78

சாட்சிகள் இயல்பாக சாட்சி கூறுகிறார்களா என்று பார்க்க வேண்டும். மற்றபடி பயத்தாலோ, நமக்கு வேண்டியவராயிற்றே என்ற தாட்சண்யத்தாலோ, லஞ்சத்துக்காகவோ சாட்சி கூறு கிறார்களா என்பதைக் கண்டறிய வேண்டும்.

सभाऽन्तः साक्षिणः प्राप्तानर्थिप्रत्यर्थिसन्निधौ।
प्राड्विवाकोऽनुयुञ्जीत विधिनाऽनेन सान्त्वयन्॥

**ஸபா அந்த: ஸாக்ஷிண: ப்ராப்தாநர்திப்ரத்யர் திஸந்நிதௌ |**
**ப்ராட்விவாகோ அனுயுஞ்ஜீத விதிநா அநேந ஸாந்த்வயந் ||** 79

சபைக்குள் வந்த சாட்சிகளிடம், விசாரிப்பதற்காக வந்துள்ள பிராம்மணர் மூவரில் ஒருவர் பிரியமாக இனி சொல்லப் போகும் முறையில் பேச வேண்டும்.

यद् द्वयोरनयोर् वेत्थ कार्येऽस्मिंश् चेष्टितं मिथः।
तद् ब्रूत सर्वं सत्येन युष्माकं ह्यत्र साक्षिता॥

**யத் த்வயோரநயோர் வேத்த கார்யே அஸ்மிந்ஷ் சேஷ்டிதம் மித: |**
**தத் ப்ரூத ஸர்வம் ஸத்யேந யுஷ்மாகம் ஹ்யத்ர ஸாக்ஷிதா ||** 80

सत्यं साक्ष्ये ब्रुवन् साक्षी लोकानाप्नोति पुष्कलान्।
इह चाऽनुत्तमां कीर्तिं वागेषा ब्रह्मपूजिता॥

**ஸத்யம் ஸாக்ஷ்யே ப்ருவந் ஸாக்ஷீ லோகாநாப்நோதி புஷ்கலாந் |**
**இஹசாஅனுத்தமாம் கீர்திம் வாகேஷா ப்ரஹ்ம பூஜிதா ||** 81

साक्ष्येऽनृतं वदन् पाशैर् बध्यते वारुणैर् भृशम्।
विवशः शतमा जातीस् तस्मात् साक्ष्यं वदेदृतम्॥

**ஸாக்ஷ்யே அந்ருதம் வதந் பாஷைர் பத்யதே வாருணைர் ப்ருஷம் |**
**விவஷ: ஷதமா ஜாதீஸ் தஸ்மாத் ஸாக்ஷ்யம் வதேத்ருதம் || 82**

सत्येन पूयते साक्षी धर्मः सत्येन वर्धते।
तस्मात् सत्यं हि वक्तव्यं सर्ववर्णेषु साक्षिभिः॥

**ஸத்யேந பூயதே ஸாக்ஷீ தர்ம: ஸத்யேந வர்ததே |**
**தஸ்மாத் ஸத்யம் ஹி வக்தவ்யம் ஸர்வ வர்ணேஷு ஸாக்ஷிபி: || 83**

आत्मैव ह्यात्मनः साक्षी गतिरात्मा तथाऽऽत्मनः।
माऽवमंस्थाः स्वमात्मानं नृणां साक्षिणमुत्तमम्॥

**ஆத்மைவ ஹ்யாத்மந: ஸாக்ஷீகதிராத்மா ததா ஆத்மந: |**
**மாஅவமம்ஸ்தா: ஸ்வமாத்மாநம் ந்ருணாம் ஸாக்ஷிணமுத்தமம் || 84**

मन्यन्ते वै पापकृतो न कश्चित् पश्यतीति नः।
तांस् तु देवाः प्रपश्यन्ति स्वस्यैवाऽन्तरपूरुषः॥

**மந்யந்தேவை பாபக்ருதோ நகஷ்சித் பஷ்யதீதி ந: |**
**தாம்ஸ் து தேவா: ப்ரபஷ்யந்தி ஸ்வஸ்யைவா ஆந்தரபூருஷ: || 85**

द्यौर् भूमिरापो हृदयं चन्द्रा-ऽर्का-ऽग्नि-यमा-ऽनिलाः।
रात्रिः सन्ध्ये च धर्मश् च वृत्तज्ञाः सर्वदेहिनाम्॥

**த்யௌர் பூமிராபோ ஹ்ருதயம் சந்த்ரா அர்கா அக்நி யமா அநிலா: |**
**ராத்ரி: ஸந்த்யே ச தர்மஷ் ச வ்ருத்தக்ஞா: ஸர்வதேஹிநாம் || 86**

*சாட்சி கூற வந்திருப்பவர்களே! வாதி பிரதிவாதி இவர்களில் யார் தரப்பில் நீங்கள் சாட்சி கூற வந்திருந்தாலும் உங்களுக்குத் தெரிந்த வற்றை உண்மையாக எங்களிடம் கூறுங்கள்.*

*சத்தியவாக்கை பிரம்மதேவரே பூஜிக்கிறார். அதனால் சத்தியம் பேசுபவருக்கு இவ்வுலகில் பெரும் கீர்த்தி கிட்டும். இவ்வுலக வாழ்க்கைக்குப் பின் நல்ல புண்ணிய லோகங்கள் கிட்டும்.*

*பொய்சாட்சி கூறினால், அவன், வருண பாசங்களால் கட்டப்பட்டு நீர் சம்பந்தமான வியாதிகளால் பீடிக்கப்படுவான். இறந்த பிறகு நூறு ஜன்மங்கள்வரை மிகுந்த துன்பத்துக்காளாவான். (அதாவது பொய்சாட்சி கூறிய அந்த ஐந்து நிமிஷத்து பாபம் அல்லது நீண்ட விசாரணையானால் முப்பது நிமிஷத்துப் பாபம், அடுத்த நூறு பிறவிகள்வரை அவனைத் தொடரும். வறுமை, நோய், சிறைவாசம், பழிக்காளாதல், உற்றார் உறவினரால் வெறுக்கப்படுதல், துர்மரணம்*

போன்ற எந்தெந்த துன்பங்கள் மனிதர்களைப் பாதிக்கின்றனவோ, அத்தனை துன்பங்களுக்கும் அவன் செய்த பாபங்கள்தானே காரணம். காரணமின்றி உலகில் எந்தக் காரியமும் நடைபெறுவதில்லை. எனவே மனிதன் பாபம் செய்வதற்கு மிகமிக அஞ்ச வேண்டும்.

சாட்சி கூறுபவன் சத்தியத்தைப் பேசுவதால் முன்ஜென்மப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். இந்தக் காரணத்துக்காகவும் சத்தியம் பேச வேண்டும். அதற்கும் மேல் அவனுக்குப் புண்ணியமும் பெருகும். பிராம்மணர், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் யாராயினும் சாட்சி உரைக்கும்போது உண்மையையே பேச வேண்டும்.

பயத்தாலோ வேறு காரணத்தாலோ, உண்மையும் சொல்ல வேண்டாம், பொய்யும் சொல்ல வேண்டாம். சாட்சியாகப் போகாமலே இருந்து விடுவோம் என்று வழக்கு சம்பந்தப்பட்டவற்றை கண்ணால் பார்த்தவனோ காதால் கேட்டவனோ பேசாமல் இருந்துவிடக் கூடாது. நமக்கேன் இந்தத் தொல்லை என்று இருப்பவன், தனக்குப் புண்ணியம் சேரக் கிடைத்திருக்கும் வாய்ப்பை இழக்கிறான். அதற்கும் மேல் போன ஜென்மத்துப் பாபங்கள் தொலைவது என்பது எவ்வளவு பெரிய விஷயம்! கிடைத்தற்கரிய விஷயம். இந்த உண்மைகளைப் புரிந்து கொண்டால் எவரும் பொய்ச் சாட்சி கூறமாட்டார்கள். தெரிந்த உண்மைகளை சொல்லப் பயந்து சாட்சியாக வராமலும் இருக்க மாட்டார்கள். கிடைத்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, சாட்சியாக வந்து உண்மையைக் கூற வேண்டும். வாதியோ, பிரதிவாதியோ அழைக்காவிட்டாலும்கூட, விசாரணை மண்டபத்துக்குச் சென்று சபையோர்முன் சாட்சியாக வந்திருப்ப தாகத் தெரியப்படுத்தி, கண்டதையும் கேட்டதையும் அப்படியே சொல்ல வேண்டும்.

ஒவ்வொரு மனிதன் செய்யும் பாப புண்ணியங்களையும் அவனவனுக்குள்ளிருக்கும் ஆத்மா கவனித்துக் கொண்டிருக்கும். ஒருவன் செய்யும் செயல்களுக்கு அவன் ஆத்மாவே சாட்சி. இவன் வெளியே பொய்ச்சாட்சி கூறி, உள்ளிருக்கும் அவன் ஆத்மாவாகிய சாட்சியை அவமதிக்கக் கூடாது.

பாபம் செய்பவர்கள் தாங்கள் பாபம் செய்யும்போது யாரும் பார்க்கவில்லை, சாட்சி யாருமில்லை என்று நினைக்கிறார்கள். அது அந்தப் பாபிகளின் அறியாமை. முதலில் அந்தப் பாபியின் ஆத்மா சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அடுத்து தேவர்களும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.



பூமியும் ஆகாசமும் பார்த்துக் கொண்டிருக்கின்றன. ஆத்மா வோடு நீரும் பார்த்துக் கொண்டிருக்கிறது. சூரியனும் சந்திரனும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அக்னியும், யமனும், வாயுவும், இரவும் பகலும், காலை சந்தியும், மாலை சந்தியும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தர்ம தேவரும் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

காற்றுக்கென்ன கண்ணா இருக்கிறது, ஆகாசத்துக்கென்ன காதா இருக்கிறது, அப்படியே இருந்தாலும் வந்து சாட்சியா சொல்லப் போகிறது என்று நினைக்கும் பாபி அறிவிலியாவான். பூமி, ஆகாசம், காற்று, அக்னி, சந்திகாலம், இரவு பகல் எல்லாமே தேவர்களின் சொருபங்களாகும். மனிதர்களுக்கு அந்தத் தெய்வங்கள் கண்ணுக்குப் படாமல் போவதால், இல்லையென்று நினைக்கலாம். அதிலும் பாபிகள்தான் அப்படி நினைப்பார்கள். நல்லவர்கள் அப்படி நினைக்க மாட்டார்கள். மனிதனுடைய கண் ஊனக்கண், தான் செய்யும் எந்தக் காரியத்தையும் தெய்வங்கள் பார்த்துக் கொண்டிருக் கிறார்கள் என்பதை ஒவ்வொரு மனிதனும் நன்கு உணரவேண்டும்.

देवब्राह्मणसान्निध्ये साक्ष्यं पृच्छेदृतं द्विजान्।
उदङ्मुखान् प्राङ्मुखान् वा पूर्वाह्णे वै शुचिः शुचीन्॥

**தேவ ப்ராஹ்மண ஸாந்நித்யே ஸாக்ஷ்யம் ப்ருச்சேத்ருதம் த்விஜாந் |**
**உதங்முகாங் ப்ராங்முகாந் வா பூர்வாஹ்நே வை சுசி: சுசீந் || 87**

நீதிபதி பரிசுத்தமானவனாக வந்து அமர வேண்டும். சாட்சிகளைக் கிழக்கு முகமாகவோ வடக்கு முகமாகவோ நிற்கச் சொல்ல வேண்டும். அருகில் தெய்வ விக்ரகம் இருக்க வேண்டும். வேதமறிந்த பிராம்மணர்களும் இருக்க வேண்டும். சாட்சிகளை மத்தியானத் துக்குள் விசாரிக்க வேண்டும்.

ब्रूहीति ब्राह्मणं पृच्छेत् सत्यं ब्रूहीति पार्थिवम्।
गोबीजकाञ्चनैर् वैश्यं शूद्रं सर्वैस् तु पातकैः॥

**ப்ரூஹீதி ப்ராஹ்மணம் ப்ருச்சேத் ஸத்யம் ப்ரூஹீதி பார்திவம் |**
**கோபீஜ காஞ்சநைர் வைஷ்யம் சூத்ரம் ஸர்வைஸ்து பாதகை: || 88**

சாட்சியாக பிராம்மணன் வந்து நின்றால், ‘சொல்’ என்றும், சூத்திரனானால் ‘சத்தியம் சொல்’ என்றும், வைசியனானால் ‘நீ பொய் சொன்னால் பசுக்கள், விதைகள், தங்கம் இவைகளைத் திருடிய பாபம் சேரும்’ என்றும், சூத்திரனானால் ‘பொய் சொன்னால் சகல பாபங்கள் சேரும்’ என்றும் கூறவேண்டும்.

ब्रह्मघ्नो ये स्मृता लोका ये च स्त्रीबालघातिनः।
मित्रद्रुहः कृतघ्नस्य ते ते स्युर् ब्रुवतो मृषा॥

**ப்ரஹ்மக்நோ யேஸ்ம்ருதா லோகா யே ச ஸ்த்ரீபால காதிந: |**
**மித்ரத்ருஹ: க்ருதக்நஸ்ய தேதே ஸ்யுர் ப்ருவதோ ம்ருஷா || 89**

பொய்ச்சாட்சி கூறினால் என்னென்ன சம்பவிக்கும் என்பதை சாட்சி கூற வந்திருப்பவர்களிடம் நீதிபதியோ அல்லது அருகில் இருக்கும் பிராம்மணர்களில் ஒருவரோ எடுத்துக் கூறவேண்டும். இனி அவர் எடுத்துக் கூறவேண்டிய விஷயங்களைப் பற்றிப் பார்ப்போம். அவை: நீ இங்கு பொய் பேசுவாயானால், உனக்கு ஏற்படக்கூடிய பாபங்களைப் பற்றிக் கூறுகிறேன், கேள் என்று சொல்லி பின்வருமாறு கூற வேண்டும்.

பிரம்மஹத்தி செய்தவனும், பெண்ணைக் கொன்றவனும், குழந்தையைக் கொன்றவனும், நண்பனுக்குத் துரோகம் செய்தவனும், நன்றி கொன்றவனும், எந்தெந்த பாபங்களுக்காளாகி எத்தகைய நரகங்களை அனுபவிப்பார்களோ, அத்தகைய பாபங்களை நீ அடைவாய்; அத்தகைய நரகங்களை நீ அனுபவிப்பாய்.

जन्मप्रभृति यत् किञ्चित् पुण्यं भद्र त्वया कृतम्।
तत् ते सर्वं शुनो गच्छेद् यदि ब्रूयास् त्वमन्यथा॥

**ஜன்மப்ரப்ருதியத் கிஞ்சித் புண்யம் பத்ரத்வயா க்ருதம் |**
**தத்தே ஸர்வம் சுநோ கச்சேத் யதி ப்ரூயாஸ் த்வமந்யதா ||** 90

நல்லவனே! நீ இந்த ஜன்மத்தில் என்னென்ன புண்ணியங்களைச் செய்திருக்கிறாயோ அத்தனையும் பொய்யாக நீ சாட்சி கூறினால், நீ வளர்க்கும் நாய்களுக்குப் போய்ச் சேர்ந்துவிடும்.

एकोऽहमस्मीत्यात्मानं यत् त्वं कल्याण मन्यसे।
नित्यं स्थितस् ते हृद्येष पुण्यपापेक्षिता मुनिः॥

**ஏகோ அஹமஸ்மீத்யாத்மாநம் யத்த்வம் கல்யாண மந்யஸே |**
**நித்யம் ஸ்திதஸ் தேஹ்ருத்யேஷ புண்ய பாபேக்ஷிதா முநி: ||** 91

நல்லவனே! 'நான் மட்டும்தானே இருக்கிறேன்' என்று உன்னை நீ நினைத்துக் கொள்ளாதே. நீ செய்யும் புண்ணியத்துக்கும் பாபத்துக்கும் சாட்சியாக, நித்தியமான ஆத்மா உன் உள்ளத்துக்குள் இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறது.

यमो वैवस्वतो देवो यस् तवैष हृदि स्थितः।
तेन चेदविवादस् ते मा गङ्गां मा कुरून् गमः॥

**யமோ வைவஸ்வதோ தேவோ யஸ்தவைஷ ஹ்ருதிஸ்தித: |**
**தேநசேதவிவாதஸ் தே மா கங்காம் மாகுரூந்கம: ||** 92

சூரியன் மகனான யமதர்மராஜா இப்போது உன் உள்ளத்தில் இருக்கிறார். அவர் பார்த்துக் கொண்டிருக்கும் போது, நீ உண்மை பேசினால், இதற்குப் பிறகு நீ கங்கையில் குளித்துத்தான் பாபம் போக்க வேண்டும். கயைக்குப் போய்த்தான் வினை தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதில்லை. எமதர்மராஜா, நீ சத்தியம் பேசுவதைப் பார்த்து இப்போதே உனக்கு அருள் செய்வார். உன் பாபங்களைத் தீர்ப்பார். எனவே, நீ இங்கு உண்மை உரைத்தால், இங்கு, இப்போதே காசிக்கும் கயைக்கும் போய் வந்த பயனை அடைந்து விடுவாய்.



नग्नो मुण्डः कपालेन भिक्षार्थी क्षुत्पिपासितः।
अन्धः शत्रुकुलं गच्छेद् यः साक्ष्यमनृतं वदेत्॥

**நக்னோமுண்ட: கபாலேந பிக்ஷார்த்தீ க்ஷுத்பிபாஸித: |**
**அந்த: ஷத்ருகுலம் கச்சேத் ய: ஸாக்ஷ்யமந்ருதம் வதேத் ||** 93

பொய்ச்சாட்சி கூறினால், மொட்டையனாக, திகம்பரனாக, குருடனாக ஆவாய். இத்தனைக்கும் மேல் பசியாலும் தாகத்தாலும் பீடிக்கப்பட்டவனாக, இந்தக் கோலத்தோடு உன் எதிரியிடமே போய் பிச்சைக்கு நிற்பாய்.

अवाक्शिरास् तमस्यन्धे किल्बिषी नरकं व्रजेत्।
यः प्रश्नं वितथं ब्रूयात् पृष्टः सन् धर्मनिश्चये॥

**அவாக்ஷிராஸ் தமஸ்யந்தே கில்விஷீ நரகம் வ்ரஜேத் |**
**ய: ப்ரஷ்நம் விததம் ப்ரூயாத் ப்ருஷ்ட: ஸந்தர்ம நிஷ்சயே ||** 94

நீதியை நிலைநாட்டுவதற்காக நீதிபதி கேள்வி கேட்கும்போது பொய் சொல்பவன் பெரும் பாபங்களுக்காளாவான். இறந்த பிறகு கொடிய நரகத்தை அடைவான்.

अन्धो मत्स्यानिवाऽश्नाति स नरः कण्टकैः सह।
यो भाषतेऽर्थवैकल्यमप्रत्यक्षं सभां गतः॥

**அந்தோ மத்ஸ்யாநிவா அஷ்நாதி ஸநர: கண்டகை: ஸஹ |**
**யோ பாஷதே அர்த்தவைகல்யம ப்ரத்யக்ஷம் ஸபாம் கத: ||** 95

குருடனுக்கு மீனைச் சாப்பிட ஆசை. ஆனால் முள்ளையும் மீனையும் கைகளால் துழாவிப் பிரித்தறிய அவனுக்குப் பொறுமை இல்லை. சட்டென்று முள்ளை எடுத்தெறிய கண்களும் இல்லை. பொறுமையின்றி ஆசை ஆசையாக முள்ளோடு மீனைச் சாப்பிட்டவன் நிலையை எண்ணிப் பாருங்கள்.

தான் பார்த்ததை, பார்க்கவில்லை என்றும்; கேட்டதை, கேட்கவில்லை என்றும், பார்க்காததை பார்த்தேன் என்றும், கேட்காததை கேட்டேன் என்றும் நீதிமன்றத்தில் வந்து பொய் கூறுபவன், முள்ளோடு மீனைச் சாப்பிட்ட குருடனைப் போன்று துன்புறுவான். சொற்பமாகக் கிடைக்கப் போகும் பணத்துக்காக

ஆசைப்பட்டு, இவ்வாறு பொய்ச்சாட்சி கூறுபவன் பெரும் பாபத்துக்கு ஆளாவான்.

यस्य विद्वान् हि वदतः क्षेत्रज्ञो नाऽभिशङ्कते।
तस्मान् न देवाः श्रेयांसं लोकेऽन्य पुरुषं विदुः॥

**யஸ்ய வித்வாந் ஹி வதத: க்ஷேத்ரக்ஞோ நா அபிஷங்கதே |**
**தஸ்மாந் ந தேவா: ஷ்ரேயாம்ஸம் லோகே அந்யம் புருஷம் விது: || 96**

ஒருவன் சாட்சியம் சொல்ல வரும்போது உள்ளேயிருக்கும் ஆத்மா 'இவன் பொய் சொல்லப் போகிறானா, உண்மை சொல்லப் போகிறானா' என்று சந்தேகத்தோடு பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது.

அதாவது, ஆத்மா இவன் செயல்களுக்கு வெறும் சாட்சியாக நின்று பார்த்துக் கொண்டிருக்கும். இவனே ஒரு சாட்சியாக நீதிமன்றத்துக்கு வரும்போது, இவன் உத்தமன், எக்காரணத்தாலும் பொய் சொல்ல மாட்டான், சத்தியம் மட்டுமே பேசுவான். எனவே, இப்போது இவன் சத்தியமே பேசப் போகிறான் என்று அந்த ஆத்மா தைரியமாக பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

இவ்வாறு உள்ளிருக்கும் ஆத்மா சந்தேகமின்றி தைரியமாக இருக்க வேண்டுமானால், அவன் எவ்வளவு உத்தமனாக இருப்பான் என்று ஊகிக்க முடிகிறதல்லவா? இத்தகையவனைவிட உயர்ந்த மனிதன் வேறெவனும் உண்டோ என்று தேவர்களே இவனைப் போற்றுவார்கள்.

यावतो बान्धवान् यस्मिन् हन्ति साक्ष्येऽनृतं वदन्।
तावतः सङ्ख्यया तस्मिञ् छृणु सौम्याऽनुपूर्वशः॥

**யாவதோ பாந்தவாந் யஸ்மிந் ஹந்தி ஸாக்ஷ்யே அந்ருதம் வதந் |**
**தாவத: ஸங்க்யயா தஸ்மிஞ்ச்ருணு ஸௌம்யா அனுபூர்வஷ: || 97**

பொய்ச்சாட்சி கூறுபவன் எந்த விஷயத்துக்காக பொய் கூறுகிறான் என்று பார்த்தே அவன் அடையும் பாபத்தைக் கணக்கிட முடியும். தன் புத்திர, பௌத்திரர்களில் எத்தனை பேரை நரகத்தில் வீழ்த்துவான் அல்லது எத்தனை உறவினரைக் கொன்ற பாபம் சேரும் என்பதைக் கூறுகிறேன்.

पञ्च पश्वनृते हन्ति दश हन्ति गवाऽनृते।
शतमश्वाऽनृते हन्ति सहस्रं पुरुषाऽनृते॥

**பஞ்ச பஷ்வந்ருதே ஹந்தி தஷ ஹந்தி கவா அந்ருதே |**
**ஷதமஷ்வா அந்ருதே ஹந்தி ஸஹஸ்ரம் புருஷா அந்ருதே || 98**



கால்நடைகளைப் பற்றிய வழக்குகளில் பொய்ச்சாட்சி சொன்னவனுடைய பாபத்தைப் பற்றிப் பார்ப்போம். சாதாரணமான நான்கு கால் ஜீவன்களைப் பற்றியதானால், ஐந்து உறவினரைக் கொன்ற பாபம் சேரும். அதுவே பசுக்களைப் பற்றிய பொய்யானால் பத்து உறவினரைக் கொன்ற பாபத்தைச் சேர்க்கும். குதிரைகளைப் பற்றியதானால், நூறு உறவினர்களைக் கொன்ற பாபத்தைச் சேர்க்கும். மனிதர்களைப் பற்றிய பொய்யானால், ஆயிரம் உறவினர்களைக் கொன்ற பாபத்தை அடைவான்.

हन्ति जातानजातांश् च हिरण्यार्थेऽनृतं वदन्।
सर्वं भूम्यनृते हन्ति मा स्म भूम्यनृतं वदीः॥

**ஹந்தி ஜாதாநஜாதாம்ஷ்ச ஹிரண்யா அர்தே அந்ருதம் வதந் |**
**ஸர்வம் பூம்யந்ருதே ஹந்தி மாஸ்ம பூம்யந்ருதம் வதீ: || 99**

தங்கத்தைப் பற்றிய விஷயத்தில் பொய்ச்சாட்சி உரைத்தால், இப்போதுள்ள சந்ததிகளையும், இனி பிறக்கப் போகும் சந்ததிகளையும் நசிக்கச் செய்யும். பூமி விஷயமான பொய்யானால், சகல பிராணிகளையும் கொன்ற பாபத்தைச் சேர்க்கும். எக்காரணத்தாலும் பூமியைப் பற்றிய விஷயத்தில் பொய்ச்சாட்சி சொல்லக்கூடாது.

अप्सु भूमिवदित्याहुः स्त्रीणां भोगे च मैथुने।
अब्जेषु चैव रत्नेषु सर्वेष्वश्ममयेषु च॥

**அப்சு பூமிவதித்யாஹு: ஸ்த்ரீணாம் போகேச மைதுநே |**
**அப்ஜேஷு சைவ ரத்னேஷு ஸர்வேஷ்வஷ்ம மயேஷுச || 100**

கிணறு, குளம், ஏரி முதலானவைகளைத் தன்னுடைமையாக்கிக் கொள்ளல், பெண்ணை அடைந்து அனுபவித்தல், சங்குகள், முத்துகள், ரத்தினங்கள் பற்றிய விஷயங்களில் பொய்யுரைத்தால், பூமி விஷயத்தில் போன்று சகல பிராணிகளையும் கொன்ற பாபத்தை அடைவான்.

एतान् दोषानवेक्ष्य त्वं सर्वाननृतभाषणे।
यथाश्रुतं यथादृष्टं सर्वमेवाऽञ्जसा वद॥

**ஏதாந் தோஷாநவேக்ஷ்ய த்வம் ஸர்வாநந்ருதபாஷணே |**
**யதாஸ்ருதம் யதாத்ருஷ்டம் ஸர்வமேவா அஞ்ஜஸா வத || 101**

இவ்வாறாக, பொய்யுரைப்பதால் ஏற்படும் தோஷங்களையெல்லாம் அறிந்து, கண்டதையும் கேட்டதையும் உள்ளது உள்ளவாறு சொல் என்று நீதிபதியோ, சபை பிராம்மணனோ சொல்ல வேண்டும்.

गोरक्षकान् वाणिजिकांस् तथा कारुकुशीलवान्।
प्रेष्यान् वार्धुषिकांश् चैव विप्राञ् शूद्रवदाचरेत्॥

**கோரக்ஷகாந் வாணிஜிகாம்ஸ் ததாகாருகுஷீலவாந் |**
**ப்ரேஷ்யாந் வார்துஷிகாம்ஷ்சைவ விப்ராந்சூத்ரவதாசரேத் ||** **102**

*பசு மேய்க்கும் கோபர்கள், வாணிகம் செய்பவர்கள், சமையல் செய்பவர்கள், தெருப் பாடகர்கள், சிற்பிகள், வட்டியால் ஜீவிப்பவர்கள், பணியாட்கள் முதலானோரை விசாரிக்கும்போது, அவர்கள் பிராம்மணர்களாக இருந்தாலும் சூத்திரர்களைப் போன்றே விசாரிக்க வேண்டும்.*

तद् वदन् धर्मतोऽर्थेषु जानन्नप्यन्यथा नरः।
न स्वर्गाच् च्यवते लोकाद् दैवीं वाचं वदन्ति ताम्॥

**தத் வதந் தர்மதோ அர்தேஷு ஜாநந்நப்யந்யதா நர: |**
**ந ஸ்வர்காச் ச்யவதே லோகாத் தைவீம் வாசம் வதந்தி தாம் ||** **103**

*சில தருணங்களில் தர்மமறிந்தவன், தர்மம், பொருள் பற்றிய விஷயங்களில் உண்மையை மாற்றிக் கூறினாலும் அவன் ஸ்வர்க்கத்தினின்றும் நழுவ மாட்டான் என்பது தேவவாக்கு.*

शूद्र-विट्-क्षत्र-विप्राणां यत्रर्तोक्तौ भवेद् वधः।
तत्र वक्तव्यमनृतं तद् धि सत्याद् विशिष्यते॥

**சூத்ரவிட் க்ஷத்ர விப்ராணாம் யத்ரர்த்தோக்தௌ பவேத்வத: |**
**தத்ர வக்தவ்யமந்ருதம் தத்தி ஸத்யாத் விசிஷ்யதே ||** **104**

*உண்மையை உள்ளவாறே உரைக்கும்போது பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களில் நல்லவர்களான எவருக்கேனும் உயிருக்கு ஹானி ஏற்படும் என்றால், அத்தகைய தருணங்களில் சத்தியம் கூறக் கூடாது. அப்போது உரைக்கும் பொய்யும்கூட சத்தியத்தைவிட பல மடங்கு மேலானதாகும்.*

वाग्दैवत्यैश्च चरुभिर् यजेरंस् ते सरस्वतीम्।
अनृतस्यैनसस् तस्य कुर्वाणा निष्कृतिं पराम्॥

**வாக்தைவத்யைஷ்ச சருபிர் யஜேரம்ஸ் தே ஸரஸ்வதீம் |**
**அந்ருதஸ்யைநஸஸ் தத்ர குர்வாணா நிஷ்க்ருதிம் பராம் ||** **105**

*ஆனாலும், பொய்யுரைக்க வேண்டி நேர்ந்தமைக்காக பரிகாரம் செய்து கொள்ள வேண்டும். ஸரஸ்வதியைக் குறித்து யக்ஞம் வளர்க்க வேண்டும்.*

कूष्माण्डैर् वाऽपि जुहुयाद् घृतमग्नौ यथाविधि।
उदित्यृचा वा वारुण्या तृचेनाऽब्दैवतेन वा॥

**கூஷ்மாண்டைர் வாஅபி ஜுஹுயாத் க்ருதமக்நௌ யதாவிதி |**
**உதித்ய்ருசா வா வாருண்யா த்ருசேநா அப்தைவதேந வா ||** 106

*அக்னியில் நெய் சொரிந்து, பூசணிக்காய்களால் ஹோமம் வளர்க்க வேண்டும். வருண மந்திரங்களால் அல்லது மற்ற ஜல தேவதைகளின் மந்திரங்களால் ஹோமம் செய்ய வேண்டும்.*

त्रिपक्षादब्रुवन् साक्ष्यमृणादिषु नरोऽगदः।
तदृणं प्राप्नुयात् सर्वं दशबन्धं च सर्वतः॥

**த்ரிபக்ஷாதப்ருவந் ஸாக்ஷ்யம்ருணாதிஷு நரோஅகத: |**
**தத்ருணம் ப்ராப்னுயாத் ஸர்வம் தஷபந்தம் ச ஸர்வத: ||** 107

*நீதி மண்டபத்திலிருந்து கடன் முதலான வழக்குகள் விஷயமாக அழைக்கப்பட்டவன், நாற்பத்தைந்து நாட்களுக்குள் வந்து தன் பக்கத்து நியாயத்தைக் கூறவேண்டும். இல்லாவிட்டால் பிரதி வாதியான அவன், வாதி கூறிய கடன் முழுவதையும் செலுத்த வேண்டும். மேலும் அந்தத் தொகையில் பத்தில் ஒரு பங்கை அபராதமாக அரசனுக்குச் செலுத்த வேண்டும்.*

यस्य दृश्येत सप्ताहादुक्तवाक्यस्य साक्षिणः।
रोगोऽग्निर् ज्ञातिमरणमृणं दाप्यो दमं च सः॥

**யஸ்ய த்ருஷ்யேத ஸப்தாஹாதுக்த வாக்யஸ்ய ஸாக்ஷிண: |**
**ரோகோ அக்னிர் ஞாதிமரணம்ருணம் தாப்யோ தமம் ச ஸ: ||** 108

*சாட்சியளித்த ஏழு நாட்களுக்குள் அந்த சாட்சிக்காரனை கொடிய நோய் பற்றினாலோ, அவன் வீடு முதலானவை எரிந்து போனாலோ, அவன் பங்காளிகளில் யாரேனும் இறந்தாலோ அவன் பொய்ச்சாட்சி கூறியிருக்கிறான் என்று அறிய வேண்டும்.*

असाक्षिकेषु त्वर्थेषु मिथो विवदमानयोः।
अविन्दंस् तत्त्वतः सत्यं शपथेनाऽपि लम्भयेत्॥

**அஸாக்ஷிகேஷு த்வர்த்தேஷு மிதோ விவதமாநயோ: |**
**அவிந்தம்ஸ் தத்வத: ஸத்யம் ஷபதேநாபி லம்பயேத் ||** 109

*சாட்சிகள் இல்லாத வழக்கில், வாதி பிரதிவாதிகளின் வாதத்தைக் கேட்ட பிறகும் உண்மையறிய முடியவில்லை எனில் அவர்களை சத்தியப் பிரமாணம் செய்யச் சொல்லி உண்மையை அறிய வேண்டும்.*

महर्षिभिश् च देवैश् च कार्यार्थं शपथाः कृताः।
वसिष्ठश् चाऽपि शपथं शेपे पैजवने नृपे॥

**மஹர்ஷிபிஷ்ச தேவைஷ்ச கார்யார்தம் ஷபதா: க்ருதா: |**
**வஸிஷ்டஷ்சா அபி ஷபதம் ஷேபே பைஜவநே ந்ருபே || 110**

சப்த ரிஷிகளும், தேவர்களும்கூட இவ்வாறு சத்தியப் பிரமாணங்கள் செய்திருக்கிறார்கள். அதாமன் என்ற அரசன் முன்னிலையில் வசிஷ்ட மகரிஷியும் சத்தியப் பிரமாணம் செய்திருக்கிறார்.

न वृथा शपथं कुर्यात् स्वल्पेऽप्यर्थे नरो बुधः।
वृथा हि शपथं कुर्वन् प्रेत्य चेह च नश्यति॥

**நவ்ருதா ஷபதம் குர்யாத் ஸ்வல்பே அப்யர்தே நரோ புத: |**
**வ்ருதா ஹி ஷபதம் குர்வந் ப்ரேத்ய சேஹ ச நஷ்யதி || 111**

மிகச் சிறிய விஷயத்துக்கெல்லாம் சபதம் செய்யக் கூடாது. அவ்வாறு வீணாக சபதம் (சத்தியப் பிரமாணம்) செய்பவன் இம்மையிலும் மறுமையிலும் நாசமடைவான்.

कामिनीषु विवाहेषु गवां भक्ष्ये तथेन्धने।
ब्राह्मणाऽभ्युपपत्तौ च शपथे नाऽस्ति पातकम्॥

**காமிநீஷு விவாஹேஷு கவாம் பக்ஷ்யே ததேந்தநே |**
**ப்ராஹ்மணா அப்யுபபத்தௌ ச ஷபதே நாஸ்தி பாதகம் || 112**

இவ்வாறு பிரமாணம் செய்வதிலும்கூட சில விசேஷ விதி விலக்குகள் உண்டு. சில மனைவிகளைக் கொண்டவன் 'நீதான் எனக்கு மிகவும் பிரியமானவள்' என்று பொய்ச் சத்தியம் கூறும்போது அது ஒன்றும் பாதகமாகாது.

அவ்வாறே திருமண விஷயங்களிலும், வைக்கோல், ஹோம சமித்துகள் விஷயங்களிலும், பிராம்மணனைக் காப்பதற்காகவும் பொய்ச் சத்தியம் செய்தால் பாதகமில்லை.

सत्येन शापयेद् विप्रं क्षत्रियं वाहनाऽऽयुधैः।
गोबीजकाञ्चनैर् वैश्यं शूद्रं सर्वैस् तु पातकैः॥

**ஸத்யேந ஷாபயேத் விப்ரம் க்ஷத்ரியம் வாஹநா ஆயுதை: |**
**கோபீஜ காஞ்சநைர் வைஷ்யம் சூத்ரம் ஸர்வைஸ்து பாதகை: || 113**

'சத்தியமாகச் சொல்கிறேன்' என்று பிராம்மணனை பிரமாணம் செய்யச் சொல்ல வேண்டும்.

க்ஷத்ரியனைத் தனது வாகனங்களின் மீதும், ஆயுதங்களின் மீதும் சத்தியப் பிரமாணம் செய்யச் சொல்ல வேண்டும்.

வைசியனை, பசு, தனங்கள், தானியங்களின் மீது ஆணையிட்டு சத்தியப் பிரமாணம் செய்யச் சொல்ல வேண்டும்.

சூத்திரனிடம், 'நான் பொய் கூறினால் பஞ்சமகா பாதகங்கள் செய்த பலனை அடைவேனாக!' என்று ஆணையிட்டு சத்தியப் பிரமாணம் செய்யச் சொல்ல வேண்டும்.

अग्निं वाऽऽहारयेदेनमप्सु चैनं निमज्जयेत्।
पुत्रदारस्य वाऽप्येनं शिरांसि स्पर्शयेत् पृथक्॥

**அக்நிம் வாஆஹார யேதேந மப்அ சைநம் நிமஜ்ஜயேத் |**
**புத்ரதாரஸ்ய வா அப்யேநம் ஷிராம்ஸி ஸ்பர்ஷயேத் ப்ருதக் ||** **114**

அக்னியை வைத்து சபதம் செய்யச் சொல்ல வேண்டும். அல்லது தண்ணீரில் மூழ்கி நின்று சபதம் செய்யச் சொல்ல வேண்டும். அல்லது மனைவி மக்களின் மீது தலையில் கை வைத்துச் சபதம் செய்யச் சொல்ல வேண்டும்.

यमिद्धो न दहत्यग्निरापो नोन्मज्जयन्ति च।
न चाऽऽर्तिमृच्छति क्षिप्रं स ज्ञेयः शपथे शुचिः॥

**யமித்தோ ந தஹத்யக்நிராபோ நோந்மஜ்ஜயந்தி ச |**
**நசா ஆர்திம்ருச்சதி க்ஷிப்ரம் ஸ ஞேய: ஷபதே சுசி: ||** **115**

அக்னியில் வைத்து சபதம் செய்த கை வெந்து போகாமல் இருந்தால், தண்ணீரில் மூழ்கியவன் நல்லபடி மேலே எழுந்து வந்தால், தலையில் அடித்து சபதம் செய்தவன் மனைவி மக்களுக்கு உடனடியாக எந்தத் துன்பமும் நேராதிருந்தால் அந்தச் சபதம் உண்மையானது.

वत्सस्य ह्यभिशस्तस्य पुरा भ्रात्रा यवीयसा।
नाऽग्निर् ददाह रोमाऽपि सत्येन जगतः स्पशः॥

**வத்ஸஸ்யஹ்யபிஷஸ்தஸ்ய புரா ப்ராத்ரா யவீயஸா |**
**நாக்நிர் ததாஹ ரோமாஅபி ஸத்யேந ஜகத: ஸ்பஷ: ||** **116**

முன்னர் வத்ஸன் என்னும் மகரிஷி தன் தம்பி தன் மீது சுமத்திய பழிக்காக சபதம் செய்து அக்னிப் பிரவேசம் செய்தார். அவரது ஒரு ரோமம்கூட அக்னியால் எரிக்கப்படவில்லை.

यस्मिन्यस्मिन् विवादे तु कौटसाक्ष्यं कृतं भवेत्।
तत्तत् कार्यं निवर्तेत कृतं चाऽप्यकृतं भवेत्॥

**யஸ்மிந் யஸ்மிந் விவாதே து கௌடஸாக்ஷ்யம் க்ருதம் பவேத் |**
**தத்தத் கார்யம் நிவர்தேத க்ருதம் சாஅப்யக்ருதம் பவேத் ||** **117**

சொன்னது பொய்ச்சாட்சி என்பது தெரிந்தால் வழக்கு முழுவதும் விசாரித்து முடித்த பிறகானாலும்கூட மீண்டும் விசாரணையைத் தொடங்க வேண்டும்.

लोभान् मोहाद् भयान् मैत्रात् कामात् क्रोधात् तथैव च।
अज्ञानाद् बालभावाच् च साक्ष्यं वितथमुच्यते॥

**லோபாந் மோஹாத் பயாந் மைத்ராத் காமாத் க்ரோதாத் ததைவச |**
**அக்ஞாநாத் பாலபாவாச்ச ஸாக்ஷ்யம் விததமுச்யதே || 118**

பேராசை, விவேகமின்மை, பயம், நெருங்கிய நட்பு, காமம், குரோதம், அறியாமை, சிறுபிள்ளைத்தனம் முதலான காரணங்களால் ஜனங்கள் பொய்ச்சாட்சி கூறுவார்கள்.

एषामन्यतमे स्थाने यः साक्ष्यमनृतं वदेत्।
तस्य दण्डविशेषांस् तु प्रवक्ष्याम्यनुपूर्वशः॥

**ஏஷாமன்யதமே ஸ்தாநேய: ஸாக்ஷ்யமந்ருதம் வதேத் |**
**தஸ்ய தண்ட விசேஷாம்ஸ்து ப்ரவக்ஷ்யாம்யனுபூர்வஷ: || 119**

இவற்றில் எந்தெந்தக் காரணத்துக்காக பொய்ச் சாட்சி கூறப்பட்டதோ, அததற்கான தண்டனையைக் கூறுகிறேன், கேளுங்கள்.

लोभात् सहस्रं दण्ड्यस् तु मोहात् पूर्वं तु साहसम्।
भयाद् द्वौ मध्यमौ दण्डौ मैत्रात् पूर्वं चतुर्गुणम्॥

**லோபாத் ஸஹஸ்ரம் தண்ட்யஸ் து மோஹாத் பூர்வம் து ஸாஹஸம் |**
**பயாத் த்வௌ மத்யமௌ தண்டௌமைத்ராத் பூர்வம் சதுர்குணம் || 120**

பேராசையால் பொய்ச் சாட்சி கூறுபவனுக்கு ஆயிரம் பணம் தண்டமாக (அபராதமாக) விதிக்க வேண்டும்.

மோகத்தால் பொய்ச் சாட்சி கூறுபவனுக்கு பிரதம சாகச தண்டம்.

பயத்தால் பொய்ச் சாட்சி கூறுபவனுக்கு இரண்டு மத்திம சாகச தண்டம்.

நட்பின் காரணமாக பொய்ச் சாட்சி கூறினால், நான்கு மடங்கு பிரதம சாகச தண்டம்.

कामाद् दशगुणं पूर्वं क्रोधात् तु त्रिगुणं परम्।.
अज्ञानाद् द्वे शते पूर्णे बालिश्याच् छतमेव तु॥

**காமாத் தஷகுணம் பூர்வம் க்ரோதாத் து த்ரிகுணம் பரம் |**
**அக்ஞாநாத் த்வே ஷதே பூர்ணே பாலிஷ்யாச்சதமேவது || 121**

காமத்தால் பொய்ச் சாட்சி கூறியவனுக்க பத்து மடங்கு பிரதம சாகசம்.

குரோதத்தால் பொய்ச் சாட்சி கூறியவனுக்கு மும்மடங்கு மத்திம சாகசம்.

அஞ்ஞானத்தால் பொய்ச் சாட்சி கூறியவனுக்கு இரண்டு சதங்கள்.

சிறுபிள்ளைத்தனமாக பொய்ச்சாட்சி கூறியவனுக்கு ஒரு சதம்.

**एतानाहुः कौटसाक्ष्ये प्रोक्तान् दण्डान् मनीषिभिः ।**
**धर्मस्याऽव्यभिचारार्थमधर्मनियमाय च ॥**

**ஏதாநாஹு: கௌஸாக்ஷ்யே ப்ரோக்தாந் தண்டாந் மநீஷிபி: |**
**தர்மஸ்யா அவ்யபிசாரார்மதர் மநியமாய ச || 122**

இவ்வாறாக பொய்ச் சாட்சி கூறுபவர்களுக்கு தண்டனை விதிக்க வேண்டும். தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் அதர்மத்தை அழிப்பதற்காகவும் தண்டனைகள் விதிக்கப்பட வேண்டும் என்பது சான்றோர் கூற்று.

**कौटसाक्ष्यं तु कुर्वाणास् त्रीन् वर्णान् धार्मिको नृपः ।**
**प्रवासयेद् दण्डयित्वा ब्राह्मणं तु विवासयेत् ॥**

**கௌடஸாக்ஷ்யம் து குர்வாணாம்ஸ் த்ரீந் வர்ணாந் தார்மிகோ ந்ருப: |**
**ப்ரவாஸயேத் தண்டயித்வா ப்ராஹ்மணம் து விவாசயேத் || 123**

பொய்ச் சாட்சி கூறிய க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களுக்கு இதுவரை கூறியபடி தண்டனைகளை விதிக்க வேண்டும். பொய்ச் சாட்சி கூறியவன் பிராம்மணனாக இருப்பின், அவனுக்குத் தண்டனை விதிக்காமல் நாடு கடத்த வேண்டும்.

**दश स्थानानि दण्डस्य मनुः स्वायम्भुवोऽब्रवीत् ।**
**त्रिषु वर्णेषु यानि स्युरक्षतो ब्राह्मणो व्रजेत् ॥**

**தஷ ஸ்தாநாநி தண்டஸ்ய மனு: ஸ்வாயம்புவோ அப்ரவீத் |**
**த்ரிஷு வர்ணேஷு யாநி ஸ்யுரக்ஷதோ ப்ராஹ்மணோ வ்ரஜேத் || 124**

க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களுக்கு விதிக்கும் தண்டனைகளில், குற்றவாளியின் உடம்பில் பத்து இடங்களில் தண்டிக்கும் முறையை ஸ்வாயம்புவ மனு குறிப்பிட்டுள்ளார். பிராம்மணனை மாத்திரம் உடம்பில் எந்தக் காயமும் ஏற்படுத்தாமல் நாடு கடத்த வேண்டும் என்று கூறுகிறார்.

**उपस्थमुदरं जिह्वा हस्तौ पादौ च पञ्चमम्।**
**चक्षुर् नासा च कर्णौ चन्‍ं देहस् तथैव च॥**

**உபஸ்தமுதரம் ஜிஹ்வா ஹஸ்தௌ பாதௌ ச பஞ்சமம் |**
**சக்ஷுர் நாஸாச கர்ணௌ சஸ் தனம் தேஹஸ் ததைவ ச ||** **125**

குறியிடம், வயிறு, நாக்கு, கைகள், கால்கள், கண்கள், மூக்கு, செவிகள், மார்பு, சரீரம் - இந்தப் பத்தும் தண்டனைக்குரிய இடங்கள். அதாவது தண்டனைப்படி இத்தனை அடிகள் என்று அடிக்க வேண்டும்.

**अनुबन्धं परिज्ञाय देशकालौ च तत्त्वतः।**
**साराऽपराधौ चाऽऽलोक्य दण्डं दण्ड्येषु पातयेत्॥**

**அனுபந்தம் பரிஞாய தேஷகாலெள ச தத்வத: |**
**ஸாரா அபராதௌ சாஆலோக்ய தண்டம் தண்ட்யேஷு பாதயேத் ||** **126**

தண்டனை விதிக்கும்போது இன்னும் சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

திரும்பத் திரும்பக் குற்றம் செய்பவனா அல்லது முதன் முறையாக குற்றமிழைத்திருக்கிறானா என்று பார்க்க வேண்டும்.

தேச, காலங்களையும் பார்க்க வேண்டும். இரவா, பகலா என்பதைப் பார்க்க வேண்டும்.

அவன் பலசாலியா, பணக்காரனா என்பதைப் பார்க்க வேண்டும்.

முக்கியமாக இழைத்த குற்றம் எத்தன்மையது, எதற்காக இழைக்கப்பட்டது என்பதைப் பார்க்க வேண்டும்.

**अधर्मदण्डनं लोके यशोघ्नं कीर्तिनाशनम्।**
**अस्वर्ग्यं च परत्राऽपि तस्मात् तत् परिवर्जयेत्॥**

**அதர்மதண்டநம் லோகே யஷோக்நம் கீர்திநாஷநம் |**
**அஸ்வர்க்யம் ச பரத்ரா அபி தஸ்மாத் தத் பரிவர்ஜயேத் ||** **127**

குற்றமற்றவனைக் குற்றவாளி எனக் கருதி அல்லது வேண்டு மென்றே தண்டனை விதித்தால், அந்த அதர்மத்தால் இவ்வுலக வாழ்வில் இகழை அடைவான். இறந்த பிறகு சொர்க்க லோகமும் கிட்டாது. மறுமையிலும் இகழத்தக்க வாழ்க்கையே அமையும். எனவே, அநீதியாக எவரையும் தண்டிக்கலாகாது.

**अदण्ड्यान् दण्डयन् राजा दण्ड्यांश् चैवाऽप्यदण्डयन्।**
**अयशो महदाप्नोति नरकं चैव गच्छति॥**

**அதண்ட்யாந் தண்டயந் ராஜா தண்ட்யாம்ஷ் சைவா அப்யதண்டயந் |
அயஷோ மஹதாப்நோதி நரகம்சைவ கச்சதி ||** 128

தண்டிக்க வேண்டியவர்களைத் தண்டிக்காமல் விடும் அரசனும், குற்றமற்றவனுக்கு தண்டனை அளித்த அரசனும் புகழை இழந்து இகழ்ச்சிக்காளாவான். மரணத்துக்குப் பிறகு கொடிய நரகத்தை அடைவான்.

वाग्दण्डं प्रथमं कुर्याद् धिग्दण्डं तदनन्तरम्।
तृतीयं धनदण्डं तु वधदण्डमतः परम्॥

**வாக்தண்டம் ப்ரதமம் குர்யாத் திக்தண்டம் ததநந்தரம் |
த்ருதீயம் தனதண்டம் து வததண்டமத:பரம் ||** 129

தெரியாமல், சிறிய தவறிழைத்தவனானால் அவனை அதட்டி அனுப்புவதே தண்டனைதான். உத்தமனானவன் தெரியாமல் ஏதோ சூழ்நிலையால் தவறிழைத்தால், அவனுக்கு அந்தத் தண்டனையே பெரும் தண்டனையாக அவனைப் பாதிக்கும்.

அடுத்து, பெரிய தவறிழைத்தவனானால் அவனைத் திட்டி மிரட்டி அனுப்ப வேண்டும். இத்தகையவன் பயந்து மீண்டும் தவறிழைக்க மாட்டான்.

இந்த இரு தண்டனைகளும் சூழ்நிலையால் தெரியாமல் வேறு வழியின்றி செய்துவிட்ட தவறுகளுக்கான தண்டனையேயன்றி குற்றங்களுக்கான தண்டனையன்று. தவறுவது என்பது வேறு, குற்றமிழைப்பது என்பது வேறல்லவா?

மூன்றாவது தண்டனை எதுவெனில் - குற்றத்தின் தன்மையைப் பொறுத்து குற்றவாளிக்கு இவ்வளவு தொகை செலுத்த வேண்டும் என்று அபராதம் விதிப்பது.

நான்காவது தண்டனையாகத்தான் அடிப்பதைக் கூறியிருக்கிறார். ஒருவன் செய்த குற்றத்தைப் பொறுத்து அவனுடைய பத்து அங்கங்களில் எந்த அங்கத்தில், எத்தனை அடிகள் அடிக்க வேண்டும் என்று தண்டனை விதிக்க வேண்டும்.

वधेनापि यदा त्वेतान् निग्रहीतुं न शक्नुयात्।
तदैषु सर्वमप्येतत् प्रयुञ्जीत चतुष्टयम्॥

**வதேநாபி யதாத்வேதாந் நிக்ரஹீதும் ந ஷக்னுயாத் |
ததைஷு ஸர்வமப்யேதத் ப்ரயுஞ்ஜீத சதுஷ்டயம் ||** 130

அடிகளைக் கொடுத்தும்கூட ஒருவனை அடக்க முடியவில்லையெனில், அதிக அளவு அபராதம் போட்டும், நயமாகவும் பயமாகவும் பேசித் திருத்தப் பார்க்க வேண்டும்.

लोकसंव्यवहारार्थं याः संज्ञाः प्रथिता भुवि।
ताम्र-रूप्य-सुवर्णानां ताः प्रवक्ष्याम्यशेषतः ॥

**லோகஸம்வ்யவஹாரார்த்தம் யா: ஸம்ஞா: ப்ரதிதா புவி |**
**தாம்ர ரூப்ய சுவர்ணாநாம் தா: ப்ரவக்ஷ்யாம்யசேஷத: ||** 131

*வாங்கவும் விற்கவும் உபயோகப்படும் (நாணயங்கள்) தங்கம், வெள்ளி, செம்பு இவற்றின் அளவுகளைக் கூறுகிறேன், கேளுங்கள்.*

जालान्तरगते भानौ यत् सूक्ष्मं दृश्यते रजः।
प्रथमं तत् प्रमाणानां त्रसरेणुं प्रचक्षते ॥

**ஜாலாந்தரகதே பாநௌ யத் சூக்ஷ்மம் த்ருஷ்யதே ரஜ: |**
**ப்ரதமம் தத் ப்ரமாணாநாம் த்ரஸரேணும் ப்ரசக்ஷதே ||** 132

*கதவு, ஜன்னல்களின் வழியாக சூரிய கிரணங்கள் நுழையும் போது அதில் தூசுகள் நம் கண்ணுக்குத் தெரியும். அதில் ஒரு தூசி அளவிலானது த்ரஸரேணு எனப்படும்.*

त्रसरेणवोऽष्टौ विज्ञेया लिक्षैका परिमाणतः।
ता राजसर्षपस् तिस्रस् ते त्रयो गौरसर्षपः ॥

**த்ரஸரேணவோ அஷ்டௌ விக்ஞேயா லிக்ஷைகா பரிமாணத: |**
**ஸா ராஜஸர்ஷபஸ் திம்ரஸ் தே த்ரயோ கௌரஸர்ஷய: ||** 133

*இந்த திரசரேணுக்கள் லிட்சை எனப்படும். மூன்று லிட்சைகள் கொண்டது ராஜஸர்ஸபம் எனப்படும். மூன்று ராஜஸர்ஸபங்கள் கொண்டது கௌரஸர்ஸபம் எனப்படும். (வெண்கடுகு அளவு)*

सर्षपाः षड् यवो मध्यस् त्रियवं त्वेककृष्णलम्।
पञ्चकृष्णलको माषस् ते सुवर्णस् तु षोडश ॥

**ஸர்பஷா: ஷட்கவோ மத்யஸ் த்ரியவம் த்வேக க்ருஷ்ணலம் |**
**பஞ்ச கிருஷ்ணலகோ மாஷஸ்தே சுவர்ணஸ் து சோடஷ ||** 134

*ஆறு வெண்கடுகுகள் எடை கொண்டது யவம் எனப்படும். மூன்று யவைகள் எடை கொண்டது ஒரு குன்றிமணி. ஐந்து குன்றிமணிகள் எடை கொண்டது மாஷம் எனப்படும். பதினாறு மாஷங்கள் எடை கொண்டது ஒரு சுவர்ணம் எனப்படும்.*

पलं सुवर्णाश् चत्वारः पलानि धरणं दश।
द्वे कृष्णले समधृते विज्ञेयो रूप्यमाषकः ॥

**பலம் சுவர்ணாஷ் சத்வார: பலாநி தரணம் தஷ |**
**த்வே க்ருஷ்ணலே ஸமத்ருதே விக்ஞேயோ ரூப்யமாஷக: ||** 135

*நான்கு சுவர்ணம் எடை கொண்டது ஒரு பலம். பத்து பலங்கள் எடை கொண்டது ஒரு தரணம். இரண்டு குன்றிமணி எடை*

கொண்டது ஒரு ரூப்யமாஷகம் ஆகும். (இது வெள்ளியின் எடை அளவு.)

ते षोडश स्याद् धरणं पुराणश् चैव राजतः।
कार्षापणस् तु विज्ञेयस् ताम्रिकः कार्षिकः पणः॥

**தே ஷோடஷ ஸ்யாத் தரணம் புராணஷ்சைவ ராஜத: |**
**கார்ஷாபணஸ்து விக்ஞேயஸ் தாம்ரிக: கார்ஷிக: பண: || 136**

பதினாறு வெள்ளி மாஷங்கள் எடை கொண்டது ஒரு வெள்ளி தரணம் ஆகும். இந்த வெள்ளி தரணத்துக்கு புராணம் என்னும் ஒரு பெயர் உண்டு.

செம்பினால் செய்யப்பட்ட நாணயம் கார்ஷாபணம் எனப்படும்.

धरणानि दश ज्ञेयः शतमानस् तु राजतः।
चतुःसौवर्णिको निष्को विज्ञेयस् तु प्रमाणतः॥

**தரணாநி தஷஞேய: ஷதமாநஸ்து ராஜத: |**
**சது: ஸௌவர்ணிகோ நிஷ்கோ விஞேயஸ் து ப்ரமாணத: || 137**

பத்து வெள்ளி தரணங்கள் சேர்ந்த எடைக்கு சதமானம் என்று பெயர். நான்கு சுவர்ணங்கள் எடை கொண்ட தங்கத்துக்கு நிஷ்கம் என்று பெயர்.

पणानां द्वे शते सार्धे प्रथमः साहसः स्मृतः।
मध्यमः पञ्च विज्ञेयः सहस्रं त्वेव चोत्तमः॥

**பணாநாம் த்வே ஷதே ஸாஅர்தே ப்ரதம: ஸாஹஸ: ஸ்ம்ருத: |**
**மத்யம: பஞ்ச விஞேய: ஸஹஸ்ரம் த்வேவ சோத்தம: ||| 138**

இருநூற்று ஐம்பது பணம் கொண்டது பிரதம சாகசம் அல்லது பூர்வசாகசம் எனப்படும். ஐநூறு பணம் கொண்டது மத்திய சாகசம். ஆயிரம் பணம் கொண்டது உத்தம சாகசம் எனப்படும்.

ऋणे देये प्रतिज्ञाते पञ्चकं शतमर्हति।
अपह्नवे तद् द्विगुणं तन् मनोरनुशासनम्॥

**ருணேதேயே ப்ரதிஞாதே பஞ்சகம் ஷதமர்ஹதி |**
**அபஹ்நவே தத் த்விகுணம் தந்மநோரனுஷாஸநம் || 139**

கடனாளி கடனைத் திருப்பித் தராமல் வழக்கு நீதிமன்றத்துக்கு வந்த பிறகு, தான் கடன் பெற்றுக் கொண்டது உண்மைதான் என்று கூறினால், அவனிடமிருந்து கடன் தொகையை கடன் கொடுத்தவனுக்கு வாங்கித் தர வேண்டும். மேலும் நூற்றுக்கு ஐந்து பணம் அபராதம் விதிக்க வேண்டும்.

கடனாளி தான் வாங்கவே இல்லை என்று பொய் கூறி மறுத்தால், வழக்கு விசாரணையில் அவன் பொய் கூறியுள்ளான் என்பது நிரூபணமானால் கடன் கொடுத்தவனுக்கு அந்தத் தொகையை வாங்கித் தர வேண்டும். அதற்கும் மேல் நூற்றுக்குப் பத்து பணம் அபராதம் விதிக்க வேண்டும். இது மனுவின் சாசனம்.

वसिष्ठविहितां वृद्धिं सृजेद् वित्तविवर्धिनीम्।
अशीतिभागं गृह्णीयान् मासाद् वार्धुषिकः शते॥

**வசிஷ்டவிஹிதாம் வ்ருத்திம் ஸ்ருஜேத் வித்தவிவர்திநீம் |**
**அஷீதிபாகம் க்ருஹ்ணீயாந் மாஸாத் வார்துஷிக: ஷதே || 140**

வட்டி ஜீவனம் செய்பவன், தன் செல்வத்தைப் பெருக்குவதற்காக நூற்றுக்கு எண்பதில் ஒரு பாகம் மாத வட்டியாகப் பெற வேண்டும். இது வசிஷ்டர் வாக்கு.

द्विकं शतं वा गृह्णीयात् सतां धर्ममनुस्मरन्।
द्विकं शतं हि गृह्णानो न भवत्यर्थकिल्विषी॥

**த்விகம் ஷதம்வா க்ருஷ்ணீயாத் ஸதாம் தர்மமணுஸ்மரந் |**
**த்விகம் ஷதம் ஹி க்ருஹ்ணாநோ ந பவத்யர்தகில்பிஷீ || 141**

சாதுக்களுடைய தர்மத்தை அனுசரிப்பவன், நூற்றுக்கு இரண்டு வட்டிகூட வாங்கலாம். இப்படி வாங்கினாலும் அவன் பாபியாக மாட்டான்.

द्विकं त्रिकं चतुष्कं च पञ्चकं च शतं समम्।
मासस्य वृद्धिं गृह्णीयाद् वर्णानामनुपूर्वशः॥

**த்விகம் த்ரிகம் சதுஷ்கம் ச பஞ்சகம் ச ஷதம் சமம் |**
**மாஸஸ்ய வ்ருத்திம் க்ருஹ்ணீயாத் வர்ணாநாமனுபூர்வஷ: || 142**

சாதுக்களுடைய தர்மத்தை அனுசரிப்பவன், நூற்றுக்கு மாதத்துக்கு இரண்டு வட்டியைப் பிராம்மணனிடம் வாங்கலாம்; மூன்று வட்டியை க்ஷத்திரியனிடம் வாங்கலாம்; நான்கு வட்டியை வைசியனிடம் வாங்கலாம்; ஐந்து வட்டியை சூத்திரனிடம் வாங்கலாம்.

न त्वेवाऽऽधौ सोपकारे कौसीदीं वृद्धिमाप्नुयात्।
न चाऽऽधेः कालसंरोधान् निसर्गोऽस्ति न विक्रयः॥

**நத்வேவாஆதௌ ஸோபகாரே கௌஸீதீம் வ்ருத்திமாப்நுயாத் |**
**நசாஆதே: காலஸம்ரோதாந் நிஸர்கோ அஸ்தி நவிக்ரய: || 143**

நிலத்தை அடகு வைத்திருந்தால், அதில் வரும் லாபத்தை அனுபவிப்பதால் வட்டி என்று எதுவுமே வாங்கக்கூடாது.

நெடுங்காலம் அடகில் இருக்கிறது என்பதற்காக அதை விற்கவும் கூடாது.

न भोक्तव्यो बलादाधिर् भुञ्जानो वृद्धिमुत्सृजेत्।
मूल्येन तोषयेच् चैनमाधि-स्तेनोऽन्यथा भवेत्॥

**நபோக்தவ்யோ பலாதாதிர் புஞ்ஜாநோ வ்ருத்திமுத்ஸ்ருஜேத் |**
**மூல்யேந தோஷயேச் சைநமாதிஸ்தேநோ அந்யதா பவேத் || 144**

அடகு வைக்கப்பட்ட பொருட்களை, பலாத்காரமாக, தான் அனுபவிக்கக்கூடாது. அப்படி அனுபவிப்பவன் வட்டி வாங்கக் கூடாது. அவன் அனுபவிப்பதால் அந்தப் பொருள் பாழாகுமானால், அப்பொருளின் விலைமதிப்பு எவ்வளவோ, அவ்வளவு தொகையை பொருளின் உடைமைக்காரனுக்குக் கொடுக்க வேண்டும். இல்லாவிடில் இவன் திருடன் எனப்படுவான்.

आधिश् चोपनिधिश् चोभौ न कालात्ययमर्हतः।
अवहार्यौ भवेतां तौ दीर्घकालमवस्थितौ॥

**ஆதிஷ் சோபநிதிஷ் சோபௌ ந காலாஅத்ய யமர்ஹத: |**
**அவஹார்யௌ பவேதாம் தௌதீர்க்ககால மவஸ்திதௌ || 145**

அடகு வைக்கப்பட்ட பொருளும், இரவல் பெற்ற பொருளும் ஒருக்காலும் அவன் உடைமையாகாது. அப்பொருளின் சொந்தக்காரன் கேட்கும்போது அவைகளைக் கொடுத்துவிட வேண்டும்.

सम्प्रीत्या भुज्यमानानि न नश्यन्ति कदाचन।
धेनुरुष्ट्रो वहन्नश्वो यश् च दम्यः प्रयुज्यते॥

**ஸம்ப்ரீத்யா புஜ்யமாநாநி ந நஷ்யந்தி கதாசந |**
**தேனுருஷ்ட்ரோ வஹந்நஷ்வோ யஷ்ச தம்ய: ப்ரயுஜ்யதே || 146**

பசு, ஒட்டகம், சவாரி செய்யும் குதிரை, எருது முதலானவைகளை, அதன் சொந்தக்காரன் மனமுவந்து அனுபவித்துக் கொள்ளுமாறு கொடுத்தால் அனுபவிக்கலாம். ஆனால், எந்நாளும் அவைகள் இவனுடைய சொந்தமாகாது.

यत् किञ्चिद् दश वर्षाणि सन्निधौ प्रेक्षते धनी।
भुज्यमानं परैस् तूष्णीं न स तल् लब्धुमर्हति॥

**யத்கிஞ்சித் தஷ வர்ஷாணி ஸந்நிதௌ ப்ரேக்ஷதே தநீ |**
**புஜ்யமாநம் பரைஸ்தூஷ்ணீம் நஸதல்லப்து மர்ஹதி || 147**

எந்த ஒரு பொருளையும் அதன் சொந்தக்காரன் அனுமதியின்றி அனுபவிதித்துக் கொண்டிருந்தால், சொந்தக்காரன் அதைப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. சொந்தக்காரன் எந்த நடவடிக்கையும்

எடுக்காமல் இருந்து விட்டால், அந்தப் பொருளை அவன் இழக்க வேண்டி வரும். அதாவது பத்து ஆண்டுகள்வரை சொந்தக்காரன் பேசாமல் இருந்து விட்டால் அந்தப் பொருளின்மீது உரிமையை இழப்பான். பத்து ஆண்டுகளாக அனுபவித்துக் கொண்டிருப்பவனுக்கே அந்தப் பொருள் உடைமையாகும்.

अजडश् चेदपोगण्डो विषये चाऽस्य भुज्यते।
भग्नं तद् व्यवहारेण भोक्ता तद् धनमर्हति॥

**அஜடஷ் சேதபோகண்டோ விஷயே சாஸ்ய புஜ்யதே |**
**பக்நம் தத் வ்யவஹாரேண போக்தா தத் தனமர்ஹதி || 148**

அப்பொருளின் சொந்தக்காரன் அறிவிலியல்லன், மேலும் பதினாறு வயதைக் கடந்தவன், என்னும்போது அவன் தன் சொத்தை பிறர் அனுபவிப்பதைத் தடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தால், பத்தாண்டுகளில் அது அனுபவித்தவன் சொத்தாகிவிடும். ஆனால், சொந்தக்காரன் அறிவு குறைந்தவன் (அரைப் பைத்தியம், அசடாக இருப்பவன்) என்றாலும், பதினாறு வயது நிறையாதவன் என்றாலும் இந்த விதிமுறை பொருந்தாது.

आधिः सीमा बालधनं निक्षेपोपनिधिः स्त्रियः।
राजस्वं श्रोत्रियस्वं च न भोगेन प्रणश्यति॥

**ஆதி: ஸீமா பாலதனம் நிக்ஷேபோபநிதி: ஸ்த்ரிய: |**
**ராஜஸ்வம் ஸ்ரோத்ரியஸ்வம் ச ந போகேந ப்ரணஷ்யதி || 149**

அடகு வைத்த பொருள், பூமி எல்லை, பாலகர் சொத்து, இவ்வளவு என்று கூறி பாதுகாக்கச் சொல்லி கொடுத்து வைத்த பொருள், இவ்வளவு என்று கூறாமல் பூட்டி வைத்துக் கொடுத்த பெட்டி, பணிப்பெண்கள், மன்னனுக்குரிமையானது, பிராம்மணனுக்குரிமையானது இவையெல்லாம் அனுபவித்துக் கொண்டிருப்பவனுக்கு உரிமையாகாது. அதாவது பத்து வருட அனுபவ உரிமை என்பது இந்த விஷயங்களுக்குக் கிடையாது.

यः स्वामिनाऽननुज्ञातमाधिं भुङ्क्तेऽविचक्षणः।
तेनाऽर्धवृद्धिर् मोक्तव्या तस्य भोगस्य निष्कृतिः॥

**ய: ஸ்வாமிநாஅநநுஞாதமாதிம் புங்க்தே அவிசக்ஷண: |**
**தேநா அர்தவ்ருத்திர் மோக்தவ்யா தஸ்ய போகஸ்ய நிஷ்க்ருதி: || 150**

தன்னிடம் அடகு வைக்கப்பட்ட பொருளை சொந்தக்காரனுக்குத் தெரியாமல் அனுபவிப்பவன், தான் அனுபவித்த காரணத்தால் அதன் வட்டித் தொகையில் பாதியைத் தள்ளுபடி செய்ய வேண்டும்.

कुसीदवृद्धिर् द्वैगुण्यं नाऽत्येति सकृदाहृता।
धान्ये सदे लवे वाह्ये नाऽतिक्रामति पञ्चताम्॥

**குஸீதவ்ருத்திர் த்வைகுண்யம் நாஅத்யேதி ஸக்ருதாஹ்ருதா |**
**தான்யே ஸதே லவே வாஹ்யே நாஅதிக்ராமதி பஞ்சதாம் || 151**

ஒருமுறை நிர்ணயித்த வட்டித் தொகையை இரு மடங்காக் கலாம். அதற்கும் மேல் கூடாது. தானியங்கள், பழங்கள், காய்கள், கம்பளத்துக்கான ரோமம், வாகனம் இவைகளை விலை பேசிய பிறகு காலம் கடந்தால், ஐந்து மடங்கு அதிகரிக்கலாம்.

कृताऽनुसारादधिका व्यतिरिक्ता न सिध्यति।
कुसीदपथमाहुस् तं पञ्चकं शतमर्हति॥

**க்ருதா அனுஸாராததிகா வ்யதிரிக்தா நசித்யதி |**
**குஸீதபதமாஹுஸ்தம் பஞ்சகம் ஷதமர்ஹதி || 152**

அந்தந்த வர்ணத்தாருக்குத் தக்கபடி நூற்றுக்கு இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்று விதிக்கப்பட்டதைவிட அதிக வட்டி வாங்கக் கூடாது. வர்ணபேதம் பாராமல் அதிக வட்டி வாங்குவது நிந்தைக் குரியது.

नाऽतिसांवत्सरीं वृद्धिं न चाऽदृष्टां पुनर् हरेत्।
चक्रवृद्धिः कालवृद्धिः कारिता कायिका च या॥

**நாதிஸாம்வத்ஸரீம் வ்ருத்திம் ந சாஅத்ருஷ்டாம் புநர்ஹரேத் |**
**சக்ரவ்ருத்தி: காலவ்ருத்தி காரிதா காயிகா சயா || 153**

இவ்வளவு மாத வட்டி, இவ்வளவு காலத்துக்குள் தொகையைத் திரும்ப அடைக்க வேண்டும் என்பதை முதலிலேயே பேசிக் கொள்ள வேண்டும். இந்த ஏற்பாடு ஒரு வருடத்துக்குச் செய்து கொள்ளலாம். அதற்கு மேற்படக்கூடாது. மேலும் சாஸ்திரத்தில் சொல்லப்படாத முறையில் சாஸ்திர விரோதமாக வட்டி வாங்கக் கூடாது.

வட்டிக்கு வட்டி கட்டுவது சக்கரவிருத்தி எனப்படும். தினவட்டி, வார வட்டி என்று அதிக வட்டி வசூலிப்பதற்கு காலவிருத்தி எனப்படும்.

கடன் பெற்றுக் கொண்டவன், கடன் கொடுத்தவன் கொடுத்த தொல்லைகள் தாங்க முடியாமல் குறித்த காலத்துக்கு முன்பே கொடுக்கும் அதிக வட்டி காரிதவிருத்தி எனப்படும்.

உடலுழைப்பு செய்யுமாறு நியமிப்பது காயிகவிருத்தி எனப்படும்.

சக்கரவிருத்தி, காலவிருத்தி, காரிதவிருத்தி, காயிகவிருத்தி என்னும் இந்த நான்கு முறைகளுமே சாஸ்திரத்துக்கு விரோதமானவை.

**ऋणं दातुमशक्तो यः कर्तुमिच्छेत् पुनः क्रियाम्।**
**स दत्त्वा निर्जितां वृद्धिं करणं परिवर्तयेत्॥**

**ருணம் தாதுமஷக்தோ ய: கர்துமிச்சேத் புந: க்ரியாம் |**
**ஸ தத்வா நிர்ஜிதாம் வ்ருத்திம் கரணம் பரிவர்தயேத் ||** 154

*கடன் வாங்கிக் கொண்டவன் கடன் தொகையைத் திருப்பித் தர இயலாத நிலையில் இருந்தால், அவனிடம் கடன் கொடுத்தவன் வட்டியை மட்டும் வாங்கிக் கொள்ள வேண்டும். அசலுக்குப் புதிதாக மீண்டும் ஒரு பத்திரம் எழுதி வாங்க வேண்டும்.*

**अदर्शयित्वा तत्रैव हिरण्यं परिवर्तयेत्।**
**यावती सम्भवेद् वृद्धिस् तावतीं दातुमर्हति॥**

**அதர்ஷயித்வா தத்ரைவ ஹிரண்யம் பரிவர்தயேத் |**
**யாவதீ ஸம்பவே வ்ருத்திஸ்தாவதீம் தாதுமர்ஹதி ||** 155

*கடன்காரன் அந்த வட்டிப் பணத்தைக்கூட செலுத்த இயலாத நிலையில் இருந்தால், அப்போது அந்த வட்டித் தொகையோடு அசலையும் சேர்த்து முழுத் தொகைக்குமாக புதிதாக ஒரு கடன் பத்திரம் எழுதி வாங்க வேண்டும்.*

**चक्रवृद्धिं समारूढो देशकालव्यवस्थितः।**
**अतिक्रामन् देशकालौ न तत्फलमवाप्नुयात्॥**

**சக்ரவ்ருத்திம் ஸமாரூடோ தேஷகாலவ்யவஸ்தித: |**
**அதிக்ராமந் தேஷகாலௌ ந தத்பலமவாப்னுயாத் ||** 156

*வண்டியோட்டி இவ்வளவு தூரம் இந்தப் பொருளைக் கொண்டு போய்ச் சேர்க்கிறேன், அதற்கு இவ்வளவு பணம் தர வேண்டும் என்று நிர்ணயித்துக் கொள்வது தேசவியவஸ்தை எனப் படும்.*

*இத்தனை நாட்களில் இந்த வேலையைச் செய்து முடிக்கிறேன், அதற்கு இவ்வளவு தொகை தரவேண்டும் என்று நிர்ணயித்துக் கொள்வது காலவியவஸ்தை எனப்படும்.*

*இவ்வாறு நிர்ணயித்துப் பேசிய பிறகு அப்படிச் செய்யா விட்டால், குறிப்பிட்ட தூரம் கொண்டு போகாவிட்டால் அல்லது குறிப்பிட்ட நாட்களுக்குள் செய்து முடிக்காவிட்டால் பேசியபடி தொகையைக் கொடுக்க வேண்டியதில்லை.*

**समुद्रयानकुशला देशकालार्थदर्शिनः।**
**स्थापयन्ति तु यां वृद्धिं सा तत्राधिगमं प्रति॥**

**ஸமுத்ரயாநகுஷலா தேஷகாலா அர்த தர்ஷிந: |**
**ஸ்தாபயந்தி து யாம் வ்ருத்திம் ஸா தத்ராஅதிகமம் ப்ரதி ||** 157

தரை மார்க்கமாகவும், சமுத்திர மார்க்கமாகவும் செல்லும்போது, இவ்வளவு சுமைக்கு, இவ்வளவு தூரத்துக்கு, இவ்வளவு காலத்துக்கு, இவ்வளவு தொகை வாடகை என்று வர்த்தகர்களிடம் பேசிக் கொள்ள வேண்டும்.

**यो यस्य प्रतिभूस् तिष्ठेद् दर्शनायेह मानवः।**
**अदर्शयन् स तं तस्य यतेत स्वधनादृणम्॥**

**யோ யஸ்ய ப்ரதிபூஸ் திஷ்டேத் தர்ஷநாயேஹ மாநவ: |**
**அதர்ஷயந் ஸ தம் தஸ்ய யதேத ஸ்வதநாத்ருணம் || 158**

கடன் விஷயத்தில், பிணையாக நின்று கடன் வாங்கிக் கொடுத்தவன், கடன் கொடுத்தவன் கடனாளியைப் பார்க்க வேண்டும் என்று சொல்லும்போது அவனை அழைத்து வரவேண்டும். அவனைக் காட்டாமலே இருந்துவிட்டால், பிணையாளனே கடன் முழுவதையும் தீர்க்க வேண்டும்.

**प्रातिभाव्यं वृथादानमाक्षिकं सौरिकं च यत्।**
**दण्डशुल्काऽवशेषं च न पुत्रो दातुमर्हति॥**

**ப்ராதிபாவ்யம் வ்ருதாதாநமாக்ஷிகம் ஸௌரிகம் ச யத் |**
**தண்டஷுல்காஅவசேஷம் ச ந புத்ரோ தாதுமர்ஹதி || 159**

பிணை நின்று கடன் வாங்கித் தந்த தொகைக்கு பிணையாளனே பொறுப்பு. அவன் இறந்து விட்டால் அவன் மகன் பொறுப்பு. அதேபோல் இறந்தவன், பிரயோஜனமேதுமின்றி பந்தயம் கட்டிய தொகைக்கும் அவன் மகனே பொறுப்பு. இவ்வாறு சூதாடியதில் கடன் வைத்துள்ள தொகைக்கும், மதுபானக் கடைகளில் கடன் வைத்துள்ள தொகைக்கும், தண்டனையாக விதிக்கப்பட்ட அபராதத் தொகைக்கும், செலுத்த வேண்டிய வரித் தொகைக்கும் அவன் மகனே பொறுப்பு.

**दर्शनप्रातिभाव्ये तु विधिः स्यात् पूर्वचोदितः।**
**दानप्रतिभुवि प्रेते दायादानपि दापयेत्॥**

**தர்ஷநப்ராதிபாவ்யே து விதி: ஸ்யாத் பூர்வசோதித: |**
**தானப்ரதிபுவி ப்ரேதே தாயாதாநபி தாபயேத் || 160**

தந்தை உயிரோடிருக்கும்போது தனது கடன்களுக்கு வேறொருவரை பிணையாக நியமித்திருந்தால் அவன் மகன்கள் அந்தக் கடன் தொகைக்கு பொறுப்பேற்க வேண்டியதில்லை. ஆனால் வேறு ஒருவரின் கடனுக்கு இவர்களின் தந்தை பிணையாக நின்று பொறுப்பேற்றிருந்து இறந்து விட்டால் அந்தத் தொகைக்கு அவன் மகன்களே பொறுப்பேற்க வேண்டும்.

अधातरि पुनर् दाता विज्ञातप्रकृतावृणम्।
पश्चात् प्रतिभुवि प्रेते परीप्सेत् केन हेतुना॥

அதாதரி புநர்தாதா விக்ஞாத ப்ரக்ருதாவ்ருணம் |
பஷ்சாத் ப்ரதிபுவி ப்ரேதே பரீப்ஸேத் கேந ஹேது நா || 161

பிணையாக நின்றவன் இறந்துவிட்டால், கடன் கொடுத்தவன் தனக்குச் சேரவேண்டிய தொகையைப் பெறுவது எப்படி என்று பார்ப்போம்.

निरादिष्टधनश् चेत् तु प्रतिभूः स्यादलंधनः।
स्वधनादेव तद् दद्यान् निरादिष्ट इति स्थितिः॥

நிராதிஷ்ட தனஷ்சேத் து ப்ரதிபூ: ஸ்யாதலம்தன: |
ஸ்வதநாதேவ தத் தத்யாந் நிராதிஷ்ட இதி ஸ்திதி: || 162

பிணையாக நின்றவன், கூறியபடி உரிய காலத்தில் கடனைத் தீர்க்காமலும், கடன்காரனையும் அழைத்து வந்து காட்டாமலும் இருந்துவிட்டு இறந்தும் போய் விட்டால், பிணையாக நின்றவனுடைய சந்ததியினரே கடன் கொடுத்தவனுக்குச் சேரவேண்டிய தொகையைச் செலுத்த வேண்டும்.

मत्तोन्मत्ताऽऽर्ताध्यधीनैर् बालेन स्थविरेण वा।
असम्बद्धकृतश् चैव व्यवहारो न सिध्यति॥

மத்தோந் மத்தா ஆர்தா அத்யதீநைர் பாலேந ஸ்தவிரேண வா |
அஸம்பத்த க்ருதஷ்சைவ வ்யவஹாரோ ந ஸித்யதி || 163

குடிகாரன், பைத்தியக்காரன், நோயாளி, சிறுவன், வயோதிகன் முதலானவர்களுடன் வாங்கல் கொடுக்கல் சம்பந்தமான வழக்கு களையும், பந்துக்களே அற்ற ஒருவனிடம் வாங்கல் கொடுக்கல் சம்பந்தமான வழக்கையும் ஏற்கத் தேவையில்லை.

सत्या न भाषा भवति यद्यपि स्यात् प्रतिष्ठिता।
बहिश् चेद् भाष्यते धर्मान् नियताद् व्यावहारिकात्॥

ஸத்யா ந பாஷா பவதி யத்யபிஸ்யாத் ப்ரதிஷ்டிதா |
பஹிஷ் சேத் பாஷ்யதே தர்மாந் நியதாத் வ்யாவஹாரிகாத் || 164

எழுத்து மூலமான பத்திரமாக இருந்தாலும்கூட அவரவர் விருப்பப்படி எப்படி வேண்டுமானாலும் எழுதிக் கொண்டுவிட முடியாது. காலங்காலமாகக் கடைப்பிடித்து வரும் வழக்கத்துக்கு விரோதமாகவும், தர்மத்துக்கு விரோதமாகவும் இருக்கும் ஒப்பந்தங்களை நிறைவேற்றத் தேவையில்லை. இத்தகைய வழக்குகளைத் தள்ளுபடி செய்ய வேண்டும்.

योगाऽऽधमनविक्रीतं योगदानप्रतिग्रहम्।
यत्र वाऽप्युपधिं पश्येत् तत् सर्वं विनिवर्तयेत्॥

**யோகா ஆதமநவிக்ரீதம் யோகதாந ப்ரதிக்ரஹம் |**
**யத்ர வாஅப்யுபதிம் பஷ்யேத் தத் ஸர்வம் விநிவர்தயேத் ||** **165**

மோசடியாக அடகு வைக்கப்பட்ட பொருள், மோசடியாக வாங்கிய பொருள், மோசடியாகத் தானம் கொடுத்த பொருள் இவையெல்லாம் செல்லுபடியாகாது. உதாரணமாக, ஒருவன் எங்கோ திருடிய பொருளைக் கொண்டு வந்து விற்றான் என்று வைத்துக் கொள்வோம். அதை ஒருவன் விலை கொடுத்து வாங்கியிருந்தாலும் அது அவனுடையது ஆகாது. காவலர்கள் தேடிப் பிடிக்கும்போது அதை அவனிடமிருந்து பறித்துச் செல்வார்கள்.

அடகு வைக்கப்பட்ட பொருளும் அப்படியே. மோசடிப் பொருளாக இருந்தால், காவலர்களிடம் கொடுத்துவிட வேண்டியதுதான். தானம் வாங்கியவன் அந்தப் பொருளைத் தன்னுடையது என்று நினைத்துக் கொண்டிருப்பான். ஆனால் அது மோசடிப் பொருளாக இருந்தால் அவனுடையதாகாது. மோசடிக்குள் ஈடுபட்ட எந்த விவகாரமானாலும் இதுதான் கதி.

ग्रहीता यदि नष्टः स्यात् कुटुम्बार्थे कृतो व्ययः।
दातव्यं बान्धवैस् तत् स्यात् प्रविभक्तैरपि स्वतः॥

**க்ரஹீதா யதி நஷ்ட: ஸ்யாத் குடும்பார்தே க்ருதோ வ்யய: |**
**தாதவ்யம் பாந்தவைஸ் தத் ஸ்யாத் ப்ரவிபக்தைரபி ஸ்வத: ||** **166**

கூட்டுக் குடும்பமாக இருக்கும்போது, அதில் ஒருவன் கடன் வாங்கி குடும்பத்துக்காகச் செலவு செய்கிறான். அவன் இறந்து போய் விட்டான். குடும்பத்தவர்களும் தனித்தனியாகத் தங்களுக்குரிய பங்கைப் பிரித்துக் கொண்டு விட்டார்கள். இப்போது அந்தக் கடன் தொகையை யார் அடைப்பது?

குடும்பச் சொத்துகளை பங்கு பிரித்துக் கொண்ட அத்தனை பேருக்கும் அந்தக் கடனை அடைக்க வேண்டிய கடமை உண்டு. எந்த விகிதத்தில் சொத்துகளைப் பிரித்துக் கொண்டார்களோ அந்த விகிதாசாரப்படியே கடன் தொகையை அவரவரும் கொடுக்க வேண்டும்.

कुटुम्बार्थेऽध्यधीनोऽपि व्यवहारं यमाचरेत्।
स्वदेशे वा विदेशे वा तं ज्यायान् न विचालयेत्॥

**குடும்பார்தே அத்யதீநோ அபி வ்யவஹாரம் யமாசரேத் |**
**ஸ்வதேஷேவா விதேஷே வாதம் ஜ்யாயாந் ந விசாலயேத் ||** **167**

குடும்பத் தலைவன் ஊரிலிருந்தபோதும், வெளியூருக்குச் சென்றிருக்கும்போதும், அந்தக் குடும்பத் தேவைகளுக்காக அவன் பணியாளன் கடன் வாங்கினால், அதைக் குடும்பத் தலைவன் அடைக்க வேண்டும்.

बलाद् दत्तं बलाद् भुक्तं बलाद् यच्चाऽपि लेखितम्।
सर्वान् बलकृतानर्थानकृतान् मनुरब्रवीत्॥

**பலாத் தத்தம் பலாத்புக்தம் பலாத் யச்சா அபி லேகிதம் |**
**ஸர்வாந் பலக்ருதா நர்தாநக்ருதாந் மனுரப்ரவீத் ||** 168

பலவந்தமாக ஒருவனுக்குக் கடன் கொடுத்துவிட்டு, வட்டி கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்று ஒருவன் வழக்குப் போட்டால் அது செல்லாது.

ஒருவன் பலாத்காரமாக பிறனொருவனிடமிருந்து நிலத்தைப் பறித்துக் கொண்டு அனுபவித்து வருகிறான் என்று வைத்துக் கொள்வோம். பத்து வருடம் அனுபவித்தவனுக்கு அந்த நிலம் உரிமையாகும் என்னும் சட்டம் இந்த வழக்கில் செல்லாது.

பலாத்காரமாக ஒருவனிடமிருந்து சொத்தை எழுதி வாங்கிக் கொண்டால் அந்தப் பத்திரமும் செல்லாது. இவ்வாறு மனுபகவான் கூறியுள்ளார்.

त्रयः परार्थे क्लिश्यन्ति साक्षिणः प्रतिभूः कुलम्।
चत्वारस् तूपचीयन्ते विप्र आढ्यो वणिङ् नृपः॥

**த்ரய: பரார்தே க்ளிஷ்யந்தி ஸாக்ஷிண: ப்ரதிபூ: குலம் |**
**சத்வாரஸ் தூபசீயந்தே விப்ர ஆட்யோ வணிங்ந்ருப: ||** 169

சாட்சிகள், பிணையாளர்கள், தன்னிடம் வந்த விவகாரங்களைத் தீர்த்து வைக்கும் அந்தந்த ஊர்த் தலைவர்கள் என்னும் இம் மூவகையாரும் பிறருக்காக கிலேசத்தை அனுபவிப்பவர்கள்.

அந்தணன், செல்வந்தன், வர்த்தகன், அரசன் என்னும் இந் நால்வகையாரும் மற்றவர்களால் பயனடைபவர்கள்.

ஒரு அரசனுடைய வளர்ச்சி என்பது அவன் தேசத்தைச் சேர்ந்த அத்தனை தரப்பு மக்களையும் சேர்ந்தது. தனியொருவனாக ஒரு அரசன் வளர்ச்சியடைந்து விட முடியாது.

அதேபோன்று, வட்டிக்கு விட்டு பணத்தைப் பெருக்கும் செல்வந்தர்கள், தங்களிடம் வட்டிக்குக் கடன் வாங்கி வட்டி செலுத்துபவர்களால்தான் வளர்ச்சியடைகிறார்கள்.

வர்த்தகர்கள் தாங்கள் விற்கும் பொருள்களை பிறர் வாங்க, வாங்க அதில் கிடைக்கும் லாபத்தால் வளர்ச்சியடைகிறார்கள்.

பிராம்மணர்கள், மற்றவர்கள் கொடுக்கும் தானங்களாலும் தட்சிணைகளாலும் வளர்ச்சியடைகிறார்கள்.

अनादेयं नाऽऽददीत परिक्षीणोऽपि पार्थिवः।
न चाऽऽदेयं समृद्धोऽपि सूक्ष्ममप्यर्थमुत्सृजेत्॥

**அநாதேயம் நாஆததீத பரிக்ஷீணோ அபி பார்திவ: |**
**நசாஆதேயம் ஸம்ருத்தோ அபி ஸூஷ்மமப் யர்தமுத்ஸ்ருஜேத் ||** **170**

அரசன் தன் பொக்கிஷத்தில் தனம் குறைந்தவனாக இருந்த போதிலும்கூட மக்களிடமிருந்து வாங்கும் வரித் தொகையை அதிக மாக்கக் கூடாது.

அதேபோன்று, தன் பொக்கிஷத்தில் தனம் நிரம்பி வழிந்த போதிலும் வாங்க வேண்டிய வரித் தொகையை, அது சிறிதளவே யானாலும்கூட வாங்காமல் இருக்கவும் கூடாது.

अनादेयस्य चाऽऽदानादादेयस्य च वर्जनात्।
दौर्बल्यं ख्याप्यते राज्ञः स प्रेत्येह च नश्यति॥

**அநாதேயஸ்ய சாஆதாநாதாதேயஸ்ய ச வர்ஜநாத் |**
**தௌர்பல்யம் க்யாப்யதே ராக்ஞ: ஸப்ரேத்யேஹ ச நஷ்யதி ||** **171**

அரசன் வாங்க வேண்டிய பொருளை வாங்காமல் விடுவதாலும், வாங்க வேண்டாததை வாங்குவதாலும் 'திறமையற்ற அரசன் இவன்' என்று தூற்றப்படுவான். மேலும் தனது தர்மத்தைச் சரியாக நிறைவேற்றாத காரணத்தால் இகபர சுகங்களை இழப்பான்.

स्वादानाद् वर्णसंसर्गादबलानां च रक्षणात्।
बलं सञ्जायते राज्ञः स प्रेत्येह च वर्धते॥

**ஸ்வாதாநாத் வர்ணஸம்ஸர்காதபலாநாம் ச ரக்ஷணாத் |**
**பலம் ஸஞ்ஜாயதே ராக்ஞ: ஸப்ரேத்யேஹ ச வர்ததே ||** **172**

தனக்குச் சேர வேண்டியதை வசூலிப்பதாலும், வர்ணாஸ்ரம தர்ம முறைப்படி மக்களைக் காப்பதாலும், 'இந்த அரசன் பலம் நிறைந்தவன், திறமைசாலி' என்று போற்றப்படுவான். மேலும் இகபர சுகங்களை அடைவான்.

तस्माद् यम इव स्वामी स्वयं हित्वा प्रियाऽप्रिये।
वर्तेत याम्यया वृत्त्या जितक्रोधो जितेन्द्रियः॥

**தஸ்மாத் யம இவ ஸ்வாமீ ஸ்வயம் ஹித்வாப்ரியா அப்ரியே |**
**வர்தேத யாம்யயா வ்ருத்யா ஜிதக்ரோதோ ஜிதேந்த்ரிய: ||** **173**

எனவே, அரசன் யமதர்மராஜனைப் போன்று யாரிடத்தும் விருப்பு வெறுப்பு அற்றவனாக அரசாட்சி நடத்த வேண்டும். கோபத்தை அடக்கியவனாக, புலனடக்கம் மிக்கவனாக, நீதிநெறி வழுவாது அரசாட்சி நடத்த வேண்டும்.

यस्त्वधर्मेण कार्याणि मोहात् कुर्यान् नराधिपः।
अचिरात् तं दुरात्मानं वशे कुर्वन्ति शत्रवः॥

**யஸ்த்வதர்மேண கார்யாணி மோஹாத் குர்யாந் நராதிப: |**
**அசிராத் தம் துராத்மாநம் வஷே குர்வந்தி ஷத்ரவ: ||** 174

எந்த அரசன் மோகத்தால் அதர்மமாக ஆட்சி நடத்துகிறானோ, அந்தத் துஷ்ட அரசன் வெகு சீக்கிரத்திலேயே எதிரிகள் வசப் படுவான்.

कामक्रोधौ तु संयम्य योऽर्थान् धर्मेण पश्यति।
प्रजास् तमनुवर्तन्ते समुद्रमिव सिन्धवः॥

**காமக்ரோதௌ து ஸம்யம்ய யோ அர்தாந் தர்மேண பஷ்யதி |**
**ப்ரஜாஸ் தமனுவர்தந்தே ஸமுத்ரமிவ ஸிந்தவ: ||** 175

காம, குரோதங்கள் அற்றவனாக, சாஸ்திரம் விதித்தபடி வரி வசூலித்து, சாஸ்திரம் விதித்தபடி தர்மமாக அரசாட்சி செய்யும் அரசனை மக்கள் போற்றித் துதிப்பார்கள். கடலைச் சென்றடைவதையே நோக்க மாகக் கொண்டிருக்கும் நதிகளைப் போல, மக்களும் அம் மன்னனை அண்டி இன்புற்று வாழ்வார்கள். உள்நாட்டுக் கலகங்கள் எதுவும் நேரிடாது. மக்கள் அவனிடம் மிக்க பக்தியோடும் அன்போடும் இருப்பதால் அவனை எத்தகைய எதிரியாலும் வெல்ல முடியாது.

यः साधयन्तं छन्देन वेदयेद् धनिकं नृपे।
स राज्ञा तच्चतुर्भागं दाप्यस् तस्य च तद् धनम्॥

**ய:ஸாதயந்தம் சந்தேந வேதயேத் தனிகம் ந்ருபே |**
**ஸராக்ஞா தச்சதுர்பாகம் தாப்யஸ் தஸ்ய ச தத் தனம் ||** 176

அரசாங்கத்தில் செல்வாக்குப் பெற்ற தனிகனான ஒருவன், பிறருக்கு வட்டிக்குக் கடன் கொடுப்பவனாக இருந்து, அவன் தன் செல்வாக்கினால் ஏற்பட்ட அகந்தையால், தன்னால் எதுவும் செய்ய முடியும் என்று பயமுறுத்தி கடனாளிகளைத் துன்புறுத்தினால், கடன் தொகையில் நான்கில் ஒரு பாகத்தை அபராதமாக வசூலிக்க வேண்டும்.

कर्मणाऽपि समं कुर्याद् धनिकायाऽधमर्णिकः।
समोऽवकृष्टजातिस् तु दद्याच् छ्रेयांस् तु तच् छनैः॥

**கர்மணா அபி ஸமம் குர்யாத் தநிகாயா அதமர்ணிக: |**
**ஸமோ அவக்ருஷ்ட ஜாதிஸ் து தத்யாச்ச்ரேயாம்ஸ் து தச்சநை: || 177**

கடன்பட்டவன் தன் கடனைத் தீர்க்க இயலாத வறுமையில் இருந்தால், கடன் கொடுத்த தனிகன் அவனிடம் வேலை வாங்கிக் கொள்ள வேண்டும். அதற்குக் கூலி தராமல் அந்தக் கூலித் தொகையைக் கடனுக்குக் கழிக்க வேண்டும். ஆனால், அந்தக் கடனாளி இந்தத் தனிகனுடைய வருணத்தைச் சேர்ந்தவனாகவோ அல்லது கீழ் வர்ணத்தைச் சேர்ந்தவனாகவோ இருந்தால் மட்டுமே இவ்வாறு செய்ய வேண்டும். மேல் வர்ணத்தவனாக இருந்தால் வேலைக்கு அமர்த்திக் கொள்ளக்கூடாது. சிறிது சிறிதாக கிடைத்த போது வசூல் செய்ய வேண்டும்.

अनेन विधिना राजा मिथो विवदतां नृणाम्।
साक्षिप्रत्ययसिद्धानि कार्याणि समतां नयेत्॥

**அநேந விதிநா ராஜா மிதோ விவததாம் ந்ருணாம் |**
**ஸாக்ஷி ப்ரத்யய ஸித்தாநி கார்யாணி ஸமதாம் நயேத் || 178**

இவ்வாறாக, கடன் விஷயமான வழக்குகளில் அரசன், சாட்சிகளைக் கொண்டும், ஆதாரங்களைக் கொண்டும், உண்மையை ஊகித்து, பிறகு அது உண்மைதான் என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்ட பிறகு தீர்ப்பளிக்க வேண்டும்.

कुलजे वृत्तसम्पन्ने धर्मज्ञे सत्यवादिनि।
महापक्षे धनिन्यार्ये निक्षेपं निक्षिपेद् बुधः॥

**குலஜே வ்ருத்தஸம்பந்நே தர்மக்ஞே ஸத்யவாதிநி |**
**மஹாபக்ஷே தநிந்யார்யே நிக்ஷேபம் நிக்ஷிபேத் புத: || 179**

ஒருவன், தான் வெளியூர் போகும்போதோ, வேறு காரணத்துக் காகவோ தன் பொருளை யாரிடமாவது ஒப்படைத்து, தான் கேட்கும் போது மீண்டும் பெற்றுக் கொள்ள எண்ணினால், எத்தகையவனிடம் ஒப்படைக்க வேண்டும் என்று பார்ப்போம்.

1. அவன் நற்குலத்தில் பிறந்தவனாக இருக்க வேண்டும்.
2. தூய பழக்கங்களோடு ஒழுக்கமானவனாக இருக்க வேண்டும்.
3. தர்மத்தை அறிந்தவனாக இருக்க வேண்டும்.
4. சத்தியமே பேசுபவனாக இருக்க வேண்டும்.
5. மனைவி மக்களோடு வாழும் குடும்பஸ்தனாக இருக்க வேண்டும்.

6. செல்வந்தனாக இருக்க வேண்டும்.

7. மதிக்கத்தக்கவனாக இருக்க வேண்டும்.

இத்தகையவனிடம் ஒப்படைத்த பொருள் மீண்டும் பத்திரமாக அவனுக்குக் கிடைக்கும்.

**यो यथा निक्षिपेद् धस्ते यमर्थं यस्य मानवः।**
**स तथैव ग्रहीतव्यो यथा दायस् तथा ग्रहः॥**

**யோயதா நிக்ஷிபேத் தஸ்தே யமர்தம் யஸ்ய மாநவ: |**
**ஸதைவ க்ரஹீதவ்யோ யதா தாயஸ் ததா க்ரஹ: || 180**

முத்திரையிட்டோ, முத்திரையிடாமலோ, அடையாளமிட்டோ, இடாமலோ எந்த வகையில் ஒரு பொருள் தன்னிடம் ஒப்படைக்கப் பட்டதோ, அதே வகையில் ஒப்படைத்தவன் வந்து கேட்கும்போது கொடுக்க வேண்டும்.

**यो निक्षेपं याच्यमानो निक्षेप्तुर् न प्रयच्छति।**
**स याच्यः प्राड्विवाकेन तन् निक्षेप्तुरसन्निधौ॥**

**யோ நிக்ஷேபம் யாச்யமாநோ நிக்ஷேப்துர் நப்ரயச்சதி |**
**ஸயாச்ய:ப்ராட் விவாகேந தந் நிக்ஷேப்துர ஸந்நிதௌ || 181**

ஒருவன், தான் ஒப்படைத்துச் சென்ற பொருளை திரும்ப வந்து கேட்கும்போது, வைத்துக் கொண்டிருப்பவன் கொடுக்காவிட்டால், அவன் நியாயாதிபதியிடம் சென்று முறையிட வேண்டும்.

**साक्ष्यभावे प्रणिधिभिर् वयोरूपसमन्वितैः।**
**अपदेशैश् च सन्न्यस्य हिरण्यं तस्य तत्त्वतः॥**

**ஸாக்ஷ்யபாவே ப்ரணிதிபிர் வயோரூபஸமந்விதை: |**
**அபதேஷைஷ்ச ஸந்யஸ்ய ஹிரண்யம் தஸ்ய தத்வத: || 182**

நியாயாதிபதி தன் சபையில் உள்ள வயதான ஒருவரை மாறுவேடத்தில் அனுப்பி வாதி சொன்னவனிடம் பொருளை ஒப்படைக்கச் சொல்ல வேண்டும்.

மாறுவேட வயோதிகனும் நம்பத்தக்க அளவில் காரணங்களைக் கூறி தங்கத்தை அவனிடம் கொடுத்து சிறிது காலம் வைத்து வைக்குமாறும், சீக்கிரமே வந்து வாங்கிக் கொள்வதாகவும் கூற வேண்டும்.

தான் ஒப்படைக்கும் பொருளுக்கு பிறர் அறியாத ஏதோ ஒரு அடையாளத்தை வைக்க வேண்டும்.

स यदि प्रतिपद्येत यथान्यस्तं यथाकृतम्।
न तत्र विद्यते किञ्चिद् यत् परैरभियुज्यते॥

**ஸ யதி ப்ரதிபத்யேத யதாந்யஸ்தம் யதாக்ருதம் |**
**ந தத்ர வித்யதே கிஞ்சித் யத் பரைரபியுஜ்யதே ||** 183

*பிறகு, சிறிது நாள் சென்று திருப்பித் தருமாறு கேட்க வேண்டும். வைத்த அடையாளத்தோடு கொடுத்ததைக் கொடுத்தபடியே திருப்பி யளித்தால் அவன் நேர்மையானவன், அவன் மீது குற்றஞ் சுமத்தியவனே குற்றவாளி என்றறியலாம்.*

तेषां न दद्याद् यदि तु तद् धिरण्यं यथाविधि।
उभौ निगृह्य दाप्यः स्यादिति धर्मस्य धारणा॥

**தேஷாம் ந தத்யாத் யதி து தத்திரண்யம் யதாவிதி |**
**உபௌ நிக்ருஹ்ய தாப்ய: ஸ்யாதிதி தர்மஸ்ய தாரணா ||** 184

*அவ்வாறின்றி, அவன் கொடுத்ததை அப்படியே திருப்பித் தராமல் ஏமாற்றினால், அந்த ஏமாற்றுக்காரனிடமிருந்து நியாயாதிபதி உண்மை அறிவதற்காகக் கொடுத்து வைத்த தங்கத்தையும், தன்னிடம் முறையிட்டவன் பொருளையும் சேர்த்து இரண்டையும் பறிமுதல் செய்ய வேண்டும். முறையிட்டவனிடம் அவன் பொருளை ஒப்படைக்க வேண்டும். இவ்வாறு தர்மம் நிலைநிறுத்தப்பட வேண்டும்.*

निक्षेपोपनिधी नित्यं न देयौ प्रत्यनन्तरे।
नश्यतो विनिपाते तावनिपाते त्वनाशिनौ॥

**நிக்ஷேபோபநிதீ நித்யம் நதேயௌ ப்ரத்யநந்தரே |**
**நஷ்யதோ விநிபாதே தாவநிபாதே த்வநாஷிநௌ ||** 185

*ஒருவன் தன்னிடம் எவருக்கும் தெரியாமல் கொடுத்து வைத்த பொருள், முத்திரையிட்டு அல்லது எண்ணிக் கொடுத்தது இவை களைத் தன்னிடம் ஒப்படைத்தவன் உயிரோடிருக்கும்போது, அவன் மகனிடமோ மற்றவரிடமோ கொடுக்கக் கூடாது.*

स्वयमेव तु यो दद्यान् मृतस्य प्रत्यनन्तरे।
न स राज्ञा नियोक्तव्यो न निक्षेप्तुश् च बन्धुभिः॥

**ஸ்வயமேவ து யோ தத்யாந் ம்ருதஸ்ய ப்ரத்யநந்தரே |**
**நஸராக்ஞா நியோக்தவ்யோ ந நிக்ஷேப்துஷ் ச பந்துபி: ||** 186

*ஒப்படைத்தவன் இறந்துவிட்டால், அவன் தன்னிடம் ஒப்படைத்த பொருளை இறந்தவன் மகனிடமோ, மகனில்லாவிடில்*

சொத்துக்கு அடுத்த உரிமையுடையவர் யாரோ அவரிடம் தானே எடுத்துச் சென்று கொடுத்துவிட வேண்டும்.

அப்படித் தானே எடுத்து வந்து கொடுத்தவனைப் போற்ற வேண்டுமே தவிர, அவன்மீது சந்தேகப்படக் கூடாது. இது மட்டும்தான் கொடுத்து வைத்திருந்தாரா, இன்னும் ஏதேனும் இருக்கிறதா என்பது போன்ற கேள்விகளைக் கேட்டு அவன் மனத்தைப் புண்படுத்தக்கூடாது. தன்னிடம் இப்படிப்பட்ட வழக்கு வந்தால் அரசன் நேரடியாக விசாரித்து அவனைப் புண்படுத்தக் கூடாது.

अच्छलेनैव चाऽन्विच्छेत् तमर्थं प्रीतिपूर्वकम्।
विचार्य तस्य वा वृत्त साम्नैव परिसाधयेत्॥

**அச்சலேனைவ சாஅந்விச்சேத் தமர்தம் ப்ரீதிபூர்வகம் |**
**விசார்ய தஸ்ய வா வ்ருத்தம் ஸாம்நைவ பரிஸாதயேத் ||** 187

வேறு அடைக்கலப் பொருள் அவனிடம் இருக்கலாம் என்ற சந்தேகம் ஏற்பட்டால், ஏதேனும் குறிப்பால் அதை உணர முடிந்தால், நேரடியாக விசாரிக்காமல் ஒற்றர்களைக் கொண்டு கண்டுபிடிக்க வேண்டும்.

निक्षेपेष्वेषु सर्वेषु विधिः स्यात् परिसाधने।
स-मुद्रे नाऽऽप्नुयात् किञ्चिद् यदि तस्मान् न संहरेत्॥

**நிக்ஷேபேஷ்வேஷு ஸர்வேஷு விதி: ஸ்யாத் பரிஸாதநே |**
**ஸமுத்ரே நாஆப்னுயாத் கிஞ்சித் யதி தஸ்மாந் ந ஸம்ஹரேத் ||** 188

அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருட்களைப் பற்றிய விவகாரங்களை இவ்வண்ணமாக முடிவு செய்ய வேண்டும். அடைக்கலப் பொருளை திருப்பிக் கொடுத்தவன் மீது கொண்டு வரப்படும் வழக்குகளை தள்ளுபடி செய்ய வேண்டும்.

चौरैर् हृतं जलेनोढमग्निना दग्धमेव वा।
न स्याद् यदि तस्मात् स न संहरति किञ्चन॥

**சௌரைர் ஹ்ருதம் ஜலேநோடமக்நிநா தக்தமேவ வா |**
**ந தத்யாத் யாி தஸ்மாத் ஸ ந ஸம்ஹரதி கிஞ்சந ||** 189

காப்பாற்றச் சொல்லி கொடுத்து வைக்கப்பட்ட நிதி அல்லது பொருள் திருடு போனாலோ, வெள்ளத்தால் அடித்துக் கொண்டு போனாலோ, நெருப்பில் எரிந்து போனாலோ அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை. எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும்? தெய்வ வசத்தால் அந்தப் பொருள் நாசமடைந்ததால், அதை வாங்கி

வைத்துக் கொண்டவன் என்ன செய்ய முடியும்? எனவே அவன் எந்த வகையிலும் அந்தப் பொருளுக்குப் பொறுப்பாளியல்ல.

निक्षेपस्याऽपहर्तारमनिक्षेप्तारमेव च।
सर्वैरुपायैरन्विच्छेत् शपथैश् चैव वैदिकैः॥

**நிக்ஷேபஸ்யா அபஹர்தாரமநிக்ஷேப்தாரமேவ ச |**
**ஸர்வை ருபாயையரந்விச்சேத் சபதைஷ் சைவ வைதிகை: || 190**

அடைக்கலமாகக் கொடுத்ததை தானே எடுத்துக் கொண்டவன், அடைக்கலமாக வைத்துக் கொள்ளுமாறு எந்தப் பொருளையும் கொடுக்காமலே கொடுத்ததாகக் கூறுபவன் - இவர்களைப் பற்றிய உண்மைகளை பிரமாணம் (சத்தியம்) செய்யச் சொல்லியும், மற்ற உபாயங்களாலும் கண்டறிய வேண்டும்.

यो निक्षेपं नाऽर्पयति यश् चाऽनिक्षिप्य याचते।
तावुभौ चौरवच् छास्यौ दाप्यौ वा तत्समं दमम्॥

**யோ நிக்ஷேபம் நாஅர்பயதி யஷ் சா அநிக்ஷிப்ய யாசதே |**
**தாவுபௌ சௌரவச்சாஸ்யௌ தாப்யௌ வாதத்ஸமம் தமம் || 191**

எவன் அடைக்கலப் பொருளைக் கொடுத்து வைக்காமலே, கொடுத்து வைத்ததாகக் கூறிக் கேட்கிறானோ, எவன் தன்னிடம் கொடுத்து வைக்கப்பட்ட அடைக்கலப் பொருளை இல்லை என்று கூறி தானே அபகரித்துக் கொள்ளப் பார்க்கிறானோ - இவர்களுக்கு திருடர்களுக்குரிய தண்டனை வழங்க வேண்டும். சிறிய தொகையாயின் தொகைக்கு சமமாக அபராதம் விதிக்க வேண்டும்.

निक्षेपस्याऽपहर्तारं तत्समं दापयेद् दमम्।
तथोपनिधिहर्तारमविशेषेण पार्थिवः॥

**நிக்ஷேபஸ்யா அபஹர்தாரம் தத்ஸமம் தாபயேத் தமம் |**
**ததோபநிதிஹர்தாரமவிசேஷேண பார்திவ: || 192**

முதல் முறையாகக் குற்றம் செய்த குற்றவாளிக்கு இவ்வாறு அபராதம் விதிக்க வேண்டும். இரண்டாம் முறையும் குற்றம் செய்தால் தண்டனை விதிக்க வேண்டும்.

उपधाभिश् च यः कश्चित् परद्रव्यं हरेन् नरः।
ससहायः स हन्तव्यः प्रकाशं विविधैर् वधैः॥

**உபதாபிஷ் ச ய: கஷ்சித் பரத்ரவ்யம் ஹரேந்நர: |**
**ஸஸஹாய: ஸ ஹந்தவ்ய: ப்ரகாஷம் விவிதைர் வதை: || 193**

ஏதேனும் காரியம் நிறைவேற்றித் தருவதாக ஏமாற்றி லஞ்சம் பெற்றவனையும், அவனுக்கு உதவியாக இருந்தவர்களையும்

விசாரித்து கடுமையான தண்டனைகளைக் கொடுக்க வேண்டும். அதிகபட்சமாக மரண தண்டனையும் கொடுக்கலாம்.

निक्षेपो यः कृतो येन यावांश् च कुलसन्निधौ।
तावानेव स विज्ञेयो विब्रुवन् दण्डमर्हति॥

**நிக்ஷேபோ ய: க்ருதோ யேந யாவாம்ஷ் ச குலஸந்நி தௌ |**
**தாவாநேவ ஸ விக்ஞேயோ விப்ருவந் தண்டமர்ஹதி ||** 194

சாட்சிகள் முன்னிலையில் எடை போட்டு, அல்லது எண்ணிக் கொடுக்கப்பட்ட அடைக்கலப் பொருளை திருப்பிக் கொடுக்கும் போதும் அவ்வாறே சாட்சிகளை வைத்துக் கொண்டு எடை போட்டு அல்லது எண்ணிக் கொடுக்க வேண்டும். எடையிலோ அல்லது எண்ணிக்கையிலோ கொடுத்தவனுக்கும், காப்பாற்றி வைத்த வனுக்கும் இடையில் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் சாட்சிகள் கூறுவதையே பிரமாணமாக ஏற்க வேண்டும். ஏற்கவில்லையேல், பொய் கூறுபவர்களைத் தண்டிக்க வேண்டும்.

मिथो दायः कृतो येन गृहीतो मिथ एव वा।
मिथ एव प्रदातव्यो यथा दायस् तथा ग्रहः॥

**மிதோ தாய: க்ருதோ யேந க்ருஹீதோ மிதஏவவா |**
**மித ஏவ ப்ரதாதவ்யோ யதா தாயஸ் ததா க்ரஹ: ||** 195

அடைக்கலப் பொருளை ரகசியமாகக் கொடுத்து வைத்திருந்தால், அதைத் திரும்பக் கொடுக்கும் போதும் ரகசியமாகவே திரும்பக் கொடுக்க வேண்டும்.

निक्षिप्तस्य धनस्यैवं प्रीत्योपनिहितस्य च।
राजा विनिर्णयं कुर्यादक्षिण्वन् न्यासधारिणम्॥

**நிக்ஷிப்தஸ்ய தநஸ்யைவம் ப்ரீத்யோபநிஹிதஸ்ய ச |**
**ராஜா விநிர்ணயம் குர்யாதக்ஷிண்வந் நியாஸதாரிணம் ||** 196

இவ்வாறாக சாட்சிகளைக் கொண்டும், சாட்சிகள் இல்லாமலும், முத்திரையோ அடையாளமோ வைத்தும், முத்திரையோ அடையாளமோ வைக்காமலும் கொடுக்கப்பட்டதுமான எந்த அடைக்கலப் பொருளையும் அதுவரை பாதுகாத்து வைத்துக் கொண்டிருந்தவனிடமிருந்து பொருளுக்கு உரிமை உடையவனுக்கு நல்ல முறையில் வாங்கித் தர வேண்டியது அரசனது கடமை.

विक्रीणीते परस्य स्वं योऽस्वामी स्वाम्यसम्मतः।
न तं नयेत साक्ष्यं तु स्तेनमस्तेनमानिनम्॥

**விக்ரீணீதே பரஸ்ய ஸ்வம்யோ அஸ்வாமீ ஸ்வாம்யஸம்மத: |**
**நதம் நயேத ஸாக்ஷ்யம்து ஸ்தேநமஸ்தேநமாநிநம் ||** 197

*பிறர் பொருளை எடுத்து விற்பவன் திருடனே அல்லவா? ஆனால், அந்த நினைப்பு சிறிதுகூட இல்லாமல் பிறர் பொருளை விற்பவனை எந்த வழக்கிலும் சாட்சியாக ஏற்கக்கூடாது.*

अवहार्यो भवेच् चैव साऽन्वयः षट्शतं दमम्।
निरन्वयोऽनपसरः प्राप्तः स्याच् चौरकिल्बिषम्॥

**அவஹார்யோ பவேச்சைவ ஸா அந்வய: ஷட்சதம் தமம் |**
**நிரன்வயோ அநபஸர: ப்ராப்த: ஸ்யாச் சௌரகில்பிஷம் ||** 198

*தன் உறவினன் பொருளை எடுத்து விற்றவனுக்கு அறுநூறு பணம் தண்டம் விதிக்க வேண்டும். அந்நியர் பொருளை எடுத்து விற்றவனுக்கு திருடனுக்குரிய தண்டனையை விதிக்க வேண்டும்.*

अस्वामिना कृतो यस् तु दायो विक्रय एव वा।
अकृतः स तु विज्ञेयो व्यवहारे यथा स्थितिः॥

**அஸ்வாமிநா க்ருதோ யஸ்து தாயோ விக்ரய ஏவவா |**
**அக்ருத: ஸ து விக்ஞேயோ வ்யவஹாரே யதா ஸ்திதி: ||** 199

*பிறருடைய சொத்தை ஒருவன் தானம் கொடுத்தாலோ, விற்றாலோ அது செல்லுபடியாகாது. அது விற்றதாகவோ, தானமளிக் கப்பட்ட தாகவோ ஆகாது.*

सम्भोगो दृश्यते यत्र न दृश्येताऽऽगमः क्वचित्।
आगमः कारणं तत्र न सम्भोग इति स्थितिः॥

**ஸம்போகோ த்ருஷ்யதே யத்ர ந த்ருஷ்யேதா ஆகம:க்வசித் |**
**ஆகம: காரணம் தத்ர ந ஸம்போக இதி ஸ்திதி: ||** 200

*ஒருவன் ஒரு சொத்தை வெகு காலமாக அனுபவித்துக் கொண்டிருப்பதால் மட்டுமே அது அவனுடைமை ஆகிவிடாது. அந்தச் சொத்தை அவன் எப்படி அடைந்தான் என்று பார்க்க வேண்டும். வாங்கியதாகவோ, எவரோ தானம் கொடுத்ததாகவோ இல்லாத பட்சத்தில் அனுபவிப்பதால் மட்டும் அந்தச் சொத்து அவனுடைய பாத்தியதையாகி விடாது.*

विक्रयाद् यो धनं किञ्चिद् गृह्णीयात् कुलसन्निधौ।
क्रयेण स विशुद्धं हि न्यायतो लभते धनम्॥

**விக்ரயாத் யோ தனம் கிஞ்சித் க்ருஹ்ணீயாத் குலஸந்நிதௌ |**
**க்ரமேண ஸ விசுத்தம் ஹி ந்யாயதோ லபதே தனம் ||** 201

ஊராருக்கெல்லாம் தெரியும்படி ஒருவன் ஒரு சொத்தை விலைக்கு வாங்கிய பிறகு, சிறிது காலம் கழித்து அந்தச் சொத்தின் உண்மையான உரிமையாளன் வந்து கேட்கும்போதுதான் தான் வாங்கிய அந்தச் சொத்து திருட்டுச் சொத்து என்று தெரிகிறது. இப்போது என்ன செய்ய வேண்டும்?

உண்மையான உரிமையாளனுக்கு அந்தச் சொத்துக்குரிய விலையைக் கொடுத்து முறைப்படி அந்தச் சொத்தை தன்னுடைமை யாக்கிக் கொள்ள வேண்டும்.

எவரிடம் தான் ஏமாந்தானோ, அவனைப் பிடித்து மிரட்டிக் கேட்டோ, வழக்குத் தொடர்ந்தோ தான் கொடுத்த தொகையை வசூலித்துக் கொள்ள வேண்டும்.

अथ मूलमनाहार्यं प्रकाशक्रयशोधितः।
अदण्ड्यो मुच्यते राज्ञा नाष्टिको लभते धनम्॥

**அத மூலமநாஹார்யம் ப்ரகாஷ க்ரயஷோதித: |**
**அதண்ட்யோ முச்யதே ராக்ஞா நாஷ்டிகோ லாபதே தனம் ||** 202

அங்காடி வீதி முதலான பகிரங்கமான இடத்தில் பலரும் அறிய விற்றவன் அந்த ஊரை விட்டே போய் விடுகிறான் அல்லது இறந்து விடுகிறான். அதற்குப் பிறகு அந்தப் பொருள் திருட்டுப் பொருள் என்று தெரிகிறது. உண்மையான சொந்தக்காரன் தேடிக் கண்டுபிடித்து வந்து தன் பொருளைக் கொடுக்குமாறு கேட்கிறான். இத் தருணத்தில் ராஜா செய்ய வேண்டியது என்ன?

உண்மையான சொந்தக்காரனிடம் அந்தப் பொருளை ஒப்படைக்க வேண்டும். திருட்டுப் பொருளை, அது திருட்டுப் பொருள் என்று தெரியாமல், அதுவும் பகிரங்க இடத்தில் வாங்கியிருப்பவன் தண்டனைக்குரியவனல்ல. அவனை விட்டுவிட வேண்டும்.

नाऽन्यदन्येन संसृष्टरूपं विक्रयमर्हति।
न चाऽसारं न च न्यूनं न दूरेण तिरोहितम्॥

**நாஅந்யதந்யேந ஸம்ஸ்ருஷ்டரூபம் விக்ரயமர்ஹதி |**
**நசாஅஸாரம் நசந்யூநம் ந தூரேண திரோஹிதம் ||** 203

உண்மையான பொருளுடன், அதே போன்றுள்ள வேறு ஒன்றையும் சேர்த்துக் கலப்படம் செய்து விற்கக்கூடாது. (உ-ம். பாலில் தண்ணீர் கலந்து விற்பது.)

சாதாரணப் பொருளை உயர்வானது என்று பொய் சொல்லி விற்கக் கூடாது. (உ-ம். கண்ணாடிக் கல்லை உயர்ந்த ஜாதிக்கல் என்று கூறி விற்பது.)

எடையைக் குறைத்து விற்கக் கூடாது.

விற்கும் பொருளை தூர வைத்து விற்கக் கூடாது. (தூர இருக்கும் போது அழுகிய பழத்தை அடியில் வைத்து, நல்ல பழத்தை மேலே வைத்து மொத்தமாக விற்று விடுவது.)

மறைவில் உள்ள பொருளை விற்கக்கூடாது. அதாவது விற்கும் பொருளை கண்ணுக்கே காட்டாமல், நைச்சியமாகப் பேசி, 'பொருள் அங்கே இருக்கிறது, போய் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி விலைத் தொகையை வாங்குவது...

அதே போன்று செப்புக் குடத்துக்கு தங்கமுலாம் பூசி அதை மறைத்து விற்பது போன்ற ஏமாற்று வேலைகளால் விற்பது கூடாது.

இப்படியெல்லாம் விற்பவனுக்கு திருட்டுப் பொருளை விற்பவனுக்குரிய தண்டனையைத் தர வேண்டும்.

अन्यां चेद् दर्शयित्वाऽन्या वोढुः कन्या प्रदीयते।
उभे त एकशुल्केन वहेदित्यब्रवीन् मनुः॥

**அந்யாம் சேத் தர்ஷயித்வா அந்யா வோடு: கந்யா ப்ரதீயதே |**
**உபே த ஏகஅல்கேந வஹேதித்யப்ரவீந்மனு: || 204**

பெண்ணின் தந்தை தன் பெண்ணைத் திருமணம் செய்து வைப்பதாகக் கூறி பரிசத் தொகை பெற்றுக் கொண்டு முதலில் காட்டிய பெண்ணல்லாது வேறொரு பெண்ணை மணமேடையில் கொண்டு வந்து நிறுத்தினால் என்ன செய்ய வேண்டும்?

இரண்டு பெண்களையும் அவனுக்கே மணமுடித்துக் கொடுக்க வேண்டும். ஏமாற்றியதற்காக, தான் முதலில் பெற்றுக் கொண்ட பரிசத் தொகைக்கே இரண்டு பெண்களையும் கொடுத்துவிட வேண்டியதுதான் என்று மனுபகவான் கூறியுள்ளார்.

नोन्मत्ताया न कुष्ठिन्या न च या स्पृष्टमैथुना।
पूर्वं दोषानभिख्याप्य प्रदाता दण्डमर्हति॥

**நோந்மத்தாயா நகுஷ்டிந்யா நசயாஸ்ப்ருஷ்ட மைதுநா |**
**பூர்வம் தோஷாநபிக்யாப்ய ப்ரதாதா தண்டமர்ஹதி || 205**

பைத்தியம், குஷ்டரோகி, திருமணத்துக்கு முன்பே ஆடவனுடன் தொடர்பு கொண்டவள் - இத்தகைய பெண்ணை மணமுடித்துக் கொடுப்பதானால் முதலிலேயே இத்தகையவள் என்று தெரியப்படுத்தி மணமகன் ஒப்புக் கொண்ட பிறகு பரிசத் தொகை பெற்றுக் கொண்டால், அந்தத் திருமணம் செல்லும்.

அவ்வாறின்றி, பெண்ணைப் பற்றிய உண்மைகளை மறைத்து பரிசத் தொகை பெற்றுக் கொண்டவன் தண்டனைக்குரியவன்.

ऋत्विग् यदि वृतो यज्ञे स्वकर्म परिहापयेत्।
तस्य कर्मानुरूपेण देयोऽशः सहकर्तृभिः ॥२०६॥

**ருத்விக் யதி வ்ருதோ யக்ஞே ஸ்வகர்ம பரிஹாபயேத் |**
**தஸ்ய கர்மா அனுரூபேண தேயோ அம்ஷ: ஸஹகர்த்ருபி: || 206**

யக்ஞம் செய்வதற்காக ஒரு ரித்விக்கை நியமித்து யக்ஞம் நடந்து கொண்டிருக்கிறபோது, ரித்விக்குக்கு நோய் ஏற்பட்டு தொடர்ந்து நடத்த முடியாமல் போனால், அதுவரை நடத்திக் கொடுத்ததற்கான தட்சிணை எவ்வளவு என்று மற்ற ரித்விக்குகளுடன் ஆலோசித்துக் கொடுத்துவிட வேண்டும்.

दक्षिणासु च दत्तासु स्वकर्म परिहापयन्।
कृत्स्नमेव लभेतांऽशमन्येनैव च कारयेत् ॥२०७॥

**தக்ஷிணாசு ச தத்தாசு ஸ்வகர்ம பரிஹாபயந் |**
**க்ருத்ஸ்நமேவ லபேதா அம்ஷமந்யேநைவ ச காரயேத் || 207**

யக்ஞங்களின்போது இடையிடையே வரும் தட்சிணை பெற்றுக் கொண்ட ரித்விக், தன் சுயகாரியத்துக்காக விலக நினைத்தால், தனக்குப் பதிலாக வேறொருவரை நியமித்து யக்ஞம் பூர்த்தியான பிறகு முழு தட்சிணையையும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

அல்லது யக்ஞம் நடத்தும் கர்த்தா தானாகவும் ஒரு ரித்விக்கை அமர்த்தி மீதி யக்ஞத்தை முடித்து, அவருக்குச் சேர வேண்டிய தட்சிணையை வழங்கலாம்.

यस्मिन् कर्मणि यास् तु स्युरुक्ताः प्रत्यङ्गदक्षिणाः।
स एव ता आददीत भजेरन् सर्व एव वा ॥२०८॥

**யஸ்மிந் கர்மணி யாஸ்து ஸ்யுருக்தா: ப்ரத்யங்கதக்ஷிணா: |**
**ஸ ஏவதா ஆததீத பஜேரந் ஸர்வ ஏவ வா || 208**

எந்தெந்த கிரியைகளுக்கு எவ்வளவு தட்சிணையோ அது அந்தந்தக் கிரியைகளைச் செய்பவனுக்கா அல்லது மொத்தமாக அனைவரும் பங்கிட்டுக் கொள்வதா என்று பார்ப்போம்.

रथं हरेत चाऽध्वर्युर् ब्रह्माऽऽधाने च वाजिनम्।
होता वाऽपि हरेदश्वमुद्गाता चाऽप्यनः क्रये॥

**ரதம் ஹரேதசாஅத்வர்யுர் ப்ரஹ்மா ஆதாநே ச வாஜிநம் |**
**ஹோதா வா அபி ஹரேதஷ்வமுத்காதா சாஅப்யந: க்ரயே || 209**

அத்வர்யுவுக்கு ரதமும், பிரம்ம ஸ்தானத்தில் இருப்பவருக்கு உயர்ந்த ஜாதிக் குதிரையும், ஹோதாவுக்கு சாதாரணக் குதிரையும், உத்காதாவுக்கு சுமை வண்டியும் தட்சிணைகளாக விதிக்கப்பட்டுள்ளன. அந்த வகையில் அவரவர் தத்தமக்குரிய தட்சிணையைப் பெற வேண்டும்.

सर्वेषामर्धिनो मुख्यास् तदर्धेनाऽर्धिनोऽपरे।
तृतीयिनस् तृतीयांऽशाश् चतुर्थांऽशाश् च पादिनः॥

**ஸர்வேஷாமர்திநோ முக்யாஸ் ததர்தேநா அர்திநோபரே |**
**த்ருதீயிநஸ் த்ருதீயா அம்ஷாஷ் சதுர்தா அம்ஷாஷ் ச பாதிந: || 210**

சில யாகங்கள் பதினாறு ரித்விக்குகளால் நடத்தப் பெறும். அத்தகைய யாகங்களில் நூறு பசுக்கள் தட்சிணையாகத் தர வேண்டும் என்று ஸ்மிருதி கூறுகிறது. நூறு பசுக்களை இந்தப் பதினாறு ரித்விக்கு களும் எப்படிப் பிரித்துக் கொள்ள வேண்டும் என்று பார்ப்போம்.

முக்கியமானவர்களுக்கு தட்சிணையின் பாதி பாகம் தரப்பட வேண்டும். முக்கியமான ரித்விக்குகள் யாரென்று பார்த்தால் பிரம்மா, அத்வர்யு, ஹோதா, உத்கீதா ஆவர். இந்த நால்வருக்கும் பாதி தட்சிணை என்றாலும், நூறு பசுக்களில் நாற்பத்தியெட்டு பசுக்களை தட்சிணை யாகக் கொடுக்க வேண்டும்.

இரண்டாவதாக, மைத்ராவருணன், பிரதிபஸ்தாத்ரு, பிராம்மணாச்சம்சி, பிரஸ்தோதா. இந்த நால்வருக்கும், முதலில் கொடுத்ததில் பாதியை தட்சிணையாகக் கொடுக்க வேண்டும்.

மூன்றாவதாக, அச்சாவாக், நேஷ்டன், அக்நீத்ரன், பிரதிஹர்தா என்னும் இந்த நால்வருக்கும் முதலில் கொடுத்ததில் மூன்றில் ஒரு பாகத்தை தட்சிணையாகக் கொடுக்க வேண்டும்.

நான்காவதாக, கிராவஸ்துத், உன்னேத, போதா, சுப்பிரமண்யா என்னும் நால்வருக்கும் முதலில் கொடுத்ததில் நாலில் ஒரு பாகத்தைக் கொடுக்க வேண்டும். அதாவது முக்கிய ரித்விக்குகளுக்கு 48 பசுக்கள் தட்சிணை, இரண்டாவது வகை ரித்விக்குகளுக்கு 24 பசுக்கள் தட்சிணை, மூன்றாவது வகை ரித்விக்குகளுக்கு 16 பசுக்கள் தட்சிணை, நான்காவது வகை ரித்விக்குகளுக்கு 12 பசுக்கள் தட்சிணை.

- இவ்வாறு பாகம் பிரித்து தட்சிணை வழங்க வேண்டும்.

सम्भूय स्वानि कर्माणि कुर्वद्भिरिह मानवैः।
अनेन विधियोगेन कर्तव्यांशप्रकल्पना॥

**ஸம்பூய ஸ்வாநி கர்மாணி குர்வத்பிரிஹ மாநவை: |**
**அநேந விதியோகேந கர்தவ்யா அம்ஷ்ப்ரகல்பநா || 211**

இவ்வாறே அதிகம் பேர் சேர்ந்து கட்டடம் கட்டுதல் முதலான வேலைகளைச் செய்யும்போதும், இவ்வாறே கூலியைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

धर्मार्थं येन दत्तं स्यात् कस्मैचिद् याचते धनम्।
पश्चाच् च न तथा तत् स्यान् न देयं तस्य तद् भवेत्॥

**தர்மார்தம் யேந தத்தம் ஸ்யாத் கஸ்மைசித் யாசதே தநம் |**
**பஷ்சாச்ச நததா தத் ஸ்யாந் ந தேயம் தஸ்ய தத்பவேத் || 212**

குளம் வெட்டுதல், யாகம் செய்தல் போன்ற தர்ம காரியங்களுக்காக ஒருவன் தானம் (நன்கொடை) கேட்டு வாங்கிக் கொண்டு, அந்தத் தர்ம காரியத்தை செய்யாதிருந்து விட்டால், தான் கொடுத்த தனத்தை மீண்டும் வாங்கிக் கொண்டுவிட வேண்டும்.

அவன் தானம் கேட்டு 'தருகிறேன்' என்று வாக்கு மட்டும் கொடுத்திருந்தால் தரத் தேவையில்லை.

यदि संसाधयेत् तत् तु दर्पाल् लोभेन वा पुनः।
राज्ञा दाप्यः सुवर्णं स्यात् तस्य स्तेयस्य निष्कृतिः॥

**யதி ஸம்ஸாதயேத் தத்து தர்பால் லோபேநவா புந: |**
**ராக்ஞா தாப்ய: சுவர்ணம் ஸ்யாத் தஸ்ய ஸ்தேயஸ்ய நிஷ்க்ருதி: || 213**

அப்படி நன்கொடை வாங்கிக் கொண்டவன், அகங்காரத்தாலோ பேராசையாலோ அந்தத் தனத்தைத் திரும்பக் கொடாவிட்டாலும், தருகிறேன் என்று வாக்குக் கொடுத்தவனிடமிருந்து பலாத்காரமாக அந்தத் தானத்தைப் பறித்துக் கொண்டாலும் அது திருட்டுக்குச் சமம். ஆகவே, திருடனுக்குரிய தண்டனையை அவனுக்கு வழங்க வேண்டும். அவனிடமிருந்து தானங்களைப் பறிமுதல் செய்து உரியவர்களுக்கு வழங்க வேண்டும். அந்தத் திருடனுக்கு ஒரு சுவர்ணம் அபராதம் விதிக்க வேண்டும்.

दत्तस्यैषोदिता धर्म्या यथावदनपक्रिया।
अत ऊर्ध्वं प्रवक्ष्यामि वेतनस्यानपक्रियाम्॥

**தத்தஸ்யைஷோதிதா தர்ம்யா யதாவத நபக்ரியா |**
**அத ஊர்த்வம் ப்ரவக்ஷ்யாமி வேதநஸ்யா அநபக்ரியாம் || 214**

அடைக்கலமாகக் கொடுத்து வைத்த பொருளைக் குறித்த ஏமாற்று வேலைகளுக்குரிய நிவாரணம் பற்றிய விதிமுறைகள் இதுவரை கூறப்பட்டன. இனி கூலி குறித்த ஏமாற்று வேலைகளுக்குரிய நிவாரணம் பற்றிய விதிமுறைகளைக் கூறுகிறேன்.

**भृतोऽनार्तो न कुर्याद् यो दर्पात् कर्म यथोदितम्।**
**स दण्ड्यः कृष्णलान्यष्टौ न देयं चाऽस्य वेतनम्॥**

**ப்ருதோ அநார்தோ நகுர்யாத்யோ தர்பாத் கர்ம யதோதிதம் |**
**ஸதண்ட்ய: க்ருஷ்ணலாந்யஷ்டௌ நதேயம் சாஅஸ்ய வேதநம் ||** **215**

ஒரு வேலையைச் செய்து கொடுப்பதாகக் கூறி, அதற்குரிய கூலியையும் பேசி முடித்த பிறகு, அகங்காரத்தால் அந்த வேலையைச் செய்து கொடுக்காவிடில் அவனுக்கு எட்டு குன்றிமணிப் பொன் அபராதம் விதிக்க வேண்டும். அவனுக்குக் கூலியும் கொடுக்கக் கூடாது. அதாவது அதுவரை செய்துள்ள அரைகுறை வேலைக்குரிய கூலி கொடுக்கத் தேவையில்லை.

**आर्तस् तु कुर्यात् स्वस्थः सन् यथाभाषितमादितः।**
**स दीर्घस्याऽपि कालस्य तल् लभेतैव वेतनम्॥**

**ஆர்தஸ்து குர்யாத் ஸ்வஸ்த: ஸந் யதாபாஷிதமாதித: |**
**ஸ தீர்கஸ்யாஅபி காலஸ்ய தல்லபேதைவ வேதநம் ||** **216**

ஒருவேளை, அந்த வேலையைச் செய்து முடிப்பதாக ஒப்புக் கொண்டு கூலியும் பேசி முடித்தவனுக்கு, திடீரென்று உடல்நலம் குன்றி, தொடர்ந்து வேலை செய்ய முடியாமல் போனால், மீண்டும் அவன் உடல்நலம் தேறிய பிறகு வந்து மிகுதி வேலையைச் செய்து முடித்து முழுக் கூலியையும் பெறலாம். உடல்நலம் தேறி செய்து முடிக்க காலம் அதிகமாகும். ஏற்கனவே சொன்ன கெடுவுக்குள் செய்து முடிக்க முடியாது. ஆனாலும் அது தவறில்லை.

**यथोक्तमार्तः सुस्थो वा यस् तत् कर्म न कारयेत्।**
**न तस्य वेतनं देयमल्पोनस्याऽपि कर्मणः॥**

**யதோக்தமார்த: சுஸ்தோ வாயஸ் தத்கர்ம நகாரயேத் |**
**ந தஸ்ய வேதநம் தேயமல்போநஸ்யாஅபி கர்மண: ||** **217**

ஒப்புக்கொண்ட வேலையை, நோயுற்ற காரணத்தால் செய்ய முடியாதவன், வேறு யாரையேனும் கொண்டு அந்த வேலையை செய்து முடிக்க வேண்டும். அல்லது தான் குணமடைந்தபிறகு வந்து செய்து தர வேண்டும். இரண்டும் செய்து முடிக்காதவனுக்கு, அவன் செய்த வரையான வேலைக்குச் சிறிதும் கூலி தரத் தேவையில்லை.

**एष धर्मोऽखिलेनोक्तो वेतनादानकर्मणः ।**
**अत ऊर्ध्वं प्रवक्ष्यामि धर्मं समयभेदिनाम् ॥**

**ஏஷதர்மோ அகிலேநோக்தோ வேதநா அதாநகர்மண: |**
**அத ஊர்த்வம் ப்ரவக்ஷ்யாமி தர்மம் சமயபேதிநாம் ||** **218**

கூலியைக் குறித்த குற்றங்களைப் பற்றி இதுவரை கூறினேன். இனி 'இந்த வேலையைச் செய்கிறேன்,' என்று கூறிச் செய்யாமல் போகிறவனுக்குரிய தண்டனைகளைக் கூறுகிறேன்.

**यो ग्रामदेशसङ्घानां कृत्वा सत्येन संविदम् ।**
**विसंवदेन् नरो लोभात् तं राष्ट्राद् विप्रवासयेत् ॥**

**யோ க்ராமதேஷஸங்காநாம் க்ருத்வா ஸத்யேந ஸம்விதம் |**
**விஸம்வதேந் நரோ லோபாத் தம் ராஷ்ட்ராத் விப்ரவாஸயேத் ||** **219**

கிராமவாசிகள் அல்லது நகரவாசிகள் ஒரு சங்கமாக (குழுவாக) சேர்ந்து 'இந்தக் காரியத்தை நாம் செய்வோம்' என்று சத்யப் பிரமாணமாக ஏற்பாடு செய்து கொண்ட பின்னர், அதில் யாரேனும் ஒருவன் கோபத்தால் செய்யாமல் போனால், அவன் தேசபிரஷ்ட தண்டனைக்குரியவன். அவனை நாட்டைவிட்டு வெளியேற்ற வேண்டும்.

**निगृह्य दापयेच् चैनं समयव्यभिचारिणम् ।**
**चतुःसुवर्णान् षण्निष्कांश् शतमानं च राजतम् ॥**

**நிக்ருஹ்ய தாபயேச்சைநம் ஸமயவ்யபிசாரிணாம் |**
**சது: சுவர்ணா:ந் ஷண்நிஷ்காம்ஷ்சதமாநம் ச ராஜதம் ||** **220**

அல்லது அரசன் அவனை இழுத்து வரச்செய்து, அவன் குற்றத்துக்குத் தக்கபடி அவனுக்கு நான்கு சுவர்ணங்கள் அல்லது ஆறு நிஷ்கங்கள் அல்லது நூறு வெள்ளிகள் அபராதம் விதிக்க வேண்டும்.

**एतद् दण्डविधिं कुर्याद् धार्मिकः पृथिवीपतिः ।**
**ग्रामजातिसमूहेषु समयव्यभिचारिणाम् ॥**

**ஏதத் தண்டவிதிம் குர்யாத் தார்மிக: ப்ருதிவீபதி: |**
**க்ராம ஜாதி ஸமூஹேஷு ஸமயவ்யபிசாரிணாம் ||** **221**

கிராமக் கட்டுப்பாட்டையும், ஜாதிக் கட்டுப்பாட்டையும், சமூகக் கட்டுப்பாட்டையும் மீறுபவனுக்கும் இவ்வாறே அபராதம் விதிக்க வேண்டும் அல்லது தேசபிரஷ்டம் (நாடு கடத்தல்) செய்ய வேண்டும்.

क्रीत्वा विक्रीय वा किञ्चिद् यस्येहाऽनुशयो भवेत्।
सोऽन्तर्दशाहात् तद् द्रव्यं दद्याच् चैवाऽऽददीत वा॥

**க்ரீத்வா விக்ரீய வா கிஞ்சித் யஸ்யேஹாஅநுஷயோ பவேத் |**
**ஸோ அந்தர்தஷா அஹாத் தத்த்ரவ்யம் தத்யாச்சைவா ஆததீதவா || 222**

*விற்பவனுக்கும் வாங்குபவனுக்கும் இடையே ஏற்படக்கூடிய விவகாரத்தைப் பார்ப்போம். ஒரு பொருளை விலை கொடுத்து வாங்கியவனுக்கு அப்பொருளில் திருப்தி ஏற்படாவிட்டாலோ, தான் ஏமாந்துவிட்டதாகத் தோன்றினாலோ, வாங்கிய பத்து நாட்களுக்குள் அப்பொருளைத் திருப்பிக் கொடுத்துவிட்டு தான் கொடுத்த தொகையை வாங்கிக் கொள்ளலாம்.*

*அவ்வாறே விற்றவனுக்கும், தான் விலையுயர்ந்த பொருளைக் கவனக் குறைவாகக் குறைந்த தொகைக்கு விற்றுவிட்டதாகத் தோன்றினால் பத்து நாட்களுக்குள் வாங்கியவனைக் கண்டுபிடித்து, அவன் கொடுத்த தொகையைத் திருப்பிக் கொடுத்துவிட்டு தன் பொருளை மீட்டுக் கொள்ளலாம்.*

परेण तु दशाऽहस्य न दद्यान् नाऽपि दापयेत्।
आददानो ददच् चैव राज्ञा दण्ड्यः शतानि षट्॥

**பரேண து தஷா அஹஸ்ய நதத்யாந்நாஅபி தாபயேத் |**
**ஆததாநோ ததச்சைவ ராக்ஞா தண்ட்ய: ஷதாநி ஷட் || 223**

*ஆனால், பத்து நாட்கள் கடந்துவிட்டால், அதன் பிறகு விற்றவன் வாங்கியவனிடம் போய், தன் பொருளைத் திருப்பித் தருமாறு நிர்பந்திக்கக் கூடாது. அவ்வாறே பத்து நாட்கள் கடந்த பிறகு வாங்கியவனும் விற்றவனிடம் போய் பொருளைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்படி நிர்பந்திக்கக் கூடாது.*

यस् तु दोषवतीं कन्यामनाख्याय प्रयच्छति।
तस्य कुर्यान् नृपो दण्डं स्वयं षण्णवतिं पणान्॥

**யஸ்து தோஷவதீம் கந்யாமநாக்யாய ப்ரயச்சதி |**
**தஸ்ய குர்யாந் ந்ருபோ தண்டம் ஸ்வயம் ஷண்ணவதிம் பணாந் || 224**

*ஏதோ ஒரு தோஷமுள்ள பெண்ணை பரிசத் தொகை பெற்றுக் கொண்டு, அந்த தோஷத்தை அல்லது தோஷங்களை மறைத்துத் திருமணம் செய்து வைப்பவனுக்கு அரசன் தொண்ணூற்றியாறு பணங்களை அபராதமாக விதிக்க வேண்டும்.*

अकन्येति तु यः कन्यां ब्रूयाद् द्वेषेण मानवः ।
स शतं प्राप्नुयाद् दण्डं तस्या दोषमदर्शयन् ॥

**அகந்யேதி து ய: கந்யாம் ப்ரூயாத் த்வேஷேண மாநவ: |**
**ஸ ஷதம் ப்ராப்னுயாத் தண்டம் தஸ்யா தோஷமதர்ஷயந் ||** 225

ஒரு கன்னிப் பெண்ணின் மீது 'இவள் கற்பிழந்தவள்' என்று பழி கூறியவனுக்கு நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். அவன் சொன்னதைக் கொண்டு அப் பெண் எப்படிப்பட்டவள் என்று விசாரிக்கக் கூடாது.

पाणिग्रहणिका मन्त्राः कन्यास्वेव प्रतिष्ठिताः ।
नाऽकन्यासु क्वचिन् नृणां लुप्तधर्मक्रिया हि ताः ॥

**பாணிக்ரஹணிகா மந்த்ரா: கந்யாஸ்வேவ ப்ரதிஷ்டிதா: |**
**நாஅகந்யாசு க்வசித் ந்ருணாம் லுப்ததர்மக்ரியா ஹிதா: ||** 226

பாணிக்ரஹண மந்திரங்கள் கன்னிப் பெண்ணுக்காக ஏற்பட்டவை. கன்னிகையற்றவளுக்கு இந்த மந்திரங்களைக் கூறக் கூடாது. அத்தகையவள் இந்தக் கிரியைகளுக்கே அருகதையற்றவள்.

பாணிக்ரகணம் என்பது பெண்ணின் தந்தை தன் மகளின் கரத்தைப் பற்றி மணமகன் கரத்தில் வைத்து அவளை ஏற்றுக் கொள்ளும்படி கூறும் கிரியை. இப்படி திருமணத்தின் ஒவ்வொரு கிரியைக்கும் அர்த்தமும் உண்டு; மந்திரமும் உண்டு. அவை யாவும் உத்தமமான கன்னிப் பெண்ணுக்கே உரித்தானவை.

पाणिग्रहणिका मन्त्रा नियतं दारलक्षणम् ।
तेषां निष्ठा तु विज्ञेया विद्वद्भिः सप्तमे पदे ॥

**பாணிக்ரஹணிகா மந்த்ரா நியதம் தாரலக்ஷணம் |**
**தேஷாம் நிஷ்டா து விக்ஞேயா வித்வத்பி: ஸப்தமே பதே ||** 227

பாணிக்ரஹணம் முதலான மந்திரங்களால்தான் ஒரு பெண் ஒருவனின் தாரமாகும் தகுதியைப் பெறுகிறாள். ஏழடி நடந்து அக்னியை வலம் வரும் சப்தபதி என்னும் மந்திர கிரியைக்குப் பிறகு அவள் அவன் மனைவி என்று ஊர்ஜிதப்படுகிறாள் என்பது அறிஞர்கள் கூற்று.

यस्मिन्यस्मिन् कृते कार्ये यस्येहाऽनुशयो भवेत् ।
तमनेन विधानेन धर्म्ये पथि निवेशयेत् ॥

**யஸ்மிந் யஸ்மிந் க்ருதே கார்யே யஸ்யேஹா அனுஷயோ பவேத் |**
**தமநேந விதாநேந தர்ம்யே பதி நிவேஷயேத் ||** 228

விற்றல், வாங்கல் விஷயங்களில் பத்து நாட்களுக்குள் விவகாரத்தைத் தீர்த்துக் கொள்வது போன்று, மற்ற விஷயங்களில் எந்தெந்தக் காரியத்தை யார் யார் செய்கிறார்களோ, அந்த விவகாரங் களிலும் பத்து நாட்களுக்குள் தீர்த்துக் கொள்ளலாம் என்று அரசன் நியமம் ஏற்படுத்த வேண்டும்.

पशुषु स्वामिनां चैव पालानां च व्यतिक्रमे।
विवादं सम्प्रवक्ष्यामि यथावद् धर्मतत्त्वतः॥

**பஶுஷு ஸ்வாமிநாம் சைவ பாலாநாம் ச வ்யதிக்ரமே |**
**விவாதம் ஸம்ப்ரவக்ஷ்யாமி யதாவத் தா்மதத்வத: ||** 229

பசுக்களின் சொந்தக்காரனுக்கும் பசுக்களை மேய்ப்பவனுக்கும் இடையே ஏற்படும் விவகாரங்களை எப்படித் தீர்க்க வேண்டும் என்று சாஸ்திரம் கூறியுள்ளதை இனிக் கூறுகிறேன்.

दिवा वक्तव्यता पाले रात्रौ स्वामिनि तद्गृहे।
योगक्षेमेऽन्यथा चेत् तु पालो वक्तव्यतामियात्॥

**திவா வக்தவ்யதா பாலே ராத்ரௌ ஸ்வாமிநி தத்க்ருஹே |**
**யோகக்ஷேமே அந்யதா சேத் து பாலோ வக்தவ்யதாமியாத் ||** 230

பகலில் பசுக்கள் மேய்ப்பவனுடைய ஆதீனத்தில் இருப்பதால் அவனே பொறுப்பு. மாலையில் மேய்ப்பவன் அவைகளைக் கொண்டுபோய் உரிமையாளன் வீட்டில் கட்டி விடுவான். அதுமுதல் இரவில் உரிமையாளனே பொறுப்பு.

गोपः क्षीरभृतो यस्तु स दुह्याद् दशतो वराम्।
गोस्वाम्यनुमते भृत्यः सा स्यात् पालेऽभृते भृतिः॥

**கோப: க்ஷீரப்ருதோ யஸ் து ஸதுஹ்யாத் தஷதோ வராம் |**
**கோஸ்வாம்யனுமதே ப்ருத்ய: ஸாஸ்யாத் பாலேஅப்ருதே ப்ருதி: ||** 231

கோபன் (பசு மேய்ப்பவன்) பசுவின் பாலைக் கூலியாகப் பெற்று பசு மேய்ப்பதனால், பத்துப் பசுக்களின் பாலைக் கறந்து பசுவின் சொந்தக்காரனுக்குக் கொடுத்துவிட்டு, நல்ல பசு ஒன்றின் பாலை தான் கறந்து எடுத்துக் கொள்ள வேண்டும். இதை கோஸ்வாமியின் (பசுவின் சொந்தக்காரனின்) அனுமதியோடு செய்ய வேண்டும்.

नष्टं विनष्टं कृमिभिः श्वहतं विषमे मृतम्।
हीनं पुरुषकारेण प्रदद्यात् पाल एव तु॥

**நஷ்டம் விநஷ்டம் க்ருமிபி: ஷ்வஹதம் விஷமேம்ருதம் |**
**ஹீநம் புருஷகாரேண ப்ரதத்யாத் பாலஏவ து ||** 232

பசுக்களை மேய்க்கும்போது, பசுக்கள் தொலைந்து போனாலோ, பாம்பு கடித்து இறந்தாலோ, நாய் கடித்தாலோ, சேற்றில் மாட்டிக் கொண்டு இறந்தாலோ, எந்த வகையில் நஷ்டம் ஏற்பட்டாலும் பசு மேய்க்கும் கோபனே பொறுப்பாளி. நஷ்டஈட்டை கோபன் கோஸ்வாமிக்குக் கொடுக்க வேண்டும். அதாவது பசு மேய்ப்பவன், பசுவின் உரிமையாளனுக்குக் கொடுக்க வேண்டும்.

विघुष्य तु हृतं चौरैर् न पालो दातुमर्हति।
यदि देशे च काले च स्वामिनः स्वस्य शंसति॥

**விகுஷ்யது ஹ்ருதம் சௌரைர் ந பாலோ தாதுமர்ஹதி |**
**யதி தேஷே ச காலே ச ஸ்வாமிந: ஸ்வஸ்ய ஷம்ஸதி || 233**

திருடர்களை பசுக்களை மறித்து அபகரித்துக் கொண்டு போனால், அந்த நஷ்டம் மேய்ப்பவனுடைய பொறுப்பாகாது. ஆனால், கோபன் உடனடியாக கோஸ்வாமியிடம் போய் விஷயத்தைத் தெரிவித்துவிட வேண்டும்.

कर्णौ चर्म च वालाश् च बस्तिं स्नायुं च रोचनाम्।
पशुषु स्वामिनां दद्यान् मृतेष्वङ्कानि दर्शयेत्॥

**கர்ணௌ சர்ம ச வாலாம்ஷ்ச பஸ்திம் ஸ்நாயும் ச ரோசநாம் |**
**பஷுசு ஸ்வாமிநாம் தத்யாந் ம்ருதேஷ்வங்காநி தர்ஷயேத் || 234**

பசு தானாக இறந்து போகுமானால், செவிகள், தோல், வால், கோரோசனை இவைகளைக் கொண்டு வந்து எஜமானனிடம் காட்ட வேண்டும். மற்ற அங்கங்களைக் காட்டிவிட்டு தான் எடுத்துக் கொள்ளலாம்.

अजाविके तु संरुद्धे वृकैः पाले त्वनायति।
यां प्रसह्य वृको हन्यात् पाले तत् किल्बिषं भवेत्॥

**அஜாவிகே து ஸம்ருத்தே வ்ருகை: பாலே த்வநாயதி |**
**யாம் ப்ரஸஹ்ய வ்ருகோ ஹந்யாத் பாலே தத் கில்பிஷம் பவேத் || 235**

வனத்தில் கோபன் மேய்த்துக் கொண்டிருக்கும்போது நரி, செந்நாய் போன்றவை பசுக்களின் மீது பாய்ந்தால், கோபன் அவைகளை விரட்டிப் பசுக்களைக் காக்க வேண்டும். இல்லா விட்டால் இறந்த பசுக்களுக்கு கோபனே பொறுப்பேற்று நஷ்டஈடு கொடுக்க வேண்டும்.

तासां चेदवरुद्धानां चरन्तीनां मिथो वने।
यामुत्प्लुत्य वृको हन्यान् न पालस् तत्र किल्बिषी॥

**தாஸாம் சேதவருத்தாநாம் சரந்தீநாம் மிதோ வநே |**
**யாமுத்ப்லுத்ய வ்ருகோ ஹந்யாந் நபாலஸ் தத்ர கில்பிஷீ || 236**

மந்தையை விட்டுப் பிரிந்து போனவற்றை செந்நாய் போன்றவை அடித்தால், அதற்கு கோபன் பொறுப்பேற்க வேண்டியதில்லை.

धनुःशतं परीहारो ग्रामस्य स्यात् समन्ततः।
शम्यापातास् त्रयो वाऽपि त्रिगुणो नगरस्य तु॥

**தநு:ஷதம் பரீஹாரோ க்ராமஸ்ய ஸ்யாத் ஸமந்தத: |**
**ஷம்யாபாதாஸ் த்ரயோ வாபி த்ரிகுணோ நகரஸ்ய து ||** **237**

ஒரு கிராமத்தைச் சுற்றிலும் நானூறு முழ பரப்பளவுக்கு மேய்ச்சல் நிலமாக விட வேண்டும். அல்லது கோலை சுழற்றி வீசினால் எவ்வளவு தூரம் போய் விழுமோ அவ்வளவு பரப்பளவு சுற்றிலும் மேய்ச்சல் நிலமாக விட வேண்டும். இதற்கு மும்மடங்கு நிலத்தை நகரத்தில் விட வேண்டும்.

तत्राऽपरिवृतं धान्यं विहिंस्युः पशवो यदि।
न तत्र प्रणयेद् दण्डं नृपतिः पशुरक्षिणाम्॥

**தத்ரா அபரிவ்ருதம் தான்யம் விஹிம்ஸ்யு: பஷவோயதி |**
**ந தத்ர ப்ரணயேத் தண்டம் ந்ருபதி: பஷூரக்ஷிணாம் ||** **238**

மேய்ச்சல் பூமிக்கு அருகில், வேலியிடப்படாத பயிரை பசுக்கள் மேய்ந்தால், அவற்றை மேய்த்த கோபனுக்கு அரசன் எந்தத் தண்டனையும் விதிக்கக் கூடாது.

वृतिं तत्र प्रकुर्वीत यामुष्ट्रो न विलोकयेत्।
छिद्रं च वारयेत् सर्वं श्वसूकरमुखाऽनुगम्॥

**வ்ருத்திம் தத்ர ப்ரகுர்வீத யாமுஷ்ட்ரோ ந விலோகயேத் |**
**சித்ரம் ச வாரயேத் ஸர்வம் ஷ்வசூகரமுகா அனுகம் ||** **239**

பயிர் பூமிக்கு, ஒட்டகம் தலைதூக்கிப் பார்த்தால் உள்ளே இருப்பது தெரியாத அளவுக்கு உயரமான வேலி அமைக்க வேண்டும். பன்றிகளும் நாய்களும் உள்ளே நுழைய முடியாத அளவுக்கு இறுக்கமாக வேலி அமைக்க வேண்டும்.

पथि क्षेत्रे परिवृते ग्रामान्तीयेऽथवा पुनः।
सपालः शतदण्डाऽर्हो विपालान् वारयेत् पशून्॥

**பதி க்ஷேத்ரே பரிவ்ருதே க்ராமந்தீயே அதவா புந: |**
**ஸபால: ஷததண்டா அர்ஹோ விபாலாந் வாரயேத் பகூந் ||** **240**

கிராமத்துக்கு அருகிலுள்ள வேலியிட்ட இடங்களில் பசுக்கள் மேய்ந்தால், மேய்க்கும் கோபனுக்கு நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

கோபன் அருகில் இல்லாவிட்டால், அந்தப் பசுவை அந்த இடத்துக்குரியவன் கட்டிப்போட வேண்டும்.

**क्षेत्रेष्वन्येषु तु पशुः सपादं पणमर्हति।**
**सर्वत्र तु सदो देयः क्षेत्रिकस्येति धारणा॥**

**க்ஷேத்ரேஷ்வன்யேஷு து பஷு: ஸபாதம் பணமர்ஹதி ।**
**ஸர்வத்ரது ஸதோ தேய: க்ஷேத்ரிகஸ்யேதி தாரணா ॥** 241

மேய்ச்சல் நிலத்துக்குப் போகும் வழியிலுள்ள இடங்களில் பசுக்கள் மேய்ந்தால், கோபனுக்கு ஒன்றே கால் பணம் அபராதம் விதிக்க வேண்டும். மொத்தத்தில் பசுக்கள் மேய்வதால் நிலத்துச் சொந்தக் காரனுக்கு ஏற்படும் நஷ்டத்துக்கு கோபனோ, கோஸ்வாமியோ நஷ்டஈடு கொடுக்க வேண்டும்.

**अनिर्दशाहां गां सूतां वृषान् देवपशूंस् तथा।**
**सपालान् वा विपालान् वा न दण्ड्यान् मनुरब्रवीत्॥**

**அநிர்தஷாஹாம் காம்ஸூதாம் வ்ருஷாந் தேவபசூம்ஷ்ததா ।**
**ஸபாலாந்வா விபாலாந்வா ந தண்ட்யாந் மனுரப்ரவீத் ॥** 242

கன்றை ஈன்று பத்து நாட்கள் கடக்காத பசுக்கள், கோயில் களுக்காக விடப்பட்ட காளைகள், பசுக்கள் முதலானவை மேய்ந்தால், மேய்க்கும் கோபன் அப்போது அங்கிருந்தாலும், இல்லாவிட்டாலும் அவனுக்குத் தண்டனை ஏதும் கிடையாது.

**क्षेत्रिकस्यात्यये दण्डो भागाद् दशगुणो भवेत्।**
**ततोऽर्धदण्डो भृत्यानामज्ञानात् क्षेत्रिकस्य तु॥**

**க்ஷேத்ரிகஸ்யாஅத்யயே தண்ட்யோ பாகாத் தஷகுணோ பவேத் ।**
**ததோ அர்த தண்டோ ப்ருத்யா நாமஞாசாத் க்ஷேத்ரிகஸ்ய து ॥** 243

கழனிக்குச் சொந்தக்காரனுடைய பசுக்களே அங்குள்ள பயிரை மேய்ந்தாலும், விதைக்க வேண்டிய சமயத்தில் விதைக்காமல் வெறுமனே நிலத்தைப் போட்டு வைத்தாலும், அவனுக்கு அரசன் தான் விதிக்க வேண்டிய முறையான வரித் தொகைக்கு பத்து மடங்கு அபராதம் விதிக்க வேண்டும்.

சொந்தக்காரனுக்குத் தெரியாமல், வேலைக்காரனால் இந்தக் குற்றம் இழைக்கப்படுமானால் ஐந்து மடங்கு அபராதம் விதிக்க வேண்டும்.

एतद् विधानमातिष्ठेद् धार्मिकः पृथिवीपतिः।
स्वामिनां च पशूनां च पालानां च व्यतिक्रमे॥

**ஏதத் விதாநமாதிஷ்டேத் தார்மிக: ப்ருதிவீபதி: |**
**ஸ்வாமிநாம் ச பஷூநாம் ச பாலனாம் ச வ்யதிக்ரமே || 244**

*பசுக்களின் சொந்தக்காரர்களான கோஸ்வாமிகளுக்கும், பசு மேய்ப்பவர்களான கோபர்களுக்கும் ஏற்படும் விவகாரங்களுக்கு இவ்விதமாக தார்மிகமான தீர்ப்பை அரசன் வழங்க வேண்டும்.*

सीमां प्रति समुत्पन्ने विवादे ग्रामयोर् द्वयोः।
ज्येष्ठे मासि नयेत् सीमां सुप्रकाशेषु सेतुषु॥

**ஸீமாம் ப்ரதிஸமுத்பந்நே விவாதே க்ராமயோர் த்வயோ: |**
**ஜ்யேஷ்டே மாஸி நயேத் ஸீமாம் சுப்ரகாஷேசு சேதுஷூ || 245**

*இரு கிராமங்களுக்கிடையில் எல்லையைப் பற்றிய தகராறு ஏற்படுமானால், ஆனி மாதத்தில் நன்கு கண்ணுக்குப் புலப்படும் எல்லைகளின் அடையாளத்தைக் கொண்டு எல்லைகள் இவை என தீர்மானிக்க வேண்டும்.*

सीमावृक्षांश् च कुर्वीत न्यग्रोधाऽश्वत्थकिंशुकान्।
शाल्मलीन् सालतालांश् च क्षीरिणश् चैव पादपान्॥

**ஸீமாவ்ருக்ஷாம்ஷ்ச குர்வீத ந்யக்ரோதா அஷ்வத்த கிம்சுகாந் |**
**ஷால்மலீந் ஸாலதாலாம்ஷ்ச க்ஷீரிணஷ்சைவ பாதபாந் || 246**

*எல்லைகளை அறிவதற்காக, எல்லைகளில் ஆல மரம், அரச மரம், புரச மரம், இலவ மரம், குங்குலிய மரம், மற்றும் பனை மரம், கீறினால் பால் வெளிப்படும் மரங்களை வளர்க்க வேண்டும்.*

गुल्मान् वेणूंश् च विविधाञ् छमीवल्लीस्थलानि च।
शरान् कुब्जकगुल्मांश् च तथा सीमा न नश्यति॥

**குல்மாந் வேணூம்ஷ்ச விவிதாஞ்ச மீ வல்லீஸ்தலாநி ச |**
**ஷராந் குப்ஜக குல் மாம்ஷ் ச ததா ஸீமா ந நஷ்யதி || 247**

*புதர்கள், மூங்கில் மரங்கள், வன்னி மரங்கள், கொடிகள் முதலானவைகளை வளர்க்க வேண்டும். மேடுகளையோ பள்ளங்களையோ ஏற்படுத்த வேண்டும். இதனால் எல்லைகள் அழியாதிருக்கும்.*

तडागान्युदपानानि वाप्यः प्रस्रवणानि च।
सीमासन्धिषु कार्याणि देवतायतनानि च॥

**தடாகாந்யுதபாநாநி வாப்ய: ப்ரஸ்ரவணாநிச |**
**ஸீமாஸந்திஷு கார்யாணி தேவதாயதநாநி ச ||** 248

இரண்டு கிராமங்களுக்கும் நடுவில் குளங்கள், ஏரிகள், கிணறுகள் ஏற்படுத்த வேண்டும். ஏரி, குளங்களில் தண்ணீர் அதிகமானால், அதிகப்படி நீர் வெளியேறும் கால்வாய்கள் முதலானவைகளை ஏற்படுத்த வேண்டும்.

उपच्छन्नानि चान्यानि सीमालिङ्गानि कारयेत्।
सीमाज्ञाने नृणां वीक्ष्य नित्यं लोके विपर्ययम्॥

**உபச்சந்நாநி சாஅந்யாநி ஸீமாலிங்காநி காரயேத் |**
**ஸீமாஞாநே ந்ருணாம் வீக்ஷ்ய நித்யம்லோகே விபர்யயம் ||** 249

எல்லைகளை அறிய உதவும் இந்த அடையாளங்கள் போக, மேலும் சில ரகசிய அடையாளங்களையும் ஏற்படுத்த வேண்டும்.

अश्मनोऽस्थीनि गोवालास् तुषान् भस्म कपालिकाः।
करीषमिष्टकाऽङ्गारांश् छर्करा वालुकास् तथा॥

**அஷ்மநோ அஸ்தீநி கோவாலாம்ஸ் துஷாந் பஸ்ம கபாலிகா: |**
**கரீஷமிஷ்ட கா அங்காராம்ஷ்சர்கரா வாலுகாஸ் ததா ||** 250

கற்கள், எலும்புகள், பசுவின் வால்கள், உமி, சாம்பல், மண்டையோடுகள், வரட்டிகள், சுட்ட செங்கற்கள், கரி, கூழாங்கற்கள், பருமணல் முதலானவைகளை குடங்களிலிட்டு எல்லை பூமிக்குள் அடையாளமாக புதைத்து வைக்க வேண்டும். இது கிராமத்தார்களுக்குத் தெரிய வேண்டியது இல்லை. அரசன் என்றேனும் சர்ச்சை ஏற்படும்போது, எல்லையை தான் அறிவதற்காக செய்து வைக்கும் ஏற்பாடு இது.

यानि चैवम्प्रकाराणि कालाद् भूमिर् न भक्षयेत्।
तानि सन्धिषु सीमायामप्रकाशानि कारयेत्॥

**யாநிசைவம்ப்ரகாராணி காலாத் பூமிர் நபக்ஷயேத் |**
**தாநி ஸந்திஷு ஸீமாயாம ப்ரகாஷாநி காரயேத் ||** 251

இந்தப் பொருட்கள் காலத்தால் அழிந்து போகாமல் அப்படியே இருக்கும். இதைக் கொண்டு எல்லை எதுவெனத் தெரிந்து கொள்ளலாம்.

एतैर् लिङ्गैर् नयेत् सीमां राजा विवदमानयोः।
पूर्वभुक्त्या च सततमुदकस्यागमेन च॥

**ஏதைர் லிங்கைர் நயேத் ஸீமாம் ராஜா விவதமாநயோ: |**
**பூர்வபுக்த்யா ச ஸததமுதகஸ்யா ஆகமேந ச ||** **252**

கலகமிட்டுக் கொண்டிருக்கும் இரு கிராமத்தாருக்கும், இந்த அடையாளங்களைக் கொண்டு எல்லை எதுவென அறிந்து கலகத்தை அரசன் தீர்த்து வைக்க வேண்டும். இதையும் மீறி சந்தேகம் ஏற்பட்டால் பூர்வத்தில் யாருடைய அனுபவத்தில் இருந்தது என்று பார்க்க வேண்டும். பிரதானமாக நீர்நிலைகளின் இக்கரை, அக்கரைகளைக் கொண்டு எல்லைகளை நிர்ணயிக்கலாம்.

यदि संशय एव स्याल् लिङ्गानामपि दर्शने।
साक्षिप्रत्यय एव स्यात् सीमावादविनिर्णयः॥

**யதி ஸம்ஷய ஏவ ஸ்யால் லிங்காநாமபி தர்ஷநே |**
**ஸாக்ஷிப்ரத்யய ஏவஸ்யாத் ஸீமாவாதவி நிர்ணய: ||** **253**

கண்ணுக்குத் தெரியும் அடையாளங்களாலும், மறைவான அடையாளங்களாலும்கூட எல்லைகளைத் தீர்மானிக்க முடியாத போது, சத்தியப் பிரமாணம் செய்து சொல்லும் சாட்சிகளின் கூற்றை ஏற்று எல்லைகளை நிர்ணயிக்க வேண்டும்.

ग्रामेयककुलानां च समक्षं सीम्नि साक्षिणः।
प्रष्टव्याः सीमलिङ्गानि तयोश् चैव विवादिनोः॥

**க்ராமேயக குலாநாம் ச ஸமக்ஷம் ஸீம்நி ஸாக்ஷிண: |**
**ப்ரஷ்டவ்யா: ஸீமலிங்காநி தயோஷ் சைவ விவாதிநோ: ||** **254**

கிராமத்து மக்கள் முன்னிலையில் எல்லையைப் பற்றி சாட்சிகளை விசாரிக்க வேண்டும். விசாரணையில் எல்லையைப் பற்றின அடையாளங்களைக் கேட்க வேண்டும்.

ते पृष्टास् तु यथा ब्रूयुः समस्ताः सीम्नि निश्चयम्।
निबध्नीयात् तथा सीमां सर्वांस् तांश् चैव नामतः॥

**தேப்ருஷ்டாஸ்து யதா ப்ரூயு: ஸமஸ்தா: ஸீம்நி நிஷ்சயம் |**
**நிபத்நீயாத் ததாஸீமாம் ஸர்வாம்ஸ் தாம்ஷ்சைவ நாமத: ||** **255**

இவ்வாறாக சாட்சியங்களைக் கொண்டு தீர விசாரித்து எல்லையை நிர்ணயம் செய்து, அவைகளைப் பத்திரமாக எழுத வேண்டும். அந்தப் பத்திரத்தில் சாட்சி சொன்னவர்களும் கையெழுத்திட வேண்டும்.

शिरोभिस् ते गृहीत्वोर्वीं स्रग्विणो रक्तवाससः।
सुकृतैः शापिताः स्वैःस्वैर् नयेयुस् ते समञ्जसम्॥

**ஷிரோபிஸ்தே க்ருஹீத்வோர்வீம் ஸ்ரக்விணோ ரக்தவாஸஸ: |**
**சுக்ருதை: ஷாபிதா: ஸ்வை: ஸ்வைர்நயேதுஸ்தே சமஞ்சஸம் || 256**

*சாட்சிகள் சாட்சி சொல்லும்போது சத்தியப் பிரமாணம் செய்ய வேண்டிய முறை இது. சிவந்த ஆடைகளை உடுத்து, சிவப்பு மலர் மாலையை போட்டுக் கொண்டு, தலையில் மண் சட்டியை வைத்துக்கொண்டு, 'நாங்கள் உண்மைக்குப் புறம்பாகக் கூறினால் எங்கள் புண்ணியங்கள் நாசமடையட்டும்' என்று சபதம் செய்த பிறகு சாட்சியமளிக்க வேண்டும்.*

यथोक्तेन नयन्तस् ते पूयन्ते सत्यसाक्षिणः।
विपरीतं नयन्तस् तु दाप्याः स्युर् द्विशतं दमम्॥

**யதோக்தேந நயந்தஸ் தே பூயந்தே ஸத்யஸாக்ஷிண: |**
**விபரீதம் நயந்தஸ்து தாப்யா:ஸ்யுர் த்விஷதம் தமம் || 257**

*வாதிகளின் பக்கமும் சாட்சிகளிருப்பார்கள், பிரதிவாதிகளின் பக்கமும் சாட்சிகளிருப்பார் களல்லவா? இவர்கள் ஒரு தரத்தாரின் கூற்று சத்தியமாக இருக்க வேண்டும். இன்னொரு தரத்தாரின் கூற்று அசத்தியமே அல்லவா? அவ்வாறு தவறான சாட்சியம் கூறிய ஒவ்வொருவனுக்கும் இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

साक्ष्यभावे तु चत्वारो ग्रामाः सामन्तवासिनः।
सीमाविनिर्णयं कुर्युः प्रयता राजसन्निधौ॥

**ஸாக்ஷ்யபாவேது சத்வாரோக்ராமா: ஸாமந்தவாஸிந: |**
**ஸீமாவிநிர்ணயம் குர்யு: ப்ரயதா ராஜஸந்நிதௌ || 258**

*இரு கிராமத்தாரிலும் இவ்வாறு எல்லைகள் தெரிந்த சாட்சிகள் இல்லாதபோது, அந்த கிராமங்களைச் சுற்றியுள்ள கிராமங் களிலிருக்கும் நான்கு பேர் அரசன் முன் கூறும் சாட்சியை அனுசரித்து எல்லைகளை நிர்ணயிக்க வேண்டும்.*

सामन्तानामभावे तु मौलानां सीम्नि साक्षिणाम्।
इमानप्यनुयुञ्जीत पुरुषान् वनगोचरान्॥

**ஸாமந்தாநாமபாவே து மௌலாநாம் ஸீம்நி ஸாக்ஷிணாம் |**
**இமாநப்யனுயுஞ்ஜீத புருஷாந் வனகோசராந் || 259**

*இவ்வாறும்கூட எல்லைகளை நிர்ணயிக்க முடியவில்லை என்றால், ஊர்ஜிதமாக எல்லைகளை அறிய முடியவில்லை என்றால்*

என்ன செய்வது? பாரம்பரியமான எல்லைகளை அறிந்த கிராமவாசிகளே இல்லை என்னும்போது என்ன செய்யலாம்? வனவாசிகளுக்குத் தெரிகிறதா என்று பார்க்கலாம்.

**व्याधाञ् शाकुनिकान् गोपान् कैवर्तान् मूलखानकान्।
व्यालग्राहानुञ्छवृत्तीनन्यांश् च वनचारिणः॥**

**வ்யாதாஞ்சாகு நிகாந் கோபாந் கைவர்தாந் மூலகாநகாந் |
வ்யாலக்ராஹானுஞ்ச வ்ருத்தீநந்யாம்ஷ்ச வநசாரிண: || 260**

வேடர்கள், பறவைகளைக் கொன்று விற்று ஜீவிப்பவர்கள், இடையர்கள் (கோபர்கள்), வலைஞர்கள் (இருளர்கள்), மூலிகைகளை சேகரிப்பவர்கள் அல்லது விறகு வெட்டுபவர்கள், பாம்பாட்டிகள், உஞ்சவிருத்திகள் (சிந்தியிருக்கும் நெல்லைப் பொறுக்கிக் கொண்டு போய் ஜீவனம் நடத்துபவர்கள்), மற்றுமுள்ள வனவாசிகளை விசாரிக்கலாம்.

**ते पृष्टास् तु यथा ब्रूयुः सीमासन्धिषु लक्षणम्।
तत् तथा स्थापयेद् राजा धर्मेण ग्रामयोर् द्वयोः॥**

**தே ப்ருஷ்டாஸ்து யதாப்ரூயு: ஸீமாஸந்திஷு லக்ஷணம் |
தத் ததா ஸ்தாபயேத் ராஜா தர்மேணக்ராமயோர் த்வயோ: || 261**

அவர்களை விசாரித்ததில் கிடைத்த தகவல்களைக் கொண்டு, அரசன் இரண்டு கிராமங்களுக்கு இடையேயுள்ள எல்லைகளைத் தீர்மானிக்க வேண்டும்.

**क्षेत्र-कूप-तडागानामारामस्य गृहस्य च।
सामन्तप्रत्ययो ज्ञेयः सीमासेतुविनिर्णयः॥**

**க்ஷேத்ர கூப தடாகாநாமாராமாஸ்ய க்ருஹஸ்ய ச |
ஸாமந்தப்ரத்யயோ ஞேய: ஸீமாஸேது விநிர்நய: || 262**

வயல்கள், கிணறுகள், குளங்கள் இவைகளைப் பற்றிய எல்லாத் தகராறுகளுக்கும், வீடுகளுக்கிடையேயான எல்லைத் தகராறுகளுக்கும், அங்கே சுற்றிலும் வாழ்பவர்களை விசாரித்து, எல்லைகளை நிர்ணயிக்க வேண்டும்.

**सामन्ताश् चेन् मृषा ब्रूयुः सेतौ विवदतां नृणाम्।
सर्वे पृथक्पृथग् दण्ड्या राज्ञा मध्यमसाहसम्॥**

**ஸாமந்தாஷ்சேந் ம்ருஷா ப்ரூயு:ஸேதௌ விவததாம் ந்ருணாம் |
ஸர்வே ப்ருதக் ப்ருதக் தண்ட்யா ராக்ஞா மத்யமஸாஹஸம் || 263**

இந்த விஷயங்களில் தகராறு ஏற்பட்டிருக்கும்போது அக்கம்பக்கத்தவர்கள் பொய் கூறினால், அப்படிப் பொய் கூறிய

ஒவ்வொருவருக்கும் அரசன் மத்திய சாகா தண்டம் அபராதமாக விதிக்க வேண்டும்.

गृहं तडागमारामं क्षेत्रं वा भीषया हरन्।
शतानि पञ्च दण्ड्यः स्यादज्ञानाद् द्विशतो दमः॥

**க்ருஹம் தடாகமாராமம் க்ஷேத்ரம்வா பீஷ்யா ஹரந் |**
**ஷதாநி பஞ்ச தண்ட்ய: ஸ்யாதக்ஞாநாத் த்விஷதோ தம: ||** 264

வீடு, குளம், வயல் முதலானவைகளை அதன் சொந்தக்காரனை மிரட்டி பயமுறுத்தி பறித்துக் கொண்டவனுக்கு ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். பலாத்காரமாக அல்லாமல், அறியாமையால் தன்னுடையதுதான் என்று எண்ணி அனுபவிப்பவனுக்கு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

सीमायामविषह्यायां स्वयं राजैव धर्मवित्।
प्रदिशेत् भूमिमेतेषामुपकारादिति स्थितिः॥

**ஸீமாயாமாவிஷஹ்யாம் ஸ்வயம் ராஜைவ தர்மவித் |**
**ப்ரதிஷேத் பூமிமேதேஷாமுபகாராதிதி ஸ்திதி: ||** 265

அடையாளங்களோ சாட்சியங்களோ சரிவர இல்லாதபோது எல்லைகளை எவை யாருடையவை என்று சரியாகத் தீர்மானிக்க முடியாதபோது தர்மவானான அரசன் இவ்வாறு செய்ய வேண்டும். அதாவது, அந்த பூமி முதலானவற்றால் யாருக்கு அதிக லாபம் கிடைக்குமோ அல்லது அந்தப் பகுதி இல்லாவிட்டால் எவருக்கு அதிக நஷ்டமோ அவர்களுக்கே அதைக் கொடுக்க வேண்டும்.

एषोऽखिलेनाऽभिहितो धर्मः सीमाविनिर्णये।
अत ऊर्ध्वं प्रवक्ष्यामि वाक्पारुष्यविनिर्णयम्॥

**ஏஷோ அகிலேநா அபிஹிதோ தர்ம: ஸீமா விநிர்ணயே |**
**அத ஊர்த்வம் ப்ரவக்ஷ்யாமி வாக்பாருஷ்ய விநிர்ணயம் ||** 266

இதுவரை எல்லையைப் பற்றிய நிர்ணயங்கள் முழுவதுமாகக் கூறப்பட்டன. இனி கடுஞ் சொற்களுக்கான (திட்டுதல்) நிர்ணயங்களைக் கூறுகிறேன்.

शतं ब्राह्मणमाक्रुश्य क्षत्रियो दण्डमर्हति।
वैश्योऽप्यर्धशतं द्वे वा शूद्रस्तु वधमर्हति॥

**ஷதம் ப்ராஹ்மணமாக்ருஷ்ய க்ஷத்ரியோ தண்டமர்ஹதி |**
**வைஷ்யோ அத்யர்தஷதம் த்வே வாசூத்ரஸ்து வதமர்ஹதி ||** 267

பிராம்மணனை அநீதியாகத் திட்டிய க்ஷத்ரியனுக்கு நூறு பணங்களை அபராதமாக விதிக்க வேண்டும். வைசியனாயின்,

நூற்றைம்பது பணங்கள் அபராதம். சூத்திரனாயின், இத்தனை அடிகள் அடிக்க வேண்டும் என்று வசை மொழிக்குத் தக்கவாறு தண்டனை விதிக்க வேண்டும்.

पञ्चाशद् ब्राह्मणो दण्ड्यः क्षत्रियस्याऽभिशंसने।
वैश्ये स्यादर्धपञ्चाशच् छूद्रे द्वादशको दमः॥

**பஞ்சாஷத் ப்ராஹ்மணோ தண்ட்ய: க்ஷத்ரியஸ்யா அபிஷம்ஸநே |**
**வைஷ்யே ஸ்யாதர்தபஞ்சாஷச் சூத்ரே த்வதாஷகோ தம: || 268**

பிராம்மணன் க்ஷத்திரியனைத் திட்டினால், அவனுக்கு ஐம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். அதேபோல் வைசியனை பிராம்மணன் திட்டினால், அவனுக்கு இருபத்தைந்து பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். சூத்திரனைத் திட்டிய பிராம்மணனுக்கு பன்னிரண்டு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

समवर्णे द्विजातीनां द्वादशैव व्यतिक्रमे।
वादेष्ववचनीयेषु तदेव द्विगुणं भवेत्॥

**ஸமவர்ணே த்விஜாதீநாம் த்வாதஷைவ வ்யதிக்ரமே |**
**வாதேஷ் வவசநீயேஷு ததேவ த்விகுணம் பவேத் || 269**

பிராம்மணனை பிராம்மணனே திட்டினால் பன்னிரண்டு பணங்கள் அபராதம்.

அவ்வாறே க்ஷத்ரியனை க்ஷத்ரியனே திட்டினாலும், வைசியனை வைசியனே திட்டினாலும் பன்னிரண்டு பணங்கள் அபராதம்.

சாதாரண வசவு மொழிகளாக இல்லாமல் நாக்கூசும் வார்த்தைகளால் திட்டினால் இருமடங்காக அபராதம் விதிக்க வேண்டும்.

एकजातिर् द्विजातींस् तु वाचा दारुणया क्षिपन्।
जिह्वायाः प्राप्नुयाच् छेदं जघन्यप्रभवो हि सः॥

**ஏகஜாதிர் த்விஜாதீம்ஸ்து வாசா தாருணாயா க்ஷிபந் |**
**ஜிஹ்வாயா: ப்ராப்னுயாச்சேதம் ஜகந்யப்ரபவோ ஹி ஸ: || 270**

பிராம்மணன், க்ஷத்திரியன், சூத்திரன் முதலானோரை, சூத்திரன் கடுமையான தகாத வார்த்தைகளால் திட்டினால், அத்தகைய வனுக்குக் கடுமையான தண்டனை அளிக்க வேண்டும்.

नामजातिग्रहं त्वेषामभिद्रोहेण कुर्वतः।
निक्षेप्योऽयोमयः शङ्कुर्ज्वलन्नास्ये दशाऽङ्गुलः॥

**நாமஜாதிக்ரஹம் த்வேஷாமபித்ரோஹேண குர்வத: |**
**நிக்ஷேப்யோ அயோமய: ஷங்குர் ஜ்வலந் நாஸ்யே தஷா அங்குல: || 271**

மேலும் பெயரைக் குறிப்பிட்டோ, ஜாதியைக் குறிப்பிட்டோ தூஷிப்பவனுக்கு, பத்து அங்குல நீளமுள்ள வேலை பழுக்கக் காய்ச்சி அவன் நாவில் சூடு போட வேண்டும்.

धर्मोपदेशं दर्पेण विप्राणामस्य कुर्वतः।
तप्तमासेचयेत् तैलं वक्त्रे श्रोत्रे च पार्थिवः॥

**தர்மோபதேஷம் தர்பேண விப்ரா ணாமஸ்ய குர்வத: |**
**தப்தமாஸேசயேத் தைலம் வக்த்ரே ஸ்ரோத்ரே ச பார்திவ: || 272**

அகந்தையினால், பிராம்மணனிடம் வந்து 'இப்படிச் செய், அப்படிச் செய்', என்று தர்மோபதேசம் செய்யும் சூத்திரனுக்கு, அவன் அகந்தை அழியும் வண்ணம் அரசன் கொடுக்க வேண்டிய தண்டனை யாதெனில் - எண்ணெயை நன்கு காய்ச்சி, அவன் நாவிலும் காதிலும் ஊற்ற வேண்டும். இதுவே தண்டனை.

श्रुतं देशं च जातिं च कर्म शारीरमेव च।
वितथेन ब्रुवन् दर्पाद् दाप्यः स्याद् द्विशतं दमम्॥

**ஸ்ருதம் தேஷம் ச ஜாதிம் ச கர்ம ஷாரீரமேவ ச |**
**விததேந ப்ருவந் தர்பாத் தாப்ய:ஸ்யாத் த்விஷதம் தமம் || 273**

அதே சமயம் சூத்திரனைப் பார்த்தும் யாரும் இழிவாகப் பேசக் கூடாது.

அவனது பேச்சு, தேசம், ஜாதி, தொழில், குரல் முதலான வைகளை தூஷிக்கக் கூடாது. அப்படி அகந்தையால் தூஷிப்பவர் களுக்கு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

काणं वाऽप्यथवा खञ्जमन्यं वाऽपि तथाविधम्।
तथ्येनाऽपि ब्रुवन् दाप्यो दण्डं कार्षापणाऽवरम्॥

**காணம் வாஅப்யதவா கஞ்ஜமந்யம் வாஅபி ததாவிதம் |**
**தத்யேநா அபி ப்ருவந் தாப்யோ தண்டம் கார்ஷாபணா அவரம் || 274**

ஒற்றைக் கண் கொண்டவன், முடவன் முதலான அங்க ஹீனர்களை, அவர்களது அங்கக் குறைகளைக் குறிப்பிட்டு தூஷிப்பவர்களுக்கு கார்ஷா பணம் அபராதம் விதிக்க வேண்டும்.

मातरं पितरं जायां भ्रातरं तनयं गुरुम्।
आक्षारयञ् छतं दाप्यः पन्थानं चाऽददद् गुरोः॥

**மாதரம் பிதரம் ஜாயாம் ப்ராதரம் தநயம் குரும் |**
**ஆக்ஷார யஞ்சதம் தாப்ய: பந்தாநம் சாஅதத் குரோ: ||** 275

*தாய், தந்தை, மனைவி, சகோதரன், மகன், குரு - இவர்களை நிந்திப்பவனுக்கு நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். குரு எதிர்ப்படும்போது அவருக்கு வழிவிட்டு விலகாதவனுக்கும் நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

ब्राह्मणक्षत्रियाभ्यां तु दण्डः कार्यो विजानता।
ब्राह्मणे साहसः पूर्वः क्षत्रिये त्वेव मध्यमः॥

**ப்ராஹ்மண க்ஷத்ரியாப்யாம் து தண்ட: கார்யோவிஜாநதா |**
**ப்ராஹ்மணே ஸாஹஸ: பூர்வ: க்ஷத்ரியே த்வேவ மத்யம: ||** 276

*பிராம்மணனுக்கும் க்ஷத்ரியனுக்கும் இடையில் சண்டை ஏற்பட்டு வசவுகளை பேசினால், வசைமாரி பொழிந்தவன் பிராம்மணன் என்றால், இருநூற்றைம்பது பணங்களும், க்ஷத்ரியன் என்றால், ஐநூறு பணங்களும் அபராதம் விதிக்க வேண்டும். தண்ட நீதியை செலுத்தும் அரசன் விதிக்க வேண்டிய தண்டனை இதுவேயாகும்.*

विट्शूद्रयोरेवमेव स्वजातिं प्रति तत्त्वतः।
छेदवर्जं प्रणयन दण्डस्येति विनिश्चयः॥

**விட்சூத்ரயோரேவமேவ ஸ்வஜாதிம் ப்ரதி தத்வத: |**
**சேதவர்ஜம் ப்ரணயநம் தண்டஸ்யேதி விநிஷ்சய: ||** 277

*வைசியனுக்கும் சூத்திரனுக்கும் இடையில் சண்டை ஏற்பட்டு வசை பேசினால், வசைமாரி பொழிந்தவன் வைசியன் என்றால், அவனுக்கு இருநூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். சூத்திரன் என்றால் ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

एष दण्डविधिः प्रोक्तो वाक्पारुष्यस्य तत्त्वतः।
अत ऊर्ध्वं प्रवक्ष्यामि दण्डपारुष्यनिर्णयम्॥

**ஏஷ தண்டவிதி: ப்ரோக்தோ வாக்பாருஷ்யஸ்ய தத்வத: |**
**அதஊர்த்வம் ப்ரவக்ஷ்யாமி தண்டபாருஷ்ய நிர்ணயம் ||** 278

*ஒருவரை ஒருவர் வைதல் தொடர்பான தண்டனைகளை இதுவரை கூறினேன். இனி ஒருவரை ஒருவர் அடித்துக் கொல்வது தொடர்பான தண்டனைகளைக் கூறுகிறேன்.*

येन केनचिदङ्गेन हिंस्याच् चेच् छ्रेष्ठमन्त्यजः।
छेत्तव्यं तत्तदेवाऽस्य तन् मनोरनुशासनम्॥

**யேநகேநசிதங்கேந ஹிம்ஸ்யாச்சேச் ச்ரேஷ்டமந்த்யஜ: |**
**சேத்தவ்யம் தத்ததேவா அஸ்யதந் மநோரனுஷாஸநம் || 279**

*சூத்திரன், பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களை எந்த அங்கத்தால் அடிக்கிறானோ, அந்த அங்கத்தை வெட்ட வேண்டும். இது மனு பகவானின் சாசனம்.*

पाणिमुद्यम्य दण्डं वा पाणिच्छेदनमर्हति।
पादेन प्रहरन् कोपात् पादच्छेदनमर्हति॥

**பாணிமுத்யம்ய தண்டம்வா பாணிச்சேதநமர்ஹதி |**
**பாதேந ப்ரஹரந் கோபாத் பாதச்சேதநமர்ஹதி || 280**

*அவன் கையாலோ தடியெடுத்தோ அடித்தால் அடித்த கையை வெட்ட வேண்டும். கோபத்தோடு காலால் உதைத்தால் காலை வெட்ட வேண்டும்.*

सहाऽऽसनमभिप्रेप्सुरुत्कृष्टस्याऽपकृष्टजः।
कट्यां कृताङ्को निर्वास्यः स्फिचं वाऽस्याऽवकर्तयेत्॥

**ஸஹா ஆஸநமபிப்ரேப்சுருத் க்ருஷ்டஸ்யா அபக்ருஷ்டஜ: |**
**கட்யாம் க்ருதாங்கோ நிர்வாஸ்ய: ஸ்பிசம் வாஅஸ்யாஅவ கர்தயேத் || 281**

*சூத்திரன் அகங்காரத்தால் பிராம்மணனுடன் சமமான ஆசனத்தில் உட்கார்ந்தால் இடுப்பின் பின்புறத்தில் சூடு போட வேண்டும்.*

अवनिष्ठीवतो दर्पाद् द्वावोष्ठौ छेदयेन् नृपः।
अवमूत्रयतो मेढ्रमवशर्धयतो गुदम्॥

**அவநிஷ்டீவதோ தர்பாத் த்வாவோஷ்டௌ சேதயேந் ந்ருப: |**
**அவமூத்ரயதோ மேட்ரமவஷர்தயதோ குதம் || 282**

*சூத்ரன் அகங்காரத்தால், பிராம்மணன் மீது காறியுமிழ்ந்தால், அவன் உதடுகளை அறுக்க வேண்டும். பிராம்மணன் மீது சிறுநீர் கழித்து அவமானப் படுத்தியவனின் சிறுநீர் கழிக்கும் உறுப்பை அறுக்க வேண்டும். பிராம்மணன் மீது மலத்தை எறிந்தவனின் குதத்தை அறுக்க வேண்டும். இது அரசன் செலுத்த வேண்டிய தண்ட நீதி.*

केशेषु गृह्णतो हस्तौ छेदयेदविचारयन्।
पादयोर् दाढिकायां च ग्रीवायां वृषणेषु च॥

**கேஷேஷு க்ருஷ்ணதோ ஹஸ்தௌ சேதயேதவிசாரயந் |**
**பாதயோர் தாடிகாயாம் ச க்ரீவாயாம் வ்ருஷணேஷுச || 283**

பிராம்மணன் முடியைப் பற்றியிழுத்த சூத்திரன் கைகளை எந்தத் தயக்கமுமின்றி வெட்டியெறிய வேண்டும்.

தாடி, மீசை, கழுத்து, குறி இவைகளைப் பற்றி இழுத்தவனுக்கும் இதே தண்டனை விதிக்க வேண்டும்.

त्वग्भेदकः शतं दण्ड्यो लोहितस्य च दर्शकः।
मांसभेत्ता तु षण् निष्कान् प्रवास्यस् त्वस्थिभेदकः॥

**த்வக்பேதக: ஷதம் தண்ட்யோ லோஹிதஸ்ய ச தர்ஷக: |**
**மாம்ஸபேத்தா து ஷண் நிஷ்காந் ப்ரவாஸ்யஸ் த்வஸ்திபேதக: || 284**

யாரும் யாரையும் தோல் பிய்ந்து போகுமாறு அடித்தால் நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். ரத்தம் வருமாறு அடித்தாலும் நூறு பணங்கள் அபராதம். சதை பிய்ந்து போகுமாறு அடித்தால் ஆறு நிஷ்கங்கள் அபராதம் விதிக்க வேண்டும். எலும்புகள் முறியுமாறு அடித்தவனை நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும்.

वनस्पतीनां सर्वेषामुपभोगो यथायथा।
तथातथा दमः कार्यो हिंसायामिति धारणा॥

**வநஸ்பதீநாம் ஸர்வேஷா முபபோகோ யதாயதா |**
**ததா ததா தம: கார்யோ ஹிம்ஸாயாமிதி தாரணா || 285**

மலர்களையும் பழங்களையும் அளிக்கும் மரங்களை வெட்டக் கூடாது. வெட்டுபவனுக்கு, ஏற்படும் நஷ்டத்துக்குத் தக்கவாறு அபராத தண்டனை விதிக்க வேண்டும்.

मनुष्याणां पशूनां च दुःखाय प्रहृते सति।
यथायथा महद् दुःखं दण्डं कुर्यात् तथातथा॥

**மநுஷ்யாணாம் பசூநாம் ச துக்காய ப்ரஹ்ருதே ஸதி |**
**யதாயதா மஹத் துக்கம் தண்டம் குர்யாத் ததாததா || 286**

மனிதர்களையும், பசுக்களையும் அடித்துத் துன்புறுத்துபவனுக்கு, ஏற்படும் துக்கத்தின் தன்மைக்கேற்ப தண்டனையளிக்க வேண்டும்.

अङ्गाऽवपीडनायां च व्रणशोणितयोस् तथा।
समुत्थानव्ययं दाप्यः सर्वदण्डमथाऽपि वा॥

**அங்காஅவபீடநாயாம் ச வ்ரணஷோணிதயோஸ் ததா |**
**ஸமுத்தாநவ்யயம் தாப்ய: ஸர்வதண்டமதாஅபி வா || 287**

உடம்பில் காயம் ஏற்படுமாறு அடித்தவனிடம், அந்தக் காயத்தின் தன்மைக்கேற்பவும், அந்தக் காயம் ஆறும் வரையில் அதற்காகும் மருத்துவச் செலவுகளுக்கும், காயம்பட்டவன் சம்பாதிக்க முடியாமல் போய்விடுவதால் அந்த நஷ்ட ஈட்டுத் தொகையையும் அடித்தவனிட மிருந்து வசூலித்து அடிபட்டவனுக்குக் கொடுக்க வேண்டும்.

द्रव्याणि हिंस्याद् यो यस्य ज्ञानतोऽज्ञानतोऽपि वा।
स तस्योत्पादयेत् तुष्टिं राज्ञे दद्याच् च तत्समम्॥

**த்ரவ்யாணி ஹிம்ஸ்யாத் யோ யஸ்ய ஞாநதோ அஞ்ஞாதோ அபி வா |**
**ஸதஸ்யோத் பாதயேத் துஷ்டிம் ராக்ஞே தத்யாச்ச தத்ஸமம் || 288**

பிறருடைய பொருட்களை அறிந்தோ அறியாமலோ தொலைத்து விட்டால், அப்பொருளின் சொந்தக்காரனுக்கு வேறொரு பொருளை ஈடாகக் கொடுத்துவிட வேண்டும். மேலும் அப்பொருளுக்குரிய விலையை அபராதமாக அரசனுக்குச் செலுத்த வேண்டும்.

चर्मचार्मिकभाण्डेषु काष्ठलोष्टमयेषु च।
मूल्यात् पञ्चगुणो दण्डः पुष्पमूलफलेषु च॥

**சர்ம சார்மிக பாண்டேஷு காஷ்ட லோஷ்டமயேஷு ச |**
**மூல்யாத் பஞ்சகுணோ தண்ட: புஷ்பமூல பலேஷு ச || 289**

ஒருவனுக்குச் சொந்தமான தோல், தோல் பாத்திரங்கள், மண் பாத்திரங்கள், மரப் பாத்திரங்கள் இவற்றைத் தொலைத்துவிட்டால், அவற்றின் மதிப்புக்கு ஐந்து மடங்கு அபராதம் அரசன் விதிக்க வேண்டும். சொந்தக்காரனுக்கு அவற்றின் மதிப்புக்குத் தக்க தொகையை அளிக்கச் செய்ய வேண்டும்.

புஷ்பங்கள், வேர்கள், பழங்கள், முதலானவற்றுக்கும் இதே முறையில் தண்டிக்க வேண்டும்.

यानस्य चैव यातुश् च यानस्वामिन एव च।
दशाऽतिवर्तनान्याहुः शेषे दण्डो विधीयते॥

**யாநஸ்யசைவ யாதுஷ்ச யாநஸ்வாமிந ஏவ ச |**
**தஷாஅதிவர்தநாந்யாஹு:சேஷே தண்டோ விதீயதே || 290**

தேர் முதலான வாகன சாரதிகளுக்கும், வாகனத்தின் சொந்தக்காரர்களுக்கும் விபத்து ஏற்படுத்தினால், விபத்துக்கான பத்து தவறுகளுக்கு தண்டனை கிடையாது. இந்த பத்தின் காரணமாக ஏற்படும் பிராண நஷ்டம், பொருள் நஷ்டம் இவற்றிற்கு தண்டனை கிடையாது. இவை தவிர்த்து மற்றபடி ஏற்படும் விபத்துக்களில்

ஏற்படும் பிராண நஷ்டம், பொருள் நஷ்டம் முதலானவற்றுக்கு தண்டனை உண்டு.

छिन्नास्ये भग्नयुगे तिर्यक्-प्रतिमुखाऽऽगते।
अक्षभङ्गे च यानस्य चक्रभङ्गे तथैव च॥

**சிந்நநாஸ்யே பக்நயுகே திர்யக் ப்ரதிமுகா ஆகதே |**
**அக்ஷபங்கே ச யாநஸ்ய சக்ர பங்கே ததைவ ச || 291**

छेदने चैव यन्त्राणां योक्त्ररश्म्योस् तथैव च।
आक्रन्दे चाऽप्यपैहीति न दण्डं मनुरब्रवीत्॥

**சேதநே சைவ யந்த்ராணாம் யோக்த்ர ரஷ்ம்யோஸ் ததைவ ச |**
**ஆக்ரந்தே சாஅப்யபைஹீதி ந தண்டம் மனுரப்ரவீத் || 292**

1) மூக்கணாங்கயிறு அறுந்து போதல்.
2) நுகத்தடி ஒடிந்து போதல்.
3) மேடு பள்ளங்களால் ரதம் குடைசாய்ந்து போதல்.
4) இருசு அச்சு ஒடிந்து போதல்.
5) சேணம் அறுந்து போதல்.
6) கடிவாளக் கயிறு அறுந்து போதல்.
7) சாட்டை அறுந்து போதல்.
8) வாகனத்தோடு குதிரையைப் பூட்டியுள்ள இடத்தில் மரம் உடைந்து போதல்.
9) எதிரில் வேறு வண்டி வந்து மோதுதல்.
10) சாரதி குறுக்கே வருபவனை விலகு விலகென்று கூறியும் விலகாமை.

- என்னும் பத்து வகையான காரணங்களால் விபத்து ஏற்பட்டு, அதனால் உயிர் நஷ்டமும் பொருள் நஷ்டமும் ஏற்பட்டாலும்கூட தண்டனை எதுவும் கொடுக்கக் கூடாதென மனு பகவான் கூறுகிறார்.

यत्राऽपवर्तते युग्यं वैगुण्यात् प्राजकस्य तु।
तत्र स्वामी भवेद् दण्ड्यो हिंसायां द्विशतं दमम्॥

**யத்ரா அபவர்ததே யுக்யம் வைகுண்யாத் ப்ராஜகஸ்ய து |**
**தத்ர ஸ்வாமீ பவேத் தண்ட்யோ ஹிம்ஸாயாம் த்விஷதம் தமம் || 293**

வண்டியோட்டி தன் அஜாக்ரதையால் வண்டியை ஒடித்தாற் போல் திருப்பி, அதனால் பிறர் உயிருக்கோ உடைமைகளுக்கோ ஹாநி ஏற்பட்டால், அப்படிப்பட்ட அறிவிலியை சாரதியாக

அமர்த்திக் கொண்ட வண்டியின் சொந்தக்காரனுக்கு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

प्राजकश् चेद् भवेदाप्तः प्राजको दण्डमर्हति।
युग्यस्थाः प्राजकेऽनाप्ते सर्वे दण्ड्याः शतंशतम्॥

**ப்ராஜகஷ்சேத் பவேதாப்ய: ப்ராஜகோ தண்டமர்ஹதி |**
**யுக்யஸ்தா: ப்ராஜகே அநாப்தே ஸர்வே தண்ட்யா: ஷதம்ஷதம் || 294**

வண்டியோட்டிய சாரதி புத்திமானாக இருந்தால், தன்னால் ஏற்பட்ட நஷ்டத்தை தன் எஜமானன் ஏற்க விடக்கூடாது. தானே அந்த அபராதத் தொகையைச் செலுத்த வேண்டும். சாரதி அந்த அளவுக்கு அறிவில்லாத மூடனாக இருந்தால், எஜமானனே அபராதம் கட்ட வேண்டும்.

அதுபோக அந்த வண்டியில் பயணம் செய்தவனுக்கும், சாரதிக்கும் தனித்தனியே நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

स चेत् तु पथि संरुद्धः पशुभिर् वा रथेन वा।
प्रमापयेत् प्राणभृतस् तत्र दण्डोऽविचारितः॥

**ஸசேத்து பதி ஸம்ருத்த: பசுபிர் வா ரதேந வா |**
**ப்ரமாபயேத் ப்ராணப்ருதஸ் தத்ர தண்டோ அவிசாரித: || 295**

எதிரில் மிருகங்களோ, ரதமோ வரும்போது தன் வண்டியை நிறுத்தாமல் ஓட்டி, அதனால் மிருகங்களுக்கு உயிர்ச் சேதமோ, உடலுக்கு ஹிம்சையோ ஏற்பட்டால், சற்றும் யோசிக்காமல் அந்த சாரதிக்கு அபராதம் விதிக்க வேண்டும்.

मनुष्यमारणे क्षिप्रं चौरवत् किल्बिषं भवेत्।
प्राणभृत्सु महत्स्वर्धं गोगजोष्ट्रहयादिषु॥

**மநுஷ்ய மாரணே க்ஷிப்ரம் சௌரவத் கில்பிஷம் பவேத் |**
**ப்ராணப்ருத்சு மஹத்ஸ்வர்தம் கோகஜோஷ்ட்ரஹயாதிஷு || 296**

மனிதன் இந்த விபத்தில் இறந்தால், அவனுக்கு திருடனுக்கு விதிக்கும் தண்டனையை விதிக்க வேண்டும்.

பசுக்கள், யானைகள், குதிரைகள் முதலானவற்றுக்கு ஆபத்து நேரிட்டால் அல்லது இறந்தால் அதில் பாதி தண்டனையும் விதிக்க வேண்டும்.

क्षुद्रकाणां पशूनां तु हिंसायां द्विशतो दमः।
पञ्चाशत् तु भवेद् दण्डः शुभेषु मृगपक्षिषु॥

**க்ஷுத்ரகாணாம் பசூநாம் து ஹிம்ஸாயாம் த்விஷதோ தம: |**
**பஞ்சாசத் து பவேத் தண்ட: சுபேஷு ம்ருக பக்ஷிஷு || 297**

மிகவும் சாதாரண கால் நடைகளுக்கு (பூனை போன்றவை) ஆபத்து ஏற்பட்டால், சாரதியிடம் இருநூறு பணங்கள் அபராதம் வசூலிக்க வேண்டும்.

உயர்ந்தவைகளான மான் முதலான மிருகங்களுக்கும், அன்னம் முதலான பறவைகளுக்கும் ஆபத்து ஏற்பட்டால், ஐம்பது பணங்கள் அபராதம் வசூலிக்க வேண்டும்.

गर्दभाऽजाविकानां तु दण्डः स्यात् पञ्चमाषिकः।
माषिकस् तु भवेद् दण्डः श्वसूकरनिपातने॥

**கர்தபாஅஜாவிகாநாம் து தண்ட:ஸ்யாத் பஞ்சமாஷிக: |**
**மாஷிகஸ்து பவேத் தண்ட: ஷ்வசூகர நிபாதநே || 298**

கழுதை, ஆடு, செம்மறியாடு முதலானவற்றுக்கு ஆபத்து ஏற்பட்டால், ஐந்து வெள்ளி மாஷங்கள் அபராதம் விதிக்க வேண்டும். நாய், பன்றி போன்றவை வண்டியில் அடிபட்டு வீழ்ந்தால், ஒரு வெள்ளி மாஷம் அபராதம் விதிக்க வேண்டும்.

भार्या पुत्रश् च दासश् च प्रेष्यो भ्राता च सोदरः।
प्राप्ताऽपराधास् ताड्याः स्यु रज्ज्वा वेणुदलेन वा॥

**பார்யா புத்ரஷ்ச தாஸஸ்ச ப்ரேஷ்யோ ப்ராதா ச ஸோதர: |**
**ப்ராப்தாஅபராதாஸ் தாட்யா:ஸ்யூ ரஜ்வா வேணுதலேந வா || 299**

மனைவி, பிள்ளை, வேலைக்காரன், சிஷ்யன், பிரியமான நண்பன், தம்பி இவர்கள் குற்றமிழைத்தால், பிரம்பாலோ, கயிற்றாலோ அடிக்க வேண்டும்.

पृष्ठतस् तु शरीरस्य नोत्तमाङ्गे कथञ्चन।
अतोऽन्यथा तु प्रहरन् प्राप्तः स्याच् चौरकिल्बिषम्॥

**ப்ருஷ்டதஸ்து ஷரீரஸ்ய நோத்தமாங்கேகதஞ்சந |**
**அதோ அந்யதா து ப்ரஹரந் ப்ராப்த: ஸ்யாச் சௌரகில்பிஷம் || 300**

இவ்வாறு அடிக்க நேரும்போது, தலை முதலான உத்தம பாகங்களில் அடிக்கக்கூடாது. உடலின் பின்புறம் முதுகில் அடிக்கலாம். அவ்வாறன்றி தலையில் அடிப்பவன் திருடனுக்குரிய தண்டனையைப் பெறுவான்.

एषोऽखिलेनाऽभिहितो दण्डपारुष्यनिर्णयः।
स्तेनस्याऽतः प्रवक्ष्यामि विधिं दण्डविनिर्णये॥

**ஏஷோ அகிலேநா அபிஹிதோ தண்டபாருஷ்ய நிர்ணய: |**
**ஸ்தேநஸ்யாஅத: ப்ரவக்ஷ்யாமி விதிம் தண்டவிநிர்ணயே || 301**

*இதுவரை தண்ட நீதியில் வசைகளுக்கும், விபத்து முதலான வற்றுக்குமுரிய தண்டனைகளைக் கூறினேன். இனி திருட்டுக் குற்றத்துக் குரிய தண்டனைகளைக் கூறுகிறேன்.*

परमं यत्नमातिष्ठेत् स्तेनानां निग्रहे नृपः।
स्तेनानां निग्रहादस्य यशो राष्ट्रं च वर्धते॥

**பரமம் யத்நமாதிஷ்டேத் ஸ்தேநாநாம் நிக்ரஹே ந்ருப: |**
**ஸ்தேநாநாம் நிக்ரஹாதஸ்ய யஷோ ராஷ்ட்ரம் ச வர்ததே || 302**

*திருடர்களைப் பிடிக்கும் விஷயத்தில் மேலான முயற்சிகளை அரசன் மேற்கொள்ள வேண்டும். திருடர்களை அடக்கும் அரசனுடைய புகழும், ராஜ்ஜியமும் பெருகும்.*

अभयस्य हि यो दाता स पूज्यः सततं नृपः।
सत्रं हि वर्धते तस्य सदैवाऽभयदक्षिणम्॥

**அபயஸ்ய ஹி யோ தாதா ஸ பூஜ்ய:ஸததம் ந்ருப: |**
**ஸத்ரம் ஹி வர்ததே தஸ்ய ஸதைவாஅபய தக்ஷிணம் || 303**

*அபயத்தை அளிக்கும் வள்ளலான அரசன் எப்போதும் போற்றுதற் குரியவன். மக்களைக் காப்பாற்றுதல் என்பது அரசனுக்கு ஒரு வேள்வியாகும். அபயமளித்தலே தட்சிணையாகும். அபய மளிப்பதால் அரசனது ஆட்சி உயர்வடையும்.*

सर्वतो धर्मषड्भागो राज्ञो भवति रक्षतः।
अधर्मादपि षड्भागो भवत्यस्य ह्यरक्षतः॥

**ஸர்வதோ தர்மஷட்பாகோ ராக்ஞோ பவதி ரக்ஷத: |**
**அதர்மாதபி ஷட்பாகே பவத்யஸ்ய ஹ்யரக்ஷத: || 304**

*மக்களை நன்கு ரட்சிக்கும் அரசனுக்கு அவன் குடிமக்கள் செய்யும் புண்ணியத்தில் ஆறில் ஒரு பாகம் வந்தடையும். மக்களை நன்கு ரட்சிக்காத அரசனுக்கு, அவன் குடிமக்கள் செய்யும் பாபத்தில் ஆறில் ஒரு பங்கு வந்தடையும்.*

यदधीते यद् यजते यद् ददाति यदर्चति।
तस्य षड्भागभाग् राजा सम्यग् भवति रक्षणात्॥

**யததீதே யத் யஜதே யத் ததாதி யதர்சதி |**
**தஸ்ய ஷட்பாகபாக் ராஜா ஸம்யக் பவதி ரக்ஷணாத் || 305**

*மேலும் கோயில்களில் நடைபெறும் தேவபூஜைகள், யாகங்கள், தானங்கள் முதலானவற்றின் பலனிலும் ஆறில் ஒரு பாகம், பிரஜைகளை நன்கு ரட்சிப்பதால் அரசனை வந்தடையும்.*

रक्षन् धर्मेण भूतानि राजा वध्यांश् च घातयन्।
यजतेऽहरहर् यज्ञैः सहस्रशतदक्षिणैः॥

**ரக்ஷந் தர்மேண பூதாநி ராஜா வத்யாம்ஷ் ச காதயந் ।**
**யஜதே அஹரஹர் யக்ஞை: ஸஹஸ்ரஷததக்ஷிணை: ॥** **306**

*அரசன் சகல உயிர்களையும் தர்மமாக ரட்சிப்பதாலும், தீயவர்களை ஒடுக்குவதாலும், ஒவ்வொரு நாளும் யாகங்களியற்றி ஆயிரங்களாய், நூறுகளாய் தட்சிணைகளைக் கொடுத்த பலனை அடைகிறான்.*

योऽरक्षन् बलिमादत्ते करं शुल्कं च पार्थिवः।
प्रतिभागं च दण्डं च स सद्यो नरकं व्रजेत्॥

**யோ அரக்ஷந் பலிமாதத்தே கரம் ஷுல்கம் ச பார்திவ: ।**
**ப்ரதிபாகம் ச தண்டம் ச ஸ ஸத்யோ நரகம் வ்ரஜேத் ॥** **307**

*விளைபொருள்களுக்கான வரி, நில வழி வரி, நீர்வழி வரி, வணிகர்களிடமிருந்து பெறும் வரி, அபராதத் தொகைகள் முதலியவற்றையெல்லாம் குறைவர வசூலித்துக் கொண்டு, மக்களைக் காப்பாற்றாத அரசன் இறந்த வேகத்தில் நரகத்தை அடைவான்.*

अरक्षितारं राजानं बलिषड्भागहारिणम्।
तमाहुः सर्वलोकस्य समग्रमलहारकम्॥

**அரக்ஷிதாரம் ராஜாநம் பலிஷட்பாக ஹாரிணம் ।**
**தமாஹு: ஸர்வலோகஸ்ய ஸமக்ரமலஹாரகம் ॥** **308**

*மக்களைக் காப்பாற்றாமல், அவர்களிடமிருந்து ஆறில் ஒரு பாகத்தை வரியாக வசூலிக்கும் அரசன், உலக மாந்தரின் பாபங்களை அடைந்தவனாகிறான் என்று அறிஞர்கள் கூறியுள்ளனர்.*

अनपेक्षितमर्यादं नास्तिकं विप्रलुम्पकम्।
अरक्षितारमत्तारं नृपं विद्यादधोगतिम्॥

**அநபேக்ஷிதமர்யாதம் நாஸ்திகம் விப்ரலும்பகம் ।**
**அரக்ஷிதாரமத்தாரம் ந்ருபம் வித்யாததோகதிம் ॥** **309**

*தர்ம சாஸ்திரங்களுக்கு மரியாதையளிக்காமல், நாஸ்திகனாக, மேலுலகங்கள் இல்லை யென்று கூறிக்கொண்டு மக்களைக் காப்பாற்றாமல், தண்ட நீதியைச் செலுத்தாமல், வரியை மட்டும் வசூலிக்கும் அரசன் அதோகதியை, அதாவது நரகத்தை அடைவான்.*

अधार्मिकं त्रिभिर् न्यायैर् निगृह्णीयात् प्रयत्नतः।
निरोधनेन बन्धेन विविधेन वधेन च॥

**அதார்மிகம் த்ரிபிர் ந்யாயைர் நிக்ருஹ்ணீயாத் ப்ரயத்நத: |**
**நிரோதநேந பந்தேந விவிதேந வதேந ச || 310**

அதர்மங்கள் செய்பவரை அரசன், அபராதம் வாங்குவதோடு நிறுத்திக் கொள்ளாமல், மிக்க முயற்சியோடு மூன்று வகையாகத் தண்டிக்க வேண்டும்.

निग्रहेण हि पापानां साधूनां सङ्ग्रहेण च।
द्विजातय इवेज्याभिः पूयन्ते सततं नृपाः॥

**நிக்ரஹேண ஹி பாபாநாம் ஸாதூநாம் ஸங்க்ரஹேண ச |**
**த்விஜாதஸ்ய இவேஜ்யாபி: பூயந்தே ஸததம்ந்ருபா: || 311**

தீயோரைத் தண்டித்தலையும், நல்லோரைக் காத்தலையும் செய்வதனால், பிராம்மண, க்ஷத்திரிய, வைசியர்கள் யாகத்தால் பரிசுத்தமடைவதைப் போன்று அரசன் பரிசுத்தனாவான்.

क्षन्तव्यं प्रभुणा नित्यं क्षिपतां कार्यिणां नृणाम्।
बालवृद्धातुराणां च कुर्वता हितमात्मनः॥

**க்ஷந்தவ்யம் ப்ரபுணா நித்யம்க்ஷிபதாம் கார்யிணாம் ந்ருணாம் |**
**பாலவ்ருத்தாஆது ராணாம்ச குர்வதா ஹிதமாத்மந: || 312**

தங்கள் வழக்குகளைத் தீர்த்துக் கொள்ள வந்தவர்களில் சிறுவர்களும், வயோதிகர்களும், வியாதியஸ்தர்களும் அறியாமை யாலோ, உடல் கஷ்டங்களைப் பொறுக்க முடியாமலோ அரசனைக் கடிந்து கொண்டாலும்கூட அரசன் பொறுத்துக் கொள்ள வேண்டும். தன்னுடைய நன்மையை விரும்பும் அரசன் இவ்வாறே செய்ய வேண்டும்.

यः क्षिप्तो मर्षयत्यार्तैस् तेन स्वर्गे महीयते।
यस् त्वैश्वर्यान् न क्षमते नरकं तेन गच्छति॥

**ய:க்ஷிப்தோ மர்ஷயத்யார்தைஸ் தேநஸ்வர்கே மஹீயதே |**
**யஸ் த்வைஷ்வர்யாந் ந க்ஷமதே நரகம் தேந கச்சதி || 313**

தன்னைக் குறைகூறிக் கடிந்தவர்களைப் பொறுத்துக் கொள்ளும் அரசன், அந்தப் பொறுமையினாலேயே சொர்க்க லோகத்தை யடைந்து மேன்மையுறுகிறான். தான் அரசன் என்ற கர்வத்தால் பொறுக்காதவன், நரகத்தை அடைகிறான்.

राजा स्तेनेन गन्तव्यो मुक्तकेशेन धावता।
आचक्षाणेन तत् स्तेयमेवंकर्माऽस्मि शाधि माम्॥

**ராஜா ஸ்தேநேந கந்தவ்யோ முக்தகேஷேந தாவதா |**
**ஆசக்ஷாணேந தத் ஸ்தேயமேவம் கர்மாஸ்மி ஷாதிமாம் ||** **314**

*பிறரிடமிருந்து தங்கத்தைத் திருடியவன், தன் குற்றத்தை உணர்ந்தால், அரசனிடம் சென்று தன் குற்றத்தைக் கூறி தண்டனையை வேண்ட வேண்டும்.*

*ஏனெனில், அரசனால் தண்டிக்கப்படுபவனுக்கு அந்தப் பாபம் நீங்கி விடுகிறது. இல்லாவிட்டால் அந்தப் பாபம் அடுத்த பிறவியிலும் தொடரும். அந்தப் பாபப் பயனால் வாழ்க்கையில் இன்னல்களை அடைய வேண்டி வரும்.*

*இந்த உண்மையை உணர்ந்து 'நாம் குற்றம் புரிந்து விட்டோம், அதற்குரிய தண்டனை, அது எவ்வளவு பொறுக்க முடியாததாயினும் இந்த ஜன்மத்திலேயே அனுபவித்து பாபத்தைப் போக்கிக் கொள்ளலாம்,' என்று நினைப்பவன், அரசனிடம் சென்று தான் எப்போது எங்கு எவரிடம் திருடினேன் என்பதைத் தெரியப்படுத்தி, தனக்குத் தண்டனை அளிக்குமாறு வேண்ட வேண்டும்.*

स्कन्धेनाऽऽदाय मुसलं लगुडं वाऽपि खादिरम्।
शक्तिं चोभयतस् तीक्ष्णामायसं दण्डमेव वा॥

**ஸ்கந்தேந ஆதாய முஸலம் லகுடம் வாஅபி காதிரம் |**
**ஷக்திம் சோபயதஸ் தீக்ஷ்ணாமாயஸம் தண்டமேவ வா ||** **315**

*அப்படி அரசனிடம் போகும்போது, இரும்பு உலக்கை, கருங்காலித் தடி, இருமுனையும் கூர்மையாக இருக்கும் கத்தி, வேல் போன்றவற்றில் ஏதேனும் ஒன்றைத் தோளில் சுமந்து செல்ல வேண்டும்.*

शासनाद् वा विमोक्षाद् वा स्तेनः स्तेयाद् विमुच्यते।
अशासित्वा तु तं राजा स्तेनस्याऽऽप्नोति किल्बिषम्॥

**ஷாஸநாத் வா விமோக்ஷாத்வா ஸ்தேந: ஸ்தேயாத் விமுச்யதே |**
**அஷாஸித்வா து தம் ராஜா ஸ்தேநஸ்யா ஆப்நோதி கில்பிஷம் ||** **316**

*அப்படி வரும் திருடனை, அரசன் அவன் கொண்டு வந்த ஆயுதத்தாலேயே அடிக்கச் செய்ய வேண்டும். குற்றத்தின் தன்மையைப் பொறுத்து இறக்கும் வரை அடித்தாலும் சரி, ஓரளவு அடித்துவிட்டு பிழைத்துப் போக விட்டாலும் சரி, அந்தத் திருடனின் பாபம் முழுமையாகத் தொலைந்து விடும்.*

ஆனால், மனந் திருந்தி விட்டானே என்று இரக்கப்பட்டு அரசன் அவனைத் தண்டிக்காமல் விட்டுவிட்டால், அந்தப் பாபம் அரசனை வந்தடையும்.

अन्नादे भ्रूणहा मार्ष्टि पत्यौ भार्यापचारिणी।
गुरौ शिष्यश् च याज्यश् च स्तेनो राजनि किल्बिषम्॥

**அந்நாததே ப்ரூணஹா மார்ஷ்டி பத்யௌ பார்யா அபசாரிணீ |**
**குரௌ சிஷ்யஷ்ச யாஜ்யஷ் ச ஸ்தேநோ ராஜநி கில்பிஷம் ||** 317

பிரம்மஹத்தி செய்தவனுடைய பாபம், அவன் சாப்பாட்டைச் சாப்பிடுபவர்க்கும் போகும்.

கர்ப்பத்தை அழித்தவனுடைய பாபம், அவன் சாப்பாட்டைச் சாப்பிடுபவர்க்கும் போகும்.

மனைவி செய்யும் பாபம் கணவனைச் சேரும்.

சிஷ்யன் செய்யும் பாபம் குருவைச் சேரும்.

யாகம் செய்து வைக்கின்றவனுடைய பாபம், யாகம் செய்விக்கின்ற கர்த்தாவைச் சேரும்.

திருடன் செய்யும் பாபம் அரசனைச் சேரும்.

பிரம்மஹத்தி செய்தவன், கர்ப்பத்தை அழித்தவன் இவர்கள் சாப்பாட்டைச் சாப்பிடாமல், அந்தப் பாபம் தங்களை வந்தடையாமல் பார்த்துக் கொள்ளலாம்.

அடுத்து, மனைவி பாபம் செய்வதைப் பொறுத்துக் கொண்டிராமல் கணவன் அவளைத் தண்டிக்க வேண்டும். இதனால் அந்தப் பாபம் கணவனைச் சேராது.

யாகம் செய்கின்ற கர்த்தாவானவன், யாகத்தைச் செய்து வைக்கின்றவன் செய்கின்ற பிழைகளைப் பொறுத்துக் கொள்ளக் கூடாது; சாஸ்திர விதிகளை அவன் மீறா வண்ணம் கண்டிப்போடு நடந்து கொள்ள வேண்டும். இதனால் யாகம் செய்கின்ற கர்த்தா தன்னைப் பாபம் வந்தடையாமல் காத்துக் கொள்கிறான்.

राजभिः कृतदण्डास् तु कृत्वा पापानि मानवाः।
निर्मलाः स्वर्गमायान्ति सन्तः सुकृतिनो यथा॥

**ராஜபி: க்ருததண்டாஸ் துக்ருத்வா பாபாநி மாநவா: |**
**நிர்மலா: ஸ்வர்கமாயாந்தி ஸந்த: சுக்ருதிநோ யதா ||** 318

குற்றம் புரிந்த மனிதர்கள் மன்னனால் தண்டிக்கப்பட்டால், பாபங்கள் நீங்கியவர்களாக, அவர்களுடைய புண்ணிய பலன்களோடு, நல்லோர்கள் அடையும் சொர்க்கத்தை அடைகிறார்கள்.

यस् तु रज्जु घटं कूपाद्धरेद् भिन्द्याच् च यः प्रपाम्।
स दण्डं प्राप्नुयान् माषं तच् च तस्मिन् समाहरेत्॥

**யஸ்து ரஜ்ஜும் கடம் கூபாத்தரேத் பிந்த்யாச்ச ய:ப்ரபாம் |**
**ஸதண்டம் ப்ராப்நுயாந் மாஷம் தச் ச தஸ்மிந் ஸமாஹரேத் || 319**

தண்ணீரை முகர்ந்தெடுப்பதற்காக கிணற்றடியில் வைக்கப் பட்டிருக்கும் குடத்தை உடைப்பவன், தாம்புக் கயிற்றைத் திருடுபவன், வழியிலுள்ள பந்தல்களைச் சாய்ப்பவன் - இவர்களுக்கு ஒரு பொன் மாஷம் அபராதம் விதிக்க வேண்டும்.

மேலும் அவன் தாம்புக் கயிற்றையும் குடத்தையும் வாங்கிக் கொண்டு வந்து கிணற்றடியில் சேர்ப்பிக்க வேண்டும்.

அழித்த பந்தலை மீண்டும் நிறுவச் செய்ய வேண்டும்.

धान्यं दशभ्यः कुम्भेभ्यो हरतोऽभ्यधिकं वधः।
शेषेऽप्येकादशगुणं दाप्यस् तस्य च तद् धनम्॥

**தான்யம் தஷப்ய: கும்பேப்யோ ஹரதோ அப்யதிகம் வத: |**
**சேஷேஅப்யேகாதஷகுணம் தாப்யஸ் தஸ்ய ச தத் தநம் || 320**

இருநூறு பலம்கள் கொண்டது ஒரு துரோணம் எனப்படும். இருபது துரோணங்கள் கொண்டது ஒரு கும்பம்.

பத்து கும்பங்களுக்கும் அதிகமாக தானியங்களைத் திருடிய வனுக்கு, கசையடி போன்ற உடலைக் காயப்படுத்தும் தண்டனை விதிக்க வேண்டும்.

பொருளுக்கு சொந்தக்காரனுக்கும், எடுத்தவனுக்கும் இடையே யுள்ள உறவை அனுசரித்து தண்டனை விதிக்க வேண்டும்.

பத்து கும்பங்களுக்கும் குறைவான தானியத்தைத் திருடியவனுக்கு, அவன் திருடியதற்கும் மேல் பதினொரு மடங்கு அபராதம் விதிக்க வேண்டும். சொந்தக்காரனிடம் தானியத்தை ஒப்படைக்க வேண்டும்.

तथा धरिममेयानां शतादभ्यधिके वधः।
सुवर्णरजतादीनामुत्तमानां च वाससाम्॥

**ததா தரிமமேயாநாம் ஷதாதப்யதிகே வத: |**
**சுவர்ண ரஜதாதீநா முத்தமாநாம் ச வாஸஸாம் || 321**

அளக்கும் தானியங்களுக்கு விதிக்கப்படுவது போலவே, தராசில் நிறுத்தி எடைபோடும் தங்கம், வெள்ளி முதலானவற்றுக்கும், உயர்ந்த பட்டாடைகளுக்கும் தண்டனை விதிக்க வேண்டும். எடுத்த பொருளின் அளவு, தன்மைகளுக்குத் தக்கபடி அடிப்பது, அங்கங்களை அறுப்பது போன்ற தண்டனைகளை விதிக்க வேண்டும்.

पञ्चाशतस् त्वभ्यधिके हस्तच्छेदनमिष्यते।
शेषे त्वेकादशगुणं मूल्याद् दण्डं प्रकल्पयेत्॥

**பஞ்சாஷதஸ் த்வப்யதிகே ஹஸ்தச்சேதந மிஷ்யதே |**
**சேஷே த்வேகாதஷகுணம் மூல்யாத் தண்டம் ப்ரகல்பயேத் || 322**

அதிக அளவு திருடியவன் கைகளை வெட்ட வேண்டும். சிறிதளவே என்றாலும்கூட திருடியதன் மதிப்புக்கு பதினொரு மடங்கு அபராதம் விதிக்க வேண்டும். திருடிய பொருளையும் கைப்பற்றி சொந்தக்காரனிடம் ஒப்படைக்க வேண்டும்.

पुरुषाणां कुलीनानां नारीणां च विशेषतः।
मुख्यानां चैव रत्नानां हरणे वधमर्हति॥

**புருஷாணாம் குலீநாநாம் நாரீணாம் ச விசேஷத: |**
**முக்யாநாம் ஸ்சைவ ரத்நாநாம் ஹரணே வதமர்ஹதி || 323**

உயர் குலத்து பிறந்த ஆடவர்களையும், பெண்களையும், உயர்ந்த ரத்தினங்களையும் அபகரிப்பவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும்.

महापशूनां हरणे शस्त्राणामौषधस्य च।
कालमासाद्य कार्यं च दण्डं राजा प्रकल्पयेत्॥

**மஹா பசூநாம் ஹரணே ஷஸ்த்ராணா மௌஷதஸ்ய ச |**
**காலமாசாத்ய கார்யம் ச தண்டம் ராஜா ப்ரகல்பயேத் || 324**

உயர்ந்த நாற்கால் பிராணிகளான யானை, குதிரைகளையும், ஆயுதங்களையும், ஔஷதங்களையும் அபகரித்தவனுக்கு என்ன தண்டனை என்று பார்ப்போம்.

முதலில் எந்தக் காலத்தில் என்ன காரணத்துக்காக அதை அபகரித்தான் என்று பார்க்க வேண்டும். அதைப் பொறுத்து தண்டனையை விதிக்க வேண்டும்.

गोषु ब्राह्मणसंस्थासु छुरिकायाश् च भेदने।
पशूनां हरणे चैव सद्यः कार्योऽर्धपादिकः॥

**கோஷு ப்ராஹ்மண ஸம்ஸ்தாசு சூரிகாயாஷ்ச பேதநே |**
**பசூநாம் ஹரணே சைவ ஸத்ய: கார்யோ அர்தபாதிக: || 325**

பிராம்மணர்களுடைய பசுக்களை அபகரித்தவனுக்கும், மலட்டுப் பசுக்களை சுமை சுமப்பதற்காக மூக்கணாங் கயிறு போட்டவனுக்கும், யாகத்துக்குரிய பிராணி எதுவானாலும், அதை அபகரித்தவனுக்கும் முழங்காலை வெட்ட வேண்டும். மேலும் திருடு கொடுத்தவர்களுக்கு அவரவருடையதற்குத் தக்கபடி தொகையைக் கொடுக்க வேண்டும்.

सूत्रकार्पासकिण्वानां गोमयस्य गुडस्य च।
दध्नः क्षीरस्य तक्रस्य पानीयस्य तृणस्य च॥

**சூத்ர கார்பாஸகிண்வாநாம் கோமயஸ்ய குடஸ்ய ச |**
**தத்ந: க்ஷீரஸ்ய தக்ரஸ்ய பாநீயஸ்ய த்ருணஸ்ய ச || 326**

वेणुवैदलभाण्डानां लवणानां तथैव च।
मृन्मयानां च हरणे मृदो भस्मन एव च॥

**வேணுவைதல பாண்டாநாம் லவணாநாம் ததைவ ச |**
**ம்ருந்மயாநாம் ச ஹரணே ம்ருதோ பஸ்மந ஏவச || 327**

मत्स्यानां पक्षिणां चैव तैलस्य च घृतस्य च।
मांसस्य मधुनश् चैव यच् चाऽन्यत् पशुसम्भवम्॥

**மத்ஸ்யாநாம் பக்ஷிணாம் சைவ தைலஸ்ய ச க்ருதஸ்யச |**
**மாம்ஸஸ்ய மதுநஷ் சைவ யச் சாஅந்யத் பசுஸம்பவம் || 328**

अन्येषां चैवमादीनां मद्यानामोदनस्य च।
पक्वाऽन्नानां च सर्वेषां तन्मूल्याद् द्विगुणो दमः॥

**அந்யேஷாம் சைவமாதீநாம் மத்யாநாமோதநஸ்யச |**
**பக்வா அந்நாநாம் ச ஸர்வேஷாம் தந்மூல்யாத் த்விகுணோ தம: || 329**

பஞ்சு பட்டு நூல்கள், பஞ்சு, கஞ்சா, கோமயம், வெல்லம், தயிர், பால், மோர், குடிநீர், புல் இவைகளையும்,

மூங்கில், பிரம்பு முதலானவற்றால் பின்னப்பட்ட கூடைகள், உப்புகள், மண் பாத்திரங்கள், மண், சாம்பல் இவைகளையும்,

மீன்கள், பறவைகள், எண்ணெய், நெய், மாமிசம், தேன், கால்நடைகளிடமிருந்து கிடைக்கும் பொருட்கள் இவைகளையும்,

பலவகையான மதுபான வகைகள், சமைத்த அன்னங்கள் இவைகளையும்,

திருடியவனுக்கு பொருளின் மதிப்புக்கு இருமடங்கு அபராதம் விதிக்க வேண்டும்.

पुष्पेषु हरिते धान्ये गुल्मवल्लीनगेषु च।
अन्येष्वपरिपूतेषु दण्डः स्यात् पञ्चकृष्णलः॥

**புஷ்பேஷு ஹரிதே தாந்யே குல்ம வல்லீநகேஷு ச |**
**அந்யேஷ்வபரிபூதேஷு தண்ட: ஸ்யாத் பஞ்சக்ருஷ்ணல: || 330**

மலர்கள், தானியங்கள், காய்கறிகள், கிழங்குகள், பழங்கள் முதலானவற்றைத் திருடியவனுக்கும் அபராதம் விதிக்க வேண்டும்.

परिपूतेषु धान्येषु शाकमूलफलेषु च।
निरन्वये शतं दण्डः सान्वयेऽर्धशतं दमः॥

**பரிபூதேஷு தாந்யேஷு ஷாகமூலபலேஷுச |**
**நிரந்வயே ஷதம் தண்ட: ஸாஅந்வயே அர்தஷதம் தம: ||** 331

*வேலியிட்டிருக்கும்போது அதைத் தாண்டிப் போய் தானியங் களையும், காய்கறிகளையும், வேர்களையும், பழங்களையும் திருடினால், நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். வேலி யில்லாத இடத்தில் திருடினால், ஐம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

स्यात् साहसं त्वन्वयवत् प्रसभं कर्म यत् कृतम्।
निरन्वयं भवेत् स्तेयं हृत्वाऽपव्ययते च यत्॥

**ஸ்யாத் சாஹஸம் த்வந்வயவத் ப்ரஸபம் கர்ம யத் க்ருதம் |**
**நிரந்வயம் பவேத்ஸ்தேயம் ஹ்ருத்வா அபவ்யயதே ச யத் ||** 332

*தான் அனுபவிப்பதற்காக வைத்துள்ள பொருட்களைத் திருடு பவனுக்கும், வைதிகரிடமிருந்து அக்னியைத் திருடியவனுக்கும் இருநூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். மேலும் சொந்தக்காரனுக்கு நஷ்ட ஈடும் கொடுக்க வேண்டும்.*

यस् त्वेतान्युपक्लृप्तानि द्रव्याणि स्तेनयेन् नरः।
तमाद्यं दण्डयेद् राजा यश् चाऽग्निं चोरयेद् गृहात्॥

**யஸ் த்வேதாந்யுபக்லுப்தாநி த்ரவ்யாணி ஸ்தேநயேந் நர: |**
**தமாத்யம் தண்டயேத் ராஜா யஷ்சாஅக்நிம் சோரயேத் க்ருஹாத் ||** 333

*வைதிக அக்னியைத் திருடியவனுக்கு பிரதமசாகச தண்டமாக அபராதம் விதிக்க வேண்டும்.*

*திருடிய பொருட்களின் தன்மைக்குத் தக்கபடி அரசன் திருடனுக்கு தண்டனை விதிக்க வேண்டும்.*

येनयेन यथाऽङ्गेन स्तेनो नृषु विचेष्टते।
तत्तदेव हरेत् तस्य प्रत्यादेशाय पार्थिवः॥

**யேநயேந யதாஅங்கேந ஸ்தேநோ ந்ருஷு விசேஷ்டதே |**
**தத்ததேவ ஹரேத் தஸ்ய ப்ரத்யாதேஷாய பார்திவ: ||** 334

*எந்தெந்த அங்கங்களால் குற்றங்களைச் செய்தானோ, அந்த அந்த அங்கங்களை (பெரிய குற்றமாகச் செய்திருப்பின்) வெட்ட வேண்டும்.*

पिताऽऽचार्यः सुहृन् माता भार्या पुत्रः पुरोहितः।
नाऽदण्ड्यो नाम राज्ञोऽस्ति यः स्वधर्मे न तिष्ठति॥

**பிதா ஆசார்ய: சுஹ்ருந்மாதா பார்யாபுத்ர: புரோஹித: |**
**நா அதண்ட்யோ நாமராக்ஞோ அஸ்திய: ஸ்வதர்மேந திஷ்டதி ||** 335

*அரசன், தன்னுடைய தந்தை, தாய், நண்பன், ஆசார்யன், மனைவி, மகன், புரோஹிதன் முதலானோர் தவறு செய்தாலும் அவர்களையும் தண்டிக்கவே வேண்டும்.*

कार्षापणं भवेद् दण्ड्यो यत्राऽन्यः प्राकृतो जनः।
तत्र राजा भवेद् दण्ड्यः सहस्रमिति धारणा॥

**கார்ஷா பணம் பவேத் தண்ட்யோ யத்ரா அந்ய: ப்ராக்ருதோ ஜந: |**
**தத்ர ராஜா பவேத் தண்ட்ய: ஸஹஸ்ரமிதி தாரணா ||** 336

*பிறர் செய்த எந்தக் குற்றத்துக்கு ஒரு கார்ஷா பணம் அபராதம் விதிக்கப்படுமோ, அதே குற்றத்தை அரசன் செய்தால், ஆயிரம் மடங்கு அபராதம் விதிக்க வேண்டும்.*

*அதாவது, எந்தத் தண்டனையானாலும் சாதாரண மனிதனுக்கு விதிக்கப்படுவதைப் போல, அதே குற்றத்துக்கு ஆயிரம் மடங்கு தண்டனை அரசனுக்கு விதிக்கப்பட வேண்டும்.*

अष्टापाद्यं तु शूद्रस्य स्तेये भवति किल्बिषम्।
षोडशैव तु वैश्यस्य द्वात्रिंशत् क्षत्रियस्य च॥

**அஷ்டாபாத்யம் து சூத்ரஸ்ய ஸ்தேயே பவதி கில்பிஷம் |**
**ஷோடஶைவ து வைஸ்யஸ்ய த்வாத்ரிம்ஷத் க்ஷத்ரியஸ்ய ச ||** 337

*திருடனுக்கு என்று பொதுவாக விதிக்கப்பட்ட தண்டனைகளைப் பார்த்தோம். திருட்டினால் வரும் தீமைகளை அறிந்து திருடியவன் சூத்திரனாக இருப்பின், அந்தத் தண்டனை எட்டு மடங்காக விதிக்கப்பட வேண்டும்.*

*அவ்வாறே வைசியனாக இருப்பின், பதினாறு மடங்கு தண்டனை விதிக்கப்பட வேண்டும்.*

*க்ஷத்திரியனாயின், முப்பத்திரண்டு மடங்கு தண்டனை விதிக்கப்பட வேண்டும்.*

ब्राह्मणस्य चतुःषष्टिः पूर्णं वाऽपि शतं भवेत्।
द्विगुणा वा चतुःषष्टिस् तद्दोषगुणविद् धि सः॥

**ப்ராஹ்மணஸ்ய சது:சஷ்டி: பூர்ணம் வாஅபி ஷதம் பவேத் |**
**த்விகுணா வா சது:சஷ்டிஸ் தத்தோஷ குணவித் திஸ: ||** 338

பிராம்மணனுக்கு அறுபத்து நான்கு மடங்கோ, நூறு மடங்கோ தண்டனை விதிக்கப்பட வேண்டும். அதற்கும் மேல் நூற்றியிருபத்தெட்டு மடங்கும்கூட தண்டனையளிக்கலாம்.

திருட்டின் பாப புண்ணியங்களை அறிந்தவன் பிராம்மணன். அவனே பாபத்துக்கு அஞ்சாமல் திருடுவானாயின், அவனை இப்படிப் பலப்பல மடங்கு தண்டிப்பதே தகும்.

वानस्पत्यं मूलफलं दार्वग्न्यर्थं तथैव च।
तृणं च गोभ्यो ग्रासार्थमस्तेयं मनुरब्रवीत्॥

**வாநஸ்பத்யம் மூலபலம் தார்வக்ந்யர்தம் ததைவ ச |**
**த்ருணம் ச கோப்யோ க்ராஸார்தமஸ்தேயம் மநுரப்ரவீத் || 339**

சுற்றிலும் வேலியிடாத இடத்திலுள்ள மரங்களிலிருந்து பழங்களை, கிழங்குகளை எடுத்தால் அது திருட்டாகாது. அவ்வாறே வேலியிடாத இடத்திலிருந்து ஹோமத்துக்காக சமித்துகளையும், பசுக்களுக்காக புல்லையும் எடுத்துக்கொண்டு போகிறவனை திருடன் என்று கூறக் கூடாது. அது திருட்டுத்தனமல்ல என்று மனு பகவான் கூறியுள்ளார்.

योऽदत्ताऽऽदायिनो हस्ताल् लिप्सेत ब्राह्मणो धनम्।
याजनाऽध्यापनेनाऽपि यथा स्तेनस् तथैव सः॥

**யோ அதத்தா ஆதாயிநோ ஹஸ்தால்லிப்ஸேத ப்ராஹ்மணோதநம் |**
**யாஜநா அத்யாபநேநாஅபி யதா ஸ்தேநஸ் ததைவஸ: || 340**

ஒரு பொருளை சொந்தக்காரன் கொடுக்காமல் தானே எடுத்துக் கொண்டு, தன் இஷ்டத்துக்கு அதை செலவழிப்பவன் திருடனே யல்லவா? இத்தகையவனுக்கு யக்ஞங்களை செய்து கொடுத்து, அவன் தரும் தட்சிணைகளைப் பெற்றுக்கொள்ளும் பிராம்மணனும் திருடனேயாவான். ஏனெனில், தெரிந்தே அவன் பெறும் தட்சிணை திருட்டால் வந்ததல்லவா?

द्विजोऽध्वगः क्षीणवृत्तिर् द्वाविक्षू द्वे च मूलके।
आददानः परक्षेत्रान् न दण्डं दातुमर्हति॥

**த்விஜோ அத்வக: க்ஷீணவ்ருத்திர் த்வாவிக்ஷூத்வே ச மூலகே |**
**ஆததாந: பரக்ஷேத்ராந் நதண்டம் தாதுமர்ஹதி || 341**

வழிப்போக்கனான பிராம்மணனோ, க்ஷத்திரியனோ, வைசியனோ, வழியில் இரண்டு கரும்புகளையோ அல்லது இரண்டு கிழங்கு களையோ எடுத்துக் கொண்டால் அது திருட்டாகாது. அது அயலானுடைய தோட்டம், கேட்காமல் எடுத்தது தவறு என்று கூறக்கூடாது. அவனுக்கு எந்தத் தண்டனையும் இல்லை.

असन्दितानां सन्दाता सन्दितानां च मोक्षकः।
दासा-ऽश्व-रथहर्ता च प्राप्तः स्याच् चौरकिल्बिषम्॥

**அஸந்திதாநாம் ஸந்தாதா ஸந்திதாநாம் சமோக்ஷக: |**
**தாஸா அஷ்வ ரதஹர்தா சப்ராப்த: ஸ்யாச் சௌரகில்பிஷம் || 342**

பிறருடைய குதிரைகள், காளைகள் போன்றவை யதேச்சையாகத் திரிந்து கொண்டிருந்தால், அவற்றைப் பிடித்துக் கட்டுதல், கட்டப்பட்டிருக்கும் குதிரைகளையும், காளைகளையும் அவிழ்த்து விடுதல் போன்ற காரியங்களைச் செய்பவன், ரதம், குதிரைகளைத் திருடுபவன், பிறனுடைய வேலைக்காரனை அபகரித்துக் கொண்டு போய் தான் வைத்துக் கொள்பவன் - இத்தகையோருக்கு திருடனுக்குரிய தண்டனையே வழங்க வேண்டும்.

अनेन विधिना राजा कुर्वाणः स्तेननिग्रहम्।
यशोऽस्मिन् प्राप्नुयाल् लोके प्रेत्य चाऽनुत्तमं सुखम्॥

**அநேந விதிநா ராஜா குர்வாண: ஸ்தேநநிக்ரஹம் |**
**யஷோ அஸ்மிந் ப்ராப்நுயால்லோகே ப்ரேத்ய சாஅநுத்தமம் சுகம் || 343**

இவ்வாறாக அரசன் திருடர்களைத் தண்டித்து ஒடுக்கினால், இவ்வுலகில் புகழையும் மேலுலகில் மிக உத்தமமான சுகத்தையும் அடைவான்.

ऐन्द्रं स्थानमभिप्रेप्सुर् यशश् चाऽक्षयमव्ययम्।
नोपेक्षेत क्षणमपि राजा साहसिकं नरम्॥

**ஐந்த்ரம் ஸ்தாநமபிப்ரேப்சுர் யஷஷ் சாஅக்ஷயமவ்யயம் |**
**நோபேக்ஷேத க்ஷணமபி ராஜா ஸாஹஸிகம் நரம் || 344**

சொர்க்கத்தை அடைந்து, தேவேந்திரனைப் போன்று சுகங்களை அனுபவித்துக் கொண்டு அளவற்ற அழியாத புகழோடு ஒரு அரசன் இருக்க முடியும். அதற்கு அவன் சற்றும் அலட்சியமின்றி உடனடியாக குற்றவாளிகளைப் பிடித்துத் தண்டிக்க வேண்டும்.

वाग्दुष्टात् तस्कराच् चैव दण्डेनैव च हिंसतः।
साहसस्य नरः कर्ता विज्ञेयः पापकृत्तमः॥

**வாக்துஷ்டாத் தஸ்கராச்சைவ தண்டேநைவ ச ஹிம்ஸத: |**
**சாஹஸஸ்ய நர: கர்தா விஞேய: பாபக்ருத்தம: || 345**

வசை மொழிதல், திருடுதல், அடித்தல் முதலான குற்றங்களைச் செய்பவனைவிட பலாத்காரம் செய்பவன் பெரும் பாபி என்பதை அறிய வேண்டும்.

साहसे वर्तमानं तु यो मर्षयति पार्थिवः।
स विनाशं व्रजत्याशु विद्वेषं चाऽधिगच्छति॥

ஸாஹஸே வர்தமாநம் துயோ மர்ஷயதி பார்திவ: |
ஸ விநாஷம் வ்ரஜத்யாஷு வித்வேஷம் சா அதிகச்சதி || 346

பலாத்காரம் செய்பவனை தண்டிக்காத அரசன் அழிவை அடைவான். மக்களுடைய வெறுப்புக்கும் ஆளாவான்.

न मित्रकारणाद् राजा विपुलाद् वा धनाऽऽगमात्।
समुत्सृजेत् साहसिकान् सर्वभूतभयाऽऽवहान्॥

நமித்ர காரணாத் ராஜா விபுலாத் வாதநா ஆகமாத் |
ஸமுத்ஸ்ருஜேத் ஸாஹஸிகாந் ஸர்வபூதபயா ஆவஹாந் || 347

நண்பனின் காரணமாகவோ, அதிக செல்வம் கிட்டும் என்பதற்காகவோ பலாத்காரம் செய்பவர்களை தண்டிக்காமல் விடக்கூடாது. இவர்கள் ஒருவர் இருவருக்கல்ல, சகல ஜீவன்களுக்கும் நடுக்கத்தைக் கொடுக்கக்கூடிய பயங்கரமானவர்கள். இவர்களைத் தண்டித்து ஒடுக்க வேண்டும்.

शस्त्रं द्विजातिभिर् ग्राह्यं धर्मो यत्रोपरुध्यते।
द्विजातीनां च वर्णानां विप्लवे कालकारिते॥

ஷஸ்த்ரம் த்விஜாதிபிர் க்ராஹ்யம் தர்மோ யத்ரோபருத்யதே |
த்விஜாதீநாம் ச வர்ணாநாம் விப்லவே காலகாரி தே || 348

आत्मनश् च परित्राणे दक्षिणानां च सङ्गरे।
स्त्रीविप्राऽभ्युपपत्तौ च घ्नन् धर्मेण न दुष्यति॥

ஆத்மநஷ்ச பரித்ராணே தக்ஷிணாநாம் ச ஸங்கரே |
ஸ்த்ரீவிப்ரா அப்யுபபத்தௌ ச க்நந்தர்மேண ந துஷ்யதி || 349

பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்ரன் என்னும் நான்கு வர்ணத்தாரும், பிரம்மச்சாரி, கிருகஸ்தன், வானப்ரஸ்தன், சந்யாசி என்னும் நான்கு ஆசிரமத்தாரும் தத்தம் சுயதர்மங்களை, அவரவர் கடமைகளைச் செய்ய இயலாது போகும் போதும்,

- ராஜ்ஜியத்தில் அராஜகம் அநியாயம் திலைவிரித்தாடும் போதும்,

- எதிரி நாட்டு மன்னர்கள் படையெடுத்து வந்த காலத்தில் பெண்களைக் காப்பாற்றுவதற்காகவும்,

- தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்வதற்காகவும்,

அனைவரும் ஆயுதமேந்தி எதிரிகளை அழிக்கலாம்.

गुरुं वा बालवृद्धौ वा ब्राह्मणं वा बहुश्रुतम्।
आततायिनमायान्तं हन्यादेवाऽविचारयन्॥

**குரும் வா பலவ்ருத்தௌ வா ப்ராஹ்மணம் வா பஹுஸ்ருதம் |**
**ஆததாயிநமாயாந்தம் ஹந்யா தேவா அவிசாரயந் || 350**

*குரு, சிறுவன், வயோதிகன், வேதமோதிய பிராம்மணன் இவர்களைக் கொல்ல வருகின்ற ஆததாயியை சற்றும் யோசிக்காமல் கொல்ல வேண்டும்.*

नाऽऽततायिवधे दोषो हन्तुर् भवति कश्चन।
प्रकाशं वाऽप्रकाशं वा मन्युस् तं मन्युमृच्छति॥

**நா ஆததாயிவதே தோஷோ ஹந்துர் பவதி கஷ்சந |**
**ப்ரகாசம் வாஅப்ரகாசம் வா மந்யுஸ்தம் மந்யும்ருச்சதி || 351**

*ஆததாயியைக் கொல்வதில் எந்தப் பாபமும் ஏற்படாது. பிறர் அறியக் கொன்றாலும் சரி, எவரும் அறியாமல் கொன்றாலும் சரி, அது சரியான காரியம் செய்ததாகவே ஆகும்.*

परदाराऽभिमर्शेषु प्रवृत्तान् नॄन् महीपतिः।
उद्वेजनकरैर् दण्डैश् चिह्नयित्वा प्रवासयेत्॥

**பரதாரா அபிமர்ஷேஷு ப்ரவ்ருத்தாந் ந்ருந் மஹீபதி: |**
**உத்வேஜநகரைர் தண்டைஷ் சிஹ்நயித்வா ப்ரவாஸயேத் || 352**

*பிறர் மனைவியை நாடுபவனுக்குக் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டும். அந்தத் தண்டனையைப் பார்த்து அச்சப்பட்டு எவரும் அந்தக் குற்றத்தை மனத்தாலும் நினைக்கக்கூடாது.*

*பிறர் மனைவியை நாடியவன் உதடு, மூக்கு முதலானவைகளை அறுக்க வேண்டும். நாட்டை விட்டே ஓட்ட வேண்டும்.*

तत्समुत्थो हि लोकस्य जायते वर्णसङ्करः।
येन मूलहरोऽधर्मः सर्वनाशाय कल्पते॥

**தத்ஸமுத்தோஹி லோகஸ்ய ஜாயதே வர்ணஸங்கர: |**
**யேந மூலஹரோதர்ம: ஸர்வநாஷாய கல்பதே || 353**

*பிற வர்ணத்து பெண்களை மணப்பதால் கலப்பு இனங்கள் ஏற்படும். கலப்பு இனங்கள் பெருகிப் போவதால், கலப்பற்ற தூய வர்ணத்தவர்கள் குறைந்து போவார்கள்.*

*கலப்பற்ற தூய பிராம்மணர்கள் இல்லாத போது தேசத்தின் க்ஷேமத்துக்காகவும், தர்மம் செழிப்பதற்காகவும் செய்யும் யாக யக்ஞங்கள் இல்லாது போகும். யாக யக்ஞங்கள் நல்லபடி நடவாது*

போனால் தேவர்கள் பூமிக்கு மழையைக் கொடுக்க மாட்டார்கள். மழையில்லாது பஞ்சமேற்பட்டால், நாட்டில் கொலை கொள்ளை முதலான மாபாதகச் செயல்கள் எங்கும் தலைவிரித்தாடும். தர்மம் அடியோடு அழிந்து விடும்.

கலப்பற்ற தூய க்ஷத்திரியர்கள் இல்லாதபோது, படை வீரர்கள் குறைந்து போவார்கள். வீரம் நிறைந்த படைவீரர்கள் இல்லாதபோது, அரசனுக்கு வேறு எல்லாம் இருந்தாலும் ஒரு பயனும் இல்லை.

யானை இருந்தென்ன பயன்? குதிரை இருந்தென்ன பயன்?

களஞ்சியம் நிறைந்திருந்தாலும், பொக்கிஷம் நிறைந்திருந் தாலும் ஒரு பயனுமில்லை. பகைவர்கள் வெகு எளிதில் இத்தகைய நாட்டைக் கைப்பற்றி விடுவார்கள்.

இதே போன்று வாணிப தர்மமும் இருக்காது. வாணிபம் செய்பவர்களுக்கு க்ஷத்திரியர்கள்தான் பாதுகாப்பளிப்பார்கள். க்ஷத்திரியர்கள் குறைந்து போனால் வாணிபம் செய்பவர்களின் விலையுயர்ந்த பொருட்கள் அத்தனையும் கொள்ளை போகும். வணிகர்களின் உயிருக்கும் பாதுகாப்பில்லை. விலை கொடுத்து வாங்குவார் இருக்க மாட்டார்கள். பலாத்காரமாகக் கொள்ளை யடிக்கும் கொள்ளைக்காரனே பெரிய தனிகனாக இருப்பான்.

இனி சூத்திரனின் நிலையை சொல்லவும் வேண்டுமா? அவன் உழைப்புக்குக் கூலி கிடைக்காது.

கொள்ளைக்காரர்களின் அடிமையாக, கொடும் பாபிகளின் கைப்பாவையாக, தன் வீட்டுப் பெண்களுக்கு பாதுகாப்பளிக்க முடியாதவனாக சீரழிவான்.

மொத்தத்தில் தர்மம் வேரோடு அழியும். அதனால் நாடு மொத்தமாக அழியும்.

**परस्य पत्न्या पुरुषः सम्भाषां योजयन् रहः।**
**पूर्वमाक्षारितो दोषैः प्राप्नुयात् पूर्वसाहसम्॥**

**பரஸ்ய பத்ந்யா புருஷ: ஸம்பாஷாம் யோஜயந் ரஹ: |**
**பூர்வமாக்ஷாரிதோ தோஷை: ப்ராப்னுயாத் பூர்வஸாஹஸம் ||** **354**

ஒருவன் இன்னொருவன் மனைவியுடன் தனித்துப் பேசினால், அந்த ஆணின் நடத்தை மீது ஏற்கெனவே மற்றவர்களுக்கு சந்தேகமும் இருக்குமானால், அந்த ஆணுக்கு இருநூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

यस् त्वनाक्षारितः पूर्वमभिभाषेत कारणात्।
न दोषं प्राप्नुयात् किञ्चिन् न हि तस्य व्यतिक्रमः॥

**யஸ் த்வநாக்ஷாரித: பூர்வமபிபாஷேத காரணாத் |**
**நதோஷம் ப்ராப்னுயாத் கிஞ்சித் நஹிதஸ்ய வ்யதிக்ரம: ||** **355**

இதற்கு முன் சந்தேகத்துக்கு ஆட்படாத ஒருவன், பொது இடத்தில் வைத்து பிறர் முன்னிலையில் பிறன் மனைவியிடம் பேசினால், அந்தப் பெண்ணை அடையும் நோக்கத்தோடு பேசும் தீயவன் அல்ல அவன். எனவே, அவனுக்குச் சிறிதும் பாபம் இல்லை. எந்தத் தண்டனைக்கும் உரியவனுமல்லன்.

परस्त्रियं योऽभिवदेत् तीर्थेऽरण्ये वनेऽपि वा।
नदीनां वाऽपि सम्भेदे स सङ्ग्रहणमाप्नुयात्॥

**பரஸ்த்ரியம்யோ அபிவதேத் தீர்த்தே அரண்யேவனே அபி வா |**
**நதீநாம் வாஅபி ஸம்பேதேஸ ஸங்க்ரஹணமாப்நுயாத் ||** **356**

குளக்கரை, ஏரிக்கரைகளிலோ, ஆளரவமற்ற காட்டிலோ, பழ மரங்களும் மலர் மரங்களுமாக அடர்ந்திருக்கின்ற வனத்திலோ, நதிக்கரையிலோ ஒருவன் தனிமையில் பிற பெண்ணிடம் பேசினால், அவன் இதற்கு முன் எந்தச் சந்தேகத்துக்கும் ஆட்படாதவனாயினும், அவன் காரணத்தோடு பேசியவனாயினும்கூட, அவனுக்கு ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

उपचारक्रिया केलिः स्पर्शो भूषणवाससाम्।
सह खट्वाऽऽसनं चैव सर्वं सङ्ग्रहणं स्मृतम्॥

**உபசாரக்ரியா கேளி: ஸ்பர்ஷோ பூஷணவாஸஸாம் |**
**ஸஹகட்வா ஆஸநம் சைவஸர்வம் ஸங்க்ரஹம் ஸ்ம்ருதம் ||** **357**

ஒரு பெண்ணுக்கு, அவளுக்குப் பிடித்தமானவற்றைக் கொண்டு வந்து கொடுத்து சாப்பிடச் சொல்வது, கேளிக்கைகளில் ஈடுபடுவது, தொடுவது, அணிகலன்களை அளிப்பது, ஆடைகளை அளிப்பது, ஒரே கட்டிலில் அமர்வது முதலானவை அந்தப் பெண்ணைத் தன் வலையில் வீழ்த்தி அவளை அபகரிப்பதற்கான வழி என்று கூறப்படுகிறது.

स्त्रियं स्पृशेददेशे यः स्पृष्टो वा मर्षयेत् तया।
परस्परस्याऽनुमते सर्वं सङ्ग्रहणं स्मृतम्॥

**ஸ்த்ரியம் ஸ்ப்ருஷேததேஷே ய: ஸ்ப்ருஷ்டோவா மர்ஷயேத் தயா |**
**பரஸ்பரஸ்யா அனுமதே ஸர்வம் ஸங்க்ரஹணம் ஸ்ம்ருதம் ||** **358**

எவன், ஒரு பெண்ணைத் தொடத்தகாத இடத்தில் தொடுகிறானோ, எவன் ஒரு பெண் தன்னைத் தொடத்தகாத இடத்தில் தொடுவதற்கு அனுமதிக்கிறானோ, அவனும் அவளும் நிச்சயமாக தகாத தொடர் புடையவர்களே ஆவர்.

अब्राह्मणः सङ्ग्रहणे प्राणान्तं दण्डमर्हति।
चतुर्णामपि वर्णानां दारा रक्ष्यतमाः सदा॥

**அப்ராஹ்மண: ஸங்க்ரஹணே ப்ராணாஅந்தம் தண்டமர்ஹதி |**
**சதுர்ணாமபி வர்ணாநாம் தாரா ரக்ஷ்யதமா: ஸதா ||** 359

பிராம்மணனல்லாத ஒருவன் பிராம்மணப் பெண்ணை அடைய நினைத்தால் அவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும்.

பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களான நான்கு வர்ணத் தாருமே தங்கள் மனைவியரை எப்போதும் பிறரிடமிருந்து ரட்சிக்க வேண்டும்.

भिक्षुका बन्दिनश् चैव दीक्षिताः कारवस् तथा।
सम्भाषणं सह स्त्रीभिः कुर्युरप्रतिवारिताः॥

**பிக்ஷுகா பந்திநஷ்சைவ தீக்ஷிதா: காரவஸ் ததா |**
**ஸம்பாஷணம் ஸஹ ஸ்த்ரீபி: குர்யுரப்திவாரிதா: ||** 360

பிச்சையெடுப்பவர்களும், துதிபாடும் வந்திகளும், யக்ஞ தீட்சை வகித்தவர்களும், சமையல்காரர்களும் பெண்களுடன் தடையற்றுப் பேசலாம்.

न सम्भाषां परस्त्रीभिः प्रतिषिद्धः समाचरेत्।
निषिद्धो भाषमाणस् तु सुवर्णं दण्डमर्हति॥

**நஸம்பாஷாம் பரஸ்த்ரீபி: ப்ரதிஷித்த: ஸமாசரேத் |**
**நிஷித்தோ பாஷமாணஸ்து சுவர்ணம் தண்டமர்ஹதி ||** 361

பிற பெண்ணுடன் பேசக்கூடாது என்று ஏற்கெனவே எச்சரிக்கப் பட்டவன், அதை மீறிப் பேசினால் ஒரு பொன் அபராதம் விதிக்க வேண்டும்.

नैष चारणदारेषु विधिर् नाऽऽत्मोपजीविषु।
सज्जयन्ति हि ते नारीर् निगूढाश् चारयन्ति च॥

**நைஷ சாரணதாரேஷு விதிர் நாஆத்மோபஜீவிஷு |**
**ஸஜ்ஜயந்தி ஹி தே நாரீர் நிகூடாஷ் சாரயந்தி ச ||** 362

வேசி மனைவியைக் கொண்டு ஜீவனம் நடத்தும் கணவர்கள் உண்டு. இதுவரை சொன்ன நீதி இத்தகைய பெண்களுக்கல்ல.

இவர்களைப் பிறர் மனைவியர் என்று கொள்ளத் தேவையில்லை. இத்தகையவர்களிடம் பேசுபவருக்கும் பழகுபவருக்கும் எந்தத் தண்டனையும் இல்லை.

किञ्चिदेव तु दाप्यः स्यात् सम्भाषां ताभिराचरन्।
प्रेष्यासु चैकभक्तासु रहः प्रव्रजितासु च॥

**கிஞ்சிதேவலு தாப்ய: ஸ்யாத் ஸம்பாஷாம் தாபிராசரந் |**
**ப்ரேஷ்யாசு சைகபக்தாசுரஹ: ப்ரவ்ரஜிதாசு ச || 363**

யாருமற்ற இடத்தில் பணிப்பெண்கள் போன்றோரிடம் பேசினால் சிறிதளவு அபராதம் விதிக்க வேண்டும்.

योऽकामां दूषयेत् कन्यां स सद्यो वधमर्हति।
सकामां दूषयंस् तुल्यो न वधं प्राप्नुयान् नरः॥

**யோ அகாமாம் தூஷயேத் கந்யாம் ஸ ஸத்யோ வதமர்ஹதி |**
**ஸகாமாம் தூஷயம்ஸ்துல்யோ ந வதம் ப்ராப்னுயாந் நர: || 364**

தன்னை விரும்பாத பெண்ணை பலாத்காரமாக அடைபவனுக்கு உடனடியாக மரண தண்டனை விதிக்க வேண்டும். பெண்ணும் விரும்பியிருந்தால் இந்தத் தண்டனை கிடையாது.

कन्यां भजन्तीमुत्कृष्टं न किञ्चिदपि दापयेत्।
जघन्यं सेवमानां तु संयतां वासयेद् गृहे॥

**கந்யாம் பஜந்தீமுத் க்ருஷ்டம் ந கிஞ்சிதபி தாபயேத் |**
**ஜகந்யம் ஸேவமாநாம் து ஸம்யதாம் வாஸயேத் க்ருஹே || 365**

ஒரு பெண் தன்னைவிட உயர் குலத்தானை மணக்க நினைத்தால் அது தவறல்ல, அவளுக்கு தண்டனை எதுவும் இல்லை. ஆனால், உயர் குலத்துப் பெண் தன்னைவிட தாழ்ந்தவனை மணக்க விரும்பினால் அது சரியல்ல. அவளை அடக்கி வீட்டுக்குள்ளேயே வைத்திருக்க வேண்டும்.

उत्तमां सेवमानस् तु जघन्यो वधमर्हति।
शुल्कं दद्यात् सेवमानः समामिच्छेद् पिता यदि॥

**உத்தமாம் ஸேவமாநஸ் து ஜகந்யோ வதமர்ஹதி |**
**ஷுல்கம் தத்யாத் ஸேவமாந: ஸமாமிச்சேத் பிதா யதி || 366**

மேற்குலத்துப் பெண்ணை அடைந்தவன் தண்டனைக்குரியவன். தன் குலத்துப் பெண்ணையே அடைந்தவனாயின் பெண்ணின் தந்தை விரும்பினால் அவனுக்குப் பரிசத் தொகை அளித்து தன் மாப்பிள்ளையாக ஏற்கலாம்.

अभिषह्य तु यः कन्यां कुर्याद् दर्पेण मानवः।
तस्याऽऽशु कर्त्ये अङ्गुल्यौ दण्डं चाऽर्हति षट्शतम्॥

**அபிஷஹ்ய து ய: கந்யாம் குர்யாத் தர்பேண மாநவ: |**
**தஸ்யா ஆஷு கர்த்யே அங்குல்யௌ தண்டம் சா அர்ஹதி ஷட்ஷதம் || 367**

ஒரு ஆண் தன் குலத்துப் பெண்ணையேகூட பலாத்காரமாக தன் விரல்களைக் கொண்டு மர்ம ஸ்தானத்தில் துன்புறுத்தினால், துன்புறுத்திய இரண்டு விரல்களையும் வெட்ட வேண்டும். மேலும் அறுநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

सकामां दूषयंस् तुल्यो नाऽङ्गुलिच्छेदमाप्नुयात्।
द्विशतं तु दमं दाप्यः प्रसङ्गविनिवृत्तये॥

**ஸகாமாம் தூஷயம்ஸ் துல்யோ நா அங்குலிச்சேத மாப்நுயாத் |**
**த்விஷதம் து தமம் தாப்ய: ப்ரஸங்க விநிர்வ்ருத்தயே || 368**

பலாத்காரமாக அல்லாமல், விரும்பி வந்த பெண்ணிடம் இவ்வாறு நடந்து கொண்டால், மீண்டும் அவன் அவ்வாறு நடக்காமலிருக்கும் பொருட்டு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

कन्यैव कन्यां या कुर्यात् तस्याः स्याद् द्विशतो दमः।
शुल्कं च द्विगुणं दद्याच् छिफास् चैवाऽऽप्नुयाद् दश॥

**கந்யைவ கந்யாம் யா குர்யாத் தஸ்யா: ஸ்யாத் த்விஷதோ தம: |**
**ஷுல்கம் சத்விகுணம் தத்யாச்சிபாஷ் சைவா ஆப்னுயாத் தஷ || 369**

எந்தக் கன்னிப் பெண்ணாவது, மற்றொரு கன்னிப் பெண்ணை இவ்வாறு துன்புறுத்தினால், அவளுக்கு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். பெண்ணின் தந்தை கேட்கும் பரிசத் தொகைக்கு இரு மடங்கு தொகையை இவளிடமிருந்து வாங்கி அந்தத் தந்தையிடம் கொடுக்க வேண்டும். மேலும் ஆலம் விழுதுகளைக் கொண்டு அவளுக்கு பத்து அடிகள் கொடுக்க வேண்டும்.

या तु कन्यां प्रकुर्यात् स्त्री सा सद्यो मौण्ड्यमर्हति।
अङ्गुल्योरेव वा छेदं खरेणोद्वहनं तथा॥

**யாது கந்யாம் ப்ரகுர்யாத் ஸ்த்ரீ ஸர ஸத்யோ மௌண்ட்யமர்ஹதி |**
**அங்குல்யோரேவ வா சேதம் கரேணோத்வஹநம் ததா || 370**

எந்தக் கன்னிப் பெண்ணையாவது, ஒரு பெண் இவ்வாறு துன்புறுத்தினால், அவளை மொட்டையடித்து, இரண்டு விரல் களையும் வெட்டி, கழுதை மேலேற்றி தெருத் தெருவாகக் கொண்டு போக வேண்டும்.

भर्तारं लङ्घयेद् या तु स्त्री ज्ञातिगुणदर्पिता।
तां श्वभिः खादयेद् राजा संस्थाने बहुसंस्थिते॥

**பர்தாரம் லங்கயேத் யா துஸ்த்ரீ ஞாதிகுணதர்பிதா |**
**தாம் ஷ்வபி: காதயேத் ராஜா ஸம்ஸ்தாநே பஹுஸம்ஸ்திதே || 371**

*ஒரு பெண் தான் பணக்கார இடத்துப் பெண் என்ற கர்வத்தாலோ, தான் பேரழகி என்ற கர்வத்தாலோ, தன் கணவனை அலட்சியப்படுத்தி, பிற ஆண் சேர்க்கை கொண்டால், அரசன் பலர் கூடியுள்ள இடத்தில் அவளை நிறுத்தி அவள் மீது நாயை ஏவி கடிக்கச் செய்ய வேண்டும்.*

पुमांसं दाहयेत् पापं शयने तप्त आयसे।
अभ्यादध्युश् च काष्ठानि तत्र दह्येत पापकृत्॥

**புமாம்ஸம் தாஹயேத் பாபம் ஷயநே தப்த ஆயஸே |**
**அப்யாதத்யுஷ் ச காஷ்டாநி தத்ர தஹ்யேத பாபக்ருத் || 372**

*அந்தப் பெண்ணிடம் தகாத உறவு கொண்ட ஆணை தகதகவென காய்ச்சின இரும்புப் பலகையில் படுக்க வைத்து அவன் மீது விறகுகளைப் போட்டு அந்த நெருப்பில் அவன் சாகுமாறு செய்ய வேண்டும்.*

संवत्सराऽभिशस्तस्य दुष्टस्य द्विगुणो दमः।
व्रात्यया सह संवासे चाण्डाल्या तावदेव तु॥

**ஸம்வத்ஸரா அபிஷஸ்தஸ்ய துஷ்டஸ்ய த்விகுணோ தம: |**
**வ்ராத்யயா ஸஹ ஸம்வாஸே சாண்டால்யா தாவதேவ து || 373**

*பிறன் மனைவியை மோகித்ததால் தண்டனை பெற்றவன், ஓராண்டுக்குள் மீண்டும் அதே குற்றத்தைச் செய்தால், தண்டனையை இரு மடங்காக்க வேண்டும்.*

*சண்டாளப் பெண்ணை அடைந்தவனுக்கு சமமான தண்டனையைக் கொடுக்க வேண்டும்.*

शूद्रो गुप्तमगुप्तं वा द्वैजातं वर्णमावसन्।
अगुप्तमङ्गसर्वस्वैर् गुप्तं सर्वेण हीयते॥

**சூத்ரோ குப்தமகுப்தம் வாத்வைஜாதம் வர்ணமாவஸந் |**
**அகுப்தமங்கஸர்வஸ்வைர் குப்தம் ஸர்வேண ஹீயதே || 374**

*கணவனால் காப்பாற்றப்படும் பெண்ணாக இருந்தாலும் அல்லது கணவனால் கைவிடப்பட்ட பெண்ணாக இருந்தாலும், பிராம்மண, க்ஷத்திரிய, வைசியப் பெண்ணை ஒரு சூத்திரன்*

பலாத்காரமாக அடைந்தால், அவனுக்களிக்க வேண்டிய தண்டனை என்ன?

கணவனால் கைவிடப்பட்ட பெண்ணாக இருந்தால், அவனது லிங்க உறுப்பை வெட்டியெறிய வேண்டும். அவனுடைய சொத்து முழுவதையும் பறிமுதல் செய்ய வேண்டும்.

கணவனால் காப்பாற்றப்படும் பெண்ணாக இருந்தால், அவன் உடலை துண்டங்களாக வெட்டியெறிய வேண்டும். அவன் சொத்தையும் அரசனே எடுத்துக் கொள்ள வேண்டும்.

वैश्यः सर्वस्वदण्डः स्यात् संवत्सरनिरोधतः।
सहस्रं क्षत्रियो दण्ड्यो मौण्ड्यं मूत्रेण चार्हति॥

**வைஷ்ய: ஸர்வஸ்வதண்ட: ஸ்யாத் ஸம்வத்ஸர நிரோதந: |**
**ஸஹஸ்ரம் க்ஷத்ரியோ தண்ட்யோ மௌண்ட்யம் மூத்ரேண சார்ஹதி || 375**

கணவனால் காப்பாற்றப்படும் பிராம்மணப் பெண்ணை அடைந்த வைசியனுக்கு ஒரு வருடம் சிறைத் தண்டனையளிக்க வேண்டும். இதே குற்றத்தை க்ஷத்திரியன் செய்தானானால் ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். கழுதையின் சிறுநீரால் அவன் தலையை மொட்டை யடிக்க வேண்டும்.

ब्राह्मणीं यद्यगुप्तां तु गच्छेतां वैश्यपार्थिवौ।
वैश्यं पञ्चशतं कुर्यात् क्षत्रियं तु सहस्रिणम्॥

**ப்ராஹ்மணீம் யத்யகுப்தாம் து கச்சேதாம் வைஷ்யபார்திவௌ |**
**வைஷ்யம் பஞ்சசதம் குர்யாத் க்ஷத்ரியம் து ஸஹஸ்ரிணம் || 376**

கணவனால் கைவிடப்பட்ட பிராம்மணப் பெண்ணை அடைந்த வைசியனுக்கு, ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். அதுவே க்ஷத்ரியனாக இருந்தால், ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

उभावपि तु तावेव ब्राह्मण्या गुप्तया सह।
विप्लुतौ शूद्रवद् दण्ड्यौ दग्धव्यौ वा कटाग्निना॥

**உபாவபி து தாவேவ ப்ராஹ்மண்யா குப்தயா ஸஹ |**
**விப்லுதௌ சூத்ரவத் தண்ட்யௌதக்தவ்யௌ வாகடாஅக்நிநா || 377**

கணவனால் காப்பாற்றப்படும் கற்பினளான பிராம்மணப் பெண்ணை பலாத்காரம் செய்தவன் க்ஷத்திரியனாயினும் வைசிய னாயினும் சூத்திரனுக்குக் கொடுக்கும் தண்டனையையே கொடுக்க வேண்டும். இத்தகைய செயலைச் செய்தவனை பாயில் வைத்து சுருட்டி தீயிட்டுக் கொளுத்த வேண்டும். அல்லது பழுக்கக் காய்ச்சிய

இரும்புப் பலகையில் படுக்கப் போட்டு மேலே விறகுகளைப் போட்டுக் கொளுத்த வேண்டும்.

सहस्रं ब्राह्मणो दण्ड्यो गुप्तां विप्रां बलाद् व्रजन्।
शतानि पञ्च दण्ड्यः स्यादिच्छन्त्या सह सङ्गतः॥

**ஸஹஸ்ரம் ப்ராஹ்மணோ தண்ட்யோ குப்தாம்விப்ராம் பலாத் வ்ரஜந் |**
**ஷதாநி பஞ்ச தண்ட்ய: ஸ்யாதிச்சந்த்யா ஸஹ ஸங்கத: || 378**

இதே காரியத்தை பிராம்மணன் செய்தால், அவனுக்கு ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். அந்தப் பெண்ணின் விருப்பத்தோடு நடந்திருந்தால், ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

मौण्ड्यं प्राणान्तिको दण्डो ब्राह्मणस्य विधीयते।
इतरेषां तु वर्णानां दण्डः प्राणान्तिको भवेत्॥

**மௌண்ட்யம் ப்ராணா அந்திகோ தண்டோ ப்ராஹ்மணஸ்ய விதீயதே |**
**இதரேஷாம் து வர்ணாநாம் தண்ட: ப்ராணா அந்திகோ பவேத் || 379**

ஒரு குற்றத்துக்குரிய தண்டனை மரண தண்டனையெனில், அந்தக் குற்றத்தை பிராம்மணன் செய்திருந்தால் அவனுக்கு மரண தண்டனை விதிக்கலாகாது. அவன் தலையை மொட்டையடிக்க வேண்டும்.

பிராம்மணன் தலையை மொட்டையடிப்பது அவன் உயிரைப் பறிப்பதற்குச் சமம்.

न जातु ब्राह्मणं हन्यात् सर्वपापेष्वपि स्थितम्।
राष्ट्रादेनं बहिः कुर्यात् समग्रधनमक्षतम्॥

**நஜாது ப்ராஹ்மணம் ஹந்யாத் ஸர்வபாபேஷ்வபி ஸ்திதம் |**
**ராஷ்ட்ராதேநம் பஹி:குர்யாத் ஸமக்ரதநமக்ஷதம் || 380**

பிராம்மணன் எத்தகைய குற்றங்களை இழைத்தவனாயினும் அவனுக்கு மரண தண்டனை விதிக்கக்கூடாது. அவனுடைய செல்வத்தையும் பறிக்கக்கூடாது.

அவன், தன் செல்வத்தை எடுத்துக் கொண்டு நாட்டை விட்டு வெளியேறச் செய்ய வேண்டும்.

न ब्राह्मणवधाद् भूयानधर्मो विद्यते भुवि।
तस्मादस्य वधं राजा मनसाऽपि न चिन्तयेत्॥

**ந ப்ராஹ்மணவதாத் பூயாநதர்மோ வித்யதே புவி |**
**தஸ்மாதஸ்ய வதம் ராஜா மநஸாஅபி ந சிந்தயேத் || 381**

உலகில் பிராம்மண வதத்தைவிட பெரிய அதர்மம் வேறெதுவும் இல்லை. எனவே, அரசன் பிராம்மண வதத்தை மனத்தாலும் நினைக்கக் கூடாது.

वैश्यश् चेत् क्षत्रियां गुप्तां वैश्यां वा क्षत्रियो व्रजेत्।
यो ब्राह्मण्यामगुप्तायां तावुभौ दण्डमर्हतः॥

**வைஷ் யஷ் சேத் க்ஷத்ரியாம் குப்தாம் வைஷ்யாம் வாக்ஷத்ரியோ வ்ரஜேத் |**
**யோ ப்ராஹ்மண்யாமகுப்தாயாம் தாவுபௌ தண்டமர்ஹத: || 382**

கணவனால் காப்பாற்றப்படும் வைசியப் பெண்ணை க்ஷத்திரியன் அடைந்தால், அவனுக்கு ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

கணவனால் காப்பாற்றப்படும் க்ஷத்திரியப் பெண்ணை வைசியன் அடைந்தால், ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

सहस्रं ब्राह्मणो दण्डं दाप्यो गुप्ते तु ते व्रजन्।
शूद्रायां क्षत्रियविशोः साहस्रो वै भवेद् दमः॥

**ஸஹஸ்ரம் ப்ராஹ்மணோ தண்டம் தப்யோ குப்தேது தேவ்ரஜந் |**
**சூத்ராயாம் க்ஷத்ரிய விஷோ: ஸாஹஸ்ரோவை பவேத் தம: || 383**

கணவனால் காப்பாற்றப்படும் க்ஷத்திரியப் பெண்ணையோ, வைசியப் பெண்ணையோ அடைந்த பிராம்மணனுக்கு ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

கணவனால் காப்பாற்றப்படும் சூத்திரப் பெண்ணை அடைந்த க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

क्षत्रियायामगुप्तायां वैश्ये पञ्चशतं दमः।
मूत्रेण मौण्ड्यमृच्छेत् तु क्षत्रियो दण्डमेव वा॥

**க்ஷத்ரியாயாம் அகுப்தாயாம் வைஷ்யே பஞ்சஷதம் தம: |**
**மூத்ரேண மௌண்ட்யம்ருச்சேத் து க்ஷத்ரியோ தண்டமேவவா || 384**

கணவனால் காப்பாற்றப்படாத க்ஷத்திரியப் பெண்ணை அடைந்த வைசியனுக்கு ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

கணவனால் காப்பாற்றப்படாத வைசியப் பெண்ணை அடைந்த க்ஷத்திரியனுக்கு கழுதை மூத்திரம் கொண்டு மொட்டையடிக்க வேண்டும். மேலும் ஐநூறு பணங்கள் அபராதமும் விதிக்க வேண்டும்.

अगुप्ते क्षत्रियावैश्ये शूद्रां वा ब्राह्मणो व्रजन्।
शतानि पञ्च दण्ड्यः स्यात् सहस्रं त्वन्त्यजस्त्रियम्॥

**அகுப்தே க்ஷத்ரியாவைஷ்யே சூத்ராம்வா ப்ராஹ்மணோவ்ரஜந் |**
**ஷதாநி பஞ்ச தண்ட்ய: ஸ்யாத் ஸஹஸ்ரம் த்வந்த்ய ஜஸ்த்ரியம் || 385**

*கணவனால் காப்பாற்றப்படாத க்ஷத்திரியப் பெண்ணையோ, வைசியப் பெண்ணையோ, சூத்திரப் பெண்ணையோ அடையும் பிராம்மணனுக்கு ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். அதுவே சண்டாளப் பெண்ணானால் ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

यस्य स्तेनः पुरे नाऽस्ति नाऽन्यस्त्रीगो न दुष्टवाक्।
न साहसिक-दण्डघ्नौ स राजा शक्रलोकभाक्॥

**யஸ்ய ஸ்தேந: புரே நாஅஸ்தி நாஅந்யஸ்த்ரீகோ ந துஷ்டவாக் |**
**ந ஸாஹஸிக தண்டக்நௌ ஸராஜா ஷக்ரலோகபாக் || 386**

*திருடன், பிறர் மனைவியை சுகிப்பவன், கொடுமையான சொற்களைப் பேசுபவன், கொடிய செயல்களைச் செய்பவன், அடிதடிகளில் ஈடுபடுபவன் முதலானோர் எந்த தேசத்தில் இல்லையோ, அந்த தேசத்தை ஆளும் அரசன் இந்திர லோகத்தை அடைவான்.*

एतेषां निग्रहो राज्ञः पञ्चानां विषये स्वके।
साम्राज्यकृत् सजात्येषु लोके चैव यशस्करः॥

**ஏதேஷாம் நிக்ரஹோ ராக்ஞ: பஞ்சாநாம் விஷயே ஸ்வகே |**
**ஸாம்ராஜ்யக்ருத் ஸஜாத்யேஷு லோகேசைவ யஷஸ்கர: || 387**

*தன்னுடைய தேசத்தில் இந்த ஐந்து வகையினரையும் இல்லாமலே செய்த அரசன், எல்லா அரசர்களையும் ஆளும் சக்கரவர்த்தியாக புகழோடு வாழ்வான்.*

ऋत्विजं यस् त्यजेद् याज्यो याज्यं चर्त्विक् त्यजेद् यदि।
शक्तं कर्मण्यदुष्टं च तयोर् दण्डः शतंशतम्॥

**ருத்விஜம் யஸ் த்யஜேத் யாஜ்யோ யாஜ்யம் சரித்விக் த்யஜேத்யதி |**
**ஷக்தம் கர்மண்யதுஷ்டம் ச தயோர் தண்ட: ஷதம் ஷதம் || 388**

*யாகம் செய்பவன், தனக்கு யாகம் செய்து வைக்க வந்த ரித்விக்கை, எந்த தோஷமுமற்றவனாக இருக்கும்போதும், நீக்கு கிறானோ, அவனுக்கு நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.*

அவ்வாறே யாகம் செய்து வைக்கும் ரித்விக்கும், எந்த தோஷமுமற்றவனாக இருக்கும் யாகம் செய்யும் கர்த்தாவை விட்டு விலகி, யாகத்தைச் செய்யாமல் நீங்கினால் அந்த ரித்விக்கிற்கும் நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

न माता न पिता न स्त्री न पुत्रस् त्यागमर्हति।
त्यजन्नपतितानेतान् राज्ञा दण्ड्यः शतानि षट्॥

**ந மாதா ந பிதா ந ஸ்த்ரீ ந புத்ரஸ் த்யாகமர்ஹதி |**
**த்யஜந் நபதிதாநேதாந் ராக்ஞா தண்ட்ய: ஷதாநி ஷட் ||** 389

தாய், தந்தை, மனைவி, மகன்கள் இவர்களைக் காப்பாற்றாமல் விடக்கூடாது. அப்படிக் காப்பாற்றாமல் விடுபவனுக்கு அறுநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

आश्रमेषु द्विजातीनां कार्ये विवदतां मिथः।
न विब्रूयान् नृपो धर्मं चिकीर्षन् हितमात्मनः॥

**ஆஸ்ரமேஷு த்விஜாதீநாம் கார்யே விவததாம் மித: |**
**நவிப்ரூயாந் ந்ருபோ தர்மம் சிகீர்ஷந் ஹிதமாத்மந: ||** 390

यथाऽर्हमेतानभ्यर्च्य ब्राह्मणैः सह पार्थिवः।
सान्त्वेन प्रशमय्याऽऽदौ स्वधर्मं प्रतिपादयेत्॥

**யதா அர்ஹமேதாநப்யர்ச்ய ப்ராஹ்மணை: ஸஹ பார்திவ: |**
**ஸாந்த்வேந ப்ரஷமய்யா ஆதௌ ஸ்வதர்மம் ப்ரதிபாதயேத் ||** 391

பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர்கள் தங்கள் சுயதர்மங்களைப் பற்றி விவாதத்தில் ஈடுபட்டு வரும்போது, தன்னுடைய நன்மையை விரும்பும் அரசன், 'இது சரி, இது தவறு, இது சாஸ்திர சம்மதம், இது சாஸ்திர விரோதம்' என்று தான் அறுதியிட்டுக் கூறக்கூடாது.

விவாதத்தில் ஈடுபட்டிருப்போரைக் கொண்டு ஒரு சபை கூட்ட வேண்டும். அதில் பண்டிதர்களான பிராம்மணர்களை வரவழைத்து கௌரவிக்க வேண்டும். அவர்கள் எதிரில், விவாதிப்போர் தங்கள் விவாதங்களைச் சொல்ல வேண்டும். பண்டிதர்கள் அவைகளைக் கேட்டு, உரிய சாஸ்திர தர்மங்களை எடுத்துக் கூறி தீர்ப்புக் கூறுவார்கள்.

प्रातिवेश्याऽनुवेश्यौ च कल्याणे विंशतिद्विजे।
अर्हावभोजयन् विप्रो दण्डमर्हति माषकम्॥

**ப்ராதிவேஷ்யா ஆநுவேஷ்யௌ ச கல்யாணே விம்ஷதித்விஜே |**
**அர்ஹாவபோஜயந் விப்ரோ தண்டமர்ஹதி மாஷகம் ||** 392

திருமணம் முதலான விசேஷ நாட்களில், இருபதுக்கும் அதிகமான பேருக்கு விருந்தளிக்கும்போது, அக்கம்பக்கத்தாரையும் அழைத்து விருந்தளிக்க வேண்டும். அவ்வாறு அழைக்காத பிராம்மணனுக்கு ஒரு மாஷம் பொன் அபராதம் விதிக்க வேண்டும்.

श्रोत्रियः श्रोत्रियं साधु भूतिकृत्येष्वभोजयन्।
तदन्नं द्विगुणं दाप्यो हिरण्यं चैव माषकम्॥

**ஸ்ரோத்ரிய: ஸ்ரோத்ரியம் ஸாதும் பூதிக்ருத்யேஷ்வபோஜயந் |**
**ததந்நம் த்விகுணம் தாப்யோ ஹிரண்யம் சைவ மாஷகம் || 393**

வேதமறிந்த பிராம்மணன், தன் இல்ல விசேஷத்தில் தன் பக்கத்து வீட்டு வேதமறிந்த பிராம்மணர்களையும் அழைத்து விருந்தளித்து உபசரிக்க வேண்டும். இல்லையேல், இருமடங்காக அவர்களுக்கு விருந்தன்னத்தைக் கொடுத்து, ஒரு மாஷம் பொன்னை அரசனுக்கு அபராதம் செலுத்த வேண்டும்.

अन्धो जडः पीठसर्पी सप्तत्या स्थविरश् च यः।
श्रोत्रियेषूपकुर्वंश् च न दाप्याः केनचित् करम्॥

**அந்தோ ஜட: பீடஸர்பீ ஸப்தத்யா ஸ்தவிரஷ் சய: |**
**ஸ்ரோத்ரீயேஷூப குர்வம்ஷ் சந தாப்யா: கேநசித் கரம் || 394**

குருடன், ஊமை, முடவன், எழுபது வயதைக் கடந்தவன், வேத மோதுபவர்களுக்கு எல்லா வகையிலும் உதவுபவன் முதலானோருக்கு சிறிதும் வரி விதிக்கக் கூடாது.

श्रोत्रियं व्याधितार्तौ च बालवृद्धावकिञ्चनम्।
महाकुलीनमार्यं च राजा सम्पूजयेत् सदा॥

**ஸ்ரோத்ரியம் வ்யாதிதா ஆர்த்தெள ச பாலவ்ருத்தாவகிஞ்சநம் |**
**மஹாகுலீநமார்யம்ச ராஜாஸம்பூஜயேத் ஸதா || 395**

வேதமறிந்த பிராம்மணன், வியாதியஸ்தன், துக்கத்திலிருப்பவன், வயோதிகன், ஏழை, உயர்குலத்தோன், வள்ளல் இவர்களிடம் அரசன் தனிப்பட்ட அக்கறையைச் செலுத்த வேண்டும்.

शाल्मलीफलके श्लक्ष्णे नेनिज्यान् नेजकः शनैः।
न च वासांसि वासोभिर् निर्हरेन् न च वासयेत्॥

**ஷால்மலீபலகே ஷ்பலக்ஷ்ணே நேநிஜ்யாந் நேஜக: ஷனை: |**
**ந ச வாஸாம்ஸி வாஸோபிர் நிர்ஹரேந் ந ச வாஸயேத் || 396**

வண்ணான் துணிகளை மேடு பள்ளங்களில் போட்டுத் துவைக்கக் கூடாது. இலவமரம் போன்ற மரப்பலகைகளில்

நிதானமாகத் தோய்க்க வேண்டும். ஒருவர் துணிகளை இன்னொரு வருக்கு இரவல் கொடுக்கக் கூடாது.

அப்படிச் செய்தால் அது தண்டனைக்குரிய குற்றமாகும்.

तन्तुवायो दशपलं दद्यादेकपलाऽधिकम्।
अतोऽन्यथा वर्तमानो दाप्यो द्वादशकं दमम्॥

**தந்து வாயோ தஷபலம் தத்யாதேகபலாஅதிகம் |**
**அதோ அந்யதா வர்தமாநோ தாப்யோ த்வாதஷகம் தமம் ||** **397**

நெசவாளி பத்து பலம் நூலை வாங்கிக் கொண்டு நெய்து தந்தால் அது பதினோரு பலம் இருக்க வேண்டும். (கஞ்சி போடுவதாலும் சாயம் ஏற்றுவதாலும் இந்த அளவு எடை கூடும்.)

குறைவாகத் தந்தால் அவனுக்குப் பன்னிரண்டு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

शुल्कस्थानेषु कुशलाः सर्वपण्यविचक्षणाः।
कुर्युरर्घं यथापण्यं ततो विंशं नृपो हरेत्॥

**ஷுல்கஸ்தாநேஷு குஷலா: ஸர்வ பண்ய விசக்ஷணா: |**
**குர்யுரர்கம் யதாபண்யம் ததோ விம்ஷம் ந்ருபோ ஹரேத் ||** **398**

சுங்க வரி வசூலிக்கும் சுங்கச் சாவடிகளில், சகலமான விலை யுயர்ந்த, விலை குறைந்த பொருட்களின் மதிப்பை அறிந்தவர்களை அதிகாரிகளாக நியமிக்க வேண்டும்.

அவர்கள் வணிகர்கள் கொண்டு வரும் சரக்குகளின் மதிப்புகளை ஆராய்ந்து விலையை நிர்ணயிப்பார்கள். வணிகர்கள் விற்ற பிறகு விற்றதில் கிடைத்த லாபத்தில் இருபதில் ஒரு பங்கு வரியை வசூலிப்பார்கள்.

राज्ञः प्रख्यातभाण्डानि प्रतिषिद्धानि यानि च।
तानि निर्हरतो लोभात् सर्वहारं हरेन् नृपः॥

**ராக்ஞ: ப்ரக்யாத பாண்டாநி ப்ரதிஷித்தாநி யாநி ச |**
**தாநி நிர்ஹரதோ லோபாத் ஸர்வஹரம் ஹரேந் ந்ருப: ||** **399**

அரசன் உபயோகிக்கத் தக்கதான உயர்ந்த ஜாதிக் குதிரைகள், மிக விலையுயர்ந்த வைரங்கள், முத்துகள் முதலானவைகளை பேராசையால் அயல் தேசங்களுக்கு விற்கக் கொண்டு போகிறவனிட மிருந்து, அனைத்துப் பொருட்களையும் அரசன் பறிமுதல் செய்ய வேண்டும்.

शुल्कस्थानं परिहरन्नकाले क्रयविक्रयी।
मिथ्यावादी च सङ्ख्याने दाप्योऽष्टगुणमत्ययम्॥

**ஷுல்கஸ்தாநம் பரிஹரந் நகாலே க்ரய விக்ரயீ |**
**மித்யாவாதீ ச ஸங்க்யாநே தாப்யோ அஷ்டகுணமத்யயம் || 400**

*நீர்வழியில் கப்பல்கள் வந்து நிற்கும் இடங்களிலும், நகரத்தினுள் நுழையும் இடங்களிலும் சுங்கச் சாவடிகள் இருக்கும். வரி கொடாமல் ஏய்ப்பதற்காக அந்த வழிகளில் வராமல், வேறு வழிகளில் உள்ளே நுழைந்து விற்கப் பார்க்கிறவனையும், இரவு நேரங்களில் வாங்கவோ விற்கவோ முனைபவனையும், சுங்க வரியைக் குறைப்பதற்காக விலையுயர்ந்த பொருளின் விலையைக் குறைத்துக் கூறுபவனையும் தண்டிக்க வேண்டும். அவர்களின் பொருளின் மதிப்புக்கு எட்டு மடங்கு தொகையை அபராதமாக விதிக்க வேண்டும்.*

आगमं निर्गमं स्थानं तथा वृद्धिक्षयावुभौ।
विचार्य सर्वपण्यानां कारयेत् क्रयविक्रयौ॥

**ஆகமம் நிர்கமம் ஸ்தாநம் ததா வ்ருத்திக்ஷயாவுபௌ |**
**விசார்ய ஸர்வபண்யாநாம் காரயேத் க்ரயவிக்ரயௌ || 401**

*சுங்கச் சாவடி அதிகாரிகள் விற்பனைக்கு வரும் சரக்குகளையும், போகும் சரக்குகளையும் அறிய வேண்டும்.*

*விற்பனைக்கு வரும் சரக்குகள் எவ்வளவு தூரத்திலிருந்து வருகின்றன, வர எத்தனை நாட்களாயின, வழிப் பயணச் செலவுகள் எவ்வளவு, அந்த சரக்குகளை எவ்வளவு தொகைக்கு விற்க முடியும், வணிகன் தன் வேலையாட்களுக்கு எவ்வளவு சம்பளம் தர வேண்டியிருக்கும் போன்றவற்றையெல்லாம் நன்கு விசாரித்து வணிகர்களுக்கு நஷ்டம் ஏற்படாத வகையில், தக்க லாபம் கிட்டும் வகையில் விலைகளை நிர்ணயிக்க வேண்டும்.*

पञ्चरात्रेपञ्चरात्रे पक्षेपक्षेऽथवा गते।
कुर्वीत चैषां प्रत्यक्षमर्घसंस्थापनं नृपः॥

**பஞ்சராத்ரே பஞ்சராத்ரே பக்ஷே பக்ஷே அதவா கதே |**
**குர்வீத சைஷாம் ப்ரத்யக்ஷ மர்கஸம்ஸ்தாபநம் ந்ருப: || 402**

*அனைத்து சரக்குகளும் ஒரே மாதிரியாக இருக்காது. விலை ஏறியிறங்கக்கூடிய சரக்குகளும் இருக்கும். இவ்வாறான அடிக்கடி விலை ஏறவும் இறங்கவும் கூடிய சரக்குகளுக்கு ஐந்து நாட்களுக்கு ஒருமுறை விலையை நிர்ணயம் செய்ய வேண்டும்.*

*சில சரக்குகளுக்கு பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை விலையை நிர்ணயம் செய்ய வேண்டும்.*

तुलामान प्रतीमान सर्वं च स्यात् सुलक्षितम्।
षट्सुषट्सु च मासेषु पुनरेव परीक्षयेत्॥

**துலாமாநம் ப்ரதீமாநம் ஸர்வம் ச ஸ்யாத் சுலக்ஷிதம் |**
**ஷட்சுஷட்சு ச மாஸேஷு புநரேவ பரீக்ஷயேத் || 403**

*தராசில் நிறுக்கும் அளவைகளான எடைக் குண்டுகள், தானியங்களை அளக்கும் படிகள் முதலான எடை அளவைகள் அனைத்தையும் ஆறு மாதங்களுக்கொருமுறை சரியாக இருக் கின்றனவா என்று பார்க்க வேண்டும்.*

पण यानं तरे दाप्यं पौरुषोऽर्धपण तरे।
पादं पशुश् च योषिच् च पादाऽर्धं रिक्तकः पुमान्॥

**பணம் யாநம் தரே தாப்யம் பௌருஷோ அர்தபணம் தரே |**
**பாதம் பஷுஷ் ச யோஷிச் ச பாதா அர்தம் ரிக்தக: புமாந் || 404**

*படகோட்டி வசூலிக்க வேண்டிய தொகையைப் பார்ப்போம்.*

*பாரமற்ற சிறு வண்டியை அக்கரை சேர்ப்பதற்கு ஒரு பணம் கூலி வாங்க வேண்டும்.*

*சுமையோடு ஏறுபவனிடம் அரைப் பணம் கூலி வாங்க வேண்டும். கால்நடையை ஏற்றிக் கொண்டால், அதற்கு கால்பணம் வாங்க வேண்டும். வெறும் மனிதன் ஏறினால், அரைக்கால் பணம் வாங்க வேண்டும்.*

भाण्डपूर्णानि यानानि तार्यं दाप्यानि सारतः।
रिक्तभाण्डानि यत्किञ्चित् पुमांसश् चाऽपरिच्छदाः॥

**பாண்ட பூர்ணாநி யாநாநி தார்யம் தாப்யாநி ஸாரத: |**
**ரிக்த பாண்டாநி யத்கிஞ்சித் புமாம்ஸஸ் சா அபரிச்சதா: || 405**

*விற்பனைச் சரக்குகளுடன் கூடிய வண்டியை படகில் ஏற்றிச் செல்ல அந்த பாரத்துக்குத் தக்கபடி கூலி வாங்க வேண்டும். மிகவும் ஏழைகள் படகில் ஏறினால், அவர்களிடம் ஏதோ பெயருக்குச் சிறிது கூலி வாங்க வேண்டும்.*

दीर्घाऽध्वनि यथादेशं यथाकालं तरो भवेत्।
नदीतीरेषु तद् विद्यात् समुद्रे नाऽस्ति लक्षणम्॥

**தீர்கா அத்வநி யதாதேஷம் யதாகாலம் தரோ பவேத் |**
**நதீதீரேஷு தத் வித்யாத் ஸமுத்ரே நாஅஸ்தி லக்ஷணம் || 406**

*நதியைக் கடக்கும் தூரம், காற்றின் வேகம், காற்றின் போக்கு இவற்றைக் கொண்டும், காலத்தையும் தேசத்தையும் அனுசரித்தும் கட்டணம் ஏற்படுத்த வேண்டும்.*

இவை நதி வழிகளுக்கு மட்டுமே. கடல்வழி பிரயாணம் என்பது காற்று வீசும் திசையைப் பொறுத்தது. பிரயாணம் எப்போது முடியும், எப்போது கரையை அடையலாம் என்று நிர்ணயிக்க முடியாது. எனவே, படகுக் கூலியைப் போன்று கப்பல் கூலியை நிர்ணயிக்க இயலாது.

गर्भिणी तु द्विमासादिस् तथा प्रव्रजितो मुनिः।
ब्राह्मणा लिङ्गिनश् चैव न दाप्यास् तारिकं तरे॥

**கர்பிணீ து த்விமாஸாதிஸ் ததா ப்ரவ்ரஜிதோ முனி: |**
**ப்ராஹ்மணாலிங்கிநஷ்சைவ நதாப்யாஸ்தாரிகம் தரே || 407**

இரண்டு மாதங்கள் நிறைந்த கர்ப்பிணிப் பெண், சந்யாசி, வானப்பிரஸ்தன், பிரம்மச்சாரி, பிராம்மணன் முதலியவர்களிடம் படகோட்டி கூலி வாங்கக்கூடாது.

यन् नावि किञ्चिद् दाशानां विशीर्येताऽपराधतः।
तद् दाशैरेव दातव्यं समागम्य स्वतोऽंशतः॥

**யந் நாவி கிஞ்சித் தாஷாநாம் விஷீர்யே தா அபராதத: |**
**தத் தாஷைரேவ தாதவ்யம் ஸமாகம்ய ஸ்வதோ அம்ஷத: || 408**

படகு போகும்போது அங்குள்ளவர்களின் அஜாக்ரதையால் ஏதேனும் பொருள் தண்ணீரில் விழுந்து விட்டால், அவர்கள் அனைவரும் பங்கிட்டுக் கொண்டு அப்பொருளின் மதிப்புக்குரிய தொகையை சொந்தக்காரனுக்குக் கொடுக்க வேண்டும்.

एष नौयायिनामुक्तो व्यवहारस्य निर्णयः।
दाशाऽपराधतस् तोये दैविके नाऽस्ति निग्रहः॥

**ஏஷ நௌயாயிநாமுக்தோ வ்யவஹாரஸ்ய நிர்ணய: |**
**தாஷா அபராததஸ் தோயே தைவிகே நா அஸ்திநிக்ரஹ: || 409**

படகோட்டுபவனின் கவனக் குறைவால் பொருள் நஷ்டம் ஏற்பட்டால், படகோட்டியே நஷ்டஈடு தர வேண்டும்.

ஆனால், புயல் முதலான காரணங்களால் பொருள் நஷ்டம் ஏற்பட்டால், படகோட்டிகள் அதற்குப் பொறுப்பல்ல.

वाणिज्यं कारयेद् वैश्यं कुसीदं कृषिमेव च।
पशूनां रक्षणं चैव दास्यं शूद्रं द्विजन्मनाम्॥

**வாணிஜ்யம் காரயேத் வைஷ்யம் குஸீதம் க்ருஷிமேவ ச |**
**பசூநாம் ரக்ஷணம் சைவ தாஸ்யம் சூத்ரம் த்விஜன்மநாம் || 410**

வைசியர்கள் வணிகம், வட்டிக்குக் கடன் கொடுத்தல், விவசாயம், பசுக்களைக் கொண்டு ஜீவனம் நடத்துதல் முதலான தொழில்களைச் செய்ய வேண்டும். சூத்திரன், பிராம்மண, க்ஷத்திரிய, வைசியர்களுக்கு பணிபுரிய வேண்டும்.

क्षत्रियं चैव वैश्यं च ब्राह्मणो वृत्तिकर्शितौ।
बिभृयादानृशंस्येन स्वानि कर्माणि कारयन्॥

**க்ஷத்ரியம் சைவ வைஷ்யம் ச ப்ராஹ்மணோ வ்ருத்தி கர்ஷிதௌ |**
**பிப்ருயாதாந்ருஷம் ஸ்யேந ஸ்வாநிகர்மாணி காரயந் ||** **411**

வறுமையுற்ற நிலையில் க்ஷத்திரியனோ, வைசியனோ, செல்வந்தனான பிராம்மணனிடம் பணிபுரிய வந்தால், பிராம்மணன் அவர்களை வேலைக்குச் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால், அவரவர் தர்மத்துக்குரிய தொழில்களையே அவர்களுக்குப் பணியாக விதிக்க வேண்டும். வைசியனைத் தன்னுடைய நிலத்தில் விவசாயம் செய்யச் சொல்லலாம். க்ஷத்திரியனை பாதுகாவலுக்கு நியமிக்கலாம்.

மொத்தத்தில் தன்னை அண்டி வந்த அவர்களை பிராம்மணன் ரட்சிக்க வேண்டும்.

दास्यं तु कारयल्ँ लोभाद् ब्राह्मणः संस्कृतान् द्विजान्।
अनिच्छतः प्राभवत्याद् राज्ञा दण्ड्यः शतानि षट्॥

**தாஸ்யம் து காரயல்லோபாத் ப்ராஹ்மண: ஸம்ஸ்க்ருதாந் த்விஜாந் |**
**அநிச்சத: ப்ராபவத்யாத் ராக்ஞா தண்ட்ய: ஷதாநி ஷட் ||** **412**

இவ்வாறு வந்த க்ஷத்திரிய, வைசியர்களை பிராம்மணன் தன் செல்வச் செருக்காலும், லோப குணத்தாலும் கீழான வேலைகளுக்கு அமர்த்தினால் அது குற்றம். அந்தக் குற்றத்துக்கு அரசன் அறுநூறு பணங்களை அந்த பிராம்மணனுக்கு அபராதமாக விதிக்க வேண்டும்.

शूद्रं तु कारयेद् दास्यं क्रीतमक्रीतमेव वा।
दास्यायैव हि सृष्टोऽसौ ब्राह्मणस्य स्वयम्भुवा॥

**சூத்ரம் து காரயேத் தாஸ்யம் க்ரீதமக்ரீதமேவ வா |**
**தாஸ்யாயைவ ஹி ஸ்ருஷ்டோ அஸௌ ப்ராஹ்மணஸ்ய ஸ்வயம்புவா || 413**

சம்பளம் கொடுத்தோ அல்லது கொடுக்காமலோ (உணவு, உடை, தங்க இடம் கொடுத்தோ) ஆதரிக்கலாம்.

न स्वामिना निसृष्टोऽपि शूद्रो दास्याद् विमुच्यते।
निसर्गजं हि तत् तस्य कस् तस्मात् तदपोहति॥

**ந ஸ்வாமிநா நிஸ்ருஷ்டோ அபி சூத்ரோ தாஸ்யாத் விமுச்யதே |**
**நிஸர்கஜம் ஹி தத் தஸ்யகஸ் தஸ்மாத் ததபோஹதி ||** **414**

பிராம்மணனுக்குப் பணிவிடை புரிவதால் சூத்திரன் மறுமையில் நல்வாழ்வைப் பெறுவான். எஜமானன் அவனை வேலையை விட்டுப் போகச் சொன்னாலும்கூட, இம்மையில் செய்யும் இந்தப் பணிவிடையால் மறுமையின்பம் கிட்டுவதால், அவன் இறுதிவரை பணி புரிய வேண்டும்.

ध्वजाऽऽहृतो भक्तदासो गृहजः क्रीतदत्त्रिमौ।
पैत्रिको दण्डदासश् च सप्तैते दासयोनयः॥

**த்வஜா ஆஹ்ருதோ பக்ததாஸோ க்ருஹஜ: க்ரீததத் த்ரிமௌ |**
**பைத்ரிகோ தண்டதாஸஷ் ச ஸப்தைதே தாஸயோநய: ||** **415**

ஏவலர்கள் ஏழு வகையினர்.

போரில் சிறைப்பிடிக்கப்பட்டவன், பக்தியோடு தொண்டு புரிய வந்தவன், வைப்பாட்டியின் மகன், விலை கொடுத்து வாங்கப்பட்ட அடிமை, பிறரால் கொடுக்கப்பட்ட அடிமை, பரம்பரையாக பணி செய்பவன், அபராதத் தொகையை வேலை செய்து தீர்ப்பவன் என்னும் ஏழு வகையினரே ஏவலர்களாவர்.

भार्या पुत्रश् च दासश् च त्रय एवाऽधनाः स्मृताः।
यत् ते समधिगच्छन्ति यस्य ते तस्य तद् धनम्॥

**பார்யா புத்ரஷ் ச தாஸஷ் ச த்ரயஏவா அதநா: ஸ்ம்ருதா: |**
**யத் தே ஸமதிகச்சந்தி யஸ்ய தே தஸ்ய தத் தநம் ||** **416**

மனைவி, மகன், அடிமை இம்மூவரும் தனமற்றவர்கள். ஏனெனில், இவர்களிடம் எவ்வளவு தனமிருந்தாலும் அது அவர்கள் உடைமையாகாது. அக் குடும்பத் தலைவனுடைய உடைமையே யாகும்.

विस्रब्धं ब्राह्मणः शूद्राद् द्रव्योपादानमाचरेत्।
न हि तस्याऽस्ति किञ्चित् स्वं भर्तृहार्यधनो हि सः॥

**விஸ்ரப்தம் ப்ராஹ்மண: சூத்ராத் த்ரவ்யோபாதாநமாசரேத் |**
**நஹி தஸ்யாஅஸ்தி கிஞ்சித் ஸ்வம் பர்த்ருஹார்யதநோஹிஸ: ||** **417**

தன் வேலைக்காரனிடமுள்ள தனத்தை பிராம்மணன் கைப்பற்றலாம்; தவறில்லை. ஏனெனில், எஜமானனான பிராம்மணனுக்கே அந்த தனம் சொந்தம்.

वैश्यशूद्रौ प्रयत्नेन स्वानि कर्माणि कारयेत्।
तौ हि च्युतौ स्वकर्मभ्यः क्षोभयेतामिदं जगत्॥

**வைஷ்ய சூத்ரௌ ப்ரயத்நேந ஸ்வாநிகர்மாணி காரயேத் |**
**தௌஹி ச்யுதௌ ஸ்வகர்மப்ய: க்ஷோபயேதாமிதம் ஜகத் ||** **418**

அரசன், க்ஷத்ரியனையும் வைசியனையும் அவரவர் குலத் தொழிலை வற்புறுத்தியாவது செய்ய வைக்க வேண்டும்.

இல்லாவிடில் தத்தம் தொழில்களைச் செய்யாமல் மதங்கொண்டு திரிந்து உலகையே நாசம் செய்வார்கள்.

अहन्यहन्यवेक्षेत कर्मान्तान् वाहनानि च।
आयव्ययौ च नियतावाकरान् कोशमेव च॥

**அஹந் அஹந்யவேக்ஷேத கர்மாந்தாந் வாஹநாநி ச |**
**ஆய்வயயௌ ச நியதாவாகராந் கோஷமேவ ச ||** 419

அரசன் நாட்டில் நடக்கும் எல்லாவற்றையும் ஒற்றர்களைக் கொண்டு தினம் தினம் அறிய வேண்டும். தினமும் யானைகளையும் குதிரைகளையும் பார்வையிட வேண்டும். வரவு செலவுகளைப் பார்க்க வேண்டும். பொக்கிஷத்தைப் பார்வையிட வேண்டும்.

एवं सर्वानिमान् राजा व्यवहारान् समापयन्।
व्यपोह्य किल्बिषं सर्वं प्राप्नोति परमां गतिम्॥

**ஏவம் ஸர்வாநிமாந் ராஜா வ்யவஹாராந் ஸமாபயந் |**
**வ்யபோஹ்ய கில்பிஷம் ஸர்வம் ப்ராப்நோதி பரமாம் கதிம் ||** 420

இதுவரை கூறியபடி எல்லா விவகாரங்களையும் நடத்துகின்ற அரசன், தன் பாபங்கள் நீங்கியவனாக மேலான உலகங்களை அடைவான்.

(எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 9

पुरुषस्य स्त्रियाश् चैव धर्म्ये वर्त्मनि तिष्ठतोः।
संयोगे विप्रयोगे च धर्मान् वक्ष्यामि शाश्वतान्॥

**புருஷஸ்ய ஸ்த்ரியாஷ்சைவ தர்ம்யே வர்த்மநி திஷ்டதோ: |**
**ஸம்யோகே விப்ரயோகே ச தர்மாந் வக்ஷ்யாமி ஷாஷ்வதாந் || 1**

*தர்ம வழியில் நிலைத்திருக்கின்ற ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும்போதும், பிரிந்த பின்னரும் கடைப்பிடிக்க வேண்டிய சாஸ்வதமான தர்மங்களைக் கூறுகிறேன்.*

अस्वतन्त्राः स्त्रियः कार्याः पुरुषैः स्वैर् दिवानिशम्।
विषयेषु च सज्जन्त्यः संस्थाप्या आत्मनो वशे॥

**அஸ்வதந்த்ரா: ஸ்த்ரிய: கார்யா: புருஷை: ஸ்வைர் திவாநிஷம் |**
**விஷயேஷு ச ஸஜ்ஜந்த்ய: ஸம்ஸ்தாப்யா ஆத்மநோ வஷே || 2**

*புருஷர்கள் இரவும் பகலும் ஸ்திரீகளைப் பாதுகாக்க வேண்டும். ஏனெனில் பெண்கள் கண்ணுக்கு ரம்யமானவற்றைக் காண்பதிலும், காதுக்கு ரம்யமானவற்றைக் கேட்பதிலும், ரம்யமான வாசனைகளை முகர்வதிலும், மனத்துக்கு ரம்யமானவற்றைச் செய்வதிலும் எப்போதும் ஈடுபடுவார்கள். இவ்வாறான விஷய சுகங்களை அனுபவிக்கும்போது சில தவறுகள் நேரிட வாய்ப்பு ஏற்படலாம். எனவே அத்தகைய வாய்ப்புகள் ஏற்படாமல் இருக்க பெண்கள் சுதந்திரமாகத் திரியாமல் ஆண்கள் தங்கள் வசத்தில் அவர்களை வைத்துக்கொண்டு பாதுகாக்க வேண்டும்.*

पिता रक्षति कौमारे भर्ता रक्षति यौवने।
रक्षन्ति स्थविरे पुत्रा न स्त्री स्वातन्त्र्यमर्हति॥

**பிதா ரக்ஷதி கௌமாரே பர்தா ரக்ஷதி யௌவநே |**
**ரக்ஷந்தி ஸ்தவிரே புத்ரா நஸ்த்ரீ ஸ்வாதந்த்ரயமர்ஹதி || 3**

*சிறுவயதுப் பெண்ணை தந்தை பாதுகாப்பான். யௌவனப் பருவத்தில் கணவன் பாதுகாப்பான். வயோதிகத்தில் புத்திரர்கள் பாதுகாப்பார்கள். எனவே பெண் என்பவள் எப்போதும் பிறரால் பாதுகாக்கப்படுபவாளேயன்றி, சுதந்திரமாக இருக்கத்தக்கவளல்ல.*

**कालेऽदाता पिता वाच्यो वाच्यश् चाऽनुपयन् पतिः।**
**मृते भर्तरि पुत्रस् तु वाच्यो मातुररक्षिता॥**

**காலே அதாதா பிதா வாச்யோ வாச்யஷ் சாஅனுபயந் பதி: |**
**ம்ருதே பர்தரி புத்ரஸ் து வாச்யோ மாதுரரக்ஷிதா ||** 4

*தக்க பருவத்தில் தன் மகளுக்குத் திருமணம் செய்து வைக்காத தந்தை நிந்தனைக்குரியவன்.*

*ருது காலத்தில் தன் மனைவியைக் கூடாத கணவன் நிந்தனைக் குரியவன்.*

*தந்தை இறந்த பிறகு தாயைக் காப்பாற்றாத தனயன் நிந்தனைக்குரியவன்.*

**सूक्ष्मेभ्योऽपि प्रसङ्गेभ्यः स्त्रियो रक्ष्या विशेषतः।**
**द्वयोर् हि कुलयोः शोकमावहेयुररक्षिताः॥**

**சூக்ஷ்மேப்யோ அபி ப்ரஸங்கேப்ய: ஸ்த்ரியோ ரக்ஷ்யா விசேஷத: |**
**த்வயோர் ஹி குலயோ: ஷோகமாவஹேயுரரக்ஷிதா: ||** 5

*சூட்சுமமான தகாத சேர்க்கைகள் ஏற்பட்டு விடாதபடி பெண்ணை விசேஷமாகக் காப்பாற்ற வேண்டும். அப்படிக் காப்பாற்றாவிட்டால் அப்பெண்ணால் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும் துக்கம் ஏற்படும்.*

**इमं हि सर्ववर्णानां पश्यन्तो धर्ममुत्तमम्।**
**यतन्ते रक्षितुं भार्यां भर्तारो दुर्बला अपि॥**

**இமம் ஹி ஸர்வ வர்ணாநாம் பஷ்யந்தோ தர்மமுத்தமம் |**
**யதந்தே ரக்ஷிதும் பார்யாம் பர்தாரோ துர்பலா அபி ||** 6

*இவ்வாறு பெண்களைக் காப்பதே பிராம்மண க்ஷத்ரிய வைசிய சூத்திர சகல வர்ணத்தாருக்கும் உயர்ந்த தர்மமாகும். கணவன் தரித்திரனாக இருந்தாலும், அங்கஹீனம் உள்ளவனாக இருந்தாலும், எந்த வகையில் குறையுள்ளவனாக இருந்தாலும் மனைவியைக் காப்பாற்ற வேண்டும்.*

**स्वां प्रसूतिं चरित्रं च कुलमात्मानमेव च।**
**स्वं च धर्मं प्रयत्नेन जायां रक्षन् हि रक्षति॥**

**ஸ்வாம் ப்ரஸூதிம் சரித்ரம் ச குலமாத்மாநமேவ ச |**
**ஸ்வம் ச தர்மம் ப்ரயத்நேந ஜாயாம் ரக்ஷந் ஹி ரக்ஷதி ||** 7

*மனைவியினால், புத்திரர்கள் பிறப்பார்களாதலால் அவளால் தான் வம்சம் விருத்தியடைகிறது. மனைவியின் நற்குணங்களால்தான் வம்சத்தின் நற்பெயர் நிலைநாட்டப்படுகிறது. மனைவி உடனிருந்து*

தர்மத்தை நடத்துவதால்தான் ஒருவன் மேன்மையடைகிறான். ஆகவே தன்னையும் தன் தர்மத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்காக மனைவியை மிகுந்த முயற்சியுடன் ரட்சிக்க வேண்டும்.

पतिर् भार्यां सम्प्रविश्य गर्भो भूत्वेह जायते।
जायायास् तद् धि जायात्वं यदस्यां जायते पुनः॥

**பதிர் பார்யாம் ஸம்ப்ரவிஷ்ய கர்போ பூத்வேஹ ஜாயதே |**
**ஜாயயாஸ் தத் தி ஜாயாத்வம் யதஸ்யாம் ஜாயதே புந: ||** 8

கணவன் தன் ரேதஸ் ரூபத்தில் மனைவியினுள் பிரவேசித்து புத்திரனைப் பெறுகிறான். கணவனின் சொரூபத்தையே சுமந்து தன் மகனாகப் பெறுவதால் மனைவிக்கு 'ஜாயா' என்றும் பெயருண்டு.

यादृशं भजते हि स्त्री सुतं सूते तथाविधम्।
तस्मात् प्रजाविशुद्ध्यर्थं स्त्रियं रक्षेत् प्रयत्नतः॥

**யாத்ருஷம் பஜதேஹி ஸ்த்ரீஅதம் சூதே ததாவிதம் |**
**தஸ்மாத் ப்ரஜாவிஷுத்த்யர்தம் ஸ்த்ரியம் ரக்ஷேத் ப்ரயத்நத: ||** 9

பெண்ணானவள், எந்த ஆடவனைச் சேர்கிறாளோ, அவனுடைய தன்மையைக் கொண்ட புத்திரனைப் பெறுவாள். எனவே மற்றவரால் அவள் பலாத்கரிக்கப்படாமல் கணவன் காப்பாற்ற வேண்டும். காப்பாற்றினால்தான் அவளிடமிருந்து தன்னைப் போன்ற நன்மக்களைப் பெற முடியும்.

न कश्चिद् योषितः शक्तः प्रसह्य परिरक्षितुम्।
एतैरुपाययोगैस् तु शक्यास् ताः परिरक्षितुम्॥

**ந கஷ்சித் யோஷித: ஷக்த: ப்ரஸஹ்ய பரிரக்ஷிதும் |**
**ஏதைருபாயயோகைஸ்து ஷக்யாஸ் தா: பரிரக்ஷிதும் ||** 10

பெண்களைக் காப்பாற்றுதல் என்பது, அவர்களைப் பலவந்தமாகப் பூட்டி வைப்பது போன்ற செயல்கள் அல்ல. சில உபாயங்களால் அவர்களைக் காப்பாற்ற வேண்டும்.

अर्थस्य सङ्ग्रहे चैनां व्यये चैव नियोजयेत्।
शौचे धर्मेऽन्नपक्त्यां च पारिणाह्यस्य वेक्षणे॥

**அர்தஸ்ய ஸங்க்ரஹே சைநாம் வ்யயே சைவ நியோஜயேத் |**
**ஷௌசே தர்மேஅந்ந பக்த்யாம் ச பாரிணாஹ்யஸ்ய வேக்ஷணே ||** 11

தனத்தைச் சேர்த்து வைக்கவும், தேவையானவற்றுக்கு செலவிடவும் அவர்களுக்கு சுதந்திரம் இருக்க வேண்டும். இதைப் பிரதானமாக மனைவிதான் பார்த்துக் கொள்ள வேண்டும். கணவன்

சம்பாதித்துக் கொண்டு வந்து தரும் தனத்தை சிக்கனமாக செலவு செய்து, மிகுதியைச் சேர்த்து வைக்க வேண்டும். இது மனைவியின் கடமை.

வீட்டைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டியதும், தன்னையும் வீட்டையும் அலங்காரமாக லக்ஷ்மிகரமாக வைத்திருக்க வேண்டியதும் மனைவியின் கடமை.

களைத்து வரும் கணவனுக்கு உணவளித்து பணிவிடை புரிவதும் மனைவியின் கடமை.

சமையலும் சமையல் சாதனங்களும் நல்லபடி இருக்கச் செய்வதும் மனைவியின் கடமையே.

(ஒருவன் ஏழையாக இருக்கலாம் அல்லது பணக்காரனாக இருக்கலாம். அவனுடைய இல்லம் என்பது குடிசையாக இருக்கலாம் அல்லது பெரிய மாளிகையாக இருக்கலாம். குடிசையாக இருந்தாலும் அவன் மனைவி அங்கு அரசி. பெரிய மாளிகையாக இருந்தாலும் அவன் மனைவி அங்கு அரசி. அதனால்தான் தமிழில் இல்லத்தரசி என்று கூறுகிறோம்.

வாயிற்படிக்கு உள்ளே மனைவியின் சாம்ராஜ்யம் நடைபெறும். உள்ளே எத்தனை வேலைக்காரர்கள் வேலை செய்தாலும் அவர்களை வழிநடத்துபவள் மனைவியாகவே இருக்க வேண்டும்.

மகாராணியாகவே இருந்தாலும் மனைவியின் கடமைகளை அவள் செய்யவே வேண்டும்.

பாண்டவர்களின் மனைவியான பாஞ்சாலியை அனைவருக்கும் தெரியும். கற்பில் சிறந்தவளான பாஞ்சாலி ஒரு சமயம், கிருஷ்ணருடைய பத்தினியான சத்யபாமையிடம் சில விஷயங்களை எடுத்துரைக்கிறாள். அதை அவளுடைய கூற்றாகவே பார்ப்போம்...

'நான் பர்த்ரு சிச்ருஷையை (கணவனுக்குப் பணிவிடையை) எப்போதும் செய்கிறேன். என் கணவர் வரும்போது விரைந்து சென்று ஆசனத்தில் அமரச் செய்து தீர்த்தம் கொடுக்கிறேன்.

நான் மாளிகையை நன்கு பராமரிக்கிறேன். பூந்தோட்டங்களில் நெடுநேரம் சஞ்சரித்துக் கொண்டு இருக்க மாட்டேன். தேவ பூஜை, பித்ரு பூஜைகளைச் செய்கிறேன்.

யுதிஷ்ரருக்கு லட்சம் வேலைக்காரிகள். அவர்கள் எல்லோர் பெயரும் எனக்குத் தெரியும். அவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன செய்யவில்லை என்பது எனக்குத் தெரியும். அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையை நானே ஏற்படுத்துகிறேன். அவர்களுக்குக் குறைகள் இருந்தால் சரி செய்கிறேன்.

நான் ஒருத்தியே வரவையும் செலவையும் சொத்து முழுவதையும் அறிவேன். பாண்டவர்கள் என்னிடத்தில் குடும்பப் பொறுப்பு முழுமையும் ஒப்படைத்து விட்டு, அதைப் பற்றிய கவலையின்றி இருக்கிறார்கள். அவர்களுடைய பொக்கிஷத்தில் இருப்பதை நான் ஒருத்தி தான் அறிவேன்.'

- இது பாஞ்சாலி கூறியது.

இதுவே ஒரு இல்லத்தில் மனைவியின் கடமை. எனவே இல்லத்தைப் பற்றிய பொறுப்புகளனைத்தையும் திறமையுள்ள மனைவியிடம் கணவன் ஒப்படைக்க வேண்டும்.)

अरक्षिता गृहे रुद्धाः पुरुषैराप्तकारिभिः।
आत्मानमात्मना यास् तु रक्षेयुस् ताः सुरक्षिताः॥

**அரக்ஷிதா க்ருஹே ருத்தா: புருஷைராப்தகாரிபி: |**
**ஆத்மாநமாத்மநா யாஸ்து ரக்ஷேயுஸ் தா: அரக்ஷிதா: || 12**

காவல் போட்டு பெண்களைக் காப்பாற்ற முடியாது. தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்பவர்களே உண்மையில் நன்கு காப்பாற்றப்படுபவர்கள்.

पानं दुर्जनसंसर्गः पत्या च विरहोऽटनम्।
स्वप्नोऽन्यगेहवासश् च नारीसन्दूषणानि षट्॥

**பாநம் துர்ஜந ஸம்ஸர்க: பத்யா ச விரஹோ அடநம் |**
**ஸ்வப்நோ அந்யகேஹ வாஸஷ் ச நாரீஸந்தூஷணாநிஷட் || 13**

மதுவருந்துதல், தீயோர் சேர்க்கை, கணவனை விட்டு விட்டு விலகியிருத்தல், வேலையேதுமின்றி ஊரைச் சுற்றுதல், தூக்கம், பிறர் வீட்டுக்குப் போய் நாட்கணக்கில் இருத்தல்...

- இந்த ஆறும் ஒரு பெண்ணை தூற்றுதலுக்கு ஆளாக்கும்.

नैता रूपं परीक्षन्ते नाऽऽसां वयसि संस्थितिः।
सुरूपं वा विरूपं वा पुमानित्येव भुञ्जते॥

**நைதா ரூபம் பரீக்ஷந்தேநா ஆஸாம் வயஸிஸம்ஸ்திதி: |**
**சுரூபம் வா விரூபம் வா புமாநித்யேவ புஞ்ஜதே || 14**

பெண்கள் ஆணின் அழகையோ, வயதையோ பார்க்க மாட்டார்கள். அழகனாக இருந்தாலும், குரூபியாக இருந்தாலும் பொருட்படுத்தாமல், ஆண்மகனாக இருந்தால் போதுமென்று அனுபவிப்பார்கள்.

पौंश्चल्याच् चलचित्ताच्च नैस्नेह्याच्च स्वभावतः ।
रक्षिता यत्नतोऽपीह भर्तृष्वेता विकुर्वते ॥

**பைம்ஷ்சல்யாச் சலசித்தாச்ச நைஸ்நேஹ்யாச்ச ஸ்வபாவத: |**
**ரக்ஷிதா யத்நதோ அபீஹ பர்த்ருஷ்வேதா விகுர்வதே ||** 15

பெண்கள் ஆசைப்படுபவர்களாக, சலன சித்தம் கொண்டவர்களாக இருப்பார்கள். இவர்கள் ஆத்மார்த்தமான நட்பை எவரிடமும் வைக்க மாட்டார்கள். இந்தக் காரணங்களால், எளிதில் மனம் மாறக்கூடியவர்களாக இருப்பார்கள். மனம் மாறி கணவனிடம் பற்றுதல் நீங்கும் வாய்ப்பு அதிகம் இருக்கும்.

एवं स्वभावं ज्ञात्वाऽऽसां प्रजापतिनिसर्गजम् ।
परमं यत्नमातिष्ठेत् पुरुषो रक्षणं प्रति ॥

**ஏவம் ஸ்வபாவம் ஞாத்வா ஆஸாம் ப்ரஜாபதி நிஸர்கஜம் |**
**பரமம் யத்நமாதிஷ்டேத் புருஷோ ரக்ஷணம் ப்ரதி ||** 16

பிரம்ம சிருஷ்டியில் பெண்களின் இயல்பு இவ்வாறாக இருப்பதால் ஆண்மகன் மேலான முயற்சிகளால் அவர்களைத் தன்வசப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

शय्याऽऽसनमलङ्कारं कामं क्रोधमनार्जवम् ।
द्रोहभावं कुचर्यां च स्त्रीभ्यो मनुरकल्पयत् ॥

**ஷய்யா ஆஸநமலங்காரம் காமம் க்ரோதமநார்ஜவம் |**
**த்ரோஹ பாவம் குசர்யாம் ச ஸ்த்ரீப்யோ மனுரகல்பயத் ||** 17

பெண்கள் படுக்கை, ஆசனம், அலங்காரங்களுக்கு ஆசைப் படுவார்கள். காம குரோதங்களுக்கு வசப்பட்டிருப்பார்கள். செய்யத் தகாததைச் செய்பவர்களாகவும் துரோக பாவத்தோடும் இருப்பார்கள்.

नास्ति स्त्रीणां क्रिया मन्त्रैरिति धर्मे व्यवस्थितिः ।
निरिन्द्रिया ह्यमन्त्राश् च स्त्रियोऽनृतमिति स्थितिः ॥

**நாஸ்தி ஸ்த்ரீணாம் க்ரியா மந்த்ரைரிதி தர்மே வ்யவஸ்திதி: |**
**நிரிந்த்ரியாஹ்யமந்த்ராஷ் ச ஸ்த்ரியோ அந்ருதமிதி ஸ்திதி: ||** 18

ஜாதகர்மா முதலான மந்திரபூர்வமான கிரியைகள் பெண்களுக்கு தர்மசாஸ்திரத்தில் விதிக்கப்படவில்லை. மந்திரங்களால் ஆண்கள் பாவத்தைத் தொலைத்துக் கொள்வது போன்று பெண்கள் தொலைத்துக் கொள்ள முடியாது. பெண்கள் சுதந்திரமற்றவர்களாக இருப்பதால், தண்டனைக்குப் பயந்தோ, வசவுக்குப் பயந்தோ பொய் பேசுபவர்களாக இருப்பார்கள்.

तथा च श्रुतयो बह्व्यो निगीता निगमेष्वपि।
स्वालक्षण्यपरीक्षार्थं तासां शृणुत निष्कृतीः॥

**ததா ச ஸ்ருதயோ பஹ்வ்யோ நிகீதா நிகமேஷ்வபி |**
**ஸ்வாலக்ஷண்ய பரீக்ஷார்தம் தாஸாம் ஷ்ருணுத நிஷ்க்ருதீ: ||** **19**

எனவே பல பெண்கள் தீயொழுக்கத்தோடு இருப்பார்கள். உதாரணத்துக்கு ஒன்று கூறுகிறேன், கேளுங்கள்.

यन् मे माता प्रलुलुभे विचरन्त्यपतिव्रता।
तन् मे रेतः पिता वृङ्क्तामित्यस्यैतन् निदर्शनम्॥

**யந்மே மாதா ப்ரளுளுபே விசரந்த்யபதிவ்ரதா |**
**தந்மேரேத: பிதா வ்ருங்தாமித்யஸ்யைதந் நிதர்ஷநம் ||** **20**

இது ஒரு மந்த்ர வாக்யம்:- என் தாய் பதிவிரதையாக இல்லாமல், பிற வீடுகளுக்குச் செல்பவளாக, பரபுருஷனை நினைத்தவளாக இருந்தால், எனது தந்தை தன் வீரியத்தால் அவளைஅடக்கட்டும்.

ध्यायत्यनिष्टं यत्किञ्चित् पाणिग्राहस्य चेतसा।
तस्यैष व्यभिचारस्य निह्नवः सम्यगुच्यते॥

**த்யாயத்யநிஷ்டம் யத்கிஞ்சித் பாணிக்ராஹஸ்ய சேதஸா |**
**தஸ்யைஷ வ்யபிசாரஸ்ய நிஹ்நவ: ஸம்யகுச்யதே ||** **21**

ஒரு பெண் கரம் பிடித்துக் கொடுக்கப்பட்ட தன் கணவனுக்கு இஷ்டமில்லாததை சிறிதேனும் மனத்தில் நினைத்திருந்தால், அதாவது மனத்தால் வேறொரு ஆடவனை நினைத்திருந்தால், அதுவும் விபசாரமேயாகும்.

यादृग्गुणेन भर्त्रा स्त्री संयुज्येत यथाविधि।
तादृग्गुणा सा भवति समुद्रेणेव निम्नगा॥

**யாத்ருக் குணேந பர்த்ரா ஸ்த்ரீ ஸம்யுஜ்யேத யதாவிதி |**
**தாத்ருக் குணா ஸா பவதி ஸமுத்ரேணேவ நிம்நகா ||** **22**

ஒரு கணவன் எந்த குண நலன்களோடு இருக்கிறானோ, அவனை மணந்து அவனுக்குப் பணிவிடைகள் செய்யும் மனைவியும் அத்தகைய குணநலன்களையே அடைகிறாள். ஆறுகள் கடலைச் சென்றடைந்ததும் கடல் நீராகவே மாறிவிடுவது போல் கணவனை அடைந்த பெண்ணும் அவனைப் போன்றே ஆகிறாள்.

अक्षमाला वसिष्ठेन संयुक्ताऽधमयोनिजा।
शारङ्गी मन्दपालेन जगामाऽभ्यर्हणीयताम्॥

**அக்ஷமாலா வஸிஷ்டேந ஸம்யுக்தா அதமயோநிஜா |**
**ஷாரங்கீ மந்தபாலேந ஜகாமா அப்யர்ஹணீ யதாம் ||** **23**

*அக்ஷமாலா என்னும் நீச ஜாதிப் பெண் வசிஷ்டரை மணந்தும், சாரங்கீ என்னும் நீச ஜாதிப் பெண் மந்தபாலரை மணந்தும் மேன்மையானவர்களாக வாழ்ந்தார்கள்.*

एताश् चाऽन्याश् च लोकेऽस्मिन्नपकृष्टप्रसूतयः।
उत्कर्षं योषितः प्राप्ताः स्वैःस्वैर् भर्तृगुणैः शुभैः॥

**ஏதாஷ் சா அந்யாஷ் ச லோகே அஸ்மிந் நபக்ருஷ்ட ப்ரஸூதய: |**
**உத்கர்ஷம் யோஷித: ப்ராப்தா: ஸ்வை: ஸ்வைர் பர்த்ருகுணை: ஷுபை: ||** **24**

*இவர்கள் மட்டுமல்ல, உலகில் இன்னும் பல ஈன ஜாதிப் பெண்களும் மேலான கணவர்களை அடைந்து, தங்கள் தங்கள் கணவன்மார்களின் குணங்களைப் பெற்று மேன்மையடைந்துள்ளார்கள்.*

एषोदिता लोकयात्रा नित्यं स्त्रीपुंसयोः शुभा।
प्रेत्येह च सुखोदर्कान् प्रजाधर्मान् निबोधत॥

**ஏஷோதிதா லோகயாத்ரா நித்யம் ஸ்த்ரீபும்ஸயோ: ஷுபா |**
**ப்ரத்யேஹ ச சுகோதர்காந் ப்ரஜாதர்மாந் நிபோதத ||** **25**

*கணவன் மனைவியர் நித்தியமாக நடத்த வேண்டிய முறைகளைக் கூறினேன். இனி சுகமளிக்கும் சந்ததி தர்மங்களைக் கூறுகிறேன்.*

प्रजनार्थं महाभागाः पूजार्हा गृहदीप्तयः।
स्त्रियः श्रियश् च गेहेषु न विशेषोऽस्ति कश्चन॥

**ப்ரஜநார்தம் மஹாபாகா: பூஜாஅர்ஹா க்ருஹதீப்தய: |**
**ஸ்த்ரிய: ஷ்ரியஷ் ச கேஷேஷு ந விசேஷோ அஸ்தி கஷ்சந ||** **26**

*வீட்டை விளங்கச் செய்து சந்ததிகளை உருவாக்குவது பெண்களே என்பதால், அவர்கள் மிகவும் போற்றுதலுக்குரியவர்கள். அவர்கள் வீட்டில் இருக்கும் லக்ஷ்மிகள் (கிருஹ லக்ஷ்மிகள்). இதற்கும் மேல் அவர்களைப் போற்ற வேறு வார்த்தைகள் ஏது?*

उत्पादनमपत्यस्य जातस्य परिपालनम्।
प्रत्यहं लोकयात्रायाः प्रत्यक्षं स्त्रीनिबन्धनम्॥

**உத்பாதநமபத்யஸ்ய ஜாதஸ்ய பரிபாலனம் |**
**ப்ரத்யஹம் லோகயாத்ராயா: ப்ரத்யக்ஷம் ஸ்த்ரீ நிபந்தநம் || 27**

*பிள்ளை பெறுபவளும் பெண்தான்; பெற்ற பிள்ளைகளைப் பேணி வளர்ப்பவளும் பெண்தான். ஒரு குடும்பத்தைக் கட்டுக்கோப்பாக நடத்திச் செல்பவர்களும் பெண்கள்தான். உலக வாழ்க்கையின் அஸ்திவாரமே பெண்கள்தான்.*

अपत्यं धर्मकार्याणि शुश्रूषा रतिरुत्तमा।
दाराधीनस् तथा स्वर्गः पितृणामात्मनश् च ह॥

**அபத்யம் தர்மகார்யாணி சுஷ்ரூஷா ரதிருத்தமா |**
**தாராதீநஸ் ததா ஸ்வர்க: பித்ருணாமாத்மநஷ் சஹ || 28**

*ஒருவன் சந்ததியைப் பெற்று இம்மை மறுமை இன்பங்களை அடையச் செய்பவள் மனைவியே. ஒருவன் தர்மகாரியங்களைச் செய்ய உறுதுணையாக இருப்பவளும் மனைவியே. மந்திரபூர்வமான தர்ம காரியங்களுக்கு அவன் மனைவியும் உடனிருந்தாக வேண்டும். மனைவியில்லாவிடில் செய்ய முடியாது.*

*அவனுக்குப் பணிவிடை புரிபவளும், சுகம் தருபவளும் மனைவியே. பித்ரு காரியங்களுக்கு உடனிருந்து உதவுபவளும் அவளே. மொத்தத்தில் அவனுக்கும், அவன் முன்னோருக்கும் சொர்க்கலோகம் கிடைக்கச் செய்பவள் அவன் மனைவியேயாகும்.*

पतिं या नाऽभिचरति मनोवाग्देहसंयता।
सा भर्तृलोकानाप्नोति सद्भिः साध्वीति चोच्यते॥

**பதிம் யா நா அபிசரதி மநோவாக்தேஹஸம்யதா |**
**ஸா பர்த்ருலோகாநாப்நோதி ஸத்பி: ஸாத்வீதி சோச்யதே || 29**

*மனத்தாலும், வாக்காலும், சரீரத்தாலும் கணவனையே அனுசரித்திருக்கும் மனைவி, கணவன் தன் புண்ணிய பலன்களால் எத்தகைய உயர்ந்த லோகத்தை அடைகிறானோ, அதே லோகத்தை தானும் அடைகிறாள்.*

व्यभिचारात् तु भर्तुः स्त्री लोके प्राप्नोति निन्द्यताम्।
सृगालयोनिं चाऽऽप्नोति पापरोगैश् च पीड्यते॥

**வ்யபிசாராத் து பர்து: ஸ்த்ரீலோகே ப்ராப்நோதி நிந்த்யதாம் |**
**ஸ்ருகாலயோநிம் சாஆப்நோதி பாபரோகைஷ் ச பீட்யதே || 30**

*விபசாரியான பெண் உலகத்தில் நிந்திக்கப்படுவாள்; இறந்தபின் நரியாகப் பிறப்பாள்; பாப ரோகங்களால் (கொடிய நோய்களால்) பீடிக்கப்படுவாள்.*

पुत्रं प्रत्युदितं सद्भिः पूर्वजैश् च महर्षिभिः।
विश्वजन्यमिमं पुण्यमुपन्यासं निबोधत॥

**புத்ரம் ப்ரத்யுதிதம் ஸத்பி: பூர்வஜைஷ்ச மஹர்ஷிபி: |**
**விஷ்வஜந்யமிமம் புண்யமுபந்யாசம் நிபோதத ||** 31

புத்திரர்களைப் பற்றி, மஹான்களான, முன்னோர்களான, மஹரிஷிகளால் உலகுக்கு ஹிதமானதாக, நன்மை தரக்கூடியதாக சொல்லப்பட்ட தர்மமான விஷயங்களைக் கூறுகிறேன்.

भर्तुः पुत्रं विजानन्ति श्रुतिद्वैधं तु भर्तरि।
आहुरुत्पादकं केचिदपरे क्षेत्रिणं विदुः॥

**பர்து: புத்ரம் விஜாநந்தி ஸ்ருதித்வைதம் து பர்தரி |**
**ஆஹுருத்பாதகம் கேசிதபரே க்ஷேத்ரிணம் விது: ||** 32

கணவன் விஷயத்தில் புத்திரர்களைப் பற்றி ஸ்ருதிகள் இருவகையாகக் கூறுகின்றன. கர்ப்பத்தை அளித்தவனே அந்தக் குழந்தைக்குத் தந்தை என்றும், கர்ப்பத்தை அளித்தவன் வேறாக இருந்தாலும் அவனை மணந்தவனே அக்குழந்தைக்குத் தந்தை என்றும் இருவகையாகக் கூறுகின்றன.

क्षेत्रभूता स्मृता नारी बीजभूतः स्मृतः पुमान्।
क्षेत्रबीजसमायोगात् सम्भवः सर्वदेहिनाम्॥

**க்ஷேத்ர பூதா ஸ்ம்ருதா நாரீ பீஜபூத: ஸ்ம்ருத: பூமாந் |**
**க்ஷேத்ர பீஜஸமாயோகாத் ஸம்பவ: ஸர்வதேஹிநாம் ||** 33

பெண் என்பவள் நிலத்துக்குச் சமம். ஆண் விதைக்கு சமம். நிலமும் விதையும் சேர்வதால் சகல உயிர்களும் உண்டாகின்றன.

विशिष्टं कुत्रचिद् बीजं स्त्रीयोनिस् त्वेव कुत्रचित्।
उभयं तु समं यत्र सा प्रसूतिः प्रशस्यते॥

**விசிஷ்டம் குத்ரசித் பீஜம் ஸ்த்ரீயோநிஸ்த்வேவ குத்ரசித் |**
**உபயம் து ஸமம் யத்ர ஸா ப்ரசூதி: ப்ரஷஷ்யதே ||** 34

விதையின் தன்மை மேலோங்க சில இடங்களில் புத்திரர்கள் பிறப்பார்கள். நிலத்தின் தன்மை மேலோங்க சில இடங்களில் புத்திரர்கள் பிறப்பார்கள். இரண்டு தன்மைகளும் சேர்ந்தும் சில இடங்களில் பிறப்பார்கள். இத்தகைய சந்ததி தோன்றுவது உயர்வு என்பது பெரியோர் கூற்று.

बीजस्य चैव योन्याश् च बीजमुत्कृष्टमुच्यते।
सर्वभूतप्रसूतिर् हि बीजलक्षणलक्षिता॥

**பீஜஸ்ய சைவ யோந்யாஷ் ச பீஜமுத்க்ருஷ்ட முச்யதே |**
**ஸர்வ பூதப்ரகூதிர் ஹி பீஜலக்ஷணலக்ஷிதா ||** 35

தோன்றும் உயிர்களெல்லாம் பீஜத்தின் (விதையின்) தன்மைகளைக் கொண்டே தோன்றுகின்றன. எனவே பீஜம் யோநி இரண்டையும் பார்க்கும்போது பீஜமே சிறந்ததாகச் சொல்லப் படுகிறது.

यादृशं तूप्यते बीजं क्षेत्रे कालोपपादिते।
तादृग् रोहति तत् तस्मिन् बीजं स्वैर् व्यञ्जितं गुणैः॥

**யாத்ருஷம் தூப்யதே பீஜம் க்ஷேத்ரே காலோபபாதிதே |**
**தாத்ருக் ரோஹதி தத் தஸ்மிந்பீஜம் ஸ்வைர் வ்யஞ்ஜிதம் குணை: ||** 36

காலமறிந்து நிலத்தில் விதைக்கப்பட்ட விதை, அதன் குணங்களோடே வளர்கிறது. மாங்கொட்டையை நிலத்தில் நட்டால் மாமரம்தானே வளரும். எது விதைக்கப்படுகிறதோ, அது தன்னைப் போன்றவற்றையே உண்டாக்கி பலன் தந்து விளங்குகிறது.

इयं भूमिर् हि भूतानां शाश्वती योनिरुच्यते।
न च योनिगुणान् कांश् चिद् बीजं पुष्यति पुष्टिषु॥

**இயம் பூமிர் ஹி பூதாநாம் ஷாஷ்வதீ யோநிருச்யதே |**
**நச யோநிகுணாந் காம்ஷ்சித் பீஜம் புஷ்யதி பூஷ்டிஷு ||** 37

பூமியே எல்லா உயிர்களுக்கும் காரணம் எனப்படுகிறது. ஆனால் நிலத்தில் விதைக்கப்பட்ட விதைகள் பூமியின் தன்மையைக் கொண்டு வளர்வதில்லை. விதையின் தன்மையைக் கொண்டே வளர்கின்றன. எனவே பீஜமே (விதையே) பிரதானம்.

भूमावप्येककेदारे कालोप्तानि कृषीवलैः।
नानारूपाणि जायन्ते बीजानीह स्वभावतः॥

**பூமாவப்யேக கேதாரே காலோப்தாநி க்ருஷீவலை: |**
**நாநாரூபாணி ஜாயந்தே பீஜாநீஹ ஸ்வபாவத: ||** 38

பூமியில் அந்தந்தக் காலங்களில் எந்தெந்த விதைகள் விதைக்கப் படுகின்றனவோ, அந்தந்த விதைகளின் உருவத்தோடும், தன்மை யோடும் வளர்கின்றன. பூமியைப் போன்று எதுவும் ஆவதில்லை யன்றோ.

व्रीहयः शालयो मुद्गास् तिला माषास् तथा यवाः।
यथाबीजं प्ररोहन्ति लशुनानीक्षवस् तथा॥

**வ்ரீஹய: ஷாலயோ முத்காஸ் திலா மாஷாஸ் ததா யவா: |**
**யதாபீஜம் ப்ரரோஹந்தி லஷூநாநீக்ஷவஸ் ததா ||** 39

*நெல் வகைகள், சம்பா வகைகள், பருப்பு வகைகள், எள், உளுந்து, பார்லி முதலான அனைத்தும் விதைகளைப் பொறுத்தே உருவாகின்றன.*

अन्यदुप्तं जातमन्यदित्येतन् नोपपद्यते।
उप्यते यद् धि यद् बीजं तत्तदेव प्ररोहति॥

**அந்ததுப்தம் ஜாதமந்யதித்யேதந் நோபபத்யதே |**
**உப்யதே யத் தி யத் பீஜம் தத்ததேவ ப்ரரோஹதி ||** 40

*விதைப்பது ஒன்றும் விளைவது வேறொன்றுமாக எப்போதும் ஆவதில்லை. விதையைப் பொறுத்தே விளைவது இருக்கிறது. எனவே விதையே பிரதானமானது.*

तत् प्राज्ञेन विनीतेन ज्ञानविज्ञानवेदिना।
आयुष्कामेन वप्तव्यं न जातु परयोषिति॥

**தத் ப்ரக்ஞேந விநீதேந ஞானவிஞ்ஞானவேதிநா |**
**ஆயுஷ்காமேந வப்தவ்யம் ந ஜாது பரயோஷிதி ||** 41

*நல்லொழுக்கமுள்ள, ஞான விஞ்ஞானங்களையறிந்த, நீண்ட ஆயுளை விரும்பும் புத்திசாலி எப்போதும் தன் விதையை பிறர் நிலத்தில் விதைக்க மாட்டான். அதாவது பிறருடைய தாரத்துடன் சேர மாட்டான்.*

अत्र गाथा वायुगीताः कीर्तयन्ति पुराविदः।
यथा बीजं न वप्तव्यं पुंसा परपरिग्रहे॥

**அத்ர காதா வாயுகீதா: கீர்தயந்தி புராவித: |**
**யதா பீஜம் ந வப்தவ்யம் பும்ஸா பரபரிக்ரஹே ||** 42

*முன்னர் இருந்த மூத்தவர்கள், புருஷன் பிறன் மனைவியிடம் தன் பீஜத்தைச் சேர்க்கக்கூடாது என்னும் வாயுவின் கூற்றுக்களை இசைத்துக் கொண்டிருப்பார்கள்.*

नश्यतीषुर् यथा विद्धः खे विद्धमनुविध्यतः।
तथा नश्यति वै क्षिप्रं बीजं परपरिग्रहे॥

**நஷ்யதீஷூர் யதா வித்த: கே வித்தமனுவித்யத: |**
**ததா நஷ்யதி வை க்ஷிப்ரம் பீஜம் பரபரிக்ரஹே ||** 43

ஒரு மிருகத்தின் மீது ஒருவன் அம்பெய்கிறான். அதன் மீதே இன்னொருவனும் அம்பெய்தால், அந்த மிருகம் முதலில் அம்பெய்தவனுக்கே உரியதாகும். அவ்வாறே பிறன் மனைவியிடம் சேர்க்கும் பீஜமும் வீணாகும்.

पृथोरपीमां पृथिवीं भार्यां पूर्वविदो विदुः।
स्थाणुच्छेदस्य केदारमाहुः शल्यवतो मृगम्॥

**ப்ருதோரபீமாம் ப்ருதிவீம் பார்யாம் பூர்வவிதோ விது: |**
**ஸ்தாணுச்சேதஸ்ய கேதாரமாஹு: ஷல்யவதோ ம்ருகம் || 44**

முதலில் இந்த பூமியை பிருது சக்கரவர்த்தி கைப்பற்றி ஆண்டதால் பிருதுவின் மனைவி என்ற பொருளில் பூமிக்கு பிருதிவி என்ற பெயர் ஏற்பட்டது.

முதலில் ஒரு நிலத்தை சமன்படுத்தி உழுபவனுக்கே அந்த நிலம் சொந்தம்.

முதலில் வீழ்த்தியவனுக்கே மிருகம் சொந்தம்.

एतावानेव पुरुषो यज् जायाऽऽत्मा प्रजेति ह।
विप्राः प्राऽऽहुस् तथा चैतद् यो भर्ता सा स्मृताऽङ्गना॥

**ஏதாவாநேவ புருஷோ யஜ் ஜாயா ஆத்மா ப்ரஜேதி ஹ |**
**விப்ரா: ப்ராஆஹுஸ் ததா சைதத் யோ பர்தா ஸாஸ்ம்ருதா அங்கநா || 45**

ஒரு புருஷன் என்று சொல்லும்போது அது அவனை மட்டுமே குறிக்காது. மனைவி என்பவள் அவனில் பாதி. புத்திரர்களோவெனில் அவனேதான். வேறு அல்ல. ஆகவே மனைவி மக்களோடு கூடிய ஒருவனே புருஷன் எனப்படுவான்.

न निष्क्रयविसर्गाभ्यां भर्तुर् भार्या विमुच्यते।
एवं धर्मं विजानीमः प्राक् प्रजापतिनिर्मितम्॥

**ந நிஷ்க்ரியவிஸர்காப்யாம் பர்துர் பார்யா விமுச்யதே |**
**ஏவம் தர்மம் விஜாநீம: ப்ராக் ப்ரஜாபதி நிர்மிதம் || 46**

சுல்கத்தை (பரிசத்தை) திருப்பிக் கொடுத்து விடுவதால் அவர்களின் கணவன் - மனைவி பந்தம் இல்லாமல் போகாது. மனைவியை அயலானுக்கு தானம் கொடுப்பதாலும்கூட கணவன் - மனைவி பந்தம் நீங்காது. இவ்வாறான தர்மத்தை பிரம்மதேவர் நியமித்துள்ளார்.

सकृदंशो निपतति सकृत् कन्या प्रदीयते।
सकृदाह ददानीति त्रीण्येतानि सतां सकृत्॥

**ஸக்ருதம்ஷோ நிபததி ஸக்ருத் கந்யா ப்ரதீயதே |**
**ஸக்குதாஹ ததாநீதி த்ரீண்யேதாநி ஸதாம் ஸக்ருத் ||** 47

மூன்று விஷயங்களை ஒரே ஒரு முறைதான் செய்ய முடியும். மற்றொரு முறை செய்தால் செல்லுபடியாகாது.

1) சகோதரர்களுக்குள் பாகப் பிரிவினை ஒருமுறைதான் நடைபெற வேண்டும்.

2) ஒரு தந்தை தன் மகளை ஒரு முறைதான் ஒருவனுக்குக் கரம் பற்றிக் கொடுக்க வேண்டும்.

3) தானம் ஒரு முறைதான் கொடுக்க வேண்டும். கொடுத்த பொருளை திரும்பக் கொடுக்க முடியாது.

यथा गोऽश्वोष्ट्रदासीषु महिष्यजाऽविकासु च।
नोत्पादकः प्रजाभागी तथैवाऽन्याऽङ्गनास्वपि॥

**யதா கோஅஷ்வோஷ்ட்ரதாஸீஷு மஹிஷ்யஜா அவிகாசு ச |**
**நோத்பாதக: ப்ரஜாபாகீ ததைவா அந்யா அங்கநாஸ்வபி ||** 48

பசுக்கள், குதிரைகள், ஒட்டகங்கள், எருமைகள், ஆடுகள் முதலியவைகளுக்குப் பிறந்தவை அவைகளின் உரிமைக்காரனுக்கே சொந்தம். அதேபோன்று தாசிகளுக்குப் பிள்ளை பிறந்தாலும், அந்த தாசிக்கு சொந்தக்காரன் யாரோ அவனுக்கே சொந்தம். யாருக்கு அந்தப் பிள்ளை பிறந்ததோ அவனுக்கு சொந்தமாகாது.

येऽक्षेत्रिणो बीजवन्तः परक्षेत्रप्रवापिणः।
ते वै सस्यस्य जातस्य न लभन्ते फलं क्वचित्॥

**யே அக்ஷேத்ரிணோ பீஜவந்த: பரக்ஷேத்ர ப்ரவாபிண: |**
**தேவை ஸஸ்யஸ்ய ஜாதஸ்ய ந லபந்தே பலம் க்வசித் ||** 49

தன்னுடைய விதைகளை பிறருடைய நிலத்தில் விதைத்தால், அதில் வரும் விளைச்சல் அவனுக்குச் சொந்தமாகாது. நிலத்துக்கு சொந்தக்காரன் எவனோ, அவனுக்கே அந்த விளைச்சல் சொந்தமாகும்.

यदन्यगोषु वृषभो वत्सानां जनयेच्छतम्।
गोमिनामेव ते वत्सा मोघं स्कन्दितमार्षभम्॥

**யதந்யகோஷு வ்ருஷபோ வத்ஸாநாம் ஜநயேச்சதம் |**
**கோமிநாமேவ தே வத்ஸா மோகம் ஸ்கந்திதமார்ஷபம் ||** 50

தனது ரிஷபத்தைக் கொண்டு அந்நியரின் பசுக்களிடம் எத்தனை சந்ததிகளை உருவாக்கினாலும் அந்த சந்ததிகள் பசுக்களின் சொந்தக்காரனுக்கே உரியவை. ஒருநாளும் ரிஷபத்தின் சொந்தக் காரனான இவனுக்கு உரிமை கிடையாது.

तथैवाऽक्षेत्रिणो बीजं परक्षेत्रप्रवापिणः।
कुर्वन्ति क्षेत्रिणामर्थं न बीजी लभते फलम्॥

**தைவா அக்ஷேத்ரிணோ பீஜம் பரக்ஷேத்ர ப்ரவாபிண: |**
**குர்வந்தி க்ஷேத்ரிணாமர்தம் ந பீஜீ லபதே பலம் || 51**

அவ்வாறே பிற பெண்ணிடம் ஒரு சந்ததியை உற்பத்தி செய்தால், அப்பெண்ணின் கணவனுக்கே அந்த சந்ததி சொந்த மாகும். இவனுக்கு சொந்தமாகாது.

फलं त्वनभिसन्धाय क्षेत्रिणां बीजिनां तथा।
प्रत्यक्षं क्षेत्रिणामर्थो बीजाद् योनिर् गरीयसी॥

**பலம் த்வநபிஸந்தாய க்ஷேத்ரிணாம் பீஜிநாம் ததா |**
**ப்ரத்யக்ஷம் க்ஷேத்ரிணாமர்தோ பீஜாத் யோநிர் கரீயஸீ || 52**

நிலத்து சொந்தக்காரனும், விதைகளின் (பீஜங்களின்) சொந்தக்காரனும் ஏதும் ஒப்பந்தம் செய்து கொள்ளாத வரையில் விளைந்த பொருள் நிலத்துச் சொந்தக்காரனுக்கே உரியது.

क्रियाऽभ्युपगमात् त्वेतद् बीजार्थं यत् प्रदीयते।
तस्येह भागिनौ दृष्टौ बीजी क्षेत्रिक एव च॥

**க்ரியா அப்யுபகமாத் த்வேதத் பீஜார்தம் யத் ப்ரதீயதே |**
**தஸ்யேஹ பாகிநௌ த்ருஷ்டௌ பீஜீ க்ஷேத்ரிக ஏவ ச || 53**

இதில் கிடைக்கும் விளைச்சல் நம் இருவருக்கும் சேர்ந்தது என்று ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டால், அந்த விளைச்சல் நிலத்துக்காரன் - விதைத்தவன் ஆகிய இருவருக்கும் சொந்தம்.

ओघवाताऽऽहृतं बीजं यस्य क्षेत्रे प्ररोहति।
क्षेत्रिकस्यैव तद् बीजं न वप्ता लभते फलम्॥

**ஓகவாதா ஆஹ்ருதம் பீஜம் யஸ்ய க்ஷேத்ரே ப்ரரோஹதி |**
**க்ஷேத்ரிகஸ்யைவ தத் பீஜம் நவப்தா லபதே பலம் || 54**

நதியின் வேகத்தாலும், காற்றின் வேகத்தாலும் கொண்டு போகப்பட்ட விதை எந்த நிலத்தில் விளைகிறதோ, அந்நிலத்துக் காரனுக்கே அந்த விதையின் விளைச்சல் சொந்தம். விதையின் சொந்தக்காரனுக்கு பலன் கிடையாது.

एष धर्मो गवाऽश्वस्य दास्युष्ट्राऽजाऽविकस्य च।
विहङ्गमहिषीणां च विज्ञेयः प्रसवं प्रति॥

**ஏஷதர்மோகவா அஷ்வஸ்ய தாஸ்யுஷ்ட்ரா அஜாஅவிகஸ்யச |**
**விஹங்க மஹிஷீணாம் ச விக்ஞேய: ப்ரஸவம் ப்ரதி ||** 55

*பசுக்கள், குதிரைகள், தாசிகள், ஒட்டகங்கள், ஆடுகள், எருமைகள் விஷயத்திலும் சந்ததிகள் ஏற்படும்போது, இவற்றின் சொந்தக்காரனும், ரிஷபம் முதலானவற்றின் சொந்தக்காரனும் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். அப்போது சந்ததிகள் இருவருக்கும் சொந்தமாகும்.*

एतद् वः सारफल्गुत्वं बीजयोन्योः प्रकीर्तितम्।
अतः परं प्रवक्ष्यामि योषितां धर्ममापदि॥

**ஏதத் வஹ ஸாரபல்குத்வம் பீஜயோந்யோ: ப்ரகீர்த்திதம் |**
**அத:பரம் ப்ரவக்ஷ்யாமி யோஷிதாம் தர்மமாபதி ||** 56

*பீஜம், யோநி இவைகளில் எது சிறந்தது என்பது பற்றி கூறினேன். இனி ஆபத்துக்கால தர்மத்தைக் கூறுகிறேன், கேளுங்கள்.*

भ्रातुर् ज्येष्ठस्य भार्या या गुरुपत्न्यनुजस्य सा।
यवीयसस् तु या भार्या स्नुषा ज्येष्ठस्य सा स्मृता॥

**ப்ராதுர் ஜ்யேஷ்டஸ்ய பார்யா யா குருபத்ந்யனு ஜஸ்யஸா |**
**யவீயஸஸ்து யா பார்யா ஸ்நுஷா ஜ்யேஷ்டஸ்ய ஸாஸ்ம்ருதா ||** 57

*ஒருவனுக்கு அவன் தமையனின் மனைவி, குரு பத்தினிக்கு சமமானவள். தம்பியின் மனைவி மருமகளுக்கு (தன் மகனை மணந்து வந்த பெண்) சமம் என்று பெரியோர் கூறுவர்.*

ज्येष्ठो यवीयसो भार्यां यवीयान् वाऽग्रजस्त्रियम्।
पतितौ भवतो गत्वा नियुक्तावप्यनापदि॥

**ஜ்யேஷ்டா யவீயஸோ பார்யாம் யவீயாந்வா அக்ரஜ ஸ்த்ரியம் |**
**பதிதெள பவதோ கத்வா நியுக்தாவப்யநாபதி ||** 58

*அண்ணனோ தம்பியோ, தங்களுக்கு சந்ததியே ஏற்படாது என்ற நிலை ஏற்பட்டாலன்றி ஒருவர் மனைவியை அடுத்தவர் கூடுவது தவறு. அப்படிக் கூடியவர்கள் பெரும் பாபிகளாவார்கள்.*

देवराद् वा सपिण्डाद् वा स्त्रिया सम्यङ् नियुक्तया।
प्रजेप्सिताऽधिगन्तव्या सन्तानस्य परिक्षये॥

**தேவராட்வா ஸபிண்டாத் வா ஸ்த்ரியா ஸம்யக் நியுக்தயா |**
**ப்ரஜேப்ஸிதா அதிகந்தவ்யா ஸந்தானஸ்ய பரிக்ஷயே ||** 59

சந்தானம் இல்லாதபோது ஒரு பெண், தன் கணவன் மற்றும் பெரியோர் அனுமதியுடன் மைத்துனன் அல்லது பங்காளியினால் ஒரு பிள்ளையைப் பெறலாம்.

विधवायां नियुक्तस् तु घृताक्तो वाग्यतो निशि।
एकमुत्पादयेत् पुत्त्रं न द्वितीयं कथञ्चन॥

**விதவாயாம் நியுக்தஸ் து க்ருதாஅக்தோ வாக்யதோ நிஷி |**
**ஏகமுத்பாதயேத் புத்ரம் ந த்விதீயம் கதஞ்சந || 60**

பெரியோரால் அனுமதிக்கப்பட்டு விதவையைக் கூடுவதற்குச் செல்பவன், உடல் முழுதும் நெய்யைப் பூசிக்கொண்டு, மௌனமாக இருட்டில் அவளிடம் ஒரு சந்ததியை ஏற்படுத்த வேண்டும். அதற்கும் மேல் மீண்டும் இன்னொரு சந்ததியை ஏற்படுத்தக் கூடாது.

द्वितीयमेके प्रजनं मन्यन्ते स्त्रीषु तद्विदः।
अनिर्वृतं नियोगार्थं पश्यन्तो धर्मतस् तयोः॥

**த்விதீயமேகே ப்ரஜநம் மந்யந்தே ஸ்திரீஷு தத்வித: |**
**அநிர்வ்ருதம் நியோகார்தம் பஷ்யந்தோ தர்மதஸ் தயோ: || 61**

சில அறிஞர்கள் ஒரு மகனைப் பெற்றவள் மலடியே என்பதால், இன்னொரு மகனையும் உருவாக்குவது சரியே என்று கூறியிருக்கிறார்கள்.

विधवायां नियोगार्थे निर्वृत्ते तु यथाविधि।
गुरुवच्च स्नुषावच्च वर्तेयातां परस्परम्॥

**விதவாயாம் நியோகார்தே நிர்வ்ருத்தே து யதாவிதி |**
**குருவச்ச ஸ்நுஷாவச்ச வர்தேயாதாம் பரஸ்பரம் || 62**

விதவை கருவுற்ற பிறகு, அவள், அவனை குருவைப் போல் நினைக்க வேண்டும். அவன், அவளை மருமகளைப் போல் நினைக்க வேண்டும்.

नियुक्तौ यौ विधिं हित्वा वर्तेयातां तु कामतः।
तावुभौ पतितौ स्यातां स्नुषागगुरुतल्पगौ॥

**நியுக்தௌ யௌ விதிம் ஹித்வா வர்தேயாதாம் து காமத: |**
**தாஷபௌ பதிதௌ ஸ்யாதாம் ஸ்நுஷாககுருதல்பகௌ || 63**

அவனும் அவளும் அவ்வாறு நினைக்காமல் மீண்டும் காமத்தோடு கூடினார்களானால், குருவைக் கூடிய, மருமகளைக் கூடிய பாபத்துக்காளாவார்கள்.

नाऽन्यस्मिन् विधवा नारी नियोक्तव्या द्विजातिभिः।
अन्यस्मिन् हि नियुञ्जाना धर्मं हन्युः सनातनम्॥

**நா அந்யஸ்மிந் விதவா நாரீ நியோக்தவ்யா த்விஜாதிபி: |**
**அந்யஸ்மிந் ஹி நியுஞ்ஜாநா தர்மம் ஹந்யு: ஸநாதநம் || 64**

*பிராம்மண விதவைப் பெண்ணை, இன்னொருவன் மூலம் புத்திரனைப் பெறுவதற்கு, பெரியோர் அனுமதிக்கக் கூடாது. அப்படி அனுமதித்தவர்களுக்கு தர்மத்தைக் கெடுத்த பாவம் வந்து சேரும்.*

नोद्वाहिकेषु मन्त्रेषु नियोगः कीर्त्यते क्वचित्।
न विवाहविधावुक्तं विधवावेदनं पुनः॥

**நோத்வாஹிகேஷு மந்த்ரேஷு நியோக: கீர்த்யதேக்வசித் |**
**நவிவாஹ விதாவுக்தாம் விதவா வேதனம் புந: || 65**

*சந்ததியில்லாமல் போனால், மற்றொருவனிடமிருந்து பிள்ளை பெறலாம் என்று வேத மந்திரத்திலும் கூறப்படவில்லை. விவாக விதிகளில் விதவைக்கு இன்னொரு விவாகத்தையும் சொல்லவில்லை.*

अयं द्विजैर् हि विद्वद्भिः पशुधर्मो विगर्हितः।
मनुष्याणामपि प्रोक्तो वेने राज्यं प्रशासति॥

**அயம் த்விஜைர் ஹி வித்வத்பி: பஷுதர்மோ விகர்ஹித: |**
**மனுஷ்யாணாமபி ப்ரோக்தோ வேநே ராஜ்யம் ப்ரஷாஸதி || 66**

*த்விஜர்களான வித்வான்கள், விலங்குகளைப் போன்று நடந்து கொள்ளும் இந்த தர்மத்தை நிந்திக்கிறார்கள். முதலில் மனிதர்களிடம் இந்தப் பழக்கங்களெல்லாம் கிடையாது. வேனன் என்ற ஒரு அரசன் ஆண்டபோது கொடியவனும் மகா அதர்மவானுமான அவன் எல்லோரும் இப்படியெல்லாம் நடந்து கொள்ளலாம் என்ற சட்டத்தைக் கொண்டு வந்தான். அவனுடைய அதர்மத்தாலேயே அவன் அழிந்தான். ஆனால் அவன் கொண்டு வந்த பழக்கங்கள் ஆங்காங்கே வேரூன்றி விட்டன.*

स महीमखिलां भुञ्जन् राजर्षिप्रवरः पुरा।
वर्णानां सङ्करं चक्रे कामोपहतचेतनः॥

**ஸ மஹீமகிலாம் புஞ்ஜந் ராஜர்ஷி ப்ரவர: புரா |**
**வர்ணாநாம் ஸங்கரம் சக்ரே காமோபஹதசேதந: || 67**

*இந்த வேனன் சக்கரவர்த்தியாக இருந்து இந்த உலகம் முழுவதையும் ஆண்டவன். இவன் காமுகன். இவனால்தான் உலகில் கலப்பினங்கள் ஏற்பட்டன.*

(மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி. தர்மமல்லாததைச் செய்யும் மக்களுக்கு அரசன் தண்டனை விதித்து நாட்டில் அதர்மம் செய்பவர்களே இல்லாதபடி செய்ய வேண்டும். இதுதான் மனு சொல்லும் தர்மம்.

வேனனோ தானே அதர்மவானாகி, உலகில் அதர்மம் செய்பவர்களுக்கு ஆதரவு கொடுத்தான். இதனால்தான் மக்களிடையே இந்த மாதிரி விலங்கைப் போன்ற பழக்கங்கள் ஏற்பட்ட.ன. எந்தக் கெட்ட பழக்கமும் மனிதர்களுக்கு ஏற்படாமலே பார்த்துக் கொள்ள வேண்டும். இது உத்தமம்.

அப்படி ஏற்பட்டு விட்டால் உடனே அழிக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் மற்றவர்களிடமும் அந்தப் பழக்கங்கள் பரவாமல் தடுக்க முடியும். மாறாக அந்தப் பழக்கங்கள் பரவி வேரூன்றி விட்டால் பிறகு அவற்றை மாற்றுவது கடினம். ஆனால் அவற்றை வேரூன்றச் செய்து விட்டான் வேனன். இதனால் உலகில் இந்த விலங்கு தர்மம் மனிதனிடம் புகுந்தது.)

ततः प्रभृति यो मोहात् प्रमीतपतिकां स्त्रियम्।
नियोजयत्यपत्यार्थं तं विगर्हन्ति साधवः॥

**தத: ப்ரப்ருதியோ மோஹாத் ப்ரமித பதிகாம் ஸ்த்ரியம் ।**
**நியோஜயத்ய பத்யாஅர்தம் தம் விகர்ஹந்தி ஸாதவ: ॥** 68

விதவா விவாகமும், அல்லது அவர்களுக்கு சந்ததியைக் கொடுப்பதும் சாதுக்களால் தூஷிக்கப்படுகின்றன. ஆனால் வேனன் அரசாண்ட காலத்திலிருந்து பல குடும்பங்களில் அவை பாரம்பரிய பழக்கங்களாகி விட்டன.

यस्या म्रियेत कन्याया वाचा सत्ये कृते पतिः।
तामनेन विधानेन निजो विन्देत देवरः॥

**யஸ்யா ம்ரியேத கந்யாயா வாசா ஸத்யே க்ருதே பதி: ।**
**தாமநேந விதாநேந நிஜோ விந்தேத தேவர: ॥** 69

ஒரு கன்னிகையை ஒருவனுக்குக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்த பிறகு அவன் இறந்து விட்டால், அவன் தம்பி அவளை இந்த விதிமுறைகளுக்குட்பட்டு அடையலாம்.

यथाविध्यधिगम्यैनां शुक्लवस्त्रां शुचिव्रताम्।
मिथो भजेताऽऽप्रसवात् सकृत्सकृदृतावृतौ॥

**யதா வித்யதிகம்யைநாம் ஷுக்லவஸ்த்ராம் ஷுசிவ்ரதாம் ।**
**மிதோ பஜேதா ஆப்ரஸவாத் ஸக்ருத்ஸக்ருத்ருதாவ்ருதௌ ॥** 70

அப்பெண்ணை, அந்த மைத்துனன் மணந்து கொண்டு, வெள்ளை ஆடை பூண்டு, உடலாலும் மனத்தாலும் சுத்தமாக இருக்கின்ற அவளை, அவள் கர்ப்பமடையும்வரை, ஒவ்வொரு முறையும் அவள் ருது ஸ்நானம் செய்த பிறகு அடைய வேண்டும்.

न दत्त्वा कस्यचित् कन्यां पुनर् दद्याद् विचक्षणः।
दत्त्वा पुनः प्रयच्छन् हि प्राप्नोति पुरुषाऽनृतम्॥

**ந தத்வா கஸ்யசித் கந்யாம் புநர் தத்யாத் விசக்ஷண: |**
**தத்வா புந: ப்ரயச்சந் ஹி ப்ராப்நோதி புருஷா அந்ருதம் ||** 71

பெண்ணின் தந்தை வாக்குதத்தம் (என் பெண்ணை உனக்கு மணமுடித்துக் கொடுக்கிறேன் என்று வாக்களிப்பது) செய்த பிறகு, அவன் இறந்து விட்டால், வேறொருவனுக்கு அந்த கன்னிகையைக் கொடுக்கலாகாது. அவ்வாறு செய்பவன் புருஷா அங்ருதம் என்னும் தோஷத்துக்கு ஆளாகிறான்.

विधिवत् प्रतिगृह्याऽपि त्यजेत् कन्यां विगर्हिताम्।
व्याधितां विप्रदुष्टां वा छद्मना चोपपादिताम्॥

**விதிவத் ப்ரதிக்ருஹ்யா அபித்யஜேத் கந்யாம் விகர்ஹிதம் |**
**வ்யாதிதாம் விப்ரதுஷ்டாம்வா சத்மநாசோபபாதிதாம் ||** 72

விதிப்படி ஒரு கன்னிகையை மணந்திருந்தாலும், அவள் வியாதிக்காரியாகவோ, தீயவளாகவோ இருந்து ஏமாற்றி, விஷயத்தை மறைத்து மணம் புரிவித்திருந்தால் அது செல்லாது. அந்தப் பெண்ணை விட்டு விடலாம்.

यस् तु दोषवतीं कन्यामनाख्यायोपपादयेत्।
तस्य तद् वितथं कुर्यात् कन्यादातुर् दुरात्मनः॥

**யஸ் து தோஷவதீம் கந்யாமநாக்யாயோப பாதயேத் |**
**தஸ்ய தத் விததம் குர்யத் கந்யாதாதுர் துராத்மந: ||** 73

தோஷங்களுள்ள, குறைகளுள்ள பெண்ணை, அந்தக் குறைகளை மறைத்து கல்யாணம் செய்து கொடுத்த துராத்மாவான அவனுக்கு, அவன் கொடுத்த பரிசப் பணத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை.

विधाय वृत्तिं भार्यायाः प्रवसेत् कार्यवान् नरः।
अवृत्तिकर्शिता हि स्त्री प्रदुष्येत् स्थितिमत्यपि॥

**விதாய வ்ருத்திம் பார்யாயா: ப்ரவஸேத் கார்யவாந் நர: |**
**அவ்ருத்தி கர்ஷிதா ஹி ஸ்த்ரீ ப்ரதுஷ்யேத் ஸ்திதிமத்யபி ||** 74

ஒருவன் ஏதோ காரியமாக அயல்நாடு போக வேண்டியிருந்தால், தான் வருவதற்கு பல நாட்களாகும் என்னும்போது, அது வரை தன் மனைவி பிள்ளைகளுக்குத் தேவையான உணவு உடை மற்ற செலவுகளுக்கு வேண்டிய அளவு பொருள் வசதி செய்துவிட்டுப் போக வேண்டும். நல்ல பெண்ணாயினும்கூட உணவுக்காகவும் உடைக் காகவும் வெளியே சென்று வேலை பார்க்க நேரும்போது, தகாதவர்களால் துன்பம் ஏற்பட்டு, அவளும் குடும்பமும் சிதறிப் போக வாய்ப்பு ஏற்படும்.

विधाय प्रोषिते वृत्तिं जीवेन् नियममास्थिता।
प्रोषिते त्वविधायैव जीवेच् छिल्पैरगर्हितैः॥

**விதாய ப்ரோஷிதே வ்ருத்திம் ஜீவேந் நியமமாஸ்திதா |**
**ப்ரோஷிதே த்வவிதாயைவ ஜீவேத் சில்பைரகர்ஹிதை: || 75**

அவ்வாறு கணவன் தேவையான ஏற்பாடுகளைக் குறைவின்றிச் செய்துவிட்டு அயல்நாடு போயிருக்கும்போது, அவன் வரும்வரை இருப்பதை வைத்துக்கொண்டு நியமமாக வாழ வேண்டும்.

வாழ்க்கைக்குத் தேவையான பொருள் வசதி குறைந்தால், சிறு கைத்தொழில்களைச் செய்து சம்பாதித்து வாழ வேண்டும்.

प्रोषितो धर्मकार्यार्थं प्रतीक्ष्योऽष्टौ नरः समाः।
विद्यार्थं षड् यशोऽर्थं वा कामार्थं त्रींस् तु वत्सरान्॥

**ப்ரோஷிதோ தர்மகார்யார்தம் ப்ரதீக்ஷ்யோ அஷ்டௌநர: ஸமா: |**
**வித்யா அர்தம் ஷட் யஷோ அர்தம் வாகாமார்தம் த்ரீந்ஸ் து வத்ஸராந் || 76**

தர்ம காரியங்களைச் செய்வதற்காக தொலைதூரம் சென்ற கணவன் வராவிட்டால் எட்டு ஆண்டுகள் வரை மனைவி காத்திருந்து பார்க்க் வேண்டும். படிப்பதற்காகவும் புகழ் தேடவும் சென்ற கணவன் வருகைக்காக ஆறு ஆண்டுகள் காத்திருக்க வேண்டும். வேறொரு பெண்ணை நாடிச் சென்றவன் வருகைக்காக மூன்றாண்டுகள் காத்திருந்து பார்க்க வேண்டும்.

संवत्सरं प्रतीक्षेत द्विषन्तीं योषितं पतिः।
ऊर्ध्वं संवत्सरात् त्वेनां दायं हृत्वा न संवसेत्॥

**ஸம்வத்ஸரம் ப்ரதீக்ஷேத த்விஷந்தீம் யோஷிதம் பதி: |**
**ஊர்த்வம் ஸம்வத்ஸராத் த்வேநாம் தாயம் ஹ்ருத்வா ந ஸம்வஸேத் || 77**

தன்னை விட்டுப் பிரிந்து சென்ற மனைவிக்காக, கணவன் ஒரு வருடம் காத்திருக்க வேண்டும். அதற்கு மேல் அவளை விட்டு விடலாம். ஆனால் அவளுக்குக் கொடுத்த பொருளை திரும்பி வாங்கிக் கொள்ளக் கூடாது.

अतिक्रामेत् प्रमत्तं या मत्तं रोगाऽऽर्तमेव वा।
सा त्रीन् मासान् परित्याज्याऽविभूषणपरिच्छदा॥

**அதிக்ராமேத் ப்ரமத்தம் யாமத்தம் ரோகா ஆர்தமேவ வா |**
**ஸாத்ரீந் மாஸாந் பரித்யாஜ்யா அவிபூஷணபரிச்சதா || 78**

கணவன் தன் மனத்துக்குப் பிடித்தவனாக இல்லாவிடினும், மனைவி அவனைக் கவனித்துக் கொள்ளவே வேண்டும். அதே போன்று அவன் நோயுற்றிருக்கும்போதும், போதை நிலையில் இருக்கும்போதும் அவனை கவனித்துக் கொள்ளாமல் அவமானப் படுத்துபவளை மூன்று மாதங்கள் பொறுத்துப் பார்க்க வேண்டும். பிறகு அவளுக்குக் கொடுத்த ஆபரணங்களை எடுத்துக் கொண்டு, அவளை விட்டுவிட வேண்டும்.

उन्मत्तं पतितं क्लीबमबीजं पापरोगिणम्।
न त्यागोऽस्ति द्विषन्त्याश् च न च दायाऽपवर्तनम्॥

**உன்மத்தம் பதிதம் க்லீபமபீஜம் பாபரோகிணம் |**
**ந த்யாகோ அஸ்தி த்விஷந்த்யாஷ் சநச தாயா அபவர்தநம் || 79**

பைத்தியக்காரன், மகாபாவி, நபும்சகன், ஆண்மையற்றவன், குஷ்டம் போன்ற பாப ரோகங்களையடைந்தவன் - இத்தகையவரை மனைவி கவனிக்காவிட்டாலும், அவளை வெளியேற்றவும் கூடாது; அவளுடைய தனத்தை திரும்பப் பெறவும் கூடாது.

मद्यपाऽसाधुवृत्ता च प्रतिकूला च या भवेत्।
व्याधिता वाऽधिवेत्तव्या हिंस्राऽर्थघ्नी च सर्वदा॥

**மத்யாபா அசாதுவ்ருத்தா ச ப்ரதிகூலா ச யாபவேத் |**
**வ்யாதிதா வாஅதி வேத்தவ்யா ஹிம்ஸ்ரா அர்தக்நீ ச ஸர்வதா || 80**

குடிகாரி, தீய நடத்தை கொண்டவள், கணவனிடம் எதிரியைப் போல் நடந்து கொண்டு, எதிரிடையான காரியங்களையும் செய்பவள், குஷ்டம் போன்ற கொடிய வியாதிக்காரி, குடும்பத்திலுள்ளவர்களை எப்போதும் வேதனைப்படுத்துபவள், சம்பாத்தியம் முழுவதையும் வீண் செலவு செய்து பாழடிக்கும் ஊதாரி - இத்தகையவளை விட்டு விடலாம்.

वन्ध्याऽष्टमेऽधिवेद्याऽब्दे दशमे तु मृतप्रजा।
एकादशे स्त्रीजननी सद्यस् त्वप्रियवादिनी॥

**வந்த்யா அஷ்டமே அதிவேத் யாஅப்தே தஷமே து ம்ருதப்ரஜா |**
**ஏகாதஷே ஸ்த்ரீஜநநீ ஸத்யஸ் த்வ ப்ரியவாதிநீ || 81**

மனைவி மலடியாக இருந்தால் எட்டு ஆண்டுகள் வரை குழந்தை பிறக்கிறதா என்று எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டும். அதற்கு மேல் இன்னொரு பெண்ணை மணம் புரிந்து கொள்ளலாம்.

குழந்தை பிறந்து பிறந்து இறக்கிறது அல்லது கர்ப்பச் சிதைவு ஏற்படுகிறது என்றால் பத்து ஆண்டுகள் காத்திருந்து பார்த்து, பிறகும் சந்ததி இல்லையெனில் இன்னொரு பெண்ணைத் திருமணம் புரிந்து கொள்ளலாம்.

பெண் குழந்தைகளை மட்டுமே பெறுபவளாக இருப்பின் பதினொரு ஆண்டுகள் காத்திருந்து பார்த்தும் ஆண் சந்ததி பிறக்கா விடில், இன்னொரு பெண்ணைத் திருமணம் புரிந்து கொள்ளலாம்.

எப்போதும் பிரியமற்றதான நிஷ்டூரப் பேச்சுக்களைப் பேசும் பெண்ணை உடனடியாக விட்டு விடலாம்.

या रोगिणी स्यात् तु हिता सम्पन्ना चैव शीलतः।
साऽनुज्ञाप्याऽधिवेत्तव्या नाऽवमान्या च कर्हिचित्॥

**யா ரோகிணீ ஸ்யாத்து ஹிதா ஸம்பந்நா சைவ ஷீலத: |**
**ஸாஅனுஞாப்யா அதிவேத்தவ்யா நாஅவமாந்யா ச கர்ஹிசித் || 82**

கணவனுக்கு ஹிதத்தைச் செய்பவளாயும், கற்பிற் சிறந்த வளுமான மனைவி, நோயாளியாகிவிட்டால், அவள் அனுமதி பெற்று இன்னொரு பெண்ணை மணக்கலாம். ஆனால் எப்போதும் அவளை அவமானப்படுத்தலாகாது.

अधिविन्ना तु या नारी निर्गच्छेद् रुषिता गृहात्।
सा सद्यः सन्निरोद्धव्या त्याज्या वा कुलसन्निधौ॥

**அதிவிந்நா து யா நாரீ நிர்கச்சேத் ருஷிதா க்ருஹாத் |**
**ஸா ஸத்ய: ஸந்நிரோத்தவ்யா த்யாஜ்யா வா குலஸந்நிதௌ || 83**

பொதுவாக இரண்டாம் மணம் புரிந்ததும், மூத்த மனைவி மிகவும் கோபத்தோடு நடந்து கொண்டால், அவள் கோபத்தைத் தணிக்கப் பார்க்க வேண்டும். அது இயலாத பட்சத்தில் அவளது பெற்றோரிடம் அனுப்பி வைக்க வேண்டும்.

प्रतिषिद्धा पिबेद् या तु मद्यमभ्युदयेष्वपि।
प्रेक्षासमाजं गच्छेद् वा सा दण्ड्या कृष्णलानि षट्॥

**ப்ரதிஷித்தா பிபேத் யா து மத்யமப்யுதயேஷ்வபி |**
**ப்ரேக்ஷாஸமாஜம் கச்சேத் வா ஸா தண்ட்யா க்ருஷ்ணலாநி ஷட் || 84**

தடுத்தும் கேளாமல் குடித்து விட்டு, எல்லோரும் கூடும் இடங்களில் கூத்து, ஆடல், பாடல் முதலான களியாட்டங்களில் ஈடுபடுபவளுக்கு ஆறு குன்றிமணிப் பொன் அபராதம் விதிக்க வேண்டும்.

यदि स्वाश् चाऽपराश् चैव विन्देरन् योषितो द्विजाः।
तासां वर्णक्रमेण स्याज् ज्यैष्ठ्यं पूजा च वेश्म च॥

**யதி ஸ்வாஷ் சாஅபராஷ் சைவ விந்தேரந் யோஷிதோ த்விஜா: |**
**தாஸாம் வர்ணக்ரமேண ஸ்யாஜ் ஜ்யைஷ்யம் பூஜாச வேஷ்ம ச || 85**

*பிராம்மண க்ஷத்ரிய வைசியர்கள் தங்கள் இனத்துப் பெண்களையும், வேறு இனத்துப் பெண்களையும் மணம் புரிந்து கொண்டிருந்தார்களானால், முதன்மையான கௌரவம், வீடு, ஆடை ஆபரணங்களை வர்ணாஸ்ரமங்களுக்குத் தக்கபடி முதலில் பிராம்மண மனைவிக்கும், அடுத்து க்ஷத்ரிய மனைவிக்கும், அடுத்து வைசிய மனைவிக்கும், அடுத்து சூத்திர மனைவிக்கும் வழங்க வேண்டும்.*

भर्तुः शरीरशुश्रूषां धर्मकार्यं च नैत्यकम्।
स्वा चैव कुर्यात् सर्वेषां नाऽस्वजातिः कथञ्चन॥

**பர்து: ஷரீரஷுஷ்ரூஷாம் தர்மகார்யம் ச நைத்யகம் |**
**ஸ்வா சைவ குர்யாத் ஸர்வேஷாம் நாஅந்வஜாதி: கதஞ்சந || 86**

*கணவனுக்குச் செய்யும் சரீர சிச்ருஷைகளை (கால் பிடித்து விடல், எண்ணெய் தேய்த்து விடல்) சொந்த இனத்து மனைவியே செய்ய வேண்டும். அதேபோன்று ஒருவன் செய்யும் தர்ம காரியங்களுக்கு உடனிருப்பவளும் அவன் இனத்து மனைவியாக இருக்க வேண்டும். அந்நிய இனத்துப் பெண் எந்நாளும் இதையெல்லாம் செய்யக்கூடாது.*

यस् तु तत् कारयेन् मोहात् सजात्या स्थितयाऽन्यया।
यथा ब्राह्मणचाण्डालः पूर्वदृष्टस् तथैव सः॥

**யஸ் து தத் காரயேந் மோஹாத் ஸஜாத்யா ஸ்திதயா அந்யயா |**
**யதா ப்ராஹ்மண சாண்டால: பூர்வத்ருஷ்டஸ் ததைவ ஸ: || 87**

*தன் இனத்து மனைவி இருக்கும்போது, மோகத்தால் அன்னிய இனத்து மனைவியைக் கொண்டு சரீர சிச்ருஷைகளை, பணி விடைகளை செய்து கொள்பவன், பிராம்மண சண்டாளனுக்கு சமமாவான். அதாவது பிராம்மணப் பெண்ணுக்கும் சூத்திரனுக்கும் பிறந்தவனுக்கு சமமாவான்.*

उत्कृष्टायाऽभिरूपाय वराय सदृशाय च।
अप्राप्तामपि तां तस्मै कन्यां दद्याद् यथाविधि॥

**உத்க்ருஷ்டாயா அபிரூபாய வராய ஸத்ருஷாய ச |**
**அப்ராப்தாமபி தாம் தஸ்மை கந்யாம் தத்யாத் யதாவிதி || 88**

பதவி முதலியவற்றால் உயர்ந்தவனாகவும், நல்ல ரூபமுடைய வனாகவும், குணநலன் மிக்கவனாகவும், தனக்கு சரிசமமான வனுமான வரன் கிடைத்தால், தன் மகள் சிறு வயதினளாக இருந்தாலும் அவனுக்கு முறைப்படி மணமுடித்துக் கொடுக்கலாம்.

काममा मरणात् तिष्ठेद् गृहे कन्यर्तुमत्यपि।
न चैवैनां प्रयच्छेत् तु गुणहीनाय कर्हिचित्॥

**காமமா மரணாத் திஷ்டேத் க்ருஹே கந்யர்து மத்யபி |**
**நசைவைநாம் ப்ரயச்சேத் து குணஹீநாய கர்ஹிசித் ||** 89

குணங்கெட்டவனுக்கு எக்காரணத்தைக் கொண்டும் தன் கன்னிகையை மணமுடித்துக் கொடுக்கக்கூடாது. அவளுக்குத் திருமணமாகாமலே போய் மரண பரியந்தம் தன் வீட்டிலேயே இருந்தாலும் இருக்கட்டும் என்று நினைக்கலாமே தவிர எப்படியேனும் கல்யாணமானால் போதுமென்று கெட்டவனுக்குத் திருமணம் செய்து கொடுக்லாகாது.

त्रीणि वर्षाण्युदीक्षेत कुमार्यृतुमती सती।
ऊर्ध्वं तु कालादेतस्माद् विन्देत सदृशं पतिम्॥

**த்ரீணி வர்ஷாண்யுதீக்ஷேத குமார்ய்ருதுமதீ ஸதீ |**
**ஊர்த்வம் து காலாதே தஸ்மாத் விந்தேத ஸத்ருஷம் பதிம் ||** 90

ஒரு கன்னிகை, தான் ருதுமதியான பிறகு, தந்தையோ சகோதரனோ தனக்குத் திருமணம் செய்து வைக்க முயற்சி செய்யாவிடில் மூன்று வருடங்கள் பொறுத்துப் பார்க்க வேண்டும். பிறகு தனக்குத் தக்க கணவனை தானே தேடி அடையலாம்.

अदीयमाना भर्तारमधिगच्छेद् यदि स्वयम्।
नैनः किञ्चिदवाऽऽप्नोति न च यं साऽधिगच्छति॥

**அதீயமாநா பர்தாரமதிகச்சேத் யதி ஸ்வயம் |**
**நைந: கிஞ்சிதவா ஆப்நோதி நசயம்ஸா அதிகச்சதி ||** 91

இவ்வாறாகத் தானே கணவனை அடைந்த பெண்ணுக்கு எந்தப் பாவமும் ஏற்படாது. அவ்வாறே அவளை மணந்தவனுக்கும் எந்தப் பாவமும் ஏற்படாது.

अलङ्कारं नाऽऽददीत पित्र्यं कन्या स्वयंवरा।
मातृकं भ्रातृदत्तं वा स्तेना स्याद् यदि तं हरेत्॥

**அலங்காரம் நாஆததீத பித்ர்யம் கந்யா ஸ்வயம்வரா |**
**மாத்ருகம் ப்ராத்ரு தத்தம் வாஸ்தேநா ஸ்யாத் யதிதம் ஹரேத் ||** 92

அதேசமயம், தானாகத் தன் மணாளனைத் தேடிக் கொண்டவள், தன் பெற்றோரும் சகோதரரும் தனக்குக் கொடுத்த ஆபரணங்களைக் கொண்டு போகக்கூடாது. அதில் அவளுக்கு உரிமையில்லை. கொண்டு போனால், அவள் திருடிக் கொண்டு போனவளாகவே கருதப்படுவாள்.

पित्रे न दद्याच् छुल्कं तु कन्यामृतुमती हरन्।
स हि स्वाम्यादतिक्रामेदृतूनां प्रतिरोधनात्॥

**பித்ரே ந தத்யாச் சுல்கம் து கந்யாம்ருதுமதீம் ஹரந் |**
**ஸஹி ஸ்வாம்யாததிக்ரமேத்ருதூநாம் ப்ரதிரோத நாத் ||** 93

ருதுமதியான பெண்ணை மணப்பவன், அப்பெண்ணின் தந்தைக்கு பரிசத் தொகை எதுவும் கொடுக்க வேண்டியதில்லை. ஏனெனில், ருதுவான பிறகு அம்மகளிடம் அவனுக்கு உரிமையற்றுப் போகிறது.

त्रिंशद्वर्षोद्वहेत् कन्यां हृद्यां द्वादशवार्षिकीम्।
त्र्यष्टवर्षोऽष्टवर्षां वा धर्मे सीदति सत्वरः॥

**த்ரிம்ஷத் வர்ஷோத்வஹேத் கந்யாம் ஹ்ருத்யாம் த்வாதஷவார்ஷிகீம் |**
**த்ரயஷ்டவர்ஷோ அஷ்டவர்ஷாம் வாதர்மே ஸீததி ஸத்வர: ||** 94

ஆண் மகன் தனக்கு முப்பது வயது என்றால் பன்னிரண்டு வயது கன்னியை மணக்கலாம். இருபத்து நான்கு வயது என்றால் எட்டு வயது கன்னிகையை மணக்கலாம்.

இருபத்து நான்கு வயதுக்கு முன்பு ஆண்கள் திருமணம் செய்து கொள்ளத் தேவையில்லை. எந்த வர்ணத்தவராயினும் அவரவர் தமது படிப்பிலும், குலத் தொழிலும் முழுமையாகத் தேர்ச்சி பெற்று முடித்த பிறகுதான் மணம் புரிந்து கொள்ள வேண்டும்.

देवदत्तां पतिर् भार्यां विन्दते नेच्छयाऽऽत्मनः।
तां साध्वीं बिभृयान् नित्यं देवानां प्रियमाचरन्॥

**தேவதத்தாம் பதிர் பார்யாம் விந்ததே நேச்சயா ஆத்மந: |**
**தாம் ஸாத்வீம் பிப்ருயாந் நித்யம் தேவாநாம் ப்ரியமாசரந் ||** 95

மனிதர்களுக்கு, மனைவி என்பவள் தெய்வங்களால் அளிக்கப் படுபவள். தன்னிச்சையாக யாரும் மனைவியை அடைவதில்லை. தெய்வங்களால் அளிக்கப்பட்ட மனைவியைக் கொண்டு தெய்வ பிரீதியான பூஜைகளை நித்தியமும் செய்ய வேண்டும்.

**प्रजनार्थं स्त्रियः सृष्टाः सन्तानार्थं च मानवाः।
तस्मात् साधारणो धर्मः श्रुतौ पत्न्या सहोदितः॥**

**ப்ரஜநார்தம் ஸ்த்ரிய: ஸ்ருஷ்டா: ஸந்தாநார்தம் சமாநவா: |
தஸ்மாத் ஸாதாரணோ தர்ம: ஸ்ருதௌ பத்ந்யா ஸஹோதித: || 96**

*சந்ததிகளை உற்பத்தி செய்யவே ஆண்களும் பெண்களும் படைக்கப்பட்டிருக்கிறார்கள். அவ்வாறே அக்னிஹோத்ரம் முதலான யாகங்களும் பூஜைகளும் செய்யவுமே அவர்கள் படைப்பு ஏற்பட்டுள்ளது.*

**कन्यायां दत्तशुल्कायां म्रियेत यदि शुल्कदः।
देवराय प्रदातव्या यदि कन्याऽनुमन्यते॥**

**கந்யாயாம் தத்தஷுல்காயாம் ம்ரியேத யதி ஷுல்கத: |
தேவராய ப்ரதாதவ்யா யதி கந்யா அனுமந்யதே || 97**

*ஒருவனுக்கும் ஒருத்திக்கும் திருமணம் பேசி மணமகனுக்குப் பரிசுப் பணமும் கொடுத்த பிறகு, மணமகன் இறந்து விட்டால், அம்மணமகனின் தம்பிக்கு அவளை மணமுடித்துக் கொடுக்கலாம். ஆனால் அப்பெண் ஒப்புக் கொண்டால் மட்டுமே செய்யலாம்.*

**आददीत न शूद्रोऽपि शुल्कं दुहितरं ददत्।
शुल्कं हि गृह्णन् कुरुते छन्नं दुहितृविक्रयम्॥**

**ஆததீத ந சூத்ரோ அபி ஷுல்கம் துஹிதரம் ததத் |
ஷுல்கம் ஹி க்ருஹ்ணந் குருதே சந்நம் துஹித்ரு விக்ரயம் || 98**

*ஆனால் சுல்கம் (பரிசம்) பெற்றுக்கொண்டு பெண்ணைக் கொடுப்பது என்பது சாஸ்திர சம்மதமானதன்று. சூத்திரனும்கூட அதைச் செய்யக்கூடாது. விலைக்குரிய தொகையை வாங்கிக் கொண்டு, பெண்ணை விற்றதற்கே அது சமம்.*

**एतत् तु न परे चक्रुर् नाऽपरे जातु साधवः।
यदन्यस्य प्रतिज्ञाय पुनरन्यस्य दीयते॥**

**ஏதத் து நபரே சக்ருர் நா அபரேஜாது ஸாதவ: |
யதந்யஸ்ய ப்ரதிஞாய புநரந்யஸ்ய தீயதே || 99**

*அதேபோன்று, ஒருவனுக்குக் கொடுப்பதாக வாக்களித்த பெண்ணை இன்னொருவனுக்குக் கொடுப்பதை, நல்லவர்கள் யாரும் செய்வதில்லை.*

**नाऽनुशुश्रुम जात्वेतत् पूर्वेष्वपि हि जन्मसु।
शुल्कसंज्ञेन मूल्येन छन्नं दुहितृविक्रयम्॥**

**நா அனுஷுஷ்ரும ஜாத்வேதத் பூர்வேஷ்வபி ஹி ஜன்மஸு |
ஷுல்க ஸம்ஞேந மூல்யேந சந்நம் துஹித்ரு விக்ரயம் || 100**

இதற்கு முன் நம் முன்னோர்கள் யாரும் இவ்வாறு ஒரு தொகையைப் பெற்றுக்கொண்டு பெண்ணை விற்கும் இழிசெயலைச் செய்ததில்லை.

अन्योऽन्यस्याऽव्यभीचारो भवेदामरणाऽन्तिकः।
एष धर्मः समासेन ज्ञेयः स्त्रीपुंसयोः परः॥

**அந்யோ அந்யஸ்யா அவ்யபீசாரோ பவேதாமரணா அந்திக: |**
**ஏஷ தர்ம: ஸமாஸேந ஜ்ஞேய: ஸ்த்ரீபும்ஸயோ: பர: ||** **101**

*கணவனும் மனைவியும் அந்யோந்யமாக, கற்புநிலை பிறழாதவர்களாக மரணம் வரை வாழ்வதே மேலான தர்மமாகும்.*

तथा नित्यं यतेयातां स्त्रीपुंसौ तु कृतक्रियौ।
यथा नाऽभिचरेतां तौ वियुक्तावितरेतरम्॥

**ததா நித்யம் யதேயாதாம் ஸ்த்ரீபும்ஸௌ து க்ருதக்ரியௌ |**
**யதா நா அபிசரேதாம்தௌ வியுக்தாவிதரேதரம் ||** **102**

*ஆணும் பெண்ணும் திருமணம் புரிந்து கொண்டு, ஒருவரை விட்டு ஒருவர் இணைபிரியாமல், தினமும் கிருஹஸ்தன் செய்ய வேண்டிய தர்மங்களைச் செய்ய வேண்டும்.*

एष स्त्रीपुंसयोरुक्तो धर्मो वो रतिसंहितः।
आपद्यपत्यप्राप्तिश् च दायभागं निबोधत॥

**ஏஷ ஸ்த்ரீபும்ஸ யோருக்தோ தர்மோ வோ ரதிஸம்ஹித: |**
**ஆபத்ய பத்யப்ராப்திஷ் ச தாயபாகம் நிபோதத ||** **103**

*இதுவரை தம்பதியர் நடத்த வேண்டிய இல்லற தர்மத்தைக் கூறினேன். சந்ததியற்றுக் குலம் நசிக்கும் நிலையில் சந்ததியைப் பெறுவது குறித்தும் கூறினேன். இனி பாகப்பிரிவினை முறைகளைப் பற்றிக் கூறுகிறேன், கேளுங்கள்:*

ऊर्ध्वं पितुश् च मातुश् च समेत्य भ्रातरः समम्।
भजेरन् पैतृकं रिक्थमनीशास् ते हि जीवतोः॥

**ஊர்த்வம் பிதுஷ்ச மாதுஷ்ச ஸமேத்ய ப்ராதர: ஸமம் |**
**பஜேரந் பைத்ருகம் ரிக்தமநீஷாஷ் தே ஹி ஜீவதோ: ||** **104**

*தாயும் தந்தையும் இறந்த பிறகு சகோதரர்கள் சொத்தைப் பிரித்துக்கொள்ள வேண்டும். அவர்கள் உயிரோடிருக்கும்போது, சொத்தில் பிள்ளைகளுக்கு எந்த உரிமையும் கிடையாது.*

ज्येष्ठ एव तु गृह्णीयात् पित्र्यं धनमशेषतः।
शेषास् तमुपजीवेयुर् यथैव पितरं तथा॥

**ஜ்யேஷ்ட ஏவ து க்ருஹ்ணீயாத் பித்ர்யம் தமநசேஷத: |**
**சேஷாஸ் தமுபஜீவேயுர் யதைவ பிதரம் ததா ||** 105

*தாய்தந்தையர் இறந்தபிறகு, அனைத்து சொத்துக்களுக்கும் மூத்த மகன் உரிமையுடையவனாகிறான். மற்றப் பிள்ளைகள் தந்தையிடம் இருந்ததைப் போன்று அவனிடம் இருக்க வேண்டும்.*

ज्येष्ठेन जातमात्रेण पुत्री भवति मानवः।
पितृणामनृणश् चैव स तस्मात् सर्वमर्हति॥

**ஜ்யேஷ்டேந ஜாதமாத்ரேண புத்ரீபவதி மாநவ: |**
**பித்ருணா மந்ருணஷ் சைவ ஸ தஸ்மாத் ஸர்வமர்ஹதி ||** 106

*ஒரு மனிதன், முதன் முதலில் மகனைப் பெற்றதுமே 'புத்திர வான்' ஆகிறான். பித்ருக்களின் கடன் தீர்ப்பவனாகிறான். எனவே மூத்த மகனுக்கே அனைத்து உரிமைகளும் இருக்க வேண்டும்.*

यस्मिन्नृणं सन्नयति येन चाऽऽनन्त्यमश्नुते।
स एव धर्मजः पुत्रः कामजानितरान् विदुः॥

**யஸ்மிந்ந்ருணம் ஸந்நயதி யேந சாஆநந்த்ய மஷ்நுதே |**
**ஸ ஏவ தர்மஜ: புத்ர: காமஜாநிதராந் விது: ||** 107

*மூத்த மகன் பிறந்ததுமே ஒருவன் பித்ரு கடனைத் தீர்த்தவ னாகிறான். தானும் சொர்க்கம் அடைவதற்கு தகுதி பெற்றவ னாகிறான். எனவே அம்மகனே தர்மத்தால் பிறந்தவனாகிறான். அடுத்துப் பிறந்த பிள்ளைகள் காமத்தால் பிறந்தவர்களாகிறார்கள்.*

पितेव पालयेत् पुत्रान् ज्येष्ठो भ्रातॄन् यवीयसः।
पुत्रवच् चाऽपि वर्तेरन् ज्येष्ठे भ्रातरि धर्मतः॥

**பிதேவ பாலயேத் புத்ராஞ்ஜ்யேஷ்டோ ப்ராத்ரூந் யவீயஸ: |**
**புத்ரவச்சாஅபி வர்தேரஞ் ஜ்யேஷ்டே ப்ராதரி தர்மத: ||** 108

*மூத்தவன், தன் சகோதரர்களை தந்தையைப் போன்று பேணிப் பாதுகாக்க வேண்டும். சகோதரர்களும் அவனிடம் தந்தையிடம் மகன்கள் நடந்து கொள்வதைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.*

ज्येष्ठः कुलं वर्धयति विनाशयति वा पुनः।
ज्येष्ठः पूज्यतमो लोके ज्येष्ठः सद्भिरगर्हितः॥

**ஜ்யேஷ்ட: குலம் வர்தயதி விநாஷயதி வா புந: |**
**ஜ்யேஷ்ட: பூஜ்யதமோ லோகே ஜ்யேஷ்ட: ஸத்பிரகர்ஹித: || 109**

குலம் மேன்மேலும் சிறப்பதற்கும் மூத்தவனே காரணம்; குலம் நசித்துப் போவதற்கும் மூத்தவனே காரணம். குலம் விளங்கச் செய்யும் மூத்தவன் உலகத்தாரால் போற்றப்படுவான். சாதுக்களின் நிந்தனைக்கு ஆளாகமாட்டான்.

यो ज्येष्ठो ज्येष्ठवृत्तिः स्यान् मातेव स पितेव सः।
अज्येष्ठवृत्तिर् यस् तु स्यात् स सम्पूज्यस् तु बन्धुवत्॥

**யோஜ்யேஷ்டோ ஜ்யேஷ்டவ்ருத்தி: ஸ்யாந்மாதேவஸ பிதேவஸ: |**
**அஜ்யேஷ்டவ்ருத்திர் யஸ்து ஸ்யாத் ஸ ஸம்பூஜ்யஸ் து பந்துவத் || 110**

பெற்ற தந்தையைப் போன்று தம்பிகளிடம் நடந்து கொள்பவனிடம் தம்பிகளும் அவனிடம் பிதாவிடம் நடப்பது போல் நடந்து கொள்ள வேண்டும். அப்படியில்லாமல் இருப்பவனிடம் ஒரு பந்துவிடம் நடந்து கொள்வதுபோல் நடந்து கொள்ள வேண்டும்.

एवं सह वसेयुर् वा पृथग् वा धर्मकाम्यया।
पृथग् विवर्धते धर्मस् तस्माद् धर्म्या पृथक्क्रिया॥

**ஏவம் ஸஹ வஸேயுர் வா ப்ருதக் வா தர்மகாம்யயா |**
**ப்ருதக் விவர்ததே தர்மஸ் தஸ்மாத் தர்ம்யா ப்ருதக் க்ரியா || 111**

இவ்வாறு உடன் பிறந்த சகோதரர்கள் சேர்ந்து ஒரு குடும்பமாக வசிக்கலாம். அல்லது பாகப்பிரிவினை செய்து கொண்டு தனித்தனி யாகவும் வசிக்கலாம். பிரித்துக் கொண்டவர்கள் தனித்தனியாக யாகங்களையும் பூஜைகளையும் தர்ம காரியங்களையும் நிகழ்த்தும் போது தர்மம் மேலும் விரிவடைவதால், பாகப்பிரிவினை தர்ம சம்மதமானது.

ज्येष्ठस्य विंश उद्धारः सर्वद्रव्याच् च यद् वरम्।
ततोऽर्धं मध्यमस्य स्यात् तुरीयं तु यवीयसः॥

**ஜ்யேஷ்டஸ்ய விம்ஷ உத்தார: ஸர்வத்ரவ்யாச்ச யத்வரம் |**
**ததோ அர்தம் மத்யமஸ்யாத் துரீயம் துயவீயஸ: || 112**

மொத்த சொத்தில், அனைவரையும் காப்பாற்றுபவனான மூத்த மகனுக்கு ஒரு தனிப்பங்கை கொடுக்க வேண்டும். இதற்கு உத்தாரம் என்று பெயர். இது எவ்வளவு என்று பார்ப்போம். மொத்த சொத்தில் இருபதில் ஒரு பங்கை இவ்வாறு உத்தாரமாக மூத்தவனுக்குக்

கொடுத்துவிட வேண்டும். மத்யமனுக்கு, மூத்தவனுடைய உத்தார சொத்தில் பாதியைக் கொடுக்க வேண்டும். கடைசி மகனுக்கு உத்தார சொத்தின் அளவில் கால் பங்கைக் கொடுக்க வேண்டும்.

மூத்தவனுக்குக் கொடுக்கும் உத்தார பங்கில் சொத்தில் விலை மதிப்புள்ளவை இடம் பெற வேண்டும்.

மீதியுள்ள சொத்தை எத்தனை பேர் சகோதரர்களோ அத்தனை சமபாகங்களாகப் பிரித்து எடுத்துக்கொள்ள வேண்டும். உத்தார பாகத்தோடு இந்த சமபாகமும் மூத்தவனுக்கும், மத்தியமனுக்கும், கனிஷ்டனுக்கும் கிடைக்கும்.

ज्येष्ठश् चैव कनिष्ठश् च संहरेतां यथोदितम्।
येऽन्ये ज्येष्ठकनिष्ठाभ्यां तेषां स्यान् मध्यमं धनम्॥

**ஜ்யேஷ்டஷ்சைவ கநிஷ்டஷ்ச ஸம்ஹரேதாம் யதோதிதம் |**
**யே அந்யே ஜ்யேஷ்ட கநிஷ்டாப்யாம் தேஷாம் ஸ்யாந் மத்யமம் தநம் || 113**

இவ்வாறான பாகப்பிரிவினையில் உத்தார பாகம் போக மீதியை பங்கிட்டுக் கொள்ளும்போது, அது சமமாகவே பிரிக்கப்பட வேண்டுமேயன்றி, அதில் பெரியவன் சிறியவன் என்று பார்க்கக் கூடாது.

सर्वेषां धनजातानामाददीताऽग्र्यमग्रजः।
यच्च सातिशयं किञ्चिद् दशतश् चाऽऽप्नुयाद् वरम्॥

**ஸர்வேஷாம் தநஜாதாநாமாததீதா அகிர்யக்ரஜ: |**
**யச்ச ஸா அதிஷயம் கிஞ்சித் தஷதஷ் சாஆப்னுயாத் வரம் || 114**

மொத்த சொத்திலும் உயர்ந்தது மூத்தவன் பங்காகும். அதாவது குதிரைகளைப் பங்கிட்டுக் கொள்ளும்போது உயர்ந்த ஜாதிக் குதிரை மூத்தவன் பங்காகும். இவ்வாறே உயர்ந்த ரத்தினம், நல்ல விளைநிலம் என்று சிறந்தவை அவன் பங்காகப் போகும். இப்படி உயர்ந்தவை பத்துக்கு ஒன்று வீதம் அவன் பங்காகும். அதாவது அவனுக்குரிய பாகத்தில் இது சேரும்.

उद्धारो न दशस्वस्ति सम्पन्नानां स्वकर्मसु।
यत्किञ्चिदेव देयं तु ज्यायसे मानवर्धनम्॥

**உத்தாரோ ந தஷஸ்வஸ்தி ஸம்பந்நாநாம் ஸ்வகர்மசு |**
**யத்கிஞ்சிதேவ தேயம்து ஜ்யாயஸே மாநவர்தநம் || 115**

சகோதரர்களில் எல்லோரும் மேன்மையானவர்களாக கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாக இருந்தால், மூத்தவனுக்கு கௌரவத்துக்காக சிறிது பங்கை கொடுத்துவிட்டு மீதியை அனைவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம்.

एवं समुद्धृतोद्धारे समानंशान् प्रकल्पयेत्।
उद्धारेऽनुद्धृते त्वेषामियं स्यादंशकल्पना ॥

**ஏவம் ஸமுத்திருதோத்தாரே ஸமாநம்ஷாந் ப்ரகல்பயேத் |**
**உத்தரோ அனுத்த்ருதே த்வேஷாமியம் ஸ்யாதம்ஷகல்பநா || 116**

*பாகப் பிரிவினையில் இதுவரை கூறிய முறைப்படியும் பிரித்துக் கொள்ளலாம். அல்லது வேறு முறையிலும் பிரித்துக் கொள்ளலாம்.*

एकाऽधिकं हरेज् ज्येष्ठः पुत्रोऽध्यर्धं ततोऽनुजः।
अंशमंशं यवीयांस इति धर्मो व्यवस्थितः ॥

**ஏகாஅதிகம் ஹரேஜ் ஜ்யேஷ்ட: புத்ரோ அத்யர்தம் ததோ அனுஜ: |**
**அம்ஷமம்ஷம் யவீயாம்ஸ இதி தர்மோ வ்யவஸ்தித: || 117**

*பாகத்தில் மூத்தவனுக்கு இரண்டு பங்கு கொடுக்க வேண்டும். அடுத்தவனுக்கு ஒன்றரை பங்கு கொடுக்க வேண்டும். மற்ற அனைவரும் ஒவ்வொரு பாகம் எடுத்துக் கொள்ள வேண்டும். இது தர்மத்துக்குட்பட்ட பங்கீடு.*

स्वेभ्योंऽशेभ्यस् तु कन्याभ्यः प्रदद्युर् भ्रातरः पृथक्।
स्वात्स्वादंशाच् चतुर्भागं पतिताः स्युरदित्सवः ॥

**ஸ்வேப்யோ அம்ஷேப்யஸ்து கந்யாப்ய: ப்ரதத்யுர் ப்ராதர: ப்ருதக் |**
**ஸ்வாத்ஸ்வாதம்ஷாச் சதுர்பாகம் பதிதா: ஸ்யுரதித்ஸவ: || 118**

*பாகப் பிரிவினை செய்து கொள்ளும்போது, திருமணமாகாத சகோதரிகள் இருந்தால், சகோதரர்கள் தங்கள் தங்கள் பாகத்திலிருந்து நாலில் ஒரு பங்கை அப்பெண்களுக்குக் கொடுக்க வேண்டும்.*

अजाऽविकं सैकशफं न जातु विषमं भजेत्।
अजाऽविकं तु विषमं ज्येष्ठस्यैव विधीयते ॥

**அஜா அவிகம் ஸைகஷபம் நஜாது விஷமம் பஜேத் |**
**அஜா அவிகம் து விஷமம் ஜ்யேஷ்டஸ்யைவ விதீயதே || 119**

*குதிரை, ஆடு, பசு போன்றவை பங்கிட முடியாத எண்ணிக்கையில் இருந்தால் அதை மூத்தவனே எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது இருபது குதிரைகள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அதை ஒன்பது பங்கு போடுகிறார்கள். ஆளுக்கு இரண்டு போக மீதி இரண்டு குதிரைகள் இருக்கும். இதை மூத்தவன் எடுத்துக் கொள்ள வேண்டும்.*

यवीयाञ् ज्येष्ठभार्यायां पुत्त्रमुत्पादयेद् यदि।
समस् तत्र विभागः स्यादिति धर्मो व्यवस्थितः॥

**யவீயாஞ் ஜ்யேஷ்டபார்யாயாம் புத்ரமுத்பாதயேத் யதி |**
**ஸமஸ் தத்ர விபாக: ஸ்யாதிதி தர்மோ வ்யவஸ்தித: || 120**

*மூத்தவனின் மனைவி, தன் மைத்துனன் மூலமாக புத்ரோத்பத்தி செய்திருந்தால், மூத்தவனுக்குக் கூடுதல் பாகம் கிடையாது. சம பாகம்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்.*

उपसर्जनं प्रधानस्य धर्मतो नोपपद्यते।
पिता प्रधानं प्रजने तस्माद् धर्मेण तं भजेत्॥

**உபஸர்ஜநம் ப்ரதாநஸ்ய தர்மதோ நோபபத்யதே |**
**பிதா ப்ரதாகம் ப்ரஜநே தஸ்மாத் தர்மேண தம் பஜேத் || 121**

*சந்ததி பெறுவதில் தந்தைக்கே பிரதான ஸ்தானம். எனவே இப்படிப் பிறந்தவன் தர்மத்தினைக் கொண்டு பார்க்கும்போது தந்தையின் உத்தாரம் என்னும் தனிப்பங்கை பெறுவது தர்மமல்ல. எல்லோரையும் போன்று சம பங்குக்கே உரியவன்.*

पुत्त्रः कनिष्ठो ज्येष्ठायां कनिष्ठायां च पूर्वजः।
कथं तत्र विभागः स्यादिति चेत् संशयो भवेत्॥

**புத்ர: கநிஷ்டோ ஜ்யேஷ்டாயாம் கநிஷ்டாயாம் ச பூர்வஜ: |**
**கதம் தத்ர விபாக: ஸ்யாதிதி சேத் ஸம்ஷயோ பவேத் || 122**

*ஒருவனுக்கு தாரங்கள் பல இருக்கும்போது, இளைய மனைவிக்கு முதலில் பிள்ளை பிறந்திருக்கலாம். மூத்த தாரத்துக்கு அதன் பிறகு பிள்ளை பிறந்திருக்கலாம். இப்படியிருக்கும்போது மூத்த மகன் என்று யாருக்குப் பாகப் பிரிவினையில் உத்தாரம் என்ற கூடுதல் சொத்தை எடுத்துக் கொள்வது என்ற சந்தேகம் ஏற்படு மல்லவா?*

एकं वृषभमुद्धारं संहरेत स पूर्वजः।
ततोऽपरे ज्येष्ठवृषास् तदूनानां स्वमातृतः॥

**ஏகம் வ்ருஷபமுத்தாரம் ஸம்ஹரேத ஸ பூர்வஜ: |**
**ததோ அபரே ஜ்யேஷ்டவ்ருஷாஸ் ததூநாநாம் ஸ்வமாத்ருத: || 123**

*மூத்த தாரத்துக்குப் பிறந்த மகன், வயதில் இளையவனாயினும் கூட அவன் ஜேஷ்டனேயாவான். அதாவது அவனே மூத்தவனுக் குரிய மரியாதையை, பங்கைப் பெற வேண்டும்.*

ज्येष्ठस् तु जातो ज्येष्ठायां हरेद् वृषभषोडशाः ।
ततः स्वमातृतः शेषा भजेरन्निति धारणा ॥

**ஜ்யேஷ்டஸ் து ஜாதோ ஜ்யேஷ்டாயாம் ஹரேத் வ்ருஷபஷோடஷா: |**
**தத: ஸ்வமாத்ருத: சேஷா பஜேரந்நிதி தாரணா ॥** 124

மூத்த மனைவியிடம் பிறந்த மூத்த மகனுக்கு இருக்கும் சொத்தில் மேலானதாக பதினாறு பாகம் கொடுக்க வேண்டும். அதன் பிறகு அடுத்த மனைவியின் பிள்ளைகளும், அதற்கடுத்த மனைவியின் பிள்ளைகளும் மீதியுள்ளவற்றை பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

सदृशस्त्रीषु जातानां पुत्राणामविशेषतः ।
न मातृतो ज्यैष्ठ्यमस्ति जन्मतो ज्यैष्ठ्यमुच्यते ॥

**ஸத்ருஷ: ஸ்த்ரீஷு ஜாதாநாம் புத்ராணாமவிசேஷத: |**
**நமாத்ருதோ ஜ்யைஷ்ட்யமஸ்தி ஜன்மதோ ஜ்யைஷ்ட்யமுச்யதே ॥** 125

ஒருவனுடைய மனைவியர் அவனுடைய வர்ணத்தைச் சேர்ந்தவர்களாகவே இருந்தால், இரண்டாவது மனைவியின் பிள்ளைகள், மூன்றாவது மனைவியின் பிள்ளைகள் என்று அந்த வகையில் பாராமல், பிள்ளைகளின் வயதைக் கொண்டே மூத்த தன்மையையும் இளைய தன்மையையும் பார்க்க வேண்டும்.

जन्मज्येष्ठेन चाऽऽह्वानं सुब्रह्मण्यास्वपि स्मृतम् ।
यमयोश् चैव गर्भेषु जन्मतो ज्येष्ठता स्मृता ॥

**ஜன்மஜ்யேஷ்டேநசா ஆஹ்வாநம் சுப்ரஹ்மண்யாஸ்வபி ஸ்ம்ருதம் |**
**யமயோஷ்சைவ கர்பேஷு ஜன்மதோ ஜ்யேஷ்டதா ஸ்ம்ருதா ॥** 126

பார்வதி பரமேஸ்வரர்களின் மகன் சுப்ரமணியன். சிவபிரானின் வீர்யம், வாயு, அக்னி, கங்கை முதலியோரால் தாங்கப்பட்டு, கடைசியில் சரவணப் பொய்கையில் குழந்தையானது. இதற்கு நீண்ட காலம் பிடித்தது.

பார்வதி மண்ணைப் பிசைந்து வைத்து உயிர் கொடுத்த உருவம் விநாயகரானது.

முதலில் கர்ப்பமானது சுப்ரமணியர். முதலில் உருவமெடுத்தது விநாயகர். இருவரில் ஜன்மம் முதலில் ஏற்பட்டதால் விநாயகர் மூத்தவரானார். கர்ப்பம் முதலில் ஏற்பட்டபோதும், அவதாரம் அடுத்து நிகழ்ந்ததால் சுப்ரமணியர் முருகன் இளையவரானார். எனவே வயதில் மூத்தவனுக்கே முதல் தன்மை ஏற்படும்.

अपुत्रोऽनेन विधिना सुतां कुर्वीत पुत्रिकाम्।
यदपत्यं भवेदस्यां तन् मम स्यात् स्वधाकरम्॥

**அபுத்ரோ அநேந விதிநா சுதாம் குர்வீத புத்ரிகாம் |**
**யதபத்யம் பவேதஸ்யாம் தந் மமஸ்யாத் ஸ்வதாகரம் || 127**

*புத்திரர்களில்லாமல் மகள் மட்டும் இருந்தால், அவளை மணம் செய்து கொடுக்கும்போது மாப்பிள்ளையிடம் 'இவளுக்குப் பிறக்கும் மகனை எனக்கு அளித்துவிட வேண்டும்' என்று ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.*

*அப்படி அப்பெண்ணுக்குப் பிறந்த மகனை தன் வம்சத்தவனாக வளர்த்துத் தன் சொத்துக்களை அவனுக்கு அளிக்க வேண்டும். அரசனாக இருந்தால் அரசாட்சியை அளிக்க வேண்டும்.*

*(இத்தகைய ஒப்பந்தத்தோடு மணமுடிக்கப்பட்டவளுக்கு 'புத்ரிகை' என்று பெயர். இவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கு 'புத்ரிகா புத்ரன்' என்று பெயர். பாண்டவர்களில் ஒருவனான அர்ஜுனன் இந்த விதிமுறைப்படி சித்ரவாகனன் என்ற அரசன் மகளான சித்ராங்கதை என்னும் பெண்ணை மணந்தான். அவளுக்குப் பிறந்த பப்ருவாகனன் என்ற மகனை புத்ரிகா புத்ரனாக சித்ரவாகனனுக் களித்தான். பப்ருவாகனன் அங்கேயே வளர்ந்து சித்ரவாகனனுக் கடுத்து அந்நாட்டு அரசனானான்.)*

अनेन तु विधानेन पुरा चक्रेऽथ पुत्रिकाः।
विवृद्ध्यर्थं स्ववंशस्य स्वयं दक्षः प्रजापतिः॥

**அநேந து விதாநேந புரா சக்ரே அத புத்ரிகா: |**
**விவ்ருத்த்யர்தம் ஸ்வவம்ஷஸ்ய ஸ்வயம் தக்ஷ: ப்ரஜாபதி: || 128**

*முன்னர் இந்த விதிமுறையை நன்கு அறிந்தவனான தட்ச பிரஜாபதி தன் வம்சம் விரிவடைவதற்காக, தன் பெண்கள் அனைவரையுமே புத்ரிகா தர்மப்படியே திருமணம் செய்து கொடுத்தான்.*

ददौ स दश धर्माय कश्यपाय त्रयोदश।
सोमाय राज्ञे सत्कृत्य प्रीतात्मा सप्तविंशतिम्॥

**ததௌ ஸ தஷதர்மாய கஷ்யபாய த்ரயோதஷ |**
**ஸோமாய ராக்ஞே ஸத்க்ருத்ய ப்ரீதா ஆத்மா ஸப்தவிம்ஷதிம் || 129**

*தட்ச பிரஜாபதி தனது ஐம்பது பெண்களையும் இந்த புத்ரிகா முறையில் திருமணம் செய்து கொடுத்தார். யம தருமனுக்கு பத்து பெண்களையும், கஸ்யப மகரிஷிக்கு பதிமூன்று பெண்களையும்,*

சந்திரனுக்கு இருபத்தேழு பெண்களையும் புத்ரிகா தர்மப்படி திருமணம் செய்து கொடுத்தார்.

यथैवाऽऽत्मा तथा पुत्रः पुत्रेण दुहिता समा।
तस्यामात्मनि तिष्ठन्त्यां कथमन्यो धनं हरेत्॥

**யதைவா ஆத்மா ததா புத்ர: புத்ரேண துஹிதா ஸமா |**
**தஸ்யாமாத்மநி திஷ்டந்த்யாம் கதமந்யோ தனம் ஹரேத் || 130**

ஒருவனுக்கு அவனுடைய ஆத்மாவே அவனுடைய மகன். மகளும் மகனுக்கு சமமானவள். இந்தப்படி பார்த்தால் மகளும் இவனுடைய ஆத்மாவேதான். எனவே இவனுடைய தனம் மகளைத் தவிர்த்து வேறு யாருக்குக் கிட்ட முடியும்?

मातुस् तु यौतकं यत् स्यात् कुमारीभाग एव सः।
दौहित्र एव च हरेदपुत्रस्याऽखिलं धनम्॥

**மாதுஸ் து யௌதகம் யத் ஸ்யாத் குமாரீபாக ஏவஸ: |**
**தௌஹித்ர ஏவச ஹரேதபுத்ரஸ்யா அகிலம் தனம் || 131**

ஒரு பெண் இறந்தால் அவளுடைய ஸ்ரீதனப் பொருள் அவள் பெண்களுக்குச் சேரும். புத்ரிகையாக மணந்தவளுக்கு இந்த ஸ்ரீதனப் பொருளும் வந்து சேரும். மேலும் இவள் மகனான புத்ரிகாபுத்ரனுக்கு இவள் தந்தையின் சொத்தும் வந்து சேரும்.

दौहित्रो ह्यखिलं रिक्थमपुत्रस्य पितुर् हरेत्।
स एव दद्याद् द्वौ पिण्डौ पित्रे मातामहाय च॥

**தௌஹித்ரோ ஹ்யகிலம் ரிக்தமபுத்ரஸ்ய பிதுர் ஹரேத் |**
**ஸ ஏவ தத்யாத் த்வௌ பிண்டௌ பித்ரே மாதாமஹாய ச || 132**

புத்ரிகா புத்ரன் தன் தந்தையின் தனத்தையும் தாய்வழிப் பாட்டனின் தனத்தையும் அடைவான். இருவருக்கும் அவனே சிராத்த காரியங்களைச் செய்ய வேண்டும்.

पौत्रदौहित्रयोर् लोके न विशेषोऽस्ति धर्मतः।
तयोर् हि मातापितरौ सम्भूतौ तस्य देहतः॥

**பௌத்ர தௌஹித்ரயோர் லோகே ந விசேஷோ அஸ்தி தர்மத: |**
**தயோர் ஹி மாதாபிதரௌ ஸம்பூதௌ தஸ்ய தேஹத: || 133**

மகள் வயிற்றில் பிறந்த பிள்ளை, மகன் வயிற்றில் பிறந்த பிள்ளை இவர்களுக்குள் தர்மத்தின்படி வித்தியாசம் ஏதுமில்லை. மகனின் பெற்றோரும் மகளின் பெற்றோரும் அவர்களே யல்லவா? எனவே மகள் வயிற்றுப் பேரனுக்கும் மகன் வயிற்றுப் பேரனுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

पुत्रिकायां कृतायां तु यदि पुत्रोऽनुजायते।
समस् तत्र विभागः स्याज् ज्येष्ठता नाऽस्ति हि स्त्रियाः॥

**புத்ரிகாயாம் க்ருதாயாம் து யதி புத்ரோ அனுஜாயதே |**
**ஸமஸ் தத் ர விபாக: ஸ்யாஜ் ஜ்யேஷ்டதா ந அஸ்திஹி ஸ்த்ரியா: || 134**

ஒருவனுக்கு ஆண் சந்ததி இல்லாமலிருந்து தன் மகளை புத்ரிகையாக திருமணம் செய்து கொடுத்த பிறகு அவனுக்கு ஆண் சந்ததி பிறந்தால், என்ன செய்வது?

ஏற்கெனவே பெண் வயிற்றுப் பிள்ளையை வேண்டி ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. இப்போது சொந்த மகன் பிறந்து விட்டான். சொத்தை யாருக்கு எவ்வளவு என்று கொடுப்பது? மூத்தவனுக்கு உத்தாரம் என்ற கூடுதல் பங்கைத் தர வேண்டுமே, அது யாருக்குத் தருவது? அது போக மூத்தவளாகப் பிறந்த பெண்ணுக்கு உத்தார பாகம் உண்டா என்று பார்த்தால் -

மூத்தவளாகப் பிறந்திருந்தாலும் பெண்ணுக்கு உத்தார பாகம் கிடையாது. பெண்களுக்கு இந்த உத்தார பாகம் எப்போதுமே கிடையாது.

அடுத்து, புத்ரிகா முறைப்படி பிறந்த பேரனான புத்ரிகா புத்ரனுக்கும், சொந்த மகனுக்கும் சமமாகப் பங்கு பிரிக்க வேண்டும்.

अपुत्रायां मृतायां तु पुत्रिकायां कथञ्चन।
धनं तत्पुत्रिकाभर्ता हरेतैवाऽविचारयन्॥

**அபுத்ராயாம் ம்ருதாயாம் து புத்ரிகாயாம் கதஞ்சந |**
**தனம் தத் புத்ரிகா பர்தா ஹரேதைவா அவிசாரயந் || 135**

புத்ரிகையாக ஒருவனுக்கு மணமுடித்துக் கொடுக்கப்பட்ட பெண் சந்ததிகளை அடையாமலே இறந்து போனால் அப்போது என்ன செய்வது? சொத்தில் யாருக்கு உரிமை?

பெண்ணை மணந்த மாப்பிள்ளைக்கே சொத்தில் முழு உரிமையும் உண்டு. இதில் சந்தேகமேயில்லை.

अकृता वा कृता वाऽपि यं विन्देत् सदृशात् सुतम्।
पौत्री मातामहस् तेन दद्यात् पिण्डं हरेद् धनम्॥

**அக்ருதா வா க்ருதா வாபி யம் விந்தேத் ஸத்ருஷாத் சுதம் |**
**பௌத்ரீ மாதாமஹஸ் தேந தத்யாத் பிண்டம் ஹரேத் தநம் || 136**

புத்ரிகையாக ஒப்பந்தம் செய்திருந்தாலும் இல்லாவிட்டாலும், அவளின் தந்தைக்கு ஆண் சந்ததி இல்லையென்னும்போது அவள்

வயிற்று மகனே அவள் தந்தையின் சொத்து மொத்தத்தையும் அடைந்து அந்த தந்தைக்கு (பாட்டனுக்கு) சம்ஸ்காரங்களை செய்ய வேண்டும்.

पुत्रेण लोकाञ्जयति पौत्रेणाऽऽनन्त्यमश्नुते।
अथ पुत्रस्य पौत्रेण ब्रध्नस्याऽऽप्नोति विष्टपम्॥

**புத்ரேண லோகாஞ்ஜயதி பௌத்ரேணா அநந்த்யமஷ்னுதே |**
**அத புத்ரஸ்ய பௌத்ரேண ப்ரத்நஸ்யா ஆப்நோதி விஷ்டபம் ||** 137

*ஒருவன், புத்திரனைப் பெற்றவுடனே சொர்க்கம் முதலான நல்லுலகங்களை ஜெயித்தவனாகிறான். பௌத்ரன் (பேரன்) பிறந்தவுடன் அவ்வுலகங்களில் நெடுங்காலம் வாழ்பவனாகிறான். புத்திரனுக்கு பௌத்திரன் பிறந்தால் (பேரனுக்கு மகன்) சூரிய லோகத்தை வென்றவனாகிறான்.*

पुन्नाम्नो नरकाद् यस्मात् त्रायते पितरं सुतः।
तस्मात् पुत्र इति प्रोक्तः स्वयमेव स्वयम्भुवा॥

**புந் நாம்நோ நரகாத் யஸ்மாத் த்ராயதே பிதரம் சுத: |**
**தஸ்மாத் புத்ர இதி ப்ரோக்த: ஸ்வயமேவ ஸ்வயம்புவா ||** 138

*புத் என்னும் நரகத்தில் வீழாமல், தந்தையை மகன் காப்பாற்று கிறான் என்பதால் அவனுக்குப் புத்திரன் என்று பெயர் ஏற்படுகிறது என்று பிரம்மதேவர் தாமே தம் திருவாக்கால் கூறியுள்ளார்.*

पौत्रदौहित्रयोर् लोके विशेषो नोपपद्यते।
दौहित्रोऽपि ह्यमुत्रैनं सन्तारयति पौत्रवत्॥

**பௌத்ர தௌஹித்ரயோர் லோகே விசேஷோ நோபபத்யதே |**
**தௌஹித்ரோ அபி ஹ்யமுத்ரைநம் ஸந்தாரயதி பௌத்ரவத் ||** 139

*மகனுடைய மகனுக்கும் மகளுடைய மகனுக்கும் பேதம் ஏதும் இல்லை. இருவருமே பரலோக வாசத்தைப் பெற்றுத் தருவார்கள். அதாவது புத்ரிகா புத்ரனும் ஒருவனுக்கு புண்ணிய லோக வாசத்தை பெற்றுத் தருகிறான்.*

मातुः प्रथमतः पिण्डं निर्वपेत् पुत्रिकासुतः।
द्वितीयं तु पितुस् तस्यास् तृतीयं तत्पितुः पितुः॥

**மாது: ப்ரதமத: பிண்டம் நிர்வபேத் புத்ரிகா சுத: |**
**த்விதீயம்து பிதுஸ் தஸ்மாத் த்ருதீயம் தத்பிது: பிது: ||** 140

*புத்ரிகா புத்ரன் சிராத்தம் செய்யும்போது முதலில் தன்னுடைய தாய்க்கும், அடுத்து தாயின் தந்தைக்கும் (தாய்வழிப் பாட்டனுக்கும்),*

அதற்கு பிறகு அவரின் தந்தைக்கும் (தாய்வழிப் பாட்டனின் தந்தைக்கும்) பிண்டமளிக்க வேண்டும்.

उपपन्नो गुणैः सर्वैः पुत्रो यस्य तु दत्त्रिमः।
स हरेतैव तद्रिक्थं सम्प्राप्तोऽप्यन्यगोत्रतः॥

**உபபந்நோ குணை: ஸர்வை: புத்ரோ யஸ்யது தத்ரிம: |**
**ஸஹரேதைவ தத்ரிக்தம் ஸம்ப்ராப்தோ அப்யந்ய கோத்ரத: ||** **141**

ஒருவனுக்குத் தத்தெடுத்துக் கொண்ட உத்தமனான மகனும் சொந்த மகனும் இருக்கும் பட்சத்தில், தத்தெடுத்த மகன் வேறு கோத்திரத்திலிருந்து வந்தவனாயினும், அவனுக்கும் சொத்தில் பங்குண்டு.

गोत्ररिक्थे जनयितुर् न हरेद् दत्त्रिमः क्वचित्।
गोत्ररिक्थाऽनुगः पिण्डो व्यपैति ददतः स्वधा॥

**கோத்ரரிக்தே ஜநயிதுர் ந ஹரேத் தத்ரிம: க்வசித் |**
**கோத்ரரிக்தா அனுக: பிண்டோ வ்யபைதி ததத: ஸ்வதா ||** **142**

தத்தனான மகன், தன்னைப் பெற்றெடுத்த தந்தையின் கோத்திரம் கொண்டவனல்ல. தத்தெடுத்த தந்தையின் கோத்திரக் காரனேயாவான். அவ்வாறே பெற்ற தந்தையின் சொத்தில் இவனுக்கு எந்த அதிகாரமும் கிடையாது. தத்தெடுத்த தந்தையின் சொத்துக்கே இவன் உரிமை யுடையவனாவான். அதே போன்று பெற்ற தந்தைக்கு இவன் சிராத்தம் செய்ய வேண்டியதில்லை. தத்தெடுத்த தந்தைக்கே சிராத்தம் செய்ய வேண்டும்.

अनियुक्तासुतश् चैव पुत्रिण्याऽऽप्तश् च देवरात्।
उभौ तौ नार्हतो भागं जारजातक-कामजौ॥

**அநியுக்தாஅதஷ் சைவ புத்ரிண்யாஆப்தஷ் ச தேவராத் |**
**உபௌதௌ நார்ஹதோ பாகம் ஜாரஜாதக காமஜௌ ||** **143**

குழந்தைப் பேறில்லாத விதவை, பெற்றோர் பெரியோர் அனுமதியோடு மைத்துனன் மூலமாக ஒரு பிள்ளையைப் பெற்றுக் கொள்ளலாம் என்று முதலிலேயே கூறப்பட்டிருந்ததல்லவா?

அவ்வாறின்றி பெரியோரின் அனுமதி பெறாமல் இம்முறையில் ஒரு பெண் பெற்ற பிள்ளைக்கும், அல்லது அவர்கள் பெரியோரின் அனுமதியைப் பெற்றிருந்தாலும்கூட, இருவரும் மனத்தால் இணைந்தவர்களாக வாழ்க்கை நடத்தி பெற்ற பிள்ளைக்கும் தந்தையின் சொத்தில் பங்கு கிடையாது. சோரம் போனவள் பெற்ற பிள்ளை, காமுகி பெற்ற பிள்ளை என்பதால் தந்தையின் சொத்துக்கு அவர்கள் அருகதையற்றவர்கள்.

नियुक्तायामपि पुमान् नार्यां जातोऽविधानतः।
नैवाऽर्हः पैतृकं रिक्थं पतितोत्पादितो हि सः॥

**நியுக்தாயாமபி புமாந் நார்யாம் ஜாதோ அவிதாநத: |**
**நைவா அர்ஹ: பைத்ருகம் ரிக்தம் பதிதோத் பாதிதோஹிஸ: || 144**

பெரியோரால் அனுமதிக்கப்பட்டிருந்தாலும், இதற்குரிய விதிமுறைகளைப் பின்பற்றாமல் ஒழுகிய ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறந்தவன், தந்தையின் (அப்பெண்ணின் கணவன்) சொத்தில் உரிமை பெற முடியாது. காரணம் பதிதர்களுக்குப் பிறந்தவனாகிறான் இவன்.

(உடல் முழுவதும் நெய் பூசிக்கொண்டு, இருட்டில் வருதல் முதலானவைகளே இங்கு விதிமுறைகள் என்று கூறப்படுகின்றன.)

हरेत् तत्र नियुक्तायां जातः पुत्रो यथौरसः।
क्षेत्रिकस्य तु तद् बीजं धर्मतः प्रसवश् च सः॥

**ஹரேத் தத்ர நியுக்தாயாம் ஜாத: புத்ரோ யதௌரஸ: |**
**க்ஷேத்ரிகஸ்யது தத்பீஜம் தர்மத: ப்ரஷவஷ் ச ஸ: || 145**

முறைப்படி பெரியோரால் அனுமதிக்கப்பட்டு பிறந்தவன் தன் தந்தையின் சொத்தை சொந்த மகனைப் போன்றே அடையலாம்.

धनं यो बिभृयाद् भ्रातुर् मृतस्य स्त्रियमेव च।
सोऽपत्यं भ्रातुरुत्पाद्य दद्यात् तस्यैव तद् धनम्॥

**தனம் யோ பிப்ருயாத் ப்ராதுர் ம்ருதஸ்ய ஸ்த்ரியமேவ ச |**
**ஸோ அபத்யம் ப்ராதுருத்பாத்ய தத்யாத் தஸ்யைவ தத்தநம் || 146**

பாகப் பிரிவினைக்குப் பின்னர் சகோதரன் இறந்து அவனுக்கு மகனும் இல்லாவிட்டால், பெரியோர் அனுமதியோடு அண்ணன் மனைவிக்கு ஒரு பிள்ளை பிறக்கச் செய்து, அந்த சொத்துக்களைக் காப்பாற்றி அவனுக்களிக்கலாம்.

या नियुक्ताऽन्यतः पुत्रं देवराद् वाऽप्यवाऽऽप्नुयात्।
तं कामजमरिक्थीयं वृथोत्पन्नं प्रचक्षते॥

**யோ நியுக்தா அந்யத: புத்ரம் தேவராத் வா அப்யவா ஆப்னுயாத் |**
**தம் காமஜமரிக்தீயம் வ்ருதோத்பந்நம் ப்ரசக்ஷதே || 147**

பெரியோர் அனுமதித்திருந்தாலும், மைத்துனன் மூலமாகவோ மற்றப் பங்காளி மூலமாகவோ காமத்தால் பிள்ளைப் பேற்றை அடைந்திருப்பாளாயின் அந்தப் பிள்ளைக்கு தந்தையின் சொத்தில் உரிமை கிடையாது.

एतद् विधानं विज्ञेयं विभागस्यैकयोनिषु।
बह्वीषु चैकजातानां नानास्त्रीषु निबोधत॥

**ஏதத் விதாநம் விக்ஞேயம் விபாகஸ்யைக யோநிஷு ।**
**பஹ்வீஷு சைகஜாதாநாம் நாநாஸ்த்ரீஷு நிபோதத ॥ 148**

இதுவரை கூறிய அனைத்தும் ஒரே குலத்து ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறந்த பிள்ளைகளின் சொத்துரிமை பற்றியது. இனி பிற இனத்துப் பெண்களுக்குப் பிறந்த பிள்ளைகளின் சொத்துரிமையைப் பற்றிப் பார்ப்போம்.

ब्राह्मणस्याऽऽनुपूर्व्येण चतस्रस् तु यदि स्त्रियः।
तासां पुत्रेषु जातेषु विभागेऽयं विधिः स्मृतः॥

**ப்ராஹ்மணஸ்யா ஆனுபூர்வ்யேண சதஸ்ரஸ்து பதி ஸ்த்ரிய: ।**
**தாஸாம் புத்ரேஷு ஜாதேஷு விபாகே அயம் விதி: ஸ்ம்ருத: ॥ 149**

பிராம்மணன் நான்கு வர்ணத்து பெண்களையும் மணந்திருந்தால், அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகளுக்கான பாகப் பிரிவினை முறையைக் கூறுகிறேன்.

कीनाशो गोवृषो यानमलङ्कारश् च वेश्म च।
विप्रस्यौद्धारिकं देयमेकांऽशश् च प्रधानतः॥

**கீநாஷோ கோவ்ருஷோ யாநமலங்காரஷ் ச வேஷ்ம ச ।**
**விப்ரஸ் யௌத்தாரிகம் தேயமேகாஅம்ஷஷ் ச ப்ரதாநத: ॥ 150**

ஏற்கெனவே மூத்த மகனுக்கு உத்தாரகம் என்னும் வகையில் சொத்தில் கூடுதல் பங்கு கொடுக்க வேண்டும் என்று கூறப்பட்டது. அந்த உத்தாரகம் பிராம்மணப் பெண்ணிடம் பிறந்த புத்ரனுக்கு வழங்கப்பட வேண்டும்.

சிறிய அளவேயான சொத்தாக இருந்தாலும்கூட பசு, காளை, வாகனம், ஆபரணம், வீடு முதலியவற்றில் பிரதான பாகத்தை பிராம்மணப் பெண்ணுக்குப் பிறந்த மகனுக்கு அளிக்க வேண்டும்.

त्र्यंशं दायाद् धरेद् विप्रो द्वावंशौ क्षत्रियासुतः।
वैश्याजः सार्धमेवांऽशमंशं शूद्रासुतो हरेत्॥

**த்ரயம்ஷம் தாயாத் தரேத் விப்ரோ த்வாவம்ஷௌ க்ஷத்ரியாசுத: ।**
**வைஷ்யாஜ: ஸா அர்தமேவா சும்ஷமம்ஷம் சூத்ராசுதோ ஹரேத் ॥ 151**

பாகப் பிரிவினையில், பிராம்மணப் பெண்ணின் மகனுக்கு மூன்று பாகமும், க்ஷத்திரியப் பெண்ணின் மகனுக்கு இரண்டு பாகமும், வைசியப் பெண்ணின் மகனுக்கு ஒன்றரை பாகமும், சூத்திரப் பெண்ணின் மகனுக்கு ஒரு பாகமும் பிரிக்க வேண்டும்.

सर्वं वा रिक्थजातं तद् दशधा परिकल्प्य च।
धर्म्यं विभागं कुर्वीत विधिनाऽनेन धर्मवित्॥

**ஸர்வம் வா ரிக்தஜாதம் தத் தஷதா பரிகல்ப்யச |**
**தர்ம்யம் விபாகம் குர்வீத விதிநா அநேந தர்மவித் || 152**

*இல்லாவிடில், மொத்த சொத்தையும் பத்து பாகங்களாக்கி தர்மமறிந்த அறிஞர்கள் இவ்வாறும் பங்கிடலாம்.*

चतुरोऽंशान् हरेद् विप्रस् त्रीनशान् क्षत्रियासुतः।
वैश्यापुत्रो हरेद् द्व्यंशमंशं शूद्रासुतो हरेत्॥

**சதுரோ அம்ஷாந் ஹரேத் விப்ரஸ் த்ரீநம்ஷாந் க்ஷத்ரியா சுத: |**
**வைஷ்யாபுத்ரோ ஹரேத் த்வய்யம்ஷமம்ஷம் சூத்ராசுதோ ஹரேத் || 153**

*பிராம்மணப் பெண்ணின் மகனுக்கு நான்கு பாகங்களும், க்ஷத்திரியப் பெண்ணின் மகனுக்கு மூன்று பாகமும், வைசியப் பெண்ணின் மகனுக்கு இரண்டு பாகங்களும், சூத்திரப் பெண்ணின் மகனுக்கு ஒரு பாகமும் கொடுக்க வேண்டும்.*

यद्यपि स्यात् तु सत्पुत्रोऽप्यसत्पुत्रोऽपि वा भवेत्।
नाऽधिकं दशमाद् दद्याच् छूद्रापुत्राय धर्मतः॥

**யத்யபி ஸ்யாத் து ஸத்புத்ரோ அப்யஸத் புத்ரோஅபி வா பவேத் |**
**நாஅதிகம் தஷமாத் தத்யாச் சூத்ராபுத்ராய தர்மத: || 154**

*மற்றப் பிள்ளைகள் எப்படிப்பட்டவர்களாக இருப்பினும் சூத்திரப் பெண்ணிடம் பிறந்த மகன் உத்தமனாக இருந்தாலும், அவனுக்கு பத்தில் ஒரு பங்கு தருவதே சரியானது.*

ब्राह्मणक्षत्रियविशां शूद्रापुत्रो न रिक्थभाक्।
यदेवाऽस्य पिता दद्यात् तदेवाऽस्य धनं भवेत्॥

**ப்ராஹ்மண க்ஷத்ரியவிஷாம் சூத்ராபுத்ரோ நரிக்தபாக் |**
**யதேவா அஸ்ய பிதா தத்யாத் ததேவாஅஸ்ய தநம் பவேத் || 155**

*பிராம்மண, க்ஷத்ரிய, வைசியப் பெண்களுக்குப் பிறந்த பிள்ளைகளைப் போல் சொத்தில் பாகத்தை சூத்திரப் பெண்ணின் மகன் அடைய முடியாது. தந்தை அவனுக்கு எவ்வளவு சொத்து கொடுக்கிறாரோ அதுவே அவனுடைய சொத்தாகும்.*

*(தந்தை உயிரோடிருக்கும்போது பாகப்பிரிவினை நடத்தினால் இத்தகைய முறை)*

समवर्णासु ये जाताः सर्वे पुत्रा द्विजन्मनाम्।
उद्धारं ज्यायसे दत्त्वा भजेरन्नितरे समम्॥

**ஸ்மவர்ணாசு யேஜாதா: ஸர்வே புத்ரா த்விஜன்மநாம் |**
**உத்தாரம் ஜ்யாயஸே தத்வா பஜேரந்நிதரே ஸமம் ||** 156

*பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய வர்ணத்துப் பெண்களிடம் பிறந்த பிள்ளைகள் பாகம் பிரித்துக் கொள்ளும்போது தங்கள் தங்கள் வர்ணத்தில் மூத்தவனுக்கு உத்தாரம் என்ற பிரதானமாக பங்கை அளித்துவிட்டு, பிறகு மற்ற மகன்கள் மீதி சொத்தை சமமாகப் பிரித்துக்கொள்ள வேண்டும்.*

शूद्रस्य तु सवर्णैव नाऽन्या भार्या विधीयते।
तस्यां जाताः समांशाः स्युर् यदि पुत्रशतं भवेत्॥

**சூத்ரஸ்ய து ஸவர்ணைவ நாஅந்யா பார்யா விதீயதே |**
**தஸ்யாம் ஜாதா: ஸமாம்ஷா: ஸ்யுர் யதி புத்ரஷதம் பவேத் ||** 157

*சூத்ரன் தன் வர்ணத்துப் பெண்ணை மட்டுமே மணக்க வேண்டும். அவனுக்கு அவன் வர்ணத்துப் பெண்களிடம் நூறு பிள்ளைகள் பிறந்திருந்தாலும், அத்தனை பேருக்கும் சமமாகவே பாகப் பிரிவினை செய்ய வேண்டும்.*

पुत्रान् द्वादश यानाह नृणां स्वायम्भुवो मनुः।
तेषां षड् बन्धुदायादाः षडदायादबान्धवाः॥

**புத்ராந் த்வாதஷ யாநாஹ ந்ருணாம் ஸ்வாயம்புவோ மநு: |**
**தேஷாம் ஷட் பந்துதாயாதா: ஷட்தாயாத பாந்தவா: ||** 158

*ஸ்வாயம்புவ மனு புத்திரர்களை பன்னிரண்டு வகையினராகக் கூறுகிறார். அவர்கள் ஆறு வகையினர் பந்துக்களும் பங்காளிகளும் ஆவார்கள். மற்ற ஆறு வகையினர் பந்துக்கள் மட்டுமே ஆவார்கள்.*

औरसः क्षेत्रजश् चैव दत्तः कृत्रिम एव च।
गूढोत्पन्नोऽपविद्धश् च दायादा बान्धवाश् च षट्॥

**ஔரஸ: க்ஷேத்ரஜஸ்சைவ தத்த: க்ருத்ரிம ஏவ ச |**
**கூடோத்பந்நோ அபவித்தஷ்ச தாயாதா பாந்தவாஷ்ச ஷட் ||** 159

*ஔரச புத்திரன், க்ஷேத்ரஜ புத்திரன், தத்த புத்திரன், கிருத்திரம புத்திரன், கூடோத்பந்ந புத்திரன், அபவித்த புத்திரன் என்னும் ஆறு வகையான புத்திரர்களும் தந்தையின் சொத்துக்கும், வாரிசில்லாத பங்காளிகளின் சொத்துக்கும் உரிமையுடையவர்கள்.*

कानीनश् च सहोढश् च क्रीतः पौनर्भवस् तथा।
स्वयंदत्तश् च शौद्रश् च षडदायादबान्धवाः॥

**காநீநஷ்ச ஸஹோடஷ்ச க்ரீத: பௌநர்பவஸ் ததா |**
**ஸ்வயம் தத்தஷ்ச ஷௌத்ரஷ்ச ஷடதாயாத பாந்தவா: ||** 160

*கானீன புத்திரன், சஹோட புத்திரன், க்ரீத புத்திரன், பவுநர்பவ புத்திரன், சுயதத்த புத்திரன், சௌத்ர புத்திரன் என்னும் ஆறு வகையான புத்திரர்களும் தந்தையின் சொத்துக்கு மட்டுமே உரிமை யுடையவர்கள்.*

यादृशं फलमाप्नोति कुप्लवैः सन्तरञ् जलम्।
तादृशं फलमाप्नोति कुपुत्रैः सन्तरंस् तमः॥

**யாத்ருஷம் பலமாப்நோதி குப்லவை: ஸந்தரஞ்ஜலம் |**
**தாத்ருஷம் பலமாப்நோதி குபுத்ரை: ஸந்தரம்ஸ் தம: ||** 161

*கடக்க முடியாத கடலை, கையில் கிடைத்த கயிற்றைப் பற்றிக் கொண்டு கடக்க நினைப்பவன் கதியை கெட்ட மகனை அடைந்தவன் அடைவான்.*

यद्येकरिक्थिनौ स्यातामौरसक्षेत्रजौ सुतौ।
यस्य यत् पैतृकं रिक्थं स तद् गृह्णीत नेतरः॥

**யத்யேகரிக்திநௌ ஸ்யாதாமௌரஸ க்ஷேத்ரஜௌ சுதௌ |**
**யஸ்யயத் பைத்ருகம் ரிக்தம் ஸ தத் க்ருஹ்ணீத நேதர: ||** 162

*க்ஷேத்ரஜ புத்திரன் பிறந்த பின்னர் ஔரஸ புத்திரன் பிறந்து, க்ஷேத்ரஜனை உண்டாக்கியவனுக்கு அவன் மனைவியிடம் பிள்ளை பிறக்கவில்லை எனில், க்ஷேத்ரஜன் அவன் சொத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். ஔரச புத்திரன் தன் தந்தையின் சொத்தை அடைய வேண்டும்.*

*(ஒருவன் தன் மனைவியிடம் தான் பெற்ற பிள்ளை ஔரசன். தன் மனைவியிடம் மற்றொருவன் மூலமாகப் பெற்ற பிள்ளை க்ஷேத்ரஜன்.)*

एक एवौरसः पुत्रः पित्र्यस्य वसुनः प्रभुः।
शेषाणामानृशंस्यार्थं प्रदद्यात् तु प्रजीवनम्॥

**ஏக ஏவௌரஸ: புத்ர: பித்ர்யஸ்ய வசுந: ப்ரபு: |**
**சேஷாணா மாந்ருஷம்ஸ்யா அர்தம் ப்ரதத்யாத்து ப்ரஜீவநம் ||** 163

*ஔரச மகன் பின்னர் பிறந்தவனாயினும், அவனே தந்தையின் சொத்துக்கு உரிமையாளன். மற்றவர்களுக்கு அவர்கள் தேவைக்குத் தக்கபடி பொருளைக் கொடுக்கலாம்.*

षष्ठं तु क्षेत्रजस्यांऽशं प्रदद्यात् पैतृकाद् धनात्।
औरसो विभजन् दायं पित्र्यं पञ्चममेव वा॥

**ஷஷ்டம் து க்ஷேத்ரஜஸ்யா அம்ஷம் ப்ரதத்யாத் பைத்ருகாத் தநாத் |**
**ஔரஸோ விபஜந் தாயம் பித்ர்யம் பஞ்சமமேவ வா ||** 164

*ஔரச மகன், க்ஷேத்ரஜ மகனுக்கு தந்தையின் தனத்தில் ஆறில் ஒரு பங்கோ, அல்லது ஐந்தில் ஒரு பங்கோ தர வேண்டும்.*

औरसक्षेत्रजौ पुत्रौ पितृरिक्थस्य भागिनौ।
दशाऽपरे तु क्रमशो गोत्ररिक्थांऽशभागिनः॥

**ஔரஸ க்ஷேத்ரஜௌ புத்ரௌ பித்ருரிக்தஸ்ய பாகிநௌ |**
**தஷா அபரேது க்ரமஷோ கோத்ரரிக்தா அம்ஷ பாகிந: ||** 165

*ஔரச, க்ஷேத்ரஜ புத்திரர்கள் இவ்வாறாக தந்தையின் சொத்துக்கு உரிமையாளர்கள். மற்றவர்கள் கோத்திர தனத்தை பங்கிட்டுக் கொள்ளலாம். அதற்குப் பிறகு தத்தன், அதற்கடுத்து க்ருத்திமன் என்று ஒருவரையடுத்து அடுத்தவர் உரிமை பெறு வார்கள்.*

स्वक्षेत्रे संस्कृतायां तु स्वयमुत्पादयेद् धि यम्।
तमौरसं विजानीयात् पुत्रं प्रथमकल्पितम्॥

**ஸ்வக்ஷேத்ரே ஸம்ஸ்க்ருதாயாம் து ஸ்வயமுத்பாதயேத் தி யம் |**
**தமௌரஸம் விஜாநீயாத் புத்ரம் ப்ரதமகல்பிதம் ||** 166

*ஒருவன், தன் வர்ணத்தைச் சேர்ந்த பெண்ணை மணந்து அவள் மூலமாகப் பெற்ற மகன் 'ஔரசன்' எனப்படுவான். இவனே பிரதானமான மகன்.*

यस् तल्पजः प्रमीतस्य क्लीबस्य व्याधितस्य वा।
स्वधर्मेण नियुक्तायां स पुत्रः क्षेत्रजः स्मृतः॥

**யத் தல்பஜ: ப்ரமிதஸ்ய க்ளீபஸ்ய வ்யாதிதஸ்ய வா |**
**ஸ்வதர்மேண நியுக்தாயாம் ஸ புத்ர: க்ஷேத்ரஜ: ஸ்ம்ருத: ||** 167

*ஒருவன் இறந்து போனாலோ, நபும்சகனாக இருந்தாலோ, பிள்ளைப் பேற்றை அடைய முடியாதபடியான குறைபாடுடைய வனாக இருந்தாலோ, அவன் மனைவி விதிமுறைப்படி பெரியோர் களால் சொல்லப்பட்டு, மைத்துனன் அல்லது பங்காளியுடன் கலந்து பெற்ற பிள்ளைக்கு 'க்ஷேத்ரஜன்' என்று பெயர்.*

माता पिता वा दद्यातां यमद्भिः पुत्रमापदि।
सदृशं प्रीतिसंयुक्तं स ज्ञेयो दत्त्रिमः सुतः॥

**மாதா பிதா வா தத்யாதாம் யமத்பி: புத்ரமாபதி |**
**ஸத்ருஷம் ப்ரீதி ஸம்யுக்தம் ஸ ஞேயோ தத்ரிம: சுத: || 168**

*தாயோ, தந்தையோ, அல்லது இருவரும் சேர்ந்தோ தங்கள் மகனை, புத்திரப் பேறு இல்லாதவருக்கோ அல்லது ஆபத்துக் காலத்திலோ பிரீதியோடு 'இனி இவன் உங்கள் புத்ரன்' என்று அளித்தால், அப்படி அளிக்கப்பட்ட மகன் 'தத்தன்' எனப்படுவான்.*

सदृशं तु प्रकुर्याद् यं गुणदोषविचक्षणम्।
पुत्रं पुत्रगुणैर् युक्तं स विज्ञेयश्च कृत्रिमः॥

**ஸத்ருஷம் து ப்ரகுர்யாத் யம் குணதோஷ விசக்ஷணம் |**
**புத்ரம் புத்ரகுணைர் யுக்தம் ஸ விக்ஞேயஸ்ய க்ருத்ரிம: || 169**

*தன் இனத்தைச் சேர்ந்த ஒரு பிள்ளை, ஒரு புத்திரனுக்குரிய கடமைகளையும், அக்கடமைகளைச் செய்யாவிடில் ஏற்படும் பாபங்களையும் அறிந்தவனாகவும், உத்தமனாகவும் இருக்கின்ற பட்சத்தில் அவனைத் மகனாக மனதார ஏற்றுக்கொண்டவனுக்கு அவன் 'க்ருத்திமன்' என்ற வகை புத்திரனாவான்.*

उत्पद्यते गृहे यस्य न च ज्ञायेत कस्य सः।
स गृहे गूढ उत्पन्नस् तस्य स्याद् यस्य तल्पजः॥

**உத்பத்யதே க்ருஹே யஸ்ய நச ஞாயேத கஸ்ய ஸ: |**
**ஸக்ருஹே கூட உத்பந்நஸ் தஸ்ய ஸ்யாத் யஸ்ய தல்பஜ: || 170**

*ஒரு மனைவி பிள்ளையைப் பெற்றால், அக்குழந்தைக்குத் தான் தந்தையில்லை என்று அவள் கணவனுக்குத் தெரிந்து, அப்பிள்ளை யாருக்குப் பிறந்தவன் என்றும் தெரியாதபோது, அப்பிள்ளை அந்தக் கணவனுக்கு 'கூடோத்பன்னன்' என்ற பெயர் கொண்ட பிள்ளை யாகிறான்.*

मातापितृभ्यामुत्सृष्टं तयोरन्यतरेण वा।
यं पुत्रं परिगृह्णीयादपविद्धः स उच्यते॥

**மாதா பித்ருப்யாமுத்ஸ்ருஷ்டம் தயோரன்யதரேண வா |**
**யம் புத்ரம் பரிக்ருஹ்ணீ யாதபவித்த: ஸ உச்யதே || 171**

*பெற்றவர்களால் வேண்டாம் என்று கைவிடப்பட்ட பிள்ளையோ, தாயோ தந்தையோ இறந்ததால் விடப்பட்ட பிள்ளையையோ ஒருவன் எடுத்து வளர்த்தால் அப்பிள்ளை அவனுக்கு 'அபவித்தன்' என்ற மகனாவான்.*

पितृवेश्मनि कन्या तु यं पुत्रं जनयेद् रहः।
तं कानीनं वदेन् नाम्ना वोढुः कन्यासमुद्भवम्॥

**பித்ருவேஷ்மநி கந்யா து யம் புத்ரம் ஜனயேத் ரஹ: |**
**தம் காநீநம் வதேந் நாம்நா வோடு: கந்யாஸமுத்பவம் ||** **172**

*பெற்றோரின் வீட்டில், ஒரு கன்னிப் பெண் கள்ளத் தொடர்பால் பெற்றெடுத்த பிள்ளை, பிறகு அவளை மணந்தவனுக்கு 'காநீநன்' என்ற மகனாகிறான்.*

या गर्भिणी संस्क्रियते ज्ञाताऽज्ञाताऽपि वा सती।
वोढुः स गर्भो भवति सहोढ इति चोच्यते॥

**யா கர்பிணீ ஸம்ஸ்க்ரியதே ஞாதாஅஞாதாஅபி வா ஸதீ |**
**வோடு: ஸ கர்போ பவதி ஸஹோட இதி சோச்யதே ||** **173**

*கருவுற்றிருக்கும் பெண்ணை, அந்த விஷயம் தெரிந்தோ தெரியாமலோ மணந்தவனுக்கு, அவள் பெற்ற அப்பிள்ளை 'சகோடன்' என்ற மகனாவான்.*

क्रीणीयाद् यस् त्वपत्यार्थं मातापित्रोर् यमन्तिकात्।
स क्रीतकः सुतस् तस्य सदृशोऽसदृशोऽपि वा॥

**க்ரீணீயாத் யஸ்த்வபத்யார்த்தம் மாதாபிதோர் யமந்திகாத் |**
**ஸக்ரீதக: சுதஸ் தஸ்ய ஸத்ருஷோ அஸத்ருஷோ அபி வா ||** **174**

*பிள்ளைப்பேறு இல்லாதவன், இன்னொரு தம்பதியிடமிருந்து விலை கொடுத்து ஒரு பிள்ளையை வாங்கிக் கொண்டால், அப்பிள்ளை இவன் தகுதிக்கும் குணநலன்களுக்கும் ஒத்தவனாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் 'கிரீதன்' என்ற மகனாவான்.*

या पत्या वा परित्यक्ता विधवा वा स्वयेच्छया।
उत्पादयेत् पुनर् भूत्वा स पौनर्भव उच्यते॥

**யா பத்யா வா பரித்யக்தா விதவா வா ஸ்வயேச்சயா |**
**உத்பாதயேத் புநர் பூத்வா ஸ பௌநர்பவ உச்யதே ||** **175**

*ஒரு பெண் கணவனால் கைவிடப்பட்டவளாகவோ அல்லது கணவன் இறந்தவளாகவோ ஆனபிறகு இன்னொருவனை மணந்து பெற்ற பிள்ளை அவனுக்கு 'பவுநர்பவன்' என்ற மகனாவான்.*

सा चेदक्षतयोनिः स्याद् गतप्रत्यागताऽपि वा।
पौनर्भवेन भर्त्रा सा पुनः संस्कारमर्हति॥

**ஸா சேதக்ஷதயோநி: ஸ்யாத் கத ப்ரத்யாகதா அபி வா |**
**பௌணர்பவேந பர்த்ரா ஸா புந: ஸம்ஸ்காரமர்ஹதி ||** **176**

கணவனால் கைவிடப்பட்டவளாக இருந்து, பவுநர்பவ புத்திரனை இன்னொருவனுக்குப் பெற்றுக் கொடுத்தவள் மீண்டும் தன் கணவனை மறுமண முறைப்படி மணக்கலாம்.

मातापितृविहीनो यस् त्यक्तो वा स्यादकारणात्।
आत्मानं स्पर्शयेद् यस्मै स्वयंदत्तस् तु स स्मृतः॥

**மாதா பித்ருவிஹீநோ யஸ் த்யக்தோ வா ஸ்யாதகாரணாத் |**
**ஆத்மாநம் ஸ்பர்ஷயேத் யஸ்மை ஸ்வயம் தத்தஸ்து ஸ ஸ்ம்ருத: || 177**

தாய் தந்தையற்ற பிள்ளை அல்லது காரணமின்றி பெற்றவர்களால் கைவிடப்பட்ட பிள்ளை தானாக வந்து ஒருவனிடம், தன்னைப் பிள்ளையாக ஏற்றுக்கொள்ளுமாறு கூறி, தன்னை ஒப்படைத்தால் அப்பிள்ளை அவனுக்கு 'சுயதத்தன்' என்ற மகனாவான்.

यं ब्राह्मणस् तु शूद्रायां कामादुत्पादयेत् सुतम्।
स पारयन्नेव शवस् तस्मात् पारशवः स्मृतः॥

**யம் ப்ராஹ்மணஸ்து சூத்ராயாம் காமாதுத்பாதயேத் சுதம் |**
**ஸ பாரயந்நேவ ஷவஸ் தஸ்மாத் பாரஷவ: ஸ்ம்ருத: || 178**

பிராம்மணன், சூத்ரப் பெண்ணிடம் காமம் கொண்டு அதனால் பிறந்த பிள்ளை, சிராத்த கிரியைகள் செய்ய அதிகாரமற்றவன். இத்தகைய பிள்ளைக்கு 'பாரசவன்' என்று பெயர்.

दास्यां वा दासदास्यां वा यः शूद्रस्य सुतो भवेत्।
सोऽनुज्ञातो हरेदंशमिति धर्मो व्यवस्थितः॥

**தாஸ்யாம் வா தாஸதாஸ்யாம்வா ய: சூத்ரஸ்ய சுதோ பவேத் |**
**ஸோ அனுஞாதோ ஹரேதம்ஷமிதி தர்மோ வ்யவஸ்தித: || 179**

ஒரு சூத்திரனுக்கு அவனது வேலைக்காரியிடமோ அல்லது வேலைக்காரன் மனைவியிடமோ பிள்ளை பிறந்திருந்தால் அவனுக்கு, அந்த சூத்திரன் தன் மற்றப் பிள்ளைகளுக்குக் கொடுப்பது போல் சொத்தில் பாகம் கொடுப்பது தர்மமேயாகும்.

क्षेत्रजादीन् सुतानेतानेकादश यथोदितान्।
पुत्रप्रतिनिधीनाहुः क्रियालोपान् मनीषिणः॥

**க்ஷேத்ர ஜாதீந் சுதாநேதாநேகா தஷ யதோதிதாந் |**
**புத்ரப்ரதிநிதீநாஹு: க்ரியாலோபாந் மநீஷிண: || 180**

க்ஷேத்ரஜன் முதலான பதினொரு வகைப் பேரும் சொந்தப் புத்திரனுக்குப் பதிலாக, பிரதிநிதியாக இருந்து கிரியைகளைச் செய்யலாம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

य एतेऽभिहिताः पुत्राः प्रसङ्गादन्यबीजजाः ।
यस्य ते बीजतो जातास् तस्य ते नेतरस्य तु ॥

**ய ஏதேஅபிஹிதா: புத்ரா: ப்ரசங்காதன்யபீஜ ஜா: |**
**யஸ்யதே பீஜதோ ஜாதாஸ் தஸ்யதே நேதரஸ்ய து ||** 181

இவ்வாறு கூறினாலும், தன் சொந்த மகனைப் போன்று, மற்ற வகையில் கூறப்பட்ட மகன்கள் ஆக மாட்டார்கள். தான் பெற்ற மகனே ஒருவனுக்கு கிரியைகளை இயற்றவும், வம்சத்தை வளர்க்கவும் தக்க மகனாவான். வேறு வழியற்றபோது மற்ற வகைப் பிள்ளைகளை ஏற்றுக்கொள்ள வேண்டி இருக்கிறது.

भ्रातृणामेकजातानामेकश् चेत् पुत्रवान् भवेत् ।
सर्वांस् तांस् तेन पुत्रेण पुत्रिणो मनुरब्रवीत् ॥

**ப்ராத்ருணாமேகஜாதா நாமேகஷ்சேத் புத்ரவாந் பவேத் |**
**ஸர்வாம்ஸ் தாம்ஸ் தேந புத்ரேண புத்ரிணோ மனுரப்ரவீத் ||** 182

சகோதரர்களில் ஒருவனுக்கு மட்டும் புத்திரன் இருந்தாலும், அத்தனை சகோதரர்களுக்கும் அவன் புத்திரனே ஆவான் என்று மனு கூறியிருக்கிறார்.

सर्वासामेकपत्नीनामेका चेत् पुत्रिणी भवेत् ।
सर्वास् तास् तेन पुत्रेण प्राऽऽह पुत्रवतीर् मनुः ॥

**ஸர்வாஸாமேக பத்நீநா மேகா சேத் புத்ரிணீ பவேத் |**
**ஸர்வாஸ் தாஸ் தேந புத்ரேண ப்ராஆஹ புத்ரவதீர் மனு: ||** 183

ஒருவனுக்கு ஒருசில மனைவியரிருந்து, அவர்களில் ஒருத்திக்கு புத்திரன் பிறந்திருந்தாலும், அம்மனைவியர் அனைவருமே சந்ததியடைந்தவராகின்றனர் என்று மனு கூறியுள்ளார்.

श्रेयसः श्रेयसोऽलाभे पापीयान् रिक्थमर्हति ।
बहवश् चेत् तु सदृशाः सर्वे रिक्थस्य भागिनः ॥

**ஷ்ரேயஸ: ஷ்ரேயஸோ அலாபே பாபீயாந் ரிக்தமர்ஹஸி |**
**பஹவஷ் சேத் து ஸத்ருஷா: ஸர்வே ரிக்தஸ்ய பாகிந: ||** 184

இப்படிப்பட்ட சொந்த மகன் (ஔரசன்) இல்லாதபோது, அதற்கடுத்தடுத்துக் கூறப்பட்ட வகையினரான பிள்ளைகள் சொத்தில்

பாகத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது ஔரச புத்திரன் இல்லாதபோது க்ஷேத்ரஜன் சொத்துக்குரியவன். அப்படிப்பட்டவன் இல்லாதபோது அதற்கடுத்த வகையினனான தத்தனான புத்திரன் சொத்துக்குரியவன். ஒரே வகையில் பல புத்திரர்கள் இருந்தால் அவர்கள் சொத்துக்கு சமமான உரிமையுடையவராவர்.

न भ्रातरो न पितरः पुत्रा रिक्थहराः पितुः।
पिता हरेदपुत्रस्य रिक्थं भ्रातर एव च॥

**நப்ராதரோ ந பிதர: புத்ரா ரிக்தஹரா: பிது: |**
**பிதா ஹரேதபுத்ரஸ்ய ரிக்தம் ப்ராதர ஏவ ச || 185**

ஒருவனுடைய சொத்தில், அவனுடைய தந்தைக்கோ சகோதரர்களுக்கோ உரிமை கிடையாது.

அவனுடைய எந்த வகையான புத்திரனும் இல்லை என்னும் போது அவன் இறந்து, அவன் தந்தை உயிரோடிருந்தால், அந்தத் தந்தை அவன் சொத்தை அடையலாம். தந்தை உயிரோடில்லாவிடில் அவன் சகோதரர்கள் அவன் சொத்தைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

त्रयाणामुदकं कार्यं त्रिषु पिण्डः प्रवर्तते।
चतुर्थः सम्प्रदातैषां पञ्चमो नोपपद्यते॥

**த்ரயாணாமுதகம் கார்யம் த்ரிஷு பிண்ட: ப்ரவர்ததே |**
**சதுர்த: ஸம்ப்ரதாதைஷாம் பஞ்சமோ நோபபத்யதே || 186**

மூன்று தலைமுறை வரையில் (தந்தை, தந்தையின் தந்தை, அவரின் தந்தை) பிண்டமளிக்க வேண்டும். நான்காவது தலைமுறைக்கு சம்பிரதாயமாக அளிக்கலாம். ஐந்தாவது தலைமுறைக்கு அளிக்க வேண்டியதில்லை.

अनन्तरः सपिण्डाद् यस् तस्यतस्य धनं भवेत्।
अत ऊर्ध्वं सकुल्यः स्यादाचार्यः शिष्य एव वा॥

**அநந்தர: ஸபிண்டாத் யஸ் தஸ்யதஸ்ய தனம் பவேத் |**
**அத ஊர்த்வம் ஸகுல்ய: ஸ்யாதாசார்ய: சிஷ்ய ஏவ வா || 187**

பிண்டமளிப்பவர்களே, இறந்து போன அவர்களுடைய சொத்துக்கு உரிமையுடையவர்கள்.

ஒருவனுக்கு பிண்டதானம் செய்ய உரிமையுடையவர் யாருமில்லாதபோது அவனுடைய ஆசார்யன் இருந்தால் சொத்தை எடுத்துக் கொண்டு பிண்டதானம் செய்யலாம். அல்லது சிஷ்யன் இருந்தால் அவனும் சொத்தை எடுத்துக் கொண்டு பிண்டதானம் செய்யலாம். (சிராத்த காரியங்களைச் செய்யலாம்.)

सर्वेषामप्यभावे तु ब्राह्मणा रिक्थभागिनः।
त्रैविद्याः शुचयो दान्तास् तथा धर्मो न हीयते॥

**ஸர்வேஷாமப்யபாவே து ப்ராஹ்மணா ரிக்த பாகிந: |**
**த்ரைவித்யா: சுசயோ தாந்தாஸ் ததா தர்மோ ந ஹீயதே ||** 188

இப்படியும்கூட யாருமில்லாதபோது, அதாவது ஆசார்யனும் சிஷ்யனும்கூட இல்லாதபோது, மூன்று வேதங்களும் அறிந்தவர்களும், உள்ளும்புறமும் தூய்மையானவர்களும், புலனடக்கம் மிக்கவர் களுமான பிராம்மணர்கள் அந்த சொத்தை எடுத்துக் கொள்ளலாம். அந்த சொத்தை எடுத்துக் கொண்டவன், சொத்துக் குடையவனுக்கு பிண்டதானம் வழங்க வேண்டும்.

अहार्यं ब्राह्मणद्रव्यं राज्ञा नित्यमिति स्थितिः।
इतरेषां तु वर्णानां सर्वाऽभावे हरेन् नृपः॥

**அஹார்யம் ப்ராஹ்மண த்ரவ்யம் ராக்ஞா நித்யமிதி ஸ்திதி: |**
**இதரேஷாம் து வர்ணாநாம் ஸர்வாஅபாவே ஹரேந் ந்ருப: ||** 189

பிராம்மணனுடைய சொத்துக்கு உரிமையாளன் யாருமில்லாத போதும் அரசன் அதை தன் பொக்கிஷத்தில் சேர்த்துக் கொள்ளக் கூடாது. அதுவே க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுடைய சொத்தாக இருந்தால், அந்த சொத்து எந்த வகையிலும் அரசனைச் சேர வேண்டியதேயாகும்.

संस्थितस्याऽनपत्यस्य सगोत्रात् पुत्रमाहरेत्।
तत्र यद् रिक्थजातं स्यात् तत् तस्मिन् प्रतिपादयेत्॥

**ஸம்ஸ்திதஸ்யா அநபத்யஸ்ய ஸகோத்ராத் புத்ரமாஹரேத் |**
**தத்ரயத் ரிக்தஜாதம் ஸ்யாத் தத் தஸ்மிந் ப்ரதிபாதயேத் ||** 190

பிள்ளைப் பேறில்லாது இறந்து போனவனின் மனைவி கணவனின் கோத்திரத்தைச் சேர்ந்தவனோடு கலந்து ஒரு மகனைப் பெற்றுக் கொள்ளலாம். அவளுடைய கணவனது சொத்து முழுவதும் அம்மகனுக்கே சொந்தமாகும்.

द्वौ तु यौ विवदेयातां द्वाभ्यां जातौ स्त्रिया धने।
तयोर् यद् यस्य पित्र्यं स्यात् तत् स गृह्णीत नेतरः॥

**த்வௌ து யௌ விவதேயாதாம் த்வாப்யாம் ஜாதௌ ஸ்திரியா தநே |**
**தயோர் யத் யஸ்ய பித்ர்யம் ஸ்யாத் தத்ஸ க்ருஹ்ணீத நேதர: ||** 191

ஒரு பெண்ணுக்கு குழந்தை பிறந்த பிறகு கணவன் இறந்து போய், அவள் இன்னொருவனை மணந்து கொண்டு குழந்தை பெற்றுக்கொண்டால், அந்தப் பிள்ளைகள், அவனவன் தந்தையின் சொத்தை அடைய வேண்டும். ஒருவன் சொத்தில் இன்னொரு வனுக்கு உரிமை கிடையாது.

जनन्यां संस्थितायां तु समं सर्वे सहोदराः।
भजेरन् मातृकं रिक्थं भगिन्यश् च सनाभयः॥

**ஜநந்யாம் ஸம்ஸ்திதாயாம் து ஸமம் ஸர்வே ஸஹோதரா: |**
**பஜேரந் மாத்ருகம் ரிக்தம் பகிந்யஷ் ச ஸநாபய: || 192**

தாய் மரித்தபின், அவளுடைய செல்வத்தை அவள் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் சமமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். திருமணமான பெண்களுக்கு விருப்பப்படி கொடுக்கலாம்.

यास् तासां स्युर् दुहितरस् तासामपि यथार्हतः।
मातामह्या धनात् किञ्चित् प्रदेयं प्रीतिपूर्वकम्॥

**யாஸ் தாஸாம் ஸ்யுர் துஹிதரஸ் தாஸாமபி யதாஹர்த: |**
**மாதாமஹ்யா தநாத் கிஞ்சித் ப்ரதேயம் ப்ரீதிபூர்வகம் || 193**

பெண் வயிற்றுப் பேத்திகளில் திருமணமாகாதவர்கள் இருந்தால் அவர்களுக்கும் சந்தோஷப்பட்டு ஏதோ சிறிது கொடுக்கலாம்.

अध्यग्न्यध्यावाहनिकं दत्तं च प्रीतिकर्मणि।
भ्रातृमातृपितृप्राप्तं षड्विधं स्त्रीधनं स्मृतम्॥

**அத்யக்ந் யத்யாவாஹநிகம் தத்தம் ச ப்ரீதிகர்மணி |**
**ப்ராத் ரு மாத்ருபித் ரூப்ராப்தம் ஷட்விதம் ஸ்த்ரீதனம் ஸ்ம்ருதம் || 194**

अन्वाधेयं च यद् दत्तं पत्या प्रीतेन चैव यत्।
पत्यौ जीवति वृत्तायाः प्रजायास् तद् धनं भवेत्॥

**அந்வாதேயம் ச யத் தத்தம் பத்யா ப்ரீதேந சைவ யத் |**
**பத்யௌ ஜீவதி வ்ருத்தாயா: ப்ரஜாயாஸ் தத் தநம் பவேத் || 195**

ஸ்திரீதனம் என்றால் பெண்ணின் தனம், பெண்ணின் சொத்து என்று பொருள்படும். இது ஆறு வகையில் அவளுக்குக் கிடைக்கும்.

1. திருமண சமயத்தில் அக்னியின் முன்னிலையில், தந்தை யினால் வழங்கப்படுவது, அப்பெண்ணின் சொந்தச் சொத்தாகிறது. இந்தச் சொத்துக்கு 'அத்யாக்னி' என்று பெயர்.

2. திருமணமான பெண்ணை புக்ககத்திற்கு கணவனுடன் அனுப்பி வைக்கும்போது அவளுக்குக் கொடுத்த பொருள், இந்த சொத்துக்கு 'அத்யாவாஹனிகம்' என்று பெயர்.

3. மேலும் திருமண சமயத்தில் மற்றவர்கள் பிரீதியோடு அவளுக்குக் கொடுத்த பொருட்கள்.

4. கூடப் பிறந்த சகோதரர்கள் அவள் தங்கள் இல்லத்துக்கு வந்தபோதோ, அல்லது அவள் இல்லத்துக்கு இவர்கள் போனபோதோ மற்றும் விசேஷ நாட்களிலோ அவளுக்கு வழங்கியவை.

5. தந்தை மூலமாகக் கிடைத்த தனம்.

6. தாய் மூலமாக கிடைத்த தனம்.

இவ்வாறு ஆறு வகைகளில் ஒரு ஸ்த்ரீக்கு தனம் கிடைக்கும். இப்படிக் கிடைத்த யாவும் அவளுடைய சொந்த சொத்தேயாகும்.

திருமணத்துக்குப் பிறகு கணவனின் வீட்டுச் சொத்திலிருந்தோ, தாய் வீட்டுச் சொத்திலிருந்தோ கிடைத்தவையும், கணவன் அன்போடு அவளுக்கு அளித்தவையும், முதலில் சொன்னபடி ஆறு வகைகளில் அவளுக்குக் கிடைத்தவையுமான சொத்து முழுவதும், கணவன் உயிரோடிருந்து, அவள் இறந்து விட்டாலும் அவளது சந்ததியினரையே சேரும். கணவனுக்கு அந்த சொத்தில் உரிமை யில்லை.

ब्राह्मदैवाऽऽर्षगान्धर्वप्राजापत्येषु यद् वसु।
अप्रजायामतीतायां भर्तुरेव तदिष्यते॥

**ப்ராஹ்மதைவா ஆர்ஷகாந்தர்வ ப்ராஜாபத்யேஷுயத் வசு |**
**அப்ரஜாயாமதீதாயாம் பர்துரேவ ததிஷ்யதே ||** **196**

பிராம்ம விவாகம், தெய்வ விவாகம், ஆர்ஷ விவாகம், கந்தர்வ விவாகம், பிராஜாபாத்ய விவாகம் என்னும் ஐந்து வகை விவாகங் களாலும் மணந்த பெண்ணின் சொத்து, அவள் சந்ததியின்றி இறந்து விட்டால், அவள் கணவனுக்கு உரித்தாகும்.

यत् त्वस्याः स्याद् धनं दत्तं विवाहेष्वासुरादिषु।
अप्रजायामतीतायां मातापित्रोस् तदिष्यते॥

**யத் த்வஸ்யா: ஸ்யாத் தநம் தத்தம் விவாஹேத்வாசுராதிஷு |**
**அப்ரஜாயாமதீதாயாம் மாதாபித்ரோஸ் ததிஷ்யதே ||** **197**

ஆசுர விவாகம், ராக்ஷச விவாகம், பைசாச விவாகம் என்னும் மூன்று வகை விவாகங்களாலும் மணந்த பெண்ணின் சொத்து, அவள் சந்ததியின்றி இறந்து விட்டால், அவள் பெற்றோருக்கே உரித்தாகும்.

स्त्रियां तु यद् भवेद् वित्तं पित्रा दत्तं कथञ्चन।
ब्राह्मणी तद् धरेत् कन्या तदपत्यस्य वा भवेत्॥

**ஸ்த்ரியாம் து யத் பவேத் வித்தம் பித்ரா தத்தம் கதஞ்சந ।**
**ப்ராஹ்மணீ தத் தரேத் கந்யா ததபத்யஸ்ய வாபவேத் ॥ 198**

பிராம்மணன், பிராம்மணப் பெண்ணையும் மணந்து, மற்ற வர்ணத்துப் பெண்களையும் மணந்திருந்து, மற்ற வர்ணத்துப் பெண் சந்ததியின்றி இறந்து விட்டால், அவள் சொத்து, அவள் கணவனுக்கு பிராம்மணப் பெண்ணிடம் பிறந்த பெண் சந்ததியினரைச் சேரும். பெண் சந்ததி இல்லாத போது ஆண் சந்ததியினரைச் சேரும்.

न निर्हारं स्त्रियः कुर्युः कुटुम्बाद् बहुमध्यगात्।
स्वकादपि च वित्ताद् धि स्वस्य भर्तुरनाज्ञया॥

**ந நிர்ஹாரம் ஸ்த்ரிய: குர்யு: குடும்பாத் பஹுமத்யகாத் ।**
**ஸ்வகாதபி ச வித்தாத் தி ஸ்வஸ்ய பர்துரநாக்ஞயா ॥ 199**

பல பேர் இருக்கின்ற குடும்பத்தில், குடும்ப வரவுப் பணத்திலிருந்து பெண்கள் தனியாக தங்களுக்கென்று பொருளை சேர்த்து வைக்கக் கூடாது. தன் கணவனுடைய சம்பாத்தியமாகவே இருந்தாலும், கணவனாக எதுவும் கொடுக்காத போது தனியாக எதையும் எடுத்துக் கொள்ளக் கூடாது.

पत्यौ जीवति यः स्त्रीभिरलङ्कारो धृतो भवेत्।
न तं भजेरन् दायादा भजमानाः पतन्ति ते॥

**பத்யௌ ஜீவதிய: ஸ்த்ரீபிலங்காரோ த்ருதோ பவேத் ।**
**நதம் பஜேரந் தாயாதா பஜமாநா: பதந்தி தே ॥ 200**

கணவன் இருக்கும்போது ஒரு பெண் அணிந்து கொண்டிருந்த ஆபரணங்களை, அவன் (கணவன்) இறந்த பிறகு அவன் பிள்ளைகள் பங்கிட்டுக் கொள்ளக்கூடாது. அவ்வாறு செய்பவர்கள் பாபத்துக் காளாவார்கள்.

अनंशौ क्लीबपतितौ जात्यन्धबधिरौ तथा।
उन्मत्तजडमूकाश् च ये च केचिन् निरिन्द्रियाः॥

**அநம்ஷௌ க்லீபபதிதௌ ஜாத்யந்த பதிரௌ ததா ।**
**உன்மத்த ஜடமூகாஷ்ச யே ச கேசிந் நிரிந்த்ரியா: ॥ 201**

நபும்சகன், செய்த பாவத்தால் குடும்பத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டவன், பிறவிக் குருடன், செவிடன், பைத்தியக்காரன், மூடன், ஊமை, முடவன், உடலியக்கமற்றவன் முதலானோர் தந்தையின் தனத்தைப் பங்கிட்டுக்கொள்ள உரிமையற்றவர்கள்.

सर्वेषामपि तु न्याय्यं दातुं शक्त्या मनीषिणा।
ग्रासाऽऽच्छादनमत्यन्तं पतितो ह्यदद् भवेत्॥

**ஸர்வேஷாமபி து ந்யாய்யம் தாதும் ஷக்த்யா மநீஷிணா |**
**க்ராஸா ஆச்சாதநமத்யந்தம் பதிதோ ஹ்யதத் பவேத் || 202**

ஆனால், அந்த தனத்தை எடுத்துக் கொண்டவன், இத்தகையோன் உயிரோடிருக்கும் வரை உணவு உடை இருப்பிடம் கொடுத்து போஷிக்க வேண்டும். இல்லாவிடில் அவன் பாபத்துக் காளாவான்.

यद्यर्थिता तु दारैः स्यात् क्लीबादीनां कथञ्चन।
तेषामुत्पन्नतन्तूनामपत्यं दायमर्हति॥

**யத்யர்திதா து தாரை: ஸ்யாத் க்லீபாதீநாம் கதஞ்சன |**
**தேஷாமுத்பந்நதந்தூ நாமபத்யம் தாயமர்ஹஸி || 203**

இத்தகையோருக்கு திருமண ஆசை ஏற்பட்டு, யாரோ ஒருத்தி திருமணமும் செய்து கொண்டு அவர்களுக்கு சொந்த மகனோ அல்லது க்ஷேத்ரஜ வகையிலோ சந்ததி ஏற்பட்டால் அப்போது சொத்தில் உரிய பாகத்தைக் கொடுக்க வேண்டும்.

यत्किञ्चित् पितरि प्रेते धनं ज्येष्ठोऽधिगच्छति।
भागो यवीयसां तत्र यदि विद्याऽनुपालिनः॥

**யத்கிஞ்சித் பிதரி ப்ரேதே தநம் ஜ்யேஷ்டோ அதிகச்சதி |**
**பாகோ யவீயஸாம் தத்ர யதி வித்யா அனுபாலிந: || 204**

தந்தை இறந்து பாகப் பிரிவினை செய்யாமல் இருக்கும்போது, மூத்தவன் தான் சொந்தமாக தனத்தை சம்பாதித்தால், தன் சகோதரர்களுக்கும் கொடுக்க வேண்டும்.

अविद्यानां तु सर्वेषामीहातश्चेद् धनं भवेत्।
समस्तत्र विभागः स्यादपित्र्य इति धारणा॥

**அவித்யாநாம் து ஸர்வேஷாமீஹாதஷ்சேத் தனம் பவேத் |**
**ஸமஸ் தத்ர விபாக: ஸ்யாதபித்ர்ய இதி தாரணா || 205**

வித்யையால் தான் ஒருவன் மட்டும் சம்பாதிக்காமல், சகோதரர்கள் சேர்ந்து செய்யும் வாணிபம் போன்றவற்றால் சம்பாதித்ததை எல்லா சகோதரர்களும் சரிசமமாக பங்கிட்டுக் கொள்ள வேண்டும். தந்தையின் தனத்தை இதில் சேர்க்கக்கூடாது.

विद्याधनं तु यद् यस्य तत् तस्यैव धनं भवेत्।
मैत्र्यमौद्वाहिकं चैव माधुपर्किकमेव च॥

**வித்யாதநம் து யத் யஸ்ய தத் தஸ்யைவ தனம் பவேத் |**
**மைத்ர்ய மௌத்வாஹிகம் சைவ மாது பர்கிகமேவ ச || 206**

ஒருவன் தன் வித்யையினால் சம்பாதித்த செல்வம் அவனுக்கே சொந்தமானது. மேலும் சிநேகிதத்தால் கிடைத்த செல்வம், விவாக சமயத்தில் கிடைத்த செல்வம், பிறர் பூஜித்து அவனுக்களித்த செல்வம் முதலானவையும் அவனுக்கே சொந்தமானது.

भ्रातॄणां यस् तु नेहेत धनं शक्तः स्वकर्मणा।
स निर्भाज्यः स्वकादशात् किञ्चिद् दत्त्वोपजीवनम्॥

**ப்ராத்ருணாம் யஸ்து நேஹேத தநம் ஷக்த: ஸ்வகர்மணா |**
**ஸ நிர்பாஜ்ய: ஸ்வகாதம்ஷாத் கிஞ்சித் தத்வோ பஜீவனம் || 207**

சகோதரர்களில் ஒருவன் சொந்த சம்பாத்தியமாக தனம் சேர்த்து, பாகப் பிரிவினையின் போது, தனக்குப் பாகம் தேவையில்லை என்று கூறினால், பங்கில் அவன் ஜீவனத்துக்கு என்று சிறிது கொடுத்து, மீதியை மற்றவர்கள் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

अनुपघ्नन् पितृद्रव्यं श्रमेण यदुपार्जितम्।
स्वयमीहितलब्धं तन् नाऽकामो दातुमर्हति॥

**அனுபக்நந் பித்ருத்ரவ்யம் ஷ்ரமேண யதுபார்ஜிதம் |**
**ஸ்வய மீஹிதலப்தம் தந் நாஅகாமோ தாதுமர்ஹதி || 208**

தந்தையின் தனத்தைச் சேர்க்காமல், தானாக தன் தனத்தைக் கொண்டு ஒருவன் சம்பாதித்தால் (வட்டி போன்றவற்றால்) தன் சகோதரர்களுக்கு அதில் பங்கு கொடுப்பதும் கொடுக்காததும் அவனுடைய விருப்பத்தைப் பொறுத்தது.

पैतृकं तु पिता द्रव्यमनवाप्तं यदाप्नुयात्।
न तत्पुत्रैर् भजेत् सार्धमकामः स्वयमर्जितम्॥

**பைத்ருகம் து பிதா த்ரவ்யமநவாப்தம் யதாப்னுயாத் |**
**ந தத் புத்ரைர் பஜேத் ஸார்தமகாம: ஸ்வயமர்ஜிதம் || 209**

ஒரு தந்தை, சாமர்த்தியமில்லாமையால் தொலைத்த செல்வத்தை மகன் தன் திறமையால் மீட்டுக்கொண்டு வந்தால் அது அவனுடையதே யாகும்.

தான் சுயமாக சம்பாதித்ததை, தந்தை விரும்பினால் மட்டுமே பிள்ளைகளுக்குப் பகிர்ந்தளிக்கலாம். சுயார்ஜித செல்வத்தை பாகப் பிரிவினை செய்து கொடுக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை.

विभक्ताः सह जीवन्तो विभजेरन् पुनर् यदि।
समस् तत्र विभागः स्याज् ज्यैष्ठ्यं तत्र न विद्यते॥

**விபக்தா: ஸஹ ஜீவந்தோ விபஜேரந் புநர் யதி |**
**ஸமஸ்தத்ர விபாக: ஸ்யாஜ் ஜ்யைஷ்ட்யம் தத்ர நவித்யதே || 210**

அனைவரும் பாகப் பிரிவினை செய்து கொண்ட பிறகும் மீண்டும் ஒன்றாகவே இருந்து சேர்த்த செல்வத்தை திரும்பவும் பங்கு போட்டுக் கொண்டால் அப்போது மூத்தவனுக்கு என்று தனியாக எந்தப் பங்கும் கிடையாது. எல்லோரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

येषां ज्येष्ठः कनिष्ठो वा हीयेतांशप्रदानतः।
म्रियेतान्यतरो वाऽपि तस्य भागो न लुप्यते॥

**யேஷாம் ஜ்யேஷ்ட: கநிஷ்டோ வா ஹீயேதா அம்ஷப்ரதாநத: |**
**ம்ரியதே அந்யதரோ வாஅபி தஸ்ய பாகோந லுப்யதே || 211**

சகோதரர்களில் எவனாவது இறந்து போனாலோ, நாடு கடத்தப்படுதல் சந்யாசியாகிப் போதல் போன்றவற்றால் அவன் அவ்விடத்தில் இல்லாமல் போனாலோ, அவனுக்குப் பங்கு இல்லாமல் போகாது.

सोदर्या विभजेरंस् तं समेत्य सहिताः समम्।
भ्रातरो ये च संसृष्टा भगिन्यश् च सनाभयः॥

**ஸோதர்யா விபஜேரம்ஸ் தம் ஸமேத்ய ஸஹிதா: ஸமம் |**
**ப்ராதரோ யே ச ஸம்ஸ்ருஷ்டா பகிந்யஷ் ச ஸநாபய: || 212**

அவனுடைய பங்கு அவன் பிள்ளைகளுக்குப் போக வேண்டும். அவனுக்குப் பிள்ளைகளும் இல்லை, மனைவியும் இல்லை, பெற்றோரும் இல்லை என்றால், அவன் சொந்த உடன் பிறந்த சகோதரர்களும், சகோதரிகளும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

यो ज्येष्ठो विनिकुर्वीत लोभाद् भ्रातॄन् यवीयसः।
सोऽज्येष्ठः स्यादभागश् च नियन्तव्यश् च राजभिः॥

**யோ ஜ்யேஷ்டோ விநிகுர்வீத லோபாத் ப்ராத்ரூந் யவீயஸ: |**
**ஸோ ஜ்யேஷ்ட: ஸ்யாதபாகஷ் ச நியந்தவ்யஷ் ச ராஜபி: ||** 213

மூத்தவன் பேராசையால், உடன் பிறந்தார் சொத்தை மோசடி செய்து எடுத்துக் கொண்டால், அவனுக்கு சொத்தில் பங்கு கிடையாது. மேலும் அவனை அரசன் தண்டிக்க வேண்டும்.

सर्व एव विकर्मस्था नाऽर्हन्ति भ्रातरो धनम्।
न चाऽदत्त्वा कनिष्ठेभ्यो ज्येष्ठः कुर्वीत यौतकम्॥

**ஸர்வ ஏவ விகர்மஸ்தா நா அர்ஹந்தி ப்ராதரோ தநம் |**
**ந சா ஆதத்வா கனிஷ்டேப்யோ ஜ்யேஷ்ட: குர்வீத யௌதகம் ||** 214

சகோதரர்களில் செய்யத்தகாத காரியங்களைச் செய்பவனுக்கு சொத்தில் பங்கு கிடையாது. மூத்தவன், தன் தம்பியர் இருக்கும் போது, தனக்கென்று சொத்தில் தனியுரிமை கொண்டாட முடியாது.

भ्रातृणामविभक्तानां यद्युत्थानं भवेत् सह।
न पुत्रभागं विषमं पिता दद्यात् कथञ्चन॥

**ப்ராத்ருணாமவிபக்தாநாம் யத்யுத்தாநம் பவேத் ஸஹ |**
**நபுத்ரபாகம் விஷமம் பிதா தத்யாத் கதஞ்சந ||** 215

உடன் பிறந்தாரனைவரும் தந்தையுடன் இருந்து ஒன்றாகச் சேர்ந்து சம்பாதித்திருந்தால், தந்தை அவர்களுக்கு தனத்தை சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும். ஏற்றத் தாழ்வாகப் பங்கிடக் கூடாது.

ऊर्ध्वं विभागाज् जातस् तु पित्र्यमेव हरेद् धनम्।
संसृष्टास् तेन वा ये स्युर् विभजेत स तैः सह॥

**ஊர்த்வம் விபாகாஜ் ஜாதஸ் து பித்ர்யமேவ ஹரேத் தநம் |**
**ஸம்ஸ்ருஷ்டாஸ் தேந வா யே ஸ்யுர் விபஜேத ஸதை: ஸஹ ||** 216

தந்தை தான் உயிரோடிருக்கும்போதே, பிள்ளைகளுக்குத் தனத்தை பங்கிட்டு அளித்த பிறகு, அவருக்குக் குழந்தை பிறந்தால், அவன் (அந்தக் குழந்தை) தந்தை தன் வசம் வைத்திருந்த தனத்துக்கு உரிமை உடையவனாவான்.

மேலும் தந்தையுடன் கூட்டுக் குடும்பமாக சகோதரர்களும் இருந்தால், அவர்களுடன் சேர்ந்து அந்த தனத்தைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

अनपत्यस्य पुत्रस्य माता दायमवाप्नुयात्।
मातर्यपि च वृत्तायां पितुर् माता हरेद् धनम्॥

**அநபத்யஸ்ய புத்ரஸ்ய மாதா தாயமவாப்னுயாத் |**
**மாதர்யபி வ்ருத்தாயாம் பிதுர் மாதா ஹரேத் தநம் ||** 217

*சந்ததியில்லாமல் புத்திரன் இறந்து போனால் தாய்க்கு அவன் பங்கு சேரும். அவளும் இல்லாவிடில், தந்தையைப் பெற்ற தாய்க்கு அந்த தனம் சேரும். இது திருமணமாகாத மகனுக்கான விஷயம்.*

ऋणे धने च सर्वस्मिन् प्रविभक्ते यथाविधि।
पश्चाद् दृश्येत यत्किञ्चित् तत् सर्वं समतां नयेत्॥

**ருணே தநே ச ஸர்வஸ்மிந் ப்ரவிபக்தே யதாவிதி |**
**பஷ்சாத் த்ருஷ்யேத யத்கிஞ்சித் தத் ஸர்வம் ஸமதாம் ந்யேத் ||** 218

*தந்தை இறந்து, பாகப் பிரிவினைக்குப் பிறகு, தந்தையின் வேறு ஏதோ சொத்து இருப்பது தெரிந்தால் அந்தச் சொத்தை சமமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். அவர் வைத்துவிட்டுப் போன கடன் இருந்தால், அதையும் சமமாக அடைக்க வேண்டும்.*

वस्त्रं पत्रमलङ्कारं कृतान्नमुदकं स्त्रियः।
योगक्षेमं प्रचारं च न विभाज्यं प्रचक्षते॥

**வஸ்த்ரம் பத்ரமலங்காரம் க்ருதா அந்நமுதகம் ஸ்த்ரிய: |**
**யோகக்ஷேமம் ப்ரசாரம் ச ந விபாஜ்யம் ப்ரசக்ஷதே ||** 219

*வஸ்திரங்கள், வாகனம், ஆபரணங்கள், பக்குவம் செய்யப்பட்ட உணவு வகைகள், கிணறு, வேலைக்காரப் பெண்கள், தான் சௌக்கியமாக வாழ இதுவரை அனுபவித்துக் கொண்டிருந்தவை (ஒரு பசு வைத்துக் கொண்டிருப்பவனானால் இதுவரை அவனுக்கு பால் தயிர் நெய் போன்றவற்றை அனுபவித்து வந்திருப்பான்) பாதை முதலானவைகளை எவரெவர் அதுவரை அனுபவித்துக் கொண்டிருந்தனரோ, அவரவரே அவற்றை அனுபவித்து வர வேண்டும். இவைகளைப் பங்கிட்டுக் கொள்ளக்கூடாது.*

अयमुक्तो विभागो वः पुत्राणां च क्रियाविधिः।
क्रमशः क्षेत्रजादीनां द्यूतधर्मं निबोधत॥

**அயமுக்தோ விபாகோ வ: புத்ராணாம் ச க்ரியாவிதி: |**
**க்ரமஷ: க்ஷேத்ரஜாதீநாம் த்யூததர்மம் நிபோதத ||** 220

*சொந்த புத்திரர்களுக்கும், மற்ற வகைப் புத்திரர்களுக்குமான பாகப்பிரிவினைக்கான நியமங்களை இதுவரை கூறினேன். இனி சூதாட்டம் குறித்துக் கூறுகிறேன், கேளுங்கள்.*

द्यूतं समाह्वयं चैव राजा राष्ट्रान् निवारयेत्।
राज्याऽन्तकरणावेतौ द्वौ दोषौ पृथिवीक्षिताम्॥

**த்யூதம் ஸமாஹ்வயம் சைவ ராஜா ராஷ்ட்ராந் நிவாரயேத் |**
**ராஜ்யா அந்தகரணாவேதௌ த்வௌ தோஷௌ ப்ருதிவீக்ஷிதாம் || 221**

த்யூதம், ஸமாஹ்வயம் இவை இரண்டையும் அரசன் தன் நாட்டில் அறவே இல்லாதவாறு ஒழிக்க வேண்டும். ஏனெனில் இவை இரண்டும் ராஜ்ஜியத்தை அழிப்பவை.

प्रकाशमेतत् तास्कर्यं यद् देवनसमाह्वयौ।
तयोर् नित्यं प्रतीघाते नृपतिर् यत्नवान् भवेत्॥

**ப்ரகாஷமேதத் தாஷ்கர்யம் யத் தேவநஸமாஹ்வயௌ |**
**தயோர் நித்யம் ப்ரதீகாதே ந்ருபதிர் யத்நவாந் பவேத் || 222**

இவையிரண்டும் பகிரங்கமாகச் செய்யும் திருட்டுப் போன்றவை யாகும். எனவே அரசன் எப்போதும் முயற்சியோடு இவையிரண்டும் தன்னுடைய நாட்டில் இல்லாதவாறு செய்ய வேண்டும்.

अप्राणिभिर् यत् क्रियते तल् लोके द्यूतमुच्यते।
प्राणिभिः क्रियते यस् तु स विज्ञेयः समाह्वयः॥

**அபராணபா யத காயதே தலலோகே த்யூதமுச்யதே |**
**ப்ராணிபி: க்ரியதே யஸ் து ஸ விக்ஞேய: ஸமாஹ்வய: || 223**

உயிரற்றவையான பகடைகளைக் கொண்டு ஆடுவது த்யூதம் என்னும் சூதாட்டம். உயிருள்ளவையான கோழி, காளை போன்றவைகளைக் கொண்டு ஆடுவது சமாஹ்வயம் என்னும் பந்தயம் வைத்து ஆடும் ஆட்டம்.

द्यूतं समाह्वयं चैव यः कुर्यात् कारयेत वा।
तान् सर्वान् घातयेद् राजा शूद्रांश् च द्विजलिङ्गिनः॥

**த்யூதம் ஸமாஹ்வயம் சைவய: குர்யாத் காரயேத வா |**
**தாந் ஸர்வாந் காதயேத் ராஜா சூத்ராம்ஷ்ச த்விஜலிங்கிந: || 224**

சூதாட்டம், பந்தயம் இரண்டையும் ஆடுபவனையும், மற்றவரைக் கொண்டு ஆடச் செய்விப்பவனையும் அரசன் தண்டிக்க வேண்டும். அவ்வாறே பிராம்மணனைப் போன்று பூணூல் முதலானவற்றை தரித்து, ஜபம் முதலானவற்றைச் செய்யும் சூத்திரனையும் தண்டிக்க வேண்டும்.

कितवान् कुशीलवान् क्रूरान् पाषण्डस्थाश् च मानवान्।
विकर्मस्थाञ् शौण्डिकाश् च क्षिप्रं निर्वासयेत् पुरात्॥

**கிதவாந் குஷீலவாந் க்ரூராந் பாஷண்டஸ்தாம்ஷ்ச மாநவாந் ।**
**விகர்மஸ்தாஞ் சௌண்டிகாம்ஷ் ச க்ஷிப்ரம் நிர்வாஸயேத் புராத் ॥ 225**

சூதாட்டம் பந்தயம் முதலியவற்றில் ஈடுபடுபவர்களையும், கூத்தாடிகளையும், தெருவில் பாடிக்கொண்டே செய்திகளைப் பரப்புபவர்களையும், குரூரர்களையும், வேதத்துக்கு விரோதமாக நடப்பவர்களையும் தகாத காரியங்களைச் செய்பவர்களையும், குடிகாரர்களையும், அரசன் தன் நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும்.

एते राष्ट्रे वर्तमाना राज्ञः प्रच्छन्नतस्कराः।
विकर्मक्रियया नित्यं बाधन्ते भद्रिकाः प्रजाः॥

**ஏதே ராஷ்ட்ரே வர்தமாநா ராக்ஞ: ப்ரச்சன்னதஸ்கரா: ।**
**விகர்மக்ரியயா நித்யம் பாதந்தே பத்ரிகா: ப்ரஜா: ॥ 226**

இவர்கள் அனைவருமே வேறு வேறு வேஷங்கள் பூண்ட திருடர்களைப் போன்றவர்களேயாகும். இவர்கள் நாட்டில் இருந்தால் எப்போதும் நல்லவர்களுக்குத் துன்பமிழைப்பார்கள்.

द्यूतमेतत् पुराकल्पे दृष्टं वैरकरं महत्।
तस्माद् द्यूतं न सेवेत हास्यार्थमपि बुद्धिमान्॥

**த்யூதமேதத் புராகல்பே த்ருஷ்டம் வைரகரம் மஹத் ।**
**தஸ்மாத் த்யூதம் ந ஸேவேத ஹாஸ்யார்தமபி புத்திமாந் ॥ 227**

இதற்கு முந்தைய கல்ப காலங்களிலும்கூட, சூதாட்டத்தால் மனிதர்களுக்குள் கடுமையான பகை ஏற்பட்டிருக்கிறது. எனவே விளையாட்டுக்கும்கூட புத்திமானான மனிதன் சூதாடக்கூடாது.

प्रच्छन्नं वा प्रकाशं वा तन् निषेवेत यो नरः।
तस्य दण्डविकल्पः स्याद् यथेष्टं नृपतेस् तथा॥

**ப்ரச்சந்நம் வா ப்ரகாஷம் வா தந்நிஷேவேத யோநர: ।**
**தஸ்ய தண்ட விகல்ப: ஸ்யாத் யதேஷ்டம் ந்ருபதேஸ் ததா ॥ 228**

எந்த மனிதன் ரகசியமாகவோ அல்லது வெளிப்படையாகவோ சூதாடுகிறானோ அவனை அரசன் தன் விருப்பப்படி தண்டிக்க வேண்டும்.

क्षत्रविट्शूद्रयोनिस् तु दण्डं दातुमशक्नुवन्।
आनृण्यं कर्मणा गच्छेद् विप्रो दद्याच् छनैःशनैः॥

**க்ஷத்ரவிட் சூத்ரயோநிஸ் து தண்டம் தாதுமஷக்னுவந் |**
**ஆந்ருண்யம் கர்மணா கச்சேத் விப்ரோ தத்யாச்சனை: ஷனை: || 229**

அபராத தண்டனைக்கு ஆளான க்ஷத்திரிய வைசிய சூத்திரர் அபராதத் தொகை செலுத்த முடியாத தரித்திரர்களாக இருந்தால், வேலை செய்து அதைக் கழிக்க வேண்டும். பிராம்மணனாக இருந்தால் சிறுகச் சிறுகவாவது சம்பாதித்து அந்தத் தொகையைச் செலுத்த வேண்டும்.

स्त्रीबालोन्मत्तवृद्धानां दरिद्राणां च रोगिणाम्।
शिफाविदलरज्ज्वाद्यैर् विदध्यान् नृपतिर् दमम्॥

**ஸ்த்ரீ பாலோந்மத்த வ்ருத்தாநாம் தரித்ராணாம் ச ரோகிணாம் |**
**ஷிபாவிதலரஜ்வாத்யௌர் விதத்யாந் ந்ருபதிர் தமம் || 230**

பெண்கள், சிறுவர்கள், போதையிலிருப்பவர்கள், வயோதி கர்கள், தரித்திரர்கள், நோயாளிகள் முதலானோர் சூதாடினால் மரவேர்கள், பிரம்பு, கயிறு முதலானவற்றால் அடிக்க வேண்டும்.

ये नियुक्तास् तु कार्येषु हन्युः कार्याणि कार्यिणाम्।
धनोष्मणा पच्यमानास् तान् निःस्वान् कारयेन् नृपः॥

**யே நியுக்தாஸ்து கார்யேஷு ஹந்யு: கார்யாணி கார்யிணாம் |**
**தநோஷ்மணா பஞ்சமாநாஸ் தாந் நிஸ்ஸ்வாந் காரயேந் ந்ருப: || 231**

கிராமாதிகாரி முதல் பிரதான நீதிபதி வரை அரசனால் நியமிக்கப்பட்ட அதிகாரிகள், தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்யாமல், சண்டையிட்டுக் கொண்டு வந்தவர்களின் சண்டையை நீதியாகத் தீர்த்து வைக்காமல், லஞ்சம் பெற்றுக்கொண்டு நீதிக்குப் புறம்பாக ஒருவனுக்கு சாதகமாகத் தீர்ப்பளித்தால், அத்தகையோரின் மொத்தச் சொத்தையும் பறிமுதல் செய்ய வேண்டும்.

कूटशासनकर्तॄंश् च प्रकृतीनां च दूषकान्।
स्त्रीबालब्राह्मणघ्नांश् च हन्याद् द्विट्सेविनस् तथा॥

**கூட ஷாஸநகர்த்ரூம்ஷ்ச ப்ரக்ருதீநாம் ச தூஷகாந் |**
**ஸ்த்ரீ பால ப்ராஹ்மணக் நாம்ஷ் ச ஹந்யாத் த்விட் ஸேவிநஸ் ததா || 232**

பொய் சாசனம் தயாரிப்பவர்களுக்கும், அரசனைப் பழிப்பவர் களுக்கும், அரசனைச் சேர்ந்த மந்திரிகளையும் அரசனின்

நண்பர்களையும் அரசனின் பொக்கிஷத்தையும் நாட்டின் பாதுகாப்பு அரண்களைப் பற்றியும் நாட்டைப் பற்றியும் குறைகூறி பேதம் விளைவிப்பவர்களுக்கும், பெண்களையும் குழந்தைகளையும் பிராம்மணர்களையும் கொல்லும் கொடியவர்களுக்கும், எதிரி நாட்டு ஒற்றர்களுக்கும் மரண தண்டனை விதிக்க வேண்டும்.

तीरितं चाऽनुशिष्टं च यत्र क्वचन यद् भवेत् ।
कृतं तद् धर्मतो विद्यान् न तद् भूयो निवर्तयेत् ॥

**தீரிதம் சாஅனுசிஷ்டம் ச யத்ர க்வசந யத் பவேத் |**
**க்ருதம் தத் தர்மதோ வித்யாந் ந தத் பூயோ நிவர்தயேத் || 233**

முறைப்படி விசாரிக்கப்பட்டு அறிஞர்களால் நீதி வழங்கப்பட்ட பிறகு அதை அரசன் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும். மீண்டும் அதை விசாரிக்கக் கூடாது.

अमात्याः प्राड्विवाको वा यत् कुर्युः कार्यमन्यथा ।
तत् स्वयं नृपतिः कुर्यात् तान् सहस्रं च दण्डयेत् ॥

**அமாத்யா: ப்ராட் விவாகோ வா யத் குர்யு: கார்யமந்யதா |**
**தத் ஸ்வயம் ந்ருபதி: குர்யாத் தாந் ஸஹஸ்ரம் ச தண்டயேத் || 234**

அரசனால் நியமிக்கப்பட்ட மந்திரிகளும் நீதிபதிகளும் வழக்குகளை நன்கு விசாரிக்காமல் தவறாக தீர்ப்பு வழங்கியிருந்தால், அவற்றை அரசன் மீண்டும் விசாரிக்க வேண்டும். மேலும் சரியாக விசாரிக்காத அவர்களுக்கு ஆயிரம் பணங்களை அபராதமாக விதிக்க வேண்டும்.

ब्रह्महा च सुरापश् च स्तेयी च गुरुतल्पगः ।
एते सर्वे पृथग् ज्ञेया महापातकिनो नराः ॥

**ப்ரஹ்மஹா ச ஸுராபஷ் ச ஸ்தேயீச குருதல்பக: |**
**ஏதே ஸர்வே ப்ருதக் ஞேயா மஹாபாதகிநோ நரா: || 235**

பிராம்மணனைக் கொன்றவனும், குடிகாரனான பிராம்மணனும், பிராம்மணனிடம் திருடியவனும், குருவின் மனைவியைக் கூடியவனும் மனிதர்களிலேயே மகாபாவிகள்.

चतुर्णामपि चैतेषां प्रायश्चित्तमकुर्वताम् ।
शारीरं धनसंयुक्तं दण्डं धर्म्यं प्रकल्पयेत् ॥

**சதுர்ணாமபி சைதேஷாம் ப்ராயஷ்சித்த மகுர்வதாம் |**
**ஷாரீரம் தநஸம்யுக்தம் தண்டம் தர்ம்யம் ப்ரகல்பயேத் || 236**

இந்நால்வகைப் பாவிகளும் பிராயச்சித்தம் செய்து கொள்ளாத போது அரசன் தண்டனை விதிக்க வேண்டும். அபராதமும், சரீர தண்டனையும் விதிக்க வேண்டும்.

गुरुतल्पे भगः कार्यः सुरापाने सुराध्वजः।
स्तेये च श्वपदं कार्यं ब्रह्महण्यशिराः पुमान्॥

**குருதல்பே பக: கார்ய: ஸுராபாநே ஸுராத்வஜ: |**
**ஸ்தேயே ச ஷ்வபதம் கார்யம் ப்ரஹ்மஹண்யஷிரா: பூமாந் || 237**

குரு மனைவியைக் கூடியவன் நெற்றியில் பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சலாகையால் பெண் குறியைப் போன்று சூடு போட வேண்டும்.

கள்ளுண்ட பிராம்மணன் நெற்றியில் கள் குடுவையைப் போன்று சூடு போட வேண்டும்.

பிராம்மணனிடம் திருடியவன் நெற்றியில் நாயின் காலைப் போன்று சூடு போட வேண்டும்.

பிரம்மஹத்தி செய்தவன் நெற்றியில் தலையற்ற முண்டம் போன்று சூடு போட வேண்டும்.

असम्भोज्या ह्यसंयाज्या असम्पाठ्याऽविवाहिनः।
चरेयुः पृथिवीं दीनाः सर्वधर्मबहिष्कृताः॥

**அஸம்போஜ்யாஹ்யஸம் யாஜ்யா அஸம்பாட்யா அவிவாஹிந: |**
**சரேயு: ப்ருதிவீம் தீநா: ஸர்வதர்ம பஹிஷ்க்ருதா: || 238**

இவர்களுக்கு யாரும் உணவு வழங்கக்கூடாது. இவர்களைக் கொண்டு யக்ஞங்கள் செய்யக்கூடாது. இவர்களுக்கு வேதபாடம் நடத்தக்கூடாது. திருமண சம்பந்தம் வைத்துக் கொள்ளக்கூடாது. எந்தவித தர்ம கிரியைகளும் இயற்றாதவர்களாக, தீனர்களாக, எல்லோராலும் ஒதுக்கப்பட்டவர்களாக இவர்கள் திரிய வேண்டியதுதான்.

ज्ञातिसम्बन्धिभिस् त्वेते त्यक्तव्याः कृतलक्षणाः।
निर्दया निर्नमस्कारास् तन्मनोरनुशासनम्॥

**ஞாதிஸம்பந்திபிஸ் த்வேதே த்யக்தவ்யா: க்ருதலக்ஷணா: |**
**நிர்தயா நிர்நமஸ்காராஸ் தந்மநோரநுசாஸநம் || 239**

இவ்வாறு நெற்றியில் குறியிடப்பட்டவர்களை, பங்காளிகளோ, பந்துக்களோ சேர்க்கக்கூடாது. இவர்களிடம் சற்றும் கருணை காட்டக்கூடாது. இவர்களை யாரும் வணங்கக்கூடாது. இவ்வாறு மனு பகவான் கட்டளையிட்டுள்ளார்.

प्रायश्चित्तं तु कुर्वाणाः पूर्वे वर्णा यथोदितम्।
नाऽङ्क्या राज्ञा ललाटे स्युर् दाप्यास् तूत्तमसाहसम्॥

**ப்ராயஷ்சித்தம் து குர்வாணா: பூர்வே வர்ணா யதோதிதம் |**
**நாஆக்யா ராக்ஞா லலாடே ஸ்யுர் தாப்யாஸ் தூத்தமஸாஹஸம் || 240**

தாங்கள் செய்த பாவங்களுக்குரிய, சாஸ்திரம் விதித்த பிராயச்சித்தங்களை செய்து கொண்ட க்ஷத்ரிய வைசியர்களுக்கு அரசன், நெற்றியில் குறியிடக்கூடாது. உத்தம சாகச தண்டம் என்னும் ஆயிரம் பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

आगःसु ब्राह्मणस्यैव कार्यो मध्यमसाहसः।
विवास्यो वा भवेद् राष्ट्रात् सद्रव्यः सपरिच्छदः॥

**ஆகஸ்சு ப்ராஹ்மணஸ்யைவ கார்யோ மத்ய மஸாஹஸ: |**
**விவாஸ்யோ வா பவேத் ராஷ்ட்ராத் ஸத்ரவ்ய: ஸபரிச்சத: || 241**

பிராம்மணன் தன்னிலை பிறழ்ந்து அறியாமையால் இக்குற்றங்களைச் செய்திருந்தால் ஐந்நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். தெரிந்தே செய்திருந்தால் அவன் சொத்துகளை பறிமுதல் செய்து, அவனை நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும்.

इतरे कृतवन्तस् तु पापान्येतान्यकामतः।
सर्वस्वहारमर्हन्ति कामतस् तु प्रवासनम्॥

**இதரே க்ருதவந் தஸ்து பாபாந்யேதாந்யகாமத: |**
**ஸர்வஸ் வஹாரமர்ஹந்தி காமதஸ்து ப்ரவாசநம் || 242**

பிராம்மணனைத் தவிர்த்து மற்றவர்கள் தங்களையறியாமல் இத்தவறுகளை செய்ய நேரிட்டிருந்தால், அவர்களது மொத்த சொத்துக்களையும் பறிமுதல் செய்ய வேண்டும். தெரிந்து வேண்டு மென்றே செய்திருந்தால் மரண தண்டனை விதிக்க வேண்டும்.

नाऽऽददीत नृपः साधुर् महापातकिनो धनम्।
आददानस् तु तल् लोभात् तेन दोषेण लिप्यते॥

**நாஆததீத ந்ருப: ஸாதுர் மஹாபாதகிநோ தநம் |**
**ஆததாநஸ்து தல் லோபாத் தேந தோஷேண லிப்யதே || 243**

மஹாபாவிகளிடமிருந்து வசூலித்த அபராதத் தொகையையோ சொத்தையோ அரசன் தான் எடுத்துக்கொள்ளக் கூடாது. பேராசையால் அதை எடுத்துக் கொண்டால், அந்தப் பாவங்கள் அரசனை வந்தடையும்.

अप्सु प्रवेश्य तं दण्डं वरुणायोपपादयेत्।
श्रुतवृत्तोपपन्ने वा ब्राह्मणे प्रतिपादयेत्॥

**அப்சு ப்ரவேஷ்ய தம் தண்டம் வருணாயோப பாதயேத் |**
**ஸ்ருத வ்ருத்தோபபந்நே வா ப்ராஹ்மணே ப்ரதிபாதயேத் || 244**

*அந்த தனத்தை தண்ணீரில் போட்டு வருணனுக்கென்று அளிக்க வேண்டும். அல்லது வேதமோதலையே செய்து வரும் பிராம்மணனுக்குக் கொடுக்க வேண்டும்.*

ईशो दण्डस्य वरुणो राज्ञां दण्डधरो हि सः।
ईशः सर्वस्य जगतो ब्राह्मणो वेदपारगः॥

**ஈஷோ தண்டஸ்ய வருணோ ராக்ஞாம் தண்டதரோஹிஸ: |**
**ஈஷ: ஸர்வஸ்ய ஜகதோ ப்ராஹ்மணோ வேதபாரக: || 245**

*வருணனே பாவிகளின் தண்டனைக்கு அதிகாரி. வருணனே தண்டனை அளிக்கும் அதிகாரமுடைய அரசர்களுக்கு பிரபு.*

*வேதங்களை எப்போதும் ஓதுகின்ற பிராம்மணன் இவ்வுலகத்தார் அனைவருக்கும் பிரபு.*

यत्र वर्जयते राजा पापकृद्भ्यो धनागमम्।
तत्र कालेन जायन्ते मानवा दीर्घजीविनः॥

**யத்ர வர்ஜயதே ராஜா பாபக்ருத்ப்யோ தநா ஆகமம் |**
**தத்ர காலேந ஜாயந்தே மாநவா தீர்க்கஜீவிந: || 246**

*எந்த நாட்டில் பாவிகளின் தனத்தை அரசன் எடுத்துக் கொள்ளாமலிருக்கிறானோ, அந்த நாட்டில் ஜனங்கள் தீர்க்காயுளோடு வாழ்வார்கள்.*

निष्पद्यन्ते च सस्यानि यथोप्तानि विशां पृथक्।
बालाश् च न प्रमीयन्ते विकृतं न च जायते॥

**நிஷ்பத்யந்தே ச ஸஸ்யாநி யதோப்தாநி விஷாம் ப்ருதக் |**
**பாலாஷ்ச ந ப்ரமீயந்தே விக்ருதம் ந ச ஜாயதே || 247**

*எந்த நாட்டில் பாவிகளின் தனத்தை அரசன் எடுத்துக் கொள்ளாமலிருக்கிறானோ அந்த நாட்டில் பூமி நல்ல விளைச்சலைக் கொடுக்கும். சிசு மரணங்கள் ஏற்படாது. ஊனமுற்றவர்கள் பிறக்க மாட்டார்கள்.*

ब्राह्मणान् बाधमानं तु कामादवरवर्णजम्।
हन्याच् चित्रैर् वधोपायैरुद्वेजनकरैर् नृपः॥

ப்ராஹ்மணாந் பாதமாநம் து காமாதவரவர்ணகம் |
ஹந்யாச் சித்ரைர் வதோபாயை ருத்வேஜநகரைர் ந்ருப: || 248

வேண்டுமென்றே பிராம்மணர்களை அடிப்பவனையும், அவர்கள் செல்வத்தை பிடுங்கிக் கொள்பவனையும், அவன் ஈன ஜாதிக்காரனாக இருந்தால், அவனைப் பலவகையான சித்திரவதைகளுக்காளாக்க வேண்டும்.

यावानवध्यस्य वधे तावान् वध्यस्य मोक्षणे।
अधर्मो नृपतेर् दृष्टो धर्मस् तु विनियच्छतः॥

யாவாந வத்யஸ்ய வதே தாவாந் வத்யஸ்ய மோக்ஷணே |
அதர்மோ ந்ருபதேர் த்ருஷ்டோ தர்மஸ் து விநியச்சத: || 249

நிரபராதியைத் தண்டிப்பதால் எவ்வளவு பாபம் நேருமோ, அதே அளவு பாபம் குற்றவாளியைத் தண்டிக்காமல் விடுவதாலும் நேரும். எனவே சாஸ்திர விதிப்படி தண்டனை வழங்கி தர்ம நெறியோடு அரசன் ஆளவேண்டும்.

उदितोऽयं विस्तरशो मिथो विवदमानयोः।
अष्टादशसु मार्गेषु व्यवहारस्य निर्णयः॥

உதிதோ அயம் விஸ்தரஷோ மிதோ விவதமாநயோ: |
அஷ்டாதஷசு மார்கேஷு வ்யவஹாரஸ்ய நிர்ணய: || 250

இதுவரை கடன் முதலான பதினெட்டு வகையான விவகாரங்களைப் பற்றிய விஷயங்களைத் தீர்ப்பதற்கான வழிகள் விரிவாகக் கூறப்பட்டது.

एवं धर्म्याणि कार्याणि सम्यक् कुर्वन् महीपतिः।
देशानलब्धाल्ँ लिप्सेत लब्धांश् च परिपालयेत्॥

ஏவம் தர்ம்யாணி கார்யாணி ஸம்யக் குர்வந் மஹீபதி: |
தேஷாநளப்தால்லிப்ஸேத லப்தாம்ஷ் ச பரிபாலயேத் || 251

இவ்வாறாக தர்ம நெறியோடு வழக்குகளை விசாரித்து தீர்ப்பளித்து, பிற நாடுகளை வென்று, வென்ற நாடுகளையும் சேர்த்து நல்லபடி ஆண்டு வர வேண்டியது அரசன் கடமை.

सम्यङ्निविष्टदेशस् तु कृतदुर्गश् च शास्त्रतः।
कण्टकोद्धरणे नित्यमातिष्ठेद् यत्नमुत्तमम्॥

ஸம்யக் நிவிஷ்ட தேஷஸ் து க்ருததுர்கஷ்ச ஷாஸ்த்ரத: |
கண்டகோத்தரணே நித்யமாதிஷ்டேத் யத்நமுத்தமம் || 252

தக்க இடத்தில் தலைநகரை நிர்மாணித்துக் கொண்டு ஏற்கெனவே கூறிய முறையில் தக்கபடி கோட்டைகளை சாஸ்திர முறையோடு நிர்மாணித்துக் கொண்டு அரசாள வேண்டும்.

நாட்டில் குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதில் முயற்சியோடிருக்க வேண்டும்.

रक्षणादार्यवृत्तानां कण्टकानां च शोधनात्।
नरेन्द्रास् त्रिदिवं यान्ति प्रजापालनतत्पराः ॥

**ரக்ஷணாதார்ய வ்ருத்தாநாம் கண்டகாநாம் ச ஷோதநாத் |**
**நரேந்த்ராஸ் த்ரிதிவம் யாந்தி ப்ரஜாபாலந தத்பரா: ||** 253

நல்லோரைக் காத்து, தீயோரைத் தண்டித்து, தன் மக்களைக் காப்பதிலேயே எப்போதும் கருத்தோடிருக்கும் அரசர்கள் சொர்க்கத்தை அடைவார்கள்.

अशासंस् तस्करान् यस् तु बलिं गृह्णाति पार्थिवः।
तस्य प्रक्षुभ्यते राष्ट्रं स्वर्गाच् च परिहीयते॥

**அஷாஸம்ஸ் தஸ்கராந் யஸ் து பலிம் க்ருஹ்ணாதி பார்திவ: |**
**தஸ்ய ப்ரக்ஷுப்யதே ராஷ்ட்ரம் ஸ்வர்காச்ச பரிஹீயதே ||** 254

திருடர்கள் முதலானவர்களை தண்டித்து ஒடுக்காமல், வரியை மட்டும் வசூலிக்கின்ற அரசனை மக்கள் வெறுப்பார்கள். மேலும் அவ்வரசன் புண்ணியங்களை இழந்து சொர்க்கத்தையும் அடைய முடியாது போகும்.

निर्भयं तु भवेद् यस्य राष्ट्रं बाहुबलाऽऽश्रितम्।
तस्य तद् वर्धते नित्यं सिच्यमान इव द्रुमः॥

**நிர்பயம் து பவேத் யஸ்ய ராஷ்ட்ரம் பாஹுபலா ஆஷ்ரிதம் |**
**தஸ்யதத் வர்ததே நித்யம் ஸிச்யமாந இவ த்ரும: ||** 255

தன் தோள் வலிமையால், மக்கள் பயமற்று வாழுமாறு ஆள்கின்ற அரசனின் நாடு, தண்ணீர் ஊற்றுவதால் நன்கு வளரும் செடியைப் போன்று தினந்தினம் விருத்தியடையும்.

द्विविधांस् तस्करान् विद्यात् परद्रव्याऽपहारकान्।
प्रकाशांश् चाऽप्रकाशांश् च चारचक्षुर् महीपतिः॥

**த்விதாம்ஸ் தஸ்கராந் வித்யாத் பரத்ரவ்யா அபஹாரகாந் |**
**ப்ரகாஷாம்ஷ் சாஅப்ரகாஷாம்ஷ் ச சாரசக்ஷுர் மஹீபதி: ||** 256

வெளிப்படையாகவும், ரகசியமாகவும் என்று இரு வகைகளில் கொள்ளையடிக்கும் கொள்ளையரை, ஒற்றர்களைக் கொண்டு கண்டறிய வேண்டும்.

प्रकाशवञ्चकास् तेषां नानापण्योपजीविनः ।
प्रच्छन्नवञ्चकास् त्वेते ये स्तेनाऽऽटविकादयः ॥

**ப்ரகாஷ வச்சகாஸ் தேஷாம் நாநாபண்யோப ஜீவிநः |**
**ப்ரச்சந்ந வஞ்சகாஸ் த்வேதே யே ஸ்தேநா ஆட விகாதயः || 257**

திருடர்கள், ரகசிய வஞ்சகர்கள், வெளிப்படையான வஞ்ச கர்கள் என்று இரு வகையானவர்கள்.

வியாபாரம் செய்பவர்கள், எடை தரம் முதலானவற்றில் ஏமாற்றினால் அவர்கள் வெளிப்படையான வஞ்சகர்கள்.

இரவில் எவருமறியாமல் வந்து கன்னமிட்டு, பொருட்களைத் திருடிச் செல்பவர்கள் ரகசிய வஞ்சகர்கள்.

उत्कोचकाश् चौपधिका वञ्चकाः कितवास् तथा ।
मङ्गलाऽऽदेशवृत्ताश् च भद्राश् चेक्षणिकैः सह ॥

**உத்கோசகாஷ் சௌபதிகா வஞ்சகாः கிதவாஸ்ததா |**
**மங்களா ஆதேஷவ்ருத்தாஷ் ச பத்ராஷ் சேக்ஷணிகைः ஸஹ || 258**

லஞ்சம் வாங்குபவர்கள், பயமுறுத்தி மிரட்டி சொத்தைக் கைப்பற்றுபவர்கள், பிறர் பொருளை இரவல் வாங்கி, அதேபோன்று தோற்றமளிக்கும் வேறொன்றைக் கொடுத்து ஏமாற்றுவது போன்ற வஞ்சகச் செயல்களில் ஈடுபடுபவர்கள், சூதாட்டத்தால் தனத்தைப் பறிப்பவர்கள், 'உனக்கு இது கிடைக்கும், அது கிடைக்கும்' என்று ஆசை வார்த்தைகள் காட்டி எதையாவது செய்யச் சொல்லி அதன் மூலம் தனத்தைப் பறிப்பவர்கள், மஹான்களைப் போன்றும் குருமார்களைப் போன்றும் வேடமிட்டுக் கொண்டு தனத்தைப் பறிப்பவர்கள், இதை அதை என்று எதையாவது எண்ணி, எண்ணிக்கையைக் கொண்டு ஜோதிடம் என்று எதையாவது சொல்லி ஏமாற்றுபவர்கள் - இவர்கள் வெளிப்படையாகப் பொருளைப் பறிக்கும் திருடர்கள்.

असम्यक्कारिणश् चैव महामात्राश् चिकित्सकाः ।
शिल्पोपचारयुक्ताश् च निपुणाः पण्ययोषितः ॥

**அஸம்யக் காரிணஷ் சைவ மஹாமாத்ராஷ் சிகித்ஸகாः |**
**ஷில்போபசார யுக்தாஷ்ச நிபுணாः பண்யயோஷிதः || 259**

ஒரு காரியத்தைச் சரிவரச் செய்யத் தெரியாமலே, தெரிந்தது போல் காட்டிக் கொண்டு, செய்து தருவதாகக் கூறி பணம் பறிப்பவர்கள், நோயின் தன்மைகளையும் நோய்க்கேற்ற மருந்தின் தன்மைகளையும் சரிவர அறியாமலே, மருத்துவர்கள் என்று கூறிக்கொண்டு தனம் பறிப்பவர்கள், சரிவர தொழிலைக் கற்றுக் கொள்ளாமல், பணம் பறிக்கத் தொழில் செய்யும் வண்ணார், கருமார் முதலானோர், பணம் பறிக்கும் வேசியர் - இவர்களும் வெளிப்படையாகப் பொருளைப் பறிக்கும் திருடர்கள்.

एवमादीन् विजानीयात् प्रकाशाल्ँ लोककण्टकान्।
निगूढचारिणश् चाऽन्याननार्यानार्यलिङ्गिनः॥

**ஏவமாதீந் விஜாநீயாத் ப்ரகாஷால் லோக கண்டகாந் |**
**நிகூடசாரிணஷ் சா அந்யாநநார்யா நார்யலிங்கிந: || 260**

இவர்கள் இத்தனை பேரும் பகிரங்கமாக மக்களிடம் கொள்ளை யடிப்பவர்கள் என்பதை அறிய வேண்டும். இத்தகையவர்களைப் பல வேடங்களில் சென்று ஒற்றர்கள் கண்டறிய வேண்டும்.

तान् विदित्वा सुचरितैर् गूढैस् तत्कर्मकारिभिः।
चारैश् चाऽनेकसंस्थानैः प्रोत्साह्य वशमानयेत्॥

**தாந் விதித்வா சுசரிதைர் கூடைஸ் தத்கர்மகாரிபி: |**
**சாரைஷ் சா அநேகஸம்ஸ்தாநை: ப்ரோத்ஸாஹ்ய வஷமாநயேத் || 261**

எந்தத் தொழில் செய்யும் வஞ்சகரையும், அந்தத் தொழில் செய்பவரைப் போன்ற வேடமிட்ட ஒற்றர்களைக் கொண்டு கண்டறிய வேண்டும். ஆங்காங்கே இருக்கும் ஒற்றர்களும் பல வகையான வேடங்களோடு பலவகையான வஞ்சகர்களைத் தக்கபடி கண்டறிந்து அரசனுக்கு அறிவிக்க வேண்டும்.

तेषां दोषानभिख्याप्य स्वेस्वे कर्मणि तत्त्वतः।
कुर्वीत शासनं राजा सम्यक् सारापराधतः॥

**தேஷாம் தோஷாநபிக்யாப்ய ஸ்வே ஸ்வே கர்மணி தத்வத: |**
**குர்வீத ஷாஸநம் ராஜா ஸம்யக் ஸாரா அபராதத: || 262**

இவ்வாறான ரகசியத் திருடர்களையும் வெளிப்படைத் திருடர்களான வஞ்சகர்களையும் கண்டுபிடித்து, அவரவர் செயலுக்குத் தக்கபடி தண்டித்து குற்றவாளிகளை ஒடுக்க வேண்டும்.

न हि दण्डादृते शक्यः कर्तुं पापविनिग्रहः।
स्तेनानां पापबुद्धीनां निभृतं चरतां क्षितौ॥

**நஹி தண்டாத்ருதே ஷக்ய: கர்தும் பாபவிநிக்ரஹ: |**
**ஸ்தேநாநாம் பாபபுத்தீநாம் நிப்ருதம் சரதாம் க்ஷிதௌ || 263**

உள்ளுக்குள் பாப புத்தியோடு கெடுதிகளைச் செய்து கொண்டு, வெளியே நல்லவரைப் போன்று திரிகின்ற இத்தகைய தீயவர்களை கடுமையாகத் தண்டிக்க வேண்டும். தண்டனை ஒன்றினாலேயே இவர்கள் தங்கள் பாபச் செயல்களை விடுவார்கள்.

सभा-प्रपा-ऽपूपशाला-वेश-मद्याऽन्नविक्रयाः ।
चतुष्पथाश् चैत्यवृक्षाः समाजाः प्रेक्षणानि च ॥

**ஸபா ப்ரபா அபூபஷாலா வேஷ மத்யா அந்ந விக்ரயா: |**
**சதுஷ்பதாஷ் சைத்யவ்ருக்ஷா: ஸமாஜா: ப்ரேக்ஷணாநி ச || 264**

जीर्णोद्यानान्यरण्यानि कारुकाऽऽवेशनानि च ।
शून्यानि चाऽप्यगाराणि वनान्युपवनानि च ॥

**ஜீர்ணோத்யாநாந்யரண்யாநி காருகா ஆவேஷநாநிச |**
**சூந்யாநி சாஅப்யகாராணி வநாந்யுபவநாநி ச || 265**

एवंविधान् नृपो देशान् गुल्मैः स्थावरजङ्गमैः ।
तस्करप्रतिषेधार्थं चारैश् चाऽप्यनुचारयेत् ॥

**ஏவம் விதாந் ந்ருபோ தேஷாந் குல்மை: ஸ்தாவர ஜங்கமை: |**
**தஸ்கர ப்ரதிஷேதார்தம் சாரைஷ் சாஅப்யனு சாரயேத் || 266**

ஊர்மக்கள் கூடும் சபா மண்டபங்கள், குடிநீர் பந்தல்கள், சிற்றுண்டி விற்குமிடங்கள், வேசியர் இல்லங்கள், கள்ளுக் கடைகள், அன்ன சத்திரங்கள், நான்கு தெருக்கள் கூடுமிடங்கள், மரத்தடி, மக்கள் அதிகம் நடமாடும் இடங்கள், பாழடைந்த மலர் வனங்கள், வனங்கள், தோட்டங்கள், இரும்புப் பட்டறை போன்ற தொழில் செய்யும் இடங்கள், பாழடைந்த மாளிகைகள், தோப்புகள், நந்தவனங்கள் முதலான இடங்களில் எப்போதும் ஒற்றர்களின் கண்காணிப்பு இருக்க வேண்டும். இவ்விடங்களில் திருடர்களைப் பிடிப்பதற்காக நிரந்தரமான சில வீரர்கள் இருக்க வேண்டும். மேலும் சஞ்சரித்துக் கொண்டே திருடர்களைப் பிடிக்கும் வீரர்களையும் நியமிக்க வேண்டும்.

तत्सहायैरनुगतैर् नानाकर्मप्रवेदिभिः ।
विद्यादुत्सादयेच् चैव निपुणैः पूर्वतस्करैः ॥

**தத்ஸஹாயைரனுகதைர் நாநாகர்ம ப்ரவேதிபி: |**
**வித்யாதுத்ஸாதயேச் சைவ நிபுணை: பூர்வதஸ்கரை: || 267**

பழைய திருடர்களைக் கொண்டும் புதிய திருடர்களைப் பிடிக்கலாம். தண்டனை பெற்றுத் திருந்திய பழைய திருடர்களை ஒற்றர்களாக்கிக் கொள்ள வேண்டும். திருடன் வழிகளைத் திருடன் அறிவானல்லவா? பழைய திருடர்களான ஒற்றர்கள் தங்கள் திறமைகளைக் கொண்டு புதுத் திருடர்களைப் பிடித்துக் கொடுக்குமாறு செய்ய வேண்டும்.

भक्ष्यभोज्यापदेशैश् च ब्राह्मणानां च दर्शनैः।
शौर्यकर्मापदेशैश् च कुर्युस् तेषां समागमम्॥

**பக்ஷ்யபோஜ்யா அபதேஷைஷ் ச ப்ராஹ்மணாநாம் ச தர்ஷநை: |**
**ஷௌர்ய கர்மா அபதேஷைஷ் ச குர்யஸ் தேஷாம் ஸமாகமம் || 268**

இந்த ஒற்றர்கள் திருடர்களைக் கண்டுபிடித்த பிறகு இவர்களை அரசாங்க வீரர்களிடம் ஒப்படைக்க வேண்டும். அதற்காக அத்திருடர்களை ஏதேனும் காரணம் காட்டி ஓரிடத்துக்கு வரவழைக்க வேண்டும்.

தன் இல்லத்துக்கு விருந்துக்கு வருமாறு கூறி ஓரிடத்துக்கு வரவழைத்துப் பிடித்துக் கொடுக்கலாம்.

தன் இல்லத்துக்கு முற்றும் உணர்ந்த முனிவர் வந்திருப்பதாகவும், அவரிடம் வருங்காலத்தைப் பற்றி அறியலாமென்றும் கூறி, ஓரிடத்துக்கு வரவழைத்து வீரர்களிடம் பிடித்துக் கொடுக்கலாம்.

வாட்பயிற்சி, மற்போர் ஆசிரியர்களிடம் கூட்டிப் போய் அவற்றைப் பயிற்றுவிப்பதாக ஆசை காட்டி, ஓரிடத்துக்கு வரவழைத்துப் பிடித்துக் கொடுக்கலாம்.

எப்படியேனும் அத்திருடர்களுடன் பழகி, அவர்களை நம்ப வைத்து, தந்திரமாகக் காவலரிடம் பிடித்துக் கொடுக்க வேண்டும்.

ये तत्र नोपसर्पेयुर् मूलप्रणिहिताश् च ये।
तान् प्रसह्य नृपो हन्यात् समित्रज्ञातिबान्धवान्॥

**யே தத்ர நோபஸர்பேயுர் மூல ப்ரணிஹிதாஷ்ச யே |**
**தாந் ப்ரஸஹ்ய ந்ருபோ ஹந்யாத் ஸமித்ரஞாதிபாந்தவாந் || 269**

இத்தகைய ஒற்றர்களிடம் நம்பிக்கையின்றி பட்டும் படாமலும் பழகுபவர்களாக, பிடிபடாமல் இருக்கும் குற்றவாளிகளை, அவர்களைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் சேகரித்து அவர்கள் உண்மையில் குற்றவாளிகளே என்பதை சந்தேகமறத் தீர்மானித்தபிறகு அக்குற்றவாளிகளை அவர்களின் குடும்பத்தோடு கொல்ல வேண்டும்.

न होढेन विना चौरं घातयेद् धार्मिको नृपः।
सहोढं सोपकरणं घातयेदविचारयन्॥

**ந ஹோடேந விநா சௌரம் காதயேத் தார்மிகோ ந்ருப: |**
**ஸஹோடம் ஸோபகரணம் காதயதே விசாரயந் ||** 270

*மரண தண்டனை விதிக்க வேண்டிய குற்றங்களைச் செய்தவன் என்று ஒரு குற்றவாளி பிடிபட்டால், அந்தக் குற்றத்தை அவன் செய்ததற்கான தகுந்த ஆதாரங்கள் தடயங்கள் இல்லாவிடில் அவனைக் கொல்லக்கூடாது. ஆதாரங்களும், அக்குற்றத்தைச் செய்ய உபயோகித்த கருவிகளும் கிடைத்தபோது, அவனைக் கொல்ல வேண்டும்.*

ग्रामेष्वपि च ये केचिच् चौराणां भक्तदायकाः।
भाण्डाऽवकाशदाश् चैव सर्वास् तानपि घातयेत्॥

**க்ராமேஷ்வபி ச யே கேசிச் சௌராணாம் பக்த தாயகா: |**
**பாண்டா அவகாஷதாஷ் சைவ ஸர்வாம்ஸ் தாநபி காதயேத் ||** 271

*கிராமங்களிலிருப்பவராயினும்கூட, திருடர்கள் இவர்கள் என்பதை நன்கு அறிந்தும், அவர்களுக்கு உணவு கொடுத்து தங்க இடங்கொடுத்தாலும், மற்ற உதவிகள் புரிந்தாலும் அவர்களையும் திருடர்களாக எண்ணி தண்டிக்க வேண்டும்.*

राष्ट्रेषु रक्षाऽधिकृतान् सामन्तांश् चैव चोदितान्।
अभ्याघातेषु मध्यस्थाञ् शिष्याच् चौरानिव द्रुतम्॥

**ராஷ்ட்ரேஷு ரக்ஷா அதிக்ருதாந் ஸாமந்தாம்ஷ்சைவ சோதிதாந் |**
**அப்யாகாதேஷு மத்யஸ்தாஞ்சிஷ்யாச் சௌராநிவ த்ருதம் ||** 272

*ஊர்க்காவல்காரர்களும், எல்லைக் காவல்காரர்களுமாக இருக்கும் வீரர்களில் எவரேனும் இத்தகைய திருடர்களுக்கு உதவி புரிபவர்களாக, அவர்கள் திருடர்களல்ல என்று பேசுபவர்களாக இருந்தால் அவர்களையும் திருடர்களாக எண்ணி திருடர்க்குரிய தண்டனை வழங்க வேண்டும்.*

यश् चाऽपि धर्मसमयात् प्रच्युतो धर्मजीवनः।
दण्डेनैव तमप्योषेत् स्वकाद् धर्माद् धि विच्युतम्॥

**யஷ்சாஅபி தர்மஸமயாத் ப்ரச்யுதோ தர்மஜீவந: |**
**தண்டேநைவ தமப்யோஷேத் ஸ்வகாத் தர்மாத்தி விச்யுதம் ||** 273

பிறருக்கு யாகம் செய்து கொடுத்தும் தானம் வாங்கியும் ஜீவிப்பவன், தர்ம நெறியிலிருந்து தவறினால் அவனும் அரசனால் தண்டிக்கப்பட வேண்டியவன்.

ग्रामघाते हिताभङ्गे पथि मोषाऽभिदर्शने।
शक्तितो नाऽभिधावन्तो निर्वास्याः सपरिच्छदाः॥

**க்ராமகாதே ஹிதாபங்கே பதி மோஷா அபிதர்ஷநே |**
**ஷக்திதோ நாஅபிதாவந்தோ நிர்வாஸ்யா: ஸபரிச்சதா: || 274**

கிராமத்தில் கொள்ளையர் புகுந்து கொள்ளையடிக்கும் போதும், அணை உடையும்போதும், வழியை மறித்து திருடர்கள் கொள்ளை யடிக்கும் போது அருகிலுள்ளவர் உதவிக்கு ஓடி வரவில்லை என்றால் அவர்களை பந்து ஜனங்களோடு நாடு கடத்த வேண்டும்.

राज्ञः कोशाऽपहर्तृंश् च प्रतिकूलेषु च स्थितान्।
घातयेद् विविधैर् दण्डैररीणां चोपजापकान्॥

**ராக்ஞ: கோஷா அபஹர்த்ரூம்ஷ்ச ப்ரதிகூலேஷு சஸ்திதாந் |**
**காதயேத் விவிதைர் தண்டைரரீணாம் சோபஜாபகாந் || 275**

பொக்கிஷத்திலிருந்து திருடியவன், அரசன் ஆணையை மீறுபவனாகவும் அரசனுக்கு துரோகம் இழைப்பவனாகவும் இருப்பவன் போன்றோரை விதவிதமான சரீர சித்ரவதைகளால் தண்டிக்க வேண்டும். குற்றத்தின் தன்மையைப் பொறுத்து மரண தண்டனையும் விதிக்கலாம்.

सन्धिं छित्वा तु ये चौर्यं रात्रौ कुर्वन्ति तस्कराः।
तेषां छित्वा नृपो हस्तौ तीक्ष्णे शूले निवेशयेत्॥

**ஸந்திம் சித்வா து யே சௌர்யம் ராத்ரௌ குர்வந்தி தஸ்கரா: |**
**தேஷாம் சித்வா ந்ருபோ ஹஸ்தௌ தீக்ஷ்ணே சூலே நிவேஷயேத் || 276**

இரவில் கன்னமிட்டுத் திருடுபவர்களின் கைகளைத் துண்டித்து, கூரான வேலாயுதத்தில் அவனைக் குத்தித் தொங்கவிட வேண்டும்.

अङ्गुलीर् ग्रन्थिभेदस्य छेदयेत् प्रथमे ग्रहे।
द्वितीये हस्तचरणौ तृतीये वधमर्हति॥

**அங்குளீர் க்ரந்திபேதஸ்ய சேதயேத் ப்ரதமே க்ரஹே |**
**த்விதீயே ஹஸ்த சரணௌ த்ருதீயே வதமர்ஹதி || 277**

முதல் முறையாக ஒரு பெண்ணிடம் தவறாக நடப்பவனின் விரல்களை வெட்ட வேண்டும். இரண்டாம் முறை செய்தால்

கைகால்களை வெட்ட வேண்டும். மூன்றாம் முறை செய்தால் மரணமே தண்டனையாகும்.

अग्निदान् भक्तदांश् चैव तथा शस्त्राऽवकाशदान्।
सन्निधातृंश् च मोषस्य हन्याच् चौरमिवेश्वरः॥

**அக்நிதாந் பக்ததாம்ஷ்சைவ ததா ஷஸ்த்ரா அவகாஷதாந் |**
**ஸந்நிதாத்ரூம்ஷ்ச மோஷஸ்ய ஹந்யாச் சௌரமிவேஷ்வர: ||** 278

இப்படிப்பட்ட குற்றவாளிக்கு, தெரிந்தே நெருப்பு, சாப்பாடு, ஆயுதங்கள், தங்க இடம் கொடுப்பவனுக்கு திருடனுக்குரிய தண்டனை வழங்க வேண்டும்.

तडागभेदकं हन्यादप्सु शुद्धवधेन वा।
यद् वाऽपि प्रतिसंस्कुर्याद् दाप्यस् तूत्तमसाहसम्॥

**தடாகபேதகம் ஹந்யாதப்சு சுத்தவதேந வா |**
**யத் வாஅபி ப்ரதிஸம் ஸ்குர்யாத் தாப்யஸ்தூத்தமஸாஹஸம் ||** 279

மக்களுக்குப் பயன்படும் குளம் ஏரி போன்றவற்றின் கரைகளை உடைப்பவனை தண்ணீரில் மூழ்கடித்தே கொல்ல வேண்டும். ஒருவேளை அறியாமையால் செய்து, உடைப்பைச் சரிசெய்தும் கொடுத்தானானால் ஐந்நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

कोष्ठाऽगारा-ऽऽयुधाऽगार-देवताऽगारभेदकान्।
हस्त्यश्वरथहर्तृंश् च हन्यादेवाऽविचारयन्॥

**கோஷ்டாஅகாரா ஆயுதா அகாரதேவதா அகாரபேதகாந் |**
**ஹஸ்த்யஷ்வரத ஹர்த்ரூம்ஷ்ச ஹந்யாதேவா அவிசாரயந் ||** 280

அரசனுடைய பொக்கிஷ சாலை, ஆயுத சாலை, ஆலயம் இவைகளை இடிப்பவனை உடனடியாகக் கொல்ல வேண்டும்.

அரசனுடைய குதிரை யானை தேர் இவைகளை அபகரிப்பவனையும் உடனடியாகக் கொல்ல வேண்டும்.

यस् तु पूर्वनिविष्टस्य तडागस्योदकं हरेत्।
आगमं वाऽप्यपां भिन्द्यात् स दाप्यः पूर्वसाहसम्॥

**யஸ்து பூர்வநிவிஷ்டஸ்ய தடாகஸ்யோதகம் ஹரேத் |**
**ஆகமம் வாஅப்யபாம் பிந்த்யாத் ஸ தாப்ய: பூர்வசாஹஸம் ||** 281

முன்னர் ஏற்படுத்தப்பட்டிருந்த மக்கள் உபயோகத்துக்கான ஏரி முதலான நீர்நிலைகளிலிருந்து நீரைத் தன் உபயோகத்துக்காக வெட்டி தன் வயலுக்குப் பாய்ச்சுகிறவனுக்கும், நீர் வரும் பாதையை அடைப்பவனுக்கும் இருநூற்றைம்பது பணம் அபராதம் விதிக்க வேண்டும்.

समुत्सृजेद् राजमार्गे यस्त्वमेध्यमनापदि।
स द्वौ कार्षापणौ दद्यादमेध्यं चाऽऽशु शोधयेत्॥

**ஸமுத்ஸ்ருஜேத் ராஜமார்கே யஸ்த்வமேத்ய மநாபதி |**
**ஸ த்வௌ கார்ஷாபணௌ தத்யாதமேத்யம் சாஆஷுஷோதயேத் ||** 282

ராஜவீதியில் மலங்கழிப்பவனுக்கு இரண்டு கார்ஷணா பணங்களை அபராதம் விதித்து, அவனைக் கொண்டே அவ்விடத்தை சுத்தம் செய்விக்க வேண்டும்.

आपद्गतोऽथवा वृद्धा गर्भिणी बाल एव वा।
परिभाषणमर्हन्ति तच्च शोध्यमिति स्थितिः॥

**ஆபத்கதோ அதவா வ்ருத்தா கர்பிணீ பால ஏவ வா |**
**பரிபாஷணமர்ஹந்தி தச்ச ஷோத்யமிதி ஸ்திதி: ||** 283

நோயாளி, வயோதிகன், கர்ப்பிணி, சிறுவன் முதலானோர் ஆபத்தில் இத்தகைய செயலைச் செய்து விட்டால், அவர்களைக் கொண்டே அவ்விடத்தை உடனடியாக சுத்தம் செய்வித்து, அவர்களை கண்டித்து அனுப்பி வைக்க வேண்டும். அபராதம் ஏதும் போடத் தேவையில்லை.

चिकित्सकानां सर्वेषां मिथ्याप्रचरतां दमः।
अमानुषेषु प्रथमो मानुषेषु तु मध्यमः॥

**சிகித்ஸசகாநாம் ஸர்வேஷாம் மித்யாப்ரசரதாம் தம: |**
**அமானுசேஷு ப்ரதமோ மானுசேஷுது மத்யம: ||** 284

மருத்துவன் சிகிச்சை செய்யும்போது தவறான மருந்து கொடுத்தானானால் அவனைத் தண்டிக்க வேண்டும். அவன் சிகிச்சை செய்தது மிருகங்களுக்கானால் இருநூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். மனிதர்களுக்கானால் ஐந்நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

सङ्क्रमध्वजयष्टीनां प्रतिमानां च भेदकः।
प्रतिकुर्याच्च तत् सर्वं पञ्च दद्याच्छतानि च॥

**ஸங்க்ரமத்வஜயஷ்டீநாம் ப்ரதிமாநாம் ச பேதக: |**
**ப்ரதி குர்யாச்ச தத் ஸர்வம் பஞ்ச தத்யாச்சதாநிச ||** 285

தண்ணீரைக் குறுக்கே கடப்பதற்காகப் போடப்பட்டிருக்கும் மரப்பாலம், கற்பாலம் போன்றவற்றையும், ராஜதுவாரங்களில் இருக்கும் கொடிமரங்கள் யூப ஸ்தம்பங்களையும், தெய்வச் சிலைகளையும் சேதப்படுத்துபவனுக்கு ஐந்நூறு பணங்கள் அபராதம்

விதிக்க வேண்டும். அவன் சேதப்படுத்தியவைகளை அவனே மீண்டும் புதிதாக செய்து வைக்க வேண்டும்.

अदूषितानां द्रव्याणां दूषणे भेदने तथा।
मणीनामपवेधे च दण्डः प्रथमसाहसः॥

**அதூஷி தாநாம் த்ரவ்யாணாம் தூஷணே பேதநே ததா |**
**மணீ நாமபவேதே ச தண்ட: ப்ரதம ஸாஹஸ: || 286**

தங்கத்தோடு அதிகம் செம்பைக் கலப்படம் செய்தவன், உயர்ந்த ரத்தினங்கள் முதலானவற்றைப் பதிக்கும்போது அவற்றை உடைத்து விட்டவன், முத்துக்களை மாலை கோக்கத் துளையிடும்போது தவறுதலாகத் துளையிட்டு அவற்றைக் கெடுத்தவன் போன்றோருக்கு இருநூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். மேலும் பொருளின் உடைமைக்காரனுக்கு புதிதாக அதைச் செய்து கொடுக்க வேண்டும்.

समैर् हि विषमं यस् तु चरेद् वै मूल्यतोऽपि वा।
स प्राप्नुयाद् दमं पूर्वं नरो मध्यममेव वा॥

**ஸமைர் ஹி விஷமம் யஸ் து சரேத் வைமூல்யதோ அபிவா |**
**ஸ ப்ராப்னுயாத் தமம் பூர்வம் நரோ மத்யமமேவ வா || 287**

ஒரே விலையைக் கூறாமல் ஆளுக்குத் தக்கபடி விலையைக் கூறி விற்கும் ஏமாற்றுக்காரனுக்கு நூறு பணங்களிலிருந்து இருநூறு பணங்கள் வரை அபராதம் விதிக்க வேண்டும்.

बन्धनानि च सर्वाणि राजमार्गे निवेशयेत्।
दुःखिता यत्र दृश्येरन् विकृताः पापकारिणः॥

**பந்தநாநி ச ஸர்வாணி ராஜமார்கே நிவேஷயேத் |**
**துக்கிதா யத்ர த்ருஷ்யேரந் விக்ருதா: பாபகாரிண: || 288**

குற்றவாளிகளைக் கட்டிப்போட்டு அடிப்பது, உடல் சித்திரவதைகளைச் செய்வது முதலானவற்றை பலரும் பார்க்கும் இடங்களான ராஜவீதிகளில் செய்ய வேண்டும். அப்போதுதான் குற்றம் செய்தால் கிடைக்கும் தண்டனைகளைக் காணும் மற்றவர்களுக்கு குற்றம் செய்வதில் கருத்துப் போகாது. மற்ற குற்றவாளிகளும்கூட திருந்தி நல்வழிப்படுவார்கள்.

प्राकारस्य च भेत्तारं परिखाणां च पूरकम्।
द्वाराणां चैव भङ्क्तारं क्षिप्रमेव प्रवासयेत्॥

**ப்ராகாரஸ்ய ச பேத்தாரம் பரிகாணாம் ச பூரகம் |**
**த்வாராணாம் சைவ பங்தாரம் க்ஷிப்ரமேவ ப்ரவாஸயேத் || 289**

அரண்மனை மதிளை இடிப்பவன், கோட்டை மதிளை இடிப்பவன், அகழியைத் தூர்ப்பவன் போன்றோரை உடனடியாக நாடு கடத்த வேண்டும்.

अभिचारेषु सर्वेषु कर्तव्यो द्विशतो दमः ।
मूलकर्मणि चाऽनाप्तैः कृत्यासु विविधासु च ॥

**அபிசாரேஷு ஸர்வேஷு கர்தவ்யோ த்விஷதோ தம: |**
**மூலகர்மணி சாஅநாப்தை: க்ருத்யாசு விவிதாசு ச || 290**

ஒருவனைக் கொல்வதற்காக அபிசார ஹோமம் செய்பவனுக்கு இருநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். இவன் செய்த ஹோமத்தால் யாருக்கேனும் மரணம் நேரிட்டிருந்தால் இவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும். மரணத்துக்காக மட்டுமின்றி, வேறு எந்த வகைக் கெடுதி செய்வதற்காக ஹோமமோ, மாந்திரீகமோ செய்திருந்தாலும் இதே தண்டனைதான்.

अबीजविक्रयी चैव बीजोत्कृष्ट तथैव च ।
मर्यादाभेदकश् चैव विकृतं प्राप्नुयाद् वधम् ॥

**அபீஜவிக்ரயீ சைவ பீஜோத்க்ரஷ்டா ததைவ ச |**
**மர்யாதா பேதகஷ்சைவ விக்ருதம் ப்ராப்னுயாத் வதம் || 291**

முளைக்கவியலாத தானியங்களை, விதைக்கான தானியங்கள் என்று கூறி விற்பவனுக்கும், அவ்வாறே விதைக்கான தானியங்களோடு முளைக்காத தானியங்களைக் கலப்படம் செய்து விற்பவனுக்கும், வயல்களின் எல்லைகளை மாற்றியமைப்பவனுக்கும், சித்ரவதைகளை தண்டனையாக விதிக்க வேண்டும்.

सर्वकण्टकपापिष्ठं हेमकारं तु पार्थिवः ।
प्रवर्तमानमन्याये छेदयेत् खण्डशः क्षुरैः ॥

**ஸர்வகண்டகபாபிஷ்டம் ஹேமகாரம் து பார்திவ: |**
**ப்ரவர்தமாநமந்யாயே சேதயேத் கண்டஷ: க்ஷுரை: || 292**

தங்கத்தை எடையில் ஏமாற்றுவது, உரசிப் பார்த்து மாற்று இவ்வளவு என்று உரைப்பதில் ஏமாற்றுவது, தங்கத்தில் கலப்படம் செய்து விற்பது, பொருள் செய்யக் கொடுத்த தங்கத்தில் திருடுவது போன்றவற்றைச் செய்யும் பொற்கொல்லனுக்கு அவன் செய்த குற்றத்துக்குத் தக்கபடி சித்ரவதைகளை தண்டனையாக விதிக்க வேண்டும். குற்றம் பெரிதாயின் உடல் பாகங்களை வெட்டிக் கொல்ல வேண்டும்.

सीताद्रव्याऽपहरणे शस्त्राणामौषधस्य च ।
कालमासाद्य कार्यं च राजा दण्डं प्रकल्पयेत् ॥

**ஸீதா த்ரவ்யா அபஹரணே ஷஸ்த்ராணா மௌஷதஸ்யச |
காலமாஸாத்ய கார்யம்ச ராஜா தண்டம் ப்ரகல்பயேத் || 293**

*மண்வெட்டி, கோடரி, கலப்பை முதலியவற்றைத் திருடியவனுக்கும், வாள் வில் கத்தி முதலான ஆயுதங்களைத் திருடியவனுக்கும், ஔஷதங்களை (மருந்துகளை) திருடியவனுக்கும், எந்த காலத்தில் எந்த அவசரத்துக்காக அந்தக் காரியத்தைச் செய்தான் என்பதைப் பார்த்து, அதற்குத் தக்கபடி அரசன் தண்டனை விதிக்க வேண்டும்.*

**स्वाम्यमात्यौ पुरं राष्ट्रं कोशदण्डौ सुहृत् तथा ।
सप्त प्रकृतयो ह्येताः सप्ताङ्गं राज्यमुच्यते ॥**

**ஸ்வாம்யமாத்யௌ புரம் ராஷ்ட்ரம் கோஷதண்டௌ ஸுஹ்ருத் ததா |
ஸப்த ப்ரக்ருதயோ ஹ்யேதா: ஸப்தாங்கம் ராஜ்யமுச்யதே || 294**

*அரசன், அமைச்சர்கள், அந்தப்புரம், நாடு, பொக்கிஷம், படைபலம், நட்பு அரசர்கள் இந்த ஏழு பிரக்ருதிகளும் ஒரு அரசனின் அங்கங்களாகும். இதையே ராஜாங்கம் என்று கூறுகிறோம்.*

**सप्तानां प्रकृतीनां तु राज्यस्यासां यथाक्रमम् ।
पूर्वंपूर्वं गुरुतरं जानीयाद् व्यसनं महत् ॥**

**ஸப்தாநாம் ப்ரக்ருதீநாம் து ராஜ்யஸ்யா ஆஸாம் யதாக்ரமம் |
பூர்வம் பூர்வம் குருதரம் ஜாநீயாத் வ்யஸநம் மஹத் || 295**

*இவற்றில் பின்னிருப்பதைக் காட்டிலும் முன்னிருப்பது உயர்ந்தது. பின்னிருப்பவற்றைவிட முன்னிருப்பவற்றுக்கு குறைவு வராமல் காக்க வேண்டும். அதாவது நட்பு அரசர்களைவிட தன் படைபலம் முக்கியம். படைபலத்தைவிட பொக்கிஷம் முக்கியம். பொக்கிஷத்தைவிட நாடு முக்கியம். நாட்டைவிட தலைநகரம் முக்கியம். தலைநகரைவிட அமைச்சர்கள் முக்கியம். அமைச்சர்களை விட அரசனே மிக மிக முக்கியம்.*

**सप्ताङ्गस्येह राज्यस्य विष्टब्धस्य त्रिदण्डवत् ।
अन्योन्यगुणवैशेष्यान् न किञ्चिदतिरिच्यते ॥**

**ஸப்தாங்கஸ்யேஹ ராஜ்யஸ்ய விஷ்டப்தஸ்ய த்ரிதண்டவத் |
அந்யோஅந்ய குணவைஷேஷ்யாந் ந கிஞ்சிததிரிச்யதே || 296**

*இப்படிக் கூறியிருப்பதால் ஒன்றுக்கு மற்றொன்று தாழ்ந்தது என்று எண்ணிவிடக்கூடாது. இந்த ஏழு அங்கங்களுமே ஒரே நிகரானவையே. சந்யாசியின் கையிலுள்ள திரிதண்டத்தின் மூன்று முனைகளும் சமமாக இருப்பது போன்று ஒரு ராஜ்யத்துக்கு இந்த*

ஏழு அங்கங்களும் சமமானவை. ஒன்றில்லாமல் இன்னொன்று இல்லை. ஒன்றைச் சார்ந்து ஒன்று இருக்கும். ஆபத்துக் காலத்தில் எது முக்கியம் என்பதை அறிந்து கொள்வதற்காகவே எதைவிட எது முக்கியம் என்று கூறப்பட்டது.

तेषुतेषु तु कृत्येषु तत्तदङ्गं विशिष्यते।
येन यत् साध्यते कार्यं तत् तस्मिन् श्रेष्ठमुच्यते॥

**தேஷு தேஷு து க்ருத்யேஷு தத்தங்கம் விசிஷ்யதே |**
**யேந யத் ஸாத்யதே கார்யம் தத் தஸ்மிஞ்ச்ரேஷ்ட முச்யதே || 297**

இந்த ஏழு அங்கங்களில், அந்தந்த காரியங்களைச் செய்ய அந்தந்த அங்கங்களால் மட்டுமே முடியும். எனவே எந்த காரியத்தை நிறைவேற்ற வேண்டுமானாலும் அதற்குரிய அந்த அங்கத்தைக் கொண்டே நிறைவேற்ற இயலும். எனவே அந்தந்த காரியங்களுக்கு, அந்தந்த அங்கங்கள் முக்கியமானவை.

चारेणोत्साहयोगेन क्रिययैव च कर्मणाम्।
स्वशक्तिं परशक्तिं च नित्यं विद्यान् महीपतिः॥

**சாரேணோத்ஸாஹயோகேந க்ரியயைவ ச கர்மணாம் |**
**ஸ்வஷக்திம் பரஷக்திம் சநித்யம் வித்யாந் மஹீபதி: || 298**

அரசன் தினம் தினம் தன் சக்தியைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். ஒற்றர்களைக் கொண்டு தன் நாட்டில் நடப்பவை களையும், அருகிலுள்ள நாடுகளில் நடப்பவைகளையும், எதிரி நாடுகளில் நடப்பவைகளையும் நன்கு அறிந்து வைத்திருக்க வேண்டும். தன் படை வீரர்களுக்கு எப்போதும் உற்சாகமூட்டி வைத்திருக்க வேண்டும். யானைகள் குதிரைகள் முதலானவற்றை நன்கு கவனித்து அவைகளுக்கு நோய் வராமல் காத்து, வந்த நோயைப் போக்கி பலத்தோடு வைத்திருக்க வேண்டும். ஆயுதங் களும் எப்போதும் தயார் நிலையில் இருக்க வேண்டும்.

ஒரு அரசன் தன்னுடைய சக்தியையும், மாற்றான் சக்தியையும் நன்கு அறிந்திருக்க வேண்டும்.

पीडनानि च सर्वाणि व्यसनानि तथैव च।
आरभेत ततः कार्यं सञ्चिन्त्य गुरुलाघवम्॥

**பீடநாநி ச ஸர்வாணி வ்யஸநாநி ததைவ ச |**
**ஆரபேத தத: கார்யம் ஸஞ்சிந்த்ய குருலாகவம் || 299**

ஒரு நாட்டின் மீது போர் தொடுப்பதற்கு முன்பு அதனால் ஏற்படும் நன்மை தீமைகளை நன்கு ஆராய வேண்டும். வெற்றியை

எளிதில் அடைய முடியுமா அல்லது வெற்றியை அடைவது கடினமா என்பதை யெல்லாம் நன்கு யோசித்து பிறகு போர் தொடுப்பது சரியே என்று தெரிந்தால் போர் தொடுக்க வேண்டும்.

आरभेतैव कर्माणि श्रान्तःश्रान्तः पुनःपुनः ।
कर्माण्यारभमाणं हि पुरुषं श्रीर् निषेवते ॥

**ஆரபேதைவ கர்மாணி ஷ்ராந்த: ஷ்ராந்த: பூந: பூந: ।**
**கர்மாண்யாரபமாணம் ஹி புருஷம் ஷ்ரீர் நிஷேவ தே ॥ 300**

இடையிடையே இளைப்பாறி மீண்டும் மீண்டும் யுத்தங்களைத் தொடர வேண்டும். இவ்வாறு காரியங்களைத் தொடர்ந்து செய்ப வனிடமே ராஜ்ய லக்ஷ்மி விடாமல் அவனுடன் இருப்பாள்.

कृतं त्रेतायुगं चैव द्वापरं कलिरेव च ।
राज्ञो वृत्तानि सर्वाणि राजा हि युगमुच्यते ॥

**க்ருதம் த்ரேதா யுகம் சைவ த்வாபரம் கலிரேவ ச ।**
**ராக்ஞோ வ்ருத்தாநி ஸர்வாணி ராஜாஹி யுகமுச்யதே ॥ 301**

அரசன் செயல்களே கிருதயுகத்தையும் திரேதாயுகத்தையும் துவாபரயுகத்தையும் கலியுகத்தையும் நிலைநிறுத்துவதால் அரசனே யுகம் எனப்படுவான்.

कलिः प्रसुप्तो भवति स जाग्रद् द्वापरं युगम् ।
कर्मस्वभ्युद्यतस् त्रेता विचरंस् तु कृतं युगम् ॥

**கலி: ப்ரசுப்தோ பவதிஸ ஜாக்ரத் த்வாபரம் யுகம் ।**
**கர்மஸ்வப்யுத்யதஸ் த்ரேதா விசரம்ஸ்து க்ருதம் யுகம் ॥ 302**

அரசன் சோம்பலோடு எந்த முயற்சியும் செய்யாதவனாக அஞ்ஞானத்தோடு இருக்கும்போது கலியுகத்தவனாகிறான்.

அறிஞனாக இருந்த போதும்கூட விழிப்புடன் ஆட்சி நடத்தாதபோது துவாபர யுகத்தவனாகிறான்.

முயற்சியோடு காரியங்களிலீடுபட்டு விழிப்புடன் ஆட்சி நடத்தும் போது திரேதா யுகத்தவனாகிறான்.

அரசன் தர்மவானாக தானிருந்து, மக்களையும் தர்மத்தின் வழியை விட்டு விலகாதவாறு நடத்திச் செல்லும்போது கிருத யுகத்த வனாகிறான்.

इन्द्रस्याऽर्कस्य वायोश्च यमस्य वरुणस्य च।
चन्द्रस्याऽग्नेः पृथिव्याश्च तेजोवृत्तं नृपश् चरेत्॥

**இந்த்ரஸ்யா அர்கஸ்ய வாயோஷ்ச யமஸ்ய வருணஸ்ய ச |**
**சந்த்ரஸ்யா அக்நே: ப்ருதிவ்யாஷ்ச தேஜோவ்ருத்தம் ந்ருபஷ் சரேத் || 303**

*இந்திரன், சூரியன், வாயு, யமன், வருணன், சந்திரன், அக்னி, பூமியினுடைய தன்மைகளை அரசன் பெற்றிருக்க வேண்டும்.*

वार्षिकाश् चतुरो मासान् यथेन्द्रोऽभिप्रवर्षति।
तथाऽभिवर्षेत् स्वं राष्ट्रं कामैरिन्द्रव्रतं चरन्॥

**வார்ஷிகாம்ஷ் சதுரோ மாஸாந் யதேந்த்ரோ அபிப்ரவர்ஷதி |**
**ததா அபிவர்ஷேத் ஸ்வம் ராஷ்ட்ரம் காமைரிந்த்ரவ்ரதம் சரந் || 304**

*இந்திரன் ஆவணி தொடங்கி நான்கு மாதங்கள் மழையைப் பொழிவிக்கிறார். அதனால் பயிர்கள் செழித்து வளர்ந்து உயிர் வாழ்வதற்கான உணவுகளை மனிதர்கள் நிறைவாகப் பெற்று மகிழ்கிறார்கள்.*

*அவ்வாறே அரசனும் தன் குடிமக்களுக்குத் தேவையான அனைத்தும் கிடைக்குமாறு செய்து அவர்களை மகிழ்வோடு வைத்திருக்க வேண்டும்.*

*இந்த வகையில் அரசன் இந்திரனைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.*

अष्टौ मासान् यथाऽऽदित्यस् तोयं हरति रश्मिभिः।
तथा हरेत् करं राष्ट्रान् नित्यमर्कव्रतं हि तत्॥

**அஷ்டௌ மாஸாந் யதா ஆதித்யஸ் தோயம் ஹரதி ரஷ்மிபி: |**
**ததா ஹரேத் கரம் ராஷ்ட்ராந் நித்யமர்கவ்ரதம் ஹி தத் || 305**

*மார்கழி தொடங்கி எட்டு மாதங்கள் சூரியன் பூமியிலிருந்து சிறிது சிறிதாக தண்ணீரை கிரகித்துக் கொள்கிறார். அவ்வாறே அரசனும் தனக்குச் சேர வேண்டிய வரிப்பணத்தை மக்களிடமிருந்து சிறிது சிறிதாகக் கிரகித்துக் கொள்ள வேண்டும்.*

*இந்த வகையில் அரசன் சூரியனைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.*

प्रविश्य सर्वभूतानि यथा चरति मारुतः।
तथा चारैः प्रवेष्टव्यं व्रतमेतद् धि मारुतम्॥

**ப்ரவிஷ்ய ஸர்வ பூதாநி யதா சரதி மாருத: |**
**ததா சாரை: ப்ரவேஷ்டவ்யம் வ்ரதமேதத் தி மாருதம் || 306**

வாயுவானது எல்லா பிராணிகளின் உடல்களிலும் உள் நுழைந்து சஞ்சரிப்பதைப் போன்று அரசன் ஒற்றர்களை எல்லா இடங்களிலும் பிரவேசிக்கச் செய்து, அவர்கள் மூலம் அனைத்தையும் அறிந்து வைத்திருக்க வேண்டும்.

இந்த வகையில் அரசன் வாயுவைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.

**यथा यमः प्रियद्वेष्यौ प्राप्ते काले नियच्छति।**
**तथा राज्ञा नियन्तव्याः प्रजास् तद् धि यमव्रतम्॥**

**யதா யம: ப்ரியத்வேஷ் யெள ப்ராப்தேகாலே நியச்சதி |**
**ததா ராக்ஞா நியந்தவ்யா: ப்ரஜாஸ் தத் தி யமவ்ரதம் || 307**

யமன், இவன் வேண்டியவன் - இவன் வேண்டாதவன் என்று யாரையும் பேதப்படுத்திப் பார்ப்பதில்லை. அவரவர்க்குரிய மரண காலத்தை விதிப்படி நிர்ணயிக்கிறார். அவரவர் பாவ புண்ணியங் களுக்கேற்ப சொர்க்கத்தையோ நரகத்தையோ உரியதாக்குகிறார்.

அவ்வாறே அரசனும், இவன் தனக்கு வேண்டியவன், இவன் வேண்டாதவன் என்று யாரையும் பேதப்படுத்திப் பார்க்காமல், குற்றமிழைத்தவர்கள் எவராயினும் தக்கபடி தண்டிக்க வேண்டும்.

இந்த வகையில் அரசன் யமனைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.

**वरुणेन यथा पाशैर् बद्ध एवाऽभिदृश्यते।**
**तथा पापान् निगृह्णीयाद् व्रतमेतद् धि वारुणम्॥**

**வருணேந யதா பாஷைர் பத்த ஏவாஅபித்ருஷ்யதே |**
**ததா பாபாந் நிக்ருஹ்ணீயாத் வ்ரதமேதத் தி வாருணம் || 308**

பாவிகளை வருணன் தமது பாசக் கயிற்றால் பிணைத்துக் கட்டிப் போடுவார். (ஒருவன் உயிர் பிரிந்த பிறகு அவனுக்குரிய தண்டனைகளை வழங்குபவர் யமன். ஒருவன் உயிரோடிருக்கும் போதே, அவன் பாவங்கள் எல்லை மீறும் போது தண்டிப்பவர் வருணன்.) அவ்வாறே அதிகாரிகளை அவர்கள் பாவம் புரியாதவாறு தன்னுடைய அதிகாரம் என்னும் பாசக் கயிற்றால் அவர்களைக் கட்டிப் போட வேண்டும். அதாவது அரசன் எத்தகைய அதிகாரிகளையும் தன்னிச்சையாக அதிகாரம் செலுத்த விடக் கூடாது.

இந்த வகையில் அரசன் வருணனைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்.

परिपूर्णं यथा चन्द्रं दृष्ट्वा हृष्यन्ति मानवाः।
तथा प्रकृतयो यस्मिन् स चान्द्रव्रतिको नृपः॥

**பரிபூர்ணம் யதா சந்த்ரம் த்ருஷ்ட்வா ஹ்ருஷ்யந்தி மாநவா: |**
**ததா ப்ரக்ருதயோ யஸ்மிந் ஸ சாந்த்ர வ்ரதிகோ ந்ருப: || 309**

பூரண சந்திரனைப் பார்ப்பவர்கள் மனம் சந்தோஷப்படும். அவ்வாறே அரசனைப் பார்க்கும்போது மந்திரிகள் முதலானோருக்கு சந்தோஷம் ஏற்பட வேண்டும். அப்போதுதான் அவர்கள் அரசனுக்கு ஹிதத்தைப் பயமின்றி எடுத்துக் கூறுவார்கள்.

இந்த வகையில் அரசன் பூர்ண சந்திரனைப் போன்று இருக்க வேண்டும்.

प्रतापयुक्तस् तेजस्वी नित्यं स्यात् पापकर्मसु।
दुष्टसामन्तहिंस्रश् च तदाग्नेयं व्रतं स्मृतम्॥

**ப்ரதாபயுக்தஸ் தேஜஸ்வீ நித்யம் ஸ்யாத் பாபகர்மசு |**
**த்ருஷ்ட ஸாமந்தஹிம்ஸ்ரஷ் ச ததாக்நேயம் வ்ரதம் ஸ்ம்ருதம் || 310**

பிரதாபம் மிக்கவனாகவும், தேஜஸ் மிக்கவனாகவும் இருப்பதில் அக்னியை ஒத்திருக்க வேண்டும் அரசன். அவ்வாறே தன்னைச் சுற்றியுள்ளவர்களில் எவர்கள் தனக்கு அனுகூலமாக இல்லாமல் பிரதிகூலமாக இருக்கிறார்களோ அவர்களைக் கடின மனத்தோடு அழிக்க வேண்டும். தனக்கு அனுகூலமாக இருப்பவர்களுக்கு எப்போதும் நன்மைகளைச் செய்ய வேண்டும்.

தன்னை முறையாக ஹோமத் தீயாக வளர்த்து, போற்று பவர்களின் வம்சத்தையே காக்கிறார் அக்னி பகவான். தன்னை முறைகேடாக உபயோகிக்க நினைப்பவர்களை, அவர்கள் கூட இருப்பவர்களோடு சேர்த்து அழித்து விடுகிறார். அரசனும் அக்னியின் இந்த குணத்தோடு இருக்க வேண்டும்.

இந்த வகையில் அரசன் அக்னியைப் போன்று இருக்க வேண்டும்.

यथा सर्वाणि भूतानि धरा धारयते समम्।
तथा सर्वाणि भूतानि बिभ्रतः पार्थिवं व्रतम्॥

**யதா ஸர்வாணி பூதாநி தரா தாரயதே சமம் |**
**ததா ஸர்வாணி பூதாநி பிப்ரத: பார்திவம் வ்ரதம் || 311**

பூமி தன் மீதுள்ள தாவரங்களையும் மற்ற எல்லா உயிர்களையும் சமமாகப் பாவித்து தாங்குகிறது. அதைப்போன்று அரசன் தன்

*குடிமக்கள் அனைவருக்கும் உணவு, உடை, உறையுள் முதலானவை கிடைக்குமாறு செய்து காப்பாற்ற வேண்டும்.*

*இந்த வகையில் அரசன் பூமியைப் போன்று இருக்க வேண்டும்.*

एतैरुपायैरन्यैश् च युक्तो नित्यमतन्द्रितः ।
स्तेनान् राजा निगृह्णीयात् स्वराष्ट्रे पर एव च ॥

**ஏதைருபாயைரந்யைஷ்ச யுக்தோ நித்யமதந்த்ரித: |**
**ஸ்தேநாந் ராஜா நிக்ருஹ்ணீயாத் ஸ்வராஷ்ட்ரே பரஏவச ||** **312**

*இதுவரை கூறிய உபாயங்களாலும், மற்றும் சூழ்நிலைக்குத் தக்கபடி வேறு உபாயங்களாலும், தன் நாட்டிலுள்ள திருடர்களையும் மற்றக் குற்றவாளிகளையும், பிற நாட்டிலிருந்து வந்து தன் நாட்டில் இருக்கும் திருடர்களையும் மற்றக் குற்றவாளிகளையும் கண்டுபிடித்து தண்டித்து அடக்க வேண்டும்.*

परामप्यापदं प्राप्तो ब्राह्मणान् न प्रकोपयेत् ।
ते ह्येनं कुपिता हन्युः सद्यः सबलवाहनम् ॥

**பராமப்யாபதம் ப்ராப்தோ ப்ராஹ்மணாந் ந ப்ரகோபயேத் |**
**தே ஹ்யேநகம் குபிதா ஹந்யு: ஸத்ய: ஸபலவாஹநம் ||** **313**

*அரசன், தனக்கு மிகுந்த ஆபத்துகள் ஏற்பட்ட காலத்திலும்கூட பிராம்மணர்கள் தன்னிடம் கோபம் கொள்ளுமாறு நடந்து கொள்ளக்கூடாது. அவர்களுடைய கோபம் அவனை அவன் பரிவாரத்தோடு சேர்த்து அழித்து விடும்.*

यैः कृतः सर्वभक्ष्योऽग्निरपेयश् च महोदधिः ।
क्षयी चाऽऽप्यायितः सोमः को न नश्येत् प्रकोप्य तान् ॥

**யை: க்ருத: ஸர்வ பக்ஷ்யோ அக்நிரபேயஷ் ச மஹோததி: |**
**க்ஷயீ சாஆப்யாயித: ஸோம: கோ ந நஷ்யேத் ப்ரகோப்ய தாந் ||** **314**

*அக்னியை அனைத்தையும் உண்பவராகச் சபித்தது பிராம்மணரே. சமுத்திர ஜலத்தை ஒரு கை ஜலமாக்கிக் குடித்து சமுத்திரமே இல்லாமல் வற்றச் செய்தது பிராம்மணரே. சந்திரனை க்ஷயரோகம் ஏற்படுமாறு சபித்ததும், பின் காத்ததும் பிராம்மணரே.*

*இத்தகைய பிராம்மணருக்கு கோபத்தை ஏற்படுத்திய எவர்தான் அதன்பின் சுகமாக வாழமுடியும்?*

लोकानन्यान् सृजेयुर् ये लोकपालाश् च कोपिताः ।
देवान् कुर्युरदेवाश् च कः क्षिण्वस् तान् समृध्नुयात् ॥

**லோகாநந்யாந் ஸ்ருஜேயுர் யே லோகபாலாம்ஷ் ச கோபிதா: |**
**தேவாந் குர்யுரதேவாம்ஷ் ச க: க்ஷிண்வம்ஸ் தாந் ஸம்ருத்நு யாத் ||** **315**

பிராம்மணர்கள் நினைத்தால் சொர்க்கம் முதலான உலகங் களையும் படைப்பார்கள்; இந்திரன் முதலான தேவர்களையும் படைப்பார்கள்; தேவர்களைச் சபித்து அவர்களை மானிடராக்கு வார்கள். இத்தகைய சக்தி வாய்ந்த பிராம்மணர்களின் கோபத்துக் காளான எவர்தான் சௌக்கியமாக வாழமுடியும்?

यानुपाश्रित्य तिष्ठन्ति लोका देवाश् च सर्वदा।
ब्रह्म चैव धनं येषां को हिंस्यात् तान् जिजीविषुः॥

**யானுபாஷ்ரித்ய திஷ்டந்தி லோகா தேவாஷ்ச ஸர்வதா |**
**ப்ரஹ்ம சைவ தநம் யேஷாம் கோ ஹிம்ஸ்யாத் தாந்ஜி ஜீவிஷு: || 316**

உலகங்களும் தேவர்களும் யாரை அண்டி எப்போதும் இருக்கின்றனரோ, எவர் வேதத்தையே தமது சொத்தாகக் கொண்டிருக்கின்றனரோ அத்தகைய பிராம்மணர்களை இம்சித்து அதன்பிறகு யார்தான் சௌக்கியமாக வாழ்வார்கள்?

अविद्वांश् चैव विद्वांश् च ब्राह्मणो दैवतं महत्।
प्रणीतश् चाऽप्रणीतश् च यथाऽग्निर् दैवतं महत्॥

**அவித்வாம்ஷ் சைவ வித்வாம்ஷ் ச ப்ராஹ்மணோ தைவதம் மஹத் |**
**ப்ரணீதஷ் சா அப்ரணீதஷ்ச யதாஅக்நிர் தைவதம் மஹத் || 317**

சாஸ்திர முறைப்படி மூட்டப்பட்டாலும் அல்லாவிட்டாலும் அக்னி மேலான தெய்வமாக இருப்பதைப் போன்று பிராம்மணன் வித்வானாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் மேன்மையான வனேயாவான்.

श्मशानेष्वपि तेजस्वी पावको नैव दुष्यति।
हूयमानश् च यज्ञेषु भूय एवाऽभिवर्धते॥

**ஷ்மஷாநேஷ்வபி தேஜஸ்வீ பாவகோ சைவ துஷ்யதி |**
**ஹூயமாநஷ்ச யக்ஞேஷு பூய ஏவா அபிவர்ததே || 318**

एवं यद्यप्यनिष्टेषु वर्तन्ते सर्वकर्मसु।
सर्वथा ब्राह्मणाः पूज्याः परमं दैवतं हि तत्॥

**ஏவம் யத்யப்யநிஷ்டேஷு வர்தந்தே ஸர்வகர்மசு |**
**ஸர்வதா ப்ராஹ்மணா: பூஜ்யா: பரமம் தைவதம் ஹி தத் || 319**

தேஜஸ்வியான அக்னி பகவான் சுடுகாட்டில் சவங்களை எரித்துச் சாம்பலாக்குகிறார். அவரே யக்ஞங்களில் வளர்க்கப் படுகிறார்.

அவ்வாறே பிராம்மணர்கள் விரும்பாதவற்றைச் செய்தாலும், எப்போதும் எல்லா வகையிலும் போற்றுதலுக்குரியவர்களாவர். அவர்களே மேலான தேவர்கள்.

क्षत्रस्यातिप्रवृद्धस्य ब्राह्मणान् प्रति सर्वशः।
ब्रह्मैव सन्नियन्तृ स्यात् क्षत्रं हि ब्रह्मसम्भवम्॥

**க்ஷத்ரஸ்யா அதிப்ரவ்ருத்தஸ்ய ப்ராஹ்மணான் ப்ரதி ஸர்வஷ: |**
**ப்ரஹ்மைவ ஸந்நியந்த்ரு ஸ்யாத் க்ஷத்ரம் ஹி ப்ரஹ்மஸம்பவம் ||** 320

பிராம்மணர்களுக்கு எந்த வகையிலாவது துன்பம் இழைத்தால் அவர்கள் சாபம் கொடுத்தோ, ஹோமத்தாலோ தண்டனையளித்து விடுவர். க்ஷத்திரியன் பிராம்மணனால் பிறந்தவன்.

अद्‌भ्योऽग्निर् ब्रह्मतः क्षत्रमश्मनो लोहमुत्थितम्।
तेषां सर्वत्रगं तेजः स्वासु योनिषु शाम्यति॥

**அத்ப்யோ அக்நிர் ப்ரஹ்மத: க்ஷத்ரமஷ்மநோ லோஹமுத்திதம் |**
**தேஷாம் ஸர்வத்ரகம் தேஜ: ஸ்வாசு யோநிஷு ஷாம்யதி ||** 321

நீரிலிருந்து நெருப்பும், பிராம்மணரிலிருந்து க்ஷத்ரியனும், கல்லிலிருந்து உலோகங்களும் பிறந்ததால் நெருப்பும் க்ஷத்ரியனும் உலோகங்களும் தத்தம் பராக்ரமத்தை மற்ற இடங்களில் காட்ட முடியுமேயன்றி தம் பிறப்பிடத்தில் காட்ட முடியாது.

நெருப்பு நீரால் அணைந்து போகும். உலோகங்கள் கல்லில் உடைந்து போகும். க்ஷத்ரியன் பிராம்மணனிடம் ஒடுங்கி விடுவான்.

नाऽब्रह्म क्षत्रमृध्नोति नाऽक्षत्रं ब्रह्म वर्धते।
ब्रह्म क्षत्रं च सम्पृक्तमिह चाऽमुत्र वर्धते॥

**நா அப்ரஹ்ம க்ஷத்ர ம்ருத்நோதி நா அக்ஷத்ரம் ப்ரஹ்ம வர்ததே |**
**ப்ரஹ்ம க்ஷத்ரம் ச ஸம்ப்ருக் தமிஹ சாஅமுத்ர வர்ததே ||** 322

பிராம்மணனில்லாமல் க்ஷத்ரியன் மேன்மையடைய முடியாது. க்ஷத்ரியன் இல்லாமல் பிராம்மணன் நிம்மதியாக தன் கிரியைகளைச் செய்ய முடியாது. பிராம்மணனும் க்ஷத்ரியனும் ஒருவருக்கொருவர் சாதகமாக வாழும்போது இரு தரப்பினருமே இகபர சுகங்களை இடையூறின்றி பெறமுடியும்.

दत्त्वा धनं तु विप्रेभ्यः सर्वदण्डसमुत्थितम्।
पुत्रे राज्यं समासृज्य कुर्वीत प्रायणं रणे॥

**தத்வா தநம் து விப்ரேப்ய: ஸர்வதண்ட ஸமுத்திதம் |**
**புத்ரே ராஜ்யம் ஸமாஸ்ருஜ்ய குர்வீத ப்ராயணம் ரணே ||** 323

அரசனின் மரணம் எப்படியேற்பட வேண்டுமென்றால், போர்க்களத்தில் போரிட்டு வீரமரணம் அடைய வேண்டும்.

அல்லது முதுமையடைந்த பிறகு தன் பொக்கிஷத்தில் இருக்கும் அபராதமாக வசூலித்த தொகை முழுவதையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்துவிட்டு, ராஜ்ஜியத்தை மகனுக்களித்து முடிசூட்டிவிட்டு தன்னுடைய சுயவிருப்பப்படி மரணத்தை அடைய வேண்டும்.

एवं चरन् सदा युक्तो राजधर्मेषु पार्थिवः।
हितेषु चैव लोकस्य सर्वान् भृत्यान् नियोजयेत्॥

**ஏவம் சரந் ஸதா யுக்தோ ராஜதர்மேஷு பார்திவ: |**
**ஹிதேஷு சைவ லோகஸ்ய ஸர்வாந் ப்ருத்யாந் நியோஜயேத் ||** **324**

இவ்வாறாக அரசன் ராஜதர்மங்களை எப்போதும் விடாது செய்தபடி, சகல மக்களின் நன்மையை மனத்தில் கொண்டு வேலையாட்களை நியமிக்க வேண்டும்.

एषोऽखिलः कर्मविधिरुक्तो राज्ञः सनातनः।
इमं कर्मविधिं विद्यात् क्रमशो वैश्यशूद्रयोः॥

**ஏஷோ அகில: கர்மவிதிருக்தோ ராக்ஞ: ஸநாதந: |**
**இமம் கர்மவிதிம் வித்யாத் க்ரமஷோ வைஷ்ய சூத்ரயோ: ||** **325**

அரசனுக்குரிய தர்ம விதிகள் அனைத்தும் இதுவரை கூறப் பட்டது. இனி வைசிய சூத்திரர்களுக்குரிய தர்ம விதிகளைக் கூறுகிறேன்.

वैश्यस् तु कृतसंस्कारः कृत्वा दारपरिग्रहम्।
वार्तायां नित्ययुक्तः स्यात् पशूनां चैव रक्षणे॥

**வைஷ்யஸ்து க்ருத ஸம்ஸ்கார: க்ருத்வா தாரபரிக்ரஹம் |**
**வார்தாயாம் நித்ய யுக்த: ஸ்யாத் பசூநாம் சைவ ரக்ஷணே ||** **326**

வைசியன் உபநயனம் முதலான கிரியைகளைச் செய்து கொண்ட பிறகு திருமணம் புரிந்து கொள்ள வேண்டும். ஜீவனத் துக்கான தொழிலில் ஈடுபட வேண்டும். பசுக்களை வைத்து போஷிக்க வேண்டும்.

प्रजापतिर् हि वैश्याय सृष्ट्वा परिददे पशून्।
ब्राह्मणाय च राज्ञे च सर्वाः परिददे प्रजाः॥

**ப்ரஜாபதிர் ஹி வைஷ்யாய ஸ்ருஷ்ட்வா பரிததே பசூந் |**
**ப்ராஹ்மணாய ச ராக்ஞே ச ஸர்வா: பரிததே ப்ரஜா: ||** **327**

பிரம்மதேவர், பசுக்களைக் காப்பதற்காகவே வைசியர்களைப் படைத்தார். அவ்வாறே பிரஜைகளைப் படைத்து அவர்களைக் காக்கும் பொறுப்பை பிராம்மணரிடமும், க்ஷத்ரியரிடமும் ஒப்படைத்தார்.

न च वैश्यस्य कामः स्यान् न रक्षेय पशूनिति।
वैश्ये चेच्छति नाऽन्येन रक्षितव्याः कथञ्चन॥

**நச வைஷ்யஸ்ய காம: ஸ்யாந் ந ரக்ஷேயம் பசூந்தி |**
**வைஷ்யே சேச்சதி நாஅந்யேந ரக்ஷிதவ்யா: கதஞ்சந || 328**

வைசியன் மற்றத் தொழில்களில் ஈடுபட்டு பணம் சம்பாதிப்பவனாக இருந்தாலும் பசுக்களின் ரட்சணத்தையும் கட்டாயம் செய்ய வேண்டும். பசுக்களை ரட்சிப்பது தன் கடமையல்ல என்று ஒருபோதும் வைசியன் எண்ணக்கூடாது. அவ்வாறே வைசியன் இருக்கும்போது மற்றவர்கள் எப்போதும் பசுவைக் காத்தலில் ஈடுபடக்கூடாது.

मणि-मुक्ता-प्रवालानां लोहानां तान्तवस्य च।
गन्धानां च रसानां च विद्यादर्घबलाऽबलम्॥

**மணி முக்தா ப்ரவாலாநாம் லோஹாநாம் தாந்தவஸ்ய ச |**
**கந்தாநாம் ச ரஸாநாம் ச வித்யாதர்கபலா அபலம் || 329**

ரத்தினங்கள், முத்துக்கள், பவழங்கள், தங்கம், வெள்ளி, துணிகள், சந்தனம், அகில் முதலான வாசனைத் திரவியங்கள், தேன் முதலான ரசங்களின் அவ்வப்போதைய விலைகளை, தேச காலங்களைப் பொறுத்து அவற்றின் விலை ஏற்ற இறக்கங்களை, பொருட்களின் தரங்களை நன்கு அறிந்தவனாக வைசியன் இருக்க வேண்டும்.

बीजानामुप्तिविच् च स्यात् क्षेत्रदोषगुणस्य च।
मानयोगं च जानीयात् तुलायोगांश् च सर्वशः॥

**பீஜாநாமுப்திவிச்ச ஸ்யாத் க்ஷேத்ர தோஷகுணஸ்ய ச |**
**மாநயோகம் ச ஜாநீயாத் துலா யோகாம்ஷ்ச ஸர்வஷ: || 330**

விதைகளின் தன்மைகள், விதைக்கும் முறைகள், விதைக்கும் காலங்கள், மண்ணின் தன்மைகள், அளக்கும் தராசுக் கோல்கள் முதலான கருவிகள், அவற்றின் தன்மைகளை அறியும் திறமை பெற்றவனாக வைசியன் இருக்க வேண்டும்.

सारासारं च भाण्डानां देशानां च गुणागुणान्।
लाभाऽलाभं च पण्यानां पशूनां परिवर्धनम्॥

**ஸாரா அஸாரம் ச பாண்டாநாம் தேஷாநாம் ச குணாஅகுணாந் |**
**லாபாஅலாபம் ச பண்யாநாம் பஷூநாம் பரிவர்தநம் || 331**

விற்கும் பொருட்களின் தரம் உயர்ந்ததா, தாழ்ந்ததா என்பதையும், அந்தப் பொருட்களுக்கு எந்தெந்த நாடுகளில் நல்ல விலை கிடைக்கும், எந்தெந்த நாடுகளில் விற்பனை நல்லபடி இருக்காது என்பதையும், அவற்றை எந்த இடத்தில் எந்த காலத்தில் விற்றால் நல்ல லாபம் கிடைக்கும் என்பதையும், விற்கும் பொருட்களுக்கு நஷ்டம் எந்தெந்த வகைகளில் ஏற்படக்கூடும் என்பதையும், பசுக்களைப் போஷிக்கும் முறைகளையும் வைசியன் நன்கு அறிந்து வைத்திருக்க வேண்டும்.

भृत्यानां च भृतिं विद्याद् भाषाश् च विविधा नृणाम्।
द्रव्याणां स्थानयोगाश् च क्रयविक्रयमेव च॥

**ப்ருத்யாநாம்ச ப்ருதிம் வித்யாத் பாஷாஷ்ச விவிதா ந்ருணாம் |**
**த்ரவ்யாணாம் ஸ்தாநயோகாம்ஷ் ச க்ரயவிக்ரயமேவ ச || 332**

பசு மேய்ப்பவர்களுக்கு எவ்வளவு கூலி கொடுக்க வேண்டும் என்பதை அறிந்திருக்க வேண்டும். வெளிநாடுகளில் மக்கள் பேசும் மொழிகளை அறிந்திருக்க வேண்டும். விற்பனைப் பண்டங்களை எத்தகைய இடங்களில் சேகரித்து வைக்க வேண்டும், அவற்றைக் கெட்டுப் போகாமல் பாதுகாப்பது எப்படி என்பதை அறிந்திருக்க வேண்டும். எந்த தேசத்தில் எந்தப் பொருளை எவ்வளவு விலைக்கு வாங்கலாம், அதை எந்த தேசத்தில் எவ்வளவு விலைக்கு விற்கலாம் முதலானவற்றை நன்கு அறிந்தவனாக வைசியன் இருக்க வேண்டும்.

धर्मेण च द्रव्यवृद्धावातिष्ठेद् यत्नमुत्तमम्।
दद्याच् च सर्वभूतानामन्नमेव प्रयत्नतः॥

**தர்மேண ச த்ரவ்யவ்ருத்தா வாதிஷ்டேத் யத்நமுத்தமம் |**
**தத்யாச்ச ஸர்வபூதாநாமந்நமேவ ப்ரயத்நத: || 333**

தர்மமான முறையில் பொருட்களை விற்று தனத்தைப் பெருக்க நன்கு முயற்சி செய்ய வேண்டும். எல்லா உயிர்களுக்கும் முயற்சியோடு அன்னத்தை அளிக்க வேண்டும்.

विप्राणां वेदविदुषां गृहस्थानां यशस्विनाम्।
शुश्रूषैव तु शूद्रस्य धर्मो नैश्रेयसः परः॥

**விப்ராணாம் வேத விதுஷாம் க்ருஹஸ்தாநாம் யஷஸ்விநாம் |**
**சுஷ்ரூஷைவ து சூத்ரஸ்ய தர்மோ நைஷ்ரேயஸ: பர: ||** 334

வேத விற்பன்னர்களும், தங்கள் கர்மானுஷ்டானங்களை விடாது செய்பவர்கள் என்று புகழ் பெற்றவர்களும், இல்லறவாசிகளுமான பிராம்மணர்களுக்கு பணிவிடை புரிவதே சூத்ரனுக்கு மேலான தர்மமாகும். இந்த தர்மத்தை நல்லபடி செய்வதாலேயே அவன் சொர்க்கத்தை அடைந்து விட முடியும்.

शुचिरुत्कृष्टशुश्रूषुर् मृदुवागनहङ्कृतः।
ब्राह्मणाऽऽद्याश्रयो नित्यमुत्कृष्टां जातिमश्नुते॥

**ஷுசிருத்க்ருஷ்ட சுஷ்ரூஷுர் ம்ருதுவாகநஹங்க்ருத: |**
**ப்ராஹ்மணா ஆத்யாஷ்ரயோ நிதய்முத்க்ருஷ்டாம் ஜாதிமஷ்நுதே ||** 335

சூத்திரன், உள்ளும் புறமும் பரிசுத்தமானவனாக இருந்து, பணிவாகப் பேசுபவனாக, அகந்தையற்றவனாக பிராம்மணர்களுக்கு பணிவிடை புரிய வேண்டும். இயலாதபோது க்ஷத்திரியர்களுக்கும், அதுவும் இயலாதபோது வைசியர்களுக்கும் பணிவிடை புரிய வேண்டும். இப்படி க்ஷத்ரிய வைசியர்களுக்குப் பணிபுரிபவன் அடுத்து உயர்குலத்தில் பிறப்பான்.

एषोऽनापदि वर्णानामुक्तः कर्मविधिः शुभः।
आपद्यपि हि यस् तेषां क्रमशस् तं निबोधत॥

**ஏஷோ அநாபதி வர்ணா நாமுக்த: கர்மவிதி: சுப: |**
**ஆபத்யபி ஹி யஸ் தேஷாம் க்ரமஷஸ் தம் நிபோதத ||** 336

ஆபத்தற்ற காலங்களில் நான்கு வர்ணத்தாரும் கடைப்பிடிக்க வேண்டிய தர்ம நெறிகள் இதுவரை கூறப்பட்டன. இனி ஆபத்துக் காலங்களில் கடைப்பிடிக்க வேண்டிய தர்ம நெறிகளையும் கலப்பினத்தாரின் தர்ம நெறிகளையும் கூறுகிறேன், கேளுங்கள்.

(ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 10

अधीयीरंस् त्रयो वर्णाः स्वकर्मस्था द्विजातयः।
प्रब्रूयाद् ब्राह्मणस् तेषां नेतराविति निश्चयः॥

**அதீயீரம்ஸ் த்ரயோ வர்ணா: ஸ்வகர்மஸ்தா த்விஜாதய: |**
**ப்ரபூயாத் ப்ராஹ்மணஸ் தேஷாம் நேதாராவிதி நிஷ்சய: || 1**

பிராம்மண, க்ஷத்ரிய, வைசியர் என்னும் மூவர்ணத்தாரும் வேதங்களைக் கற்று, தத்தம் வருணத்துக்குரிய தொழில்களைச் செய்ய வேண்டும்.

பிராம்மணர்கள் வேதங்களைக் கற்ற பிறகு மற்றவர்களுக்கு கற்பிக்கும் தொழிலை மேற்கொள்ள வேண்டும். க்ஷத்ரிய, வைசியர்கள் வேதங்களைக் கற்ற பிறகு அவரவர்க்குரிய தொழிலைச் செய்ய வேண்டும். வேதங்கள் கற்றுக் கொடுப்பது இவர்களது தொழிலன்று. அது பிராம்மணன் தொழில். கற்றுக் கொள்வதை மட்டும் இவர்கள் செய்ய வேண்டும்.

सर्वेषां ब्राह्मणो विद्याद् वृत्त्युपायान् यथाविधि।
प्रब्रूयादितरेभ्यश् च स्वयं चैव तथा भवेत्॥

**ஸர்வேஷாம் ப்ராஹ்மணோ வித்யாத் வ்ருத்யுபாயாந் யதாவிதி |**
**ப்ரப்ரூயாதிதரேப்யஷ் ச ஸ்வயம் சைவ ததா பவேத் || 2**

பிராம்மணன் மற்ற வர்ணத்தாருக்கு அவரவர் செய்ய வேண்டிய தொழில் எது என்பதை எடுத்துக்கூற வேண்டும். தானும் தன் குலத் தொழிலை நன்கு கடைப்பிடிக்க வேண்டும்.

वैशेष्यात् प्रकृतिश्रैष्ठ्यान् नियमस्य च धारणात्।
संस्कारस्य विशेषाच् च वर्णानां ब्राह्मणः प्रभुः॥

**வைஷேஷ்யாத் ப்ரக்ருதி ஷ்ரைஷ்ட்யாந் நியமஸ்ய ச தாரணாத் |**
**ஸம்ஸ்காரஸ்ய விசேஷாச் ச வர்ணாநாம் ப்ராஹ்மண: ப்ரபு: || 3**

தினமும் வேதமோதி ஹோமங்கள் செய்து தேவர்களுக்கும் பூதங்கணங்களுக்கும் பித்ரு கணங்களுக்கும் மனிதர்களுக்கும் சந்தோஷம் தருகின்றதால் பிராம்மணன் உயர்ந்தவன். அவனுடைய இந்த கிரியைகளால் பிறர்க்கு வேதங்களைச் சொல்லிக் கொடுக்கும் குருவாகிறான். ஜீவனத்துக்குரிய உபாயத்தைக் காட்டும் பிரபு வாகிறான்.

ब्राह्मणः क्षत्रियो वैश्यस् त्रयो वर्णा द्विजातयः।
चतुर्थ एकजातिस् तु शूद्रो नाऽस्ति तु पञ्चमः॥

**ப்ராஹ்மணா: க்ஷத்ரியோ வைஷ்யஸ் த்ரயோ வர்ணா த்விஜாதய: |**
**சதுர்த ஏகஜாதிஸ் து சூத்ரோ நா அஸ்தி து பஞ்சம: ||** 4

*பிராம்மண, க்ஷத்ரிய, வைசியரென்னும் மூவர்ணத்தாரே த்விஜர்கள் எனப்படுவார்கள். இவர்கள் உபநயனம் என்னும் பூணூல் போடுவதும் காயத்ரி மந்திரத்தை உபதேசம் பெறுவதுமான கிரியையை செய்து கொள்ள வேண்டும். இதனால் இரண்டாம் முறை பிறப்பெடுத்தவராகின்றனர். அதனால் இருமுறை பிறந்த வர்கள் என்னும் பொருள் படும்படி த்விஜர்கள் என்று சொல்லப் படுகிறார்கள்.*

*அடுத்து நாலாம் வர்ணத்தவன் சூத்திரன். ஆக மொத்தம் நான்கு வர்ணங்கள்தான் உண்டு. ஐந்தாவது என்று எதுவும் கிடையாது.*

सर्ववर्णेषु तुल्यासु पत्नीष्वक्षतयोनिषु।
आनुलोम्येन सम्भूता जात्या ज्ञेयास् त एव ते॥

**ஸர்வ வர்ணேஷு துல்யாசு பத்நீஷ்வக்ஷ தயோநிஷு |**
**ஆனுலோம்யேந ஸம்பூதா ஜாத்யா ஜ்ஞேயாஸ் த ஏவதே ||** 5

*இந்த நான்கு வர்ணத்திலும் அந்தந்த வர்ணத்து ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொண்டு அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகளே, துல்லியமாக அந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்களாவர். கலப்பினத்தால் பிறந்தவர்கள் வேறு பெயர்களோடு விளங்குவார்கள்.*

स्त्रीष्वनन्तरजातासु द्विजैरुत्पादितान् सुतान्।
सदृशानेव तानाहुर् मातृदोषविगर्हितान्॥

**ஸ்த்ரீஷ்வநந்தரஜாதாசு த்விஜைருத்பாதிதாந் சுதாந் |**
**ஸத்ருஷாநேவ தாநாஹுர் மாத்ருதோஷவிகர்ஹிதாந் ||** 6

*த்விஜர்கள் தத்தமக்கு அடுத்திருக்கின்ற வர்ணத்துப் பெண்களிடம் பெற்ற பிள்ளைகள் அவர்களை ஒத்தவர்களாக இருந்தாலும், தாய் வேறு வர்ணத்தவளாதலால் தாயின் கலப்பின தோஷத்தைப் பெற்றவர்களாக இருப்பர். ஆனாலும் தந்தையின் வர்ணத்தைச் சேர்ந்தவர்களேயாவர்.*

अनन्तरासु जातानां विधिरेष सनातनः।
द्व्येकाऽन्तरासु जातानां धर्म्यं विद्यादिमं विधिम्॥

**அநந்தராசு ஜாதாநாம் விதிரேஷ ஸநாதந: |**
**த்வ்யேகாந்தராசு ஜாதாநாம் தர்ம்யம் வித்யாதிமம் விதிம் ||** 7

தத்தமது இனத்துக்கு அடுத்த இனத்துப் பெண்ணை மணந்து பெறும் பிள்ளைகளுக்குத்தான் இது பொருந்தும். அதற்கடுத்த இனத்துப் பெண்களிடம் பிறக்கும் பிள்ளைகளைப்பற்றிக் கூறு கிறேன், கேளுங்கள்:

**ब्राह्मणाद् वैश्यकन्यायामम्बष्ठो नाम जायते।**
**निषादः शूद्रकन्यायां यः पारशव उच्यते॥**

**ப்ராஹ்மணாத் வைஷ்ய கந்யாயா மம்பஷ்டோ நாமஜாயதே ।**
**நிஷாத: சூத்ரகந்யாயாம் ய: பாரஷவ உச்யதே ॥** 8

பிராம்மணனுக்கு வைசிய மனைவியிடம் பிறந்த பிள்ளைக்கு 'அம்பஷ்டன்' என்று பெயர்.

பிராம்மணனுக்கு சூத்திர மனைவியிடம் பிறந்த பிள்ளைக்கு 'நிஷாதன்' என்று பெயர். இவனை 'பாரஷவன்' என்றும் கூறுவார்கள். இந்தப் பிள்ளை சூத்திரனைவிட மேம்பட்டு இருப்பதினால் பாரஷவன் எனப்படுகிறான்.

**क्षत्रियाच् छूद्रकन्यायां क्रूराऽऽचारविहारवान्।**
**क्षत्रशूद्रवपुर् जन्तुरुग्रो नाम प्रजायते॥'**

**க்ஷத்ரியாச் சூத்ரகந்யாயாமத் க்ரூரா ஆசார விஹாரவாந் ।**
**க்ஷத்ர சூத்ரவபுர் ஐந்து ருக்ரோ நாம ப்ரஜாயதே ॥** 9

க்ஷத்ரியனுக்கு சூத்திரப் பெண்ணிடம் பிறந்தவன் ஆசார மற்றவனாக குரூரமான காரியங்களைச் செய்பவனாக இருப்பான். க்ஷத்ரிய சூத்திர சரீரங்களைக் கொண்ட இவனுக்கு 'உக்ரன்' என்று பெயர்.

**विप्रस्य त्रिषु वर्णेषु नृपतेर् वर्णयोर् द्वयोः।**
**वैश्यस्य वर्णे चैकस्मिन् षडेतेऽपसदाः स्मृताः॥**

**விப்ரஸ்ய த்ரிஷு வர்ணேஷு ந்ருபதிர் வர்ணயோர் த்வயோ: ।**
**வைஷ்யஸ்ய வர்ணே சைகஸ்மிந் ஷடேதே அபஸதா: ஸ்ம்ருதா: ॥** 10

பிராம்மணனுக்கு மற்ற மூன்று வர்ணத்தாரான க்ஷத்ரிய, வைசிய, சூத்திரப் பெண்களுக்குப் பிறந்த பிள்ளைகளும், க்ஷத்ரிய னுக்கு மற்ற இரண்டு வர்ணத்தாரான வைசிய, சூத்திரப் பெண்களுக்குப் பிறந்த பிள்ளைகளும், வைசியனுக்கு சூத்திரப் பெண்ணிடம் பிறந்த பிள்ளைகளுமான இவ்வறு வகையான வர்களும், அவரவர் குலப் பெண்களிடம் பிறந்த பிள்ளைகளைவிடத் தாழ்ந்தவராவர்.

क्षत्रियाद् विप्रकन्यायां सूतो भवति जातितः।
वैश्यान् मागधवैदेहौ राजविप्राङ्गनासुतौ॥

**க்ஷத்ரியாத் விப்ரகந்யாயாம் ஸூதோ பவதி ஜாதித: |**
**வைஷ்யாந் மாகதவைதேஹெள ராஜவிப்ரா அங்கநாஸுதௌ || 11**

*க்ஷத்ரியனுக்கு பிராம்மண மனைவியிடம் பிறந்தவனுக்கு சூதன் என்று பெயர்.*

*வைசியனுக்கு க்ஷத்ரியப் பெண்ணிடம் பிறந்தவனுக்கு மாகதன் என்று பெயர்.*

*வைசியனுக்கு பிராம்மணப் பெண்ணிடம் பிறந்தவனுக்கு வைதேகன் என்று பெயர்.*

शूद्रादायोगवः क्षत्ता चण्डालश् चाऽधमो नृणाम्।
वैश्यराजन्यविप्रासु जायन्ते वर्णसङ्कराः॥

**சூத்ராதாயோகவ: க்ஷத்தா சண்டாலஷ் சாஅதமோ ந்ருணாம் |**
**வைஷ்யராஜந்யவிப்ராஸு ஜாயந்தே வர்ணஸங்கரா: || 12**

*சூத்திரனுக்கு வைசிய மனைவியிடம் பிறந்த பிள்ளை அயோகவன் எனப்படுவான். க்ஷத்ரிய மனைவியிடம் பிறந்த பிள்ளை க்ஷத்தா எனப்படுவான். பிராம்மண மனைவியிடம் பிறந்த பிள்ளை சண்டாளன் எனப்படுவான்.*

एकान्तरे त्वानुलोम्यादम्बष्ठोग्रौ यथा स्मृतौ।
क्षत्तृवैदेहकौ तद्वत् प्रातिलोम्येऽपि जन्मनि॥

**ஏகாஅந்தரே த்வானுலோம்யாதம் பஷ்டோக்ரௌயதா ஸ்ம்ருதௌ |**
**க்ஷத்ருவைதேஹகௌ தத்வத் ப்ராதிலோம்யேஅபி ஜன்மநி || 13**

*மேல் வர்ணத்தாருக்கும் அவனைவிட கீழ்வர்ணத்துப் பெண்களுக்கும் பிறந்த பிள்ளைகள் அனுலோமர்கள் எனப்படுவர்.*

*கீழ் வர்ணத்தாருக்கும் அவனைவிட மேல் வர்ணத்துப் பெண்களுக்கும் பிறந்த பிள்ளைகள் பிரதிலோமர்கள் எனப்படுவர்.*

*அனுலோமர்களில் அம்பஷ்டனும் உக்ரனும் பிறப்பால் தாழ்ந்தவர்கள். பிரதிலோமர்களில் சூதன், வைதேகன் என்னும் இவ்விருவகையானவர்களும் பிறப்பால் தாழ்ந்தவர்கள்.*

पुत्रा येऽनन्तरस्त्रीजाः क्रमेणोक्ता द्विजन्मनाम्।
ताननन्तरनाम्नस् तु मातृदोषात् प्रचक्षते॥

**புத்ரா யேஅந்தரஸ்த்ரீஜா: க்ரமேணோக்தா த்விஜன்மநாம் |**
**தாநந்தர நாம்நஸ்து மாத்ருதோஷாத் ப்ரசக்ஷதே || 14**

பிராம்மணர்களுக்குப் பிறந்த அனுலோமர்கள் என்னும் பிற வர்ணப் பெண்களிடம் பிறந்த பிள்ளைகள் தாயின் குலத்தவரே யாவர். எனவே தாய் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவளோ அந்த வர்ணத்து சம்ஸ்காரங்களையே (ஜாதகர்மா, உபநயனம் முதலானவை சம்ஸ்காரங்களாகும். இவற்றைப்பற்றி இதற்கு முன்பே விளக்கப் பட்டுள்ளது) செய்ய வேண்டும்.

**ब्राह्मणादुग्रकन्यायामावृतो नाम जायते।**
**आभीरोऽम्बष्ठकन्यायामायोगव्यां तु धिग्वणः॥**

**ப்ராஹ்மணாதுக்ரகந்யாயாமாவ்ருதோ நாம ஜாயதே |**
**ஆபீரோ அம்பஷ்ட கந்யாயா மாயோகவ்யாம் து திக்வண: || 15**

பிராம்மணனுக்கும் உக்ர இனத்தைச் சேர்ந்த பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை 'ஆவ்ரதன்' எனப்படுவான்.

பிராம்மணனுக்கும் அம்பஷ்ட இனத்தைச் சேர்ந்த பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை 'ஆபீரன்' எனப்படுவான்.

பிராம்மணனுக்கு அயோகவ இனத்தைச் சேர்ந்த பெண்ணுக்கும் பிறந்த பிள்ளை 'திக்வணன்' எனப்படுவான்.

**आयोगवश् च क्षत्ता च चण्डालश् चाऽधमो नृणाम्।**
**प्रातिलोम्येन जायन्ते शूद्रादपसदास् त्रयः॥**

**ஆயோகவஷ் ச க்ஷத்தா ச சண்டாலஷ்சாஅதமோ ந்ருணாம் |**
**ப்ராதி லோம்யேந ஜாயந்தே சூத்ராதபஸதாஸ் த்ரய: || 16**

ஆயோகன், க்ஷத்தா, மனிதர்களில் அதமனான சண்டாளன் மூவரும் பிரதிலோமர்களாகப் பிறந்தவர்கள். இவர்கள் சாஸ்திரம் கூறும் கிரியைகள் செய்ய அருகதை யற்றவர்கள்.

**वैश्यान् मागधवैदेही क्षत्रियात् सूत एव तु।**
**प्रतीपमेते जायन्ते परेऽप्यपसदास् त्रयः॥**

**வைஷ்யாந் மாகதவைதேஹௌ க்ஷத்ரியாத்சூத ஏவ து |**
**ப்தீபமேதே ஜாயந்தே பரேஅப்யபஸதாஸ் த்ரய: || 17**

வைசியனுக்கு மேல் வர்ணத்துப் பெண்களிடம் பிறந்த மாகதன், வைதேகன் என்பவர்களும், க்ஷத்ரியனுக்கு பிராம்மணப் பெண்ணிடம் பிறந்த சூதனும் பிரதிலோமர்களே. இவர்களுக்கும் சாஸ்திரம் கூறும் கிரியைகள் செய்யும் அருகதை கிடையாது.

जातो निषादाच् छूद्रायां जात्या भवति पुक्कसः।
शूद्राज् जातो निषाद्यां तु स वै कुक्कुटकः स्मृतः॥

**ஜாதோ நிஷாதாச் சூத்ராயாம் ஜாத்யா பவதி புக்கஸ: |**
**சூத்ராஜ்ஜாதோ நிஷாத்யாம் து ஸ வை குக்குடக: ஸ்ம்ருத: || 18**

*நிஷாதனுக்கும் சூத்ரபெண்ணுக்கும் பிறந்தவன் 'புக்கசன்' எனப்படுவான்.*

*நிஷாதபெண்ணுக்கும் சூத்ரனுக்கும் பிறந்தவன் 'குக்குடகன்' எனப்படுவான்.*

क्षत्तुर् जातस् तथोग्रायां श्वपाक इति कीर्त्यते।
वैदेहकेन त्वम्बष्ठ्यामुत्पन्नो वेण उच्यते॥

**க்ஷத்துர் ஜாதஸ் ததோக்ராயாம் ஷ்வபாக இதி கீர்த்யதே |**
**வைதேஹகேந த்வம்பஷ்ட்யாமுத்பந்நோ வேண உச்யதே || 19**

*க்ஷத்தாவுக்கு உக்ர இனத்துப் பெண்ணிடம் பிறந்த பிள்ளைக்கு 'ஸ்வபாகன்' என்று பெயர்.*

*வைதேகனுக்கு அம்பஷ்ட இனத்துப் பெண்ணிடம் பிறந்த பிள்ளைக்கு 'வேனன்' என்று பெயர்.*

द्विजातयः सवर्णासु जनयन्त्यव्रतांस् तु यान्।
तान् सावित्रीपरिभ्रष्टान् व्रात्यानिति विनिर्दिशेत्॥

**த்விஜாதய: ஸவர்ணாசு ஜநயந்த்யவ்ரதாம்ஸ்து யாந் |**
**தாந் ஸாவித்ரீ பரிப்ரஷ்டாந் வ்ராத்யாநிதி விநிர்திஷேத் || 20**

*த்விஜர்கள் அவரவர் வர்ணத்துப் பெண்களை மணந்து பெற்ற பிள்ளைகளுக்கு உபநயனம் முதலான வேதம் கூறிய சம்ஸ்காரங்கள் எதுவும் செய்யபடாதபோது அவர்கள் 'விராத்யர்கள்' என்று பெயர் பெறுவார்கள்.*

व्रात्यात् तु जायते विप्रात् पापात्मा भूर्जकण्टकः।
आवन्त्य-वाटधानौ च पुष्पधः शैख एव च॥

**வ்ராத்யாத் து ஜாயதே விப்ராத் பாபாஆத்மா பூர்ஜகண்டக: |**
**ஆவந்த்ய வாடதாநௌ ச புஷ்பத: ஷைக ஏவ ச || 21**

*விராத்யனான பிராம்மணன் அதே இனத்து பிராம்மணப் பெண்ணை மணந்து பிறக்கும் பிள்ளைக்கு 'பூர்ஜகண்டகன்' என்று பெயர். இவனுக்கே வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன. ஆவந்தியன், வாடதானன், புஷ்பதன், சைகன்*

என்பன இவனுக்கு தேசாந்திரயங்களில் வழங்கும் வெவ்வேறு பெயர்கள்.

झल्लो मल्लश् च राजन्याद् व्रात्यान् निच्छिविरेव च।
नटश् च करणश् चैव खसो द्रविड एव च॥

**பல்லோ மல்லஷ் ச ராஜந்யாத் வ்ராத்யாந் நிச்சிவிரேவ ச |**
**நடஷ் ச கரணஷ் வைச கஸோ த்ரவிட ஏவ ச ||** 22

விராத்யனான க்ஷத்ரியனுக்கு அதே இனத்துப் பெண்ணிடம் பிறப்பவனுக்கு 'பல்லன்' என்று பெயர். இவனுக்கு தேசாந்திரங்களில் மல்லன், நிச்சிவிரன், நடன், கரணன், கசன் என்று பெயர்கள் வழங்குகின்றன.

वैश्यात् तु जायते व्रात्यात् सुधन्वाऽऽचार्य एव च।
कारुषश् च विजन्मा च मैत्रः सात्वत एव च॥

**வைஷ்யாத்து ஜாயதே வ்ராத்யாத் சுதன்வா ஆசார்ய ஏவ ச |**
**காருஷஷ் ச விஜன்மா ச மைத்ர: ஸாத்வத ஏவ ச ||** 23

விராத்யனான வைசியனுக்கு அதே இனத்துப் பெண்ணிடம் பிறப்பவனுக்கு 'சுதன்வா' என்று பெயர். இவனுக்கு தேசாந்திரங்களில் ஆசாரியன், காருசன், விஜன்மா, மைத்ரன், சாத்வதன் என்று பெயர்கள் வழங்குகின்றன.

व्यभिचारेण वर्णानामवेद्यावेदनेन च।
स्वकर्मणां च त्यागेन जायन्ते वर्णसङ्कराः॥

**வ்யபிசாரேண வர்ணாநாமவேத்யா வேதநேந ச |**
**ஸ்வகர்மணாம் ச த்யாகேந ஜாயந்தே வர்ணஸங்கரா: ||** 24

பிராம்மணன் முதல் நால்வர்ணத்தாரும் பிற வர்ணத்துப் பெண்களை மணப்பதாலும், தத்தமக்குரிய சாஸ்திர முறையான கிரியைகளை செய்யாமல் விடுவதாலும் கலப்பினங்கள் ஏற்படுகின்றன.

सङ्कीर्णयोनयो ये तु प्रतिलोमाऽनुलोमजाः।
अन्योन्यव्यतिषक्ताश् च तान् प्रवक्ष्याम्यशेषतः॥

**ஸங்கீர்ண யோநயோ யேது ப்ரதிலோமா அனுலோமஜா: |**
**அன்யோ அன்யவ் யதிஷக்தாஷ் ச தாந் ப்ரவக்ஷ்யாம்ய சேஷத: ||** 25

பிரதிலோமர்களும் அனுலோமர்களும் பரஸ்பரம் மணந்து கொள்வதால் ஏற்படும் ஜாதிகளைக் கூறுகிறேன் கேளுங்கள்:

सूतो वैदेहकश् चैव चण्डालश् च नराऽधमः।
मागधः क्षतृजातिश् च तथाऽऽयोगव एव च॥

**சூதோ வைதேஹகஷ்சைவ சண்டாளஷ் ச நராஅதம: |**
**மாகத: க்ஷத்ருஜாதிஷ் ச ததா ஆயோகவ ஏவ ச ||** 26

एते षट् सदृशान् वर्णान् जनयन्ति स्वयोनिषु।
मातृजात्यां प्रसूयन्ते प्रवरासु च योनिषु॥

**ஏதே ஷட் ஸத்ருஷாந் வர்ணாஞ்ஜ நயந்தி ஸ்வயோநிஷு |**
**மாத்ரு ஜாத்யாம் ப்ரஸூயந்தே ப்ரவராசு ச யோநிஷு ||** 27

சூதன், வைதேகன், சண்டாளன், மாகதன், க்ஷத்தா, அயோவன் என்னும் இவ்வறுவகையாரும் தத்தமது இனப் பெண்களை மணந்து பெறும் பிள்ளைகளும் தாயின் இனத்துக்குத் தக்கபடி உயர்வையோ, தாழ்வையோ பெறுவார்கள்.

यथा त्रयाणां वर्णानां द्वयोरात्माऽस्य जायते।
आनन्तर्यात् स्वयोन्यां तु तथा बाह्येष्वपि क्रमात्॥

**யதா த்ரயாணாம் வர்ணாநாம் த்வயோராத்மா அஸ்யஜாயதே |**
**ஆநந்தர்யாத் ஸ்வயோந்யாம் து ததா பாஹ்வேஷ்வபி க்ரமாத் ||** 28

பிராம்மணனுக்கு, பிராம்மண, க்ஷத்ரிய, வைசிய மனைவிகளிடம் பிறந்த பிள்ளைகளுக்கு உபநயனம் முதலான சம்ஸ்காரங்களும் உண்டு. எனவே, இவர்கள் த்விஜர்கள்.

அவ்வாறே அவரவர் குலத்துப் பெண்டிருக்குப் பிறந்தவர்கள் உத்தமமான பிராம்மண குலம், உத்தமமான க்ஷத்ரிய குலம், உத்தமமான வைசிய குலம் என்று தர்மத்தைக் கடைப்பிடிப்பார்கள்.

மற்ற மனைவிரிடம் பிறந்தவர்கள் வரிசைக் கிரமமாக குறைவையடைகிறார்கள்.

ते चाऽपि बाह्यान् सुबहूंस् ततोऽप्यधिकदूषितान्।
परस्परस्य दारेषु जनयन्ति विगर्हितान्॥

**தேசாபி பாஹ்யாந் சுபஹூம்ஸ் ததோ அப்யதிக தூஷிதாந் |**
**பரஸ்பரஸ்ய தாரேஷு ஜநயந்தி விகர்ஹிதாந் ||** 29

அனுலோமர்களும் பிரதிலோமர்களும், பரஸ்பரம் மணம் செய்து கொண்டு இன்னும் தூஷிக்கத்தக்க பிள்ளைகளைப் பெறுகிறார்கள்.

सजातिजाऽनन्तरजाः षट् सुता द्विजधर्मिणः ।
शूद्राणां तु सधर्माणः सर्वेऽपध्वंसजाः स्मृताः ॥

**ஸஜாதிஜா அநந்தரஜா: ஷட் அதா த்விஜதர்மிணா: |**
**சூத்ராணாம் து ஸதர்மாண: ஸர்வே அபத்வம்ஸஜா: ஸ்ம்ருதா: || 30**

*த்விஜர்கள் தத்தம் வர்ணத்துப் பெண்களை மணந்து பெற்ற பிள்ளைகளும், தமக்கடுத்து வர்ணத்துப் பெண்களை மணந்து பெற்ற பிள்ளைகளும் உபநயனம் முதலான வைதீக சமஸ்காரங்களுக்கு உரியவர்கள்.*

तपोबीजप्रभावैस् तु ते गच्छन्ति युगेयुगे।
उत्कर्षं चाऽपकर्षं च मनुष्येष्विह जन्मतः ॥

**தபோ பீஜ ப்ரபாவைஸ் து தே கச்சந்தி யுகேயுகே |**
**உத்கர்ஷம் சாஅபகர்ஷம் ச மனுஷ்யேஷ்விஹ ஜன்மத: || 31**

*தவத்தாலும், பிறப்பாலும் உயர்வோடு விளங்கிய குலங்கள் யுகம் மாறமாற தாழ்வை படிப்படியாக அடையும்*

शनकैस् तु क्रियालोपादिमाः क्षत्रियजातयः।
वृषलत्वं गता लोके ब्राह्मणाऽदर्शनेन च ॥

**ஷநகைஸ்து க்ரியாலோபாதிமா: க்ஷத்ரிய ஜாதய: |**
**வ்ருஷலத்வம் கதா லோகே ப்ராஹ்மணா அதர்ஷநேந ச || 32**

*க்ஷத்ரியர்கள் உபநயனம் முதலான கிரியைகளை விட்டு விட்டதாலும், பிராம்மணர்கள் மூலமாக யக்ஞங்கள் பிராயச் சித்தங்கள் முதலானவைகளைப் பற்றி தெரிந்து கொள்ளாமையாலும் மெல்ல மெல்ல சூத்திரத்தன்மையை அடைந்தார்கள்.*

पौण्ड्रकाश् चौड्र-द्रविडाः काम्बोजा यवनाः शकाः।
पारदाः पह्लवाश् चीनाः किराता दरदाः खशाः ॥

**பௌண்ட்ரகாஷ் சௌட்ர த்ரவிடா: காம்போஜாயவநா: ஷகா: |**
**பாரதா: பஹ்ளவாஷ் சீநா: கிராதா தரதா: கஷா: || 33**

*பௌண்டகர்கள், ஓட்ரர்கள், காம்போஜர்கள், யவனர்கள், சகர்கள், பாரதர்கள், ப்ளஹ்லவர்கள், சீனர்கள், கிராதர்கள், தரதர்கள், கசர்கள் முதலானவர்களனைவரும் இவ்வாறு சூத்திரர் களானார்கள்.*

मुखबाहूरुपज्जानां या लोके जातयो बहिः ।
म्लेच्छवाचश् चाऽऽर्यवाचः सर्वे ते दस्यवः स्मृताः ॥

**முகபாஹூருபஜ்ஜாநாம் யாலோகே ஜாதயோ பஹி: |**
**ம்லேச்ச வாசஷ் சாஆர்யவாச: ஸர்வே தேதஸ்யவ: ஸ்ம்ருதா: || 34**

*நான்கு வர்ணத்தாரால் கலப்பு ஜாதிகள் உருவாயின. இந்த ஜாதியரில் சிலர் மிலேச்ச பாஷையை பேசுபவராயினர். சிலர் ஆர்ய பாஷையே பேசுபவராயினர். ஆனாலும் இவர்கள் அனைவருமே 'தஸ்யூக்கள்' எனப் பெயர் பெற்றனர்.*

ये द्विजानामपसदा ये चाऽपध्वंसजाः स्मृताः ।
ते निन्दितैर् वर्तयेयुर् द्विजानामेव कर्मभिः ॥

**யே த்விஜாநாமபஸதா யேசா அபத்வம்ஸஜா: ஸ்ம்ருதா: |**
**தே நிந்திதைர் வர்தயேயுர் த்விஜாநாமேவ கர்மபி: || 35**

*த்விஜர்களைவிட தாழ்வானவர்களான நிந்திக்கப்பட்ட குலத்தவர் த்விஜர்களுக்கு வேலையாட்களாக பணிபுரிவார்கள்.*

सूतानामश्वसारथ्यमम्बष्ठानां चिकित्सनम् ।
वैदेहकानां स्त्रीकार्यं मागधानां वणिक्पथः ॥

**ஸூதாநாமஷ்வ ஸாரத்ய மம்பஷ்டாநாம் சிகித்ஸநம் |**
**வைதேஹகாநாம் ஸ்த்ரீகார்யம் மாகதாநாம் வணிக்பத: || 36**

*ஸூதர்கள் தேர்ப்பாகர்களாக ஜீவனம் செய்வார்கள். அம்பஷ்டர்களுடைய ஜீவனத் தொழில் வைத்தியம் செய்தல். வைதேககர்கள் அந்தப்புரக் காவலர்களாக இருப்பார்கள். மாகதர்கள் வர்த்தகம் செய்வார்கள்.*

मत्स्यघातो निषादानां त्वष्टिस् त्वायोगवस्य च ।
मेद-ऽन्ध्र-चुञ्चु-मद्गूनामारण्यपशुहिंसनम् ॥

**மத்ஸ்யகாதோ நிஷாதாநாம் தஷ்டிஸ் த்வாயோகவஸ்ய ச |**
**மேதா அந்த்ர சுஞ்சு மத்கூநாமாரண்ய பசுஹிம்ஸநம் || 37**

*நிஷாதர்களுக்கு மீன்பிடித்தல் தொழில். அயோகவர் தச்சு வேலை செய்து ஜீவிப்பார்கள். மேதர்கள், ஆந்தர்கள், சுஞ்சுகள், மத்குகள் என்னும் இவர்கள் காட்டிலுள்ள மிருகங்களை ஹிம்சித்து அதைக் கொண்டு ஜீவிப்பார்கள்.*

क्षत्तुग्रपुक्कसानां तु बिलौकोवधबन्धनम्।
धिग्वणानां चर्मकार्यं वेणानां भाण्डवादनम्॥

**க்ஷத்ருக்ர புக்கஸாநாம் து பிலௌகோ வத பந்தநம் |**
**திக் வணாநாம் சர்மகார்யம் வேணாநாம் பாண்டவாதநம் ||** 38

க்ஷத்தர்கள், உக்ரர்கள், புக்சர்களுக்கு உடும்பு முதலானவற்றைப் பிடித்தல் தொழில். திக்வணர்கள் (சக்லியர்), தோல் வேலை செய்வார்கள். வேணர்களுக்கு முரசறைதல், தப்பட்டை அடித்தல் தொழில்.

चैत्यद्रुम-श्मशानेषु शैलेषूपवनेषु च।
वसेयुरेते विज्ञाता वर्तयन्तः स्वकर्मभिः॥

**சைத்ய த்ரும ஷ்மஷாநேஷு ஷைலே ஷூபவநேஷு ச |**
**வஸேயுரேதே விக்ஞாதா வர்தயந்த: ஸ்வகர்மபி: ||** 39

இவர்களனைவரும் ஊருக்கு வெளியே மரத்தடிகளிலும், சுடுகாடு, மலையடிவாரம், வனங்களின் அருகாமையிலும் எல்லோருக்கும் பரிச்சயமானவர்களாக தத்தமது தொழிலை செய்து வருவார்கள்.

चण्डाल-श्वपचानां तु बहिर् ग्रामात् प्रतिश्रयः।
अपपात्राश् च कर्तव्या धनमेषां श्व-गर्दभम्॥

**சண்டாள ஷ்வபகாநாம் து பஹிர் க்ராமாத் ப்ரதிஷ்ரய: |**
**அபபாத்ராஷ்ச கர்தவ்யா தநமேஷாம் ஷ்வ கர்தபம் ||** 40

சண்டாளர்களும் ஸ்வபாகர்களும் ஊருக்கு வெளியில் வசிக்க வேண்டும். கொலையைத் தொழிலாக கொண்டவன் சண்டாளன். நாயையும் கழுதையையும் வளர்ப்பார்கள். இவையே இவர்களின் செல்வமாகும்.

वासांसि मृतचेलानि भिन्नभाण्डेषु भोजनम्।
कार्ष्णायसमलङ्कारः परिव्रज्या च नित्यशः॥

**வாஸாம்ஸி ம்ருதசேலாநி பிந்நபாண்டேஷு போஜநம் |**
**கார்ஷ்ணார்ய ஸமலங்கார: பரிவ்ரஜ்யா ச நித்யஷ: ||** 41

இரும்பு வலைகளே இவர்களது அணிகலன்கள். எப்போதும் இவர்கள் திரிந்து கொண்டே யிருப்பார்கள்.

न तैः समयमन्विच्छेत् पुरुषो धर्ममाचरन्।
व्यवहारो मिथस् तेषां विवाहः सदृशैः सह॥

**ந தை: ஸமயமந்விச்சேத் புருஷோ தர்மமாசரந் |**
**வ்யவஹாரோ மிதஸ் தேஷாம் விவாஹ: ஸத்ருஸை: ஸஹ || 42**

தர்ம காரியங்களைச் செய்யும்போது இவர்களைக் காண்பதும் கூடாது. இவர்கள் இனங்களுக்குள்ளேயே இவர்கள் திருமண சம்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டும். கொடுக்கல் வாங்கல் முதலான விவகாரங்களையும் (கடன்) தங்களுக்குத் தாங்களே செய்து கொள்ள வேண்டும்.

अन्नमेषां पराधीनं देयं स्याद् भिन्नभाजने।
रात्रौ न विचरेयुस् ते ग्रामेषु नगरेषु च॥

**அந்நமேஷாம் பராஅதீநம் தேயம் ஸ்யாத் பிந்நபாஜநே |**
**ராத்ரௌ ந விசரேயுஸ் தேக்ராமேஷு நகரேஷு ச || 43**

ஊருக்குள் இவர்களுக்கு உணவு கொடுக்கும் போது வேலையாட்களைக் கொண்டு கொடுக்கச் செய்ய வேண்டும். கிராமங்களிலோ நகரங்களிலோ இவர்கள் இரவில் சஞ்சரிக்கக்கூடாது.

दिवा चरेयुः कार्यार्थं चिह्निता राजशासनैः।
अबान्धवं शवं चैव निर्हरेयुरिति स्थितिः॥

**திவா சரேயு: கார்யார்தம் சிஹ்நிதா ராஜசாஸநை: |**
**அபாந்தவம் ஷவம் சைவ நிர்ஹரேயுரிதி ஸ்திதி: || 44**

ராஜ முத்திரையை வைத்துக் கொண்டு, பகல் பொழுதுகளில் அரச ஆணைகளை கிராம நகரத் தெருக்களில் பறைசாற்றுவது இவர்கள் தொழில். யாருமற்ற அனாதைச் சவங்களை அகற்றுவதும் இவர்கள் தொழிலேயாகும்.

वध्यांश् च हन्युः सततं यथाशास्त्रं नृपाऽऽज्ञया।
वध्यवासांसि गृह्णीयुः शय्याश् चाऽऽभरणानि च॥

**வத்யாம்ஷ்ச ஹந்யு: ஸததம் யதாசாஸ்த்ரம் ந்ருபா ஆக்ஞயா |**
**வத்யவாஸாம்ஸி க்ருஹ்ணீயு: ஷய்யாஷ் சாஆபரணாநி ச || 45**

மேலும், மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களை, அரசன் எந்த முறையில் கொல்லச் சொல்லி ஆணை பிறப்பித்துள்ளானோ அந்த முறையில் கொல்வது இவர்கள் வேலை. அப்படிக் கொன்றவனின் ஆடை, படுக்கை, அவன் அணிந்திருந்த ஆபரணங்களை இவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

वर्णापेतमविज्ञातं नरं कलुषयोनिजम्।
आर्यरूपमिवानार्यं कर्मभिः स्वैर् विभावयेत्॥

**வர்ணாஅபேத அவிக்ஞாதம் நரம் கலுஷயோநிஜம் |**
**ஆர்ய ரூபமிவா அநார்யம் கர்மபி: ஸ்வைர் விபாவயேத் ||** 46

நால்வர்ணத்தினின்றும் விலகிய கலப்பினத்தவனானவனைப் பார்க்க, அவன் செய்யும் தொழிலைக் கொண்டு அவன் நீசன் என்பதை அறிய வேண்டும்.

अनार्यता निष्ठुरता क्रूरता निष्क्रियात्मता।
पुरुषं व्यञ्जयन्तीह लोके कलुषयोनिजम्॥

**அநார்யதா நிஷ்டுரிதா க்ரூரதா நிஷ்க்ரியா ஆத்மதா |**
**புருஷம் வ்யஞ்ஜயந்தீஹ லோகே கலுஷயோநிஜம் ||** 47

நிந்திக்கத்தக்க கொடூரமான செயல்களைச் செய்தல், சாஸ்திர முறைப்படியான கிரியைகளைச் செய்யாதிருத்தல், கொடூரமாகப் பேசுதல், கொல்லுதல் முதலான ஒருவனின் இழிகுணங்களே அவன் கீழானவன் என்பதை எடுத்துக்காட்டும்.

पित्र्यं वा भजते शीलं मातुर् वोभयमेव वा।
न कथञ्चन दुर्योनिः प्रकृतिं स्वां नियच्छति॥

**பித்ர்யம் வா பஜதே ஷீலம் மாதுர் வோபயமேவ வா |**
**ந கதஞ்சந துர்யோநி: ப்ரக்ருதிம் ஸ்வாம் நியச்சதி ||** 48

ஒருவன் தன் தந்தையின் குணங்களையோ, தாயின் குணங்களையோ, இருவரின் குணங்களையோ உடையவனாக இருப்பான். இழியவன் தனக்கு இயற்கையாக அமைந்த இத்தகைய குணங்களாலே, தான் யார் என்பதை வெளிப்படுத்துவான்.

कुले मुख्येऽपि जातस्य यस्य स्याद् योनिसङ्करः।
स श्रयत्येव तच्छीलं नरोऽल्पमपि वा बहु॥

**குலே முக்யே அபி ஜாதஸ்ய யஸ்ய ஸ்யாத் யோநி ஸங்கர: |**
**ஸ ஸ்ரயத்யேவ தச்சீலும் நரோ அல்பமபி வா பஹு ||** 49

உயர் குலத்தைச் சேர்ந்த பெண் பெற்ற மகனாக இருந்தபோதும், அவளது ஒழுக்கக் கேட்டால் எவனுக்கோ பிறந்தவனாக இருந்தால், அந்த மகன் கொஞ்சமோ அதிகமோ தந்தையின் குணத்தைக் கொண்டவனாகவே இருப்பான்.

यत्र त्वेते परिध्वंसा जायन्ते वर्णदूषकाः।
राष्ट्रियैः सह तद् राष्ट्रं क्षिप्रमेव विनश्यति॥

**யத்ர த்வேதே பரித்வம்ஸா ஜாயந்தே வர்ணதூஷகா: |**
**ராஷ்ட்ரியை: ஸஹ தத் ராஷ்ட்ரம் க்ஷிப்ரமேவ நிநஷ்யதி || 50**

*எந்த நாட்டில் முறைகேட்டால் பிறக்கும் பிள்ளைகள் பெருகுகிறார்களோ, அந்த நாடு நாட்டுமக்களுடன்கூட விரைவில் அழியும்.*

ब्राह्मणार्थे गवार्थे वा देहत्यागोऽनुपस्कृतः।
स्त्रीबालाऽभ्युपपत्तौ च बाह्यानां सिद्धिकारणम्॥

**ப்ராஹ்மணா அர்தே கவா அர்தே வா தேஹத்யாகோ அனுபஸ் க்ருத: |**
**ஸ்த்ரீபாலா அப்யுபபத்தௌ ச பாஹ்யாநாம் ஸித்தி காரணம் || 51**

*பசுக்கள், பிராம்மணர்கள், பெண்கள், பாலகர்களைக் காப்பாற்றுவதற்காக தம்முயிரையும் கொடுக்கின்ற கீழ்ஜாதிக் காரர்கள் நல்லுலகத்தையடைவார்கள்.*

अहिंसा सत्यमस्तेयं शौचमिन्द्रियनिग्रहः।
एतं सामासिकं धर्मं चातुर्वर्ण्येऽब्रवीन् मनुः॥

**அஹிம்ஸா ஸத்யமஸ்தேயம் ஷௌச மிந்த்ரிய நிக்ரஹ: |**
**ஏதம் ஸாமாஸிகம் தர்மம் சாதுர்வர்ண்யே அப்ரவீந்மனு: || 52**

*பிறரை ஹிம்சிக்காதிருத்தல், சத்தியம் பேசுதல், பிறர் பொருளை கவராதிருத்தல், உள்ளும் புறமும் தூய்மையோடிருத்தல், ஐம்புலன்களை அடக்கியிருத்தல் என்னும் இந்த தர்மங்கள் நான்கு வர்ணத்தாரும் கடைப்பிடிக்க வேண்டிய பொதுவான தர்மங்கள்.*

शूद्रायां ब्राह्मणाज् जातः श्रेयसा चेत् प्रजायते।
अश्रेयान् श्रेयसीं जातिं गच्छत्या सप्तमाद् युगात्॥

**சூத்ராயாம் ப்ராஹ்மணாஜ்ஜாத: ஷ்ரேயஸா சேத் ப்ரஜாயதே |**
**அஷ்ரேயாந் ஷ்ரேயஸீம் ஜாதிம் கச்சத்யா ஸப்தமாத் யுகாத் || 53**

*சூத்திரப் பெண்ணிடம் பிராம்மணன் பெற்ற பெண் பிராம்மணனை மணந்து, அவளுக்குப் பிறந்த பெண்ணும் பிராம்மணனையே மணந்து, இவ்வாறு பெண் வயிற்றுப் பெண்ணாக பிராம்மணர்களையே மணந்து வந்தால் ஏழாவது தலைமுறையில் பிறப்போர் பிராம்மணராகின்றனர்.*

शूद्रो ब्राह्मणतामेति ब्राह्मणश्चैति शूद्रताम्।
क्षत्रियाज् जातमेवं तु विद्याद् वैश्यात् तथैव च॥

**சூத்ரோ ப்ராஹ்மணதாமேதி ப்ராஹ்மணஷ்சைதி சூத்ரதாம் |**
**க்ஷத்ரியாஜ் ஜாதமேவம் து வித்யாத் வைஷ்யாத் ததைவ ச || 54**

*இவ்வாறாக சூத்திரன் பிராம்மணத் தன்மையை அடைவான். பிராம்மணனும் சூத்திரத் தன்மையை அடைவான். இதேமுறை க்ஷத்ரியனுக்கும், வைசியனுக்கும் பொருந்தும்.*

अनार्यायां समुत्पन्नो ब्राह्मणात् तु यदृच्छया।
ब्राह्मण्यामप्यनार्यात् तु श्रेयस्त्वं क्वेति चेद् भवेत्॥

**அநார்யாயாம் ஸமுத்பந்நோ ப்ராஹ்மணாத்து யத்ருச்சயா |**
**ப்ராஹ்மண்யாமப் யநார்யாத் து ஷ்ரேயஸ்த்வம் க்வேதி சேத் பவேத் || 55**

*திருமணம் செய்து கொள்ளாமலே சூத்திரப் பெண்ணிடம் பிராம்மணன் பெற்ற பிள்ளை உயர்ந்தவனா, பிராம்மணப் பெண்ணிடம் சூத்திரன் பெற்ற பிள்ளை உயர்ந்தவனா என்று பார்ப்போம்.*

जातो नार्यामनार्यायामार्यादार्यो भवेद् गुणैः।
जातोऽप्यनार्यादार्यायामनार्य इति निश्चयः॥

**ஜாதோ நார்யாமநார்யா மார்யாதார்யோ பவேத் குணை: |**
**ஜாதோ அப்யநார்யாதார்யாயாமநார்ய இதி நிஷ்சய: || 56**

*இவர்களில் பிராம்மணன் பெற்ற பிள்ளையே உயர்ந்தவனாவான். பிராம்மணப் பெண் பெற்ற பிள்ளை தாழ்ந்தவனாவான்.*

तावुभावप्यसंस्कार्याविति धर्मो व्यवस्थितः।
वैगुण्याज् जन्मनः पूर्व उत्तरः प्रतिलोमतः॥

**தாவுபாவப் யஸம்ஸ்கார்யாவிதி தர்மோ வ்யவஸ்தித: |**
**வைகுண்யாஜ் ஜந்மந: பூர்வ உத்தர: ப்ரதிலோமத: || 57**

*ஆனால் இவ்விருவகைப் பிள்ளைகளுக்கும் உபநயனம் முதலான சம்ஸ்காரங்கள் இல்லை. பிராம்மணனுக்குப் பிறந்த பிள்ளை சூத்திரப் பெண்ணிடம் ஜன்மித்ததால் அவனுக்கு வைதீக சடங்குகள் இல்லை.*

*பிராம்மணப் பெண் பெற்ற பிள்ளையோவெனில் சூத்திரனை விட தாழ்ந்தவனாவான்.*

सुबीजं चैव सुक्षेत्रे जातं सम्पद्यते यथा।
तथाऽऽर्याज् जात आर्यायां सर्वं संस्कारमर्हति॥

**சுபீஜம்சை சுக்ஷேத்ரே ஜாதம் ஸம்பத்யதே யதா |**
**ததா ஆர்யாஜ் ஜாதா ஆர்யாயாம் ஸர்வம் ஸம்ஸ்காரமர்ஹதி || 58**

நல்ல மண்ணில் விதைக்கப்பட்ட நல்ல விதை நல்லபடி முளைக்கும். அவ்வாறே நல்ல குலத்தில் உதித்த ஆணும் பெண்ணும் பெற்ற பிள்ளை உயர்ந்தவன். இவனே வைதீக சடங்குகள் செய்யத் தகுதிபெற்றவன்.

बीजमेके प्रशसन्ति क्षेत्रमन्ये मनीषिणः।
बीजक्षेत्रे तथैवाऽन्ये तत्रेयं तु व्यवस्थितिः॥

**பீஜமேகே ப்ரஷம்ஸந்தி க்ஷேத்ரமந்யே மநீஷிண: |**
**பீஜக்ஷேத்ரே ததைவா அந்யே தத்ரேயம் து வ்யவஸ்திதி: || 59**

சிலர் விதையே முக்கியமென்று விதையைப் புகழ்ந்து பேசுவார்கள். சிலர் நிலமே முக்கியமென்று நிலத்தைப் புகழ்ந்து பேசுவார்கள். இரண்டுமே முக்கியம் என்று வேறு சிலர் கூறுவார்கள். இந்த விஷயத்தை எப்படி நிர்ணயிக்க வேண்டும் என்று பார்ப்போம்

अक्षेत्रे बीजमुत्सृष्टमन्तरैव विनश्यति।
अबीजकमपि क्षेत्रं केवलं स्थण्डिलं भवेत्॥

**அக்ஷேத்ரே பீஜமுத்ஸ்ருஷ்டமந்தரைவ விநஷ்யதி |**
**அபீஜகமபி க்ஷேத்ரம் கேவலம் ஸ்தண்டிலம் பவேத் || 60**

வளமற்ற மண்ணில் உயர்ந்த விதை விதைக்கப்பட்டாலும் பலனிருக்காது. வளமான மண்ணில் நல்ல விதையை விதைத்தால் பயிர் நன்கு வளரும். எனவே மண்ணும் விதையும் இரண்டும் முக்கியம்.

यस्माद् बीजप्रभावेण तिर्यग्जा ऋषयोऽभवन्।
पूजिताश् च प्रशस्ताश् च तस्माद् बीजं प्रशस्यते॥

**யஸ்மாத் பீஜ ப்ரபாவேண திர்யக்ஜா ருஷயோ அபவந் |**
**பூஜிதாஷ் ச ப்ரஷஸ்தாஷ் ச தஸ்மாத் பீஜம் ப்ரஷஸ்யதே || 61**

ஆயினும் மிருகங்களிடத்தே பிறந்தவர்கள்கூட தந்தையின் உயர்வினால் ரிஷிகளாகி விளங்கினர். எல்லோராலும் பூஜிக்கப் படுபவர்களாகவும் புகழ் மிக்கவர்களாகவும் விளங்கினர். எனவே மண்ணைவிட விதையே சிறந்ததென்று கூறலாம். (உ-ம். ரிஷ்ய சிருங்கர்)

अनार्यमार्यकर्माणमार्यं चाऽनार्यकर्मिणम्।
सम्प्रधार्याऽब्रवीद् धाता न समौ नाऽसमाविति॥

**அநார்யமார்ய கர்மாணமார்யம் சாஅநார்யகர்மிணம் |**
**ஸம்ப்ரதார்யா அப்ரவீத் தாதா ந ஸமௌ நா அஸமாவிதி || 62**

மேல் வர்ணத்தவன் தாழ்ந்தவன் தொழிலைச் செய்வதால் தாழ்ந்தவனாகிவிட மாட்டான். கீழ் ஜாதிக்காரன் மேல் வர்ணத்தார் தொழிலைச் செய்வதனால் உயர்ந்தவனாகி விடமாட்டான் ஆயின் அவரவர் தொழிலை விட்ட விஷயத்தில் இருவரும் சமமாகி விடுவார்கள்.

ब्राह्मणा ब्रह्मयोनिस्था ये स्वकर्मण्यवस्थिताः।
ते सम्यगुपजीवेयुः षट् कर्माणि यथाक्रमम्॥

**ப்ராஹ்மணா ப்ரஹ்மயோநிஸ்தா யே ஸ்வகர்மண்யவஸ்திதா: |**
**தே ஸம்யகுபஜீவேயு: ஷட் கர்மாணி யதாக்ரமம் || 63**

பிராம்மணனுக்கு பிராம்மணப் பெண்ணிடமாகப் பிறந்த பிராம்மணர்கள் தங்களுக்குரிய சுய கர்மாக்களைச் செய்ய வேண்டும். தமக்குரிய ஆறு கர்மாக்களை முறையாகச் செய்தபடி வாழ்க்கை நடத்த வேண்டும்.

अध्यापनमध्ययनं यजनं याजनं तथा।
दानं प्रतिग्रहश्चैव षट् कर्माण्यग्रजन्मनः॥

**அத்யாபநமத்யயநம் யஜநம் யாஜநம் ததா |**
**தாநம் ப்ரதிக்ரஹஷ்சைவ ஷட் கர்மாண்யக்ர ஜன்மந: || 64**

வேதங்களைப் படித்தல், வேதங்களை பிறருக்கு கற்றுக் கொடுத்தல், யாக யக்ஞங்கள் செய்தல், யாக யக்ஞங்களை பிறருக்கு செய்து கொடுத்தல், பிறரிடமிருந்து தானம் வாங்குதல், பிறருக்குத் தானம் கொடுத்தல் என்னும் ஆறு கர்மாக்களும் பிராம்மணர்க் குரியவை.

षण्णां तु कर्मणामस्य त्रीणि कर्माणि जीविका।
याजनाऽध्यापने चैव विशुद्धाच्च प्रतिग्रहः॥

**ஷண்ணாம்து கர்மணாமஸ்ய த்ரீணிகர்மாணி ஜீவிகா |**
**யாஜநா அத்யாபநே சைவ விசுத்தாச்ச ப்ரதிக்ரஹ: || 65**

இவற்றில் பிறர்க்கு வேதங்களைச் சொல்லிக் கொடுப்பதாலும், யாகயக்ஞங்களை பிறர்க்கு செய்து கொடுப்பதாலும், பிறரிடமிருந்து

தானம் பெறுவதனாலும் பிராம்மணர்கள் தங்கள் ஜீவனத்தை நடத்த வேண்டும்.

त्रयो धर्मा निवर्तन्ते ब्राह्मणात् क्षत्रियं प्रति।
अध्यापनं याजनं च तृतीयश् च प्रतिग्रहः॥

**த்ரயோ தர்மா நிவர்தந்தே ப்ராஹ்மணாத் க்ஷத்ரியம் ப்ரதி |**
**அத்யாபநம் யாஜநம் ச த்ருதீயஷ் ச ப்ரதிக்ரஹ: ||** **66**

பிராமணனுக்குரிய ஜீவன உபாயத்துக்கான இந்த மூன்றும் தவிர்த்து மற்ற மூன்று தர்மங்களும் க்ஷத்ரியனுக்குரியன. அதாவது வேதம் கற்றல், யாகயக்ஞங்கள் செய்வித்தல், தானம் கொடுத்தல் இம்மூன்றும் க்ஷத்ரியனுக்குரியன.

वैश्यं प्रति तथैवैते निवर्तेरन्निति स्थितिः।
न तौ प्रति हि तान् धर्मान् मनुराह प्रजापतिः॥

**வைஷ்யம் ப்ரதி ததைவைதே நிவர்தேரந்நிதி ஸ்திதி: |**
**ந தௌ ப்ரதி ஹி தாந் தர்மாந் மனுராஹ ப்ரஜாபதி: ||** **67**

பிராம்மணனுக்குரிய ஆறு தர்மங்களில் மூன்று தர்மங்கள் எவ்வாறு க்ஷத்ரியனுக்கு இல்லை என்று கூறப்பட்டதோ, அவ்வாறே வைசியனுக்கும் இல்லை. மனு இவர்களுக்கு இந்த தர்மங்கள் இருப்பதாகக் கூறவில்லை.

शस्त्राऽस्त्रभृत्त्वं क्षत्रस्य वणिक्पशुकृषिर् विशः।
आजीवनार्थं धर्मस् तु दानमध्ययनं यजिः॥

**ஷஸ்த்ரா அஸ்த்ரப்ருத் த்வம் க்ஷத்ரஸ்ய வணிக் பசுக்ருஷிர் விஷ: |**
**ஆஜீவநார்தம் தர்மஸ்து தாநமத்யயநம் யஜி: ||** **68**

க்ஷத்ரியனுடைய ஜீவனுத்துக்காகவும், பிரஜைகளைக் காப்பதற்காகவும் சஸ்திரங்களும் அஸ்திரங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. (சஸ்திரங்கள் என்பது கத்தி, வாள் முதலான ஆயுதங்கள் எவை எவை யுண்டோ அவை அத்தனையையும் குறிப்பிடும். அஸ்திரங்கள் என்பது ஆயுதங்களைக் குறிக்காது. மந்திரங்களைக் குறிக்கும். மந்திரம் கூறி எதிரியின் மீது எய்யப்படுவது பாணமானாலும் புல்லானாலும் அதன் மூலமாக குறிப்பிட்ட மந்திர தெய்வ சக்தி எதிரியைத் தாக்கி அழிக்கும். ராமர் காகாசுரன் மீது ஒரு புல்லைக் கிள்ளி பிரம்மாஸ்திரம் ஜபித்து எறிந்தார். அது மூவுலங்களிலும் அவனைத் துரத்திக் கொண்டு சென்றதைப் புராணம் கூறுகிறது. ஆக்னேயாஸ்திரம் தீயாகி எரிக்கும். வருணாஸ்திரம் மழையாகிப் பொழியும்.)

வைசியனுக்கு வர்த்தகம் செய்தல், விவசாயம் செய்தல், பசுக்களைக் காத்தல் இவை ஜீவனத்துக்கானவை.

க்ஷத்ரியனுக்கும் வைசியனுக்கும் விதித்துள்ள யாகம் செய்வித்தல், தானம் கொடுத்தல், வேதம் கற்றல் என்பவை அவன் ஆத்மாவை உய்விப்பதற்கானவை.

वेदाऽभ्यासो ब्राह्मणस्य क्षत्रियस्य च रक्षणम्।
वार्ताकर्मैव वैश्यस्य विशिष्टानि स्वकर्मसु॥

**வேதா அப்யாஸோ ப்ராஹ்மணஸ்ய க்ஷத்ரியஸ்ய ச ரக்ஷணம் |**
**வார்தாகர்மைவ வைஷ்யஸ்ய விஷிஷ்டாநி ஸ்வர்மசு || 69**

ஒருவனுடைய ஸ்வதர்மம் என்னும் குலத்தொழில் எது என்று பார்த்தால், பிராம்மணனுக்கு வேதம் கற்றுக் கொடுத்தல் குலத்தொழில். க்ஷத்ரியனுக்கு பிரஜைகளைக் காத்தல் குலத்தொழில். வைசியனுக்கு வர்த்தகம் செய்தல் குலத்தொழில்.

अजीवंस् तु यथोक्तेन ब्राह्मणः स्वेन कर्मणा।
जीवेत् क्षत्रियधर्मेण स ह्यस्य प्रत्यनन्तरः॥

**அஜீவம்ஸ்து யதோக்தேந ப்ராஹ்மண: ஸ்வேந கர்மணா |**
**ஜீவேத் க்ஷத்ரியதர்மேண ஸஹ்யஸ்ய ப்ரத்யநந்தர: || 70**

பிராம்மணன் தன் குலத்தொழிலைச் செய்து, அதனால் வரும் வருமானத்தில் குடும்பத்தைக் காப்பாற்ற முடியாவிட்டால், தனக்கடுத்தபடியான க்ஷத்ரியனுடைய தொழிலை ஏற்கலாம். (இப்படிச் சொல்வதால் வாளைச் சுழற்ற வேண்டும், கத்தியைத் தூக்கிப் போரிட வேண்டும் என்பது பொருளல்ல. கிராமாதிகாரியாக இருப்பது, நீதிபதியாக இருப்பது முதலானவற்றால் வருமானம் ஈட்ட வேண்டும்.)

उभाभ्यामप्यजीवंस् तु कथं स्यादिति चेद् भवेत्।
कृषिगोरक्षमास्थाय जीवेद् वैश्यस्य जीविकाम्॥

**உபாப்யாமப்யஜீவம்ஸ் து கதம் ஸ்யாதிதி சேத் பவேத் |**
**க்ருஷி கோரக்ஷ மாஸ்தாய ஜீவேத் வைஷ்யஸ்ய ஜீவிகாம் || 71**

பிராம்மணன் தன் தொழிலாலும் க்ஷத்ரியத் தொழிலாலும் ஜீவனம் நடத்த இயலாதபோது வைசியனுக்குரிய தொழில்களான விவசாயம், பசுக்காத்தல் முதலியவற்றைச் செய்து ஜீவிக்கலாம்.

वैश्यवृत्त्याऽपि जीवंस् तु ब्राह्मणः क्षत्रियोऽपि वा।
हिंसाप्रायां पराऽधीनां कृषिं यत्नेन वर्जयेत्॥

**வைஷ்யவ்ருத்யா அபி ஜீவம்ஸ்து ப்ராஹ்மண: க்ஷத்ரியோ அபிவா |**
**ஹிம்ஸா ப்ராயாம் பரா அதீநாம் க்ருஷிம் யத்நேந வர்ஜயேத் || 72**

*பிராம்மணனும் க்ஷத்ரியனும் வைசியத் தொழிலைச் செய்ய நேர்ந்தால், பிறர்க்கடிமையாக இருக்கச் செய்கின்றதும், பூமியிலுள்ள சிறிய உயிர்களை ஹிம்சிப்பதுமான பயிர்த்தொழிலை முயற்சி செய்தாவது விட வேண்டும்.*

कृषिं साध्विति मन्यन्ते सा वृत्तिः सद्विगर्हिता।
भूमिं भूमिशयांश् चैव हन्ति काष्ठमयोमुखम्॥

**க்ருஷிம் ஸாத்விதி மந்யந்தே ஸா வ்ருத்தி: ஸத் விகர்ஹிதா |**
**பூமிம் பூமி ஷயாம்ஷ் சைவ ஹந்தி காஷ்டமயோ முகம் || 73**

*விவசாயம் செய்வது உயர்ந்த தொழில் என்று சிலர் நினைப்பார்கள். ஆனால் நல்லோர் இதை ஏற்கவில்லை. கலப்பை, மண்வெட்டி போன்றவற்றால் பூமியை வெட்டுவதாலும் பூமியிலுள்ள உயிரினங்களை வெட்டுவதாலும் இது உயர்ந்த தொழிலல்ல.*

इदं तु वृत्तिवैकल्यात् त्यजतो धर्मनैपुणम्।
विट्पण्यमुद्धृतोद्धारं विक्रेयं वित्तवर्धनम्॥

**இதம் து வ்ருத்தி வைகல்யாத் த்யஜதோ தர்மநைபுணம் |**
**விட்பண்யமுத் த்ருதோத்தாரம் விக்ரேயம் வித்தவர்தநம் || 74**

*பிராம்மணனும் க்ஷத்ரியனும் தங்கள் தொழிலால் ஜீவனம் நடத்தமுடியாத நிலையில் தர்மத்தை விடவும் மனமில்லாமல், பிழைக்கும் வழியும் இல்லாதபோது பொருட்களை விற்கும் தொழிலில் ஈடுபடலாம். அப்படி ஈடுபடும்போது விற்கத்தக்க பொருட்களையும், லாபம் தரக்கூடிய பொருட்களையும் கூறுகிறேன், கேளுங்கள்:*

सर्वान् रसानपोहेत कृतान्नं च तिलैः सह।
अश्मनो लवणं चैव पशवो ये च मानुषाः॥

**ஸர்வாந் ரஸாநபோஹேத க்ருதா அந்நம் ச திலை: ஸஹ |**
**அஷ்மநோ லவணம் சைவ பஷவோ யே ச மானுஷா: || 75**

*ரசப்பொருட்கள், சமைத்த அன்னம், எள், ரத்தினங்கள், உப்பு, மிருகங்கள், மனிதர்கள் - விற்கக்கூடாதவை இவை.*

सर्वं च तान्तवं रक्तं शाणक्षौमाऽऽविकानि च।
अपि चेत् स्युररक्तानि फलमूले तथौषधीः॥

**ஸர்வம் ச தாந்தவம் ரக்தம் ஷாணக்ஷௌமா ஆவிகாநி ச |**
**அபி சேத் ஸ்யுரரக்தாநி பலமூலே ததௌஷதீ: || 76**

अपः शस्त्रं विषं मांसं सोमं गन्धांश् च सर्वशः।
क्षीरं क्षौद्रं दधि घृतं तैलं मधु गुडं कुशान्॥

**அப: ஷஸ்த்ரம் விஷம் மாம்ஸம் ஸோமம் கந்தாம்ஷ் ச ஸர்வஷ: |**
**க்ஷீரம் க்ஷௌத்ரம் ததி க்ருதம் தைலம் மது குடம்குஷாந் || 77**

आरण्यांश् च पशून् सर्वान् दंष्ट्रिणश् च वयांसि च।
मद्यं नीलीं च लाक्षां च सर्वांश् चैकशफांस् तथा॥

**ஆரண்யாம்ஷ்ச பஷூந் ஸர்வாந் தம்ஷ்ட்ரிணஷ்ச வயாம்ஸி ச |**
**மத்யம் நீலிம் ச லாக்ஷாம் ச ஸர்வாம்ஷ் சைகஷபாம்ஸ் ததா || 78**

*சிவப்புநிற பருத்தித் துணிகளை விற்கலாகாது. சணலால் நெய்தவை, கம்பளியால் நெய்தவையான ஆடைகளையும் விற்கக்கூடாது.*

*பழங்கள், கிழங்குகள், ஔஷதங்களை விற்கக் கூடாது.*

*தண்ணீர், ஆயுதங்கள், விஷம், மாமிசம், சோமலதை (யாகத்துக்குப் பயன்படும் கொடி), வாசனைத் திரவியங்கள், பால், தயிர், நெய், எண்ணெய், தேன், வெல்லம், தர்ப்பைகளை விற்கக்கூடாது.*

*யானைகள், சிங்கங்கள், பறவைகள், மீன்கள், கள், அவுரிச்செடி, அரக்கு, ஒற்றைப்பல் வரிசையுள்ள மிருகங்களையும் விற்கக் கூடாது.*

काममुत्पाद्य कृष्यां तु स्वयमेव कृषीवलः।
विक्रीणीत तिलाञ् शुद्धान् धर्मार्थमचिरस्थितान्॥

**காமமுத்பாத்ய க்ருஷ்யாம் து ஸ்வயமேவ க்ருஷீவல: |**
**விக்ரீணீத திலாஞ் சுத்தாந் தர்மார்தமசிரஸ்திதாந் || 79**

*வேறுவழியின்றி எள்ளைப் பயிரிட வேண்டி வரும்போது, எள்ளைப் பயிரிட்டு, அது விளைந்த பிறகு வெகுகாலம் வைத்துக் கொள்ளாமல் உடனே விற்றுவிட வேண்டும்.*

भोजनाऽभ्यञ्जनाद् दानाद् यदन्यत् कुरुते तिलैः।
कृमिभूतः श्वविष्ठायां पितृभिः सह मज्जति॥

**போஜநா அப்யஞ்ஜநாத் தாநாத் யதந்யத் குருதே திலை: |**
**க்ருமிபூத: ஷ்வவிஷ்டாயாம் பித்ருபி: ஸஹ மஜ்ஜதி || 80**

சாப்பிடவும், உடலுக்குத் தேய்த்து நீராடவும், தானம் கொடுக்கவு மல்லாது வேறு காரியங்களுக்கு எள்ளை உபயோகிப் பவன் கிருமி ஜன்மமெடுத்து தன் பித்ருக்களுடன் கூட நாய் மலத்தில் வீழ்வான்.

सद्यः पतति मांसेन लाक्षया लवणेन च।
त्र्यहेण शूद्रो भवति ब्राह्मणः क्षीरविक्रयात्॥

**ஸத்ய: பத்தி மாம்ஸேந லாக்ஷயா லவணேந ச |**
**த்ரயஹேண சூத்ரோ பவதி ப்ராஹ்மண: க்ஷீர விக்ரயாத் ||** 81

மாமிசங்களையும் அரக்கையும் விற்றவன் உடனே பிராமணத் தன்மையை இழப்பான். பாலை விற்றால் மூன்று நாட்களில் சூத்திரனாவான்.

इतरेषां तु पण्यानां विक्रयादिह कामतः।
ब्राह्मणः सप्तरात्रेण वैश्यभावं नियच्छति॥

**இதரேஷாம் து பண்யாநாம் விக்ரயாதிஹ காமத: |**
**ப்ராஹ்மண: ஸப்தராத்ரேண வைஷ்யபாவம் நியச்சதி ||** 82

மேலும் விற்கக்கூடாது என்று கூறப்பட்ட மற்றப் பொருட்களை லாபம் கருதி விற்றால் ஏழு நாட்களில் வைசியத் தன்மையை அடைகிறான்

रसा रसैर् निमातव्या न त्वेव लवणं रसैः।
कृतान्नं चाकृतान्नेन तिला धान्येन तत्समाः॥

**ரஸாரஸைர் நிமாதவ்யா நத்வேவ லவணம் ரஸை: |**
**க்ருதாந்நம் சாஅக்ருதாந்நேந திலா தாந்யேந தத்ஸமா: ||** 83

நெய், தேன், வெல்லம் முதலான ரசப்பொருட்களை பண்டமாற்று முறையில் பிறரிடம் கொடுத்து அவர்களிடம் உள்ளதை தான் பெற்றுக் கொள்ளலாம்.

உப்பை மட்டும் பண்டமாற்று செய்து கொள்ளலாகாது. அன்னத்துக்கு பதிலாக அரிசியை பண்டமாற்று செய்து கொள்ளலாம். எள்ளை மற்றத் தானியங்களுக்கு பண்டமாற்று செய்து கொள்ளலாம்.

जीवेदेतेन राजन्यः सर्वेणाऽप्यनयं गतः।
न त्वेव ज्यायसीं वृत्तिमभिमन्येत कर्हिचित्॥

**ஜீவேதேதேந ராஜன்ய: ஸர்வேணா அப்யநயம் கத: |**
**நத்வேவ ஜ்யாயஸீம் வ்ருத்திமபிமந்யேத கர்ஹிசித் ||** 84

க்ஷத்ரியன் வேறுவழியின்றி விற்பனைத் தொழிலில் ஈடுபட்டால், பிராம்மணனுக்கு எந்தப் பொருட்கள் விற்கக்கூடாது என்று கூறப்பட்டனவோ அவற்றை விற்று வைசியத் தொழிலை மேற் கொள்ளலாம். ஆனால் எவ்வகையிலும் பிராம்மணத் தொழிலைச் செய்ய விரும்பக் கூடாது.

यो लोभादधमो जात्या जीवेदुत्कृष्टकर्मभिः।
तं राजा निर्धनं कृत्वा क्षिप्रमेव प्रवासयेत्॥

**யோ லோபாததமோ ஜாத்யா ஜீவேதுத்க்ருஷ்ட கர்மபி: |**
**தம் ராஜா நிர்தநம் க்ருத்வா க்ஷிப்ரமேவ ப்ரவாஸயேத் ‖ 85**

கீழ் ஜாதியில் பிறந்தவன், மேல் வர்ணத்தாருக்குரிய குலத்தொழிலைச் செய்து ஜீவனம் நடத்தினால், அரசன் அவனைக் கண்டுபிடித்து அவன் செல்வத்தை பறிமுதல் செய்து நாட்டைவிட்டு வெளியேற்ற வேண்டும்.

वरं स्वधर्मो विगुणो न पारक्यः स्वनुष्ठितः।
परधर्मेण जीवन् हि सद्यः पतति जातितः॥

**வரம் ஸ்வதர்மோ விகுணோ ந பாரக்ய: ஸ்வனுஷ்டித: |**
**பரதர்மேண ஜீவந் ஹி ஸத்ய: பததி ஜாதித: ‖ 86**

தொழில் உயர்ந்ததாக இல்லாவிட்டாலும், அவரவர் குலத் தொழிலே அவரவர்க்கு உயர்வைத் தருவது. மற்றவர் குலத்தொழில் உயர்ந்ததாக இருந்தாலும் அதைக் கடைப்பிடிக்கக் கூடாது; அது உயர்வைத் தராது. அப்படி பிறரது குலத் தொழிலைச் செய்பவன் தன் குலத்தினின்றும் நீங்கியவனாகிறான்.

वैश्योऽजीवन् स्वधर्मेण शूद्रवृत्त्याऽपि वर्तयेत्।
अनाचरन्नकार्याणि निवर्तेत च शक्तिमान्॥

**வைஷ்யோ அஜீவந் ஸ்வதர்மேண சூத்ரவ்ருத்யா அபிவர்தயேத் |**
**அநாசரந் நகார்யாணி நிவர்தேத ச ஷக்திமாந் ‖ 87**

வைசியன் தன் குலத்தொழிலைக் கொண்டு ஜீவனம் நடத்த இயலாதபோது, சூத்ரிரனுடைய தொழிலால் ஜீவிக்கலாம். ஆனால் தூய்மையற்ற அநாசாரமான தொழில்களில் ஈடுபடக் கூடாது.

अशक्नुवंस् तु शुश्रूषां शूद्रः कर्तुं द्विजन्मनाम्।
पुत्रदाराऽत्ययं प्राप्तो जीवेत् कारुककर्मभिः॥

**அஷக்னுவம்ஷ்து சுஷ்ரூஷாம் சூத்ர: கர்தும் த்விஜந்மநாம் |**
**புத்ரதாரா அத்யயம் ப்ராப்தோ ஜீவேத் காருககர்மபி: ‖ 88**

சூத்திரன், தன் குலத் தொழிலான பிராம்மணர் முதலான த்விஜர்களுக்கு பணிசெய்யும் தொழிலைச் செய்ய இயலாத சூழ்நிலையில் தன் மனைவி மக்கள் பசியால் துன்புறாமல் காக்க கைத்தொழில்கள் எதையேனும் செய்து சம்பாதிக்கலாம்.

यैः कर्मभिः प्रचरितैः शुश्रूष्यन्ते द्विजातयः ।
तानि कारुककर्माणि शिल्पानि विविधानि च ॥

**யை: கா்மபி: ப்ரசரிதை: சுஸ்ரூஷ்யந்தே த்விஜாதய: |**
**தாநி காருககா்மாணி ஷில்பாநி விவிதாநி ச ||** 89

த்விஜர்களுக்குத் தேவையான மரவேலைகள், இரும்பு வேலைகள் முதலானவற்றைச் செய்து பிழைப்பதால் அவர்களுடைய தேவைகளை நிறைவேற்றியதாகவும் ஆகிறது.

वैश्यवृत्तिमनातिष्ठन् ब्राह्मणः स्वे पथि स्थितः ।
अवृत्तिकर्षितः सीदन्निमं धर्मं समाचरेत् ॥

**வைஷ்யவ்ருத்திம நாதிஷ்டந் ப்ராஹ்மண: ஸ்வே பதி ஸ்தித: |**
**அவ்ருத்திகா்ஷித: ஸீதந்நிமம் தா்மம் ஸமாசரேத் ||** 90

பிராம்மணன் ஜீவனத்துக்கு வழியில்லாவிட்டாலும், க்ஷத்ரிய, வைசிய தொழில்களும் வேண்டாமென்று, தன் குல தர்மங்களையே கடைப்பிடித்தபடி இருக்க வேண்டும்.வேறு தொழில்கள் வேண்டாம் என்று நினைத்தால் எத்தகைய தர்மங்களைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று பார்ப்போம்.

सर्वतः प्रतिगृह्णीयाद् ब्राह्मणस् त्वनयं गतः ।
पवित्रं दुष्यतीत्येतद् धर्मतो नोपपद्यते ॥

**ஸா்வத: ப்ரதிக்ருஹ்ணீயாத் ப்ராஹ்மணஸ் த்வநயம்கத: |**
**பவித்ரம் துஷ்யதீத்யேதத் தா்மதோ நோபபத்யதே ||** 91

நெருக்கடி காலத்தில் பிராம்மணன், நிந்திக்கத்தக்க் தொழில்களைச் செய்பவரிடமிருந்தும் தானம் பெறலாம். பவித்ரமான ஒன்று தூஷிக்கத்தக்க பொருளோடு சேர்ந்தாலும் பவித்ரமானதாகவே இருக்கும்.

தங்கத்தோடு செம்பைச் சேர்ப்பதால் தங்கம் கெட்டுப்போகாது. கங்கையில் மற்ற நீர் சேருவதால் கங்கை தூய்மையிழக்காது.

नाऽध्यापनाद् याजनाद् वा गर्हिताद् वा प्रतिग्रहात् ।
दोषो भवति विप्राणां ज्वलनाऽम्बुसमा हि ते ॥

**நா அத்யாபநாத் யாஜநாத் வா கா்ஹிதாத்வா ப்ரதிக்ரஹாத் |**
**தோஷோ பவதி விப்ராணாம் ஜ்வல நாஅம்புஸமா ஹிதே ||** 92

பிராம்மணர்களுக்கு, வேறு வழியில்லாத போது தகாதவனுக்கு சொல்லிக் கொடுப்பது, யாகம் செய்து கொடுப்பது, தகாதவனிடம் தானம் வாங்குவது முதலியவற்றால் தோஷங்கள் ஏற்படா. ஏனெனில் நெருப்பைப் போலவும் நீரைப் போலவும் இயற்கையாகவே பரிசுத்தர்களாக இருப்பதால் இவர்களை தோஷங்கள் ஒட்டா.

जीविताऽत्ययमापन्नो योऽन्नमत्ति यतस् ततः।
आकाशमिव पङ्केन न स पापेन लिप्यते॥

**ஜீவிதா அத்யயமாபந்நோ யோஅந்நமத்தி யதஸ் தத: |**
**ஆகாஷமிவ பங்கேந ந ஸ பாபேந லிப்யதே ||** 93

உயிர் போகும்படியான ஆபத்துக் காலத்தில் கீழ் ஜாதிக் காரனிடம் சாப்பிட்டாலும் தூய்மை கெடமாட்டான். ஆகாசத்தில் எறியப்பட்ட சேறு ஆகாசத்தை அழுக்காக்க இயலுமா? அவ்வாறே பிராம்மணனும் தூய்மை கெட மாட்டான்.

अजीगर्तः सुतं हन्तुमुपाऽसर्पद् बुभुक्षितः।
न चाऽलिप्यत पापेन क्षुत्प्रतीकारमाचरन्॥

**அஜீகர்த: அதம் ஹந்துமுபா அஸர்பத் புபுக்ஷித: |**
**நசாஅலிப்யத பாபேந க்ஷுத்ப்ரதீகாரமாசரந் ||** 94

முன்னர் அஜீகர்த்தர் என்னும் முனிவர் பசியால் வாடிய நிலையில் தம் மகனை விற்று அதற்கு ஈடாக நூறு பசுக்களைப் பெற்றார். இதனால் அம்முனிவருக்கு பாபம் ஏதும் அண்டவில்லை.

श्वमांसमिच्छन्नार्तोऽत्तुं धर्माऽधर्मविचक्षणः।
प्राणानां परिरक्षार्थं वामदेवो न लिप्तवान्॥

**ஷ்வமாம்ஸமிச்சந் நார்தோ அத்தும்தர்மா அதர்மவிசக்ஷண: |**
**ப்ராணாநாம் பரிரக்ஷார்தம் வாமதேவோ ந லிப்தவாந் ||** 95

வாமதேவ முனிவர் தர்மா தர்மங்களைப் பற்றி அறிந்தவர். அவர் பசியால் நொந்தபோது, தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக நாய் மாமிசத்தை உண்ண முனைந்த போதும் அவருக்கு பாபம் ஏதும் அண்டவில்லை.

भरद्वाजः क्षुधाऽऽर्तस् तु सपुत्रो विजने वने।
बह्वीर् गाः प्रतिजग्राह वृधोस् तक्ष्णो महातपाः॥

**பரத்வாஜ: க்ஷுதாஆர்தஸ் து ஸபுத்ரோ விஜநே வநே |**
**பஹ்வீர் கா: ப்ரதிஜக்ராஹ வ்ருதோஸ் தக்ஷ்ணோ மஹாதபா: ||** 96

மகாதபஸ்வியான பரத்வாஜர் ஜனநடமாட்டமற்ற ஆரண்யத்தில் பசியால் வருந்தி வ்ருதன் என்னும் தச்சனிடத்தில் அநேகம் பசுக்களை தானமாகப் பெற்றார்.

**क्षुधाऽऽर्तश् चाऽत्तुमभ्यागाद् विश्वामित्रः श्वजाघनीम्।
चण्डालहस्तादादाय धर्माऽधर्मविचक्षणः॥**

**க்ஷுதா ஆர்தஷ் சாஅத்து மப்யாகாத் விஸ்வாமித்ர: ஷ்வஜாகநீம் |
சண்டாள ஹஸ்தாதாதாய தர்மா அதர்மவிசக்ஷண: || 97**

தர்மாதர்மமறிந்த விஸ்வாமித்ர முனிவர் பசிக் கொடுமையால் நொந்த போது சண்டாளன் கையிலிருந்து நாயின் முழங்கால் மாமிசத்தை வாங்கிக் கொண்டார். அதனால் அவருக்கு எந்தப் பாபமும் அண்டவில்லை.

**प्रतिग्रहाद् याजनाद् वा तथैवाऽध्यापनादपि।
प्रतिग्रहः प्रत्यवरः प्रेत्य विप्रस्य गर्हितः॥**

**ப்ரதிக்ரஹாத் யாஜநாத் வா ததைவா அத்யாபநாதபி |
ப்ரதிக்ரஹ: ப்ரத்யவர: ப்ரேத்ய விப்ரஸ்ய கர்ஹித: || 98**

வேறு வழியில்லாதபோது தகாதவனிடம் தானம் வாங்கலாம், பாடம் சொல்லிக் கொடுக்கலாம், யாகம் செய்து வைக்கலாம் என்று கூறியிருந்தபோதும், வேறு வழியில்லை என்ற ஆபத்தான கட்டத்தில் ம்ட்டுமே தகாதவனிடம் தானம் வாங்கவேண்டும். மற்ற தருணத்தில் இத்தகைய தானம் வாங்கினால் அது நரகத்தைக் கொடுக்கும்.

யாகம் செய்து வைப்பதாலும், பாடம் சொல்லிக் கொடுப்பதாலும் ஜீவனம் நடத்த முடியாத நிலையில் தன்னுயிரையும் குடும்பத்தார் உயிரையும் காப்பாற்றிக் கொள்ள வேறு வழியில்லை என்னும் போது மட்டுமே இத்தகைய தானத்தை வாங்கலாம்.

**याजनाऽध्यापने नित्यं क्रियेते संस्कृताऽऽत्मनाम्।
प्रतिग्रहस् तु क्रियते शूद्रादप्यन्त्यजन्मनः॥**

**யாஜநா அத்யாபநே நித்யம் க்ரியேதே ஸம்ஸ்க்ருதா ஆத்மநாம் |
ப்ரதி க்ரஹஸ்து க்ரியதே சூத்ராதப்யந்த்யஜன்மந: || 99**

வேதம் சொல்லிக் கொடுத்தலையும், யக்ஞம் செய்து வைத்தலையும் உபநயன சம்ஸ்காரம் உள்ளவனுக்குத்தான் செய்ய முடியும். தானம் வாங்குதல் அப்படியல்ல. எவரிடமும் வாங்கலாம். எந்த சம்ஸ்காரமுமில்லாத சூத்திரனிடமிருந்தும் பெறலாம். தானம் பெறுவதால் கிட்டுவது பாபமேயல்லவா?

जपहोमैरपैत्येनो याजनाऽध्यापनैः कृतम्।
प्रतिग्रहनिमित्तं तु त्यागेन तपसैव च ॥

**ஜபஹோமைரபைத்யேநோ யாஜநா அத்யாபநை: க்ருதம் |**
**ப்ரதிக்ரஹநிமித்தம் து த்யாகேந தபஸைவ ச ||** 100

*தகாதவனுக்குச் சொல்லிக் கொடுப்பதாலும், யக்ஞம் செய்து வைப்பதாலும் விளையும் பாபம் உரிய பிராயச்சித்தங்களைச் செய்து கொள்வதால் நீங்கும்.*

*ஆனால் தகாதவனிடம் பெற்ற தானத்தால் விளையும் பாபம் மிகக் கொடிய பாபம். அந்தப் பாபம் நீங்க வேண்டுமானால் தானம் வாங்கிய பொருளை கொடுத்துவிட்டு, மேற்கொண்டு தவமும் செய்ய வேண்டும்.*

शिलोञ्छमप्याददीत विप्रोऽजीवन् यतस् ततः।
प्रतिग्रहाच् छिलः श्रेयांस् ततोऽप्युञ्छः प्रशस्यते॥

**ஷிலோஞ்ச மப்யாததீத விப்ரோ அஜீவந் யதஸ் தத: |**
**ப்ரதிக்ரஹாச்சில: ஷ்ரேயாம்ஷ்ததோ அப்யுஞ்ச: ப்ரஷஸ்யதே ||** 101

*பிராம்மணன் ஜீவனத்துக்கு வழியில்லாதபோது வயல்கரைகளில் சிந்தியிருக்கும் நெல்மணிகளைச் சேகரித்து எடுத்துச் சென்றோ உஞ்சவிருத்தி செய்தோ பிழைக்கலாம். தகாத தானத்தைவிட இவ்விரண்டும் சிரேஷ்டமானவை. அதிலும் உஞ்சவிருத்தியில் பிழைப்பது மிகவும் சிரேஷ்டமானது.*

*(பகவானை எண்ணி பஜனை செய்தபடியே வீதிகளில் போகவேண்டும். இல்லற வாசிகள் இவரை பூஜித்து இவர் கரத்திலுள்ள சொம்பில் அரிசியை இடுவார்கள். அதைக் கொண்டு வந்து சமைத்து, பகவானுக்கு நைவேத்தியம் காட்டி உண்பது உஞ்ச விருத்தி. இதை யாசகமாக எண்ணக்கூடாது. பகவானைத் தவிர வேறு எண்ணமில்லாத உயர்ந்த வாழ்க்கையை வாழ வைக்கும் ஜீவனோபாயம். பிராம்மணனுக்கு இது மிகவும் சிரேஷ்டமான வழி.)*

सीदद्भिः कुप्यमिच्छद्भिर् धनं वा पृथिवीपतिः।
याच्यः स्यात् स्नातकैर् विप्रैरदित्संस् त्यागमर्हति॥

**ஸீதத்பி: குப்யமிச்சத்பிர்தனம் வா ப்ருதிவீபதி: |**
**யாச்ய: ஸ்யாத் ஸ்நாதகைர் விப்ரைரதித்ஸம்ஸ் த்யாகமர்ஹதி ||** 102

*வித்வானான விப்ரன் தான் குடும்ப வாழ்வை ஏற்று நடத்துவதற்காக ஆடை, தானியங்கள், தங்கம், வெள்ளி முதலானவைகளை*

நெறிமுறை சற்று தவறிய அரசனிடமும் வாங்கலாம், ஆனால் அவன் தராமல் கருமித்தனமாக இருந்தால், மீண்டும் அவனிடம் செல்லக் கூடாது.

अकृतं च कृतात् क्षेत्राद् गौरजाऽऽविकमेव च।
हिरण्यं धान्यमन्नं च पूर्वंपूर्वमदोषवत्॥

**அக்ருதம் ச க்ருதாத் க்ஷேத்ராத் கௌரஜாஆவிகமேவ ச |**
**ஹிரண்யம் தான்யமந்நம் ச பூர்வம் பூர்வமதோஷவத் ||** 103

அப்படி அரசனிடம் கேட்கும் போது, உழுது பயிரிட வேண்டிய பூமியைவிட, உழாமல் தானாகவே விளையும் பூமியைக் கேட்க வேண்டும். பசுக்கள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள், தங்கம், தானியம், அன்னம் என்னுமிவைகளில் முன்னிருப்பவை அதை அடுத்தடுத்திருப்பவற்றைவிட தோஷம் குறைந்தவை. எனவே ஒருவனிடம் யாசிக்கும்போது பின்னால் பின்னால் கூறப்பட்டதை யாசிக்காமல், முன் முன் இருப்பதை யாசிக்க வேண்டும்.

அதாவது அன்னத்தை யாசித்துப் பெறுவது மிகுந்த தோஷம் தரும். அதைவிட தானியத்தைக் கேட்டுப் பெறுவதில் தோஷம் குறைவு. அதையும்விட அதையும்விட என்று முன் முன் கூறப்பட்டவற்றைக் கேட்டுப் பெறும்போது தோஷம் குறைந்து கொண்டே போகிறது.

सप्त वित्ताऽऽगमा धर्म्या दायो लाभः क्रयो जयः।
प्रयोगः कर्मयोगश् च सत्प्रतिग्रह एव च॥

**ஸப்த வித்தா ஆகமா தர்ம்யா தாயோ லாப: க்ரயோ ஜய: |**
**ப்ரயோக: கர்மயோகஷ்ச ஸத்ப்ரதிக்ரஹ ஏவ ச ||** 104

தர்மமாக தனம் வரும் வழிகள் ஏழு.

1. பாகப்பிரிவினையால் கிடைப்பது.
2. ஒருவனுடைய வித்யா திறமைக்காக கிடைக்கும் சன்மானம்.
3. வாங்கி விற்பதால் கிடைக்கும் லாபம்.
4. ஒரு நாட்டை வென்று அங்கிருந்து கொண்டு வந்த செல்வம். இது படைவீரர்களுக்கும் பங்கிட்டளிக்கப்படுவதால் அரசனுக்கும் படைவீரர்களுக்கும் வருமானமாகிறது.
5. வாதப்போரில் வென்று கிடைப்பது. அதே போன்று எந்தக் கலைஞர்களுக்கிடையிலும் நடக்கும் போட்டியில் வென்று கிடைப்பது.

*6. விவசாயம், தொழில், பசுக்காத்தல் மூலமாகக் கிடைப்பது.*

*7. தானத்தால் கிடைப்பது.*

विद्या शिल्पं भृतिः सेवा गोरक्ष्यं विपणिः कृषिः।
धृतिर् भैक्ष्यं कुसीदं च दश जीवनहेतवः॥

**வித்யா ஷில்பம் ப்ருதி: ஸேவா கோரக்ஷ்யம் விபணி: க்ருஷி: |**
**த்யுதிர் பைக்ஷ்யம் குஸீதம் ச தஷ ஜீவநஹேதவ: || 105**

*வித்யை, கைத்தொழில், அரசனிடம் படைவீரனாக ஊழியம் புரிதல், பசு காத்தல், வர்த்தகம், விவசாயம், பிறரிடம் சேவகம் புரிதல், வட்டியால் தனம் சேர்த்தல், நாடகம் நடனம் கூத்து முதலான கலைகளால் சம்பாதித்தல், பிட்சை என்னும் பத்தும் ஜீவனத்துக்கான வழிகள்.*

ब्राह्मणः क्षत्रियो वाऽपि वृद्धिं नैव प्रयोजयेत्।
कामं तु खलु धर्मार्थं दद्यात् पापीयसेऽल्पिकाम्॥

**ப்ராஹ்மண: க்ஷத்ரியோ வாஅபி வ்ருத்திம் நைவ ப்ரயோஜயேத் |**
**காமந்து கலு தர்மார்த்தம் தத்யாத் பாபீயஸே அல்பிகாம் || 106**

*பிராம்மணனும் க்ஷத்ரியனும் தனத்தைக் கொண்டு தனத்தைப் பெருக்கும் வட்டித் தொழிலைச் செய்யக்கூடாது. ஆனால் வரும் வட்டியை தர்மகாரியத்துக்கு உபயோகப்படுத்தலாம் என்று ஆசைப்பட்டால் மிகவும் குறைந்த வட்டிக்குக் கொடுக்கலாம்.*

चतुर्थमाददानोऽपि क्षत्रियो भागमापदि।
प्रजा रक्षन् परं शक्त्या किल्बिषात् प्रतिमुच्यते॥

**சதுர்தமாததாநோஅபி க்ஷத்ரியோ பாகமாபதி |**
**ப்ரஜா ரக்ஷந் பரம் சக்த்யா கில்பிஷாத் ப்ரதிமுச்யதே || 107**

*ஆபத்துக் காலத்தில் அரசன் மக்களிடமிருந்து நான்கில் ஒரு பாகம் வரியாகப் பெறலாம். மக்களை முயற்சியோடு நன்கு காப்பாற்றுகின்ற அரசனுக்கு இத்தகைய அதிக வரியால் பாபம் ஏற்படாது.*

स्वधर्मो विजयस् तस्य नाऽऽहवे स्यात् पराङ्मुखः।
शस्त्रेण वैश्यान् रक्षित्वा धर्म्यमाहारयेद् बलिम्॥

**ஸ்வதர்மோ விஜயஸ் தஸ்ய நாஆஹவே ஸ்யாத் பராங்முக: |**
**ஷஸ்த்ரேண வைஷ்யாந் ரக்ஷித்வா தர்ம்யமாஹரயேத் பலிம் || 108**

அரசனுக்கு தன்னுடைய தர்மமே முக்கியம். தான் வெற்றியை அடையும் நோக்கத்திலிருந்து அவன் எப்போதும் பின்வாங்கக் கூடாது. ஆயுதமேந்திய வீரர்களைக் கொண்டு வைசியர்களைக் காக்க வேண்டும். அவர்களிடமிருந்து முறையான வரியை வசூலிக்க வேண்டும்.

धान्येऽष्टमं विंशं शुल्कं विंशं कार्षापणावरम्।
कर्मोपकरणाः शूद्राः कारवः शिल्पिनस् तथा॥

**தாந்யே அஷ்டமம் விஷாம் சுல்கம் விம்ஷம் கார்ஷாபணாத் வரம் |**
**கர்மோபகரணா: சூத்ரா: காரவ: ஷில்பிநஸ்ததா ||** 109

ஆபத்துக் காலத்தில், தானியங்களில் இருபது பங்கில் எட்டு பங்கு வரியாகப் பெறவேண்டும்.

வணிகருக்கு கிடைத்த லாபத்தில் கார்ஷா பணங்களுக்கு இருபதில் ஒரு பாகம் பெற வேண்டும்.

மற்றபடி கைத்தொழில் புரிகின்ற சூத்திரர்களிடமிருந்தும், தச்சன், கருமார் போன்றவர்களிடமிருந்தும் வரி வசூலிக்கக் கூடாது. இவர்களிடமிருந்து வேண்டிய வேலைகளை வாங்கிக் கொள்ளலாம்.

शूद्रस् तु वृत्तिमाकाङ्क्षन् क्षत्रमाराधयेद् यदि।
धनिनं वाऽप्युपाऽऽराध्य वैश्यं शूद्रो जिजीविषेत्॥

**சூத்ராஸ் து வ்ருத்திமாகாங்க்ஷந் க்ஷத்ரமாராதயேத் யதி |**
**தநிநம் வாஅப்யுபா ஆராத்ய வைஷ்யம் சூத்ரோ ஜிஜீவிஷேத் ||** 110

சூத்திரன், பிராம்மணனுக்கு பணிவிடை புரிவதைத் தவிர்த்து வேறு ஜீவனோபாயத்தை விரும்பினால், க்ஷத்ரியனிடத்தில் வேலைக்குச் சேரலாம். அல்லது செல்வந்தனான வைசியனிடத்தில் வேலைக்குச் சேரலாம்.

स्वर्गार्थमुभयार्थं वा विप्रानाराधयेत् तु सः।
जातब्राह्मणशब्दस्य सा ह्यस्य कृतकृत्यता॥

**ஸ்வர்கார்த முபயார்தம் வா விப்ராநாராத யேத்துஸ: |**
**ஜாத ப்ராஹ்மண ஷப்தஸ்ய ஸாஹ்யஸ்ய க்ருதக் ருத்யதா ||** 111

அனைத்து நலன்களையும் நல்லுலகத்தையும் அடைய வேண்டுமானால் சூத்திரன் பிராம்மணனைப் பூஜித்து அவனுக்கு பணிவிடைகள் புரிய வேண்டும். இவன் பிராம்மண தாசன் என்று பெயர் பெறுவதனாலேயே தான் பிறந்த பயனை எய்தியவனாகிறான்.

विप्रसेवैव शूद्रस्य विशिष्टं कर्म कीर्त्यते।
यदतोऽन्यद् धि कुरुते तद् भवत्यस्य निष्फलम्॥

**விப்ரஸேவைவ சூத்ரஸ்ய விஷிஸ்டம் கர்ம கீர்த்யதே |**
**யததோ அந்யத் தி குருதே தத் பவத்யஸ்ய நிஷ்பலம் ||** 112

*பிராம்மணனுக்குச் சேவை புரிவதே சூத்திரனுடைய சுயதர்மமாகும். அதுவே மேலான தர்மம் என்று சொல்லப்படுகிறது. வேறு எதைச் செய்வதாலும் அவனுக்கு பலன் கிடையாது.*

प्रकल्प्या तस्य तैर् वृत्तिः स्वकुटुम्बाद् यथार्हतः।
शक्तिं चावेक्ष्य दाक्ष्यं च भृत्यानां च परिग्रहम्॥

**ப்ரகல்ப்யா தஸ்ய தைர் வ்ருத்தி: ஸ்வகுடும்பாத் யதா அர்ஹத: |**
**ஷக்திம் சாஅவேக்ஷ்ய தாக்ஷ்யம் ச ப்ருத்யாநாம் ச பரிக்ரஹம் ||** 113

*பிராம்மணன், தனக்கு சேவை புரியும் சூத்திரனுடைய வேலைகள், சாமர்த்தியமாக அவன் செய்யும் காரியங்கள், அவன் போஷிக்க வேண்டிய குடும்பம் - இவைகளையெல்லாம் யோசித்து, அவனுக்குத் தேவையானதை வழங்க வேண்டும்.*

उच्छिष्टमन्नं दातव्यं जीर्णानि वसनानि च।
पुलाकाश् चैव धान्यानां जीर्णाश् चैव परिच्छदाः॥

**உச்சிஷ்டமந்நம் தாதவ்யம் ஜீர்ணாநி வஸநாநிச |**
**புலாகாஷ் சைவ தாந்யாநாம் ஜீர்ணாஷ்சைவ பரிச்சதா: ||** 114

*சாப்பிட்ட பிறகு எஞ்சிய அன்னத்தை அவனுக்குக் கொடுக்க வேண்டும். பழைய துணிகளையும், பாத்திரங்களையும், தானியங்களையும் கொடுக்க வேண்டும்.*

न शूद्रे पातकं किञ्चिन् न च संस्कारमर्हति।
नास्याधिकारो धर्मेऽस्ति न धर्मात् प्रतिषेधनम्॥

**நசூத்ரே பாதகம் கிஞ்சிந் ந ச ஸம்ஸ்காரமர்ஹதி |**
**நாஅஸ்யா அதிகாரோ தர்மே அஸ்தி ந தர்மாத் ப்ரதிஷேதநம் ||** 115

*எந்த தர்ம காரியமும் செய்யாமலிருந்தாலும் சூத்திரனுக்கு சிறிதும் பாபம் நேராது. தனியாக வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. இவனது சேவையே இவனுக்கு நல்லுலகங்களைப் பெற்றுத் தரும். மற்றவர்கள் அப்படியல்ல, அவரவர்க்கு என்று கூறப் பட்டுள்ள தர்ம காரியங்களையும் தானம் செய்தல் முதலானவைகளையும் செய்தே ஆகவேண்டும்.*

*மேலும் அவனுக்கு வேறு எந்தக் கிரியைகளும் கிடையாது. பிராம்மண சேவையால் அவன் சுயதர்மத்தைச் செய்தவனாகிறான்.*

धर्मेप्सवस् तु धर्मज्ञाः सतां वृत्तमनुष्ठिताः ।
मन्त्रवर्जं न दुष्यन्ति प्रशंसां प्राप्नुवन्ति च ॥

**தர்மேப்ஸவஸ்து தர்மக்ஞா: ஸதாம் வ்ருத்தமனுஷ்டிதா: |**
**மந்த்ரவர்ஜம் ந துஷ்யந்தி ப்ரஷம்ஸாம் ப்ராப்னுவந்தி ச || 116**

*தாங்களும் சத்கர்மாக்களைச் செய்ய வேண்டும் என்று விரும்பும் சூத்திரர்கள், தங்கள் சுய தர்மத்தை நன்கு அறிந்தவர்களாக அதை விடாமல் செய்தபடியே, மந்திரங்களில்லாமல் செய்யக்கூடிய கர்மானுஷ்டானங்களைச் செய்யலாம்.*

*இப்படிச் செய்வதால் பிறர் நிந்தனைக்கு ஆளாகாமல் மேன்மைகளை அடையலாம்.*

यथायथा हि सद्वृत्तमातिष्ठत्यनसूयकः ।
तथातथेमं चाऽमुं च लोकं प्राप्नोत्यनिन्दितः ॥

**யதா யதாஹி ஸத்வ்ருத்தமாதிஷ்டத்யநசூயக: |**
**ததாததேயம் சாஅமும் ச லோகம் ப்ராப்நோத் யநிந்தித: || 117**

*சூத்திரன் அசூயையில்லாமல் நல்லபடி தன் காரியங்களைச் செய்து வரவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு இவன் மூவர்ணத்தாரிடமும் அசூயையின்றி காரியமாற்றுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு உலகத்தாரால் நிந்திக்கப்படாதவனாக வாழ்ந்து, மறுமையில் நல்லுலகத்தையும் அடைவான்.*

शक्तेनाऽपि हि शूद्रेण न कार्यो धनसञ्चयः ।
शूद्रो हि धनमासाद्य ब्राह्मणानेव बाधते ॥

**ஷக்தேநாபி ஹி சூத்ரேண நகார்யோ தநஸஞ்சய: |**
**சூத்ரோஹி தநமாஸாத்ய ப்ராஹ்மணாநேவ பாததே || 118**

*சூத்திரன் மிகுந்த தனத்தை அடைந்தாலும், தன் குடும்பத்தைக் காப்பாற்றும் அளவுக்கு மேல் சேர்த்து வைக்கக் கூடாது. அப்படி அவன் மிகுந்த தனவானாக இருந்தானேயாகில், தர்மத்தை அறியாதவனாக பிராம்மணர்களுக்குத் தொல்லைகளைத் தருவான்.*

एते चतुर्णां वर्णानामापद्धर्माः प्रकीर्तिताः ।
यान् सम्यगनुतिष्ठन्तो व्रजन्ति परमां गतिम् ॥

**ஏதே சதுர்ணாம் வர்ணாநாமாபத்தர்மா: ப்ரகீர்த்திதா: |**
**யாந் ஸம்யகனுதிஷ்டந்தோ வ்ரஜந்தி பரமாம் கதிம் || 119**

*நான்கு வர்ணத்தவரும் ஆபத்துக் காலத்தில் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்கள் கூறப்பட்டன. இவற்றை நன்கு கடைப்பிடிப்பவர்கள் மேலான நிலையை அடைவார்கள்.*

एष धर्मविधिः कृत्स्नश् चातुर्वर्ण्यस्य कीर्तितः।
अतः परं प्रवक्ष्यामि प्रायश्चित्तविधिं शुभम्॥

**ஏஷ தர்மவிதி: க்ருத்ஸ்நஷ் சாதுர்வர்ண்யஸ்ய கீர்தித: |**
**அத: பரம் ப்ரவக்ஷ்யாமி ப்ராயஷ்சித்த விதிம் ஷுபம் ||** **120**

*இதுவரை நான்கு வர்ணத்தாரின் தர்மவிதிகளும் முழுமையாகக் கூறப்பட்டன.*

*இனி சுபத்தை விளைவிக்கும் பிராயச்சித்த விதிகளைப் பற்றிக் கூறுகிறேன்.*

(பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 11

सान्तानिकं यक्ष्यमाणमध्वगं सर्ववेदसम्।
गुर्वर्थं पितृमात्रर्थं स्वाध्यायार्थ्युपतापिनः॥

**ஸாந்தாநிகம் யக்ஷமாண மத்வகம் ஸர்வ வேதஸம் |**
**குர்வர்த்தம் பித்ருமாத்ரர்தம் ஸ்வாத்யாயார்த்யுபதாபிந: ||** 1

नवैतान् स्नातकान् विद्याद् ब्राह्मणान् धर्मभिक्षुकान्।
निःस्वेभ्यो देयमेतेभ्यो दानं विद्याविशेषतः॥

**நவைதாந் ஸ்நாதகாந் வித்யாத் ப்ராஹ்மணாந் தர்மபிக்ஷுகாந் |**
**நிஸ்ஸ்வேப்யோ தேயமேதேப்யோ தாநம் வித்யாவிசேஷத: ||** 2

திருமணம் புரிந்து கொள்ள விழைபவன், யாகங்கள் செய்ய விரும்புபவன், புண்ணியாத்திரை செல்ல விரும்புபவன், தன்னிடமுள்ள செல்வமனைத்தையும் யாகம் புரிய செலவிட்டவன், குருதட்சிணை கொடுக்க விரும்பி தனத்தை வேண்டுபவன், பெற்றோரை போஷிப்பதற்காக தனத்தை வேண்டுபவன், தான் வேதமோதும் காலத்தில் தன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டி தனத்தை வேண்டுபவன், நோயாளி - இவர்கள் யாசித்துப் பெறும் தகுதியுடையவர்கள். இவர்களுக்கு தனத்தையும் தங்கத்தையும் வழங்க வேண்டும்.

வேதத்தைக் கற்க விரும்புபவருக்கு கற்றுத்தர வேண்டும். இந்த வித்யா தானம் விசேஷமானது.

மொத்தத்தில் இந்த ஒன்பது வகையானவர்களும் தானம் ஏற்கத் தகுதியானவர்கள். அவர்கள் வேண்டுவதைக் கொடுப்பதே மிகச் சிறந்த தர்மமாகும்.

एतेभ्यो हि द्विजाऽग्र्येभ्यो देयमन्नं सदक्षिणम्।
इतरेभ्यो बहिर्वेदि कृताऽन्नं देयमुच्यते॥

**ஏதேப்யோ ஹித்விஜாக்ரேப்யோ தேயமந்நம் ஸ தக்ஷிணம் |**
**இதரேப்யோ பஹிர்வேதிக்ருதாந்நம் தேயமுச்யதே ||** 3

இந்த ஒன்பது வகையான திவிஜர்களும் யாசகம் கேட்டு வந்தபோது, யக்ஞம் செய்யும் இடத்திலேயே அவர்களுக்கு அன்னமிட்டு தட்சிணைகளை வழங்க வேண்டும். மற்றவர்களுக்கு யக்ஞம் செய்யும் இடத்துக்கு வெளியில்தான் அன்னமிட வேண்டும்.

सर्वरत्नानि राजा तु यथाऽर्हं प्रतिपादयेत्।
ब्राह्मणान् वेदविदुषो यज्ञार्थं चैव दक्षिणाम्॥

**ஸர்வரத்நாநி ராஜாது யதாஅர்ஹம் ப்ரதிபாதயேத் |**
**ப்ராஹ்மணாந் வேதவிதுஷோ யாக்ஞார்தம் சைவ தக்ஷிணாம் ||** 4

*அரசன் தனக்கு யாகம் செய்துவைக்கும் வேதவிற்பன்னர்களான பிராம்மணர்களுக்கு சகலவித ரத்தினங்களையும், உயர்ந்த வஸ்துக்களையும் யாகதட்சிணைகளாக வழங்கவேண்டும்.*

कृतदारोऽपरान् दारान् भिक्षित्वा योऽधिगच्छति।
रतिमात्रं फलं तस्य द्रव्यदातुस् तु सन्ततिः॥

**க்ருததாரோ அபராந் தாராந் பிக்ஷித்வா யோஅதிகச்சதி |**
**ரதிமாத்ரம் பலம் தஸ்ய த்ரவ்யதாதுஸ் து ஸந்ததி: ||** 5

*ஏற்கெனவே மணம் புரிந்து கொண்டவன், மேலும் தாரங்களை மணக்கவிரும்பியவனாக யாசகம் கேட்டுவந்தால் அவனுக்கு தனமோ தங்கமோ கொடுக்கக் கூடாது. புத்ரபலனை வேண்டி மணம் புரிவதே தர்மமானது. அத்தகைய மணம் ஒருமுறை நடந்து முடிந்த பிறகு, மீண்டும் ஒருவன் மணம் புரிய விரும்புவது அவனுடைய இச்சையின் பொருட்டே என்பதால் இத்தகைய மறுமணங்கள் தர்மமானவை யல்ல.*

*இத்தகைய மணத்துக்காக பொருளுதவி செய்தவனுக்கு என்ன பலன் கிட்டும்? முதல் மணத்துக்கு பொருளதவி செய்தவனுக்கு, ஒருவனுக்கு தர்மமான சந்ததி கிடைக்கச் செய்த புண்ணிய பலன் கிட்டும். அடுத்த மணத்துக்கு பொருளுதவி செய்தவனுக்கு, தேவையில்லாத சந்ததியைப் பெறுவதற்கு உதவியவன் என்ற பெயர் மட்டுமே கிட்டும். புண்ணியம் கிட்டாது.*

धनानि तु यथाशक्ति विप्रेषु प्रतिपादयेत्।
वेदवित्सु विविक्तेषु प्रेत्य स्वर्गं समश्नुते॥

**தநாநி து யதாஷக்தி விப்ரேஷு ப்ரதிபாதயேத் |**
**வேதவித்சு விவிக்தேசு ப்ரேத்ய ஸ்வர்கம் ஸமஷ்னுதே ||** 6

*வேதங்களை நன்கு ஓதி உணர்ந்தவர்களாகவும், மனைவி மக்களோடு கிருஹஸ்தர்களாகவும் இருக்கின்ற பிராம்மணர்களுக்கு தானமளிப்பவன் சொர்க்கலோகத்தை அடைவான்.*

यस्य त्रैवार्षिकं भक्तं पर्याप्तं भृत्यवृत्तये।
अधिकं वाऽपि विद्येत स सोमं पातुमर्हति॥

**யஸ்ய த்ரைவார்ஷிகம் பக்தம் பர்யாப்தம் ப்ருத்ய வ்ருத்தயே |**
**அதிகம் வாஅபி வித்யேத ஸஸோமம் பாதுமர்ஹதி ||** 7

தன்னுடைய குடும்ப போஷணத்துக்காக மூன்று வருடத்துக்குத் தேவையான தனதானியங்களையோ, அதற்கும் அதிகமாகவோ சேர்த்து வைத்த பிறகுதான் ஒருவன் ஸோமயாகம் செய்வதற்குரிய அருகதையைப் பெறுகிறான்.

अतः स्वल्पीयसि द्रव्ये यः सोमं पिबति द्विजः।
स पीतसोमपूर्वोऽपि न तस्याऽऽप्नोति तत् फलम्॥

**அத: ஸ்வல்பீயஸி த்ரவ்யே ய: ஸோமம் பிபதித்விஜ: |**
**ஸ பீதஸோம பூர்வோ அபி ந தஸ்யா ஆப்நோதிதத் பலம் || 8**

அவ்வாறன்றி குடும்ப போஷணத்துக்காக சிறிது தனமே இருக்கும் போது, ஒருவன் சோமயாகம் செய்தால் அதன் பலனை அடைய முடியாது.

शक्तः परजने दाता स्वजने दुःखजीविनि।
मध्वापातो विषाऽऽस्वादः स धर्मप्रतिरूपकः॥

**ஷக்த: பரஜநே தாதா ஸ்வஜநே துக்கஜீவிநி |**
**மத்வாபாதோ விஷா ஆஸ்வாத: ஸ தர்மப்ரதி ரூபக: || 9**

தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு துக்கம் கொடுப்பவனாகி அவர்களை நலியச் செய்தபடி வெளியாருக்கு தானம் கொடுத்து வள்ளல் என்ற பெயரை சம்பாதிக்கின்ற தனவந்தனுக்கு, அப்போதைக்கு அந்தப் புகழ் தேனைப் போல இனிக்கும். ஆனால் அவன் இறந்த பிறகு விஷத்துக்கு நிகரான நரகத்தையே கொடுக்கும்.

भृत्यानामुपरोधेन यत् करोत्यौर्ध्वदेहिकम्।
तद् भवत्यसुखोदर्कं जीवतश् च मृतस्य च॥

**ப்ருத்யாநாமுபரோதேந யத்கரோத் யௌத்ர்வ தேஹிகம் |**
**தத் பவத்யசுகோதர்கம் ஜீவதஷ் ச ம்ருதஸ்ய ச || 10**

தன்னைச் சேர்ந்தவர்களை நலியச்செய்தபடி வெளியாருக்கு தானம் கொடுப்பவன், தான் இறந்தபிறகு நல்லுலகத்தை அடைய வேண்டும் என்ற நோக்கத்துக்காக தானம் கொடுப்பவனாக இருந்தாலும் அந்த நோக்கம் நிறைவேறாது. இருக்கும் போதும் இறந்தபிறகும் அவனுக்கு எந்த சுகமும் இல்லை.

यज्ञश् चेत् प्रतिरुद्धः स्यादेकेनाऽङ्गेन यज्वनः।
ब्राह्मणस्य विशेषेण धार्मिके सति राजनि॥

**யக்ஞஷ் சேத் ப்ரதிருத்த: ஸ்யாதேகேநா அங்கேந யஜ்வந: |**
**ப்ராஹ்மணஸ்ய விசேஷேண தார்மிகே ஸதி ராஜநி || 11**

यो वैश्यः स्याद् बहुपशुर् हीनक्रतुरसोमपः।
कुटुम्बात् तस्य तद् द्रव्यमाहरेद् यज्ञसिद्धये॥

**யோ வைஷ்ய: ஸ்யாத் பஹுபஷுர் ஹீநக்ரதுரஸோமப: ||**
**குடும்பாத் தஸ்ய தத் த்ரவ்யமாஹரேத் யக்ஞஸித்தயே || 12**

பிராம்மணன் யக்ஞம் செய்யும் போது, மற்ற அங்கங்கள் எல்லாம் இருந்து, ஒரு அங்கம் நிறைவேறாமல் இருக்குமானால், அதற்கான தனத்தை அடைய இவ்வாறு செய்யலாம்.

மிகுந்த பசுக்களும் செல்வமும் நிறைந்த வைசியன் சோமயக்ஞம் செய்யாதவனாக இருந்தால், அப்படிப்பட்டவனிடமிருந்து தனத்தை, அவனாகக் கொடுக்காவிட்டாலும் அபகரித்துக் கொண்டு வந்து யக்ஞத்தை பூர்த்தி செய்யலாம்.

ஒரு அரசன் தர்மமாக ஆளும் ராஜ்ஜியத்தில் இப்படிச் செய்வதும் தர்மமே யாகும். தர்மம் அறிந்த அரசன் இதைத் தர்மம் என்றறிந்து ஆதரவு கொடுப்பான்.

आहरेत् त्रीणि वा द्वे वा कामं शूद्रस्य वेश्मनः।
न हि शूद्रस्य यज्ञेषु कश्चिदस्ति परिग्रहः॥

**ஆஹரேத் த்ரீணி வா த்வே வா காமம் சூத்ரஸ்ய வேஷ்மந: |**
**நஹி சூத்ரஸ்ய யக்ஞேஷு கஷ்சிதஸ்தி பரிக்ரஹ: || 13**

யக்ஞத்துக்கு இரண்டு மூன்று அங்கங்கள் குறைவுபடுமானால், வைசியனிடமிருந்து கொண்டு வந்தது போதாது போனால், சூத்திரனிட மிருந்தும் கொண்டுவரலாம். சூத்திரன் யக்ஞம் எதுவும் செய்பவ னல்லவே!

யக்ஞம் செய்பவரிடமிருந்தோ, செய்யக் கூடியவரிடமிருந்தோ கொண்டு வரக்கூடாது. அவர்களுக்குத் தேவைப்படும் ஒன்றை அவர்களிடமிருந்து பெறுவது தகாது. அதனால் யக்ஞம் செய்யாத வனான வைசியனிடமிருந்தும் சூத்திரனிடமிருந்தும் கொண்டு வரலாம்.

योऽनाहिताग्निः शतगुरयज्वा च सहस्रगुः।
तयोरपि कुटुम्बाभ्यामाहरेदविचारयन्॥

**யோ அநாஹிதாக்நி: ஷதகுரயஜ்வா ச ஸஹஸ்ரகு: |**
**தயோரபி குடும்பாப்யாமாஹ ரேதவிசாரயந் || 14**

ஆஹிதாக்னியாக இல்லாமல் நூறு பசுக்களுக்கு சொந்தக் காரனாக இருப்பன், ஆஹிதாக்நியாக இருந்து ஆயிரம் பசுக் களுக்கு சொந்தக்காரனாக இருப்பவன் - இத்தகைய பிராம்மண

க்ஷத்ரியரிடமிருந்தும் இரண்டு மூன்று யக்ஞாங்கங்களை விசாரணையேயின்றிக் கொண்டு வரலாம்.

आदाननित्याच् चाऽऽदातुराहरेदप्रयच्छतः।
तथा यशोऽस्य प्रथते धर्मश् चैव प्रवर्धते॥

**ஆதாந நித்யாச்சா ஆதாதுராஹரேத ப்ரயச்சத: |**
**ததா யஷோ அஸ்ய ப்ரததே தர்மஷ்சைவ ப்ரவர்ததே || 15**

எப்போதும் தானம் வாங்குவதிலேயே ஆசை கொண்டவனாகவும், கொடுப்பதில் எப்போதும் ஆசையற்றவனாகவும் இருக்கின்ற பிராம்மணனிடம், யக்ஞத்துக்குத தேவையானதைக் கேட்டும் கொடுக்கவில்லையெனில், தானாகக் கொடாததை அபகரித்துப் பெறலாம். இதனால் அபகரித்தவனுக்கு எந்தக் குறைவும் ஏற்படாது. யக்ஞத்துக்காக செய்ததால் புகழே கிட்டும். இப்படிச் செய்வது தர்மமேயாகும்.

तथैव सप्तमे भक्ते भक्तानि षडनश्नता।
अश्वस्तनविधानेन हर्तव्य हीनकर्मणः॥

**ததைவ ஸப்தமே பக்தே பக்தாநி ஷடநஷ்நதா |**
**அஷ்வஸ்த நவிதாநேந ஹர்தவ்யம் ஹீநகர்மண: || 16**

உண்ண உணவுக்குக்கூட வழியற்ற தரித்ர நிலையில், ஒருவன் திருடியும் சாப்பிடலாம். அப்படிச் சாப்பிடுவது திருட்டுத்தனமும் அல்ல, தர்மவிரோதமும் அல்ல. ஆனால் அதற்கும் ஒரு விதிமுறை உண்டு.

தொடர்ந்து ஏழாவது வேளையும் பட்டினி கிடக்க நேர்ந்தால் (தொடர்ந்து மூன்று நாட்கள். ஒரு நாளைக்கு இரு வேளை உணவு என்பதே சாஸ்திரம் கூறிய முறை) அப்போது, அதாவது நான்காவது நாள் காலை நற்கர்மாக்கள் எதுவும் செய்யாதவனுடைய வீட்டிலிருந்து தனத்தை அவனுக்குத் தெரியாமலே எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அன்று ஒரு நாள் உணவுக்கு மட்டும் தேவையான அளவே தனத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

खलात् क्षेत्रादगाराद् वा यतो वाऽप्युपलभ्यते।
आख्यातव्यं तु तत् तस्मै पृच्छते यदि पृच्छति॥

**கலாத் க்ஷேத்ரா தகாராத் வா யதோ வாஅப்யுபலப்யதே |**
**ஆக்யாதவ்யம் து தத் தஸ்மை ப்ருச்சதே யதி ப்ருச்சதி || 17**

வயல், வீடு, நெற்களஞ்சியம் மற்றும் எந்த இடத்திலிருந்தும், நற்கர்மாக்கள் புரியாதவனுடைய தானியங்களை எடுத்துக்

கொள்ளலாம். உரிமையாளன் பார்த்து 'ஏன் திருடினாய்?' என்று கேட்டால் தான் மூன்று நாட்களாகப் பட்டினி கிடப்பதைத் தெரிவிக்க வேண்டும்.

ब्राह्मणस्वं न हर्तव्यं क्षत्रियेण कदाचन।
दस्युनिष्क्रिययोस् तु स्वमजीवन् हर्तुमर्हति॥

**ப்ராஹ்மணஸ்வம் ந ஹர்தவ்யம் க்ஷத்ரியேண கதாசந |**
**தஸ்யுநிஷ்க்ரிய யோஸ் து ஸ்வமஜீவந் ஹர்துமர்ஹதி || 18**

க்ஷத்ரியனுக்கு இந்த நிலை ஏற்படுமாயின், பிராம்மணன் சொத்தை களவாடக் கூடாது. நற்கிரியைகள் செய்யாத க்ஷத்ரியனிடத்திலும் வைசியனிடத்திலும் களவாடலாம்.

योऽसाधुभ्योऽर्थमादाय साधुभ्यः सम्प्रयच्छति।
स कृत्वा प्लवमात्मानं सन्तारयति तावुभौ॥

**யோ அஸாதுப்யோ அர்தமாதாய ஸாதுப்ய: ஸம்ப்ரயச்சதி |**
**ஸக்ருத்வா ப்லவமாத்மாநம் ஸந்தாரயதி தாவுபௌ || 19**

எவன் நற்கர்மாக்கள் செய்யாதவனிடமிருந்து தனத்தை அபகரித்து யக்ஞங்கள் நடத்துவதற்கு கொண்டு போய் கொடுக்கிறானோ, அவன் தன்னையும், எவனிடத்தில் அபகரித்தானோ அவனையும் கடைத் தேற்றியவனாகிறான்.

यद् धनं यज्ञशीलानां देवस्वं तद् विदुर् बुधाः।
अयज्वनां तु यद् वित्तमासुरस्वं तदुच्यते॥

**யத் தனம் யக்ஞஷீலாநாம் தேவஸ்வம் தத் விதுர் புதா: |**
**அயஜ்வநாம் து யத் வித்தமாஸுரஸ்வம் ததுச்யதே || 20**

யக்ஞங்கள் செய்கின்ற தன்மை கொண்டவனிடம் இருக்கின்ற தனம் தெய்வங்களுடையது என்று சான்றோர் கூறுவர்.

யக்ஞங்கள் செய்யாதவனிடமிருக்கின்ற தனம் அரக்கர்களுடையது என்றும் சான்றோர் கூறுவர்.

எனவே யக்ஞங்கள் செய்யாதவனிடமிருந்து அபகரித்து, யக்ஞங்கள் செய்வதற்குக் கொடுப்பது தர்மகாரியமே அல்லவா...

न तस्मिन् धारयेद् दण्डं धार्मिकः पृथिवीपतिः।
क्षत्रियस्य हि बालिश्याद् ब्राह्मणः सीदति क्षुधा॥

**ந தஸ்மிந் தாரயேத் தண்டம் தார்மிக: ப்ருதிவீபதி: |**
**க்ஷத்ரியஸ்ய ஹி பாலிஷ்யாத் ப்ராஹ்மண: ஸீததி க்ஷுதா || 21**

*இவ்வாறாக தனத்தை அபகரித்தவனை, அரசன் தண்டிக்கக் கூடாது.*

*க்ஷத்ரியனான அரசன் தர்மமறியாத சிறு பிள்ளைத் தனத்தோடு நடந்து கொள்ளக்கூடாது. அவ்வாறு நடந்து கொள்வதால் பிராம்மணர்கள் பசியால் வாடும் நிலை ஏற்படும்.*

**तस्य भृत्यजनं ज्ञात्वा स्वकुटुम्बान् महीपतिः।
श्रुतशीले च विज्ञाय वृत्तिं धर्म्यां प्रकल्पयेत्॥**

**தஸ்ய ப்ருத்யஜநம் ஞாத்வா ஸ்வகுடும்பாந் மஹீபதி: |
ஸ்ருதஷீலே ச விக்ஞாய வ்ருத்திம் தர்ம்யாம் ப்ரகல்பயேத் || 22**

*அரசன், தர்மவான்களாக யக்ஞங்கள் புரிகின்ற தக்க தன வசதி அற்றவர்களாக இருக்கின்ற பிராம்மணர்களைக் கண்டுபிடித்து அவர்களது வித்யைகளையும் ஆசாரங்களையும் அறிந்து கொண்டு, தக்கபடி அவர்களுடைய தேவைகளை பூர்த்தி செய்ய வேண்டும்.*

**कल्पयित्वाऽस्य वृत्तिं च रक्षेदेनं समन्ततः।
राजा हि धर्मषड्भागं तस्मात् प्राप्नोति रक्षितात्॥**

**கல்பயித்வா அஸ்யவ்ருத்திம் ச ரக்ஷேதேநம் ஸமந்தத: |
ராஜா ஹி தர்மஷட் பாகம் தஸ்மாத் ப்ராப்நோதி ரக்ஷிதாத் || 23**

*அத்தகை பிராம்மணனது ஜீவனத்துக்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து, அவர்களுக்கு எவராலும் துன்பம் ஏற்படாதவாறு எப்போதும் காப்பாற்றுகின்ற அரசனுக்கு, அப்பிராம்மணன் செய்யும் யக்ஞங்களாலும் தவங்களாலும் அவனுக்குக் கிடைக்கும் புண்ணியத்தில் ஆறில் ஒரு பங்கு புண்ணியம் வந்தடையும்.*

**न यज्ञार्थं धनं शूद्राद् विप्रो भिक्षेत कर्हिचित्।
यजमानो हि भिक्षित्वा चण्डालः प्रेत्य जायते॥**

**ந யக்ஞார்தம் தநம் சூத்ராத் விப்ரோ பிக்ஷேத கர்ஹிசித் |
யஜமாநோஹி பிக்ஷித்வா சண்டாள: ப்ரேத்ய ஜாயதே || 24**

*எத்தருணத்திலும் பிராம்மணன் யக்ஞம் செய்வதற்கான தனத்தை சூத்திரனிடம் யாசிக்கக்கூடாது. அப்படி யாசித்து யக்ஞம் செய்தவன் அடுத்த பிறவியில் சண்டாளனாகப் பிறப்பான். ஆனால் யாசிக்காமல் வந்த பொருளை யக்ஞத்துக்கு உபயோகப்படுத்தலாம்*

**यज्ञार्थमर्थं भिक्षित्वा यो न सर्वं प्रयच्छति।
स याति भासतां विप्रः काकतां वा शतं समाः॥**

**யக்ஞார்தம் பிக்ஷித்வா யோ நஸர்வம் ப்ரயச்சதி |
ஸ யாதி பாஸதாம் விப்ர: காகதாம் வா ஷதம்ஸமா: || 25**

யக்ஞத்துக்காக என்று கூறி பொருளை சேகரித்து விட்டு, மொத்தத்தையும் யக்ஞத்துக்குப் பயன்படுத்தாதவன் இறந்தபிறகு நூறு முறை கழுகாகவோ காகமாகவோ பிறப்பெடுப்பான்.

देवस्वं ब्राह्मणस्वं वा लोभेनोपहिनस्ति यः।
स पापाऽऽत्मा परे लोके गृध्रोच्छिष्टेन जीवति॥

**தேவஸ்வம் ப்ராஹ்மணஸ்வம் வா லோபேநோபஹிநஸ்தி ய: |**
**ஸ பாபாஆத்மா பரே லோகே க்ருத்ரோச்சிஷ்டேந ஜீவதி ||** 26

தேவாலயத்தினுடைய சொத்தையும், பிராம்மணனுடைய சொத்தையும் பேராசையால் அபகரிக்கும் பாவி இறந்தபிறகு நரகத்தில் கழுகுகள் தின்று மிகுந்ததைக் தின்பவனாவான்.

इष्टिं वैश्वानरीं नित्यं निर्वपेदब्दपर्यये।
क्लृप्तानां पशुसोमानां निष्कृत्यर्थमसम्भवे॥

**இஷ்டிம் வைஷ்வாநரீம் நித்யம் நிர்வபேதப் தபர்யயே |**
**க்ளுப்தாநாம் பஷூஸோமாநாம் நிஷ்க்ரு த்யர்தமஸம்பவே ||** 27

ஒரு வருடம் முழுக்க சோமயக்ஞம் செய்யாவிடில், அடுத்த வருடத்தில் அந்த தோஷம் நீங்குவதற்காக வைஷ்வாநரயக்ஞம் செய்யவேண்டும். அதற்குரிய தனம் இல்லாவிடில் தகாதவனிட மிருந்து தனம் கிடைத்தாலும் அதைப் பெற்று யக்ஞம் நடத்தலாம்.

आपत्कल्पेन यो धर्मं कुरुतेऽनापदि द्विजः।
स नाऽऽप्नोति फलं तस्य परत्रेति विचारितम्॥

**ஆபத் கல்பேந யோ தர்மம் குருதே அநாபதி த்விஜ: |**
**ஸ நா ஆப்நோதி பலம் தஸ்ய பரத்ரேதி விசாரிதம் ||** 28

ஆபத்து சமயத்தில் இன்னின்ன முறைகளில் யக்ஞம் செய்யலாம் என்று கூறியுள்ளபடி த்விஜர்கள் செய்ய வேண்டும். இதே முறையை ஆபத்து இல்லாத காலத்தில் செய்யக்கூடாது. அப்படிச் செய்பவன் நல்லுலகத்தை அடைய மாட்டான்.

विश्वैश् च देवैः साध्यैश् च ब्राह्मणैश् च महर्षिभिः।
आपत्सु मरणाद् भीतैर् विधेः प्रतिनिधिः कृतः॥

**விஷ்வைஷ் ச தேவை: ஸாத்யைஷ் ச ப்ராஹ்மணைஷ்ச மஹர்ஷிபி: |**
**ஆபத்சு மரணாத் பீதைர் விதே: ப்ரதிநிதி: க்ருத: ||** 29

இவ்வாறாக யக்ஞங்கள் தினம் தினம் செய்பவை, வருடந்தோறும் செய்பவை, வாழ்நாளில் ஒருமுறையாவது செய்ய வேண்டியவை என்று இருக்கின்றன.

அதுபோக ஆபத்துக் காலத்தில் தன்னைக் காத்துக் கொள்வதற்காக எதிரியை அடக்கக்கூடிய அழிக்கக் கூடிய ஹோமங்களையும் செய்யலாம். இதையே இந்த ஸ்லோகத்தின் மூலமாக வெளிப்படுத்துகிறார்.

விஸ்வேதேவர்களும், தேவர்களும், சாத்யர்களும், பிராம்மணர்களும், மகரிஷிகளும், ஒருவனுக்கு மரணபயம் வந்த தருணத்திலும் ஆபத்துக் காலத்திலும் இத்தகைய ஹோமங்களைச் செய்யலாம் என்று கூறுகிறார்கள்.

प्रभुः प्रथमकल्पस्य योऽनुकल्पेन वर्तते।
न साम्परायिकं तस्य दुर्मतेर् विद्यते फलम्॥

**ப்ரபு: ப்ரதமகல்பஸ்யயோ அனுகல்பேந வர்ததே |**
**ந ஸாம்பராயிகம் தஸ்ய துர்மதோ் வித்யதே பலம் || 30**

ஆனால் எப்போதும் செய்யச் சொல்லியிருக்கின்ற பிரதானமான யக்ஞங்களை பிரதானமாகச் செய்யவேண்டும். அதை விட்டுவிட்டு ஆபத்தில் செய்யச் சொல்லியிருக்கின்ற யக்ஞங்களை தன்னுடைய லாபத்துக்காக அடிக்கடி செய்யும் தீய புத்திக்காரன் அதன் பலனை அடையமாட்டான்.

न ब्राह्मणो वेदयेत किञ्चिद् राजनि धर्मवित्।
स्ववीर्येणैव ताञ् छिष्यान् मानवानपकारिणः॥

**ந ப்ராஹ்மணோ வேதயேத கிஞ்சித் ராஜநி தர்மவித் |**
**ஸ்வவீர்யேணைவ தாஞ்சிஷ்யாந் மாநவாநப காரிண: || 31**

வேதவிற்பன்னனான பிராம்மணன், தனக்கு அபகாரம் செய்தவனைத் தண்டிக்க நினைத்தால், அரசனிடம் சென்று முறையிட்டு, அரசன் விசாரணை செய்து, அதன் பிறகு தண்டனை வழங்க வேண்டிய அவசியம் கிடையாது. தானே ஹோமம் செய்து அதன் மூலமாக எதிரிக்கு வேண்டிய தண்டனை வழங்க முடியும்.

स्ववीर्याद् राजवीर्याच् च स्ववीर्यं बलवत्तरम्।
तस्मात् स्वेनैव वीर्येण निगृह्णीयादरीन् द्विजः॥

**ஸ்வவீர்யாத் ராஜவீர்யாச் ச ஸ்வவீர்யம் பலவத்தரம் |**
**தஸ்மாத் ஸ்வேநைவ வீர்யேண நிக்ருஹ்ணீயா தரீந் த்விஜ: || 32**

ஒரு வேற்பன்னனான த்விஜன், தன் சக்தியையும் அரசனது சக்தியையும் ஒப்பு நோக்கும் போது அவனுடைய சக்தியே பலமானதாக இருக்கும். எனவே அவன் தன்னுடைய சக்தியாலே எதிரிகளை வெல்லலாம்.

श्रुतीरथर्वाऽङ्गिरसीः कुर्यादित्यविचारयन्।
वाक्शस्त्रं वै ब्राह्मणस्य तेन हन्यादरीन् द्विजः॥

**ஷ்ருதீரதர்வா ஆங்கிரஸீ: குர்யாதித்யவிசாரயந் |**
**வாக்ஷஸ்த்ரம் வை ப்ராஹ்மணஸ்ய தேந ஹந்யாதரீந்த்விஜ: ॥ 33**

*தொல்லை தரும் எதிரிகளை ஒழிக்க வேண்டும் என்னும் போது த்விஜர்கள் ஆங்கிரஸ மஹரிஷி சம்பந்தப்பட்ட அதர்வ மந்திரங்களை தயக்கமின்றி பிரயோகிக்க வேண்டும். பிராம்மணனுடைய வாக்கு என்னும் ஆயுதத்தால் பகைவர்களை அழிக்க வேண்டும்.*

*(க்ஷத்ரிய வீரர்களும் வைசிய வணிகர்களும்கூட தங்களுக்குத் தொல்லை தரும் எதிரிகளை அழிக்க பிராம்மணர்களைக் கொண்டு இத்தகைய ஹோமங்களைச் செய்யவேண்டும் என்று இந்த ஸ்லோகத்தால் கூறுகிறார்.)*

क्षत्रियो बाहुवीर्येण तरेदापदमात्मनः।
धनेन वैश्यशूद्रौ तु जपहोमैर् द्विजोत्तमः॥

**க்ஷத்ரியோ பாஹுவீர்யேந தரேதாபதமாத்மந: |**
**தநேந வைஷ்ய சூத்ரௌ து ஜபஹோமைர் த்விஜோத்தம: ॥ 34**

*க்ஷத்ரியன் தனக்கு வந்த ஆபத்தை, தன் தோள் வலிமையால் தீர்த்துக் கொள்ள வேண்டும். வைசியனும் சூத்திரனும் தன் தனத்தைக் கொண்டு தீர்த்துக் கொள்ள வேண்டும்.*

*க்ஷத்ரியன் தன்னால் வெல்ல முடியாத ஆபத்து நேருங்காலத்தில் பிராம்மணர்களைக் கொண்டு ஜப ஹோமங்கள் செய்யவேண்டும். வைசியனும் அவ்வாறே செய்ய வேண்டும். தங்களுடைய தோள் வலிமையாலும், தன வலிமையாலும் தீர்த்துக்கொள்ள முடியாத வற்றை, பிராம்மணனுடைய வாக்கு வலிமையைக் (மந்திரங்களைக்) கொண்டு தீர்த்துக் கொள்ள வேண்டும்.*

विधाता शासिता वक्ता मैत्रो ब्राह्मण उच्यते।
तस्मै नाऽकुशलं ब्रूयान् न शुष्कां गिरमीरयेत्॥

**விதாதா ஷாஸிதா வக்தா மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே |**
**தஸ்மை நாஅகுஷலம் ப்ரூயாந் ந சுஷ்காம் கிரமீரயேத் ॥ 35**

*சாஸ்திரங்கள் எதை எப்படிச் செய்ய வேண்டும் என்று விதித்திருக்கிறதோ அதை அப்படிச் செய்பவன் பிராம்மணன். பிராம்ணன் செய்கின்ற ஹோமங்களாலும் அனுஷ்டானங்களாலும் தான் அனைவரும் சுபிட்சமாக வாழமுடியும். எனவே பிராம்மணன் என்பவன் எல்லோருக்கும் நன்மையை விரும்புகின்ற நண்பன்.*

எனவே பிராம்மணனிடம் எவரும் கடுஞ்சொற்களைப் பேசக் கூடாது. அவன் மனம் நோகும்படியான எந்தச் செயலையும் செய்யக் கூடாது.

न वै कन्या न युवतिर् नाऽल्पविद्यो न बालिशः।
होता स्यादग्निहोत्रस्य नाऽऽर्तो नाऽसंस्कृतस् तथा॥

**நவை கந்யா நயுவதிர் நா அல்பவித்யோ ந பாலிஷ: |**
**ஹோதா ஸ்யாதக்நி ஹோத்ரஸ்ய நாஆர்தோ நாஅஸம்ஸ்க்ருதம் ததா || 36**

கன்னிப்பெண், யுவதி, சிறிதளவு படித்தவன், மூடன், உபநயனம் முதலான சம்ஸ்காரங்கள் இல்லாதவன், உடல் நலமற்றவன் முதலானோர் அக்னிஹோத்ரனுக்கான ஹோமங்களைச் செய்யக் கூடாது.

नरके हि पतन्त्येते जुह्वतः स च यस्य तत्।
तस्माद् वैतानकुशलो होता स्याद् वेदपारगः॥

**நரகே ஹி பதந்த்யேதே ஜுஹ்வத: ஸசயஸ்ய தத் |**
**தஸ்மாத் வைதாநகுஷலோ ஹோதா ஸ்யாத் வேதபாரக: || 37**

அவ்வாறு செய்தால் நரகத்தில் வீழ்வார்கள். பிறருக்காக அக்ஹோத்ரமும் செய்யக்கூடாது. எனவே வேதமந்திரங்களை முழுவதும் அறிந்தவனே பிறருக்காக ஹோமங்கள் செய்ய வேண்டும்.

प्राजापत्यमदत्त्वाऽश्वमग्न्याधेयस्य दक्षिणाम्।
अनाहिताऽग्निर् भवति ब्राह्मणो विभवे सति॥

**ப்ராஜாபத்ய மதத்வா அஷ்வ மக்ந்யாதேயஸ்ய தக்ஷிணாம் |**
**அநாஹிதா அக்நிர் பவதி ப்ராஹ்மணோ விபவே ஸதி || 38**

ஆதானம் செய்யும்போது தனிகனாக இருக்கும் பிராம்மணன் பிரஜாபதி ரூபமான குதிரையை தட்சிணையாகக் கொடுக்க வேண்டும். அவ்வாறு செய்யாவிடில் ஆஹிதாக்நியாக மாட்டான். எனவே ஆதான கிரியையின் போது குதிரையை தானம் செய்தாக வேண்டும்.

पुण्यान्यन्यानि कुर्वीत श्रद्दधानो जितेन्द्रियः।
न त्वल्पदक्षिणैर् यज्ञैर् यजेतेह कथञ्चन॥

**புண்யாந்யந்யாநி குர்வீத ஷ்ரத்ததாநோ ஜிதேந்த்ரிய: |**
**நத்வல்பதக்ஷிணைர் யக்ஞைர் யஜேதேஹ கதஞ்சந || 39**

புலனடக்கமும் சிரத்தையும் கொண்டவன், தீர்த்த யாத்திரை, தேவாலயம் அமைத்தல், குளம் வெட்டுதல் முதலான புண்ணிய

கிரியைகளைச் செய்ய வேண்டும். யக்ஞங்களில் தட்சிணைகளை தாராளமாகக் கொடுக்க வேண்டும்.

इन्द्रियाणि यशः स्वर्गमायुः कीर्तिं प्रजाः पशून्।
हन्त्यल्पदक्षिणो यज्ञस् तस्मान् नाऽल्पधनो यजेत्॥

**இந்த்ரியாணி யஷ: ஸ்வர்கமாயு: கீர்திம் ப்ரஜா: பசூந் |**
**ஹந்த்யல்பதக்ஷிணோ யக்ஞஸ் தஸ்மாந் நா அல்பதநோ யஜேத் || 40**

சொற்ப தக்ஷிணையோடு யக்ஞத்தை முடித்தாலும், சொற்ப தனத்தோடு யக்ஞம் செய்தாலும் கண்பார்வைக் குறைவு, காது மந்தம், புத்தி பேதலித்தல், ஊமையாதல் முதலான குறைகள் ஏற்படும்; புகழைக் கெடுக்கும்; ஆயுளைக் குறைக்கும்; புத்திரர்கள் இறப்பார்கள்; பசுக்கள் குதிரைகள் முதலான செல்வங்கள் அழியும். இறந்த பிறகு சொர்க்கலோகமும் கிட்டாது. எனவே சொற்ப தனத்தோடு யக்ஞம் செய்யக்கூடாது.

अग्निहोत्र्यपविध्याऽग्नीन् ब्राह्मणः कामकारतः।
चान्द्रायणं चरेन् मासं वीरहत्यासमं हि तत्॥

**அக்நிஹோத்ர்யபவித்யா அக்நீந் ப்ராஹ்மண: காமகாரத: |**
**சாந்த்ராயணம் சரேந் மாஸம் வீரஹத்யாஸமம் ஹி தத் || 41**

அக்னிஹோத்திரியாக இருப்பவன், காலையும் மாலையும் ஔபாசனம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யாதவன் வீரனைக் கொன்ற பாபத்தை அடைகிறான். எனவே ஔபாசனம் செய்ய முடியாமல் விட்டுப் போனால் அந்தப் பாவம் நீங்க ஒரு மாதம் சாந்திராயண விரதத்தைக் கடைப்பிடிக்கவேண்டும்.

ये शूद्रादधिगम्याऽर्थमग्निहोत्रमुपासते।
ऋत्विजस् ते हि शूद्राणां ब्रह्मवादिषु गर्हिताः॥

**யே சூத்ராததிகம்யா அர்தமக்நி ஹோத்ரமுபாஸதே |**
**ருத்விஜஸ் தே ஹி சூத்ராணாம் ப்ரஹ்மவாதிஷு கர்ஹிதா: || 42**

சூத்திரனிடம் யாசித்துப் பெற்று, அதைக் கொண்டு அக்னிஹோத்ரம் செய்பவன், அக்னி ஹோத்ரம் செய்த பலனை அடையமாட்டான். சூத்திரனுக்கு புரோகிதனாக இருந்தது போன்றதாகும் இது. இத்தகு செயலை வேதமறிந்தோர் நிந்திப்பர்.

तेषां सततमज्ञानां वृषलाऽग्न्युपसेविनाम्।
पदा मस्तकमाक्रम्य दाता दुर्गाणि सन्तरेत्॥

**தேஷாம் ஸததமக்ஞாநாம் வ்ருஷலாக் ந்யுபஸேவிநாம் |**
**பதா மஸ்தகமாக்ரம்ய தாதா துர்காணி ஸந்தரேத் || 43**

இத்தகு காரியத்தை செய்யும் த்விஜன் நற்கதியை அடைய முடியாது. மாறாக இவனுக்கு யாசித்தபோது கொடுத்தவன் நற்கதியடைவான்.

अकुर्वन् विहितं कर्म निन्दितं च समाचरन्।
प्रसक्तश् चेन्द्रियार्थेषु प्रायश्चित्तीयते नरः॥

**அகுர்வந் விஹிதம் கர்ம நிந்திதம் ச ஸமாசரந் |**
**ப்ரஸக்தஷ்சேந்த்ரியா அர்தேஷு ப்ராயஷ்சித்தீயதே நர: || 44**

தர்ம சாஸ்திரம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விதித்துள்ளதோ அப்படி நடந்து கொள்ளாதவனும், எந்தெந்த செயல்களைச் செய்யக்கூடாது என்று விதித்துள்ளதோ அவற்றைச் செய்தவனும், புலனடக்கமின்றி மனம் போனபடி வாழ்ந்தவனும் தன் பாவங்கள் நீங்க பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்.

अकामतः कृते पापे प्रायश्चित्तं विदुर् बुधाः।
कामकारकृतेऽप्याहुरेके श्रुतिनिदर्शनात्॥

**அகாமத: க்ருதே பாபே ப்ராய்ஷ்சித்தம் விதுர்புதா: |**
**காமகாரக்ருதே அப்யாஹுரேகே ஷ்ருதி நிதர்ஷநாத் || 45**

அறிஞர்கள், ஒருவன் தெரியாமல் செய்த பாவத்திற்கு மட்டுமே பிராயச்சித்தம் உண்டு என்று கூறுகிறார்கள். சிலர், தெரிந்தே பாவம் செய்திருந்தாலும்கூட பிராயச்சித்தம் உண்டு என்று கூறுகிறார்கள்.

अकामतः कृतं पापं वेदाऽभ्यासेन शुध्यति।
कामतस् तु कृतं मोहात् प्रायश्चित्तैः पृथग्विधैः॥

**அகாமத: க்ருதம் பாபம் வேதாஅப்யாஸேந ஷுத்யதி |**
**காமதஸ் து க்ருதம் மோஹாத் ப்ராயச்சித்தை: ப்ருதக்விதை: || 46**

தெரியாமல் செய்த பாபங்கள் வேதங்களை ஓதுவதாலேயே நசித்துவிடும். ஆனால் காமத்தாலும் மோகத்தாலும் செய்த பாபங்களை பலவகையான பிராயச்சித்தங்களை செய்தே நீக்கிக் கொள்ள முடியும்.

प्रायश्चित्तीयतां प्राप्य दैवात् पूर्वकृतेन वा।
न संसर्गं व्रजेत् सद्भिः प्रायश्चित्तेऽकृते द्विजः॥

**ப்ராயஷ்சித்தீயதாம் ப்ராப்ய தைவாத் பூர்வக்ருதேந வா |**
**ந ஸம்ஸர்கம் வ்ரஜேத் ஸத்பி: ப்ராயஷ்சித்தே அக்ருதே த்விஜ: || 47**

முன்னர் செய்த பாவவினைக் காரணமாகவோ, தெய்வச் செயலாலோ வெளிப்படையாக பாவத்தின் பலன் தெரியுமாறு

கொடிய நோய் முதலானவை ஏற்பட்டால் பிராயச்சித்தம் செய்து கொள்ளாமல் சாதுக்களோடு யாகங்களில் கலந்து கொள்ளக் கூடாது.

इह दुश्चरितैः केचित् केचित् पूर्वकृतैस् तथा।
प्राप्नुवन्ति दुरात्मानो नरा रूपविपर्ययम्॥

**இஹ துஷ்சரிதை: கேசித் கேசித் பூர்வக்ருதைஸ் ததா |**
**ப்ராப்னுவந்தி துராத்மானோ நரா ரூபவிபர்யயம் || 48**

இப்பிறவியில் செய்த பாபச்செயல்களாலும், பூர்வ ஜன்மங்களில் செய்த பாபச் செயல்களாலும் துராத்மாக்களான மனிதர்கள் விகாரமான உருவ மாறுபாடுகளை அடைவார்கள்.

सुवर्णचौरः कौनख्यं सुरापः श्यावदन्तताम्।
ब्रह्महा क्षयरोगित्वं दौश्चर्म्यं गुरुतल्पगः॥

**சுவர்ணசௌர: கௌணக்யம் சுராப: ஷ்யாவதந்ததாம் |**
**ப்ரஹ்மஹா க்ஷய ரோகித்வம் தௌஷ்சர்ம்யம் குருதல்பக: || 49**

पिशुनः पौतिनासिक्यं सूचकः पूतिवक्त्रताम्।
धान्यचौरोऽङ्गहीनत्वमातिरैक्यं तु मिश्रकः॥

**பிஷுந: பௌதிநாசிக்யம் சூசக: பூதிவக்த்ர தாம் |**
**தான்ய சௌரோ அங்கஹீனத்வ மாதிரைக்யம் து மிஷ்ரக: || 50**

अन्नहर्ताऽऽमयावित्वं मौक्यं वागपहारकः।
वस्त्रापहारकः श्वैत्र्यं पङ्गुतामश्वहारकः॥

**அந்நஹர்தா ஆமயாவித்வம் மௌக்யம் வாகபஹாரக: |**
**வஸ்த்ரா அபஹாரக: ஷ்வைத்ர்யம் பங்குதாமஷ்வ ஹாரக: || 51**

एवं कर्मविशेषेण जायन्ते सद्विगर्हिताः।
जडमूकान्धबधिरा विकृताऽऽकृतयस् तथा॥

**ஏவம் கர்மவிசேஷேண ஜாயந்தே ஸத்விகர்ஹிதா: |**
**ஜடமூகா அந்தபதிரா விக்ருதா ஆக்ருதயஸ் ததா || 52**

முற்பிறவியில் செய்த பாபங்களுக்கு இப்பிறவியில் விளையும் பயன்களைப் பார்ப்போம்.

தங்கத்தைத் திருடியவனுக்கு புழுத்துப் போன நகங்கள் ஏற்படும்.

கள் குடித்தவனுக்கு சொத்தைப் பற்கள் ஏற்படும்.

பிரம்மஹத்தி செய்தவனுக்கு க்ஷயரோகம் ஏற்படும்.

குரு பத்னியைக் கூடியவனுக்கு பீஜமில்லாமை ஏற்படும்.

கோள் சொன்னவன் துர்வாசனையுள்ள மூக்கை அடைவான்.

வீண்பழி சுமத்தியவன் துர்வாசனையுள்ள வாயை அடைவான்.

தானியங்களைக் களவாடியவன் அங்கஹீனனாவான்.

தானியங்களில் கலப்படம் செய்தவன் அதிக உறுப்பு கொண்டவனாவான்.

அன்னத்தைத் திருடியவன் அஜீர்ண நோய் கொண்டவனாவான்.

குருவுக்குத் தெரியாமல் அவர் வித்தையைக் கற்றவன் ஊமையாவான்.

வஸ்திரங்களைத் திருடியவன் வெண்குஷ்டனாவான்.

குதிரைத் திருடன் முடவனாவான்.

இவ்வாறு உடல் இயக்கம் குறைந்தவர்களாகவும், விகார உருவம் பெற்றவர்களாகவும், சான்றோர்களால் நிந்திக்கப்பட்டவர்களாக முற்பிறவிப் பயன்களை அனுபவிப்பார்கள்.

चरितव्यमतो नित्यं प्रायश्चित्तं विशुद्धये।
निन्द्यैर् हि लक्षणैर् युक्ता जायन्तेऽनिष्कृतैनसः॥

**சரித வ்யமதோ நித்யம் ப்ராயஷ்சித்தம் விசுத்தயே |**
**நிந்த்யைர் ஹி லக்ஷணைர் யுக்தா ஜாயந்தே அநிஷ்க்ருதைந ஸ: || 53**

ஏற்கெனவே செய்த பாபங்களுக்காக தினமும் பிராயச்சித்தங்களைச் செய்து பரிசுத்தி அடைய வேண்டும். இல்லாவிடில் அடுத்த பிறவியிலும் நிந்திக்கத்தக்க இத்தகைய விகாரங்களோடு பிறப்பர்.

ब्रह्महत्या सुरापानं स्तेयं गुर्व[illegible]॥
महान्ति पातकान्याहुः संसर्गश् [illegible]॥

**ப்ரஹ்மஹத்யா சுராபாநம் ஸ்தேயம் குர்வங்கநாகம: |**
**மஹாந்தி பாதகாந் யாஹு: ஸம்ஸர்கஷ்சா அபி தை: ஸஹ: || 54**

பிராம்மணனைக் கொல்லுதல், போதை தரும் கள்ளை அருந்துதல், தங்கம் முதலானவற்றைத் திருடுதல், குரு மனைவியை அடைதல் முதலானவை மிகப்பெரும் பாபங்களாகும். இத்தகைய பாபங்கள் புரிந்தாரோடு கூடியிருத்தலும் மிகப் பெரும் பாபமே யாகும்.

अनृतं च समुत्कर्षे राजगामि च पैशुनम्।
गुरोश् चाऽलीकनिर्बन्धः समानि [illegible]॥

**அந்ருதம் ச ஸமுத்கர்ஷே ராஜகாமி ச பைஷுநம் |**
**குரோஷ் சா ஆலீகநிர்பந்த: ஸமாநி ப்ரஹ்ம ஹத்யயா || 55**

மேலோரிடம் பொய் பேசுதல், ஒருவரைப் பற்றி அவனுக்கு பெரும் தண்டனை கிடைக்கும் வண்ணம் மன்னனிடம் கோள் சொல்லுதல், குருவின் மீது பழி சுமத்துதல் முதலான பாபங்களும் பிரம்மஹத்திக்கு நிகரான பாபங்களேயாகும்.

ब्रह्मोज्झता वेदनिन्दा कौटसाक्ष्यं सुहृद्वधः।
गर्हिताऽन्नाद्ययोर् जग्धिः सुरापानसमानि षट्॥

**ப்ரஹ்மோஜப்தா வேதநிந்தா கௌடஸாக்ஷ்யம் சுஹ்ருத் வத: |**
**கர்ஹிதா அநாத்யயோர் ஜக்தி: சுராபாநஸமாநி ஷட் ||** **56**

படித்த வேதத்தை தொடர்ந்து ஓதாமல் மறந்து போதல், வேதத்தை நிந்தித்தல், பொய்சாட்சி கூறுதல், நண்பனை அடித்தல், சாப்பிடத் தகாதவை என்று விலக்கியுள்ள பதார்த்தங்களை சாப்பிடுதல், சிறுநீர் முதலானவற்றை உட்கொள்ளல் என்னும் இவையெல்லாம் க்ள் உண்டதற்கு சமமான பாபத்தைத் தரும்.

निक्षेपस्याऽपहरणं नराऽश्वरजतस्य च।
भूमिवज्रमणीनां च रुक्मस्तेयसमं स्मृतम्॥

**நிக்ஷேபஸ்யா அபஹரணம் நராஅஷ்வரஜதஸ்ய ச |**
**பூமி வஜ்ரமணீநாம் ச ருக்மஸ்தேயஸமம் ஸ்ம்ருதம் ||** **57**

ஒருவன் தன்னிடம் சிறிது காலம் பாதுகாத்துத் தரும்படி கொடுத்து வைத்திருந்த தங்கத்தைத் திருடுதலும், மனிதர்கள் குதிரைகள் வெள்ளி பூமி வைரம் மணிகள் முதலானவற்றைக் திருடுதலும் தங்கத்தைக் திருடியதற்குச் சமம்.

रेतःसेकः स्वयोनीषु कुमारीष्वन्त्यजासु च।
सख्युः पुत्रस्य च स्त्रीषु गुरुतल्पसमं विदुः॥

**ரேத:ஸேகம் ஸ்வயோநிஷு குமாரீஷ்வந்த்யஜாசு ச |**
**ஸக்யு: புத்ரஸ்ய ச ஸ்த்ரீஷு குருதல்பஸமம் து: ||** **58**

உடன் பிறந்த சகோதரி, பெற்ற மகள், சண்டாளப் பெண், நண்பனின் மனைவி, மகனுடைய மனைவி இவர்களைக் கூடிச் சுகித்தவன் குருபத்னியைக் கூடியவன் அடையும் பாபத்தை அடைகிறான்.

गोवधोऽयाज्यसंयाज्यपारदार्याऽऽत्मविक्रयाः।
गुरुमातृपितृत्यागः स्वाध्यायाऽग्न्योः सुतस्य च॥

**கோவதோ அயாஜ்ய ஸம்யாஜ்ய பாரதார்யா ஆத்ம விக்ரயா: |**
**குரு மாத்ரு பித்ருத்யாக: ஸ்வாத்யாயா அக்ந்யோ: சுதஸ்ய ச ||** **59**

परिवित्तिताऽनुजेऽनूढे परिवेदनमेव च।
तयोर् दानं च कन्यायास् तयोरेव च याजनम्॥

பரிவித்திதா அனுஜே அனூடே பரிவேதநமேவ ச |
தயோர் தாநம் ச கந்யாயாஸ் தயோரேவ ச யாஜநம் || 60

कन्याया दूषणं चैव वार्धुष्यं व्रतलोपनम्।
तडागाऽऽरामदाराणामपत्यस्य च विक्रयः॥

கந்யாயா தூஷணம் சைவ வார்துஷ்யம் வ்ரதலோபநம் |
தடாகா ஆராமதாராணா மபத்யஸ்ய ச விக்ரய: || 61

व्रात्यता वान्धवत्यागो भृत्याऽध्यापनमेव च।
भृत्या चाऽध्ययनाऽऽदानमपण्यानां च विक्रयः॥

வ்ராத்யயா பாந்தவத்யாகோ ப்ருத்யா அத்யாபநமேவ ச |
ப்ருத்யா சாஅத்யயநா ஆதாநமபண்யாநாம் ச விக்ரய: || 62

सर्वाऽऽकरेष्वधीकारो महायन्त्रप्रवर्तनम्।
हिंसौषधीनां स्त्र्याजीवोऽभिचारो मूलकर्म च॥

ஸர்வா ஆகரேஷ்வதீகாரோ மஹாயந்த்ரப்ரவர்தனம் |
ஹிம்ஸௌஷதீநாம் ஸ்த்ரயாஜீவோ அபிசாரோ மூல கர்ம ச || 63

इन्धनार्थमशुष्काणां द्रुमाणामवपातनम्।
आत्मार्थं च क्रियारम्भो निन्दिताऽन्नाऽदनं तथा॥

இந்தநார்த மஷுஷ்காணாம் த்ருமாணாமவபாதநம் |
ஆத்மார்தம் ச க்ரியாரம்போ நிந்திதா அந்நா அதநம் ததா || 64

अनाहिताऽग्निता स्तेयमृणानामनपक्रिया।
असच्छास्त्राऽधिगमनं कौशीलव्यस्य च क्रिया॥

அநாஹிதா அக்நிதா ஸ்தேயம்ருணாநாமநபக்ரியா |
அஸச்சாஸ்த்ரா அதிகமநம் கௌஷீலவ்யஸ்ய சக்ரியா || 65

धान्यकुप्यपशुस्तेयं मद्यपस्त्रीनिषेवणम्।
स्त्रीशूद्रविट्क्षत्रवधो नास्तिक्यं चोपपातकम्॥

தான்யகுப்ய பஷுஸ்யதேயம் மத்யபஸ்த்ரிநிஷேவணம் |
ஸ்த்ரீ சூத்ரவிட் க்ஷத்ரவதோ நாஸ்திக்யம் சோபபாதகம் || 66

*இதுவரை கூறியவை மகா பாதகங்கள். இனி கூறப் போகின்றவை உப பாதகங்கள்.*

*பசுவைக் கொல்லுதல், தகாதவர்களைக் கொண்டு யாகம் செய்வித்தல், பிறர் மனைவியைப் புணர்தல், தன்னைத்தானே*

விற்றல், குருவையும் பெற்றோரையும் போஷிக்காமல் கைவிடல், வேதத்தை ஓதாமல் விட்டுவிடல், அக்னி ஓம்புதலை விட்டுவிடல், பிள்ளைக்கு உபநயம் முதலான கிரியைகளைச் செய்யாமல் விட்டுவிடல், தனக்கு இளைய சகோதரன் மணம் புரிந்து கொண்ட பிறகு மணம் புரிந்து கொண்டவன், மூத்தவனுக்கு முன்பு மணம் புரிந்து கொண்ட இளையவன், மூத்தவனுக்கு முன்பு மணம் புரிந்து கொள்ளும் இளைய சகோதரனுக்கும், இளையவன் மணம் புரிந்து கொண்ட பிறகு மணம் புரிந்து கொள்ளும் மூத்தவனுக்கும் பெண்ணைக் கொடுப்பது, கன்னிப் பெண்ணிடம் தகாத முறையில் கைகளால் சீண்டுவது, ஒரு கன்னிப் பெண்ணுக்கு களங்கம் கற்பித்துப் பேசுவது, அதிக வட்டியால் ஜீவனம் நடத்துவது, பிரம்மச்சரிய விரதத்தில் இருப்பவன் பெண்ணைப் புணர்வது, தடாகம், மலர்வனம் மனைவி மகன்களை விற்பது, உரிய காலத்தில் உபநயனம் முதலான சம்ஸ்காரங்களைச் செய்து கொள்ளாமலிருத்தல், காப்பாற்ற வேண்டிய தருணத்தில் காப்பாற்றாமல் பந்துக்களை கைவிடல், தனத்தைப் பெற்றுக் கொண்டு வேதம் சொல்லிக் கொடுத்தல், தனத்தைக் கொடுத்து வேதத்தைக் கற்றல், விற்கத் தகாத பொருட்களை விற்றல், தங்கச் சுரங்கத்தில் அதிகாரியாக இருத்தல், பெரிய எந்திரங்களை அமைக்கும் பணியில் அதிகாரியாக இருத்தல், மூலிகைகளை அழிப்பது, மனைவியை வேசியாக்கிப் பிழைப்பது, விறகுக்காக பச்சை மரங்களை வெட்டுவது, அபிசாரம் முதலானவற்றால் தீங்கிழைக்காதவனைக் கொல்லுதல், மந்திர ஔஷதங்களால் பிறரை வசியம் செய்தல், தேவ நிவேதனத்துக்காக சமைக்காமல் தனக்காக சமைத்தல், உணவில் சேர்க்கக் கூடாது என்று சொல்லப் பட்டுள்ளவற்றைச் (பூண்டு, வெங்காயம், காளான் முதலானவை) சேர்த்து சமைத்துண்பது, செய்ய வேண்டிய அக்னி ஆதானத்தை செய்யாதிருத்தல், தங்கம் தவிர்த்து மற்ற உயர்ந்த பொருட்களைத் திருடுதல், வாங்கிய கடனை திரும்பக் கொடுக்காதிருப்பது, வேதத்துக்கு விரோதமான சாஸ்திரங்களை கற்பது, ஆடல் பாடல்களைக் கற்பது, தானியங்கள், செம்பு முதலான உலோகங்களையும் பசுக்களையும் திருடுவது, குடிகாரியான பெண்ணை த்விஜர்கள் மணப்பது, பெண்ணையோ சூத்திரனையோ வைசியனையோ க்ஷத்ரியனையோ கொல்வது, நாஸ்திக புத்தி யோடிருப்பது - இவை யாவும் உப பாதகங்கள் எனப்படும்.

ब्राह्मणस्य रुजः कृत्या घ्रातिरघ्रेयमद्ययोः ।
जैह्म्यं च मैथुनं पुंसि जातिभ्रंशकरं स्मृतम् ॥

ப்ராஹ்மணஸ்ய ருஜ: க்ருத்யா க்ராதிரக்ரேயமத்யயோ: |
ஜைஹ்ம்யம் ச மைதுநம் பூம்ஸி ஜாதிப்ரம்ஷகரம் ஸ்ம்ருதம் || 67

பிராம்மணனை எலும்பு முறிவு ஏற்படுமாறு அடித்தல், துர்கந்தமுள்ள கள்ளையும் மலத்தையும் முகர்தல், மோசம் செய்தல், ஆணின் முகத்தில் மைதுனம் செய்தல் என்னுமிவை செய்தவர் ஜாதியிலிருந்து வீழ்ந்தவராவர். அதாவது இப்படிச் செய்தவன் தன் வர்ண தர்மத்திலிருந்து வீழ்ந்து விட்டவன். தன்னை பிராம்மணன் என்றோ க்ஷத்ரியன் என்றோ வைசியன் என்றோ சூத்திரன் என்றோ கூறிக் கொள்ள இயலாத நீசன் ஆகிறான். இதற்கு ஜாதி பிரம்சகர பாபம் என்று பெயர்.

खराऽश्वोष्ट्रमृगेभानामजाऽविकवधस् तथा।
सङ्करीकरणं ज्ञेयं मीनाहिमहिषस्य च॥

**கரா அஷ்வோஷ்ட்ரம்ருகே பாநாமஜா அவிகவதஸ் ததா |**
**ஸங்கரீகரணம் ஞேயம் மீநாஹிமஹிஷஸ்ய ச || 68**

கழுதை, குதிரை, ஒட்டகம், மான், யானை, வெள்ளாடு, செம்மறியாடு, மீன், பாம்பு, எருமை முதலானவைகளைக் கொல்லுவது சங்கரீகரணம் எனப்படும்.

निन्दितेभ्यो धनाऽऽदानं वाणिज्यं शूद्रसेवनम्।
अपात्रीकरणं ज्ञेयमसत्यस्य च भाषणम्॥

**நிந்திதேப்யோ தநா ஆதாநம் வாணிஜ்யம் சூத்ரஸேவநம் |**
**அபாத்ரீகரணம் ஞேயமஸத்யஸ்ய ச பாஷணம் || 69**

நிந்திக்கத்தக்க பாவிகளிடமிருந்து தானம் பெறுதல், வர்த்தகம், சூத்ரனிடம் பணிபுரிதல், பொய் பேசுதல் என்னுமிவை அபாத்ரீ கரணம் எனப்படும்.

कृमिकीटवयोहत्या मद्याऽनुगतभोजनम्।
फलैधःकुसुमस्तेयमधैर्यं च मलाऽऽवहम्॥

**க்ருமிகீட வயோஹத்யா மத்யா அனுகதபோஜநம் |**
**பலைத: குசுமஸ்தேய மதைர்யம் ச மலா ஆவஹம் || 70**

கிருமிகளையும் பூச்சிகளையும் கொல்லுதல், பறவைகளைக் கொல்லுதல், கள்ளோடு கூட ஒரே பாத்திரத்தில் கொணர்ந்த உணவு, பழங்கள் விறகு பூக்களைத் திருடுதல், அற்ப விஷயத்துக்கெல்லாம் பெரிதாக துக்கித்தல் என்னுமிவை மலினீகரணங்கள் எனப்படும்.

एतान्येनांसि सर्वाणि यथोक्तानि पृथक्पृथक्।
यैर्यैर् व्रतैरपोह्यन्ते तानि सम्यङ् निबोधत॥

**ஏதாந்யேநாம்ஸி ஸர்வாணி யதோக்தாநி ப்ருதக் ப்ருதக் |**
**யைர்யைர் வ்ரதைர போஹ்யந்தே தானி ஸம்யங்நிபோதத || 71**

இதுவரை கூறப்பட்ட சகல பாபங்களுக்கும் உரிய பிராய சித்தங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்.

ब्रह्महा द्वादश समाः कुटिं कृत्वा वने वसेत्।
भैक्षाश्यात्मविशुद्ध्यर्थं कृत्वा शवशिरोध्वजम्॥

**ப்ரஹ்மஹா த்வாதஷ ஸமா: குடிம் க்ருத்வா வநே வஸேத் |**
**பைக்ஷாஷ்யாத் மவிசுத்யர்தம் க்ருத்வா ஷவஷிரோத்வஜம் || 72**

பிரம்மஹத்தி பாபம் நீங்க முதலில் ஊரைவிட்டு வெளியேறி வனத்தில் குடில் அமைத்து வசிக்க வேண்டும். அடுத்ததாக கையில் மண்டையோட்டை ஏந்தியபடி தினமும் ஊருக்குள் வந்து ஏழு வீடுகளில் பிச்சையெடுத்து சாப்பிட வேண்டும். இவ்வாறு பன்னிரண்டு வருடங்கள் நடக்க வேண்டும்.

लक्ष्यं शस्त्रभृतां वा स्याद् विदुषामिच्छयाऽऽत्मनः।
प्रास्येदात्मानमग्नौ वा समिद्धे त्रिरवाक्शिराः॥

**லக்ஷ்யம் ஷஸ்த்ரப்ருதாம் வா ஸ்யாத் விதுஷாமிச்சயா ஆத்மந: |**
**ப்ராஸ்யேதாத்மா நமக்நௌ வாஸமித்தே த்ரிரவாக்ஷிரா: || 73**

வேண்டுமென்றே பிரம்மஹத்தி செய்தவன் பிறரால் எய்யப்பட்ட அம்புகளால் அடிபட்டு இறக்க வேண்டும். அல்லது இறக்கும் வரை அப்படியே கிடக்க வேண்டும். அல்லது நன்கு எரியும் அக்நியின் முன் மும்முறை தலைகீழாக விழ வேண்டும்.

यजेत वाऽश्वमेधेन स्वर्जिता गोसवेन वा।
अभिजिद्-विश्वजिद्भ्यां वा त्रिवृताऽग्निष्टुताऽपि वा॥

**யஜேத வா அஷ்வமேதேந ஸ்வர்ஜிதா கோஸவேந வா |**
**அபிஜித் விஷ்வஜித்ப்யாம் வாத்ரிவ்ருதா அக்நிஷ்டுதா அபி வா || 74**

அல்லது, அஸ்வமேதயாகம் செய்தோ, ஸர்வஜித் யாகம் செய்தோ, கோசவ யாகம் செய்தோ, அபிஜித் யாகம் செய்தோ, விஸ்வஜித் யாகம் செய்தோ த்ரிவ்ருதாக்னிஷ்டோமம் செய்தோ பிரம்மஹத்தி பாபத்தினின்று விடுபடலாம்.

जपन् वाऽन्यतमं वेदं योजनानां शतं व्रजेत्।
ब्रह्महत्याऽपनोदाय मितभुङ् नियतेन्द्रियः॥

**ஜபந் வா அந்யதமம் வேதம் யோஜநாநாம் ஷதம் வ்ரஜேத் |**
**ப்ரஹ்மஹத்யா அபநோதாய மிதபுங்நீ யதேந்த்ரிய: || 75**

அல்லது புலனடக்கி ஏதேனும் ஒரு வேதத்தை ஓதியபடியே, சொற்ப ஆகாரம் சாப்பிட்டபடி நூறு யோஜனை தூரம் நடக்க வேண்டும்.

सर्वस्वं वेदविदुषे ब्राह्मणायोपपादयेत्।
धनं वा जीवनायालं गृहं वा सपरिच्छदम्॥

**ஸர்வஸ்யம் வேதவிதுஷே ப்ராஹ்மணாயோப பாதயேத் |**
**தநம் வா ஜீவநாயா அலம் க்ருஹம் வா ஸபரிச்சதம் || 76**

*அல்லது வேதவிற்பன்னனான பிராம்மணனுக்குத் தன் சொத்து முழுவதையும் கொடுத்து விட வேண்டும். அல்லது ஜீவனத்துக்குத் தேவையான அளவாவது கொடுக்க வேண்டும். அல்லது தனம், தானியம், பசுக்களோடு வீட்டைக் கொடுக்க வேண்டும்.*

हविष्यभुग् वाऽनुसरेत् प्रतिस्रोतः सरस्वतीम्।
जपेद् वा नियताऽऽहारस् त्रिर् वै वेदस्य संहिताम्॥

**ஹவிஷ்யபுக் வாஅநுச ரேத் ப்ரதிஸ்ரோத: ஸரஸ்வதீம் |**
**ஜபேத் வா நியதா ஆஹாரஸ் த்ரிர்வை வேதஸ்ய ஸம்ஹிதாம் || 77**

*அல்லது சரஸ்வதி நதி சமுத்திரத்தில் கலக்குமிடத்திலிருந்து சரஸ்வதி பிரவாகத்துக்கு எதிராகவே ஸரஸ்வதியின் ஆரம்ப இடம் தெரியும் வரை கரையோரமாக நடந்து செல்ல வேண்டும். அல்லது ஆகார நியமத்தைக் கொண்டு மூன்று வேதங்களையும் மூன்று மூன்று முறை பாராயணம் செய்ய வேண்டும்.*

कृतवापनो निवसेद् ग्रामान्ते गोव्रजेऽपि वा।
आश्रमे वृक्षमूले वा गोब्राह्मणहिते रतः॥

**க்ருதவாபநோ நிவஸேத் க்ராமா அந்தே கோவ்ரஜேஅபி வா |**
**ஆஸ்ரமே வ்ருக்ஷமூலே வா கோ ப்ராஹ்மணஹிதே ரத: || 78**

*பன்னிரன்டு வருடங்கள் வனத்தில் வசிக்கும் விரதத்தை ஏற்றவன், அப்படி வசிக்கும் சூழ்நிலை இல்லை என்றால் வேறு முறையிலும் வசிக்கலாம். கிராமத்துக்கு அருகிலேயே பசுக் கொட்டிலிலோ ஆஸ்ரமத்திலோ மரத்தடியிலோ தங்கியிருக்கலாம். தலையை மொட்டை யடித்துக் கொண்டிருக்க வேண்டும். அருகில் உள்ள பசுக்களுக்கும் ஆசிரமவாசிகளான பிராம்மணர்களுக்கும் ஹிதம் தரும் காரியங்களைச் செய்தபடி காலங்கழிக்க வேண்டும்.*

ब्राह्मणार्थे गवार्थे वा सद्यः प्राणान् परित्यजन्।
मुच्यते ब्रह्महत्याया गोप्ता गोर् ब्राह्मणस्य च॥

**ப்ராஹ்மணார்தே கவார்தே வா ஸத்ய: ப்ராணாந் பரித்யஜந் |**
**முச்யதே ப்ரஹ்மஹத்யாயா கோப்தா கோப்ராஹ்மணஸ்ய ச || 79**

*இப்பன்னிரண்டாண்டுகளுக்கிடையே பிராம்மணனைக் காப்பதற்காகவோ, பசுவைக் காப்பாற்றுவதற்காகவோ தன் உயிரைத்*

தியாகம் செய்தால், அவனுடைய பிரம்மஹத்தி பாபம் அவனை விட்டு நீங்கி விடும்.

त्रिवारं प्रतिरोद्धा वा सर्वस्वमवजित्य वा।
विप्रस्य तन्निमित्ते वा प्राणलाभे विमुच्यते॥

**த்ரிவாரம் ப்ரதிரோத்தா வா ஸர்வஸ்வமவஜித்ய வா |**
**விப்ரஸ்ய தந்நிமித்தே வா ப்ராணலாபே விமுச்யதே || 80**

அதேபோன்று பிராம்மணனுடைய பொருளை திருடிச் செல்பவனை உயிருக்குத் துணிந்து விரட்டிப் பிடித்து அந்தப் பொருளை மீண்டும் கொண்டு வந்து பிராம்மணனிடம் ஒப்படைத்தாலும் பிரம்மஹத்தி பாபம் அவனை விட்டு நீங்கும்.

திருடனைப் பிடிக்கும் போது அவனோடு எவ்வளவோ போராடியும்கூட, அந்தப் போரில் வெல்ல முடியவில்லை, திருடனைப் பிடிக்க முடியவில்லை என்ற போதிலும், தன் உயிருக்குத் துணிந்து போரிட்ட அந்தச் செய்கையால் அவனது பிரம்மஹத்தி பாபம் அவனை விட்டு நீங்கும்.

பொருளை திருடனிடம் பறிகொடுத்துவிட்டு மனம் தாளாமல் உயிர்போகும் நிலையிலுள்ள அப் பிராம்மணனுக்கு, தன்னுடைய பொருளைக் கொடுத்து அவன் உயிரைக் காத்தாலும் இவனது பிரம்மஹத்தி பாபம் நீங்கும்.

एवं दृढव्रतो नित्यं ब्रह्मचारी समाहितः।
समाप्ते द्वादशे वर्षे ब्रह्महत्यां व्यपोहति॥

**ஏவம் த்ருடவ்ரதோ நித்யம் ப்ரஹ்மசாரீ ஸமாஹித: |**
**ஸமாப்தே த்வாதஷே வர்ஷே ப்ரஹ்மஹத்யாம் வ்யபோஹதி || 81**

இவ்வாறாக திடமான மனத்தோடு பன்னிரண்டு ஆண்டுகள் விரதத்தைக் கடைப்பிடித்தபடி, பிரம்மசரிய விரதத்தோடு காலம் கழித்தால் பன்னிரண்டாண்டுகள் பூர்த்தியான பிறகு பிரம்மஹத்தி பாபத்திலிருந்து நீங்குவான்.

शिष्ट्वा वा भूमिदेवानां नरदेवसमागमे।
स्वमेनोऽवभृथस्नातो हयमेधे विमुच्यते॥

**ஷிஷ்ட்வா வா பூமிதேவாநாம் நரதேவ ஸமாகமே |**
**ஸ்வமேநோ அவப்ருதஸ்தநாதோ ஹயமேதே விமுச்யதே || 82**

ஆலய தெய்வங்கள் சாட்சியாக, அரசன் முன்னிலையிலும். வேதவிற்பன்னர்கள் முன்னிலையிலும் தான் செய்த பிரம்ம ஹத்தியை எடுத்துக் கூறி, அஸ்வமேதயாகம் செய்து முடித்து

அவப்ருத ஸ்நானம் செய்தவுடன் அவனுடைய பிரம்மஹத்தி பாபம் நீங்கும்.

धर्मस्य ब्राह्मणो मूलमग्रं राजन्य उच्यते।
तस्मात् समागमे तेषामेनो विख्याप्य शुध्यति॥

**தர்மஸ்ய ப்ராஹ்மணோ மூலமக்ரம் ராஜந்ய உச்யதே |**
**தஸ்மாத் ஸமாகமே தேஷாமேநோ விக்யாப்ய ஷுத்யதி || 83**

தர்மத்தை ஒரு மரமாக எடுத்துக் கொண்டால், அதன் வேர்கள் பிராம்மணனர்கள். அதன் நுனி அரசன். அத்தகைய பிராம்மணர்களும் அரசனும் சேர்ந்திருக்கும்போது அவர்களிடத்தில் தான் செய்த பாபத்தை பகிங்கரமாக வெளிப்படுத்திய பிறகு அஸ்வமேதயாகம் செய்தானானால் அவன் பாபம் நீங்கி பரிசுத்தனாகிறான்.

ब्राह्मणः सम्भवेनैव देवानामपि दैवतम्।
प्रमाणं चैव लोकस्य ब्रह्मात्रैव हि कारणम्॥

**ப்ராஹ்மண: ஸம்பவேநைவ தேவாநாமபி தைவதம் |**
**ப்ரமாணம் சைவ லோகஸ்ய ப்ரஹ்மா அத்ரைவ ஹிகாரணம் || 84**

பிராம்மணன் தன் பிறப்பினால் தேவர்களால் போற்றப்படுபவனாகிறான். ஏனெனில் உலகத்துக்குக் காரணமாயமைந்தவை வேதங்கள். வேதங்களே அனைத்து தர்மங்களையும் உபதேசிக்கின்றன. அந்த வேதங்களை எப்போதும் ஓதுகின்ற வாக்கை உடையவன் பிராம்மணன். இவனது இத்தகைய வாக்கினாலேயே தேவர்கள் அனைவரும் நிறைவை அடைகின்றனர்.

तेषां वेदविदो ब्रूयुस् त्रयोऽप्येनःसु निष्कृतिम्।
सा तेषां पावनाय स्यात् पवित्रा विदुषां हि वाक्॥

**தேஷாம் வேதவிதோ ப்ரூயுஸ் த்ரயோ அப்யேந:சு நிஷ்க்ருதிம் |**
**ஸாதேஷாம் பாவநாய ஸ்யாத்பவித்ரா விதுஷாம் ஹி வாக் || 85**

மூன்று வேதங்களையும் நன்குணர்ந்த வேதவிற்பன்னர்கள் முன்னிலையில் தன்னுடைய பாவங்களை எடுத்துரைத்து, அதற்கு பிராயச்சித்தமாக அவர்கள் என்ன சொல்கிறார்களோ அப்படிச் செய்தால் பாபம் நீங்கும். வேதவிற்பன்னர்களுடைய வாக்கே தூய்மையான தாகும்.

अतोऽन्यतममास्थाय विधिं विप्रः समाहितः।
ब्रह्महत्याकृतं पापं व्यपोहत्यात्मवत्तया॥

**அதோ அந்யதமமாஸ்தாய விதிம் விப்ர: ஸமாஹித: |**
**ப்ரஹ்மயத்யாக்ருதம் பாபம் வ்யபோஹத்யாத்மவத் தயா || 86**

*பிரம்மஹத்திக்காரன் இதுவரை கூறிய வழிகளில் ஏதேனும் ஒரு பிராயச்சித்த வழியைப் பின்பற்றினால் தன் பாபத்தினின்றும் விடுபடுவான்.*

हत्वा गर्भमविज्ञातमेतदेव व्रतं चरेत्।
राजन्यवैश्यौ चेजानावात्रेयीमेव च स्त्रियम्॥

**ஹத்வா கர்பமவிக்ஞாதமேததேவ வ்ரதம் சரேத் |**
**ராஜந்யவைஷ்யௌ சேஜாநாவாத்ரேயீமேவ ச ஸ்த்ரியம் || 87**

*கர்ப்பத்தைக் கலைத்தாலும், யாகத்தில் ஈடுபட்டிருக்கும் க்ஷத்ரிய வைசியரைக் கொன்றாலும், பிராம்மணப் பெண்ணைக் கொன்றாலும் இதுவரை கூறிய வழிமுறைகளின் படியே பிராய சித்தம் செய்து கொள்ள வேண்டும்.*

उक्त्वा चैवाऽनृतं साक्ष्ये प्रतिरुध्य गुरुं तथा।
अपहृत्य च निक्षेपं कृत्वा च स्त्रीसुहृद्वधम्॥

**உக்த்வா சைவாஅந்ருதம் ஸாக்ஷ்யே ப்ரதிருத்ய குரும் ததா |**
**அபஹ்ருத்ய ச நிக்ஷேபம் க்ருத்வா ச ஸ்த்ரீசுஹ்ருத் வதம் || 88**

*பொய்சாட்சி கூறியவனும், குருவின் மீது பழிசுமத்தியவனும், பாதுகாக்கக் கொடுத்த பொருளை அபகரித்தவனும், பெண்ணைக் கொன்றவனும், நண்பனைக் கொன்றவனும்கூட இத்தகைய பிராயச்சித்தங்களையே செய்து கொள்ள வேண்டும்.*

इयं विशुद्धिरुदिता प्रमाप्याऽकामतो द्विजम्।
कामतो ब्राह्मणवधे निष्कृतिर् न विधीयते॥

**இயம் விசுத்திருதிதா ப்ரமாப்யா அகாமதோ த்விஜம் |**
**காமதோ ப்ராஹ்மண வதே நிஷ்க்ருதிர் ந விதீயதே || 89**

*இந்த பிராயச்சித்தங்களெல்லாம் அறியாமல் செய்த பிரம்மஹத்தி பாபத்துக்கே சொல்லப்பட்டது. வேண்டு மென்றே பிராம்மணனைக் கொன்றதற்கு பிராயச்சித்தம் சொல்லப்படவில்லை.*

सुरां पीत्वा द्विजो मोहादग्निवर्णां सुरां पिबेत्।
तया स काये निर्दग्धे मुच्यते किल्बिषात् ततः॥

**சுராம் பீத்வா த்விஜோ மோஹாதக்நிவர்ணாம் சுராம் பிபேத் |**
**தயா ஸ காயே நிர்தக்தே முச்யதே கில்பிஷாத் தத: || 90**

த்விஜர்கள் சுராபானத்தை மோகத்தால் குடித்தால், சிவக்கக் காய்ச்சிய கள்ளை அவன் வாயில் ஊற்ற வேண்டும். அதனால் அவன் உடல் வெந்துபோனால் அவன் சுராபானம் குடித்த பாபத்திலிருந்து நீங்குகிறான்.

गोमूत्रमग्निवर्णं वा पिबेदुदकमेव वा।
पयो घृतं वाऽऽमरणाद् गोशकृद्रसमेव वा॥

**கோமூத் ரமக்நி வர்ணம் வா பிபேது தகமேவ வா |**
**பயோ க்ருதம் வாஆமரணாத் கோஷக்ருத்ரஸமேவ வா || 91**

அல்லது பசுவின் மூத்திரத்தையாவது, பசுவின் பாலையாவது, பசுவின் சாணக் கரைசலையாவது, பசுநெய்யையாவது தள தள வெனக் காய்ச்சி சாகும்வரை குடிக்க வேண்டும்.

कणान् वा भक्षयेदब्दं पिण्याकं वा सकृन् निशि।
सुरापानापनुत्त्यर्थं वालवासा जटी ध्वजी॥

**கணாந் வா பக்ஷயேதப்தம் பிண்யாகம் வா ஸக்ருந் நிஷி |**
**சுராபாநா அபனுத்யர்தம் வாலவாஸா ஜடீ த்வஜீ || 92**

அல்லது கம்பளியைத் தரித்து, ஜடைகளை வளர்த்துக் கொண்டு, கள்குடுவை போன்ற பாத்திரத்தில் இரவு ஒரு வேளை மட்டும் நொய்கஞ்சியை குடிக்க வேண்டும். அல்லது பிண்ணாக்கை சாப்பிட வேண்டும்.

सुरा वै मलमन्नानां पाप्मा च मलमुच्यते।
तस्माद् ब्राह्मण-राजन्यौ वैश्यश् च न सुरां पिबेत्॥

**சுராவை மலமந்நாநாம் பாப்மா ச மலமுச்யதே |**
**தஸ்மாத் ப்ராஹ்மண ராஜந்யௌ வைஷ்யஷ்ச ந சுராம்பிபேத் || 93**

அன்னத்தைக் கொண்டு சாராயம் காய்ச்சுவார்கள். அதைக் குடிப்பதும் பாபமேயாகும். இது சுராபானத்துக்கு நிகரானது. எனவே பிராம்மண க்ஷத்ரிய வைசியர்கள் இதைக் குடிக்கக்கூடாது.

गौडी पैष्टी च माध्वी च विज्ञेया त्रिविधा सुरा।
यथैवैका तथा सर्वा न पातव्या द्विजोत्तमैः॥

**கௌடீ பைஷ்டீ ச மாத்வீச விக்ஞேயாத்ரிவிதா சுரா |**
**யதைவைகா ததாஸர்வா ந பாதவ்யா த்விஜோத்தமை: || 94**

கௌடி, பைஷ்டி, மாத்வி என்று சாராயம் மூன்று வகையாக இருக்கும்.

கௌடி என்பது வெல்லத்தைக் கொண்டு காய்ச்சுவது.

பைஷ்டி என்பது சாதத்தைக் கொண்டு காய்ச்சுவது.

மாத்வீ என்பது ஒருவகைப் பூக்களைக் கொண்டு காய்ச்சுவது.

மூன்றுமே சாராயங்கள்தான். இதில் மேலென்றும் கீழென்றும் எதுவும் கிடையாது. எனவே த்விஜர்கள் இவை எவற்றையும் குடிக்கக் கூடாது.

यक्षरक्षःपिशाचान्नं मद्यं मांसं सुराऽऽसवम्।
तद् ब्राह्मणेन नाऽत्तव्यं देवानामश्नता हविः॥

**யக்ஷரக்ஷ: பிஷாசாஅந்நம் மத்யம் மாம்ஸம் சுரா ஆஸவம் |**
**தத் ப்ராஹ்மணேந நாஅத்தவ்யம் தேவாநாமஷ்நதா ஹவி: || 95**

சாராயம், மாமிசம், புளிக்க வைக்கப்பட்ட சுராபானம், கள் இவையெல்லாம் யட்சர்கள் ராட்சதர்கள் பிசாசர்களுக்குரியவை. தேவர்களுக்குரியவை ஹோமம் செய்கின்ற ஹவிஸ். எனவே தேவர்குரிய ஹவிஸை உண்ணும் பிராம்மணன், யட்ச ராட்சத பிசாசர்களுக்குரியவற்றை உண்ணக் கூடாது.

अमेध्ये वा पतेन् मत्तो वैदिकं वाऽप्युदाहरेत्।
अकार्यमन्यत् कुर्याद् वा ब्राह्मणो मदमोहितः॥

**அமேத்யா வா பதேந் மத்தோ வைதிகம் வாஅப்யுதாஹரேத் |**
**அகார்யமந்யத் குர்யாத் வா ப்ராஹ்மணோ மதமோஹித: || 96**

சாராயம் குடித்து போதையில் இருக்கும் பிராம்மணன் மலத்திலும் விழலாம்; வேதமும் ஓதலாம்; வேறு கூடாத காரியம் எதுவும் செய்யலாம்.

यस्य कायगतं ब्रह्म मद्येनाऽऽप्लाव्यते सकृत्।
तस्य व्यपैति ब्राह्मण्यं शूद्रत्वं च स गच्छति॥

**யஸ்ய காயகதம் ப்ரஹ்ம மத்யேநாஆப் லாவ்யதே ஸக்ருத் |**
**தஸ்ய வ்யபைதி ப்ராஹ்மண்யம் சூத்ரத்வம் சஸ கச்சதி || 97**

எப்போது போதையிலிருந்து ஒரு பிராம்மணன் வேதவாக்கியம் கூறுகிறானோ, அப்போதே அவனுடைய பிராம்மணத் தன்மை அவனிடமிருந்து நீங்கிவிடும். உடனடியாக அவன் சூத்திரனாகிறான்.

एषा विचित्राऽभिहिता सुरापानस्य निष्कृतिः।
अत ऊर्ध्वं प्रवक्ष्यामि सुवर्णस्तेयनिष्कृतिम्॥

**ஏஷா விசித்ரா அபிஹிதா சுராபானஸ்ய நிஷ்க்ருதி: |**
**அத ஊர்த்வம் ப்ரவக்ஷ்யாமி சுவர்ணஸ்தேய நிஷ்க்ருதிம் || 98**

இதுவரை போதை தரும் கள், சாராயம் முதலானவைகளைத் குடிப்பதால் ஏற்படும் பாவங்கள், அந்தப் பாப பரிகாரங்கள் கூறப்பட்டன. இனி தங்கத்தைத் திருடியதால் ஏற்படும் பாப பரிகாரங்களைக் கூறுகிறேன்.

सुवर्णस्तेयकृद् विप्रो राजानमभिगम्य तु।
स्वकर्म ख्यापयन् ब्रूयान् मां भवाननुशास्त्विति॥

**சுவர்ணஸ்தேயக்ருத் விப்ரோ ராஜாநமபிகம்ய து |**
**ஸ்வகர்ம க்யாபயன் ப்ரூயாந் மாம் பவாநநு ஷாஸ்த்விதி || 99**

தங்கத்தை திருடிய விப்ரன் அரசனிடம் சென்று தான் திருடியதை எடுத்துக் கூறி தனக்கு தண்டனை வழங்குமாறு கேட்க வேண்டும்.

गृहीत्वा मुसलं राजा सकृद् धन्यात् तु तं स्वयम्।
वधेन शुध्यति स्तेनो ब्राह्मणस् तपसैव वा॥

**க்ருஹீத்வா முஸலம் ராஜா ஸக்ருத் தஷ்யாத் து தம் ஸ்வயம் |**
**வதேந சுத்யதி ஸ்தேநோ ப்ராஹ்மணஸ் தபஸைவ வா || 100**

திருடிய பிராம்மணன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள மன்னனிடம் போகும்போது தோளில் ஒரு உலக்கையை சுமந்து செல்ல வேண்டும். அதை அரசனிடம் கொடுக்க வேண்டும். அரசன் அந்த உலக்கையால் அப்பிராம்மணனை அடிக்க வேண்டும். அந்த அடியால் பிராம்மணன் இறந்தாலும் அல்லது இறந்ததற்கு சமமாக வீழ்ந்தாலும் அந்தப் பாபத்திலிருந்து நீங்குவான்.

அல்லது திருடிய பிராம்மணன் தவம் செய்தும் அந்தப் பாபத்திலிருந்து விடுதலையடையலாம்.

तपसाऽपनुनुत्सुस् तु सुवर्णस्तेयजं मलम्।
चीरवासा द्विजोऽरण्ये चरेद् ब्रह्महणो व्रतम्॥

**தபஸா அபனு னுத்சுஸ்து சுவர்ணஸ்தேயஜம் மலம் |**
**சீரவாஸா த்விஜோ அரண்யே சரேத் ப்ரஹ்மஹணோ வ்ரதம் || 101**

தவத்தால் தன்னுடைய பாபத்தை நீக்கிக் கொள்ள நினைப்பவன், மரவுரி தரித்து ஆரண்யத்தில் பன்னிரண்டு வருடங்கள் பிரம்மஹத்தி பாபம் போக விதிக்கப்பட்ட விரதத்தைக் கடைப்பிடித்தபடி வாழ வேண்டும்.

एतैर् व्रतैरपोहेत पापं स्तेयकृतं द्विजः।
गुरुस्त्रीगमनीयं तु व्रतैरेभिरपानुदेत्॥

**ஏதைர் வ்ரதைரபோ ஹேத பாபம் ஸ்தேய க்ருதம் த்விஜ: |**
**குருஸ்த்ரீகமநீயம் து வ்ரதைரேபிரபா ஆனுதேத் ॥ 102**

த்விஜர்கள், பிராம்மணனுடைய தங்கத்தை திருடிய பாபத்தை இத்தகைய பிராயச்சித்தங்களால் போக்கிக் கொள்ள வேண்டும். இனி குருவின் மனைவியைப் புணர்ந்த பாபத்தைப் போக்கிக் கொள்ளத் தக்க பிராயச்சித்தங்களைக் கூறுகிறேன்.

गुरुतल्प्यभिभाष्यैनस् तप्ते स्वप्यादयोमये।
सूर्मी ज्वलन्तीं वाऽऽश्लिष्येन् मृत्युना स विशुध्यति॥

**குருதல்ப்யபி பாஷ்யைநஸ் தப்தே ஸ்வப்யாதயோமயே |**
**சூர்மீம் ஜ்வலந்தீம் வா ஆஷ்லிஷ்யேந் ம்ருத்யுநா ஸ விசுத்யதி ॥ 103**

குரு மனைவியைப் புணர்ந்தவன், தான் செய்த பாபத்தைக் கூறி, பழுக்க காய்ச்சிய இரும்புக் கட்டிலில் படுக்க வேண்டும். அல்லது பழுக்க காய்ச்சிய இரும்பினால் செய்யப்பட்ட பெண் உருவத்தை அணைத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விரு வழிகளாலும் மரணத்தை அடைந்தவன் பாபம் நீங்கிப் பரிசுத்தனாகிறான்.

स्वयं वा शिश्नवृषणावुत्कृत्याऽऽधाय चाञ्जलौ।
नैर्ऋतीं (नैरृतीं) दिशमातिष्ठेदा निपातादजिह्मगः॥

**ஸ்வயம் வா ஷிஷ்நவ்ருஷணா வ்ருத்க்ருத்யா ஆதாய சா ஆஞ்ஜலௌ |**
**நைர்ருதீம் திஷமாதிஷ்டேதா நிபாதாதஜிஹ்மக: ॥ 104**

அல்லது தனது குறி, விதைகளை அறுத்துக் கையிலேந்திக் கொண்டு இறக்கும் வரையில் தென்மேற்குத் திசையை நோக்கிப் போக வேண்டும்.

खट्वाङ्गी चीरवासा वा श्मश्रुलो विजने वने।
प्राजापत्यं चरेत् कृच्छ्रमब्दमेकं समाहितः॥

**கட்வாங்கீ சீரவாஸா வா ஷ்மஷ்ருலோ விஜநே வநே |**
**ப்ராஜாபத்யம் சரேத் க்ருச்ரமப்தமேகம் ஸமாஹித: ॥ 105**

தன் மனைவி என்று எண்ணி குருபத்தினியைப் புணர்ந்தவன் குண்டாந்தடியை ஏந்தி, கிழிந்த ஆடைகளை உடுத்தி, தலைமுடி, தாடிகளை வளர்த்துக் கொண்டு, நகங்களையும் வெட்டாமல் வளர்த்தபடி மனத்தை அடக்கியவனாக யாருமற்ற வனத்தில் ஒரு வருட. காலம் பிராஜாபத்ய விரதத்தை கடைப்பிடிக்க வேண்டும்.

चान्द्रायणं वा त्रीन् मासानभ्यस्येन् नियतेन्द्रियः।
हविष्येण यवाग्वा वा गुरुतल्पापनुत्तये॥

**சாந்த்ராயணம் வா த்ரீந் மாஸாநப் யஸ்யேந் நியதேந்த்ரிய: |**
**ஹவிஷ்யேண யவாக்வா வா குருதல்பா அபனுத்தயே || 106**

*அல்லது இந்திரியங்களை அடக்கியவனாக, யவை தானியத்தையும், பழம் கிழங்குகளையும் சாப்பிட்டபடி, மூன்று மாதங்கள் சாந்திராயண விரதத்தை கடைப்பிடிக்க வேண்டும்.*

एतैर् व्रतैरपोहेयुर् महापातकिनो मलम्।
उपपातकिनस् त्वेवमेभिर् नानाविधैर् व्रतैः॥

**ஏதைர் வ்ரதைரபோஹேயுர் மஹாபாதகிநோ மலம் |**
**உபபாதகிநஸ் த்வேவமேபிர் நாநாவிதைர் வ்ரதை: || 107**

*இவ்வாறாக மகா பாதகங்களை நீக்கிக் கொள்வதற்கான வழிமுறைகள் கூறப்பட்டன. இனி உபபாதகங்களின் பாபங்களை நீக்கிக் கொள்ளத்தக்க பிராயச்சித்த விரதங்களை கூறுகிறேன்.*

उपपातकसंयुक्तो गोघ्नो मासं यवान् पिबेत्।
कृतवापो वसेद् गोष्ठे चर्मणा तेन संवृतः॥

**உபபாதக ஸம்யுக்தோ கோக்நோ மாஸம் யவாந் பிபேத் |**
**க்ருதவாபோ வஸேத் கோஷ்டே சர்மணா தேந ஸம்வ்ருத: || 108**

चतुर्थकालमश्नीयादक्षारलवणं मितम्।
गोमूत्रेणाऽऽचरेत् स्नानं द्वौ मासौ नियतेन्द्रियः॥

**சதுர்தகாலமஷ்நீ யாதக்ஷாரலவணம் மிதம் |**
**கோமூத்ரேணா ஆசரேத் ஸ்நாநம் த்வௌ மாஸௌ நியதேந்த்ரிய || 109**

दिवाऽनुगच्छेद् गास् तास् तु तिष्ठन्नूर्ध्वं रजः पिबेत्।
शुश्रूषित्वा नमस्कृत्य रात्रौ वीरासनो वसेत्॥

**திவா அனுகச்சேத் காஸ் தாஸ் து திஷ்டந் ஊர்த்வம் ரஜ:பிபேத் |**
**சுஷ்ருஷித்வா நமஸ்க்ருத்ய ராத்ரௌ வீராசநோ வசசேத் || 110**

तिष्ठन्तीष्वनुतिष्ठेत् तु व्रजन्तीष्वप्यनुव्रजेत्।
आसीनासु तथाऽऽसीनो नियतो वीतमत्सरः॥

**திஷ்டந்தீஷ்வனு திஷ்டேத் து வ்ரஜந்தீஷ்வப்யனு வ்ரஜேத் |**
**ஆஸீநாசு ததா ஆஸீநோ நியதோ வீதமத்ஸர: || 111**

आतुरामभिशस्तां वा चौरव्याघ्रादिभिर् भयैः।
पतितां पङ्कलग्नां वा सर्वोपायैर् विमोचयेत्॥

**ஆதுராமவிஷஸ்தாம் வா சௌரவ்யாக்ராதிபிர் பயை: |**
**பதிதாம் பங்கலக்நாம் வா ஸர்வோ பாயைர் விமோசயேத் ||** 112

उष्णे वर्षति शीते वा मारुते वाति वा भृशम्।
न कुर्वीताऽऽत्मनस् त्राणं गोरकृत्वा तु शक्तितः॥

**உஷ்ணே வர்ஷதி ஷீதேவா மாருதே வாதி வா ப்ருஷம் |**
**குர்வீதா ஆத்மநஸ் த்ராணம் கோரக்ருத்வா து ஷக்தித: ||** 113

आत्मनो यदि वाऽन्येषां गृहे क्षेत्रेऽथवा खले।
भक्षयन्तीं न कथयेत् पिबन्तं चैव वत्सकम्॥

**ஆத்மநோ யதி வாஅந்யேஷாம் க்ருஹே க்ஷேத்ரே அதவா கலே |**
**பக்ஷயந்தீம் ந கதயேத் பிபந்தம் சைவ வத்ஸகம் ||** 114

अनेन विधिना यस् तु गोघ्नो गामनुगच्छति।
स गोहत्याकृतं पापं त्रिभिर् मासैर् व्यपोहति॥

**அநேந விதிநா யஸ் து கோக்நோகாமனுகச்சதி |**
**ஸ கோஹத்யாக்ருதம் பாபம் த்ரிபிர் மாஸைர் வ்யபோஹதி ||** 115

பசுவைக் கொன்றவன் மொட்டையடித்துக் கொண்டு ஒரு மாதம் முழுவதும் நொய்க்கஞ்சி குடிக்க வேண்டும். அப்போது தான் கொன்ற பசுவின் தோலைப் போர்த்துக் கொண்டு பசுக் கொட்டிலில் வசிக்க வேண்டும்.

அடுத்த இரண்டு மாதங்கள் நான்காவது காலத்தில் மட்டும் ஒருவேளை உணவை உப்பும் உறைப்புமின்றி சாப்பிட வேண்டும். பசுவின் சிறுநீரால் நீராட வேண்டும். புலன்களை அடக்கியவனாக இருக்க வேண்டும்.

இந்த மூன்று மாதங்களும் பகல் பொழுதில் மேய்ச்சலுக்குப் போகும் பசுக்களுடன் தானும் போக வேண்டும். அவை தாவிச் செல்லும்போது மேலே கிளம்பும் புழுதியால் அவன் உடல் மூடப்படவேண்டும். மாலையில் மேய்ச்சல் முடிந்து வந்த பசுக்களுக்கு தேவையான பணிவிடைகளைச் செய்ய வேண்டும். பிறகு பசுக்களை வணங்கி, வீராசனத்தில் இரவு முழுவதும் அமர்ந்திருக்கவேண்டும். பகலில் பசுக்கள் திரிந்து கொண்டிருக்கும் போது தானும் அவைகளைத் தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும்.அவைகள் அமர்ந்தால் அவைகளைத் தொடர்ந்து தானும் அமரலாம். இத்தகைய நியமங்களை கோபதாபங்களற்றவனாக கடைப்பிடிக்க வேண்டும்.

ஆரண்யத்தில் பசுக்கள் மேய்ந்து கொண்டிருக்கும் போது, திருடர்களாலும் புலி முதலியவற்றாலும் அவைகளுக்கு ஆபத்து நேரிட்டாலும் அல்லது பசுக்கள் பள்ளத்தில் விழுதல் முதலான ஆபத்துக்களில் மாட்டிக் கொண்டாலும் தன் சக்தி முழுவதையும் பயன்படுத்தி பசுக்களைக் காப்பாற்ற வேண்டும்.

மிகுந்த வெயிலிலும், மழையிலும், புயல் காற்றிலும் தன்னைக் காத்துக் கொள்வதை முதன்மையாக எண்ணாமல் பசுக்களைக் காக்க வேண்டும்.

தன்னுடைய வீட்டிலோ, பிறரது வீட்டிலோ, வயலிலோ, களத்திலோ பசுக்கள் மேய்ந்தால் அதை வெளியில் சொல்லக்கூடாது. கன்று பால் குடித்ததையும் வெளியில் சொல்லக் கூடாது.

இவ்வாறாக, பசுவைக் கொன்றவன் பசுக்களைக் காத்து விரதம் அனுஷ்டித்தால் பசுவைக் கொன்ற பாவத்தினின்றும் விடுதலை யடைவான்.

वृषभैकादशा गाश् च दद्यात् सुचरितव्रतः।
अविद्यमाने सर्वस्वं वेदविद्भ्यो निवेदयेत्॥

**வ்ருஷபை காதஷா காஷ் ச தத்யாத் சுசரிதவ்ரத: |**
**அவித்யமாநே ஸர்வஸ்வம் வேதவித்ப்யோ நிவேதயேத் ||** **116**

இவ்வாறாக விரதமனுஷ்டித்து முடித்த பிறகு ஒரு காளை யையும், பத்து பசுக்களையும் தானம் செய்ய வேண்டும். அந்த அளவு தனம் இல்லாவிடில் வேத விற்பன்னர்களுக்கு தன்னுடைய தனம் முழுவதையும் அளித்துவிட வேண்டும்.

एतदेव व्रतं कुर्युरुपपातकिनो द्विजाः।
अवकीर्णिवर्ज्यं शुद्ध्यर्थं चान्द्रायणमथापि वा॥

**ஏததேவ வ்ரதம் குர்யுருபபாதகிநோ த்விஜா: |**
**அவகீர்ணிவர்ஜம் சுத்யர்தம் சாந்த்ராயணமதா அபி வா ||** **117**

இவ்வாறாக அவகீர்ணியைத் தவிர்த்து மற்ற உபபாதகங்கள் செய்தவர்கள் அனைவருமே தமது பாபங்கள் நீங்குவதற்காக பசுவைக் கொன்றதற்குச் சொல்லப்பட்ட பிராயச்சித்தங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். அல்லது சாந்த்ராயண விரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

अवकीर्णी तु काणेन गर्दभेन चतुष्पथे।
पाकयज्ञविधानेन यजेत निर्ऋतिं निशि॥

**அவகீர்ணீது காணேந கர்தபேண சதுஷ்பதே |**
**பாகயக்ஞவிதாநேந யஜேத நிர்ருதிம் நிஷி ||** **118**

*அவகீர்ணியானவன், ஒரு கண் அற்ற கழுதையைக் கொண்டு, இரவு நேரத்தில் நாற்சந்தி கூடுமிடத்தில் நிர்ரிதி தேவதைக்கு ஹோமம் செய்ய வேண்டும்.*

**हुत्वाऽग्नौ विधिवद् धोमानन्ततश् च समित्यृचा।**
**वातेन्द्रगुरुवह्नीनां जुहुयात् सर्पिषाऽऽहुतीः॥**

**ஹூத்வா அக்நௌ விதிவத் தோ மாநந்ததஷ் ச ஸமித்ய்ரு சா |**
**வாதேந்த்ர குரு வஹ்நீநாம் ஜுஹுயாத் ஸர்பிஷா ஆஹுதீ: || 119**

*இவ்வாறு நிர்ரிதி தேவதைக்கு விதிப்படி ஹோமம் செய்தபிறகு வாயு, இந்திரன், பிருஹஸ்பதி, அக்நி முதலானோருக்கு நெய்யால் ஹோமம் செய்ய வேண்டும்.*

**कामतो रेतसः सेकं व्रतस्थस्य द्विजन्मनः।**
**अतिक्रमं व्रतस्याऽऽहुर् धर्मज्ञा ब्रह्मवादिनः॥**

**காமதோ ரேதஸ: ஸேகம் வ்ரதஸ்தஸ்ய த்விஜன்மத: |**
**அதிக்ரமம் வ்ரதஸ்யா ஆஹுர் தர்மக்ஞா ப்ரஹ்ம வாதிந: || 120**

*பிரம்மசரிய விரதம் ஏற்றுள்ள த்விஜன், மனத்தில் காமம் கொண்டவனாக ஒரு பெண்ணுடன் புணர்ந்தால் அவன் அவகீர்ணி எனப்படுவான்.*

**मारुतं पुरुहूतं च गुरुं पावकमेव च।**
**चतुरो व्रतिनोऽभ्येति ब्राह्मं तेजोऽवकीर्णिनः॥**

**மாருதம் புருஹூதம் ச குரும் பாவகமேவ ச |**
**சதுரோ வ்ரதிநோ அப்யேதி ப்ராஹ்மம் தேஜோ அவகீர்ணிந: || 121**

*அவகீர்ணியானவனின் தேஜஸ் (இது நாள் வரை செய்த வேதாப்யாசத்தாலும், அனுஷ்டானங்களாலும் ஏற்பட்ட பிரம்ம தேஜஸ்) அவனை விட்டு நீங்கி வாயு இந்திரன், ப்ருஹஸ்பதி, அக்னி ஆகியோரிடம் சேர்ந்து விடும்.*

**एतस्मिन्नेनसि प्राप्ते वसित्वा गर्दभाऽजिनम्।**
**सप्ताऽगारांश् चरेद् भैक्षं स्वकर्म परिकीर्तयन्॥**

**ஏதஸ்மிந்நேநஸி ப்ராப்தே வஸித்வா கர்தபா அஜிநம் |**
**ஸப்தா அகாராம்ஷ் சரேத் பைக்ஷ்யம் ஸ்வகர்மபரிகீர்தயந் || 122**

*அவகீர்ணியானவன் இப்போது சொல்லியபடி ஹோமத்தைச் செய்த பிறகு, கழுதையின் தோலைப் போர்த்திக் கொண்டு, தான் ஒரு அவகீர்ணி என்பதைச் சொல்லி ஏழு வீடுகளில் பிச்சையெடுக்க வேண்டும்.*

तेभ्यो लब्धेन भैक्षेण वर्तयन्नेककालिकम्।
उपस्पृशंस् त्रिषवणं त्वब्देन स विशुध्यति॥

**தேப்யோ லப்தேந பைக்ஷேண வர்தயந்நேக காளிகம் |**
**உபஸ்ப்ருஷம்ஸ் த்ரிஷவணம் த்வப்தேந ஸ விசுத்யதி || 123**

இவ்வாறாக பிச்சையெடுத்து தினமும் ஒருவேளை மட்டும் சாப்பிட வேண்டும். இவ்வாறாக ஒரு வருடம் விரதம் கடைப் பிடித்தால் அவன் பரிசுத்தமடைவான்.

जातिभ्रंशकरं कर्म कृत्वाऽन्यतममिच्छया।
चरेत् सान्तपनं कृच्छ्रं प्राजापत्यमनिच्छया॥

**ஜாதிப்ரம்ஷகரம் கர்ம க்ருத்வா அந்யதமமிச்சயா |**
**சரேத் ஸாந்தபநம் க்ருச்ரம் ப்ராஜாபத்யமநிச்சயா || 124**

ஜாதிபிரம்ஷகரம் என்னும் தன்னுடைய ஜாதியிலிருந்தும் வீழ்ந்து விடுகின்ற பாபச் செயல்களில் எதையேனும் அறிந்தே செய்தவன் சாந்தபனம் என்னும் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். தெரிந்தே செய்தால் பிரஜாபத்யக்ருச்ர விரதத்தைச் செய்ய வேண்டும்.

सङ्करापात्रकृत्यासु मासं शोधनमैन्दवम्।
मलिनीकरणीयेषु तप्तः स्याद् यावकैस् त्र्यहम्॥

**ஸங்கரா அபாத்ரக்ருத்யாசு மாஸம் ஷோதநமைந்தவம் |**
**மலிநீ கரணீயேஷு தப்த: ஸ்யாத் யாவகைஸ் த்ரயஹம் || 125**

சங்கரீகரணம், அபாத்ரீகரணம் எனப்படும் பாபச் செயல்களைச் செய்தவன் ஒருமாதம் சாந்ராயண விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

மலிநீகரணம் எனப்படும் பாபச் செயல்களைச் செய்தவன் மூன்று இரவுகள் கொதிக்கும் கஞ்சியைக் குடிக்க வேண்டும்.

तुरीयो ब्रह्महत्यायाः क्षत्रियस्य वधे स्मृतः।
वैश्येऽष्टमांशो वृत्तस्थे शूद्रे ज्ञेयस् तु षोडशः॥

**துரீயோ ப்ரஹ்மஹத்யாயா: க்ஷத்ரியஸ்ய வதே ஸ்ம்ருத: |**
**வைஷ்யே அஷ்டமாம்ஷோ வ்ருத்தஸ்தே சூத்ரே ஞேயஸ் துஷோடஷ: || 126**

க்ஷத்ரியனைக் கொன்றவன், பிரம்மஹத்தி பாபத்துக்குச் சொன்ன பன்னிரண்டாண்டுகள் கடைப்பிடிக்க வேண்டிய பிராயச்சித்த விரதத்தின் நாலில் ஒரு பங்கான மூன்று வருடங்கள் கடைப்பிடிக்க வேண்டும்.

வைசியனைக் கொன்றவன் ஒன்றரை வருடங்கள் கடைப்பிடிக்க வேண்டும்.

சூத்திரனைக் கொன்றவன் ஒன்பது மாதங்கள் கடைப்பிடிக்க வேண்டும்.

अकामतस् तु राजन्यं विनिपात्य द्विजोत्तमः।
वृषभैकसहस्रा गा दद्यात् सुचरितव्रतः॥

**அகாமதஸ்து ராஜந்யம் விநிபாத்ய த்விஜோத்தம: |**
**வ்ருஷபைகஸஹஸ்ரா கா தத்யாத் சுசரிதவ்ரத: || 127**

அறியாமல் க்ஷத்திரியனைக் கொன்ற த்விஜோத்தமன், ஆயிரம் பசுக்களையும் ஒரு காளையையும் வேதமோதும் பிராம்மணர்களுக்கு தானம் அளிக்க வேண்டும்.

त्र्यब्दं चरेद् वा नियतो जटी ब्रह्महणो व्रतम्।
वसन् दूरतरे ग्रामाद् वृक्षमूलनिकेतनः॥

**த்ரயப்தம் சரேத் வா நியதோ ஜடீ ப்ரஹ்மஹணோ வ்ரதம் |**
**வஸந் தூரதரே க்ராமாத் வ்ருக்ஷ மூல நிகேதந: || 128**

அல்லது புலனடக்கத்தோடு ஜடைகள் தரித்து கிராமத்துக்கு வெளியே மரத்தடியில் மூன்று வருடங்கள் பிரம்மஹத்திக்கான பிராயச்சித்த விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

एतदेव चरेदब्दं प्रायश्चित्तं द्विजोत्तमः।
प्रमाप्य वैश्यं वृत्तस्थं दद्याद् वैकशतं गवाम्॥

**ஏததேவ சரேதப்தம் ப்ராயக்ஷ்சித்தம் த்விஜோத்தம: |**
**ப்ரமாப்ய வைஷ்யம் வ்ருத்தஸ்தம் தத்யாத் வைகஷதம் கவாம் || 129**

வைசியனைக் கொன்ற த்விஜோத்தமன் இதேபோன்று ஒரு வருடம் விரதம் கடைப்பிடிக்க வேண்டும். மேலும் நூற்றொரு பசுக்களையும் தானம் செய்ய வேண்டும்.

एतदेव व्रतं कृत्स्नं षण्मासान् शूद्रहा चरेत्।
वृषभैकादशा वाऽपि दद्याद् विप्राय गाः सिताः॥

**ஏததேவ வ்ரதம் க்ருத்ஸ்நம் ஷண்மாஸாந் சூத்ரஹா சரேத் |**
**வ்ருஷபைகாதஷா வாஅபி தத்யாத் விப்ராயகா: ஸிதா: || 130**

சூத்திரனைக் கொன்ற த்விஜோத்தமன் இதே விரதத்தை ஆறு மாதங்கள் கடைப்பிடிக்க வேண்டும். மேலும் பத்து பசுக்களையும் ஒரு காளையையும் தானமளிக்க வேண்டும்.

मार्जारनकुलौ हत्वा चाषं मण्डूकमेव च।
श्वगोधोलूककाकांश् च शूद्रहत्याव्रतं चरेत्॥

**மார்ஜாரநகுலௌ ஹத்வா சாஷம் மண்டூகமேவ ச |**
**ஷ்வ கோதோலூக காகாம்ஷ் ச சூத்ரஹத்யா வ்ரதம் சரேத் ||** 131

பூனை, கீரி, குருவி, தவளை, நாய், உடும்பு, கோட்டான், காகம் முதலானவற்றை வேண்டுமென்றே கொன்றால் சாந்த்ராயண விரதத்தை கடைப்பிடிக்க வேண்டும்.

पयः पिबेत् त्रिरात्रं वा योजनं वाऽध्वनो व्रजेत्।
उपस्पृशेत् स्रवन्त्यां वा सूक्तं वाऽब्दैवतं जपेत्॥

**பய: பிபேத் த்ரிராத்ரம் வாயோஜநம் வாஅத்வநோ வ்ரஜேத் |**
**உபஸ்ப்ருஷேத் ஸ்ரவந்த்யாம் வாசூக்தம் வாஅப்தைவதம் ஜபேத் ||** 132

வேண்டுமென்றே கொல்லாதபோது, அந்தப் பாபத்திலிருந்து விடுபட மூன்று நாட்கள் பாலை மட்டும் ஆஹாரமாக உட்கொண்டு இருக்க வேண்டும்.

அல்லது, ஒரு யோஜனை தூரம் நடக்க வேண்டும். தொடர்ந்து மூன்று நாட்கள் அவ்வாறு நடக்க வேண்டும்.

அதற்கு சக்தியற்றவன் மூன்று நாட்கள் நதியில் நீராடவேண்டும், அல்லது வருண மந்திரங்களை ஜபிக்க வேண்டும்.

अभ्रिं कार्ष्णायसीं दद्यात् सर्पं हत्वा द्विजोत्तमः।
पलालभारकं षण्ढे सैसकं चैकमाषकम्॥

**அப்ரிம் கார்ஷ்ணா யஸீம் தத்யாத் ஸர்பம் ஹத்வா த்விஜோத்தம: |**
**பலால பாரகம் ஷண்டே ஸைஸகம் சைகமாஷகம் ||** 133

நல்ல பாம்பைக் கொன்ற த்விஜோத்தமன் இரும்புத் தடியை தானம் செய்ய வேண்டும். வேறு பாம்பை அடித்தால் வைக்கோல் சுமையையும் ஒரு மாடம் எடையுள்ள ஈயப் பாத்திரத்தையும் தானம் செய்ய வேண்டும்.

घृतकुम्भं वराहे तु तिलद्रोणं तु तित्तिरौ।
शुके द्विहायनं वत्सं क्रौञ्चं हत्वा त्रिहायनम्॥

**க்ருதகும்பம் வராஹேது திலத்ரோணம் து தித்திரௌ |**
**சுகே த்விஹாயநம் வத்ஸம் க்ரௌஞ்சம் ஹத்வா த்ரிஹாயநம் ||** 134

பன்றியைக் கொன்றவன் நெய் நிரம்பிய குடத்தை தானம் செய்ய வேண்டும்.

தித்திரிப் பறவையைக் கொன்றவன் ஒரு துரோணம் எள்ளை தானம் செய்ய வேண்டும்.

கிளியைக் கொன்றவன் இரண்டு வயது கன்றை தானம் செய்ய வேண்டும்.

கிரௌஞ்ச பறவையைக் கொன்றால் மூன்று வயது கன்றை தானம் செய்ய வேண்டும்.

हत्वा हंसं बलाकां च बकं बर्हिणमेव च।
वानरं श्येनभासौ च स्पर्शयेद् ब्राह्मणाय गाम्॥

**ஹத்வா ஹம்ஸம் பலாகாம் ச பகம் பர்ஹிணமேவ ச |**
**வானரம் ஷ்யேநபாஸௌ ச ஸ்பர்ஷயேத் ப்ராஹ்மணாய காம் || 135**

அன்னம், நாரை, கொக்கு, மயில், குரங்கு, ராஜாளி, கழுகு முதலான பறவைகளைக் கொன்றால் பிராம்மணனுக்கு ஒரு பசுவை தானம் செய்ய வேண்டும்.

वासो दद्याद् धयं हत्वा पञ्च नीलान् वृषान् गजम्।
अजमेषावनड्वाहं खरं हत्वैकहायनम्॥

**வாஸோ தத்யாத் தயம் ஹத்வா பஞ்ச நீலாந் வ்ருஷாந்கஜம் |**
**அஜமேஷா வநட்வாஹம் கரம் ஹத்வைக ஹாயநம் || 136**

குதிரையைக் கொன்றவன், வஸ்திரதானம் செய்ய வேண்டும். யானையைக் கொன்றவன், ஐந்து கறுப்புக் காளைகளைத் தானம் செய்ய வேண்டும்.

ஆட்டைக் கொன்றவன், ஒரு காளையைத் தானம் செய்ய வேண்டும்.

கழுதையைக் கொன்றவன் ஒரு வயது கன்றை தானம் செய்ய வேண்டும்.

क्रव्यादांस् तु मृगान् हत्वा धेनुं दद्यात् पयस्विनीम्।
अक्रव्यादान् वत्सतरीमुष्ट्रं हत्वा तु कृष्णलम्॥

**க்ரவ்யாதாம்ஸ்து ம்ருகாந் ஹத்வா தேனும் தத்யாத் பயஸ்விநீம் |**
**அக்ரவ்யாதாந் வத்ஸதரீமுஷ்ட்ரம் ஹத்வா து க்ருஷ்ணலம் || 137**

மாமிசத்தை உண்ணும் புலி முதலான மிருகங்களைக் கொன்றால், நன்கு பால் கறக்கும் பசுவை தானமளிக்க வேண்டும்.

மாமிசம் உண்ணாத மிருகங்களைக் கொன்றால், குன்றிமணி எடைத் தங்கத்தை தானமளிக்க வேண்டும்.

चीनकार्मुकबस्ताऽवीन् पृथग् दद्याद् विशुद्धये।
चतुर्णामपि वर्णानां नारीर् हत्वाऽनवस्थिताः॥

**ஜீநகார்முகபஸ்தா அவீந் ப்ருதக் தத்யாத் விசுத்தயே |**
**சதுர்ணாமபி வர்ணாநாம் நாரீர் ஹத்வா அநவஸ்திதா: ||** 138

விபச்சாரியான பிராம்மண, க்ஷத்ரிய, வைசிய, சூத்திரப் பெண்ணைக் கொல்ல நேர்ந்தால் நன்கு வளர்ந்துள்ள ஆடுகளைத் தானம் செய்ய வேண்டும்.

दानेन वधनिर्णेकं सर्पादीनामशक्नुवन्।
एकैकशश् चरेत् कृच्छ्रं द्विजः पापाऽपनुत्तये॥

**தாநேந வதநிர்ணேகம் ஸர்பாதீநாம ஷக்னுவந் |**
**ஏகைகஷஷ் சரேத் க்ருச்ரம் த்விஜ: பாபா அபநுத்தயே ||** 139

பாம்பு முதலானவைகளைக் கொல்ல நேர்ந்தபோது, குறிப்பிட்டுள்ள படி தானங்கள் செய்ய இயலாவிடில், கிருச்ர விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

अस्थिमतां तु सत्त्वानां सहस्रस्य प्रमापणे।
पूर्णे चाऽनस्यनस्थ्नां तु शूद्रहत्याव्रतं चरेत्॥

**அஸ்திமதாம் து ஸத்வாநாம் ஸஹஸ்ரஸ்ய ப்ரமாபணே |**
**பூர்ணே சா அனஸ்யநஸ்த்நாம் து சூத்ரஹத்யாவ்ரதம் சரேத் ||** 140

எலும்புகளற்ற பிராணிகளை ஆயிரம் கொன்றாலும், கொசு முதலானவற்றை ஒரு வண்டிச் சுமைவரை கொன்றாலும், சூத்திரனைக் கொன்றதற்குரிய பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

किञ्चिदेव तु विप्राय दद्यादस्थिमतां वधे।
अनस्थ्नां चैव हिंसायां प्राणायामेन शुध्यति॥

**கிஞ்சிதேவ து விப்ராய தத்யாதஸ்திமதாம் வதே |**
**அநஸ்த்நாம் சைவ ஹிம்ஸாயாம் ப்ராணாயாமேந அத்யதி ||** 141

எலும்புகள் இருக்கும் பிராணிகளில் ஒன்றைக் கொன்ற போது, ஒரு பணம் பிராம்மணனுக்கு தானம் செய்ய வேண்டும். கொசு முதலானவற்றைக் கொன்றால் பிராணாயாமம் செய்ததும் பாவம் நீங்கும்.

फलदानां तु वृक्षाणां छेदने जप्यमृक्शतम्।
गुल्मवल्लीलतानां च पुष्पितानां च वीरुधाम्॥

**பலதாநாம் து வ்ருக்ஷாணாம் சேதநே ஜப்யம்ருக்ஷதம் |**
**குல்மவல்லீலதாநாம் ச புஷ்பிதாநாம் ச வீருதாம் ||** 142

பழங்களைத் தரும் மரங்களையும், மரங்களைச் சுற்றிக் கொண்டு படர்ந்திருக்கும் கொடிகளையும், பூக்கும் கொடிகளையும், செடிகளையும் வெட்டினால், ஒன்றை வெட்டியதற்கு சாவித்ரி முதலான ரிக்குகள் நூறு ஜபிக்க வேண்டும்.

अन्नाद्यजानां सत्त्वानां रसजानां च सर्वशः।
फलपुष्पोद्भवानां च घृतप्राशो विशोधनम्॥

**அந்நாத்யஜாநாம் ஸத்வாநாம் ரஸஜாநாம் ச ஸர்வஷ: |**
**பல பூஷ்போத்பவாநாம் ச க்ருதப்ராஷோ விஷோதநம் ||** 143

நெல் முதலியவைகளில் தோன்றியவையும், சாறுகளில் (ரசங்களில்) தோன்றியவையும், பழங்களில் தோன்றியவையும், மலர்களில் தோன்றியவையையுமான உயிர்களைக் கொன்ற போது, நெய்யை உண்டால் பாபம் நீங்கும்.

कृष्टजानामोषधीनां जातानां च स्वयं वने।
वृथाऽऽलम्भेऽनुगच्छेद् गां दिनमेकं पयोव्रतः॥

**க்ருஷ்ட ஜாநாமோஷதீநாம் ஜாதாநாம் ச ஸ்வயம் வநே |**
**வ்ருதா ஆலம்பேஅனுகச்சேத் காம் திநமேகம் பயோவ்ரத: ||** 144

உழுத நிலத்தில் விளைந்த ஓஷதிகள், பயிர்கள், வனத்தில் தோன்றிய தானியங்கள் முதலானவைகளை காரணமின்றி வெட்டினால், ஒரு நாள் பயோவிரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

एतैर् व्रतैरपोह्यं स्यादेनो हिंसासमुद्भवम्।
ज्ञानाऽज्ञानकृतं कृत्स्नं शृणुताऽनाद्यभक्षणे॥

**ஏதைர் வ்ரதைரபோஹ்யம் ஸ்யாதேநோ ஹிம்ஸாஸமுத்பவம் |**
**ஞாநா அஞ்ஞாநக்ருதம் க்ருத்ஸ்நம் ஷ்ருணுதா அநாத்ய பக்ஷணே ||** 145

இவ்வாறான பிராயச்சித்தங்களால் தெரிந்தோ தெரியாமலோ செய்த பாபங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். இனி உண்ணத்தகாத வற்றை உண்டதால் ஏற்பட்ட தோஷங்களை நீக்கிக் கொள்ளுவதற்கான பிராயச்சித்தங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்.

अज्ञानाद् वारुणीं पीत्वा संस्कारेणैव शुध्यति।
मतिपूर्वमनिर्देश्यं प्राणान्तिकमिति स्थितिः॥

**அக்ஞாநாத் வாருணீம் பீத்வா ஸம்ஸ்காரேணைவ சுத்யதி |**
**மதிபூர்வமநிர்தேஷ்யம் ப்ராணாஅந்திக மிதி ஸ்திதி: ||** 146

தான் குடிப்பது கள் என்பதை அறியாமல் குடித்தவன், சாஸ்திரத்திலுள்ள சம்ஸ்காரங்களைச் செய்து கொள்வதால்

சுத்தமாவான். தெரிந்தே குடித்தவனுக்கு அவன் உயிரை விடுவது தான் பிராயச்சித்தமாக சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

अपः सुराभाजनस्था मद्यभाण्डस्थितास् तथा।
पञ्चरात्रं पिबेत् पीत्वा शङ्खपुष्पीशृतं पयः॥

**அப: சுரா பாஜ நஸ்தா மத்யபாண்டஸ்திதாஸ் ததா |**
**பஞ்சராத்ரம் பிபேத் பீத்வா ஷங்கபூஷ்பீஷ்ருதம் பய: || 147**

கள் இருந்த குடுவை, சாராயம் இருந்த குடுவைகளில் ஊற்றிவைக்கப்பட்ட தண்ணீரைக் குடித்தவன், ஐந்து தினங்கள் சங்குப்பூவைப் போட்டுக் காய்ச்சிய பாலைப் பருகவேண்டும்.

स्पृष्ट्वा दत्त्वा च मदिरां विधिवत् प्रतिगृह्य च।
शूद्रोच्छिष्टाश् च पीत्वाऽपः कुशवारि पिबेत् त्र्यहम्॥

**ஸ்ப்ருஷ்ட்வா தத்வா ச மதிராம் விதிவத் ப்ரதிக்ருஹ்ய ச |**
**சூத்ரோச்சிஷ்டாஷ்ச பீத்வா அப: குஷவாரி பிபேத் த்ரயஹம் || 148**

கள்ளையோ சாராயத்தையோ தொட்டாலும், பிறர்க்குக் கொடுத்தாலும், பிறர் கையிலிருந்து தான் வாங்கினாலும், சூத்திரன் குடித்து மிகுந்த நீரை பருகினாலும் மூன்று தினங்கள், தர்ப்பைகள் போட்டு காய்ச்சிய நீரைப் பருக வேண்டும்.

ब्राह्मणस् तु सुरापस्य गन्धमाघ्राय सोमपः।
प्राणानप्सु त्रिरायम्य घृतं प्राश्य विशुध्यति॥

**ப்ராஹ்மணஸ்து சுராபஸ்ய கந்தமாக்ராய ஸோமப: |**
**ப்ராணாநப்சு த்ரிராமஸ்யக்ருதம் ப்ராஷ்ய விசுத்யதி || 149**

சோமயாகம் செய்த விப்ரன் குடிகாரனிடமிருந்து வரும் சாராய நெடியை முகர நேர்ந்தால் நீரின் நடுவில் நின்று மூன்று பிராணாயாமங்கள் செய்து, நெய்யைப் பருக வேண்டும்.

अज्ञानात् प्राश्य विण्मूत्रं सुरासंसृष्टमेव च।
पुनःसंस्कारमर्हन्ति त्रयो वर्णा द्विजातयः॥

**அக்ஞானாத் ப்ராஷ்ய விண்மூத்ரம் சுராஸம்ஸ்ப்ருஷ்டமேவச |**
**பூந: ஸம்ஸ்காரமர்ஹந்தி த்ரயோ வர்ணா த்விஜாதய: || 150**

தெரியாமல் மல மூத்திரங்கள், கள் சேர்ந்தவைகளை உண்டு விட்டால் மீண்டும் ஸம்ஸ்காரம் (பூணூல் தரிப்பது) செய்து கொள்ள வேண்டும். இது மூவர்ணத்தாருக்குமான பிராயச்சித்தம்.

वपनं मेखला दण्डो भैक्षचर्या व्रतानि च।
निवर्तन्ते द्विजातीनां पुनःसंस्कारकर्मणि ॥

**வபனம் மேகலா தண்டோ பைக்ஷசர்யா வ்ரதாநி ச |**
**நிவர்தந்தே த்விஜாதீநாம் புந: ஸம்ஸ்கார கர்மணி || 151**

*மீண்டும் உபநயன சம்ஸ்காரம் செய்து கொள்ளும்போது சவரம் செய்து கொள்ளல், அரைஞாண் அணிதல், தண்டம் ஏந்துதல், பிட்சை ஏற்றல் முதலானவை செய்ய வேண்டியதில்லை.*

अभोज्यानां तु भुक्त्वाऽन्नं स्त्रीशूद्रोच्छिष्टमेव च।
जग्ध्वा मांसमभक्ष्यं च सप्तरात्रं यवान् पिबेत् ॥

**அபோஜ்யாநாம் து புக்த்வா அன்மன் ஸ்த்ரிசூத்ரோச்சிஷ்டமேவ ச |**
**ஜக்த்வா மாம்ஸபக்ஷ்யம் ச ஸப்தராத்ரம் யவாந் பிபேத் || 152**

*சாப்பிடக்கூடாதவர்களின் அன்னத்தை சாப்பிட்டாலும், பெண்களோ சூத்திரர்களோ சாப்பிட்டு மிகுந்த அன்னத்தை சாப்பிட்டாலும், சாப்பிடக்கூடாத ஜந்துக்களின் மாமிசத்தை சாப்பிட்டாலும் ஏழு நாட்கள் கொதிக்கும் யவை கஞ்சியைக் குடிக்க வேண்டும்.*

शुक्तानि च कषायांश् च पीत्वा मेध्यान्यपि द्विजः।
तावद् भवत्यप्रयतो यावत् तन् न व्रजत्यधः ॥

**ஷுக்தாநி ச கஷாயாம்ஷ் ச பீத்வா மேத்யாந்யபி த்விஜ: |**
**தாவத் பவத்யப்ரயதோ யாவத் தந் ந வ்ரஜத்யத: || 153**

*இயற்கையில் நல்ல இனிய ரசமாக இருந்தாலும் நீண்ட நாட்கள் வைத்திருப்பதால் புளித்தவைகளையும், புளிக்க வைத்துக் காய்ச்சிய கஷாயங்களையும், திரிந்து போன கெட்டுப்போன உணவு போன்றவற்றையும் சாப்பிட்டால், அது ஜீரணமாகும்வரை சாப்பிட்டவன் தூய்மையற்றவனாகிறான்.*

विड्वराहखरोष्ट्राणां गोमायोः कपिकाकयोः।
प्राश्य मूत्रपुरीषाणि द्विजश् चान्द्रायणं चरेत् ॥

**விட்வராஹகரோஷ்ட்ராணாம் கோமாயோ: கபிகாகயோ: |**
**ப்ராஷ்ய மூத்ரபுரீஷாணி த்விஜஷ் சாந்த்ராயணம் சரேத் || 154**

*பன்றி, கழுதை, ஒட்டகம், நரி, குரங்கு, காகம் இவற்றின் மல ஜலங்களை அறியாமல் உண்ட த்விஜன் சாந்த்ராயண விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.*

शुष्काणि भुक्त्वा मांसानि भौमानि कवकानि च।
अज्ञातं चैव सूनास्थमेतदेव व्रतं चरेत्॥

**ஷுஷ்காணி புக்த்வா மாம்ஸாநி பௌமாநி கவகாநி ச |**
**அக்ஞாதம் சைவ சூநாஸ்தமேததேவ வ்ரதம் சரேத் ||** 155

*வெயிலில் காயவைத்த மாமிசம், காளான், எதனுடையதென்று தெரியாத மாமிசம், கசாப்புக் கடையிலிருந்து வாங்கிய மாமிசங்களை சாப்பிட்டவனுக்கும் சாந்திராயண விரதமே பரிகாரமாகும்.*

क्रव्यादसूकरोष्ट्राणां कुक्कुटानां च भक्षणे।
नरकाकखराणां च तप्तकृच्छ्रं विशोधनम्॥

**க்ரவ்யாத சூகரோஷ்ட்ராணாம் குக்குடாநாம் ச பக்ஷணே |**
**நரகாக கராணாம் ச தப்தக்ருச்ரம் விஷோதநம் ||** 156

*மாமிசம் உண்ணும் ஐந்துக்கள், ஊர்ப் பன்றி, ஒட்டகம், கோழி, மனிதன், காகம், கழுதை முதலானவற்றின் மாமிசத்தை தெரிந்தே உண்டவன் தப்தகிருச்ர விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.*

मासिकान्नं तु योऽश्नीयादसमावर्तको द्विजः।
स त्रीण्यहान्युपवसेदेकाहं चोदके वसेत्॥

**மாஸிகா அன்னம் து யோ அஷ்நீயாதஸமாவர்தகோ த்விஜ: |**
**ஸத்ரீண் யஹாந்யுபவஸேதேகாஹம் சோதகே வஸேத் ||** 157

*சமாவர்த்தனம் செய்து கொள்ளாத பிரம்மசாரி ஏகோதிஷ்டம் முதலான மாமிச சிராத்த அன்னங்களைப் புசித்தால் மூன்று நாட்கள் உபவாசம் இருக்கவேண்டும். இம்மூன்று நாட்களில் ஒருநாள் முழுவதும் தண்ணீரில் அமிழ்ந்திருக்க வேண்டும்.*

ब्रह्मचारी तु योऽश्नीयान् मधु मांसं कथञ्चन।
स कृत्वा प्राकृतं कृच्छ्रं व्रतशेषं समापयेत्॥

**ப்ரஹ்மசாரீது யோ அஷ்நீயாந் மது மாம்ஸம் கதஞ்சந |**
**ஸக்ருத்வா ப்ராக்ருதம் க்ருச்ரம் வ்ரதசேஷம் ஸமாபயேத் ||** 158

*இத்தகைய பிரம்மசாரி தேன், மாமிசம் முதலானவற்றை சாப்பிட்டால் ப்ராஜாபத்ய விரதத்தை அனுஷ்டித்து, பிறகு பிரம்மசரிய விரதத்தின் மீதி நாட்களை பூர்த்தி செய்து சமாவர்த்தனம் செய்ய வேண்டும்.*

बिडालकाकाऽऽखूच्छिष्टं जग्ध्वा श्वनकुलस्य च।
केशकीटाऽवपन्नं च पिबेद् ब्रह्मसुवर्चलाम्॥

**பிடால காகா அமூகூச்சிஷ்டம் ஜக்த்வா ஷ்வநகுலஸ்ய ச |**
**கேஷகீடா அவபந்நம் ச பிபேத் ப்ரஹ்மசுவர்சலாம் ||** 159

பூனை, காகம், எலி, கோழி, அணில் முதலானவை சாப்பிட்டதையும், தலைமுடியோ புழுவோ விழுந்த அன்னத்தையும் மண்ணைக் கிள்ளிப் போட்டு தூய்மை செய்யாமல் சாப்பிட்டால், தர்ப்பைகள் போட்டு கொதிக்கக் காய்ச்சிய நீரைப் பருக வேண்டும்.

अभोज्यमन्नं नाऽत्तव्यमात्मनः शुद्धिमिच्छता।
अज्ञानभुक्तं तूत्तार्यं शोध्यं वाऽप्याशु शोधनैः॥

**அபோஜ்யமன்மன் நாஅத்தவ்ய மாத்மந: சுத்தி மிச்சதா |**
**அக்ஞாநபுக்தம் தூத்தார்யம் ஷோத்யம் வாஅப்யாஷு ஷோதநை: || 160**

ஆத்ம சுத்தியை விரும்புபவன் தூய்மை குறைந்த அன்னத்தை சாப்பிடலாகாது. தெரியாமல் சாப்பிட்டு விட்டால் சாப்பிட்டதை வாந்தி பண்ணிவிட வேண்டும். இல்லையேல் முதலில் கூறியபடி பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்.

एषोऽनाद्याऽदनस्योक्तो व्रतानां विविधो विधिः।
स्तेयदोषाऽपहर्तॄणां व्रतानां श्रूयतां विधिः॥

**ஏஷோ அநாத்யா அதநஸ்யோக்தோ வ்ரதாநாம் விவிதோ விதி: |**
**ஸ்தேய தோஷா அபஹார்த்ரூணாம் வ்ரதாநாம் ஷ்ரூயதாம் விதி: || 161**

சாப்பிடத்தகாததை சாப்பிட்டதற்காக தோஷம் நீங்கும் பிராயச்சித்தங்கள் இதுவரை கூறப்பட்டன. இனி பலவகையான திருட்டுக்களுக்குரிய பிராயச் சித்தங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்.

धान्याऽन्नधनचौर्याणि कृत्वा कामाद् द्विजोत्तमः।
स्वजातीयगृहादेव कृच्छ्राऽब्देन विशुध्यति॥

**தான்யா அந்நதனசௌர்யாணி க்ருத்வா காமாத் த்விஜோத்தம: |**
**ஸ்வஜாதீய க்ருஹாதேவ க்ருச்ராப்தேந விசுத்யதி || 162**

பிராம்மணன், பிராம்மணனது வீட்டில் தானியங்களையும், அன்னத்தையும், தனத்தையும் திருடினால், ஒரு வருடம் பிராஜாபத்ய விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

मनुष्याणां तु हरणे स्त्रीणां क्षेत्रगृहस्य च।
कूपवापीजलानां च शुद्धिश् चान्द्रायणं स्मृतम्॥

**மனுஷ்யாணாம் து ஹரணே ஸ்த்ரீணாம் க்ஷேத்ரக்ருஹஸ்ய ச |**
**கூபவாபீ ஜலாநாம் ச சுத்திஷ் சாந்த்ராயணம் ஸ்ம்ருதம் || 163**

ஆண்கள் பெண்களை அபகரித்துச் சென்றாலும், ஒருவனுடைய பூமி வீடுகளை அபகரித்தாலும், கிணறு துரவுகளை அபகரித்தாலும் சாந்திராயண விரதம் அனுஷ்டிக்க வேண்டும் என்று கூறுவர்.

द्रव्याणामल्पसाराणां स्तेयं कृत्वाऽन्यवेश्मतः।
चरेत् सान्तपनं कृच्छ्रं तन् निर्यात्याऽऽत्मशुद्धये॥

**த்ரவ்யாணாமல்ப ஸாராணாம் ஸ்தேயம் க்ருத்வா அந்ய வேஷ்மத: |**
**சரேத் ஸாந்தபநம் க்ருச்ரம் தந் நிர்யாத்யா ஆத்ம சுத்தயே || 164**

*சொற்ப மதிப்புள்ள பொருளைத் திருடியவன், சொந்தக் காரனுக்கு அப்பொருளைத் திருப்பிக் கொடுத்து விட்டு சாந்தபந க்ருச்ர விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.*

भक्ष्यभोज्याऽपहरणे यानशय्याऽऽसनस्य च।
पुष्पमूलफलानां च पञ्चगव्यं विशोधनम्॥

**பக்ஷ்யபோஜ்யா அபஹரணே யாநஷய்யா ஆஸநஸ்ய ச |**
**பூஷ்பமூலபலாநாம் ச பஞ்சகவ்யம் விஷோதநம் || 165**

*பணியாரங்களையும், பாயசங்களையும், வாகனங்களையும், ஆசனங்களையும், மலர்கள், பழங்கள் கிழங்குகளையும் திருடியவன் பஞ்சகவ்யம் சாப்பிட வேண்டும்.*

तृणकाष्ठद्रुमाणां च शुष्काऽन्नस्य गुडस्य च।
चेलचर्माऽऽमिषाणां च त्रिरात्रं स्यादभोजनम्॥

**த்ருணகாஷ்ட த்ருமாணாம் ச சுஷ்கா அன்னஸ்ய குடஸ்ய ச |**
**சேலசர்மா ஆமிஷாணாம் சத்ரிராத்ரம் ஸ்யாதபோஜநம் || 166**

*வைக்கோல், விறகு, அரிசி, வெல்லம், ஆடைகள், தோல்கள், மாமிசம் இவற்றில் ஏதொன்றைத் திருடினாலும் மூன்று நாட்கள் உபவாசம் இருக்கவேண்டும்.*

मणिमुक्ताप्रवालानां ताम्रस्य रजतस्य च।
अयःकांस्योपलानां च द्वादशाहं कणाऽन्नता॥

**மணிமுக்தா ப்ரவாலாநாம் தாம்ரஸ்ய ரஜதஸ்ய ச |**
**அய: காம்ஸ்யோபலாநாம் ச த்வாதஷாஹம் கணா அந்நதா || 167**

*ரத்தினங்கள், முத்துக்கள், பவழங்கள், செம்பு, வெள்ளி, இரும்பு, வெண்கலம், கற்கள் இவைகளில் ஏதொன்றைத் திருடினாலும் பன்னிரண்டு நாட்கள் நொய் உணவைச் சாப்பிடவேண்டும்.*

कार्पासकीटजोर्णानां द्विशफैकशफस्य च।
पक्षिगन्धौषधीनां च रज्ज्वाश् चैव त्र्यहं पयः॥

**கார்பாஸகீட ஜோர்ணாநாம் த்விஷபைகஷபஸ்ய ச |**
**பக்ஷிகள்தௌஷதீநாம் ச ரஜ்ஜ்வாஷ் சைவத்ரயஹம் பய: || 168**

பருத்தி ஆடைகள், பட்டு ஆடைகள், கம்பளிகள் இவை களையும், குதிரைகள் பசுக்கள் இவைகளையும், பறவைகளையும், சந்தனம் போன்ற சுகந்த திரவியங்களையும், கயிறு முதலானவை களில் ஏதொன்றைத் திருடினாலும் மூன்று நாட்கள் பாலை மட்டும் அருந்த வேண்டும்.

एतैर् व्रतैरपोहेत पापं स्तेयकृतं द्विजः।
अगम्यागमनीयं तु व्रतैरेभिरपानुदेत्॥

**ஏதைர் வ்ரதைரபோஹேத பாபம் ஸ்தேயக்ருதம் த்விஜ: |**
**அகம்யாகமநீயம் து வ்ரதைரேபி ரபானுதேத் ||** 169

இப்போது கூறிய விரதங்களெல்லாம் திருட்டுக் குற்றத்தால் ஏற்பட்ட பாபங்களைப் போக்கும். அடையத் தகாதவற்றை அடைவதால் ஏற்படும் பாபங்களை போக்கிக் கொள்ளத்தக்க பிராயச்சித்தங்களைக் கூறுகிறேன்.

गुरुतल्पव्रतं कुर्याद् रेतः सिक्त्वा स्वयोनिषु।
सख्युः पुत्रस्य च स्त्रीषु कुमारीष्वन्त्यजासु च॥

**குருதல்பவ்ரதம் குர்யாத் ரேத: ஸிக்த்வா ஸ்வயோநிஷு |**
**ஸக்யு: புத்ரஸ்ய ச ஸ்த்ரீஷு குமாரீஷ்வந்த்யஜாசு ச ||** 170

நண்பனின் மனைவி, மருமகள், பெற்ற மகள், சண்டாளப் பெண், இவர்களைப் புணர்ந்தவன் குரு மனைவியைப் புணர்ந்த வனுக்குரிய பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

पैतृष्वसेयीं भगिनीं स्वस्रीयां मातुरेव च।
मातुश् च भ्रातुस् तनयां गत्वा चान्द्रायणं चरेत्॥

**பைத்ருஷ்வஸேயீம் பகினீம் ஸ்வஸ்ரீயாம் மாதுரேவ ச |**
**மாதுஷ்ச ப்ராதுஸ் தநயாம் கத்வா சாந்த்ராயணம் சரேத் ||** 171

அத்தை மகள், பெரியம்மா மகள், சிறிய தாயின் மகள், கூடப் பிறந்த சகோதரியின் மகள், தாய்மாமன் மகள் முதலானோரைப் புணர்ந்தால் சாந்த்ராயண விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

एतास् तिस्रस् तु भार्यार्थे नोपयच्छेत् तु बुद्धिमान्।
ज्ञातित्वेनाऽनुपेयास् ताः पतति ह्युपयन्नधः॥

**ஏதாஸ் திஸ்ரஸ்து பார்பயார்தே நோபயச்சேத் து புத்திமாந் |**
**ஞாதித்வேநா அனுபேயாஸ் தா: பததி ஹ்யுபபயந்நத: ||** 172

இதுவரை கூறிய இப்பெண்களை, அதாவது அத்தை மகள், பெரியம்மா மகள், சிறிய தாயின் மகள், கூடப்பிறந்த சகோதரியின்

மகள், தாய்மாமன் மகள் முதலானோரை அறிவாளியானவன் மணம் செய்து கொள்ளக் கூடாது. அவ்வாறு செய்து கொள்பவன் நரகத்தில் வீழ்வான்.

अमानुषीषु पुरुष उदक्यायामयोनिषु।
रेतः सिक्त्वा जले चैव कृच्छ्रं सान्तपनं चरेत्॥

**அமானுஷீஷு புருஷ உதக்யாயாமயோநிஷு |**
**ரேத: ஸிக்த்வா ஜலே சைவ க்ருச்ரம் ஸாந்தபநம் சரேத் ||** 173

பசுவைத் தவிர்த்து மற்ற மிருகங்களிடமும், ரஜஸ்வலையான (வீட்டுக்கு விலக்கான) பெண்ணிடமும், பெண்ணின் உடம்பில் மற்ற இடங்களிலும், தண்ணீரிலும் தன் ரேதசை விட்ட மனிதன் சாந்தபனக்ருச்ர விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

பசுவுடன் புணர்ந்தால் அவகீர்ணிக்குரிய பிராயச்சித்தம் செய்ய வேண்டும்.

मैथुनं तु समासेव्य पुंसि योषिति वा द्विजः।
गोयानेऽप्सु दिवा चैव सवासाः स्नानमाचरेत्॥

**மைதுனம் து ஸமாஸேவ்ய பூம்ஸி யோஷிதி வாத்விஜ: |**
**கோயாநே அப்சு திவா சைவ ஸவாஸா: ஸ்நாநமாசரேத் ||** 174

ஒரு ஆண், ஆணுடன் புணர்ந்தாலும், மனைவியுடன் வண்டி முதலானவற்றில் புணர்ந்தாலும், தண்ணீரிலும், பகலிலும் புணர்ந் தாலும் உடுத்தியிருக்கும் ஆடையோடு தலைமுழுக வேண்டும்.

चण्डालान्त्यस्त्रियो गत्वा भुक्त्वा च प्रतिगृह्य च।
पतत्यज्ञानतो विप्रो ज्ञानात् साम्यं तु गच्छति॥

**சண்டாள அந்த்யஸ்த்ரியோ கத்வா புக்த்வா ச ப்ரதிக்ருஹ்யச |**
**பதத்யக்ஞாநதோ விப்ரோ ஞாநாத் ஸாம்யம்து கச்சதி ||** 175

பிராம்மணன் அறியாமையால் சண்டாளப் பெண்ணையோ, மிலேச்ச ஜாதிப் பெண்ணையோ புணர்ந்தாலும், அவர்கள் அன்னத்தைச் சாப்பிட்டாலும், அவர்கள் கொடுத்ததை வாங்கிக் கொண்டாலும் உடனே பதிதனாவான். அப்பாவத்திலிருந்து மீள பதிதனுக்கு விதித்த பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

அறிந்தே செய்தால் அந்தப் பெண்களுடைய ஜாதியே ஆகிடுவான்.

विप्रदुष्टां स्त्रियं भर्ता निरुन्ध्यादेकवेश्मनि।
यत् पुंसः परदारेषु तच् चैनां चारयेद् व्रतम्॥

**விப்ரதுஷ்டாம் ஸ்த்ரியம் பர்தா நிருந்த்யாதேக வேஷ்மநி |**
**யத் பூம்ஸ: பரதாரேஷு தச்சைநாம் சாரயேத் வ்ரதம் || 176**

வேண்டுமென்றே விபச்சாரம் செய்யும் பெண்ணை, அவள் கணவன் வீட்டு வேலை எதுவும் செய்யவிடாமல், வீட்டிலேயே சிறைவைக்க வேண்டும். பிறன் மனைவியைச் சேர்ந்தவனுக்கு விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தை அவள் செய்யுமாறு விதிக்க வேண்டும்.

सा चेत् पुनः प्रदुष्येत् तु सदृशेनोपमन्त्रिता।
कृच्छ्रं चान्द्रायणं चैव तदस्याः पावनं स्मृतम्॥

**ஸா சேத் பூந: ப்ரதுஷ்யேத் து ஸத்ருஷேநோப மந்த்ரிதா |**
**க்ருச்ரம் சாந்த்ராயணம் சைவ ததஸ்யா: பாவனம் ஸ்ம்ருதம் || 177**

இதற்குப் பிறகும் அவள் விபசாரம் செய்தாளானால் அந்தப் பாபம் நீங்க க்ருச்ரசாந்த்ராயண பிராயச்சித்தம் அனுஷ்டிக்கச் செய்ய வேண்டும்.

यत् करोत्येकरात्रेण वृषलीसेवनाद् द्विजः।
तद् भैक्षभुग् जपन् नित्यं त्रिभिर् वर्षैर् व्यपोहति॥

**யத்கரோத்யேகராத்ரேண வ்ருஷலீ ஸேவநாத் த்விஜ: |**
**தத் பைக்ஷபுக் ஜபந் நித்யம் த்ரிபிர் வர்ஷைர் வ்யபோஹதி || 178**

த்விஜன் சண்டாளப் பெண்ணுடன் ஓரிரவு கூடிய பாவத்தைப் போக்க வேண்டுமானால், மூன்று வருடங்கள் பிட்சான்னத்தை உண்டு, காயத்ரி ஜபித்தபடி காலங் கடத்த வேண்டும்.

एषा पापकृतामुक्ता चतुर्णामपि निष्कृतिः।
पतितैः सम्प्रयुक्तानामिमाः शृणुत निष्कृतीः॥

**ஏஷா பாபக்ருதாமுக்தா சதுர்ணாமபி நிஷ்க்ருதி: |**
**பதிதை: ஸம்ப்ரயுக்தாநாமிமா: ஷ்ருணுத நிஷ்க்ருதீ: || 179**

ஹிம்சை, தகாதவற்றை சாப்பிடல், திருட்டுத்தனம், கூடக் கூடாததைக் கூடல் என்னும் பாபங்களுக்குரிய பிராயச்சித்தங்கள் கூறப்பட்டன. இனி பதிதர்களுடன் கூடினவர்களுக்குரிய பிராயச் சித்தங்கள் கூறப்படும்.

संवत्सरेण पतति पतितेन सहाऽऽचरन्।
याजनाऽध्यापनाद् यौनान् न तु यानाऽऽसनाऽशनात्॥

**ஸம்வத்ஸரேண பததி பதிதேந ஸஹா ஆசரந் |**
**யாஜநா அத்யாபநாத் யௌநாந் நது யாநா ஆஸ நா அஷநாத் ||** 180

ஒரே வண்டியில் போதல், ஒரே ஆசனத்தில் அமர்தல், ஒரே பந்தியில் சாப்பிடல் என்று ஒரு வருடகாலம் பதிதனுடன் சேர்ந்திருந்தால், இவனும் பதிதனாவான். பதிதனுக்கு வேதம் சொல்லிக் கொடுத்தாலும், விவாக சம்பந்தம் செய்து கொண்டாலும் உடனடியாகப் பதிதனாவான்.

यो येन पतितेनैषां संसर्गं याति मानवः।
स तस्यैव व्रतं कुर्यात् तत्संसर्गविशुद्धये॥

**யோ யேந பதிதேநைஷாம் ஸம்ஸர்கம் யாதி மாநவ: |**
**ஸ தஸ்யைவ வ்ரதம் குர்யாத் தத்ஸம்ஸர்க விசுத்தயே ||** 181

எவன் எத்தகைய பதிதனோடு (பாவியோடு) கூட்டுறவு வைத்துக் கொள்கிறானோ, அந்தக் கூட்டுறவால் ஏற்பட்ட தோஷம் நீங்குவதற்கு அந்தப் பதிதனுக்கு விதிக்கப்பட்ட பாவத்திற்குரிய பிராயச்சித்தத்தை செய்து கொள்ள வேண்டும்.

पतितस्योदकं कार्यं सपिण्डैर् बान्धवैर् बहिः।
निन्दितेऽहनि सायाह्ने ज्ञात्यृत्विग्गुरुसन्निधौ॥

**பதிதஸ்யோதகம் கார்யம் ஸபிண்டைர் பாந்தவைர் பஹி: |**
**நிந்திதே அஹநி ஸாயாஅஹ்நே ஞாத்த்யுத்விக் குருஸந்நிதௌ ||** 182

ஒருவன் இவ்வாறு ஜாதி பிரஷ்டனாகிவிட்டால் அவனுடைய சபிண்டர்கள் (பங்காளிகள்) கிராமத்துக்கு வெளியே குரு, பங்காளிகள், ரித்விக்குகள் முன்னிலையில் நவமியில் மாலை வேளையில் அந்த பிரஷ்டனுக்கு பிரேதத்துக்கு செய்யும் கிரியைகள், உதக தானம், பிண்டமிடுதல் முதலானவற்றைச் செய்ய வேண்டும்.

दासी घटमपां पूर्णं पर्यस्येत् प्रेतवत् पदा।
अहोरात्रमुपासीरन्नशौचं बान्धवैः सह॥

**தாஸீ கடமபாம் பூர்ணம் பர்யஸ்யேத் ப்ரேதவத் பதா |**
**அஹோராத்ரமு பாஸீரந்ந சௌசம் பாந்தவை: ஸஹ ||** 183

ஒரு பணிப்பெண் தண்ணீர் நிறைந்த குடத்தை பிரேதம் போல் தெற்குமுகமாக வைத்து, அதை காலால் உதைத்து, பானையில் உள்ள நீர் வடிந்து போகுமாறு செய்ய வேண்டும். பங்காளிகள் அன்று ஒருநாள் தீட்டுக் காக்க வேண்டும்.

निवर्तेरंश् च तस्मात् तु सम्भाषणसहाऽऽसने।
दायाद्यस्य प्रदानं च यात्रा चैव हि लौकिकी॥

**நிவர்தேரம்ஷ் ச தஸ்மாத் து ஸம்பாஷணஸஹா ஆஸநே |**
**தாயாத்யஸ்ய ப்ரதாநம் ச யாத்ரா சைவ ஹி லௌகிகீ || 184**

அதன் பிறகு பங்காளிகள் லௌகீக காரியங்கள் எதிலும் அவனைச் சேர்க்கக் கூடாது. அவனுடன் அமர்வதும் பேசுவதும் கூடாது.

ज्येष्ठता च निवर्तेत ज्येष्ठाऽवाप्यं च यद् धनम्।
ज्येष्ठांशं प्राप्नुयाच् चाऽस्य यवीयान् गुणतोऽधिकः॥

**ஜ்யேஷ்டதா ச நிவர்தேத ஜ்யேஷ்டாஅவாப்யம் சயத்தனம் |**
**ஜ்யேஷ்டாம்ஷம் ப்ராப்னுயாச் சாஅஸ் ய யவீயாந் குணதோ அதிக: || 185**

இத்தகைய பதிதன் வீட்டில் மூத்த மகனாக இருந்தாலும் இவன் ஜேஷ்டன் என்ற மரியாதைக்குரியவனாக மாட்டான். சொத்தில் ஜேஷ்டபாகம் என்னும் இருபதில் ஒரு பாகம் இவனுக்குக் கிடையாது.

இவனுக்கு அடுத்த சகோதரன் குணவானாக இருந்தால் ஜேஷ்ட பாகம் என்னும் உத்தாரதனத்தை அவன் எடுத்துக் கொள்ள வேண்டும்.

प्रायश्चित्ते तु चरिते पूर्णकुम्भमपां नवम्।
तेनैव सार्धं प्रास्येयुः स्नात्वा पुण्ये जलाशये॥

**ப்ராயஷ்சித்தே து சரிதே பூர்ண கும்பமபாம் நவம் |**
**தேநைவ ஸார்தம் ப்ராஸ்யேயு: ஸ்நாத்வா பூண்யே ஜலாஷயே || 186**

பதிதன் பிராயச்சித்தம் செய்து கொண்டால், அவன் பங்காளிகள் அவனுடன் சேர்ந்து புண்ணிய தீர்த்தத்தில் நீராட வேண்டும். பிறகு தண்ணீர் நிரப்பிய குடத்தை தண்ணீரில் போட வேண்டும்.

स त्वप्सु तं घटं प्रास्य प्रविश्य भवनं स्वकम्।
सर्वाणि ज्ञातिकार्याणि यथापूर्वं समाचरेत्॥

**ஸ த்வப்சு தம் கடம் ப்ராஸ்ய ப்ரவிஷ்ய பவனம் ஸ்வகம் |**
**ஸர்வாணி ஞாதிகார்யாணி யதாபூர்வம் ஸமாசரேத் || 187**

அதன் பிறகு பிராயச்சித்தம் செய்து கொண்டு பரிசுத்தனாகி பதிதத்தன்மை நீங்கிய அவன் தனது இல்லத்துக்குச் செல்ல வேண்டும். இதற்கு முன்பு செய்த படி சிராத்தம் முதலான சகல

காரியங்களையும் செய்ய வேண்டும். இவ்வாறாக அவன் தன் ஜீவனத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும்.

एवमेव विधिं कुर्याद् योषित्सु पतितास्वपि।
वस्त्राऽन्नपानं देयं तु वसेयुश् च गृहाऽन्तिके॥

**ஏவமேவ விதிம் குர்யாத் யோஷித்சு பதிதாஸ்வபி |**
**வஸ்த்ரா அந்ந பாநம் தேயம் து வசேயுஷ் ச க்ருஹாந்திகே || 188**

பதிதைகளான பெண்கள் விஷயத்திலும் இவ்வாறே செய்ய வேண்டும், வீட்டுக்கு வெளியே வசிக்க இடம் கொடுத்து அன்ன பானங்களை அவளுக்கு வழங்க வேண்டும். வீட்டுக்குள் சேர்க்கக் கூடாது.

एनस्विभिरनिर्णिक्तैर् नाऽर्थं किञ्चित् सहाऽऽचरेत्।
कृतनिर्णेजनांश् चैव न जुगुप्सेत कर्हिचित्॥

**ஏநஸ்விபிர நிர்ணிக்தைர் நாஅர்தம் கிஞ்சித் ஸஹா ஆசரேத் |**
**க்ருத நிர்ணேஜநாம்ஷ் சைவ ந ஜுகுப்ஸேத கர்ஹிசித் || 189**

பாபம் புரிந்தவர்கள், பிராயச்சித்தம் செய்து கொள்ளாதவரை அவர்களுடன் தன விஷயத்தில் எந்த தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது

பிராயச்சித்தம் செய்து கொண்டபிறகு பழையபடி பழக வேண்டும். அவன் முன்பு செய்த குற்றத்தைக் கூறி அவனைத் தூற்றக்கூடாது.

बालघ्नाश् च कृतघ्नांश् च विशुद्धानपि धर्मतः।
शरणाऽऽगतहन्तृंश् च स्त्रीहन्तृंश् च न संवसेत्॥

**பாலக்நாம்ஷ் ச க்ருக்நாம்ஷ்ச விசுத்தாநபி தர்மத: |**
**ஷரணா ஆகத ஹந்த்ரூம்ஷ்ச ஸ்த்ரீஹந்த்ரூம்ஷ்ச நஸம்வசேத் || 190**

பாலகனைக் கொன்றவன், செய்ந்நன்றி மறந்து தீங்கிழைத்தவன், சராணாகதி அடைந்தவனைக் கொன்றவன், பெண்ணைக் கொன்றவன் முதலானோர் பிராயச்சித்தம் செய்து கொண்ட பிறகும் அவர்களுடன் சேர்ந்து வசிக்கலாகாது.

येषां द्विजानां सावित्री नाऽनूच्येत यथाविधि।
तांश् चारयित्वा त्रीन् कृच्छ्रान् यथाविध्युपनाययेत्॥

**யேஷாம் த்விஜாநாம் ஸாவித்ரீ நாஅனூச்யேத யதாவிதி |**
**தாம்ஷ் சாரயித்வா த்ரீந் க்ருச்ராந் யதாவித்யுபநாயயேத் || 191**

பிராம்மண க்ஷத்ரிய வைசியப் பிள்ளைக்கு உரிய காலத்தில் உபநயனம் செய்து வைக்காவிடில், அவர்களை மூன்று பிராஜாபத்ய க்ருச்ரங்களை பிராயச்சித்தமாக செய்ய வைத்து, அதற்குப் பிறகு உபநயனம் செய்ய வேண்டும்.

प्रायश्चित्तं चिकीर्षन्ति विकर्मस्थास् तु ये द्विजाः ।
ब्रह्मणा च परित्यक्तास् तेषामप्येतदादिशेत् ॥

**ப்ராயஷ்சித்தம் சிகீர்ஷந்தி விகர்மஸ்தாஸ் து யே த்விஜா: |**
**ப்ரஹ்மணா ச பரித்யக்தாஸ் தேஷாமப் யேததாதிஷேத் ||** 192

செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யாமல், தகாதவற்றைச் செய்த த்விஜர்கள் பிராயச்சித்தம் செய்ய விரும்பினால் அப்போது பிராம்மணர்கள் பிராஜாபத்யக்ருச்ர விரதத்தையே பிராயச்சித்தமாக விதிக்க வேண்டும்.

यद् गर्हितेनाऽर्जयन्ति कर्मणा ब्राह्मणा धनम् ।
तस्योत्सर्गेण शुध्यन्ति जप्येन तपसैव च ॥

**யத் கர்ஹிதேநா அர்ஜயந்தி கர்மணா ப்ராஹ்மணா தநம் |**
**தஸ்யோத் ஸர்கேண சுத்யந்தி ஜப்யேந தபஸைவ ச ||** 193

பிராம்மணன், தகாதவனிடம் தானம் வாங்குதல் போன்ற நிந்திக்கப்பட்ட வழிகளில் எந்த வழியில் தனத்தை சம்பாதித்திருந்தாலும் அதை தானம் செய்துவிடுவதாலும், இனி சொல்லப் போகும் ஜபதங்களைச் செய்வதாலும் தூய்மையடைவான்.

जपित्वा त्रीणि सावित्र्याः सहस्राणि समाहितः ।
मासं गोष्ठे पयः पीत्वा मुच्यतेऽसत्प्रतिग्रहात् ॥

**ஜபித்வா த்ரீணி ஸாவித்ர்யா: ஸஹஸ்ராணி ஸமாஹித: |**
**மாஸம் கோஷ்டே பய: பீத்வா முச்யதேஅஸத் ப்ரதிக்ரஹாத் ||** 194

தகாதவனிடம் தானம் வாங்கியவன் மூவாயிரம் காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். பசுக் கொட்டிலில் பசுக்களுடன் பாலை ஆஹாரமாகக் கொண்டு இருக்க வேண்டும். இப்படிச் செய்தவன் அந்த தோஷத்திலிருந்து விடுபடுவான்.

उपवासकृशं तं तु गोव्रजात् पुनरागतम् ।
प्रणतं परिपृच्छेयुः साम्यं सौम्येच्छसीति किम् ॥

**உபவாச க்ருஷம் தம் து கோவ்ரஜாத் புநராகதம் |**
**ப்ரணதம் பரிப்ருச்சேயு: ஸாம்யம் ஸௌம்யேச்சஸீதி கிம் ||** 195

இவ்வாறாக காயத்ரி ஜபமும் பால் மட்டும் ஆகாரமாகவும் பசுக்கொட்டிலில் வசித்து, தன் பிராயச்சித்தத்தைப் பூர்த்தி செய்து கொண்ட பிறகு, சான்றோரை அணுகி வணங்க வேண்டும். பாலை மட்டும் ஆகாரமாகக் கொண்டதால் இளைத்த உடலோடு வந்திருக்கும் அவனிடம், இனி இவ்வாறாக தகாத தானங்களை வாங்காதே, எங்களுக்குச் சமமாக இருப்பாயாக, என்று புத்திமதி கூறவேண்டும்.

सत्यमुक्त्वा तु विप्रेषु विकिरेद् यवसं गवाम्।
गोभिः प्रवर्तिते तीर्थे कुर्युस् तस्य परिग्रहम्॥

**ஸத்யமுக்த்வா து விப்ரேஷு விகிரேத் யவஸம் கவாம் |**
**கோபி: ப்ரவர்திதே தீர்தே குர்யுஸ் தஸ்ய பரிக்ரஹம் ||** 196

'இனி தகாதவரிடம் தானம் வாங்க மாட்டேன்', என்று அவன் சத்யம் செய்ய வேண்டும். பிறகு வைக்கோலை அவர்கள் முன்னிலையில் பசுக்களுக்குக் கொடுக்க வேண்டும். பசுக்கள் உண்ட பிறகு, பரிசுத்தமான அந்த ஸ்தலத்தில் பிராம்மணர்கள் அவனைத் தங்களுடன் இணைத்துக் கொள்ள வேண்டும்.

व्रात्यानां याजनं कृत्वा परेषामन्त्यकर्म च।
अभिचारमहीनं च त्रिभिः कृच्छ्रैर् व्यपोहति॥

**வ்ராத்யாநாம் யாஜநம் க்ருத்வா பரேஷாமந்த்ய கர்ம ச |**
**அபிசாரமஹீநம் ச த்ரிபி: க்ருச்ரைர் வ்யபோஹதி ||** 197

விராத்யர்களுக்கு யாகம் செய்து வைத்தல், பிறர்களுக்கு அந்திமக் கிரியைகளைச் செய்தல், அபிசார ஹோமங்கள் செய்தல் முதலானவற்றைச் செய்தவன், மூன்று பிராஜபத்யக்ருச்ரங்களை அனுஷ்டித்தால் பரிசுத்தமடைவான்.

शरणाऽगतं परित्यज्य वेदं विप्लाव्य च द्विजः।
संवत्सरं यवाऽऽहारस् तत्पापमपसेधति॥

**ஷரணாஆகதம் பரித்யஜ்ய வேதம் விப்லாவ்ய சத்விஜ: |**
**ஸம்வத்ஸரம் யவாஆஹாரஸ் தத்பாபமப ஸேததி ||** 198

தன்னைச் சரணடைந்தவனைக் காப்பாற்றாமல் கை விட்டவனும், தகாவனுக்கு வேதம் கற்பித்தவனும் ஒருவருட காலம் யவை தானியத்தை மட்டும் ஆஹாரமாக ஏற்கவேண்டும். அப்படிச் செய்தால் பாபத்திலிருந்து விடுதலையடைவான்.

श्वसृगालखरैर् दष्टो ग्राम्यैः क्रव्याद्भिरेव च।
नराऽश्वोष्ट्रवराहैश् च प्राणायामेन शुध्यति॥

**ஷ்வஸ்ரு காலகரைர் தஷ்டோ க்ராம்யை: க்ரவ்யாத்பிரேவ ச |**
**நரா அஷ்வோஷ்ட்ரவராஹைஷ்ச ப்ராணாயாமேந சுத்யதி || 199**

நாய், நரி, கழுதை, மனிதன், குதிரை, ஒட்டகம், பன்றி போன்றவை கடித்தால் மூன்று பிராணாயாமங்கள் செய்ய வேண்டும்.

षष्ठान्नकालता मासं संहिताजप एव वा।
होमाश् च शाकला नित्यमपाङ्क्त्यानां विशोधनम्॥

**ஷஷ்டா அந்நகாலதா மாஸம் ஸம்ஹிதாஜப ஏவ வா |**
**ஹோமாஷ் ச ஷாகலா நித்யமபாங்க்த்யாநாம் விஷோதநம் || 200**

பதிதர்கள் என்று சொல்லப்பட்டவர்களில் இதுவரை பிராயச்சித்தம் எதுவும் தனிப்பட சொல்லப்படாத பதிதர்கள் மூன்றுநாட்கள் உபவாசமிருந்து நான்காம் நாள் உணவுண்ண வேண்டும். இவ்வாறாக தொடர்ந்து ஒரு மாதம் செய்ய வேண்டும். இந்த ஒரு மாதம் தினமும் வேதம் ஓதவேண்டும். ஹோமமும் செய்ய வேண்டும். இவ்வாறாக செய்தால் பரிசுத்தனாவான்.

उष्ट्रयानं समारुह्य खरयानं तु कामतः।
स्नात्वा तु विप्रो दिग्वासाः प्राणायामेन शुध्यति॥

**உஷ்ட்ரயாநம் ஸமாருஹ்ய கரயாநம் து காமத: |**
**ஸ்நாத்வா து விப்ரோ திக்வாஸா: ப்ராணா யாமேந சுத்யதி || 201**

வித்வானான பிராம்மணன் ஒட்டகம் பூட்டிய வண்டியிலோ, கழுதைகள் பூட்டிய வண்டியிலோ பிரயாணம் செய்தால், நீரில் அமிழ்ந்து அணிந்துள்ள ஆடைகளை அதிலேயே விட்டுவிட்டு, வேறு ஆடை அணிய வேண்டும். பிறகு பிராணாயாமம் செய்தால் சுத்தனாவான்.

विनाऽद्भिरप्सु वाऽप्यार्तः शारीरं सन्निवेश्य च।
सचैलो बहिराप्लुत्य गामालभ्य विशुध्यति॥

**விநா அத்பிரப்சு வாஅப்யார்த: ஷாரீரம் ஸந்நிவேஷ்ய ச |**
**ஸசைலோ பஹிராப்லுத்ய காமாலப்ய விசுத்யதி || 202**

தண்ணீரை எடுத்துக் கொண்டு வருவதற்குள், வேகத்தால், தண்ணீரிலேயே மலஜலம் கழித்தால் உடுத்தியிருக்கும் ஆடையோடு நீராட வேண்டும். பிறகு பசுவைத் தொட்டால் பரிசுத்தனாவான்.

वेदोदितानां नित्यानां कर्मणां समतिक्रमे।
स्नातकव्रतलोपे च प्रायश्चित्तमभोजनम्॥

**வேதோதிதாநாம் நித்யாநாம் கர்மணாம் ஸமதிக்ரமே |**
**ஸ்நாதகவ்ரதலோபே ச ப்ராயஷ்சித்தமபோஜநம் || 203**

தனிப்பட்ட பிராயச்சித்தங்கள் சொல்லப்படாததான, வேதம் விதித்த நித்யகர்மாக்களை விடல், ஸ்நாதக விரதத்தில் ஏதேனும் குறை ஏற்படல் முதலியவற்றுக்கு ஒருநாள் உபவாசமிருத்தலே பிராயச்சித்தமாகும்.

हुङ्कारं ब्राह्मणस्योक्त्वा त्वङ्कारं च गरीयसः।
स्नात्वाऽनश्नन्नहःशेषमभिवाद्य प्रसादयेत्॥

**ஹுட்காரம் ப்ராஹ்மணஸ்யோக்த்வா த்வட்காரம் ச கரீயஸ: |**
**ஸ்நாத்வா அநஷ்நந்நஹ: சேஷமபிவாத்ய ப்ரஸாதயேத் || 204**

தன்னைவிட வயதிலும் வித்தையிலும் பெரியவனான பிராம்மணனைப் பார்த்து அதட்டினாலும், ஏகவசனத்தில் மரியாதைக் குறைவாகப் பேசினாலும் அந்தப் பாபம் நீங்க நீராடி அன்று முழுவதும் உபவாசம் இருக்க வேண்டும். மறுநாள் அவரிடம் சென்று, பாதங்களில் வீழ்ந்து மன்னிப்புக் கேட்க வேண்டும்.

ताडयित्वा तृणेनाऽपि कण्ठे वाऽऽबध्य वाससा।
विवादे वा विनिर्जित्य प्रणिपत्य प्रसादयेत्॥

**தாடயித்வா த்ருணோநா அபி கண்டே வாஆபத்ய வாஸஸா |**
**விவாதே வா விநிர்ஜித்ய ப்ரணிபத்ய ப்ரஸாதயேத் || 205**

பிராம்மணனைப் புல்லால் அடித்தாலும்கூட பாபமே. அவ்வாறே கழுத்தில் துணியைப் போட்டு இழுத்தாலும், முன்னர் சொன்னபடி இந்த பாபத்துக்கும் அவர் காலில் விழுந்து மன்னிப்பு பெறுவதே பாபம் நீங்கும் வழியாகும்.

अवगूर्य त्वब्दशतं सहस्रमभिहत्य च।
जिघांसया ब्राह्मणस्य नरकं प्रतिपद्यते॥

**அவகூர்ய த்வப்த ஷதம் ஸஹஸ்ரமபிஹத்ய ச |**
**ஜிகாம்ஸயா ப்ராஹ்மணஸ்ய நரகம் ப்ரதிபத்யதே || 206**

பிராம்மணனைக் கொல்வதற்காக தடியைக் கையிலெடுத்தவனுக்கு நூறாண்டுகள் நரகவாசம் ஏற்படும். கையிலெடுத்ததோடு அடிக்கவும் செய்தவனுக்கு ஆயிரம் வருடங்கள் நரகவாசம் ஏற்படும்.

शोणितं यावतः पांसून् सङ्गृह्णाति महीतले।
तावन्त्यब्दसहस्राणि तत्कर्ता नरके वसेत्॥

**ஷோணிதம் யாவத: பாம்சூந் ஸங் க்ருஹ்ணாதி மஹீதலே |**
43 **தாவந்த்யப்த ஸஹஸ்ராணி தத்கர்தா நரகே வஸேத் || 207**

அடிக்கப்பட்ட பிராம்மணன் உடலிலிருந்து ஒழுகிய ரத்தம் பூமியில் எத்தனை மண்துகள்களை நனைக்கிறதோ, அத்தனை ஆயிரம் வருடங்கள், அடித்தவனுக்கு நரகவாசம் ஏற்படும்.

अवगूर्य चरेत् कृच्छ्रमतिकृच्छ्रं निपातने।
कृच्छ्रातिकृच्छ्रौ कुर्वीत विप्रस्योत्पाद्य शोणितम्॥

**அவகூா்ய சரேத் க்ருச்ரமதிக்ருச்ரம் நிபாதநே |**
**க்ருச்ரா அதிக்ருச்ரௌ குா்வீத விப்ரஸ்யோத்பாத்ய ஷோணிதம் || 208**

கையில் தடியை எடுத்து அடிக்க ஓங்கியவன் அந்தப் பாபம் நீங்க அதிக்ருச்ர விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

அடித்தவன், க்ருச்ர விரதம் அதிக்ருச்ர விரதம் இரண்டையும் அனுஷ்டிக்க வேண்டும்.

अनुक्तनिष्कृतीनां तु पापानामपनुत्तये।
शक्तिं चावेक्ष्य पापं च प्रायश्चित्तं प्रकल्पयेत्॥

**அனுக்த நிஷ்க்ருதீநாம் து பாபாநாமபனுத்தயே |**
**ஷக்திம் சாஅவேக்ஷ்ய பாபம் ச ப்ராயஷ்சித்தம் ப்ரகல்பயேத் || 209**

இப்போது கூறப்படாத, கொலைக்கு முயன்ற பாபங்களுக்கு, செய்தவனுடைய சக்தியையும், பாபத்தின் தன்மையையும் ஆராய்ந்து பிராயச்சித்தங்களை விதிக்கவேண்டும்.

यैरभ्युपायैरेनांसि मानवो व्यपकर्षति।
तान् वोऽभ्युपायान् वक्ष्यामि देवर्षिपितृसेवितान्॥

**யைரப்யுபாயை ரேநாம்ஸி மாநவோ வ்யபகா்ஷதி |**
**தாந் வோ அப்யுபாயாந் வக்ஷ்யாமி தேவா்ஷி பித்ரு ஸேவிதாந் || 210**

இனி பாபங்களைப் போக்கும் விரதங்களைப் பற்றிக் கூறுகிறேன். இவை தேவா்களாலும் ரிஷிகளாலும் பித்ருக்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டவை.

त्र्यहं प्रातस् त्र्यहं सायं त्र्यहमद्यादयाचितम्।
त्र्यहं परं च नाऽश्नीयात् प्राजापत्यं चरन् द्विजः॥

**த்ரயஹம் ப்ராதஸ் த்ரயஹம் ஸாயம் த்ரயஹமத்யாத யாசிதம் |**
**த்ரயஹம் பரம் ச நாஅஷ்நீயாத் ப்ராஜாபத்யம் சரந்த்விஜ: || 211**

ப்ராஜாபத்யக்ருச்சம் என்பதை எப்படிக் கடைப்பிடிப்பது என்று பாா்ப்போம்.

முதல் மூன்று நாட்கள் காலையில் மட்டும் உண்ண வேண்டும். அடுத்த மூன்று நாட்கள் மாலையில் மட்டும் உண்ண வேண்டும். அதற்கடுத்த மூன்று நாட்கள் தானாக யாசிக்காமல் கிடைத்ததை உண்ண வேண்டும். அதற்கும் அடுத்த மூன்று நாட்கள் எதுவும் சாப்பிடாமல் உபவாசம் இருக்க வேண்டும்.

இவ்வாறாக த்விஜர்கள் ப்ராஜாபத்யக்ருச்ரம் என்று இந்த விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

**गोमूत्रं गोमय क्षीरं दधि सर्पिः कुशोदकम्।**
**एकरात्रोपवासश् च कृच्छ्रं सान्तपनं स्मृतम्॥**

**கோமூத்ரம் கோமயம் க்ஷீரம் ததி ஸாபி: குஷோதகம் |**
**ஏகராத்ரோ பவாசஸ் ச க்ருச்ரம் ஸாந்தபநம் ஸ்ம்ருதம் || 212**

சாந்தபநக்ருச்ரம்: முதல்நாள் பசுவின் நீர், சாணம், பால், தயிர், நெய், தர்ப்பைகள் ஊறிய தண்ணீர் இவைகளைச் சேர்த்து சாப்பிடவேண்டும் மறுநாள் உபவாசமிருக்க வேண்டும். இதற்கு சாந்தபநக்ருச்ர விரதம் என்று பெயர்.

**एकैकं ग्रासमश्नीयात् त्र्यहाणि त्रीणि पूर्ववत्।**
**त्र्यहं चोपवसेदन्त्यमतिकृच्छ्रं चरन् द्विजः॥**

**ஏகைகம் க்ராஸமஷ்நீயாத் த்ரயஹாநி த்ரீணி பூர்வவத் |**
**த்ரயஹம் சோபவஸேதந்த்ய மதிக்ருச்ரம் சரந் த்விஜ: || 213**

க்ருச்ரவிரதத்துக்குக் கூறியது போன்றே முதல் மூன்று நாட்கள் காலையில் மட்டும் புசிக்க வேண்டும். ஆனால் ஒரு கவளம் அன்னம் மட்டுமே சாப்பிடவேண்டும். பிறகு மூன்று நாட்கள் மாலையில் மட்டும் ஒவ்வொரு கவளம் சாப்பிட வேண்டும். அதன்பிறகு மூன்று நாட்கள் கேட்காமல் கிடைத்ததை ஒவ்வொரு கவளம் சாப்பிட வேண்டும். அடுத்த மூன்று நாட்கள் உபவாசமிருக்க வேண்டும். இவ்வாறு இருக்கும் விரதத்துக்கு அதிக்ருச்ரவிரதம் என்று பெயர்.

**तप्तकृच्छ्रं चरन् विप्रो जलक्षीरघृतानिलान्।**
**प्रतित्र्यहं पिबेदुष्णान् सकृत्स्नायी समाहितः॥**

**தப்த க்ருச்ரம் சரந் விப்ரோ ஜலக்ஷீர க்ருதா அநிலாந் |**
**ப்ரதித்ரயஹம் பிபேதுஷ்ணாந் ஸக்ருத்ஸ்நாயீ ஸமாஹித: || 214**

தப்தக்ருச்ர விரதம்: தப்தக்ருச்ர விரதத்தை அனுஷ்டிக்கும் விப்ரன் முதல் மூன்றுநாட்கள் வெந்நீரைக் குடிக்க வேண்டும். அடுத்த மூன்று நாட்கள் காய்ச்சிய பாலைக் குடிக்க வேண்டும்.

பிறகு மூன்று நாட்கள் நெருப்பை உண்டாக்கி அதன் சூட்டை அனுபவித்தபடி இருக்க வேண்டும். தினமும் ஒரு வேளை நீராட வேண்டும்.

यताऽऽत्मनोऽप्रमत्तस्य द्वादशाऽहमभोजनम्।
पराको नाम कृच्छ्रोऽयं सर्वपापाऽपनोदनः॥

**யதாஆத்மநோ அப்ரமத்தஸ்ய த்வாதஷா அஹமபோஜநம் |**
**பராகோ நாம க்ருச்ரோ அயம் ஸர்வபாபாஅப நோதந: ||** **215**

*பராகக்ருச்ர விரதம்:* இந்திரியங்களை அடக்கி, மிக்க நியமத்தோடு பன்னிரண்டு தினங்கள் எதுவுமே சாப்பிடாமல் முழுமையாக உபவாசமிருக்க வேண்டும். இதற்கு பராகக்ருச்ர விரதம் என்று பெயர். இந்த விரதம் அனைத்துப் பாபங்களையும் போக்கும்.

एकैकं ह्रासयेत् पिण्डं कृष्णे शुक्ले च वर्धयेत्।
उपस्पृशंस् त्रिषवणमेतच् चान्द्रायणं स्मृतम्॥

**ஏகைகம் ஹ்ரஸயேத் பிண்டம் க்ருஷ்ணே ஷுக்லே ச வர்தயேத் |**
**உபஸ்ப்ருஷம்ஸ் த்ரிஷவணமேதச் சாந்த்ராயணம் ஸ்ம்ருதம் ||** **216**

*சாந்த்ராயண விரதம்:* காலை மாலை மத்யானம் மூன்று வேளையும் நீராட வேண்டும். பௌர்ணமியன்று பதினைந்து கவளங்கள் உணவு சாப்பிட வேண்டும். மறுநாள் ஒரு கவளம் குறைத்துப் பதினான்கு கவளங்கள். இவ்வாறு தினம் ஒரு கவளமாகக் குறைத்துக் கொண்டே வர வேண்டும். சதுர்த்தசியன்று ஒரு கவளத்தில் வந்து நிற்கும். மறுநாள் அமாவாசையன்று உபவாசமிருக்க வேண்டும். அடுத்த நாள் பிரதமையில் ஒரு கவளம் சாப்பிட வேண்டும். அடுத்த நாள் இரண்டு கவளம் சாப்பிட்டுவர பௌர்ணமியில் பதினைந்து கவளங்களில் வந்துநிற்கும்.

இவ்வாறு விரதமிருப்பதற்கு சாந்த்ராயண விரதம் என்று பெயர். இதை பிபீலிகா சாந்த்ராயண விரதம் என்றும் கூறுவர்.

एतमेव विधिं कृत्स्नमाचरेद् यवमध्यमे।
शुक्लपक्षादिनियतश् चरंश् चान्द्रायणं व्रतम्॥

**ஏதமேவ விதிம் க்ருத்ஸ்நமாசரேத் யவமத்யமே |**
**சுக்ல பக்ஷாதிநியதஷ் சரம்ஷ் சாந்த்ராயணம் வ்ரதம் ||** **217**

*யவசாந்த்ராயண விரதம்:* அமாவாசைக்கு மறுநாள் பிரதமை யன்று ஒரு கவளம் சாப்பிட வேண்டும். பிறகு தினம் ஒரு கவளமாகக் கூட்டிக் கொண்டே வர பௌர்ணமியன்று பதினைந்து கவளங்களில் வந்து நிற்கும். பிறகு ஒவ்வொரு கவளமாக குறைத்துக் கொண்டே

வந்து அமாவாசையன்று முழு உபவாசமிருக்க வேண்டும். இவ்வாறு இருக்கும் விரதத்துக்கு யவசாந்த்ராயண விரதம் என்று பெயர்.

अष्टावष्टौ समश्नीयात् पिण्डान् मध्यन्दिने स्थिते।
नियताऽऽत्मा हविष्याऽशी यतिचान्द्रायणं चरन्॥

**அஷ்டாவஷ்டௌ ஸமஷ்நீயாத் பிண்டாந் மத்யந்திநே ஸ்திதே |**
**நியதே ஆத்மா ஹவிஷ்யாஅஷீ யதி சாந்த்ராயணம் சரந் || 218**

*யதிசாந்த்ராயண விரதம்:* தினமும் நியமத்தோடு அனுஷ்டானங் களைச் செய்து, மத்யானம் ஒருவேளை மட்டும் ஹோமம் செய்து மிகுந்த ஹவிஸ் அன்னத்தை எட்டு பிண்டங்கள் அளவு (கவளம் என்பது ஒரு கை அளவு. பிண்டம் என்பது இரண்டு கையளவு.) சாப்பிட வேண்டும். இதற்கு யதிசாந்த்ராயண விரதம் என்று பெயர்.

चतुरः प्रातरश्नीयात् पिण्डान् विप्रः समाहितः।
चतुरोऽस्तमिते सूर्ये शिशुचान्द्रायणं स्मृतम्॥

**சதுர: ப்ராதரஷ்நீயாத் பிண்டாந் விப்ர: ஸமாஹித: |**
**சதுரோ அஸ்தமிதே சூர்யே சிசுசாந்த்ராயணம் ஸ்ம்ருதம் || 219**

*சிசுசாந்த்ராயண விரதம்:* காலையில் நான்கு பிண்டங்கள் அளவு சாப்பிட வேண்டும். இரவில் நான்கு பிண்டங்கள் அளவு சாப்பிட வேண்டும். இந்த நியமத்தோடு கடைப்பிடிக்கும் விரதத்துக்கு சிசுசாந்த்ராயண விரதம் என்று பெயர்.

यथाकथञ्चित् पिण्डानां तिस्रोऽशीतीः समाहितः।
मासेनाऽश्नन् हविष्यस्य चन्द्रस्यैति सलोकताम्॥

**யதா கதஞ்சித் பிண்டாநாம் திஸ்ரோ அஷீதீ: ஸமாஹித: |**
**மாஸேநா அஷ்நந் ஹவிஷ்யஸ்ய சந்த்ரஸ்யைதி ஸலோகதாம் || 220**

ஒரு மாதம் முழுவதும் சிறிதளவு ஹவிஸை மட்டும் ஒருவேளை சாப்பிட்டு விரதமிருப்பவன் சந்திரலோகத்தை அடைவான்.

एतद् रुद्रास् तथाऽऽदित्या वसवश् चाऽचरन् व्रतम्।
सर्वाऽकुशलमोक्षाय मरुतश् च महर्षिभिः॥

**ஏதத் ருத்ராஸ் ததா ஆதித்யா வஸவஷ் சா அசரந் வ்ரதம் |**
**ஸர்வா அகுஷலமோக்ஷாய மருதஷ் ச மஹர்ஷிபி: || 221**

இத்தகைய விரதங்களை பதினொரு ருத்ரர்களும், பன்னிரண்டு ஆதித்யர்களும், ஏழு மருத்துக்களும், எட்டு வசுக்களும் அனுஷ்டித்து மேன்மைகளை அடைந்தார்கள்.

महाव्याहृतिभिर् होमः कर्तव्यः स्वयमन्वहम्।
अहिंसा सत्यमक्रोधमार्जवं च समाचरेत्॥

**மஹாவ்யாஹ்ருதிபிர் ஹோம: கர்தவ்ய: ஸ்வயமந்வஹம் |**
**அஹிம்ஸா ஸத்யமக்ரோதமார்ஜவம் ச ஸமாசரேத் ||** 222

சாந்த்ராயண விரதமேற்போர் தினமும் மகா வியாக்ருதி மந்திரங்களால் நெய்யை விட்டு ஹோமம் செய்ய வேண்டும். அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டும். சத்தியமே பேச வேண்டும். குரோதமற்று இருக்க வேண்டும்.

त्रिरह्नस् त्रिर् निशायां च सवासा जलमाविशेत्।
स्त्रीशूद्रपतितांश् चैव नाऽभिभाषेत कर्हिचित्॥

**த்ரிரஹஸ் த்ரிர் நிஷாயாம் ச ஸவாஸா ஜலமாவிஷேத் |**
**ஸ்த்ரீஶூத்ர பதிதாம்ஷ் சைவ நாஅபிபாஷேத கர்ஹிசித் ||** 223

காலையும் மாலையும் மத்யானமும் தண்ணீரில் மூழ்கிக் குளிக்க வேண்டும். அதாவது ஓடும் நதியில் குளிப்பது சிரேஷ்டம். அல்லது ஏரி குளங்களில் நன்கு மூழ்கிக் குளிக்க வேண்டும்.

स्थानाऽऽसनाभ्यां विहरेदशक्तोऽधः शयीत वा।
ब्रह्मचारी व्रती च स्याद् गुरुदेवद्विजाऽर्चकः॥

**ஸ்தா நாஆசநாப்யாம் விஹரே தஷக்தோ அத: ஷயீத வா |**
**ப்ரஹ்மசாரீ வ்ரதீ ச ஸ்யாத் குருதேவத்விஜா அர்சக: ||** 224

விரதமனுஷ்டிக்கும் போது இரவு தூங்குதல் என்ற விதியை வைத்துக் கொள்ளக் கூடாது. அமர்ந்திருக்க வேண்டும். முடியாத போது சிறிது படுக்கலாம். (பகலிலும் இதே விதிதான்) ஆனால் மஞ்சத்தில் படுக்கக் கூடாது. பிரம்மசரிய விரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். குருவையும் தேவர்களையும் உத்தம த்விஜர்களையும் பூஜிக்க வேண்டும்.

सावित्रीं च जपेन् नित्यं पवित्राणि च शक्तितः।
सर्वेष्वेव व्रतेष्वेवं प्रायश्चित्तार्थमादृतः॥

**ஸாவித்ரீம் ச ஜபேந் நித்யம் பவித்ராணி ச ஷக்தித: |**
**ஸர்வேஷ்வேவ வ்ரதேஷ்வேவம் ப்ராயஷ்சித்தார்த மாத்ருத: ||** 225

தினமும் காயத்ரீ மந்திரத்தை முடிந்த வரை அதிகபட்சமாக ஜபிக்க வேண்டும். இந்த விதிமுறையை எல்லா பிராயச்சித்த விரதங்களிலும் அனுஷ்டிக்க வேண்டும்

**एतैर् द्विजातयः शोध्या व्रतैराविष्कृतैनसः।**
**अनाविष्कृतपापास् तु मन्त्रैर् होमैश् च शोधयेत्॥**

**ஏதைர் த்விஜாதய: ஷோத்யா வ்ரதைராவிஷ்க்ருதை நஸ: |**
**அநாவிஷ்க்ருதபாபாம்ஸ் து மந்த்ரைர் ஹோமைஷ்ச சோதயேத் || 226**

இவ்வாறாக தங்கள் பாபங்களைக் கூறி பிராயச்சித்தம் கேட்டு வந்த த்விஜர்களுக்கு வேதவிற்பன்னர்கள் பிராயச்சித்தங்களை எடுத்துரைக்க வேண்டும்.

தங்கள் பாபங்கள் வெளியே தெரியாமல் இருக்க வேண்டும். என்று கேட்டு வந்தவர்களுக்கு அதற்குத் தக்கபடி மந்திர ஜபங்களையும், ஹோமங்களையும் எடுத்துரைக்க வேண்டும்.

**ख्यापनेनाऽनुतापेन तपसाऽध्ययनेन च।**
**पापकृन् मुच्यते पापात् तथा दानेन चाऽऽपदि॥**

**க்யாபநேநா அனுதாபேந தபஸா அத்யயநேந ச |**
**பாபக்ருந் முச்யதே பாபாத் ததா தாநேந சாஆபதி || 227**

தான் செய்த பாபத்தை வெளிப்படையாகக் கூறி மனம் வருந்துவதாலும், தவத்தாலும், வேதமோதுவதாலும், தானம் செய்வதாலும் பிராயச்சித்தம் செய்வதாலும் ஒருவன் தன் பாபத்திலிருந்து விடுபடுகிறான்.

**यथायथा नरोऽधर्मं स्वयं कृत्वाऽनुभाषते।**
**तथातथा त्वचेवाऽहिस् तेनाऽधर्मेण मुच्यते॥**

**யதா யதா நரோ அதர்மம் ஸ்வயம் க்ருத்வா அனுபாஷதே |**
**ததா ததா த்வசேவாஅஹிஸ் தேநாஅதர்மேண முச்யதே || 228**

ஒருவன் தான் செய்த பாபத்தை வெளிப்படையாகத் தெரிவித்து எவ்வளவுக் கெவ்வளவு மனம் வருந்துகிறானோ, அவ்வளவுக் கவ்வளவு பாம்பு சட்டையையுரிப்பது போல், தன் பாபத்தை உரித்தெறிகிறான்.

**यथायथा मनस् तस्य दुष्कृतं कर्म गर्हति।**
**तथातथा शरीरं तत् तेनाऽधर्मेण मुच्यते॥**

**யதா யதா மநஸ் தஸ்ய துஷ்க்ருததம் கர்ம கர்ஹதி |**
**ததா ததா சரீரம் தத் தேநா அதர்மேண முச்யதே || 229**

ஒருவன் எந்த அளவுக்கு மனம் வருந்தி, 'ஐயோ இப்படி செய்து விட்டேனே' என்று சுய பச்சாதாபப் படுகிறானோ அந்த அளவுக்கு அவன் பாபத்திலிருந்து விடுபடுகிறான்.

कृत्वा पापं हि सन्तप्य तस्मात् पापात् प्रमुच्यते।
नैवं कुर्यां पुनरिति निवृत्त्या पूयते तु सः ॥

**க்ருத்வா பாபம் ஹி ஸந்தப்ய தஸ்மாத் பாபாத் ப்ரமுச்யதே |**
**நைவம் குர்யாம் பூநரிதி நிவ்ருத்யா பூயதே துஸ: ||** **230**

பாபம் புரிந்து விட்டு 'ஐயோ இப்படிச் செய்து விட்டேனே' என்று பரிதவித்து மனம் நொந்து துடித்து பாபத்திலிருந்து விடுபட்டவன் மீண்டும் அப் பாபத்தைச் செய்யவே கூடாது.

एव सञ्चिन्त्य मनसा प्रेत्य कर्मफलोदयम्।
मनोवाङ्मूर्तिभिर् नित्यं शुभं कर्म समाचरेत्॥

**ஏவம் ஸஞ்சிந்த்ய மனஸா ப்ரேத்ய கர்மபலோதகம் |**
**மனோவாங்மூர்திபிர் நித்யம் சுபம் கர்ம ஸமாசரேத் ||** **231**

இதுவரை கூறியதை யெல்லாம் நன்கு மனத்தில் நிறுத்திக் கொண்டு, பாபம் செய்வதால் வரும் கேட்டையும், புண்ணியம் செய்வதால் வரும் நன்மையையும் சீர்தூக்கிப் பார்த்து, மனத்தாலும் வாக்காலும் உடலாலும் எப்போதும் புண்ணியம் தரும் காரியங்களைச் செய்ய வேண்டும்.

अज्ञानाद् यदि वा ज्ञानात् कृत्वा कर्म विगर्हितम्।
तस्माद् विमुक्तिमन्विच्छन् द्वितीयं न समाचरेत्॥

**அக்ஞாநாத் யதிவா ஞாநாத் க்ருத்வா கர்ம விகர்ஹிதம் |**
**தஸ்மாத் விமுக்திமந்விச்சந் த்விதீயம் ந ஸமாசரேத் ||** **232**

தெரிந்தோ, தெரியாமலோ பாபம் தரும் காரியத்தைச் செய்து விட்டு, அப்பாபத்திலிருந்து விடுதலை அடைய நினைப்பவன், மீண்டும் இரண்டாவது முறை அந்தப் பாபத்தைச் செய்யக்கூடாது.

यस्मिन् कर्मण्यस्य कृते मनसः स्यादलाघवम्।
तस्मिंस् तावत् तपः कुर्याद् यावत् तुष्टिकरं भवेत्॥

**யஸ்மிந் கர்மண்யஸ்ய க்ருதே மனஸ: ஸ்யாதலாகவம் |**
**தஸ்மிம்ஸ் தாவத் தப: குர்யாத் யாவத் துஷ்டிகரம் பவேத் ||** **233**

பாபம் செய்தவன், பிராயச்சித்த விரதத்தை அனுஷ்டித்து முடித்த பிறகும், அவன் மனத்துக்கு பாபம் நீங்கிவிட்டது என்ற திருப்தி ஏற்படவில்லையானால், திருப்தி ஏற்படும்வரை அந்த பிராயச்சித்த விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

तपोमूलमिदं सर्वं दैवमानुषकं सुखम्।
तपोमध्यं बुधैः प्रोक्तं तपोऽन्तं वेददर्शिभिः॥

**தபோ மூலமிதம் ஸர்வம் தைவமானுஷகம் சுகம் |**
**தபோ மத்யம் புதை: ப்ரோக்தம் தபோ அந்தம் வேததர்ஷிபி: ||** 234

தேவர்களும் மனிதர்களும் அனுபவிக்கும் சுகத்துக் கெல்லாம் தவமே காரணம். சுகத்தின் ஆதிக்கும் நடுவுக்கும் முடிவுக்கும் தவமே காரணம் என்று வேதமறிந்தோர் கூறியுள்ளனர்.

ब्राह्मणस्य तपो ज्ञानं तपः क्षत्रस्य रक्षणम्।
वैश्यस्य तु तपो वार्ता तपः शूद्रस्य सेवनम्॥

**ப்ராஹ்மணஸ்ய தபோ ஞாநம் தப: க்ஷத்ரஸ்ய ரக்ஷணம் |**
**வைஷ்யஸ்ய து தபோ வார்தா தப: சூத்ரஸ்ய ஸேவநம் ||** 235

தவம் என்பது யாருமற்ற காட்டில் போய் உட்கார்ந்துதான் செய்ய வேண்டும் என்பதில்லை. ஒவ்வொருவரும் அவரவர் வாழ்க்கையையே தவமாக்கிக் கொள்ளலாம்.

ஞானத்தை அடைவதே பிராம்மணன் செய்யும் தவம்.

க்ஷத்ரியர்களுக்கு மக்களைக் காப்பதே தவம்.

வைசியர்களுக்கு வர்த்தகமே தவம்.

சூத்திரர்களுக்கு பணிபுரிதலே தவம்.

ऋषयः संयतात्मानः फलमूलानिलाशनाः।
तपसैव प्रपश्यन्ति त्रैलोक्यं सचराचरम्॥

**ருஷய: ஸம்யதா ஆத்மாந: பலமூலா அநிலா அஷநா: |**
**தபஸைவ ப்ரபஷ்யந்தி த்ரைலோக்யம் ஸசராசரம் ||** 236

ரிஷிகள் மனம் வாக்கு சரீரத்தால் தூய்மையானவர்களாக, தூய்மையான நியமங்களைக் கடைப்பிடித்து, பழங்களையும் கிழங்கு களையும் உண்டு, சில சமயம் காற்றை மட்டுமே சுவாசித்தபடி தவம் புரிந்து, தங்கள் ஞானதிருஷ்டியால் இருந்த இடத்திலிருந்தபடியே மேலுலகத்தையும் பாதாளத்தையும் இந்த பூமி முழுவதையும் பார்க்கக்கூடியவர்களாக இருக்கிறார்கள்.

औषधान्यगदो विद्या दैवी च विविधा स्थितिः।
तपसैव प्रसिद्ध्यन्ति तपस् तेषां हि साधनम्॥

**ஔஷதாந்யகதோ வித்யா தைவீ ச விவிதா ஸ்திதி: |**
**தபஸைவ ப்ரசித்யந்தி தபஸ் தேஷாம் ஹி ஸாதநம் ||** 237

நோய்களை நீக்குகின்ற மூலிகைகளை அறிகின்ற திறனும், பிரம்ம ஞானமும், மேன்மையான உலகங்களும் இன்னும் பலவும்

தவத்தாலேயே அடையப்படுகின்றன. அனைத்தையும் அடையும் சாதனமாக தவமே இருக்கிறது.

यद् दुस्तरं यद् दुरापं यद् दुर्गं यच् च दुष्करम्।
सर्वं तत् तपसा साध्यं तपो हि दुरतिक्रमम्॥

**யத் துஸ்தரம் யத் துராபம் யத்துர்கம் யச்ச துஷ்கரம் |**
**ஸர்வம்தத் தபஸா சாத்யம் தபோஹி துரதிக்ரமம் ||** 238

தவத்தால் தாண்ட முடியாததையும் (வினைப்பயன்களையும்) தாண்டலாம். தவத்தால் ஏறமுடியாத எந்த உச்சத்தையும் (மேலுலகங்களையும்) எட்டலாம். தவத்தால் செய்ய இயலாத எந்தக் காரியத்தையும் (விஸ்வாமித்திரரைப் போன்று படைத்தல் தொழிலையும்) செய்யலாம். தவத்துக்கு மிஞ்சிய சக்தி எதுவுமே கிடையாது.

महापातकिनश् चैव शेषाश् चाऽकार्यकारिणः।
तपसैव सुतप्तेन मुच्यन्ते किल्बिषात् ततः॥

**மஹாபாதகிநஷ்சைவ சேஷாத் சாஅகார்யகாரிண: |**
**தபஸைவ சுதப்தேந முச்யந்தே கில்பிஷாத் ததக: ||** 239

மஹாபாதகங்களைச் செய்தவர்களும் தங்கள் தவத்தினால் பாபங்களிலிருந்து விடுபட்டிருக்கிறார்கள்.

சிறு பாபங்களைச் செய்தவர்களும் விடுபட்டிருக்கிறார்கள்.

நன்கு தவம் செய்த எல்லோருமே தங்கள் பாபங்களிருந்து விடுபட்டிருக்கிறார்கள்.

कीटाश् चाऽहि-पतङ्गाश् च पशवश् च वयांसि च।
स्थावराणि च भूतानि दिवं यान्ति तपोबलात्॥

**கீடாஷ் சாஅஹி பதங்காஷ் ச பஷவஷ் ச வயாம்ஸி ச |**
**ஸ்தாவராணி ச பூதாநி திவம் யாந்தி தபோ பலாத் ||** 240

பூச்சிகளும், பாம்புகளும், அணில்களும், மிருகங்களும், பறவைகளும், தாவரங்களும் தவம் செய்து சொர்க்கத்தை அடைந்துள்ளன.

यत्किञ्चिदेनः कुर्वन्ति मनोवाङ्मूर्तिभिर् जनाः।
तत् सर्वं निर्दहन्त्याशु तपसैव तपोधनाः॥

**யத்கிஞ்சிதேந: குர்வந்தி மநோவாக் மூர்திபிர் ஜநா: |**
**தத் ஸர்வம் நிர்தஹந்த்யாஷு தபஸைவ தபோதநா: ||** 241

தவத்தையே தனமாக எண்ணி சேமித்து வைப்பவர்கள், மனத்தாலும் வாக்காலும் உடலாலும் ஏதோ சிறிது பாபம் செய்தாலும் அதுவும் தவத்தால் எரிக்கப்பட்டுவிடும். தவத்தையே

தனமாகக் கொண்டவர்கள் என்பதால் தபஸ்விகள் தபோதனர்கள் எனப் படுகிறார்கள்.

तपसैव विशुद्धस्य ब्राह्मणस्य दिवौकसः।
इज्याश् च प्रतिगृह्णन्ति कामान् संवर्धयन्ति च॥

**தபஸைவ விசுத்தஸ்ய ப்ராஹ்மணஸ்ய திவௌகஸ: |**
**இஜ்யாஷ் ச ப்ரதிக்ருஹ்ணந்தி காமாந் ஸம்வர்தயந்தி ச || 242**

தவம் செய்து தூய்மையடைந்த பிராம்மணர்கள் யாகயக்ஞங்கள் மூலமாகக் கொடுக்கும் ஹவிஸை தேவர்கள் பிரியத்தோடு ஏற்பார்கள். அவர்கள் கேட்கும் வரங்களையும் கொடுப்பார்கள்.

प्रजापतिरिदं शास्त्रं तपसैवाऽसृजत् प्रभुः।
तथैव वेदानृषयस् तपसैव प्रपेदिरे॥

**ப்ரஜாபதிரிதம் ஷாஸ்த்ரம் தபஸைவா அஸ்ருஜத் ப்ரபு: |**
**ததைவ வேதாந் ருஷயஸ் தபஸைவ ப்ரபேதிரே || 243**

பிரஜாபதியானவர், தவம் செய்தே இந்த தர்ம சாஸ்திரங்களை இயற்றினார். அவ்வாறே ரிஷிகள் தவத்தினாலேயே வேதங்களை அறிந்தார்கள்.

इत्येतत् तपसो देवा महाभाग्यं प्रचक्षते।
सर्वस्याऽस्य प्रपश्यन्तस् तपसः पुण्यमुत्तमम्॥

**இத்யேதத் தபஸோ தேவா மஹாபாக்யம் ப்ரசக்ஷதே |**
**ஸர்வஸ்யாஅஸ்ய ப்ரபஷ்யந்தஸ் தபஸ: பூண்ய முத்தமம் || 244**

தேவர்கள், தவத்தாலேயே தாங்கள் தேவர்களானதை எண்ணி, தவத்தின் மேன்மையை அறிந்தவர்களாக மிக உயர்ந்ததான தவத்தைக் கொண்டாடுகிறார்கள்.

वेदाऽभ्यासोऽन्वहं शक्त्या महायज्ञक्रिया क्षमा।
नाशयन्त्याशु पापानि महापातकजान्यपि॥

**வேதாஅப்யாஸோ அந்வஹம் ஷக்த்யா மஹாயக்ஞக்ரியா க்ஷமா |**
**நாசயந்த்யாஷு பாபாநி மஹாபாதகஜாந்யபி || 245**

தினமும் வேதமோதுதல், பஞ்ச மகா யக்ஞங்களைச் செய்தல், பூர்வப் பயனால் வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளல் என்னும் இவை மூன்றும் மஹா பாபங்களையும் சீக்கிரமாக நசிக்கச் செய்யும்.

यथैधस् तेजसा वह्निः प्राप्तं निर्दहति क्षणात्।
तथा ज्ञानाऽग्निना पापं सर्वं दहति वेदवित्॥

**யதைதஸ் தேஜஸா வஹ்நி: ப்ராப்தம் நிர்தஹதி க்ஷணாத் |**
**ததா ஞாநா அந்நிநா பாபம் ஸர்வம் தஹதி வேதவித் ||** 246

*அக்னியானது, தன்னருகிலுள்ள விறகுகளையெல்லாம் எரித்துச் சாம்பலாக்குவது போன்று வேதவிற்பன்னன் தனது ஞானம் என்னும் அக்னியினால் சகல பாபங்களையும் எரித்துவிடுவான்.*

**इत्येतदेनसामुक्तं प्रायश्चित्तं यथाविधि।**
**अत ऊर्ध्वं रहस्यानां प्रायश्चित्तं निबोधत॥**

**இத்யேதத்தே நஸாமுக்தம் ப்ராயஷ்சித்தம் யதாவிதி |**
**அத ஊர்த்வம் ரஹஸ்யாநாம் ப்ராயஷ்சித்தம் நிபோதத ||** 247

*வெளிப்படையாள பிரம்மஹத்தி பாபம் முதல் அனைத்துப் பாகங்களுக்குமான பரிகாரங்கள் இதுவரை கூறப்பட்டன. இனி ரகசியமான பாபங்களின் பரிகாரங்களைக் கூறுகிறேன், கேளுங்கள்:*

**सव्याहृतिप्रणवकाः प्राणायामास् तु षोडश।**
**अपि भ्रूणहणं मासात् पुनन्त्यहरहः कृताः॥**

**ஸவ்யாஹ்ருதி ப்ரணவகா: ப்ராணாயாமாஸ்து சோடஷ |**
**அபி ப்ரூணஹணம் மாஸாத் பூநந்த்யஹரஹ: க்ருதா: ||** 248

*வியாக்ருதி பிரணவங்களோடு பதினாறு பிராணாயாமங்களைச் செய்தால் பிரம்மஹத்தி பாபத்திலிருந்தும் நீங்கி பரிசுத்தமடைய முடியும். ( மந்திர சித்தி அடைந்தவர்களுக்கே இது பொருந்தும். )*

**कौत्सं जप्त्वाऽप इत्येतद् वासिष्ठं च प्रतीत्यृचम्।**
**माहित्रं शुद्धवत्यश् च सुरापोऽपि विशुध्यति॥**

**கௌத்ஸம் ஜப்த்வாஅப இத்யேதத் வாசிஷ்டம் சப்ரதீத் ய்ருசம் |**
**மாஹித்ரம் சுத்தவத்யஷ் ச சுராபோ அபி விசுத்யதி ||** 249

*கௌத்ஸ மகரிஷி அருளிய 'அப' என்று தொடங்கும் சூக்தத்தையும், அவ்வாறே வசிஷ்டர் அருளிய சூக்தத்தையும், மஹித்ரமகரிஷி அருளிய சூக்தத்தையும் தினமும் பதினாறு முறை ஜபிக்க வேண்டும் இவ்வாறு முப்பது தினங்கள் ஜபித்தால் மதுவருந்தியவன் அந்தப் பாபத்தினின்றும் நீங்கி பரிசுத்தனாகிறான்.*

**सकृज् जप्त्वाऽस्यवामीयं शिवसङ्कल्पमेव च।**
**अपहृत्य सुवर्णं तु क्षणाद् भवति निर्मलः॥**

**ஸக்ருஜ் ஜப்த்வா அஸ்யவாமீயம் ஷிவஸங்கல்பமேவ ச |**
**அபஹ்ருத்ய சுவர்ணம்து க்ஷணாத் பவதி நிர்மல: ||** 250

ஒரு மாதம், தினமும் வாமசூக்தத்தையும், சிவ சங்கல்பத்தையும் ஜபித்துவந்தால் பிராம்மணனிடம் தங்கத்தைத் திருடிய பாவத்திலிருந்து விடுபட முடியும்.

हविष्पान्तीयमभ्यस्य न तमंह इतीति च।
जपित्वा पौरुषं सूक्तं मुच्यते गुरुतल्पगः॥

**ஹவிஷ்பாந்தீயமப்யஸ்ய நதமம்ஹ இதீதி ச |**
**ஜபித்வா பௌருஷம் சூக்தம் முச்யதே குருதல்பக: || 251**

'ஹவிஷ்பாந்தம்' எனத் தொடங்கும் ரிக்குகளையும், 'நதமம்' என்று தொடங்கும் ரிக்குகளையும், 'இதி வா' எனத் தொடங்கும் ரிக்கையும் கொண்ட புருஷ சூக்தத்தையும் ஒரு மாதம் தினந்தோறும் பதினாறு முறை ஜபித்து வந்தால் குரு மனைவியைக் கூடிய பாபத்திலிருந்து விடுபடலாம்.

एनसां स्थूलसूक्ष्माणां चिकीर्षन्नपनोदनम्।
अवेत्यृचं जपेदब्दं यत्किञ्चेदमितीति वा॥

**ஏநஸாம் ஸ்தூலசூக்ஷ்மாணாம் சிகீர்ஷந்நபநோதநம் |**
**அவேத்ர்யுசம் ஜபேதப்தம் யத்கிஞ்சேதமிதீதி வா || 252**

பெரிய பாபங்களையும், சிறு பாபங்களையும் போக்கிக் கொள்ள வேண்டுபவன், 'அவ தே' என்னும் ரிக்கையும், 'யத்கிஞ் சேதம்' என்னும் ரிக்கையும், 'இதி வா' என்னும் ரிக்கையும் ஒரு வருடகாலம் தினமும் ஒரு முறை ஜபிக்க வேண்டும்.

प्रतिगृह्याऽप्रतिग्राह्यं भुक्त्वा चाऽन्नं विगर्हितम्।
जपंस् तरत्समन्दीयं पूयते मानवस् त्र्यहात्॥

**ப்ரதிக்ருஹ்யா அப்ரதிக்ராஹ்யம் புக்த்வா சாஅந்நம் விகர்ஹிதம் |**
**ஜபம்ஸ் தரத்ஸமந்தீயம் பூயதே மாநவஸ் த்ரயஹாத் || 253**

வாங்கக்கூடாதவரிடம் தானம் வாங்கினாலும், தகாததை தானே சம்பாதித்தாலும், தகாத அன்னத்தை சாப்பிட்டாலும், 'தரத்ஸமந்தீ' என்று தொடங்கும் ரிக்குகளை ஜபித்து மூன்று நாட்களில் பரிசுத்தனாக முடியும்.

सोमारौद्रं तु बह्वेना मासमभ्यस्य शुध्यति।
स्रवन्त्यामाचरन् स्नानमर्यम्णामिति च तृचम्॥

**ஸோமாரௌத்ரம் து பஹ்வேநா மாஸ மப்யஸ்ய அத்யதி |**
**ஸ்ரவந்த்யாமாசரந் ஸ்நாநமர்யம்ணாமிதி சத்ருசம் || 254**

அதிக பாபங்களைச் செய்தவன் 'சோமாருத்வா' என்று தொடங்கும் ரிக்குகளையும், 'அர்யமணம்' என்று தொடங்கும்

ரிக்குகளையும் ஒரு மாத காலம் நதியில் நீராடி ஜபிக்க வேண்டும். இப்படிச் செய்வதால் பாபங்களிலிருந்து விடுபட்டு பரிசுத்தனாவான்.

अब्दार्धमिन्द्रमित्येतदेनस्वी सप्तकं जपेत्।
अप्रशस्तं तु कृत्वाऽप्सु मासमासीत भैक्षभुक्॥

**அப்தா அர்தமிந்த்ரமித்யேத தேநஸ்வீஸப்தகம் ஜபேத் |**
**அப்ரஷஸ்தம் து க்ருத்வா அப்சு மாஸமாஸீத பைக்ஷுகம் || 255**

நிறைய பாபங்களைச் செய்த பாபி 'இந்த்ரம் மித்ரம்' என்னும் ஏழு ரிக்குகளையும் ஆறு மாத காலம் ஜபிக்க வேண்டும்.

தண்ணீரில் மலஜலம் விட்டவன், ஒரு மாதம் பிச்சையெடுத்து சாப்பிடுவதால் அப்பாபத்தினின்றும் நீங்குவான்.

मन्त्रैः शाकलहोमीयैरब्दं हुत्वा घृतं द्विजः।
सुगुर्वप्यपहन्त्येनो जप्त्वा वा न म इत्यृचम्॥

**மந்த்ரை: ஷாகலஹோமீயைரப்தம் ஹுத்வா க்ருதம் த்விஜ: |**
**சுகுர்வப்ய பஹந்த்யேநோ ஜப்த்வா வா ந ம இத்ர்யுசம் || 256**

மஹாபாதகங்களைச் செய்த த்விஜன், சாகல ஹோம மந்திரங்களோடு ஒரு வருடகாலம் நெய் வார்த்து ஹோமம் செய்ய வேண்டும். அல்லது 'நம இந்த்ரஷ்ச' என்னும் ரிக்கை ஒரு வருட காலம் ஜபிக்க வேண்டும். இதனால் பாபங்கள் நீங்கி பரிசுத்தனாவான்.

महापातकसंयुक्तोऽनुगच्छेद् गाः समाहितः।
अभ्यस्याब्दं पावमानीर् भैक्षाहारो विशुध्यति॥

**மஹாபாதக ஸம்யுக்தோ அனுகச்சேத் கா: ஸமாஹித: |**
**அப்யஸ்யா அப்தம் பாவமாநீர் பைக்ஷாஹாரோ விசுத்யதி || 257**

மஹாபாதகங்கள் அதிகம் செய்தவன் பிச்சையெடுத்து ஜீவனம் நடத்த வேண்டும். புலன்களை அடக்கி ஒரு வருடம் பசுக்களுடனே இருக்க வேண்டும். அப்போது தினமும் பாவமான ரிக்குகளை ஜபித்தபடி இருக்க வேண்டும். இதனால் பாபங்கள் நீங்கி பரிசுத்தனாவான்.

अरण्ये वा त्रिरभ्यस्य प्रयतो वेदसंहिताम्।
मुच्यते पातकैः सर्वैः पराकैः शोधितस् त्रिभिः॥

**அரண்யே வா த்ரிரப்யஸ்ய ப்ரயதோ வேதஸம்ஹிதாம் |**
**முச்யதே பாதகை: ஸர்வை: பராகை: ஷோதிதஸ் த்ரிபி: || 258**

பராகக்ருச்ர விரதத்தை அனுஷ்டித்து, தூயவனான பிறகு, வனத்தில் வசித்தபடி வேதசம்ஹிதையை மூன்று முறை பாராயணம் செய்யவேண்டும். உள்ளும் புறமும் சுத்தமாக இருக்க வேண்டும். இதனால் எல்லாப் பாபங்களும் போகும்.

त्र्यहं तूपवसेद् युक्तस् त्रिरह्नोऽभ्युपयन्नपः ।
मुच्यते पातकैः सर्वैस् त्रिर् जपित्वाऽघमर्षणम् ॥

**த்ரயஹம் தூபவசேத் யுக்தஸ் த்ரிரஹ்நோ அப்யுபயந்நப: |**
**முச்யதே பாதகை: ஸர்வைஸ் த்ரிர் ஜபித்வா அகமர்ஷணம் || 259**

மூன்று நாட்கள் ஐம்புலன்களை அடக்கி, மூன்று வேளையும் நீராடி, எதுவும் சாப்பிடாமல் உபவாசமிருந்து மூன்று வேளையும் ஜலத்தில் இருந்து அகமர்ஷண மந்திரங்களை மூன்று முறை ஜபிக்க வேண்டும். அப்படி இயலாதவர்கள் மூன்று முறை ஜபிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. சக்தியிருப்பவர்கள் அவரவர் சக்திக்குத் தக்கபடி பலமுறை ஜபிக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட முடியும்.

यथाऽश्वमेधः क्रतुराट् सर्वपापाऽपनोदनः ।
तथाऽघमर्षणं सूक्तं सर्वपापाऽपनोदनम् ॥

**யதா அஷ்வமேத: க்ரதுராட் ஸர்வபாபா அபநோதந: |**
**ததா அகமர்ஷணம் ஸூக்தம் ஸர்வபாபா அபநோதகம் || 260**

யாகங்களில் அஸ்வமேதம் எவ்வாறு உயர்ந்ததாக உள்ளதோ அவ்வாறு சகல பாபங்களையும் போக்கத்தக்க அகமர்ஷண ஸூக்தம் உயர்ந்ததாக உள்ளது. எனவே அகமர்ஷண ஸூக்தத்தை ஜபித்தால் அனைத்துப் பாபங்களும் நசிக்கும்.

हत्वा लोकानपीमांस् त्रीनश्नन्नपि यतस् ततः ।
ऋग्वेदं धारयन् विप्रो नैनः प्राप्नोति किञ्चन ॥

**ஹத்வா லோகாநபீமாம்ஸ் த்ரீநஷ்நந்நபி யதஸ் தத: |**
**ரிக்வேதம் தாரயந் விப்ரோ நைந: ப்ராப்நோதி கிஞ்சந || 261**

ரிக் வேதத்தை அத்யயனம் செய்பவன், உலகங்களை அழித்தாலும், மகா பாவிகளின் உணவை சாப்பிட்டாலும் சிறிதளவும் பாபத்தை அடையான்.

ऋक्संहितां त्रिरभ्यस्य यजुषां वा समाहितः ।
साम्नां वा सरहस्यानां सर्वपापैः प्रमुच्यते ॥

**ரிக்ஸம்ஹிதாம் த்ரிரப்யஸ்ய யஜுஷாம் வா ஸமாஹித: |**
**ஸாம்நாம் வா ஸரஹஸ்யாநாம் ஸர்வபாபை: ப்ரமுச்யதே || 262**

ரிக்வேத பாராயணமும்,யஜுர் வேத பாராயணமும், ஸாமவேத பாராயணமும் பாபங்களைப் போக்குபவை. இவற்றில் ஏதாவது ஒரு வேதத்தை மூன்று முறை பாராயணம் செய்தவன் சகல பாபங்களிலிருந்தும் விடுதலை அடைவான்.

यथा महाहृदं प्राप्य क्षिप्तं लोष्टं विनश्यति।
तथा दुश्चरितं सर्वं वेदे त्रिवृति मज्जति॥

**யதா மஹாஹ்ருதம் ப்ராப்ய க்ஷிப்தம் லோஷ்டம் விநஷ்யதி |**
**ததா துஷ்சரிதம் ஸர்வம் வேதே த்ரிவ்ருதி மஜ்ஜதி || 263**

பெரிய மடுவில் விழுந்த மண்கட்டி கரைந்து போவது போன்று ரிக், யஜுர், சாம வேத பாராயணங்களால் சகல பாபங்களும் கரைந்து போகும்.

ऋचो यजूंषि चाऽन्यानि सामानि विविधानि च।
एष ज्ञेयस् त्रिवृद् वेदो यो वेदैनं स वेदवित्॥

**ருசோ யஜும்ஸி சாஅந்யாநி ஸாமாநி விவிதாநி ச |**
**ஏச ஞேயஸ் த்ரிவ்ருத் வேதோ யோ வேதைநம் ச வேதவித் || 264**

ரிக், யஜுர், சாம வேதங்களையும், இவற்றின் மந்திர பிரம்மாணங்களையும் சேர்த்து 'திரிவிருத் வேதம்' என்று கூறுவார்கள். இந்த திரிவிருத் வேதத்தை அறிந்தவனையே 'வேதவித்' என்று கூறுவார்கள்.

आद्यं यत् त्र्यक्षरं ब्रह्म त्रयी यस्मिन् प्रतिष्ठिता।
स गुह्योऽन्यस् त्रिवृद् वेदो यस् तं वेद स वेदवित्॥

**ஆத்யம் யத் த்ரயக்ஷரம் ப்ரஹ்ம த்ரயீ யஸ்மிந் ப்ரதிஷ்டிதா |**
**ஸகுஹ்யோஅந்யஸ் த்ரிவ்ருத் வேதோ யஸ்தம் வேத ஸ வேதவித் || 265**

வேதங்களுக்கு முதலில் இருக்கின்ற, அகார, உகார, மகாரங்கள் என்னும் மூன்று அட்சரங்கள் சேர்ந்த பிரணவம் சிரேஷ்டமானது; பிரம்ம தத்துவத்தைத் தெரிவிப்பதும், மிகவும் ரகசியமானதுமான பிரணவத்தின் சொரூபத்தையும், பொருளையும் அறிந்தவன் 'வேதவித்' எனப்படுவான்.

(பதினோராம் அத்தியாயம் முற்றிற்று.)

# அத்தியாயம் - 12

चातुर्वर्ण्यस्य कृत्स्नोऽयमुक्तो धर्मस् त्वयाऽनघ।
कर्मणां फलनिर्वृत्तिं शंस नस् तत्त्वतः पराम्॥

**சாதுர்வர்ணஸ்ய க்ருத்ஸ்நோ அயமுக்தோ தர்மஸ் த்வயா அநக |**
**கர்மணாம் பலநிர்வ்ருத்திம் ஷம்ஸ நஸ் தத்வத: பராம் || 1**

*மகரிஷிகள் கூற்று:* மேன்மையானவரான பிருகு முனிவரே, நான்கு வர்ணத்தவருடைய தர்மங்களையும், கலப்பினத்தாரின் தோற்றங்களைப் பற்றியும், தொழில்களைப் பற்றியும், கர்ம பலன்களின் பரிகாரங்களைப் பற்றியும் கூறினீர்கள். இனி ஜன்மாந்திரங்களின் வினைப்பயனைப் பற்றி எங்களுக்கு எடுத்துரைக்க வேண்டுகிறோம்.

स तानुवाच धर्मात्मा महर्षीन् मानवो भृगुः।
अस्य सर्वस्य शृणुत कर्मयोगस्य निर्णयम्॥

**ஸ தானுவாச தர்மாஆத்மா மஹர்ஷீந் மாநவோ ப்ருகு: |**
**அஸ்ய ஸர்வஸ்ய ஷ்ருணுத கர்மயோகஸ்ய நிர்ணயம் || 2**

தர்மாத்வாவும் மநுவின் மகனுமான பிருகு மகரிஷி, முனிவர்களைப் பார்த்து "அனைத்து வினைகளுக்கும் ஏற்படும் பலன்களைப் பற்றி எடுத்துரைக்கிறேன், கேளுங்கள்," என்றார்.

शुभाऽशुभफलं कर्म मनोवाग्देहसम्भवम्।
कर्मजा गतयो नृणामुत्तमाऽधममध्यमाः॥

**சுபாஅசுப பலம் கர்ம மநோவாக்தேஹஸம்பவம் |**
**கர்மஜா கதயோ ந்ருணா முத்தமா அதமமத்யமா: || 3**

மனம், வாக்கு, உடலால் கர்மவினைகள் ஏற்படுகின்றன. இவை நல்வினை தீவினை என்று இருவகையாக ஏற்படும். இதனைக் கொண்டு நல்வினைக்கு நல்ல பலனும், தீ வினைக்கு தீய பலனும் அடைவார்கள். இந்த பலன்களாலேயே உத்தமப் பிறவிகளும், மத்திமப் பிறவிகளும், கடைநிலைப் பிறவிகளும் ஏற்படும்.

तस्येह त्रिविधस्याऽपि त्र्यधिष्ठानस्य देहिनः।
दशलक्षणयुक्तस्य मनो विद्यात् प्रवर्तकम्॥

**தஸ்யேஹ த்ரிவிதஸ்யா அபி த்ரயதிஷ்டாநஸ்ய தேஹிந: |**
**தஷலக்ஷணயுக்தஸ்ய மநோ வித்யாத் ப்ரவர்தகம் ||** 4

*ஒருவன் செய்யும் நற்செயல்களாலும், தீச்செயல்களாலும், இடைப்பட்ட செயல்களாலும் ஏற்படும் பத்து வகையான வினைகளுக்கு மனமே மூலகாரணமாயிருக்கிறது.*

परद्रव्येष्वभिध्यानं मनसाऽनिष्टचिन्तनम्।
वितथाऽभिनिवेशश्च त्रिविधं कर्म मानसम्॥

**பரத்ரவ்யேஷ்வபித்யாநம் மநஸா அநிஷ்ட சிந்தநம் |**
**விததா அபிநிவேஷஷ்ச த்ரிவிதம் கர்ம மானஸம் ||** 5

*பிறர் பொருளின் மீது ஆசைப்படுதல் போன்ற நினைப்புகளால் மனம் மூன்று வகையான கர்மாக்கள் செய்ய காரணமாகிறது.*

पारुष्यमनृतं चैव पैशुन्यं चाऽपि सर्वशः।
असम्बद्धप्रलापश् च वाङ्मयं स्याच् चतुर्विधम्॥

**பாருஷ்யமந்ருதம் சைவ பைசுந்யம் சாஅபி ஸர்வஷ: |**
**அஸம் பத்தப்ரலாபஷ்ச வாக்மயம் ஸ்யாச் சதுர்விதம் ||** 6

*கடுமையாகப் பேசுதல், பொய்பேசுதல், பழி சுமத்துதல், ஊர்வம்பு பேசுதல் என்னும் நான்கும் வாக்கால் ஏற்படும் பாபங்கள்.*

अदत्तानामुपाऽऽदानं हिंसा चैवाऽविधानतः।
परदारोपसेवा च शारीरं त्रिविधं स्मृतम्॥

**அதத்தாநாமுபா ஆதாநம் ஹிம்ஸா சைவா அவிதாநத: |**
**பரதாரோபஸேவா ச ஷாரீரம் த்ரிவிதம் ஸ்ம்ருதம் ||** 7

*பிறர் சொத்தைப் பறித்து அனுபவித்தல், ஹிம்சித்தல், பிறர் மனைவியை அடைதல் என்னும் மூன்றும் உடலால் ஏற்படும் பாபங்கள்.*

मानसं मनसैवाऽयमुपभुङ्क्ते शुभाऽशुभम्।
वाचा वाचा कृतं कर्म कायेनैव च कायिकम्॥

**மாநஸம் மநஸைவா அயமுபபுங்தே ஷுபாஅஷுபம் |**
**வாசா வாசா க்ருதம் கர்ம காயேநைவ ச காயிகம் ||** 8

*மனத்தால் செய்த பாபங்களின் பலனையும், புண்ணியங்களின் பலனையும் மனத்தாலேயே அனுபவித்தாக வேண்டும்.*

*வாக்கால் செய்த பாபங்களின் பலனையும், புண்ணியங்களின் பலனையும் வாக்காலேயே அனுபவித்தாக வேண்டும்.*

शरीरजैः कर्मदोषैर् याति स्थावरतां नरः।
वाचिकैः पक्षिमृगतां मानसैरन्त्यजातिताम्॥

**ஷரீரஜை: கர்மதோஷைர் யாதி ஸ்தாவரதாம் நர: |**
**வாசிகை: பக்ஷி ம்ருகதாம் மாநஸைரந்த்யஜாதிதாம் || 9**

மனிதன் உடலால் செய்த பாபங்களால் அடுத்து, மரம், செடி கொடிகளாக பிறவியெடுப்பான்.

வாக்கால் செய்த பாபங்களால் மிருகம், பறவையாக பிறவியெடுப்பான்.

மனத்தால் செய்த பாபங்களால் சண்டாள ஜாதி மற்றும் மிகத் தாழ்ந்த ஜாதிகளில் பிறப்பான்.

न कश्चिद् योषितः शक्तः प्रसह्य परिरक्षितुम्।
एतैरुपाययोगैस् तु शक्यास् ताः परिरक्षितुम्॥

**வாக்தண்டோ அத மநோதண்ட: காயதண்டஸ் ததைவ ச |**
**யஸ்யைதே நிஹிதா புத்தெள த்ரிதண்டீதி ஸ உச்யதே || 10**

திரிதண்டத்தைக் கையில் ஏந்தியவன் சந்யாசி. வாக்கு மனம் உடல் என்னும் மூன்றையும் கட்டுப்படுத்தி ஸ்திரமாக தன்வசம் வைத்திருப்பவனே திரிதண்டி, இவனே உண்மையான சந்யாசி.

त्रिदण्डमेतन् निक्षिप्य सर्वभूतेषु मानवः।
कामक्रोधौ तु संयम्य ततः सिद्धिं नियच्छति॥

**த்ரிதண்டமேதந் நிக்ஷிப்ய ஸர்வபூதேஷு மாநவ: |**
**காமக்ரோதெள து ஸம்யம்ய தத: ஸித்திம் நியச்சதி || 11**

மனம் வாக்கு உடலை அடக்கியவனாக சகல உயிர்களிடத்தும் கருணை செலுத்தி, காமம் குரோதம் முதலான எந்த தீய பண்பும் நெருங்காமல் தன்னைக் காத்து கொள்பவனே சித்தியை அடைவான்.

योऽस्यात्मनः कारयिता तं क्षेत्रज्ञं प्रचक्षते।
यः करोति तु कर्माणि स भूतात्मोच्यते बुधैः॥

**யோ அஸ்யா ஆத்மந: காரயிதா தம் க்ஷேத்ரக்ஞம் ப்ரசக்ஷதே |**
**ய: கரோதி து கர்மாணி ஸ பூதாத்மோச்யதே பூதை: || 12**

ஆத்மாவுக்கு உபகாரமாக இருக்கும் உடலை நல்லதும் கெட்டதுமான அனைத்து காரியங்களையும் ஈடுபடச் செய்பவனை க்ஷேத்ரக்ஞன் என்பார்கள்.

*எந்த உடலானது சகல காரியங்களையும் செய்து கொண்டிருக் கிறதோ, அந்த உடல் ஐம்பூத தத்துவங்களால் ஆனது என்பதால் பூதாத்மா என்பார்கள்.*

जीवसंज्ञोऽन्तरात्मान्यः सहजः सर्वदेहिनाम्।
येन वेदयते सर्वं सुखं दुःखं च जन्मसु॥

**ஜீவஸம்ஞோ அந்தராத்மா அந்ய: ஸஹஜ: ஸர்வ தேஹிநாம் |**
**யேந வேதயதே ஸர்வம் சுகம் துக்கம்ச ஜன்ம சு || 13**

*க்ஷேத்ரக்ஞனுக்கும் பூதாத்மாவுக்கும் வேறான மஹத் என்று ஒரு தத்துவம் உள்ளது. இந்திரியங்களையும் அகங்காரத்தையும் உருவமாகக் கொண்ட மஹத் தத்துவத்தைக் கொண்டே க்ஷேத் ரக்ஞன் சுகதுக்கங்களை அனுபவிக்கிறான்.*

तावुभौ भूतसम्पृक्तौ महान् क्षेत्रज्ञ एव च।
उच्चावचेषु भूतेषु स्थितं तं व्याप्य तिष्ठतः॥

**தாவுபௌ பூதஸம்ப்ருக்தௌ மஹாந் க்ஷேத்ரக்ஞ ஏவ ச |**
**உச்சாவசேஷு பூதேஷு ஸ்திதம் தம் வ்யாப்ய திஷ்டத: || 14**

*தாழ்ந்த மஹத்தும் க்ஷேத்ரக்ஞனும் பஞ்சபூதங்களுடன் கூடி உயர்ந்த சகல உயிர்களிடத்தும் உள்ளுறையும் பரமாத்வாவை அண்டியிருக்கும்.*

असङ्ख्या मूर्तयस् तस्य निष्पतन्ति शरीरतः।
उच्चावचानि भूतानि सततं चेष्टयन्ति याः॥

**அசங்க்யா மூர்தயஸ் தஸ்ய நிஷ்பதந்தி ஷரீரத: |**
**உச்சாவசாநி பூதாநி ஸததம் சேஷ்டயந்தி யா: || 15**

*பரமாத்வாவிலிருந்து கணக்கற்ற க்ஷேத்ரக்ஞர்கள், அக்னி யிலிருந்து தெறிக்கும் தீப்பொறிகளைப் போல வெளிப்பட்டு உயர்ந்ததும் தாழ்ந்ததுமான தேவர் மனிதர் மிருகம் போன்ற ரூபங்களோடு வெளிப்பட்டு பூத தத்துவங்களால் இயங்குகின்றனர்.*

पञ्चभ्य एव मात्राभ्यः प्रेत्य दुष्कृतिनां नृणाम्।
शरीरं यातनार्थीयमन्यदुत्पद्यते ध्रुवम्॥

**பஞ்சப்ய ஏவ மாத்ராப்ய: ப்ரேத்ய துஷ்க்ருதிநாம் ந்ருநாம் |**
**ஷரீரம் யாதநார்தீய மந்யதுத்பத்யதே த்ருவம் || 16**

*மனிதர்கள் ப்பாபம் புரிந்தவர்களாக, நரகங்களைஅனுபவிக்கதக்க, எத்தகைய துன்பங்களையும் பொறுக்க கூடியதான யாதனா சரீரத்தை அடைகின்றனர்.*

तेनाऽनुभूय ता यामीः शरीरेणेह यातनाः।
तास्वेव भूतमात्रासु प्रलीयन्ते विभागशः॥

**தேநா அனுபூய தா யாமீ: ஷரீரேணேஹ யாதநா: |**
**தாஸ்வேவ பூதமாத்ராசு ப்ரலீயந்தே விபாகஷ:||** 17

*பாபாத்மாக்களான ஜீவர்கள் இந்த யாதனா சரீரத்தைப் பெற்று யமனால் ஆணையிடப்பட்ட சகல துன்பங்களையும் (தண்டனை களையும்) அனுபவிப்பர். அப்போது முன்பிருந்த பஞ்ச பூதங்களும் கலைந்து வெளியிலுள்ள பஞ்சபூதங்களுடன் லயிக்கின்றன.*

सोऽनुभूयाऽसुखोदर्कान् दोषान् विषयसङ्गजान्।
व्यपेतकल्मषोऽभ्येति तावेवोभौ महौजसौ॥

**ஸோஅனுபூயா அசுகோதர்காந் தோஷாந் விஷயஸங்கஜாந் |**
**வ்யபேத கல்மஷோ அப்யேதி தாவேவோபெள மஹௌஜஸௌ ||** 18

*மனிதன் தான் செய்த தீய வினைகளின் பலனையெல்லாம், நரகத்தில் அனுபவித்த பிறகு, பாபம் நீங்கியவனாக மீண்டும் மஹத்தின் சேர்க்கையையும், பரமாத்ம சேர்க்கையையும் அடை கிறான்.*

तौ धर्मं पश्यतस् तस्य पापं चाऽतन्द्रितौ सह।
याभ्यां प्राप्नोति सम्पृक्तः प्रेत्येह च सुखाऽसुखम्॥

**தெள தர்மம் பஷ்யதஸ் தஸ்ய பாபம் சாஅதந்த்ரிதெள ஸஹ |**
**யாப்யாம் ப்ராப்நோதி ஸம்ப்ருக்த: ப்ரேத்யேஹ ச சுகா அசுகம் ||** 19

*ஜீவன் தர்மத்தோடும் அதர்மத்தோடும் கூடியவனாக எந்த சுக துக்கங்களை அனுபவிக்கிறானோ அடைகிறானோ அதை 'மஹத்'தும் பரமாத்மாவும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.*

यद्याचरति धर्मं स प्रायशोऽधर्ममल्पशः।
तैरेव चाऽऽवृतो भूतैः स्वर्गे सुखमुपाऽश्नुते॥

**யத்யாசரதி தர்மம்ஸ ப்ராயஷோ அதர்மமல்பஷ: |**
**தைரேவ சாஆவ்ருதோ பூதை: ஸ்வர்கே சுகமுபாஅஷ்நுதே ||** 20

*ஜீவன் தர்மத்தை அதிகமாகவும், அதர்மத்தை கொஞ்சமாகவும் செய்திருந்தால், பஞ்ச பூதங்களோடு கூடியவனாக ஸ்வர்க லோகத்தையடைந்து சுகமாக இருக்கின்றான்.*

यदि तु प्रायशोऽधर्मं सेवते धर्ममल्पशः।
तैर् भूतैः स परित्यक्तो यामीः प्राप्नोति यातनाः॥

**யதி து ப்ராயஷோ அதர்மம் ஸேவதே தர்மமல்பஷ: |**
**தைர் பூதை: ஸ பரித்யக்தோ யாமீ: ப்ராப்நோதி யாதநா: || 21**

*ஜீவன் அதர்மத்தை அதிகமாகவும், தர்மத்தைக் குறைவாகவும் செய்திருந்தால் ஐம்பூதங்களும் நீங்கிய கடினமான நரகத் துன்பங்களைத் தாங்கக் கூடிய யாதனா சரீரத்தோடு யம வாதனைகளை அனுபவிப்பான்.*

यामीस् ता यातनाः प्राप्य स जीवो वीतकल्मषः।
तान्येव पञ्चभूतानि पुनरप्येति भागशः॥

**யாமீஸ் தா யாதநா: ப்ராப்ய ஸ ஜீவோ வீதகல்மஷ: |**
**தாந்யேவ பஞ்சபூதாநி பூநரப்யேதி பாகஷ: || 22**

*அந்த ஜீவன் நரகவேதனைகளை அனுபவித்த பிறகு பாபங்கள் நீங்கப் பெற்று, ஐம்பூதச் சேர்க்கையை மீண்டும் அடைகிறான்.*

एता दृष्ट्वाऽस्य जीवस्य गतीः स्वेनैव चेतसा।
धर्मतोऽधर्मतश् चैव धर्मे दध्यात् सदा मनः॥

**ஏதா த்ருஷ்ட்வா அஸ்ய ஜீவஸ்ய கதீ: ஸ்வேநைவ சேதஸா |**
**தர்மதோ அதர்மதஷ் சைவ தர்மே தத்யாத் ஸதா மந: || 23**

*இவ்வாறாக ஜீவனுக்கு, செய்யும் பாபபுண்ணியங்களுக்கேற்ப சொர்க்கமும் நரகமும் கிட்டும் என்பதையும் சொர்க்க போகங்கள் அனுபவிக்கவும், நரக வேதனைகளை அனுபவிக்கவும் அதற்குத்தக்க சரீரம் கிடைக்கும் என்பதையும் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அறிந்து கொண்டு மனத்தை எப்போதும் தர்ம காரியங்களைச் செய்வதிலேயே ஈடுபடுத்த வேண்டும்.*

सत्त्वं रजस् तमश् चैव त्रीन् विद्यादात्मनो गुणान्।
यैर् व्याप्येमान् स्थितो भावान् महान् सर्वानशेषतः॥

**ஸத்வம் ரஜஸ் தமஷ்சைவ த்ரீந்வித்யாதாத்மநோ குணாந் |**
**யைர் வ்யாப்யேமாந் ஸ்திதோ பாவாந் மஹாந்ஸர்வாநசேஷத: || 24**

*இனி சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களின் தன்மைகளைக் கூறுகிறேன். இக் குணங்களுடன் கூடிய மஹத் தத்துவம் அனைத்திலும் வியாபித்துள்ளது.*

यो यदैषां गुणो देहे साकल्येनाऽतिरिच्यते।
स तदा तद्गुणप्रायं तं करोति शरीरिणम्॥

**யோ யதைஷாம் குணோ தேஹே ஸாகல்யேநா அதிரிச்யதே |**
**ஸ ததா தத்குணப்ராயம் தம் கரோதி ஷரீரிணம் || 25**

இந்த மூன்று குணங்களும் எல்லோருக்கும் இருந்தாலும், எவனிடத்தில் எந்த குணம் முழுமையாக உள்ளதோ, அவனை அந்த குணம் கொண்டவனாக அறியவேண்டும்.

सत्त्वं ज्ञानं तमोऽज्ञानं रागद्वेषौ रजः स्मृतम्।
एतद् व्याप्तिमदेतेषां सर्वभूताऽऽश्रितं वपुः॥

**ஸத்வம் ஞாநம் தமோ அஞ்ஞானம் ராகத்வேஷௌ ரஜ: ஸ்ம்ருதம் |**
**ஏதத் வ்யாப்திமதேதேஷாம் ஸர்வ பூதா ஆஸ்ரிதம் வபு: || 26**

ஸத்வ குணம் என்பது ஞானம். தமோ குணம் என்பது அஞ்ஞானம். விருப்பும் வெறுப்பும் ரஜோகுணம். இம்மூன்று குணங்களும் சகல உயிர்களிடத்தும் வியாபித்துள்ளன.

तत्र यत् प्रीतिसंयुक्तं किञ्चिदात्मनि लक्षयेत्।
प्रशान्तमिव शुद्धाऽऽभं सत्त्वं तदुपधारयेत्॥

**தத்ரயத் ப்ரீதிஸம்யுக்தம் கிஞ்சிதாத்மநி லக்ஷயேத் |**
**ப்ரஷாந்தமிவ சுத்தா ஆபம் ஸத்வம் ததுப தாரயேத் || 27**

ஆத்மாவுடன் கூடி நிம்மதியாகவும், ப்ரீதியோடும் பிரகாசமான உருவத்தோடும் இருக்கும் குணத்தை சத்வகுணம் என்றறிய வேண்டும்.

यत् तु दुःखसमायुक्तमप्रीतिकरमात्मनः।
तद् रजः प्रतीपं विद्यात् सततं हारि देहिनाम्॥

**யத் து துக்கஸமாயுக் தமப்ரிதிகரமாத்மந: |**
**தத் ரஜ: ப்ரதீபம் வித்யாத் ஸததம் ஹாரி தேஹிநாம் || 28**

அந்த ஆத்மாவுடன் துக்கத்தோடு கூடியதாகவும், பிரீதியைக் கொடுக்காததாகவும், எப்போதும் விஷயங்களிலேயே ஈடுபடுவதாகவும் உள்ள குணத்தை ரஜோ குணம் என்றறிய வேண்டும்.

यत् तु स्यान् मोहसंयुक्तमव्यक्तं विषयात्मकम्।
अप्रतर्क्यमविज्ञेयं तमस् तदुपधारयेत्॥

**யத்து ஸ்யாந் மோஹஸம் யுக்த மவ்யக்தம் விஷயாத்மகம் |**
**அப்ரதர்க்யமவிஞேயம் தமஸ் ததுப தாரயேத் || 29**

மோகத்தோடு கூடியதாக, நன்றும் தீதும் அறியும் ஞான மற்றதாக, புலன்களால் அறியப்படாததாகவும் உள்ள குணத்தை தமோ குணம் என்றறிய வேண்டும்.

त्रयाणामपि चैतेषां गुणानां यः फलोदयः ।
अग्र्यो मध्यो जघन्यश् च तं प्रवक्ष्याम्यशेषतः ॥

**த்ரயாணாமபி சைதேஷாம் குணாநாம் ய:பலோ தய: |**
**அக்ந்யோ மத்யோ ஜகந்யஷ் ச தம் ப்ரவக்ஷ்யாம்யசேஷத: ||** 30

*இந்த மூன்று குணங்களிலும் உயர்ந்த பலன்களையும், மத்திம பலன்களையும், கீழான பலன்களையும் அளிப்பவை பற்றிய விஷயங்களை முழுமையாகக் கூறுகிறேன், கேளுங்கள்.*

वेदाऽभ्यासस् तपो ज्ञानं शौचमिन्द्रियनिग्रहः ।
धर्मक्रियाऽऽत्मचिन्ता च सात्त्विकं गुणलक्षणम् ॥

**வேதா அப்யாஸஸ் தபோ ஞானம் ஷௌசமிந்த்ரிய நிக்ரஹ: |**
**தர்மக்ரியா ஆத்மசிந்தா ச ஸாத்விகம் குணலக்ஷணம் ||** 31

*வேதமோதுதல், தவம் செய்தல், ஆத்மஞானத்தோடிருத்தல், உள்ளும்புறமும் தூய்மையோடிருத்தல், ஐம்புலன்களையும் அடக்கியிருத்தல், தர்மமான செயல்களைச் செய்தல், ஆத்மாவைப் பற்றி சிந்தித்தல் என்பவை சத்துவ குணத்தால் ஏற்படுபவை.*

आरम्भरुचिताऽधैर्यमसत्कार्यपरिग्रहः ।
विषयोपसेवा चाऽजस्रं राजसं गुणलक्षणम् ॥

**ஆரம்ப ருசிதா அதைர்யமஸத்கார்ய பரிக்ரஹ: |**
**விஷயோபஸேவா சாஅஜஸ்ரம் ராஜஸம் குணலக்ஷணம் ||** 32

*பலனை எதிர்பார்த்து காரியங்கள் செய்தல், அதைரியம், கூடாத செயலைச் செய்தல், விஷய சுகங்களில் நாட்டத்தோடிருத்தல் என்பவை ரஜோ குணத்தால் ஏற்படுபவை.*

लोभः स्वप्नोऽधृतिः क्रौर्यं नास्तिक्यं भिन्नवृत्तिता ।
याचिष्णुता प्रमादश् च तामसं गुणलक्षणम् ॥

**லோப: ஸ்வப்நோ அத்ருதி: க்ரௌர்யம் நாஸ்திக்யம் பிந்ந வ்ருத்திதா |**
**யாசிஷ்ணுதா ப்ரமாதஷ் ச தாமஸம் குணலக்ஷணம் ||** 33

*பேராசை, அதிக தூக்கம், கோழைத்தனம், கோள்சொல்லல், நாஸ்திக புத்தி, ஒழுக்கமின்மை, பிச்சையெடுத்தல், போதையோடிருத்தல் என்பவை தமோ குணத்தால் ஏற்படுபவை.*

यत् कर्म कृत्वा कुर्वंश् च करिष्यश् चैव लज्जति।
तज् ज्ञेयं विदुषा सर्वं तामसं गुणलक्षणम्॥

**யத் கர்ம க்ருத்வா குர்வம்ஷ் ச கரிஷ்யம்ஷ சைவ லஜ்ஜதி |**
**தஜ்ஞேயம் விதுஷா ஸர்வம் தாமஸம் குணலக்ஷணம் || 34**

ஒரு காரியத்தை செய்யப்போகும் போதும், செய்யும் போதும், செய்தபிறகும், அந்தக் காரியத்துக்காக உள்ளம் வெட்கமுறுமானால் அது தமோ குணத்தின் லட்சணம் என்றறிய வேண்டும்.

येनाऽस्मिन् कर्मणा लोके ख्यातिमिच्छति पुष्कलाम्।
न च शोचत्यसम्पत्तौ तद् विज्ञेयं तु राजसम्॥

**யேநா அஸ்மிந் கர்மணா லோகே க்யாதிமிச்சதி புஷ்கலாம் |**
**ந ச ஷோசத்ய ஸம்பத்தௌ தத் விக்ஞேயம் து ராஜஸம் || 35**

இவ்வுலகில் மிக்க புகழை அடைவதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு, பரலோக சௌக்கியத்தைத் தரும் புண்ணியங்களைப்பற்றிக் கவலைப் படாமல் காரியங்களைச் செய்தல் ரஜோ குணத்தின் லட்சணம் என்றறிய வேண்டும்.

यत् सर्वेणेच्छति ज्ञातुं यन् न लज्जति चाऽऽचरन्।
येन तुष्यति चाऽऽत्माऽस्य तत् सत्त्वगुणलक्षणम्॥

**யத் ஸர்வேணேச்சதி ஞாதும் யந் ந லஜ்ஜதி சாஆசரந் |**
**யேந துஷ்யதி சாஆத்மா அஸ்ய தத் ஸத்வகுண லக்ஷணம் || 36**

எந்தக் காரியத்தைச் செய்யப் போகும் போதும், செய்யும் போதும், செய்த பிறகும் உள்ளம் வெட்கப்படாதோ, எந்த காரியத்தைச் செய்வதனால் ஆனந்தம் ஏற்படுமோ, அத்தகைய காரியங்களைச் செய்தல் சத்வ குணத்தின் லட்சணம் என்றறிய வேண்டும்.

तमसो लक्षणं कामो रजसस् त्वर्थ उच्यते।
सत्त्वस्य लक्षणं धर्मः श्रैष्ठ्यमेषां यथोत्तरम्॥

**தமஸோ லக்ஷணம் காமோ ரஜஸஸ் த்வர்தம் உச்யதே |**
**ஸத்வஸ்ய லக்ஷணம் தர்ம: ஷ்ரேஷ்ட்யமேஷாம் யதோத்தரம் || 37**

காமமே பிரதானமாக இருத்தல் தமோ குணத்தின் லட்சணம். பொருளாசையே பிரதானமாக இருத்தல் ரஜோ குணத்தின்

லட்சணம். தர்மமே பிரதானமாக இருத்தல் சத்வ குணத்தின் லட்சணம்.

தமோ குணத்தைவிட ரஜோ குணம் சிறந்தது. ரஜோ குணத்தைவிட சத்வ குணம் சிறந்தது.

येन यास् तु गुणेनैषां संसारान् प्रतिपद्यते।
तान् समासेन वक्ष्यामि सर्वस्याऽस्य यथाक्रमम्॥

**யேந யாம்ஸ்து குணேநைஷாம் ஸம்ஸாராந் ப்ரதிபத்யதே |**
**தாந் ஸமாஸேந வக்ஷ்யாமி ஸர்வஸ்யா அஸ்ய யதாக்ரமம் ||** 38

இந்த குணங்களால் ஜீவன் எத்தகைய நிலைகளை அடைகிறான் என்பவற்றை முழுமையாக வரிசைப்படி கூறுகிறேன், கேளுங்கள்.

देवत्वं सात्त्विका यान्ति मनुष्यत्वं च राजसाः।
तिर्यक्त्वं तामसा नित्यमित्येषा त्रिविधा गतिः॥

**தேவத்வம் ஸாத்விகா யாந்தி மனுஷ்யத்வம் ச ராஜஸா: |**
**திர்யக்த்வம் தாமஸா நித்யமித்யேஷா த்ரிவிதா கதி: ||** 39

சத்வ குணத்திலேயே நிலைத்திருப்பவன் தேவப்பிறவியை அடைவான்.

ரஜோ குணத்திலேயே நிலைத்திருப்பவன் மனிதப் பிறவியை அடைவான்.

தமோ குணத்திலேயே நிலைத்திருப்பவன் பறவை மிருகம் முதலான கீழ்ப்பிறவிகளை அடைவான்.

त्रिविधात्रिविधैषा तु विज्ञेया गौणिकी गतिः।
अधमा मध्यमाऽग्र्या च कर्मविद्याविशेषतः॥

**த்ரிவிதா த்ரிவிதைஷா து விக்ஞேயா கௌணிகீ கதி: |**
**அதமா மத்யமா அக்ர்யா ச கர்மவித்யா விசேஷத: ||** 40

முக்குணங்களால் கிடைக்கும் மூன்று வகையான பிறவிகளும், தேசம் காலம் செயல் இவற்றின் பேதங்களாலும், ஞானபேதத்தாலும், உயர்ந்த தாழ்ந்த மத்திம பேதங்களாலும் மீண்டும் மூவகையாக உள்ளன.

स्थावराः कृमिकीटाश् च मत्स्याः सर्पाः सकच्छपाः।
पशवश् च मृगाश् चैव जघन्या तामसी गतिः॥

**ஸ்தாவரா: க்ருமிகீடாஷ் ச மத்ஸ்யா: ஸர்பா: ஸகச்சபா: |**
**பஷவஷ் ச ம்ருகாஷ்சைவ ஜகந்யா தாமஸீ கதி: ||** 41

செடிகள், மரங்கள் முதலான அசையாத தாவரப் பிறவிகள் தமோ குணத்தால் ஏற்பட்ட கடைநிலைப் பிறவிகள். அவ்வாறே புழு, பூச்சி, மீன், பாம்பு, ஆமை, பசுக்கள், மிருகங்கள் என்னும் இப்பிறவிகளும் தமோ குணத்தால் ஏற்பட்ட கடைநிலைப் பிறவிகளேயாகும்.

हस्तिनश् च तुरङ्गाश् च शूद्रा म्लेच्छाश् च गर्हिताः ।
सिंहा व्याघ्रा वराहाश् च मध्यमा तामसी गतिः ॥

**ஹஸ்திநஷ் ச துரங்காஷ் ச ஶூத்ரா ம்லேச்சாஷ் ச கர்ஹிதா: |**
**ஸிம்ஹா வ்யாக்ரா வராஹாஷ் ச மத்யமா தாமஸீகதி: || 42**

யானை, குதிரை, சிங்கம், புலி, பன்றி என்னும் இப்பிறவிகள் தமோ குணத்தால் ஏற்பட்ட மத்திமநிலைப் பிறவிகள்.

அவ்வாறே சூத்திரர்களும் மிலேச்சர்களும் கூட தமோ குணத்தால் ஏற்பட்ட மத்திம நிலைப் பிறவிகளேயாவர்.

चारणाश् च सुपर्णाश् च पुरुषाश् चैव दाम्भिकाः ।
रक्षांसि च पिशाचाश् च तामसीषूत्तमा गतिः ॥

**சாரணாஷ்ச ஸுபர்ணாஷ்ச பூருஷாஷ்சைவ தாம்பிகா: |**
**ரக்ஷாம்ஸி ச பிஷாசாஷ் தாமஸீ ஶூத்தமா கதி: || 43**

சாரணர்கள், பறவைகள், டாம்பீகமான மனிதர்கள், ராட்சதர்கள், பிசாசர்கள் என்னும் பிறவிகள் தமோ குணத்தால் ஏற்பட்ட உத்தம நிலைப்பிறவிகள்.

झल्ला मल्ला नटाश् चैव पुरुषाः शस्त्रवृत्तयः ।
द्यूतपानप्रसक्ताश् च जघन्या राजसी गतिः ॥

**ஜல்லா மல்லா நடாஷ் சைவ புருஷா: ஷஸ்த்ரவ்ருத்தய: |**
**த்யூத பாந ப்ரஸக்தாஷ் ச ஜகந்யா ராஜஸீ கதி: || 44**

உலக்கைகளைக் கொண்டு யுத்தம் செய்பவர்கள், கைகளால் மல்யுத்தம் செய்பவர்கள், நாட்டியமாடுபவர்கள், ஆயுதங்களைச் செய்பவர்கள், சூதாடிகள், குடிகாரர்கள் - இவர்கள் ரஜோ குணத்தின் கடைநிலைப் பிறவிகள்.

राजानः क्षत्रियाश् चैव राज्ञां चैव पुरोहिताः ।
वादयुद्धप्रधानाश् च मध्यमा राजसी गतिः ॥

**ராஜாந: க்ஷத்ரியாஷ்சை ராக்ஞாம்சைவ புரோஹிதா: |**
**வாதயுத்த ப்ரதாநாஷ் ச மத்யமா ராஜஸீ கதி: || 45**

*அரசர்கள், ஷத்ரிய ஜாதியில் தோன்றியவர்கள், அரச புரோகிதர்கள், வாத பிரதிவாதங்கள் நடத்துவதில் சிறந்த திறமை பெற்ற சாஸ்திர விற்பன்னர்கள் - இவர்கள் ரஜோ குணத்தின் இடைநிலைப் பிறவிகள்.*

**गन्धर्वा गुह्यका यक्षा विबुधाऽनुचराश् च ये।**
**तथैवाऽप्सरसः सर्वा राजसीषूत्तमा गतिः॥**

**கந்தர்வா குஹ்யகா யக்ஷா விபுதா அனுசராஷ்ச யே |**
**ததைவா அப்ஸரஸ: ஸர்வா ராஜஸீ ஷூத்தமா கதி: ||** 46

*கந்தர்வர்கள், குஹ்யர்கள், யட்சர்கள், விபுதர்கள், அப்சரஸ்கள் - இவர்கள் ரஜோ குணத்தின் உயர்நிலைப் பிறவிகள்.*

**तापसा यतयो विप्रा ये च वैमानिका गणाः।**
**नक्षत्राणि च दैत्याश् च प्रथमा सात्त्विकी गतिः॥**

**தாபஸா யதயோ விப்ராயே ச வைமாநிகா கணா: |**
**நக்ஷத்ராணி ச தைத்யாஷ் ச ப்ரதமா ஸாத்விகீ கதி: ||** 47

*தபஸ்விகள், சன்யாசிகள், வேதவிற்பன்னர்கள், புஷ்பக விமானங்களில் சஞ்சரிக்கும் வித்யாதரர்கள், தைத்தியர்கள், நட்சத்திரங்கள் - இவர்கள் சத்வ குணத்தின் கடைநிலைப் பிறவிகள்.*

**यज्वान ऋषयो देवा वेदा ज्योतींषि वत्सराः।**
**पितरश् चैव साध्याश् च द्वितीया सात्त्विकी गतिः॥**

**யஜ்வாந ரிஷயோ தேவா வேதா ஜ்யோதீம்ஷி வத்ஸரா: |**
**பிதரஷ் சைவ ஸாத்யாஷ் ச த்விதீயா ஸாத்விகீ கதி: ||** 48

*யாகம் செய்பவர்கள் (யாகம் செய்வதிலேயே மனத்தைச் செலுத்துபவர்கள்), ரிஷிகள், தேவர்கள், வேதரூபமான தெய்வங்கள், கிரக தெய்வங்கள், பித்ரு தேவர்கள், சாத்யர்கள் - இவர்கள் சத்வ குணத்தின் இடைநிலைப் பிறவிகள்.*

**ब्रह्मा विश्वसृजो धर्मो महानव्यक्तमेव च।**
**उत्तमां सात्त्विकीमेतां गतिमाहुर् मनीषिणः॥**

**ப்ரஹ்மா விஸ்வஸ்ருஜோ தர்மோ மஹாநவ்யக்தமேவ ச |**
**உத்தமாம் ஸாத்விகீமேதாம் கதிமாஹுர் மநீஷிண: ||** 49

*பிரம்மதேவர், பிரஜாபதிகள், தர்மதேவர், மஹத், அவ்யக்தம் - இவர்கள் சத்வ குணத்தின் உத்தமப் பிறவிகள்.*

एष सर्वः समुद्दिष्टस् त्रिप्रकारस्य कर्मणः।
त्रिविधस्त्रिविधः कृत्स्नः संसारः सार्वभौतिकः॥

**ஏஷ ஸர்வ: ஸமுத்திஷ்டஸ் த்ரிப்ரகாரஸ்ய கர்மண: |**
**த்ரிவிதஸ் த்ரிவித: க்ருத்ஸ்ந: ஸம்ஸார: ஸார்வபௌதிக: || 50**

*முக்குணங்களால், மனம், வாக்கு, உடலால் ஏற்படும் பாவ புண்ணிய பலன்களால், உயர்நிலை, இடைநிலை கடைநிலைப் பிறவிகள் ஏற்படுவதைப் பற்றிக் கூறினேன். இதில் சில பிறவிகள் மட்டும் கூறப்பட்டன. மற்றவற்றை இவ்வாறு ஊகித்துக் கொள்ள வேண்டும்.*

इन्द्रियाणां प्रसङ्गेन धर्मस्याऽसेवनेन च।
पापान् संयान्ति संसारानविद्वांसो नराधमाः॥

**இந்த்ரியாணாம் ப்ரஸங்கேந தர்மஸ்யா அஸேவநேந ச |**
**பாபாந் ஸம்யாந்தி ஸம்ஸாராநவித்வாம்ஸோ நராதமா: || 51**

*ஐம்புலன்களையும் அடக்காது அதன் வழியில் போய் விஷய சுகங்களில் நாட்டம் கொண்டு செயல்படுவதாலும், தர்மத்தின் வழியில் நடக்காததாலும், செய்த பாவங்களுக்குரிய பிராயசித்தங்களைச் செய்து கொள்ளாமையாலும், அறிவற்ற மூட மனிதர்கள் தாழ்ந்த நிலைகளை அடைவார்கள்.*

यां यां योनिं तु जीवोऽयं येनयेनेह कर्मणा।
क्रमशो याति लोकेऽस्मिंस् तत्तत् सर्वं निबोधत॥

**யாம்யாம் யோநிம் து ஜீவோ அயம் யேநயேநேஹ கர்மணா |**
**க்ரமஷோ யாதி லோகே அஸ்மிம்ஸ் தத்தத் ஸர்வம் நிபோதத || 52**

*ஜீவன் எந்த எந்த கர்மவினைகளைச் செய்து எந்தெந்த உலகத்தை அடைகிறான், எந்தெந்த பிறவியை அடைகிறான் என்பதை முழுவதும் கூறுகிறேன், கேளுங்கள்.*

बहून् वर्षगणान् घोरान् नरकान् प्राप्य तत्क्षयात्।
संसारान् प्रतिपद्यन्ते महापातकिनस् त्विमान्॥

**பஹூந் வர்ஷகணாந் கோராந் நரகாந் ப்ராப்யதத்க்ஷயாத் |**
**ஸம்ஸாராந் ப்ரதிபத்யந்தே மஹாபாதகிநஸ் த்விமாந் || 53**

*மிகப்பெரிய பாவங்களைச் செய்தவர்கள், பல்லாயிரம் வருடங்கள் பயங்கர நரகங்களை அனுவிப்பார்கள். பின்னர் மீதியிருக்கும் பாபத்தை அனுபவிக்க எத்தகைய பிறவிகளை எடுப்பார்கள் என்பதைக் கூறுகிறேன்.*

श्वसूकरखरोष्ट्राणां गोऽजाऽविमृगपक्षिणाम्।
चण्डालपुक्कसानां च ब्रह्महा योनिमृच्छति॥

**ஷ்வசூகரகரோஷ்ட்ராணாம் கோ அஜாஅவிம்ருக பக்ஷிணாம் |**
**சண்டாளபூக்கஸாநாம் ச ப்ரஹ்ம்ஹா யோநிம்ருச்சதி || 54**

*பிரம்மஹத்தி செய்தவன் நரக வேதனைகளை அனுபவித்த பிறகு, நாய், பன்றி, கழுதை, ஒட்டகம் போன்ற மிருகங்களாகவும், பறவைகளாகவும் பிறப்பெடுப்பார்கள். மனிதப் பிறவிகளில் சண்டாளர்கள் புக்கஸர்கள் முதலான தாழ்ந்த பிறவிகளை எடுப்பார்கள்.*

कृमिकीटपतङ्गानां विड्भुजां चैव पक्षिणाम्।
हिंस्राणां चैव सत्त्वानां सुरापो ब्राह्मणो व्रजेत्॥

**க்ருமி கீட பதங்காநாம் ச திரஷ்சாம் சாஅம்பு சாரிணாம் |**
**ஹிம்ஸ்ராணாம் ச ஸத்வாநாம் சுராபோ ப்ராஹ்மணோ வ்ரஜேத் || 55**

*கள்ளுண்டவனான வேதம் படித்த பிராம்மணன், புழு பூச்சிகள், அணில்கள், மலமுண்ணும் ஜந்துக்கள், புலி முதலான கொடிய மிருகங்கள் முதலான பிறவிகளை அடைவான்.*

लूताऽहिसरटानां च तिरश्चां चाऽम्बुचारिणाम्।
हिंस्राणां च पिशाचानां स्तेनो विप्रः सहस्रशः॥

**லூதா அஹிஸரடாநாம் ச திரஷ்சாம் சாஅம்புசாரிணாம் |**
**ஹிம்ஸ்ராணாம் ச பிஷாசாநாம் ஸ்தேநோ விப்ர: ஸஹஸ்ரஷ: || 56**

*தங்கத்தைத் திருடிய வேதம் படித்த பிராம்ணண், சிலந்தி, பாம்பு, ஓணான், நீரில் வாழும் உயிரினங்கள், கொடிய மிருகங்கள், பிசாசர்கள் முதலான பிறவிகளை அடைவான்.*

तृणगुल्मलतानां च क्रव्यादां दंष्ट्रिणामपि।
क्रूरकर्मकृतां चैव शतशो गुरुतल्पगः॥

**த்ருணகுல்மலதாநாம் ச க்ரவ்யாதாம் தம்ஷ்ட்ரிணாமபி |**
**க்ரூர கர்மக்ருதாம் சைவ ஷதஷோ குருதல்பக: || 57**

*குரு மனைவியைப் புணர்ந்தவன், புல், புதர், கொடி, கழுகு, சிங்கம், புலி முதலான பிறவிகளை பலமுறை அடைவான்.*

हिंस्रा भवन्ति क्रव्यादाः कृमयोऽभक्ष्यभक्षिणः।
परस्परादिनः स्तेनाः प्रेताऽन्त्यस्त्रीनिषेविणः॥

**ஹிம்ஸ்ரா பவந்தி க்ரவ்யாதா: க்ருமயோ அபக்ஷ்ய பக்ஷிண: |**
**பரஸ்பரா ஆதிந: ஸ்தேநா: ப்ரேதா அந்த்யஸ்த்ரீ நிஷேவிண: || 58**

பிராணிகளைக் கொல்வதையே தங்கள் சுபாவமாகக் கொண்டவர்கள் மாமிசபட்சிகளான பூனை முதலான பிறவிகளை யெடுப்பார்கள். தகாததை சாப்பிடுபவர்கள் புழுக்களாய் பிறப்பார்கள். திருடர்கள், தம் இனத்தையே உண்ணும் பிராணிகளாகப் பிறப்பார்கள். சண்டாளப் பெண்ணை புணர்ந்தவர்கள் பிரேத சரீரத்தோடு அலைவார்கள்.

संयोग पतितैर् गत्वा परस्यैव च योषितम्।
अपहृत्य च विप्रस्वं भवति ब्रह्मराक्षसः॥

**ஸம்யோகம் பதிதைர் கத்வா பரஸ்யைவ சயோஷிதம் |**
**அபஹ்ருத்ய ச விப்ரஸ்வம் பவதி ப்ரஹ்மராக்ஷஸ: || 59**

பதிதர்களுடன் கூடியிருந்தவனும், பிறர் மனைவியைப் புணர்ந்தவனும், விப்ரனின் பொருளைத் திருடியவனும் பிரம்ம ராட்சஸனானாவான்.

मणिमुक्ताप्रवालानि हृत्वा लोभेन मानवः।
विविधानि च रत्नानि जायते हेमकर्तृषु॥

**மணிமுக்தா ப்ரவாலாநி ஹ்ருத்வா லோபேந மாநவ: |**
**விவிதாநி ச ரத்நாநி ஜாயதே ஹேமகர்த்ருஷு || 60**

ரத்தினங்கள், முத்துக்கள், பவழங்கள், பல வகையான உயர்ந்த ரத்தினக்கற்கள் முதலானவற்றைத் திருடியவன் பொற்கொல்லனாகப் பிறப்பான்.

धान्यं हृत्वा भवत्याखुः कांस्यं हंसो जलं प्लवः।
मधु दंशः पयः काको रसं श्वा नकुलो घृतम्॥

**தான்யம் ஹ்ருத்வா பவத்யாகு: காம்ஸ்யம் ஹம்ஸோ ஜலம்ப்லவ: |**
**மது தம்ஷ: பய: காகோ ரஸம் ஷ்வா நகுலோ க்ருதம் || 61**

தானியங்களைத் திருடியவன் எலியாகப் பிறப்பான். வெண்கலத்தைத் திருடியவன் அன்னமாகப் பிறப்பான். தண்ணீர் திருடியவன் தவளையாகப் பிறப்பான். பால் திருடியவன் காகமாகப் பிறப்பான். தேன் திருடியவன் ஈயாகப் பிறப்பான். ரசப் பொருட்களைத் திருடியவன் நாயாகப் பிறப்பான்.

मांसं गृध्रो वपां मद्गुस् तैलं तैलपकः खगः।
चीरीवाकस् तु लवणं बलाका शकुनिर् दधि॥

**மாம்ஸம் க்ருத்ரோ வபாம் மத்குஸ் தைலம் தைலபக: கக: |**
**சீரீவாகஸ்து லவணம் பலாகா ஷகுநிர் ததி || 62**

மாமிசத்தைத் திருடியவன் கழுகாகப் பிறப்பான்.

வபையைத் திருடியவன் நீர்காக்கையாக பிறப்பான்.

(வபை என்பது குதிரை முதலான மிருகங்களின் வயிற்றில் ஐவ்வு போன்றுள்ள ஒரு பகுதி. இது குடலைச் சுற்றி மெல்லிய தோல் போல இருக்கும். அஸ்வமேதம் முதலான யாகங்களில் குதிரையைப் பலிகொடுத்த பிறகு, இந்த வபையை யாகம் செய்தவர் உண்பது பழக்கத்தில் இருந்தது.)

எண்ணெய் திருடியவன் வௌவாலாகப் பிறப்பான். உப்பைத் திருடியவன் சுவர்க்கோழியாகப் பிறப்பான். தயிரைத் திருடியவன் ராஜாளியாகப் பிறப்பான்.

कौशेयं तित्तिरिर् हृत्वा क्षौमं हृत्वा तु दर्दुरः ।
कार्पासतान्तवं क्रौञ्चो गोधा गां वाग्गुदो गुडम् ॥

**கௌஷேயம் தித்திரிர் ஹ்ருத்வா க்ஷௌமம் ஹ்ரத்வா து தர்துர: |**
**கார்பாஸ தாந்தவம் க்ரௌஞ்சோ கோதா காம்காக்குதோ குடம் || 63**

பட்டு வஸ்திரங்களைத் திருடியவன் தித்திரிப் பறவையாகப் பிறப்பான்.

தண்ணீர் திருடியவன் தவளையாகப் பிறப்பான்.

பசுவைத் திருடியவன் உடும்பாகப் பிறப்பான்.

வெல்லத்தைத் திருடியவன் வாக்குதப் பறவையாகப் பிறப்பான்.

छुच्छुन्दरिः शुभान् गन्धान् पत्रशाकं तु बर्हिणः ।
श्वावित् कृतान्नं विविधमकृतान्नं तु शल्यकः ॥

**சுச்சுந்தரி: சுபாந் கந்தாந் பத்ரஷாகம்து பர்ஹிண: |**
**ஷ்வாவித் க்ருதாஅந்நம் விவிதமக்ருதாந்நம் து ஷல்யக: || 64**

வாசனை திரவியங்களைத் திருடியவன் மூஞ்சூறாகப் பிறப்பான்.

கீரை, காய்கறிகளைத் திருடியவன் மயிலாகப் பிறப்பான்.

சமைத்த அன்னத்தைத் திருடித் தின்றவன் முள்ளம் பன்றியாகப் பிறப்பான்.

சமைக்காத அரிசி பருப்பு முதலானவைகளைத் திருடியவன் சல்ய மிருகமாகப் பிறப்பான்.

बको भवति हृत्वाऽग्निं गृहकारी ह्युपस्करम् ।
रक्तानि हृत्वा वासांसि जायते जीवजीवकः ॥

**பகோ பவதி ஹ்ருத்வா அக்நிம் க்ருஹகாரீ ஹ்யுபஸ்கரம் |**
**ரத்நாநி ஹ்ருத்வா வாஸாம்ஸி ஜாயதே ஜீவஜீவக: || 65**

நெருப்பைத் திருடியவன் நாரையாகப் பிறப்பான்.

முறம், உரல் முதலான வீட்டுக்குத் தேவையான பொருட்களைத் திருடியவன் குளவியாகப் பிறப்பான். சிவப்பு நிறமுள்ள துணிகளைத் திருடியவன் சகோரப் பறவையாகப் பிறப்பான்.

वृको मृगेभं व्याघ्रोऽश्वं फलमूलं तु मर्कटः।
स्त्रीमृक्षः स्तोकको वारि यानान्युष्ट्रः पशूनजः॥

**வ்ருகோ ம்ருகேபம் வ்யாக்ரோ அஷ்வம் பலமூலம் து மர்கட: |**
**ஸ்த்ரீம்ருக்ஷ: ஸ்தோககோ வாரி யாநாந்யுஷ்ட்ர: பசூநஜ: ||** **66**

மானைத் திருடியவன் ஓநாயாகப் பிறப்பான்.

குதிரையைத் திருடியவன் புலியாகப் பிறப்பான்.

பழங்களையும் மூலிகைகளையும் திருடியவன் குரங்காகப் பிறப்பான்.

பெண்ணைத் திருடியவன் கரடியாகப் பிறப்பான்.

தண்ணீரைத் திருடியவன் சாதகப் பறவையாகப் பிறப்பான்.

மாட்டுவண்டி போன்ற வண்டிகளைத் திருடியவன் ஒட்டகையாகப் பிறப்பான்.

மற்றபடி ஆடு மாடு போன்ற மிருகங்களைத் திருடியவன் வெள்ளாடாகப் பிறப்பான்.

यद् वा तद् वा परद्रव्यमपहृत्य बलान् नरः।
अवश्यं याति तिर्यक्त्वं जग्ध्वा चैवाऽहुतं हविः॥

**யத்வா தத்வா பரத்ரவ்ய மபஹ்ருத்ய பலாந் நர: |**
**அவஷ்யம் யாதி திர்யக்த்வம் ஜக்த்வா சைவாஅஹுதம் ஹவி: ||** **67**

பிறருடைய திரவியத்தை அபகரித்தவன் அதன் பலனை அவசியம் அனுபவித்தே ஆகவேண்டும். அதை அனுபவிக்க கண்டிப்பான ஜந்துவாக பிறப்பான். அவ்வாறே ஹோமம் செய்யப் படாத ஹவிஸை சாப்பிட்டவனும் ஜந்துவாகப் பிறப்பான்.

स्त्रियोऽप्येतेन कल्पेन हृत्वा दोषमवाप्नुयुः।
एतेषामेव जन्तूनां भार्यात्वमुपयान्ति ताः॥

**ஸ்த்ரியோ அப்யேதேந கல்பேந ஹ்ருத்வா தோஷமவாப்னுயு: |**
**ஏதேஷாமேவ ஜந்தூநாம் பார்யாத்வமுபயாந்தி தா: ||** **68**

இத்தகைய பாவங்களைப் புரிந்த பெண்களும் அந்த ஜந்துக்களின் மனைவிகளாகப் பிறப்பார்கள்.

स्वेभ्यःस्वेभ्यस् तु कर्मभ्यश् च्युता वर्णा ह्यनापदि।
पापान् संसृत्य संसारान् प्रेष्यतां यान्ति शत्रुषु॥

**ஸ்வேப்ய: ஸ்வேப்பஸ்து கர்மப்யஷ் ச்யுதா வர்ணாஹ்யாநாபதி |**
**பாபாந் ஸம்ஸ்ருத்ய ஸம்ஸாராந் ப்ரேஷ்யதாம் யாந்தி சத்ருஷு || 69**

*நான்கு வர்ணத்தவரும் தங்களுக்கு விதிக்கப்பட்ட கிரியைகளை, அதாவது கடமைகளை செய்யாது விட்டுவிட்டால் தாழ்ந்த ஜாதியில் பிறந்து ஜன்மாந்திரங்களில், சத்ருக்களுக்கு பணிவிடை புரிபவர் களாக ஆவார்கள்.*

वान्ताश्युल्कामुखः प्रेतो विप्रो धर्मात् स्वकाच् च्युतः।
अमेध्यकुणपाशी च क्षत्रियः कटपूतनः॥

**வாந்தா அஷ்யுல்கா முக: ப்ரேதோவிப்ரோ தர்மாத்ஸ்வகாச் ச்யுத: |**
**அமேத்ய குணபா அஷீச க்ஷத்ரிய: கடபூதந: || 70**

*இவ்வாறு தன் கர்மாக்களை (கடமைகளை) செய்யாது விட்ட வேதம் படித்த பிராம்மணன் வாந்தியெடுத்ததை சாப்பிடும் கொள்ளிவாய் பிசாசு என்னும் பிரேத ஜன்மத்தை எடுப்பான்.*

*அவ்வாறே தன் கர்மாக்களைச் செய்யாது விட்ட க்ஷத்ரியன், மலத்தையும் பிணத்தையும் சாப்பிடும் கடபூதமாகப் பிறப்பான்.*

मैत्राक्षज्योतिकः प्रेतो वैश्यो भवति पूयभुक्।
चैलाशकश् च भवति शूद्रो धर्मात् स्वकाच् च्युतः॥

**மைத்ரா அக்ஷஜ்யோதிக: ப்ரேதோ வைஷ்யோ பவதி பூயபுக் |**
**சைலா அஷ கஷ் ச பவதி சூத்ரோ தர்மாத் ஸ்வகாச் ச்யுத: || 71**

*இத்தகைய கர்மாவைக் கைவிட்ட வைசியன் சீழை உண்கின்ற மைத்ராக்ஷ ஜோதி என்னும் பிரேத ஜன்மாவை எடுப்பான்.*

*இத்தகைய கர்மாவைக் கைவிட்ட சூத்திரன் பேன்களைத் தின்னும் 'சைலாஷகம்' என்னும் பிரேத ஜன்மாவை எடுப்பான்.*

यथायथा निषेवन्ते विषयान् विषयात्मकाः।
तथातथा कुशलता तेषां तेषूपजायते॥

**யதாயதா நிஷேவந்தே விஷயாந் விஷயா ஆத்மகா: |**
**ததததா குஷலதா தேஷாம் தேஷூபஜாயதே || 72**

*விஷய சுகங்களில் பற்றுவைத்தவர்களான மனிதர்கள், எவ்வளவுக் கெவ்வளவு அந்த சுகங்களை அனுபவிக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அதில் ஆழ்ந்து மூழ்கிப் போவார்கள்.*

तेऽभ्यासात् कर्मणां तेषां पापानामल्पबुद्धयः।
सम्प्राप्नुवन्ति दुःखानि तासुतास्विह योनिषु॥

**தே அப்யாஸாத் கா்மணாம் தேஷாம் பாபாநாமல்பபுத்தய: |**
**ஸம்ப்ராப்னுவந்தி துக்காநி தாஅதாஸ்விஹ யோநிஷு || 73**

அற்ப புத்தி கொண்ட இந்த மூடர்கள், நன்கு தாங்கள் புரிந்த பாப கர்மாக்களினால், அந்தப் பாபங்களின் மேல் கீழ் தன்மைகளுக்குத் தக்கபடி கீழான, அதைவிடக் கீழான, அதையும் விடக் கீழான, ஜந்துக்களாகப் பிறந்து துக்கங்களை அனுபவிப் பார்கள்.

तामिस्रादिषु चोग्रेषु नरकेषु विवर्तनम्।
असिपत्रवनादीनि बन्धनच्छेदनानि च॥

**தாமிஸ்ராதிஷு சோக்ரேஷு நரகேஷு விவர்தநம் |**
**அஸிபத்ரவநாதீநி பந்தநச்சேதநாநி ச || 74**

மேலும் அவர்கள் தாமிஸ்ரம் போன்ற கொடிய நரகங்களை அடைந்து வேதனைகளை அனுபவிப்பார்கள். அசிபத்ர வனம் முதலான நரகங்களை அடைந்து, கட்டுண்டும் வெட்டுண்டும் பல வேதனைகளை அனுபவிப்பார்கள்.

विविधाश् चैव सम्पीडाः काकोलूकैश् च भक्षणम्।
करम्भवालुकातापान् कुम्भीपाकांश् च दारुणान्॥

**விவிதாஷ்சைவ ஸம்பீடா: காகோலூகைஷ் ச பக்ஷணம் |**
**கரம் ப வாலுகாதாபாந் கும்பீபாகாம்ஷ் ச தாருணாந் || 75**

மேலும் காக்கை, கோட்டான் போன்றவற்றால் உண்ணப் படுதல், எரியும் மணலில் புரட்டப்படுதல், பெரிய பாண்டத்தில் வேகவைக்கப்படுதல் முதலான கோர நரக வேதனைகளை அனுபவிப்பார்கள்

सम्भवांश् च वियोनीषु दुःखप्रायासु नित्यशः।
शीतातपाऽभिघातांश् च विविधानि भयानि च॥

**ஸம்பவாம்ஷ்ச வியோநீஷு துக்கப்ராயாசு நித்யஷ: |**
**ஷீதாதபா அபிகாதாம்ஷ் ச விவிதாநி பயாநி ச || 76**

குளிர், வெயில், மழை முதலானவற்றால் துக்கங்களை எப்போதும் அடைந்தபடியும், பயந்தபடியும் வாழும் பறவை மிருக ஜாதிகளில் பிறப்பார்கள்.

असकृद् गर्भवासेषु वासं जन्म च दारुणम्।
बन्धनानि च कष्टानि परप्रेष्यत्वमेव च॥

**அஸக்ருத் கர்பவாஸேஷு வாஸம் ஜன்ம ச தாருணம் |**
**பந்தநாநி ச கஷ்டாநி பரப்ரேஷ்யத்வமேவ ச ||** 77

அதன் பிறகு, மீண்டும் மீண்டும் மிகுந்த கஷ்டமான கர்ப்ப வாசங்களைச் செய்து பிறந்து பந்தப்படுத்தும் கஷ்டங்களை அனுபவித்து, பிறருக்கு அடிமையாக வாழ்வார்கள்.

बन्धुप्रियवियोगांश् च संवासं चैव दुर्जनैः।
द्रव्यार्जनं च नाशं च मित्रामित्रस्य चार्जनम्॥

**பந்துப்ரிய வியோகாம்ஷ்ச ஸம்வாஸம் சைவ துர்ஜநை: |**
**த்ரவ்யா அர்ஜநம் ச நாஷம் ச மித்ராஅமித்ரஸ்ய சாஅர்ஜநம் ||** 78

மேலும் பந்துக்களையும் நண்பர்களையும் இழத்தல், தீயவர்களோடு சேர்ந்து வாழ்தல், செல்வத்தை தேடுவதில் மிகுந்த துன்பமும், சேர்ந்த செல்வம் அழிவதும், நண்பர்கள் பகைவர் களாவதுமான துன்பங்களை அனுபவிப்பார்கள்.

जरां चैवाऽप्रतीकारां व्याधिभिश् चोपपीडनम्।
क्लेशांश् च विविधांस् तांस्तान् मृत्युमेव च दुर्जयम्॥

**ஜராம் சைவா அப்ரதீ காராம் வ்யாதிபிஷ்சோபபீட நம் |**
**க்லேஷாம்ஷ்ச விவிதாம்ஸ் தாம்ஸ்தாந் ம்ருத்யுமேவ சதுர்ஜயம் ||** 79

சிகிச்சை செய்ய இயலாததான வியாதிகளால் பீடிக்கப்பட்டும், முதுமையால் தளர்ந்தும், பலவகையான மனக்கலக்கங்களுக்கு ஆட்பட்டும், எதனாலும் தடுத்து நிறுத்த முடியாத மரணத்தை அடைவார்கள்.

यादृशेन तु भावेन यद्यत् कर्म निषेवते।
तादृशेन शरीरेण तत्तत् फलमुपाऽश्नुते॥

**யாத்ருஷேந து பாவேந யத்யத் கர்ம நிஷேவதே |**
**தாத்ருஷேந ஷரீரேண தத்தத் பலமுபா அஷ்நுதே ||** 80

சத்வ ராஜஸ தாமஸங்களில் எந்த புத்தியோடு எந்த காரியங்களைச் செய்கிறானோ, அதற்குத் தக்கபடி உடலெடுத்து அந்தந்த காரியங்களுக்குரிய பலனை அனுபவிக்கிறான்.

एष सर्वः समुद्दिष्टः कर्मणां वः फलोदयः।
नैःश्रेयसकरं कर्म विप्रस्येदं निबोधत॥

**ஏஷ ஸர்வ: ஸமுத்திஷ்ட: கர்மணாம் வ: பலோதய: |**
**நை: ஷ்ரேயஸகரம் கர்ம விப்ரஸ்யேதம் நிபோதத || 81**

சாஸ்திரம் உரைத்த முறைகளையும், சாஸ்திரத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்வதால் ஏற்படும் பலன்களையும் இதுவரை உங்களுக்கு எடுத்துரைத்தேன். இனி வேதம் படித்த பிராம்மணனுக்கு மோட்சமென்னும் மேன்மையைத் தரக்கூடிய கர்மானுஷ்டானங்களைத் தெரிவிக்கிறேன், கேளுங்கள்.

वेदाऽभ्यासस् तपो ज्ञानमिन्द्रियाणां च संयमः।
अहिंसा गुरुसेवा च निःश्रेयसकरं परम्॥

**வேதா அப்யாஸஸ் தபோ ஞாநமிந்த்ரியாணாம் ச ஸம்யம: |**
**அஹிம்ஸா குருஸேவா ச நி:ஸ்ரேயஸகரம் பரம் || 82**

வேதங்களைக் கற்றுணர்தல், தவம் செய்தல், பிரம்ம ஞானத்தை அடைதல், இந்திரியங்களை அடக்குதல், அஹிம்சை, குருசேவை என்னும் இவையனைத்தும் மேலான மோட்சத்தை அடைவதற்குரிய சாதனங்கள்.

सर्वेषामपि चैतेषां शुभानामिह कर्मणाम्।
किञ्चिच् छ्रेयस्करतरं कर्मोक्तं पुरुषं प्रति॥

**ஸர்வேஷாமபி சைதேஷாம் சுபாநாமிஹ கர்மணாம் |**
**கிஞ்சிச் ச்ரேயஸ்கரதரம் கர்மோக்தம் புருஷம் ப்ரதி || 83**

இப்போது கூறிய இவற்றில் மிகமிக உயர்ந்தது எது என்று பார்ப்போம்.

सर्वेषामपि चैतेषामात्मज्ञानं परं स्मृतम्।
तद् ध्यग्र्यं सर्वविद्यानां प्राप्यते ह्यमृतं ततः॥

**ஸர்வேஷாமபி சைதேஷாமாத்மஞானம் பரம் ஸ்ம்ருதம் |**
**தத் த்யக்ர்யம் ஸர்வ வித்யாநாம் ப்ராப்யதே ஹ்யம்ருதம் தத: || 84**

இவையனைத்தையும் பார்க்குமிடத்து ஞானம் அடைதலே மிகமிக உயர்ந்தது. ஞானம் என்றால் பரம்பொருளை அறியும் பிரம்மஞானம். இந்த பிரம்மஞானத்தாலேயே மோட்சத்தை அடைய முடியும்.

**षण्णामेषां तु पूर्वेषां कर्मणां प्रेत्य चेह च।**
**श्रेयस्करतरं ज्ञेयं सर्वदा कर्म वैदिकम्॥**

**ஷண்ணாமேஷாம்து பூர்வேஷாம் கர்மணாம் ப்ரேத்ய சேஹச |**
**ஷ்ரேயஸ்கரதரம் ஞேயம் ஸர்வதா கர்ம வைதிகம் || 85**

வேதங்களைக் கற்றுணர்தல், தவம் செய்தல், பிரம்ம ஞானத்தை அடைதல், இந்திரியங்களை அடக்குதல், அஹிம்சை, குருசேவை என்னும் இந்த ஆறு கர்மாக்களிலும் பிரம்மஞானமே கைமேல் பலனாக மோட்சத்தைக் கொடுக்கும் என்பதால் பிரம்மஞானமே கண்டிப்பாக சம்பாதிக்க வேண்டிய ஒன்றாகும்.

**वैदिके कर्मयोगे तु सर्वाण्येतान्यशेषतः।**
**अन्तर्भवन्ति क्रमशस् तस्मिंस्तस्मिन् क्रियाविधौ॥**

**வைதிகே கர்மயோகேது ஸர்வாண்யேதாந் யசேஷத: |**
**அந்தர்பவந்தி க்ரமஷஸ் தஸ்மிம்ஸ் தஸ்மிந் க்ரியாவிதெள || 86**

வைதிக கர்மாக்களை விடாது முழுமையாகச் செய்து வரும்போது, அதன் மூலமாக இந்த ஆறு கர்மாக்களின் உயர்ந்த பலன்கள் அனைத்தும் கிட்டும்.

**सुखाऽभ्युदयिकं चैव नैःश्रेयसिकमेव च।**
**प्रवृत्तं च निवृत्तं च द्विविधं कर्म वैदिकम्॥**

**சுகா ஆப்யுதயிகம் சைவ நை:ஷ்ரேயஸிகமேவ ச |**
**ப்ரவ்ருத்தம் ச நிவ்ருத்தம் ச த்விவிதம் கர்ம வைதிகம் || 87**

இந்த வைதிக கர்மாக்கள் பிரவிருத்தி, நிவ்ருத்தி என்று இரு வகையான பயன்தரும்.

ஸ்வர்க்கம் முதலானவற்றை அடைய ஹேதுவான ஜன்மாக்களைக் கொடுக்கும்போது பிரவிருத்தி கர்மாவாகிறது. சம்சாரத்தினின்று விடுதலை அடைவதற்கு ஹேதுவான கர்மாக்கள் நிவ்ருத்தி கர்மா எனப்படுகிறது.

**इह चाऽमुत्र वा काम्यं प्रवृत्तं कर्म कीर्त्यते।**
**निष्कामं ज्ञानपूर्वं तु निवृत्तमुपदिश्यते॥**

**இஹ சாஅமுத்ரவா காம்யம் ப்ரவ்ருத்தம் கர்ம கீர்த்யதே |**
**நிஷ்காமம் ஞானபூர்வம் து நிவ்ருத்தமுபதிஷ்யதே || 88**

இவ்வுலகத்தில் வேண்டியவைகளை அடைவதற்காகவும் இறந்த பிறகு நல்லுலகங்களை அடைவதற்காகவும் காரியங்களைச் செய்வது பிரவிருத்திகர்மா எனப்படும்.

இவ்வுலகத்தில் எந்தப் பலனையும் கேளாமலும், இறந்த பிறகும்கூட எந்தப் பலனையும் எதிர்பாராமலும் செய்யும் கர்மா நிவ்ருத்தி கர்மா எனப்படும். இது ஆசையற்றதும் ஞானத்தைத் தருவதுமான கர்மா.

प्रवृत्तं कर्म संसेव्य देवानामेति साम्यताम्।
निवृत्तं सेवमानस् तु भूतान्यत्येति पञ्च वै॥

**ப்ரவ்ருத்தம் கர்ம ஸம்ஸேவ்ய தேவாநாமேதி ஸாம்யதாம் |**
**நிவ்ருத்தம் ஸேவமாநஸ்து பூதாந்யத்யேதி பஞ்ச வை ||** 89

பிரவ்ருத்தி கர்மாக்களான யக்ஞங்கள், தானங்கள் முதலானவற்றைச் செய்வதால் தேவர்களின் உலகத்தை அடைந்து அவர்களுக்கு சமமான நிலையை அடையலாம். நிவ்ருத்தி வழியில் இருப்பவர்களுக்கு, கர்மவினைகளுக்குக் காரணமான பஞ்சபூதங்களும் அவனைவிட்டு நீங்கும். அப்படியென்றால் மோட்சத்தை அடைவான் என்று பொருள்.

सर्वभूतेषु चाऽऽत्मानं सर्वभूतानि चाऽऽत्मनि।
समं पश्यन्नात्मयाजी स्वाराज्यमधिगच्छति॥

**ஸர்வபூதேஷு சாஆத்மாநம் ஸர்வபூதாநி சாஆத்மநி |**
**ஸமம் பஷ்யந்நாத்மயாஜீ ஸ்வாராஜ்யமதி கச்சதி ||** 90

சகல உயிர்களிலும் பரமாத்ம சொரூபம் உறைகிறது என்பதை அறிந்து, பஞ்சபூதங்களும் தன்னுடைய ஆத்மாவுக்குள் பரமாத்ம சொரூபமாக இருப்பதை உணர்ந்து, எல்லா உயிர்களையும் சமமாக பாவிக்கும் நிலையை அடைந்தவனாக, தன்னுடைய ஆத்மாவையே பரமாத்மாவுக்கு அர்ப்பணிக்கும் ஒருவனே மோட்சத்தை அடைவான்.

यथोक्तान्यपि कर्माणि परिहाय द्विजोत्तमः।
आत्मज्ञाने शमे च स्याद् वेदाऽभ्यासे च यत्नवान्॥

**யதோக்தாந்யபி கர்மாணி பரிஹாய த்விஜோத்தம: |**
**ஆத்மஞானே ஷமே ச ஸ்யாத் வேதா அப்யாஸே ச யத்நவாந் ||** 91

த்விஜோத்தமன், தனக்கு விதிக்கப்பட்ட கர்மாக்களை விட்டாவது, ஆத்ம ஞானத்தை அடையும் முயற்சியில் ஈடுபட வேண்டும். வேதத்தை ஓதுவதில் முயற்சியோடிருக்க வேண்டும். வேதமோதுவதில் முழுமையாக ஈடுபட்டால், அது ஆத்ம ஞானத்தை நல்கும்.

एतद् धि जन्मसाफल्यं ब्राह्मणस्य विशेषतः।
प्राप्यैतत् कृतकृत्यो हि द्विजो भवति नाऽन्यथा॥

**ஏதத் தி ஜன்மஸாபல்யம் ப்ராஹ்மணஸ்ய விசேஷத: |**
**ப்ராப்யைதத் க்ருதக்ருத்யோ ஹித்விஜோ பவதிநாஅந்யதா ||** 92

வேதாப்யாசம் செய்தபடி ஆத்மஞானம் அடைவதே பிராம்மணனுக்கு விசேஷமாக பிறவி வினைகளை நீக்கும் வழி. க்ஷத்ரியனும் வைசியனும்கூட பிறவி வினைகளை நீக்கிக் கொள்ளும் வழி இதுவேயன்றி, வேறொன்றும் இல்லை.

पितृदेवमनुष्याणां वेदश् चक्षुः सनातनम्।
अशक्यं चाऽप्रमेयं च वेदशास्त्रमिति स्थितिः॥

**பித்ருதேவ மனுஷ்யாணாம் வேதஷ் சக்ஷு: ஸநாதநம் |**
**அஷக்யம் சாஅப்ரமேயம் ச வேதசாஸ்த்ரமிதி ஸ்திதி: ||** 93

பித்ருக்களுக்கும் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் எப்போதும் ஞானத்தைக் கொடுக்கும் கண்ணாக விளங்குவது வேதமேயாகும். பழமையான வேதமானது மற்ற எவராலும் இயற்றப்பட்டதுமல்ல, இயற்றக்கூடியதுமல்ல. அதன் தன்மை இதுவென எவராலும் அளவிடமுடியாது.

या वेदबाह्याः स्मृतयो याश् च काश् च कुदृष्टयः।
सर्वास् ता निष्फलाः प्रेत्य तमोनिष्ठा हि ताः स्मृताः॥

**யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாஷ் ச காஷ் ச குத்ருஷ்டய: |**
**ஸர்வாஸ்தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹிதா: ஸ்ம்ருதா: ||** 94

வேதத்துக்கு விரோதமாக சொல்பவை எவையோ, தவறாக போதிப்பவை எவையோ அவையனைத்தும் மந்த புத்தியை உருவாக்கி, நற்பலன்களை அடைய வொட்டாமல் தடுத்து நரகத்துக்கு வழிவகுக்கும்.

उत्पद्यन्ते विनश्यन्ति यान्यतोऽन्यानि कानिचित्।
तान्यर्वाक्कालिकतया निष्फलान्यनृतानि च॥

**உத்பத்யந்தே விநஷ்யந்தி யாந்யதோ அந்யாநி காநிசித் |**
**தாந்யர்வாக் காளிகதயா நிஷ்பலாந்யந்ருதாநி ச ||** 95

வேதத்தை ஆதாரமாகக் கொள்ளாமல், அதற்கு மாறாகக் கூறப்படும் சாஸ்திரங்கள் வேகமாக அழியும். புதிதாக ஏற்பட்ட சாஸ்திரங்களைக் கற்பதால் நற்பலன் எதுவுமில்லை. ஏனெனில் அதில் உள்ளவை யாவும் பொய்களே யாகும்.

चातुर्वर्ण्यं त्रयो लोकाश् चत्वारश् चाऽऽश्रमाः पृथक्।
भूतं भव्यं भविष्यं च सर्वं वेदात् प्रसिध्यति॥

**சாதுர்வர்ண்யம் த்ரயோலோகாஷ் சத்வாரஷ் சாஆஸ்ரமா: ப்ருதக் |**
**பூதம் பவ்யம் பவிஷ்யம் ச ஸர்வம் வேதாத் ப்ரஸித்யதி ||** 96

*நான்கு வர்ணங்களைப் பற்றியும், மூன்று உலகங்களைப் பற்றியும், நான்கு ஆஸ்ரமங்களைப் பற்றியும் வேதத்தில் கூறப் பட்டுள்ளது. நடந்ததும் நடப்பதும் நடக்கப்போவதும் வேதத்தில் கூறப் பட்டுள்ளது.*

शब्दः स्पर्शश् च रूपं च रसो गन्धश् च पञ्चमः।
वेदादेव प्रसूयन्ते प्रसूतिगुणकर्मतः॥

**ஷப்த: ஸ்பர்ஷஷ் ச ரூபம் சரஸோ கந்தஷ்ச பஞ்சம: |**
**வேதாதேவ ப்ராஸூயந்தே ப்ரஸூதி குணகர்மத: ||** 97

*சப்தம், ஸ்பரிசம், உருவம், ரசம், கந்தம் என்னும் ஐந்தும் வேதத்திலிருந்தே தோன்றின. இவைகளின் குணங்களும் செயல்களும் வேதத்திலேயே விளக்கப்பட்டுள்ளன.*

बिभर्ति सर्वभूतानि वेदशास्त्रं सनातनम्।
तस्मादेतत् परं मन्ये यज् जन्तोरस्य साधनम्॥

**பிபர்தி ஸர்வபூதாநி வேதசாஸ்த்ரம் ஸநாதநம் |**
**தஸ்மாதேதத் பரம் மந்யே யஜ் ஜந்தோரஸ்ய ஸாதநம் ||** 98

*சநாதனமான வேதசாஸ்திரமே சகல பூதங்களையும் தாங்குகிறது. எனவே வேதமே ஒருவனுக்கு மேலான நிலையை அடைய வைக்கும் சாதனமாகும்.*

सेनापत्यं च राज्यं च दण्डनेतृत्वमेव च।
सर्वलोकाऽधिपत्यं च वेदशास्त्रविदर्हति॥

**ஸேநாபத்யம் ச ராஜ்யம் ச தண்டநேத்ருத்வமேவ ச |**
**ஸர்வலோகாஅதிபத்யம் ச வேதசாஸ்த்ர விதர்ஹதி ||** 99

*வேதசாஸ்திரம் முழுவதும் அறிந்தவனுக்கு சேனாபதியாகி படைகளை நடத்தும் தகுதி இருக்கும். ராஜ்ஜியத்தை ஆளும் தகுதி இருக்கும். இவ்வளவு ஏன், சகல உலகங்களையும் ஆட்சி செய்யும் தகுதியும் இருக்கும்.*

यथा जातबलो वह्निर् दहत्यार्द्रानपि द्रुमान्।
तथा दहति वेदज्ञः कर्मजं दोषमात्मनः॥

**யதா ஜாதபலோ வஹ்நிர் தஹத்யார்த்ராநபி த்ருமாந் |**
**ததா தஹதி வேதக்ஞ: கர்மஜம் தோஷமாத்மந: ||** 100

*கொழுந்துவிட்டெரியும் அக்னியானது எவ்வாறு பசுமையான மரங்களையும் எரிக்கும் சக்தி பெற்றுள்ளதோ அவ்வாறே வேதத்தை அறிந்தவன் கர்மவினைகளைத் தரும் தன்னுடைய தோஷங்களை யெல்லாம் எரித்து அழித்து விடும் சக்தி பெற்றவன்.*

**वेदशास्त्रार्थतत्त्वज्ञो यत्रतत्राऽऽश्रमे वसन्।**
**इहैव लोके तिष्ठन् स ब्रह्मभूयाय कल्पते॥**

**வேதசாஸ்த்ரா அர்த தத்வக்ஞோ யத்ரதத்ரா ஆஸ்ரமே வஸந் |**
**இஹைவ லோகே திஷ்டந் ஸ ப்ரஹ்ம பூயாய கல்பதே ||** 101

*வேதசாஸ்திரத்தின் அர்த்தத்தை உணர்ந்த தத்துவ ஞானி, பிரம்மசாரியாக இருந்தாலும், கிருஹஸ்தனாக இருந்தாலும், வானபிரஸ்தனாக இருந்தாலும், சந்யாசியாக இருந்தாலும் இந்த உலகத்திலே வாழ்ந்தபடியே பிரம்மஞானத்தை அடைவான்*

**अज्ञेभ्यो ग्रन्थिनः श्रेष्ठा ग्रन्थिभ्यो धारिणो वराः।**
**धारिभ्यो ज्ञानिनः श्रेष्ठा ज्ञानिभ्यो व्यवसायिनः॥**

**அக்ஞேப்யோ க்ரந்திந: ஷ்ரேஷ்டா க்ரந்திப்யோ தாரிணோ வரா: |**
**தாரிப்யோ ஞாநிந: ஷ்ரேஷ்டா ஞாநிப்யோ வ்யவஸாயிந: ||** 102

*ஏதோ சிறிது படித்தவர்களைவிட, முழுமையாக வேதத்தைப் படித்தவர்கள் சிரேஷ்டமானவர்கள். முழுமையாகப் படித்தவர்களை விட, அதை நன்கு மனத்தில் பதிய வைத்துக் கொண்டவர்கள் சிரேஷ்ட மானவர்கள்.*

*நன்கு மனத்தில் பதிய வைத்துக் கொண்டவர்களைவிட அதன் அர்த்தத்தை அறிந்தவர்கள் சிரேஷ்டமானவர்கள்.*

*அதன் அர்த்தத்தை அறிந்தவர்களைவிட, அதன்படி ஒழுகு பவர்கள் மிகவும் சிரேஷ்டமானவர்கள்.*

**तपो विद्या च विप्रस्य निःश्रेयसकरं परम्।**
**तपसा किल्बिषं हन्ति विद्ययाऽमृतमश्नुते॥**

**தபோ வித்யா ச விப்ரஸ்ய நி:ஸ்ரேயஸகரம் பரம் |**
**தபஸா கில்பிஷம் ஹந்தி வித்யயா அம்ருதமஷ்நுதே ||** 103

*தவமும் வேதமும் விப்ரனுக்கு மிகுந்த மேன்மையைக் கொடுக்கும். தவத்தால் பாபங்கள் நீங்கும், வேதத்தால் அமிர்தத்தைப் பருகுவான்.*

प्रत्यक्षं चाऽनुमानं च शास्त्रं च विविधाऽऽगमम्।
त्रयं सुविदितं कार्यं धर्मशुद्धिमभीप्सता॥

**ப்ரத்யக்ஷம் சாஅனுமாநம் ச சாஸ்த்ரம் ச விவிதா ஆகமம் |**
**த்ரயம் அவிதிதம் கார்யம் தர்ம சுத்திம பீப்ஸதா || 104**

*பிரத்யட்சமாக பார்ப்பது, ஊகித்து அறிவது, சாஸ்திர விதிகளை அறிவது என்னும் மூன்றுமே ஒருவன் தனக்குரிய தர்ம வழியில் நடந்து தன்னை மேன்மைப்படுத்திக் கொள்வதற்குரிய சாதனங்களாகும்.*

आर्षं धर्मोपदेशं च वेदशास्त्राऽविरोधिना।
यस् तर्केणाऽनुसन्धत्ते स धर्मं वेद नेतरः॥

**ஆர்ஷம் தர்மோப தேஷம் ச வேதசாஸ்த்ரா அவிரோதிநா |**
**யஸ் தர்கேணா அநு ஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர: || 105**

வேதத்தையும், *தர்மத்தை* உபதேசிக்கும் நூல்களையும், வேதத்துக்கு விரோதமாக இல்லாத *தர்க்கம்* முதலான சாஸ்திரங்களையும் நன்கு படித்தே ஒருவன் *தர்மத்தை அறிய* முடியும்.

नैःश्रेयसमिदं कर्म यथोदितमशेषतः।
मानवस्याऽस्य शास्त्रस्य रहस्यमुपदिश्यते॥

**நை: ஸ்ரேயஸமிதம் கர்ம யதோதிதமசேஷத: |**
**மாநவஸ்யா அஸ்ய ஷாஸ்த்ரஸ்ய ரஹஸ்ய முபதிஷ்யதே || 106**

இதுவரை *மோட்சமடைய சாதனமான கர்மாக்கள்* அனைத்தும் முழுமையாகக் கூறப்பட்டன.

இந்த *மானவ தர்மத்தின் ரகசியமான* விஷயத்தை இப்போது கூறுகிறேன், கேளுங்கள்:

अनाम्नातेषु धर्मेषु कथं स्यादिति चेद् भवेत्।
यं शिष्टा ब्राह्मणा ब्रूयुः स धर्मः स्यादशङ्कितः॥

**அநாம்நாதேஷு தர்மேஷு கதம் ஸ்யாதிதி சேத்பவேத் |**
**யம்ஷிஷ்டா ப்ராஹ்மணா ப்ரூயு: ஸ தர்ம: ஸ்யாதஷங்கித: || 107**

இதுவரை சொல்லிய *தர்மசாஸ்திர* விதிகளில் ஏதேனும் சந்தேகம் ஏற்பட்டால் என்ன செய்ய வேண்டும் என்று கூறுகிறேன்.

நான் கூறப்போகும் லட்சணங்கள் பொருந்திய சிஷ்டர்களான பிராம்மணர்களிடம் சந்தேகத்தைக் கேட்க வேண்டும். அவர்கள் கூறுவது எதுவோ அதுவே *தர்மம்* என்று சந்தேகமின்றி ஏற்றுக் கொள்ள வேண்டும்.

धर्मेणाऽधिगतो यैस् तु वेदः सपरिवृंहणः।
ते शिष्टा ब्राह्मणा ज्ञेयाः श्रुतिप्रत्यक्षहेतवः॥

**தர்மேணா அதிகதோ யையஸ்து வேத: ஸபரிப்ரும்ஹணா: |**
**தேஷிஷ்டா ப்ராஹ்மணா ஞேயா: ஸ்ருதீ ப்ரத்யட்ச ஹேதவ: || 108**

வேதங்கள், வேதாங்கங்கள், தர்மசாஸ்திரங்கள், புராணங்கள், மீமாம்சை, தர்க்கம் முதலான சாஸ்திரங்கள் அனைத்தையும் படித்தவர்களாகவும், அவற்றின் பொருளை முழுமையாக அறிந்தவர் களாகவும் இருக்கின்ற பிராம்மணர்கள் சிஷ்டர்கள் எனப்படுவர்.

दशाऽवरा वा परिषद् यं धर्मं परिकल्पयेत्।
त्र्यवरा वाऽपि वृत्तस्था तं धर्मं न विचालयेत्॥

**தஷராஅவரா வர பரிஷத் யம் தர்மம் பரிகல்பயேத் |**
**த்ரயவரா வாஅபி வ்ருத்தஸ்தா தம் தர்மம் ந விசாலயேத் || 109**

பத்து சிஷ்டர் சேர்ந்திருக்கும் சபையில் அவர்கள் எதை தர்மம் என்று நிர்ணயிக்கிறார்களோ அதையே தர்மமாக ஏற்க வேண்டும்.

பத்து சிஷ்டர்கள் சேராதபோது, மூன்று சிஷ்டர்கள் சேர்ந்து எதை தர்மம் என்று நிர்ணயிக்கிறார்களோ அதை தர்மமாக ஏற்க வேண்டும். ஏற்பதில் எந்த சந்தேகமும் கொள்ளக்கூடாது.

त्रैविद्यो हेतुकस् तर्की नैरुक्तो धर्मपाठकः।
त्रयश् चाऽऽश्रमिणः पूर्वे परिषत् स्याद् दशाऽवरा॥

**த்ரைவித்யோ ஹேதுகஸ் தர்கீ நைருக்தோ தர்மபாடக: |**
**த்யஷ் சா ஆஸ்ரமிணா: பூர்வே பரிஷத் ஸ்யாத் தஷாஅவரா || 110**

வேதங்களில் மூன்று சாகைகளை ஓதியவன், தர்க்கம் மீமாம்சை முதலான சாஸ்திரங்களைப் படித்தவன், தர்மசாஸ்திரங்களை அறிந்தவன், பிரம்மச்சாரி, கிருஹஸ்தன், சந்யாசி என்னும் மூன்று ஆஸ்ரம வாசிகள் முதலானோர் பத்து பேர்களுக்குக் குறையாமல் இருக்கும் சபைக்கு 'பரிஷத்' என்று பெயர்.

ऋग्वेदविद् यजुर्विच् च सामवेदविदेव च।
त्र्यवरा परिषज् ज्ञेया धर्मसंशयनिर्णये॥

**ருக்வேதவித் யஜுர்விச் ச ஸாமவேதவிதேவ ச |**
**த்ரயவரா பரிஷஜ் ஞேயா தர்மஸம்ஷய நிர்ணயே || 111**

ரிக் வேதத்தை நன்கு உணர்ந்தவர்களும், யஜுர் வேதத்தை நன்குணர்ந்தவர்களும், சாம வேதத்தை நன்குணர்ந்தவர்களுமான மூவர் இருக்கும் சபையும் பரிஷத் ஆகும். இவர்களும் தர்மம்

எதுவென நிர்ணயிப்பார்கள். சந்தேகம் வந்தபோது இவர்களின் பரிஷத்தில் கேட்டு தெளிவு கொள்ளலாம்.

**एकोऽपि वेदविद् धर्मं यं व्यवस्येद् द्विजोत्तमः।**
**स विज्ञेयः परो धर्मो नाऽज्ञानामुदितोऽयुतैः॥**

**ஏகோஅபி வேதவித் தர்மம் யம்வ்யவஸ்யேத் த்விஜோத்தம: |**
**ஸவிக்ஞேய: பரோ தர்மோ நாஅக்ஞாநாமுதிதோ அயுதை: || 112**

வேதவித்தான த்விஜோத்தமன் ஒருவனிடமேகூட தர்மம் எதுவென கேட்டு சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் வேதமோ தர்மசாஸ்திரமோ தெரியாத பலபேர்கள் கூடி இதுவே தர்மம் என்று எவ்வளவு கூறினாலும் அதை ஏற்கக் கூடாது.

**अव्रतानाममन्त्राणां जातिमात्रोपजीविनाम्।**
**सहस्रशः समेतानां परिषत्त्वं न विद्यते॥**

**அவ்ரதா நாமமந்த்ராணாம் ஜாதிமாத்ரோபஜீவிநாம் |**
**ஸஹஸ்ரஷ: ஸமேதாநாம் பரிஷத்த்வம் ந வித்யதே || 113**

பிரம்மசர்யம் முதலான விரதங்களை அனுஷ்டிக்காதவர்களும், மந்திரக் கிரியைகள் எதுவுமற்றவர்களுமான ஜாதியை மாத்திரமே சொல்லிக் கொண்டு ஜீவிப்பவர்கள் ஆயிரமாயிரமாய் சேர்ந்திருந் தாலும் அது 'பரிஷத்' ஆகாது.

**यं वदन्ति तमोभूता मूर्खा धर्ममतद्विदः।**
**तत्पापं शतधा भूत्वा तद्वक्तॄननुगच्छति॥**

**யம் வதந்தி தமோபூதா மூர்கா தர்மமதத் வித: |**
**தத்பாபம் ஷததா பூத்வா தத்வத்த் ரூநநுகச்சதி || 114**

தமோ குணம் கொண்டவர்களான மூர்க்கர்கள் தர்மத்தையோ, வேதார்த்தத்தையோ அறியாமலே, தர்மம் தெரிந்தவர்கள் போல காட்டிக் கொண்டு, பிராயச்சித்தம் முதலானவற்றைக் கூறினால், எவனுக்குக் கூறுகிறார்களோ அவனுடைய பாபம் நூறு மடங்காகி கூறியவனை வந்தடையும்.

**एतद् वोऽभिहितं सर्वं निःश्रेयसकरं परम्।**
**अस्मादप्रच्युतो विप्रः प्राप्नोति परमां गतिम्॥**

**ஏதத் வோ அபிஹிதம் ஸர்வம் நி:ஸ்ரேயஸகரம் பரம் |**
**அஸ்மாதப்ரச்யு தோ விப்ர: ப்ராப்நோதி பரமாம் கதிம் || 115**

மோட்ச சாதனமான அனைத்தையும் உங்களுக்குக் கூறினேன். நான் கூறியபடி ஒழுகுபவர்கள் ஸ்வர்க்கத்தையும் மோட்சத்தையும் அடைவார்கள்.

एवं स भगवान् देवो लोकानां हितकाम्यया।
धर्मस्य परमं गुह्यं ममेदं सर्वमुक्तवान्॥

**ஏவம் ஸ பகவாந் தேவோ லோகாநாம் ஹிதகாம்யயா |**
**தர்மஸ்ய பரமம் குஹ்யம் மமேதம் ஸர்வமுக்தவாந் || 116**

பகவானும், உலகங்களின் ஹிதத்தை விரும்புபவருமான மனு, மிகவும் மேலானதும் ரகசியமானதுமான இந்த தர்ம சாஸ்திரத்தை எனக்கு உரைத்தார்.

सर्वमात्मनि सम्पश्येत् सच् चाऽसच् च समाहितः।
सर्वं ह्यात्मनि सम्पश्यन् नाऽधर्मे कुरुते मनः॥

**ஸர்வமாத்மநி ஸம்பஷ்யேத் ஸச் சாஅஸச் ச ஸமாஹித: |**
**ஸர்வம் ஹ்யாத்மநி ஸம்பஷ்யந் நாஅதர்மே குருதே மந: || 117**

சத், அசத் ரூபமான அனைத்தும் பரமாத்ம சொரூபமே என்றும், அந்த பரமாத்மாவே தன்னுள் உறைகிறார் என்னும் ஆத்ம சொரூபத்தை அறிந்தவன் மனம் எந்நாளும் அதர்மத்தில் செல்லாது.

आत्मैव देवताः सर्वाः सर्वमात्मन्यवस्थितम्।
आत्मा हि जनयत्येषां कर्मयोगं शरीरिणाम्॥

**ஆத்மைவ தேவதா: ஸர்வா: ஸர்வமாத்மந் யவஸ்திதம் |**
**ஆத்மாஹி ஜநயத்யேஷாம் கர்மயோகம் ஷரீரிணாம் || 118**

சகல தேவர்களுக்குள்ளும் உறைவது பரமாத்ம சொரூபமே. உடலெடுத்த அனைவருக்கும் கர்ம யோகங்களை ஏற்படுத்துவதும் ஆத்ம சொரூபத்தோடிருக்கும் பரமாத்வே.

खं सन्निवेशयेत् खेषु चेष्टनस्पर्शनेऽनिलम्।
पक्तिदृष्ट्योः परं तेजः स्नेहेऽपो गां च मूर्तिषु॥

**கம் ஸந்நிவேஷயேத் கேஷு சேஷ்டநஸ்பர்ஷநே அநிலம் |**
**பக்தி த்ருஷ்ட்யோ பரம் தேஜ: ஸ்நேஹே அபோ காம் ச மூர்த்திஷு || 119**

मनसीन्दुं दिशः श्रोत्रे क्रान्ते विष्णुं बले हरम्।
वाच्यग्निं मित्रमुत्सर्गे प्रजने च प्रजापतिम्॥

**மனஸீந்தும் திஷ: ஸ்ரோத்ரே க்ராந்தே விஷ்ணும்பலே ஹரம் |**
**வாச்யக்நிம் மித்ரமுத்ஸர்கே ப்ரஜநே ச ப்ரஜாபதிம் || 120**

प्रशासितारं सर्वेषामणीयांसमणोरपि।
रुक्माऽऽभं स्वप्नधीगम्यं विद्यात् तं पुरुषं परम्॥

**ப்ரஷாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸ மணோரபி |**
**ருக்மா ஆபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் பூருஷம் பரம் || 121**

வெளியிலுள்ள ஆகாசத்தை சரீரத்திலுள்ள ஆகாசத்துடன் லயிக்கச் செய்ய வேண்டும்.

வெளியிலுள்ள வாயுவை சரீரத்திலுள்ள வாயுவுடன் லயிக்கச் செய்ய வேண்டும். இவ்வாறே அக்னியுடன் அக்னியையும், தண்ணீருடன் தண்ணீரையும், பிருத்வி(மண்)யுடன் பிருத்வியையும் லயிக்கச் செய்ய வேண்டும்.

மனத்தில் சந்திரனை லயிக்கச் செய்ய வேண்டும். பிறகு காது களில் திக்குகளையும், பாதங்களில் விஷ்ணுவையும், பலத்தை சிவபிரானிடமும், வாக்கை அக்னியிடமும், ஆசன பாகத்தை மித்ரனிடமும், உபேந்திரியத்தை பிரஜாபதியிடமும் லயிக்கச் செய்ய வேண்டும்.

கர்மாக்களுக்குத் தக்க பலனை அளிப்பவரும், அணுவுக்குள் அணுவாக இருப்பவரும், ஞானக்கண்களால் மட்டுமே காணக் கூடியவரும், தங்கம் போல் பிரகாசிப்பவருமான பரமாத்மாவை ஞானத்தால் காண வேண்டும்.

एतमेके वदन्त्यग्निं मनुमन्ये प्रजापतिम्।
इन्द्रमेके परे प्राणमपरे ब्रह्म शाश्वतम्॥

**ஏதமேகே வதந்த்யக்நிம் மனுமந்யே ப்ரஜாபதிம் |**
**இந்த்ர மேகே பரே ப்ராணமபரே ப்ரஹ்ம ஷாஷ்வதம் || 122**

சிலர் பரமாத்வை அக்நியாக உபாசிப்பர்கள். சிலர் பிரஜாபதிகளாக உபாசிப்பர்கள். சிலர் தேவேந்திர வடிவமாக உபாசிப்பர்கள். சிலர் தன்னுள் இருக்கின்ற பிராணனாக எண்ணி உபாசிப்பர்கள்.

சிலர் பிரம்ம சொரூபமாக உபாசிப்பர்கள்.

एष सर्वाणि भूतानि पञ्चभिर् व्याप्य मूर्तिभिः।
जन्मवृद्धिक्षयैर् नित्यं संसारयति चक्रवत्॥

**ஏஷ ஸர்வாணி பூதாநி பஞ்சபிர் வ்யாப்ய மூர்திபி: |**
**ஜன்மவ்ருத்திக்ஷயைர் நித்யம்ஸம்ஸாரயதி சக்ரவத் || 123**

பரமாத்மா, ஐம்பூத சேர்க்கையோடு உயிர்களை இயங்க வைக்கிறார்கள். உடலெடுத்த உயிர்கள் தாங்கள் சம்பாதித்த பாபபுண்ணியங்களில் தேரின் சக்கரங்களைப் போல மேலும் கீழுமாக பிறவிகளை எடுக்கிறார்கள். இறுதியில் மோட்சத்தை அடையும்வரை பிறப்பும் இறப்பும் இருக்கும்.

एवं यः सर्वभूतेषु पश्यत्यात्मानमात्मना।
स सर्वसमतामेत्य ब्रह्माऽभ्येति परं पदम्॥

**ஏவம் ய: ஸர்வபூதேஷு பஷ்யத் யாத்மாநமாத்மநா ।**
**ஸஸர்வ ஸமதாமேத்ய ப்ரஹ்மாஅப்யேதி பரம்பதம் ॥** 124

எவன், எல்லா பூதங்களிலும் உள்ள ஆத்மாவை அறிந்தவனாக, பிரம்ம ஞானம் பெற்றவனாக இருக்கிறானோ, அவன் மேலான பரப்பிரம்மத்தின் பதத்தை அதாவது பரமபதத்தை அடைகிறான்.

(பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.)

மனுதர்ம சாஸ்திரம் நிறைவடைகிறது.

சுபம்.



## இந் நூல்பற்றி...

இப்போது உங்கள் கைகளில் திகழும் 'மனுநீதி என்னும் மனு தர்ம சாஸ்திரம்' ஓர் உயரிய நூல்.

அந்தக் காலத்து நீதி, நியாங்களை, தர்மங்களை எடுத்து இயம்பும் நூல்.

நீதி, நியாயங்கள், தர்மங்கள் எந்தக் கால மாயினும் ஒன்றுதான்.

எனினும் இப்போது எல்லாமே மாறிவிட்டது. அதனால்தான் அந்தக் காலத்து நியாயம் என்று பிரித்துக் கூற வேண்டியுள்ளது.

இந்தக் காலத்தில் எது நீதி, எது நியாயம் என்றே தெரிய வில்லை. தான் செய்வதே நியாயம், தான் சொல்வதே நீதி என்று சாதிக்கும் இந்தக் காலத்துக்கு இப்படி ஒரு நூல் தேவைதான்.

எது நீதி, எது நியாயம், எது தர்மம் என்பதை உணர இந் நூல் வழி காட்டும். தர்ம நியாயங்களை உணர்ந்தவர்கள் என்றும் புறந்தள்ளப் பட்டதில்லை.

இந் நூலை ஒன்றுக்குப் பலமுறை படியுங்கள். உண்மைகளை, நீதி, நியாயங்கள உணர்ந்து உங்களால் செயல்பட முடியும்; வாழ்வில் உயர்வடைய முடியும்; உன்னத புருஷர்களாக வாழ்ந்து காட்ட முடியும்.

ஆசிரியை அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா சமஸ்கிருத ஸ்லோகங்களோடு எளிய தமிழில் விரிவான விளக்கங்களை அளித்துள்ளார்கள்.

இதை ஒரு சிறந்த ஆவணமாகக் கொள்ளலாம். எனவே இன்றே இந் நூல் ஒன்றை வாங்கி வைத்துக் கொள்வது நல்லது.

ஸ்ரீ இந்து
பப்ளிகேஷன்ஸ்
சென்னை - 35
Ph:044 2431 3646/2431 3647
Cell: 94440 21661/94872 77755